ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# இயற்பா

பொய்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# முதல் திருவந்தாதி.



இந்த க்ரந்தம்.

அபாரகருணாஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

மணிப்ரவாள வ்யாக்யாநஸஹிதம்.


இச்சபாபண்டிதரான

சிங்கப்பெருமாள்கோவில்

ஸ்ரீமான் - மாடபூசி

தர்க்கதீர்த்தர் - ராமாநுஜாசார்யரால்


எழுதப்பட்ட ப்ரதிபதஸஹிதம்

——(:)——

அநேக தேசாந்த்ர ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

லேககப்ரமாதாதி ஜநிததோஷங்களில்லாமல்

மேற்படி

ராமாநுஜாசார்யராலும்

ஸி. முத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்

பரிசோதிக்கப்பட்டு


ஸ்ரீ வைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்) யாரால்

சென்னப்பட்டணம்,

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷரசாலையில்

ஸ்ரீபராங்குசதிருவவதாராதி - ருoo௧.

சார்வரிஸம்வத்ஸரத்தில்

பதிப்பித்துப் ப்ரசுரம் செய்யப்பட்டது.

௧௯oக.

விஜயதேதராம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

1882 - த்திய ஆராவது ஆக்ட்டுப்ரகாரம் ரிஜிஸ்டர் செய்து ஸ்தாபிக்கப்பட்டது.

---

ப்ரதிமாதம் 5 - பாரங்களுக்குக் குறையாமல் சாஸ்வதமாய் அச்சிட்டு மூன்றுதலைமுறைகளுக்கு பேட்ரன்களுக்கு 12-காபிகளும், பாகஸ்தர்களுக்கு 5-காபிகளும் போஷகர்களுக்கு 1-காபியும் ப்ரதிமாதம் கொடுக்கப்படும்.

பேட்ரன் சந்தா ரூபாய் - 200, பாகஸ்தர்களுக்கு சந்தா ரூபா 100 போஷகர்களுக்கு சந்தா ரூபா 20 - மொத்தமாயாவது ப்ரதி இங்லீஷ்மீ 15உக்குள் 10-ல் ஒருபாகமாயாவது கட்டவேண்டும். இவர்களுக்குப் ப்ரவேசவர்த்த நீ க்ரமமாக ரூபா, 2-0-0, ரூபா, 1-0-0, ரூபா, -0-4-0.

மற்ற விவரங்களெல்லாம் சட்டபுஸ்தகத்தில் பார்த்துக்கொள்ளவேண்டும். இதின் விலை அணு 2.

## இந்த ஸபையாரால் இதுவரையில் அச்சிட்டு ப்ரசுரம்செய்யப்பட்ட க்ரந்தங்கள்.

| | |
|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் ப்ரதிபததாத்பர்யஸஹிதம் மேலான காகிதம்தமிழ்லிபி | 3—4—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் டிடோ | 0—5—0 |
| பராசரவிசிஷ்ட பரமதர்மசாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | 0--14—0 |
| ராமசரமஸ்லோகம் ஸவ்யாக்யாநம் டிடோ | 0—3—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபதடீகா அரும்பதஸஹிதம் டிடோ | 1—2—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி டிடோ | 0--12—0 |

---

| | |
|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் ப்ரதிபததாத்பர்யஸஹிதம் உயர்ந்த காகிதம் தெலுங்குலிபி | 3—4—0 |
| ராமசரமஸ்லோகம் டிடோ | 0—3—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் டிடோ | 0—5—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபத டீகா அரும்பதஸஹிதம் | 1—3—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி டிடோ | 0--12—0 |

இப்படிக்கு,

காரலபாடி - ஆழ்வாரய்ய,

கார்யதர்சி-தனதிகாரி.

நெ. 31, வெங்கடாசலமுதலிதெரு, சென்னை.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபை (லிமிடெட்)

# இ ய ற் பா.

## முதற்றிருவந்தாதி.

இந்த க்ரந்தம், நாலாயிர ப்ரபந்தத்தில் ௩-வது ஆயிரத்தில் முதல் ப்ரபந்தம். இப்ப்ரபந்தத்தை யருளிச்செய்தவர், பகவந் நிர்ஹேதுக கடாக்ஷ லப்த விபவரான பொய்கையாழ்வார். இவர் முதலாழ்வார்களான மூவரில் முதல்வர். இவர் காஞ்சீநகரத்தில் யதோக்தகாரி ஸந்நிதி ஸமீபத்திலிருக்கிற பொய்கைப் புஷ்கரிணியில் ஸ்வர்ணமயமான தாமரஸபுஷ்பத்தில் லோகோஜ்ஜீவநார்த்தமாக வவதரித்த அயோநிஜர். இவர் பொய்கைப்புஷ்கரணியி லவதரித்தவராகையால் பொய்கையாழ்வார் என்கிற திருநாமத்தைப் பெற்றருளினர்.

இவர் த்வாபரயுகாதி எட்டு லக்ஷம் அறுபதிஞயிரத்துத் தொள்ளாயிரம் ஸம்வத்ஸரமான ஸித்தார்த்தி ஸம்வத்ஸரம் ஐப்பசி மாஸம் சுக்லாஷ்டமீ செவ்வாய்க்கிழமை ஶ்ரவண நக்ஷத்ரத்திலவதரித்தார். இவருக்கு நாமாந்தரங்கள்: காஸாரயோகி, ஸரோமுனீந்த்ரர். திருவாராதநம்: ஆழ்வார்கள் நைனர், ஆசார்யர், ஸேனை முதலியார். அஜ்ஞாநிகளான ஸம்ஸாரிகளோடு ஸஹவாஸ மஸஹ்யமாய்க் காடுகளிலேயே ஒருநாளிருந்தவிடம் மற்றொருநாளிராமல் ஸஞ்சரித்துக்கொண்டு அந்ந பாநாதிகளைவிட்டு பகவத் குணங்களையே தாரகபோஷக போக்யங்களாகக்கொண்டு திவ்யயோக ஸம்பந்நராய் அநேகமாயிரம் வர்ஷம் எழுந்தருளியிருந்தார். இவர் ப்ரபாவத்தைப்பார்த்து ஸ்ரீ பாஞ்சஜந்யாம்சமென்று சொல்லுவர்கள். இவர் ஒருநாள் திருக்கோவலூரில் ஒரு இடைகழியில் மழையினுபத்ரவத்தினல் சயநித்துக்கொண்டிருக்க, அங்கு பூதத்தாழ்வார் எழுந்தருள, இருவர் படுக்க இடம் போராமையால் இருவரும் உட்கார்ந்திருந்தார்கள். அநந்தரம் அங்கு பேயாழ்வாருமெழுந்தருள, மூவரிருக்க இடம் போராமையால் மூவரும் நின்றுகொண்டிருந்தார்கள். பக்தசிரோமணிகளான இம்மஹாநுபாவர் மூவரும் ஒருகாலத்தில் ஓரிடத்திலெழுந்தருளியிருக்கு மிருப்பைப்பார்க்க ஸர்வேஶ்வரனும் லக்ஷ்மீஸமேதனய் இவர்களிடையில் ப்ரவேசித்தான்.

அப்பொழுதங்கு நிற்கவும் இடம்போராயலிருக்க, இதுக்கென்னகாரணமென்று யோகத்ருஷ்டியால் பார்த்து ஶ்ரிய:பதியை ஸாக்ஷாத்கரித்தார்கள். தததநுபவபரீவாஹரூபமான ப்ரபந்தங்களையும்அருளிச்செய்தார்கள். அவைகளில் முதலான இந்த ப்ரபந்தத்தில் பாசுரம்-௧00-இதற்கு முதலந்தாதியென்று திருநாமம். ப்ரதிபாசுரத்தி

னும் கடையிலிருக்கும் சப்தம் மேற்பாசுரத்தினுதியில் வருகிறபடியால் இதுக்கு அந்தாதி என்றுபெயர். இதில் பாடின திருப்பதிகள்: கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருக்கோவலூர்.

இந்த ப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநம் செய்தருளினவர் பெரிய வாச்சான்பிள்ளை. இவர் ப்ரபாவம் தனிஸ்லோக பீடிகையில் இச்சபையாரால் விஸ்த்தரிக்கப்பட்டிருக்கிறது. அந்த வ்யாக்யாநத்துக்கு அரும்பதம் ஸாதித்தவர் அஷ்டதிக்கஜங்களிலொருவரான அப்புஸ்வாமி.

---

திருநக்ஷத்ர தனியன்.

𑌤𑍁𑌲𑌾𑌯𑌾𑌂𑌶𑍍𑌰𑌵𑌣𑍇𑌜𑌾𑌤𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑍍𑌯𑌾𑌂𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌤𑍍।
𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑌂 𑌸𑌰𑍋𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥
𑌕𑌾𑌞𑍍𑌚𑍍𑌯𑌾𑌂𑌸𑌰𑌸𑌿𑌹𑍇𑌮𑌾𑌬𑍍𑌜𑍇 𑌜𑌾𑌤𑌂𑌕𑌾𑌸𑌾𑌰𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑍍।
𑌕𑌲𑌯𑍇𑌯𑌶𑍍𑌰𑌿 𑌯𑌃𑌪𑌤𑍍𑌯𑍂 𑌰𑌵𑌿𑌂𑌦𑍀𑌪𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍॥

துலாயாம்ஸ்ரவணே ஜாதம் காஞ்ச்யாம் காஞ்சநவாரிஜாத்
த்வாபரேபாஞ்சஜந்யாம்சம்ஸரோயோகிநமாஸ்ரயே
காஞ்ச்யாம் ஸரஸிஹேமாப்ஜேஜாதம் காஸாரயோகிநம்
கலயேயச்ச்ரியஃபத்யூரவிந்தீபமகல்பயத்.

---

வாழித்திருநாமம்.

செய்ய துலா வோணத்தில் செகத்துதித்தான் வாழியே
திருக்கச்சி மா நகரம் செழிக்க வந்தான் வாழியே
வையந்தகளி நூறும் வகுத் துரைத்தான் வாழியே
வனசமலர்க்கருவதனில் வந்தமைந்தான் வாழியே
வெய்ய கதிரோன் தன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கை முனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன் முடியும் திருமுகமும் பூதலத்தில் வாழியே.

இப்படி,
**ஸபாபண்டிதர்கள்.**





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

# முதற் றிருவந்தாதி

## தனியன் வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(கைதைசேரித்யாதி) இவ்வாழ்வார், "𑌕𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌨𑌾𑌮 𑌤𑍇𑌨𑌤𑌤𑍍𑌰𑌾𑌞𑍍𑌚𑌿𑌤𑍋𑌹𑌰𑌿𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑌾𑌞𑍍𑌚𑍀𑌤𑌿𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌪𑍁𑌰𑍀𑌪𑍁𑌣𑍍𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑍀" "கஇதிப்ரஹ்மணோநாம தேநதத்ராஞ்சிதோஹரி:। தஸ்மாத்காஞ்சீதிவிக்யாதாபுரீ புண்யவிவர்த்தநீ" என்னும்படியான காஞ்சீபுரியில் புஷ்கரணியில் புஷ்கரத்திலே விஷ்ணு நக்ஷத்ரத்திலே ஆவிர்ப்பவித்து திவ்ய ப்ரபந்த தீபமுகேந லோகத்தில் அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி வாழ்வித்த படியைச் சொல்லுகிறது இதில்.

முதலியாண்டா னருளிச்செய்த தனியன்.

**கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த**
**பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு-வையத்**
**தடியவர்கள் வாழ வருந்தமிழ்நூற் றந்தாதி**
**படிவிளங்கச் செய்தான் பரிந்து.**

பதவுரை.—கைதை - தாழைகள், சேர் - நெருங்கிவர்த்திக்கிற, பூ - அழகிய, பொழில் - சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, கச்சிநகர் - காஞ்சீநகரத்தில், (திருவெஃகாவிலே) வந்துதித்த - (பொற்றாமரைப் பொய்கையிலே) திருவவதரித்தவராய், கவிஞர்போரேறு - கவிச்ரேஷ்டராய், பொய்கைப் பிரான் - உபகாரகரான பொய்கையாழ்வார், வையத்து - பூமியிலுள்ள, அடியவர்கள் - தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ-வாழும்படிக்கீடாக, அரும்-(அர்த்தநிர்ணயம் செய்யப்புகில்) அரிதாய், தமிழ்-தமிழாகையாலே ஸுலபமாய், நூற்றந்தாதி - நூறுபாட்டாயிருக்கிற அந்தாதியை, பரிந்து-ஸ்நேஹயுக்தராய்க்கொண்டு, படி - பூமியிலே, விளங்கச்செய்தான் - ப்ரகாசமாகும்படி செய்தருளினர்.

வ்யா.—(கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த பொய்கைப்பிரான்) இத்தால் இவர் ஜந்ம வைபவம் சொல்லுகிறது.

(கைதை) கேதகை-தாழை. "கைதைவேலிமங்கை" என்றும் - "கொக்கலர்தடந்தாழைவேலி" என்றுஞ்சொல்லுமாப்போலே. அதுதான் நீர்நிலங்களிலேயாயிற்றுநிற்பது. "தாழைதண்ணும்பல் தடம்பெரும் பொய்கைவாய்" என்னும்படி, * அம்பூந் தேனிளஞ்சோலை சூழ்ந்த கச்சிவெஃகாவில் பொய்கையிலே * எம்பெருமான் பொன்வயிற்றில் பூவேபோன்ற பொற்றாமரைப்பூவிலே ஐப்பசியில் திருவோணநாளாயிற்று இவரவதரித்தது. பத்மஜனுன பூவனைப்போலே யாயிற்று பொய்கையாரான இவர்பிறப்பும். வந்துதித்த-என்கையாலே, ஆதித்யோதயம்போலே யாயிற்று இவருதயமும். "வருத்தும் புறவிருள் மாய்த்த வெம்பொய்கைப்பிரான்" என்னக்கடவதிறே. பொய்கையிலே யவதரிக்கையாலே அதுவே நிரூபகமா யிருக்கை. அதுதான் ஸரஸ்வதி பயஸ்விநியாய்ப் ப்ரவஹித்த ஸ்தலமாயிற்று. தத்திரமான பொய்கை யென்கை. (பொய்கைப்பிரான்) மருபூமியில் பொய்கை போலே எல்லார்க்கு முபகாரகராயிருக்கை. தீர்த்தகரராய்த் திரியுமவரிறே.

கவிஞர் போரேறுகையாவது - கவிச்ரேஷ்டரென்றபடி. முதலாழ்வார்கள் மூவரிலும் முதலானவராகையாலே, ஆதிகவி என்னும்படியான அதிசயத்தையுடையராயிருப்பர். படைத்தான் கவியாலும், பரகாலகவியாலும், "செஞ்சொற்கவிகாள்" என்றும் - "செந்தமிழ் பாடுவார்" என்றும்-கொண்டாடப்படு மவருமாய், நாட்டிற்கவிகளுக்கும் விலக்ஷணகவியாயிருப்பர். "இதுபொய்கையார் வாக்கினிற்கண்டுகொள்க" என்றிறே தமிழர்கூறுவது. அந்தவேற்றமெல்லாவற்றையும் பற்ற கவிஞர் போரேறு-என்கிறது.

ஏவம்வித வைலக்ஷண்யத்தை யுடையவர், வைஷ்ணவர்கள் வாழும்படி ஸ்நேஹத்தாலே விலக்ஷண ப்ரமாண நிர்மாணம்பண்ணினபடி சொல்லுகிறது, (வையத்தடியவர்கள் வாழ அரும்தமிழ் நூற்றந்தாதி படி விளங்கச்செய்தான் பரிந்து) என்று. வையத்தடியவர்களாகிறார்-பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்கட்கேயிறே வாழவேண்டுவது. *வானத்தணியமரர்க்கு வாழ்வு நித்யமாயிறே இருக்கிறது. இத்தாலே, இவர்கள் வாழுகை யாவது-சேஷத்வவிபவத்தை ஸ்வாநுஸந்தாநத்தாலே யுண்டாக்குமதான ப்ரபந்தமென்கை. "நின் தாளிணைக்கீழ்வாழ்ச்சி" என்னக்கடவதிறே. இவ்வநுஸந்தாநமே வாழ்வாகவுமாம். அருந்தமிழ் நூற்றந்தாதியாவது - அர்த்த நிர்ணயத்தில்வந்தால் அரிதாய், தமிழான ப்ரகாரத்தாலே ஸுலபமாய், அது

தான் நூறுபாட்டாய், அந்தாதியாயிருக்கை. உடையவர் நூற்றந்தாதிக் கேற்றம் எட்டுப்பாட்டாயிருக்கும்.

(அருந்தமிழ்நூற்றந்தாதி) அதுதான் வெளிறாயிருக்கை யன்றிக்கே அரிதாய், ஸம்ஸ்க்ருதமா யிருக்கையன்றிக்கே அஸம்ஸ்க்ருதமான த்ராவிடமாய், ஆயிரம் ஐந்நூறாயிருக்கையன்றிக்கே நூறாயிருக்கை. அன்றிக்கே, (வையத்தடியவர்கள் வாழவரும் தமிழ் நூற்றந்தாதி) என்றாகவுமாம். அப்போது வையத்தடியவர்கள்வாழ வருமதான தமிழ் நூற்றந்தாதி என்று நிர்வஹிக்கக்கடவது.

நூற்றந்தாதிபடி விளங்கச்செய்கையாவது - [வையந்தகளியா] என்று தொடங்கி, ஓரடியுஞ் சாடுதைத்தமுடிவாக வருளிச்செய்த திவ்யப்ரபந்ததீபத்தாலே பூதலமெங்கும் நிர்மலமாம்படி நிர்மித்தாரென்கை. * வருத்தும் புறவிருள்மாய்த்த வெம்பொய்கைப்பிரான் மறையின் குருத்தின்பொருளையும் செந்தமிழ் தன்னையுங் கூட்டி ஒன்றத் திரித்தன்றெரித்த திருவிளக்காகையாலே, படியிலே - பூமியிலே, ப்ரகாசிக்கும்படி செய்தருளினாரென்றாகவுமாம். அன்றிக்கே, படி-என்று உபமானமாய், த்ராவிட வேதத்துக்குப் படிச்சந்தமாயிருக்கும்படி செய்தருளினா ரென்னவுமாம். விளக்கம்-ப்ரகாசம். படி-என்று விக்ரஹமாய், "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்" என்னும்படி, கண்டறியும்படி செய்தாரென்றாகவுமாம். பரிவுடனே செய்கையாவது - சேர்ந்தவிஷய ஸ்நேஹத்தாலே என்னுதல்; பரவிஷய ஸ்நேஹத்தாலே என்னுதல். "செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்றாரிறே. ஸ்நேஹத்தாலேயிறே விளக்கெரிவது. இத்தால், அவர் திவ்ய ப்ரபந்தோபகாரகத்வத்தால் வந்த உபகாரகௌரவம் சொல்லி ஈடுபட்டதாயிற்று. (க)

இயற்பா முதற்றிருவந்தாதியின் தனியன் வ்யாக்யாநம் முற்றிற்று.

---

ஸ்ரீரஸ்து.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எம்பெருமானார் திருவடிகளேசரணம்.

# முதற்றிருவந்தாதி.

## வ்யாக்யாந அவதாரிகை.

ஆழ்வார்களிற்காட்டில் பகவத்விஷயத்திலுண்டான அவகாஹநத்தாலே, முதலாழ்வார்கள்மூவரையும் நித்யஸூரிகளோ பாதியாக நினைத்திருப்பர்கள். "இன்கவிபாடும் பரமகவிகள்" என்றும், "செந்தமிழ் பாடுவார்" என்றும். இவர்களவதரித்தது ஓரோதேசங்களிலேயாகிலும் காலப் பழமையாலே இன்னவிடமென்று நிச்சயிக்கப் போகாது. "பேயரோ யெனக்கியாவரும் யானுமோர்பேயனே யெவர்க்கும்" பகவத்விஷயத்தி லவகாஹியாதாரெல்லாரும் தமக்குப்பேயராயிருப்பர். அவர்கள்நிலையில் தாம்நில்லாதபடியாலே, அவர்களுக்குத் தாம்பேயராயிருப்பர். இப்படியாலே, பகவத்விஷயத்தி லவகாஹியாதாரிருக்குமிடத்திற் காட்டில் ஸ்தாவரங்களுள்ள காடே அமையுமென்றிருப்பர்கள். "ஆன்விடையேழன் றடர்த்தார்க்காளானாரல்லாதார் மானிடவரல்ல ரென்றென்மனத்தேவைத்தேனே" ஸர்வேச்வரன்திரு

---

அரும்பத விளக்கம்.—ப்ரவேசே வக்த்ருவைலக்ஷண்யத்தையருளிச்செய்கிறார்; (ஆழ்வார்களித்யாதி) நினைத்திருப்பர்கள்-ஆசார்யர்கள் என்றபடி. இப்படி நினைக்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; ஆழ்வார்கள் கொண்டாடுகையாலே என்கிறார். (இன்கவிபாடு மித்யாதி) அவதரித்தவர்களை நித்யஸூரிகளென்று நினைக்கப்போமோவென்ன; அருளிச்செய்கிறார். (இவர்க ளித்யாதி) இன்னவிடமென்றும், இங்குள்ளார் அங்குள்ளாரென்றும் நிச்சயிக்கப்போகாமையாலே, அங்குள்ளாரென்றே நினைத்திருப்ப ரென்றபடி. அன்றிக்கே, ஆழ்வார்கள்தான், அவர்கள் ஊரைப் பேரைச் சொல்லாமல் கவியையிட்டு நிரூபிப்பானென்னென்ன ; அருளிச்செய்கிறார். (இவர்களித்யாதி) இவ்வ இரண்டு ஸங்கதியும் ஸ்வரஸமன்று; பிழையும் தெரியாது; வந்தவிடங்களிலே கண்டுகொள்வது. இப்படிப்பட்டவர்கள் காட்டிலேதிரிவானென் என்ன; அருளிச்செய்கிறார். (பேயரே எனக்கித்யாதி) ஆனாலும், சாஸ்த்ரவச்யரான மநுஷ்யரைவிட்டுக் காட்டிலே போகக்கூடுமோவென்ன ; அருளிச்செய்கிறார். (ஆன்விடை யேழன்றித்யாதி)

வுள்ளம்ஊற்றுமறுத்தவளவிலும் க்ருபையைப்பண்ணும்தம்முடைய மனஸ்ஸிலும் கொடுமையைவைத்தேனென்கிறார். இனியவர்கள் மனுஷ்யரல்லரென்று செம்பிலும் கல்லிலும் வெட்டிக்கொள்ள வமையும். "சிறந்தார்க்கெழுதுணையாம் செங்கண்மால் நாமம், மறந்தாரைமானிடமாவையேன்" என்னும்படியே, அறிவு நடையாடாதவர்களிருக்குமிடத்தில்வஸிக்குமதில், காட்டிலேவர்த்திக்கவமையுமென்று காடுகளிலேவர்த்திப்பர்கள். இங்ஙனேசெல்லுகிறகாலத்தில், ஒருமழையையும் காற்றையுங்கண்டு திருக்கோவலூரிலே ஒரு இடைகழியிலே ஒருத்தர் புக்குக்கிடக்க, இருவராவார் சென்று, "ஒருவர் கிடக்குமிடம் இருவர்க்குப்போரும்" என்றிருக்க, மூவராவார்சென்று, "இருவரிருக்குமிடம்மூவர்க்கு நிற்கப்போரும்" என்று மூவரும் நிற்க, இருவர்வந்துநெருக்க, [நீயும் திருமகளும்] [தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேலென்னடியாரதுசெய்யார்]என்னும் நீயும், உன்பரிகரமும் சென்றுநலியப்புக, "நகஸ்ஶ்ரீ நாவ:ராஞ்)தி" "நகச்சிந்நாபராத்யதி"என்று-ஏறிட்டுக்கொண்டு நோக்கும் திருமகளும், [நின்றாயால் குன்றெடுத்துப்பாயும் பனிமறைத்தபண்பாளா] மலையெடுத்துடம்பிலே விழுகிற மழையைக் காத்த நீர்மையை யுடையவனே. உடம்பிலே விழுந்த மழையை மலையெடுத்துப் பரிஹரித்தபோது பிறந்த ஹர்ஷம்போலே யாயிற்று இவர்கள் நெருக்குப்பெற்றபோது இவனுக்கிருந்தபடி. [வாசல்கடைகழியாவுட்புகா காமரு பூங்கோவலிடை கழியேபற்றியினி] காமுகரானவர்கள், உகந்தவிஷயங்களிலே, போகச்சொன்னாலும் தூணைக்கட்டிக்கொண்டு நிற்குமாப்போலே, இவ்வாசலுக்குப் புறம்போக மாட்டுகிறிலன்; உள்ளுப்புகுர மாட்டுகிறிலன். [இனி] இப்போது. இப்படி இருவருமாகத் தங்களை நெருக்கப்புக்கவாறே, நம்மையொழிய வேறே சிலர் நெருக்குகிறு ருண்டென்று, ஜ்ஞாநமாகிற விளக்கை யேற்றினர். "ஜ்ஞாநதீபேந பாஸ்வதா" "ஜ்ஞாநதீபேநபாஸ்வதா" விளக்குண்டானாலும் ஜ்ஞாநமில்லையாகில் பதார்த்தங்களை விவேகிக்கப்போகாது.

முதலாழ்வார்க்கு ஜ்ஞாநம் பிறந்தபடி சொல்லிற்று. இருவராவார்க்கு, ஜ்ஞாநம் முற்றி பக்தியானபடி சொல்லிற்று. மூவரா

---

அரு—இருவர்வந்து நெருக்கினரென்னு மதுக்கு ஜ்ஞாபக மேதென்ன அருளிச்செய்கிறார்; (நீயுந் திருமகளுமென்று.) வெறுந்தீபம் போராதோ? ஜ்ஞாநதீபம்வேணுமோ? என்ன; அருளிச்செய்கிறார். (விளக்குண்டானாலு மித்யாதி)

**வையந் தகளியா வார்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக-செய்ய**
**சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை**
**இடராழி நீங்குகவே யென்று.**

பதவுரை—வையம் - பூமியானது, தகளியா-அகலாகவும், வார்-பெருகுகிற, கடல்-ஸமுத்ரமானது, நெய்யாக-நெய்யாகவும், வெய்ய கதிரோன்-உஷ்ணமானகிரணங்களையுடைய ஸூர்யனானவன், விளக்காக - தீபமாகவும், (இப்படிவைத்து அநுமாநத்தாலே ஸர்வேஶ்வரனையறிந்து), செய்ய - சிவந்த, சுடர் - ஒளியையுடைய, ஆழியான் - சக்ராயுதத்தை யுடையனான (ஸர்வேச்வரனுடைய), அடிக்கே - திருவடிகளிலே, இடர் - துன்பமாகிற, ஆழி - ஸமுத்ரம், நீங்குக - விலகவேணும், என்று - இப்படி உத்தேசித்து, சொன்மாலை - சப்தஸந்தர்ப்பங்களை, சூட்டினேன் - ஸமர்ப்பித்தேன்.

வ்யா—வார்க்கு, பக்தியுடையராய் அவனை யொழியச்செல்லாதவர்களுடைய ஸாக்ஷாத்காரம் பிறந்தபடி சொல்லிற்று. இம்மூவர்க்குக் மர்த்த மொன்றே. மூன்று ருஷிகள் கூடி ஒரு வ்யாகரணத்துக்கு கர்த்தாக்களானாற்போலே கர்த்ருபேதமுண்டேயாகிலும் அர்த்த சரீரம் ஒன்று; த்ரிமுநி வ்யாகரணமென்னுமாப்போலே.

‘தகளி’ என்றும் ‘விளக்கு’ என்றும் ‘நெய்’ என்றும் வர்ணிக்கிறபடி எங்ஙனேயென்னில்; ஜகத்தானது ஸாவயவத்வாத் கார்யமென்னக்கடவது; கார்யமானது கர்த்ருமத்தாகக்கடவது; அந்த கர்த்தா சங்கசக்ர கதாதரனென்கிறது. “ஶாஸ்த்ரயோநித்வாத்” “சாஸ்த்ரயோநித்வாத்” என்று-ஆநுமாநிகரை சாஸ்த்ரகாரர் துஷிக்கச்செய்கே, இங்கு ஆநுமாநிகமாகக் கொளும்படி எங்ஙனேயென்னில்; “வேதஶாஸ்த்ராவிரோதிநா யஸ்தர்க்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதர:” “வேதசாஸ்த்ராவிரோதிநா, யஸ்தர்க்கேணநுஸந்தத்தே ஸதர்மம் வேதநேதர:” என்று-வேதசாஸ்த்ரங்களோடு விருத்தமானதர்க்கம் நிஷேதிக்கப்படுகிறது; அவிருத்தமானது ஸ்வீகரிக்க

அரு—ஒருவனுக்கே ஜ்ஞாநபக்தி ஸாக்ஷாத்காரமாகிற மூன்றும் வேண்டுகையாலே, (மூவர்க்கும் அர்த்தமொன்றென்கிறது). வக்தா மூவராயிருக்க, ஒன்றுகிறபடி எப்படியென்ன; அருளிச்செய்கிறார். (மூன்று ருஷிக ளித்யாதி) வ்யாகரணம்-சப்தசாஸ்த்ரம்.

வ்யா—ப்படுமென்று சொல்லுகையாலே, அது தர்க்கமாகக் கொள்ளு கிறது. "ந்யாயாநுக்ருஹீதஸ்ய வாக்யஸ்யார்த்த நிச்சாயகத்வாத்" "ந்யாயாநுக்ருஹீதஸ்ய வாக்யஸ்யார்த்த நிச்சாயக்த்வாத்" என்கிற படியே.

(வையந்தகளியா) ஸாவயவமுமாய் கார்யமு மாகையாலே, வையம் தகளி என்கிறது. (வார்கடலே நெய்யாக) வார்கடல் - சூழ்ந்தகடல். பூர்ணமான கடலென்னவுமாம். நதியினாலே ஜலம்புகுந்ததென்று பூர்ணமாகாதிருக்கையாலும், இல்லையென்று குறையாதிருக்கையாலும், பூமிக்கு உயர்ந்திருக்கச்செய்தே பூமியை அழிக்கமாட்டாமையாலும், கார்யமென்று தோற்றுகையாலே, நெய்யாகக் கொள்ளுகிறது. (வெய்யகதிரோன் விளக்காக) முப்பதுநாழிகையி லொருநாழிகை குறையவு மேறவும் நிற்கப்போகாமையாலே "பீஷோதேதிஸூர்ய:" "பீஷோதேதிஸூர்ய:" என்று - ஈச்வர கார்ய பூதனென்று தோற்றுகையாலே. விளக்கு என்று சொல்லிற்று-தன்னையும்காட்டி ஈச்வரனையும் ப்ரகாசிப்பிக்கையாலே. வெய்ய கதிரோன் என்று விளக்கினுடைய ஸ்தாநத்திலே சொல்லுகையாலே. இப்படிக்கு ஸகலத்துக்கும் அவன் சேஷி, ஸகலமும் அவனுக்கு கார்யதயா சேஷமென்றறிந்தால், அங்குத்தைக்கு அஸாதாரண பரிசர்யைபண்ணும்படிசொல்லுகிறதுமேல். (செய்யசுடராழி) செய்யசுடரென்றது-ச்யாமமானதிருமேனிக்குப் பகைத்தொடையாயிருக்கை. இத்தால், "நிர்விசேஷசிந்மாத்ரம் ப்ரஹ்ம" "நிர்விசேஷசிந்மாத்ரம் ப்ரஹ்ம" என்கிறபக்ஷத்தைத் தவிர்க்கிறது. இதாயுதங்களையுடைய தேவதாந்தரங்களையும் வ்யாவர்த்திக்கிறது. (அடிக்கே)என்று-விக்ரஹவத்தையைச்சொல்லுகிறது. அடி என்றத்தாலே, தம்முடையசேஷத்வம் சொல்லுகிறது, (சூட்டினேன் சொன்மாலை) பரிமளம் மாருதமாலையைச்சூட்டினேன்; "சொற்றொடை" என்னுமாப்போலே. (இடராழி நீங்குகவேயென்று) இடர்கடலானது வற்றவேணுமென்று, தாபத்ரயத்தாலே தப்தரானவர்கள் இதைக்கற்றுத் தம்வழியே போந்து

---

அரு—முதற்பாட்டு.—தகளியானது ஸாவயவமும் கார்யமுமாயிருக்கையாலே, தகளியோட்டை ஸாம்யம். ஸமுத்ரம் மர்யாதை கெடாதிருக்கையாலே, ஒருத்த ஞஜ்ஞையாலே உண்டானது; என்று-அதினுடைய கார்யத்வம் தோற்றுகிறது. ஆதித்யன் அவனாஜ்ஞையிலே நடக்கையாலே தன்னை சேஷத்ரவ்யமாகக்காட்டி ஈச்வரனை சேஷியாகப் ப்ரகாசிப்பிக்கிறானென்றபடி.

வ்யா—இடர்க்கடலைப் பிழைப்பார்களென்று. அன்றிக்கே, அவனைப் பேசப்பெறாத தம்முடைய இடர்போகவென்றுமாம்.

மற்றை யாழ்வார்களில் இவர்கள் ஜ்ஞாநப்ரதாநராய், பரதசையோடு உகந்தருளின விடங்களோடு வாசியறக் கடல்கோத்தாற்போலே இவர்களுடையபக்தி எங்குமொக்க வ்யாபித்திருந்ததே யாகிலும், கிண்ணகத்திலாறு எங்கு மொக்கப்பரந்துவாரா நிற்க நீருக்கோரிடத்திலே நோக்காமாப்போலே, திரு வுலகளந்தருளினவிடத்திலும்திருமலையிலும் ஊன்றியிருக்கும். இவர்கள்,"பேயரேயெனக்கியாவரும்" என்னுமாப்போலே,ஸம்ஸாரிகளோடு பொருந்தாமையாலும், ஸ்தாவரங்களுக்கு விபரீத ஜ்ஞாநமில்லாமையாலும், அவற்றோடே பொருந்திக் காடுகளிலே வர்த்திப்பர்கள். யத்ரஸாயங்க்ருஹராய் அஸ்தமித்தவிடத்தே யுறங்கி யொருவரையொருவ ரறியாமல் திரியா நிற்பர்கள்.

இவர்களைக்கூட்டி இவர்கள் தன்னை அநுபவித்து, ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு, வழிந்தசொல்லாலே தானும் ஜகத்தும் வாழவேணுமென்று நின்றான் எம்பெருமான். யாத்ருச்சிகமாக ஒரு இடைகழியிலே பெருங்காற்றும் மழையும் கண்டுபுக்கு ஒருவர்கிடக்க, மற்றொருவர், "ஒருவர்கிடக்கிறவிடம் இருவர்க்குஇருக்கலாம்" என்றார். மற்றையவர், "இருவரிருக்குமிடம் மூவர்க்குநிற்கலாம்" என்றார். இவர்களை எம்பெருமானும் பிராட்டியும்புகுந்து நெருக்குகிறார்கள். [வாசல்கடைகழியா வுட்புகா] இவர்கள் ஸம்பந்தமில்லாத புறம்பும் உள்ளுங்காட்டுத் தீயோடொக்கும். நம்மையொழிய நெருக்குகிறானை யறிய ஒருப்ரகாசகம்வேணு மென்ன உண்டாக்குகிறார் இவர்களிலே யொருவர். "பதிம்விஶ்வஸ்ய" "பதிம்விச்வஸ்ய" என்கிறபடியே, ஸ்ரிய:பதியேஜகத்துக்கு நிர்வாஹகரென்கிறார் ஒருவர்; விஷயத்திலே ஈடுபட்டு பக்திரூபமானவிளக்கேற்றினார் ஒருவர்; அதுடையார்க்கு அவன் காட்டக்காணும் வடிவை ஸாக்ஷாத்கரித்தாரொருவர். ஜ்ஞாநபக்தி ஸாக்ஷாத்காரங்கள் மூன்றும் அடைவே யொருவர்க்குப்பிறந்ததானாலோ வென்னில்; ஒண்ணாது; வ்யாகரணத்துக்கு மூன்று கர்த்தாக்களுண்டானாற்போலே மூவருங்கூடி இவ்வர்த்தத்தைநிலையிட்டார்கள்.

---

அரு—திரியவும் விசதமாக வ்ருத்தியிலே யேறுகைக்காக ப்ரவேசந் தொடங்கிப் பாட்டுக்கர்த்த மருளிச்செய்கிறார். (மற்றை யாழ்வார்களிலித்யாதி)

வ்யா—அநுமாநமுகத்தாலே இழிகை தர்சநத்துக்கு விருத்த மன்றோவென்னில்; வேதசாஸ்த்ர விருத்தமான அநுமாநம் இங்குத் தவிருகிறது. "வேதஶாஸ்த்ராவிரோதிநா। யஸ்தர்கேணாநுஸந்தத்தே" "வேதசாஸ்த்ராவிரோதிநா। யஸ்தர்சேணாநுஸந்தத்தே" என்று-சாஸ்த்ரத்தோடு சேரு மநுமாநமிது. ஸாவயவத்வாத்சார்யம்; கார்யம் விசித்ரமாகையாலே, கர்த்தாவும் ஆச்சர்யசக்தியுக்தனாக வேணும்.

(வையந் தகளியா) பூமி கடினையாகையாலே தகளியாக்கிற்று. (வார்கடல்) த்ரவத்ரவ்யமாகையாலே நெய்யாசக்கொண்டது. (வெய்யகதிரோன்) தேஜஃ பதார்த்தமாகையாலே விளக்காகக்கொண்டது. இம்மூன்றும் பஞ்சபூதங்களுக்கு முடிலக்ஷணம். (வையம்) பெரியவெள்ளத்திலே ஒருகழல்மிதக்குமாப்போலே, பூமி ஜலத்திலே நிற்கும்போது இதுக்கு ஓரடி வேண்டாவோ? (வார்கடல்) பூமியை அபிபவியாதே நிற்கும்போது ஓரடிவேண்டாவோ? (வெய்ய கதிரோன்) முப்பதில் ஒன்று ஏறுதல் குறைதல் செய்யாதபோதே, "பீஷோதேதிஸூர்ய:" "பீஷோதேதிஸூர்ய:" ஆகவேண்டாவோ? "யஸ்ஸர்வஜ்ஞ:" "யஸ்ஸர்வஜ்ஞ:" இத்யாதிகளிற்சொல்லுகிறவனாகவேண்டாவோ? (செய்யவித்யாதி) இதுக்கொரு நாதனுளன் என்றிருந்தால் அடிமைசெய்யவேண்டும்.(சுடராழியான்) ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ஜகத்தில் ஏகதேச ஸம்பந்தமுண்டே யென்னில்; அத்தை வ்யாவர்த்திக்கிறது. ரூபாதிகளில்லையென்னும் வாதிகளை நிரஸ்தராக்குகிறது. (அடிக்கே) பிராட்டியல்லவோ; முறை தப்பாதபடி வேணுமே.(சூட்டினேன்சொல்மாலை) "யதோவாசோநிவர்த்தந்தே" "யதோவாசோநிவர்த்தந்தே" என்கிறவிஷயத்தை மறுபாடுருவப்பேசிப்பண்டில்லாத வழகு முண்டாக்கினேன். (இடரித்யாதி) என்னையுளனாக்குகைக்காக. சொல்லாதிருக்கை இடர். "இடராழ்படுவார்" இத்யாதிவத். குணத்தை அநுஸந்திக்கிலும் ப்ரகாரிபர்யந்தமாயிருக்கும் இவர்களுக்கு.

---

அரு—வையந்தகளிக்கு கார்யகாரணம் சொல்லிற்றுக் கீழ்; இங்கு ஸ்வபாவபரமாக யோஜிக்கிறுர். (பூமி கடினையாகையாலே யித்யாதி) புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு ஏத்தினல் இடர்போமோ? என்ன; அருளிச்செய்கிறுர். (இடராழ்படுவா ரித்யாதி) கார்யரூபமான ஜகத்தை அநுஸந்தித்தால், ஸர்வேச்வரனை யறியப்போமோ? என்ன; அருளிச்செய்கிறுர். (குணத்தை யித்யாதி)

**என்று கடல்கடைந்த தெவ்வுலகம் நீரேற்றது**
**ஒன்று மதனை யுணரேன்நான் - அன்ற**
**தடைத்துடைத்துக் கண்படுத்த வாழி; இதுநீ**
**படைத்திடந் துண்டுமிழ்ந்த பார். (உ)**

ப-உ. கடல் - ஸமுத்ரத்தை, கடைந்தது - மதனம்பண்ணியது, என்று-எந்தநாள்; நீர் - (தான) ஜலத்தை, ஏற்றது-வாங்கிக்கொண்டது, எவ்வுலகம் - எந்தபூமிக்காக; அதனை - அந்த வ்யாபாரங்களை, ஒன்றும் - கொஞ்சமும், நான்-யான், உணரேன் - அறியமாட்டேன். அன்று - அப்பொழுது, அடைத்து - தடுத்து, உடைத்து - அழித்து, கண்படுத்த - நித்ரைசெய்த, ஆழி - ஸமுத்ரம், அது - அந்தஸமுத்ரம், நீ படைத்து - நீஸ்ருஷ்டித்து, இடந்து - பிரித்து, உண்டு-(தன் வயிற்றில் வஸிக்கும்படி) புசித்து, உமிழ்ந்த - கொப்பளித்த, (வெளிப்படுத்தின), பார் - பூமி, இது - இந்தபூமி.

வ்யா—மாறனேரிநம்பி, "எம்பெருமானை மறக்க விரகில்லையோ" என்றாராம். ஜகத்தி னிடர்தீருகை அர்த்தாத்ஸித்தம். (௧)

இரண்டாம்பாட்டு.—(என்று) இன்னமும் திரையும் நுரையும் மாறிற்றே. (எவ்வுலகம்) லோகாந்தரத்தேயோ; அடிச்சுவடுதெரியாதோ? (ஒன்றுமதனை யுணரேன்நான்) அன்று எங்கேபோனேனோ. (உணரேன்நான்) அன்றைக்கு எனக்கென்னவே யொருவிஷயந்தேடியந்தரப்பட்டேன். (அன்றித்யாதி) ஒன்றேயோ; பருத்நிப்பட்ட பன்னிரண்டும் பட்டதில்லையோ. உணரேன் என்று இழந்தநாளைக்கு சோகிக்கிறார்.

அரு—எத்தைக்கண்டாலும் அவனுக்தோற்று மென்னு மதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார். (மாறனேரி இத்யாதி) (௧)

இரண்டாம் பாட்டு.—என்று எவ்வுலகம் என்றது ஸ்வரத்திலேயாய், இன்றன்றே? இவ்வுலகமன்றே? என்று ப்ரத்யக்ஷமாய்த் தோற்றுகிறது. மூலத்திலே அர்த்தமாக்கி, (பன்னிரண்டும் பட்டதில்லையோ.) என்று சுருக்கினபடி. என்று எந்தக்கடல் கடைந்தது; என்று அந்தஸமுத்ரத்தை அடைத்து உடைத்துக் கண்படுத்தது; எவ்வுலகம் நீரேற்றது; இந்தபார், நீபடைத்து இடந்து, உண்டு உமிழ்ந்து இவை ஒன்றுமதனை யுணரேன்நான்; என்று அந்வயமாக்கி யருளிச்செய்கிறார். (உணரேனென் றித்யாது.)

வ்யா—கார்யாத்காரணாநுமாநம் வேணுமோ அவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்கள் கிடக்கச்செய்தே. (என்று) கடைந்தநுளையும் திளையும் மாறிற்ரு. (கடைந்தது) கடையப்புக்குக் கைவாங்கினவர்களை ஈச்வரனாகக் கொள்ளவேணுமோ? (எவ்வுலகம் நீரேற்றது) இன்று மஹாபலியாலே நோவுபடாநின்றதோ; அவனடிச்சுவடு மாறிற்ரு; "வாமனன்மண்ணிது" என்னும்படி தோற்றுகிற தில்லையோ. இவ்வுலகமன்ரு நீரேற்றது என்கிறது. (ஒன்றுமதனை யுணரேன் நான்) இச்சேஷ்டிதங்கள் கிடக்கக் கார்யாத் காரணாநுமாநம் பண்ணித்திரியவோநான், அன்றிக்கே, "ஒன்றுமதனை யுணரேன்" என்றது-அதிமாநுஷசேஷ்டிதங்களைக்கண்டு "எத்திறம்" என்று மோஹிக்கிறாராகவுமாம். "என்று கடல்கடைந்ததெவ்வுலகம்" என்றது, எல்லாச்செயல்களுக்கு முபலக்ஷணம். "என்று" என்றது-ஜ்ஞாநவை சத்யம் சொல்லுகிறது. ஜ்ஞாநமாவது - யத்தேசகால ஸம்பந்தியா யாதோரர்த்தம் தோற்றிற்று, தத்தேசகால ஸம்பந்தியா அவ்வர்த்தத்தைக் காட்டுகையிறே. (அன்றித்யாதி) நீ அணை யடைத்துத் திருவில்லாலே அழித்துண்டாக்கின கடலிலே. கண்படுத்த-கண்வளர்ந்த ஆழி. உடைத்து-ஸம்ஹரித்தென்னவுமாம். (இதுவித்யாதி) இல்லாதவன்று ஸ்ருஷ்டித்து ப்ரளயங்கொள்ள அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்து, ப்ரளயம்வருகிறதென்று ஏற்கவே திருவயிற்றிலே வைத்து வெளிநாடு காணப் புறப்பட விட்ட பார்.

---

அரு—இரண்டாம் யோஜனைக்கு அவதாரிகை யருளிச்செய்கிறார். (கார்யாத்காரணாநு மாந மித்யாதி) அநுமாநம் கீழிற் பாட்டிலே. எவ்வுலகம் என்றது. இவ்வுலக மென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார். (இன்று மஹாபலியாலே இத்யாதி) "அதனை" என்றது - கீழ்ச்சொன்ன அநுமாநமாதல்; இப்பாட்டிற் சொன்ன சேஷ்டிதமாதல். மேலே அநுவாதத்திலே எல்லாச் செயல்களும் சொன்னால், இங்கு எடுக்கிறவிடத்திலும், என்று அது அடைத்தது; எவ்வுலகம் படைச்திடந்துண் டுமிழ்ந்தது; என்று சொல்லவேண்டாவோவென்ன; அருளிச்செய்கிறார். (என்று கடல்கடைந்த தெவ்வுலக மித்யாதி) "என்று" என்று கண்டாற்போலேயிருக்க, ப்ரச்நரூபமாகையாலே, அன்று செய்ததும் இப்போது செய்தாற்போலேயிருக்கையாலே, (ஜ்ஞாநவைசத்யம்) என்கிறது. அன்று செய்தது இப்போதுதோற்றுகை ஜ்ஞானமோவென்ன; அருளிச் செய்கிறார். (ஜ்ஞாநமாவ தித்யாதி)

பாரளவு மோரடிவைத் தோரடியும் பாருடுத்த
நீரளவுஞ் செல்ல நிமிர்ந்ததே - சூருருவின்
பேயளவு கண்ட பெருமா னறிகிலேன்
நீயளவு கண்ட நெறி. (௩)

ப-உ.—ஓரடி-அத்விதீயமான ஒரு திருப்பாதத்தை, பாரளவும்-பூமிமுழுதும், வைத்து-வைத்து, ஓரடியும்-மற்றொரு திருப்பாதத்தையும், பார் - பூமியை (அண்டகடாஹத்தை), உடுத்த - சூழ்ந்த, நீரளவும் ஜலபர்யந்தமும், செல்ல-போம்படி, நிமிர்ந்ததே-வளர்ந்ததே? சூர் - தெய்வப்பெண்ணினுடைய, (யசோதையினுடைய) உருவின்-வடிவையுடைய, பேய் - பிசாசமான பூதனையினுடைய, அளவு - எல்லையை, கண்ட - அறிந்த, பெருமான் - ஸ்வாமியே! நீ - நீ, அளவுகண்ட - எல்லையாகக்குறித்த, நெறி - நல்வழியை, அறிகிலேன் - அறியமாட்டுகிறிலேன்.

---

வ்யா—இது என்றது - தாமிருந்த பூமியாகையாலே. அது என்றது-அத்தோடு ஸம்பந்தித்த கடலாகையாலும், அஸந்நிஹிதமாகையாலும். "ஆழி—அது" என்றந்வயம். செய்யுடையவனன்றோ க்ருஷி பண்ணுவான்; அல்லாதார்க்கும் ஈச்வரத்வ ப்ரஸங்க முண்டாகில், இதிலே யவர்களுக்கு மொரு தொழிலுண்டாகாதோ. (உ)

அவ.—மூன்றும் பாட்டு.—(பாரித்யாதி) அப்பூமியை யடைய வளந்தானென்று இவனுக்கு ஈஸ்வரத்வம் சொல்ல, அளக்கைக்கு விஷய முண்டாகிலன்றோ என்கிறார்.

(பாரளவு மோரடிவைத்து) பூமியுள்ள வளவு மோரடிவைத்து. (ஓரடியும்) வைத்த வடியைச் சொல்லவுமாம் மற்றை யடியாகவுமாம். (பாருடுத்த) "பௌவநீருடையாடையாகச்சுற்றி" என்கிற

---

அரு.—இது - அது - என்று, ஸந்நிஹிதமாகவும் அஸந்நிஹிதமாகவும் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார். (இது வென்றது தாமித்யாதி), அத்தோடு - க்ஷீராப்தியோடு, அடைத்துடைத்துக் கண்படுத்தவாழி அது; படைத்திடந்துண் டுமிழ்ந்தபார் இது; என்றந்வயம். என்று இவையெல்லாம் செய்தருளிற்று; அன்று அந்தந்தக் காலங்களிலே, ஒன்று மதனை - அவற்றுளொன்றையும், உணரேன் - அறிந்தேனில்லை யென்றபடி. (உ)

மூன்றும்பாட்டு.—கீழ்ச்சொன்ன இரண்டுக்கும் அநுகுணமாக இரண்டர்த்த மருளிச்செய்கிறார். (பௌவநீரித்யாதி)

வ்யா—படியே, பூமியை யாவரித்த ஜலத்தைக் கடந்தென்னவுமாம்; மேலில் அண்டத்தைச்சூழ்ந்த ஜலத்தளவும் சென்றதென்னவுமாம். (சூருநவித்யாதி) "சூருமணங்குந்தெய்வப்பெண்" என்கிறபடியே, விலக்ஷணமான வடிவென்கிறது. பேயைத் தெய்வப்பெண்ணென்னலாமோ வென்னில்; "விஶாவாஂஷேவயோநயஃ" "பிசாசா தேவயோநயః" என்று-பிசாசங்களையும் தேவயோநியிலே கூட்டுகையால் ஆர். (பேயளவுகண்ட)பேயாக பரிச்சேதித்த. பேயாக பரிச்சேதிக்கையாவது-முடிக்கை யென்று பொருளாமிறே. (பெருமான்) பூதனையை முடித்து ஒருசேஷியை ஜகத்துக்குத்தந்தாய். "ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீ ஜ்ஜகத்குரோஃ" "ஸ்தந்யம் தத்விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீ ஜ்ஜகத்குரோః" (அறிகிலேனித்யாதி) நீசெய்த ஒரோசெயலை என்னால் பரிச்சேதிக்கப்போகிறதில்லை. அன்றியே, மஹாபலியாலே அபஹ்ருதையான பூமியை யளந்து உன்திருவடிகளிலே இட்டுக்கொண்டாற்போலே, என்னை உன்திருவடிகளிலே இட்டுக்கொண்டு, பூதனைப்போக்கினாற்போலே என்னுடைய விரோதியைப்போக்கி என்னை விஷயீகரித்தபடி அறிகிலேனென்னவுமாம்.

பாரளவும்-அளவிலே குறைதாங்கினவருமை. உடுத்த நீரளவும்-ஆவரணஜலம். பேயளவு-எல்லை. பெருமான்-அச்செயலாலே யென்னையுண்டாக்கினவன். நீ சிலரைப் பரிச்சேதிக்கும்போது வருத்தமில்லை; உன்னைப் பரிச்சேதிப்பார் முடிந்தேபோமித்தனை. தாயைப் பேயாக்கினபடி. நீஅளவிட்டுவைத்த உபாயம். உணராதொழியப் பண்ணுகிறாயோ, உணரப்பண்ணுகிறாயோ. (ரு)

அவ.—நாலாம்பாட்டு.—நீரறிந்தி லீராகில் ஈச்வரனறியானோ வென்ன; "எம்பெருமான்ப்ரஸாதமடியாகப்பிறந்த அறிவுடையநான் தடுமாறாநின்றேன், தபஸ்ஸமாதியாலே பெற்ற அறிவுடையவன் உபதேசிப்பதே" என்று க்ஷேபிக்கிறார்.

---

அரு.—பார்-பூமியாதல், அண்டபித்தியாதல், ஆவரித்தஜலம் - சுத்தோதகம். நெறி-செய்யாதல்; உபாயமாதல். குறைதாங்குகை-கடிவாளத்தை விட்டுப் பிடிக்குமாப்போலே மட்டிலே நிறுத்துகை. எல்லைகாண்கை-முடிக்கை. அளந்தத்தையும் பேயை முடித்தத்தையும்பற்ற அருளிச்செய்கிறார். (நீசிலரை இத்யாதி) (ரு)

நாலாம்பாட்டு.—"ஈஶ்வராஜ்ஜ்ஞாநமந்விச்சேத்" "ஈச்வராத்ஜ்ஞாநமந்விச்சேத்." என்ற-ஈச்வரனாகச் சொல்லப்பட்ட ருத்ரன் அறியானோவென்ன; "அறிவானும்" என்கையாலே க்ஷேபம்தோற்றுகிறது.

நெறிவாசல் தானேயாய் நின்றானை யைந்து
பொறிவாசல் போர்க்கதவஞ் சாத்தி - அறிவானும்
ஆலமர நீழ லறம்நால்வர்க் கன்றுரைத்த
ஆலமமர் கண்டத் தரன். (௪)

ப-உ.—ஆலமரநீழல் - வடவ்ருக்ஷத்தின்சாயையில், அறம்-தர்மத்தை, நால்வர்க்கு - (அகஸ்த்யர் முதலான) நாலுபெயர்களுக்கு, அன்று - அந்தநாளில், உரைத்த - உபதேசித்த, ஆலம் - விஷம், அமர் - அடங்கிய, கண்டத்து - கழுத்தையுடைய, அரன் - சிவன், ஐந்து-ஐந்துவகைப்பட்ட, பொறி - இந்த்ரியங்களினுடைய, வாசல் - த்வாரங்களில், போர் - யுத்தம்செய்கிற, கதவம் - கபாடத்தை, சாத்தி - அடைத்து, நெறி - ஸ்வரூபாநுரூபமான, வாசல் - உபாயம், தானேயாய் - அநந்யஸாத்யமாய், நின்றானை - இருக்கிற ஸர்வேச்வரனை, அறிவானும் - தெரிந்துகொள்வனும்.

---

வ்யா—(நெறி யித்யாதி) நெறியானவாசல்; உபாயமான வாசலென்னவுமாம். "நெறி" என்று உபாயமாய், "வாசல்" என்று உபேயத்தைச் சொல்லிற்றாய், உபாயமும் உபேயமும் தானேயாய் நின்றவனேயென்றுமாம். இப்போது இதுசொல்லுகிறது-ப்ராப்தியவனேயொழிய உண்டாகிலன்றோ அறிவு மவனேயொழிய உணர்வதென்கைக்காக. (ஐந்துபொறிவாசல்) ஒன்றையடக்கில் ஒன்று திறக்குமென்கை. நீரையடைக்கப் புக்கால், ஓரிடமடைக்க ஓரிடம் கோழைப்படுமாப்போலே. "ஹ்ருஷீகை:" "சஞ்சலம்ஹிமந:" என்கிறபடியே. (போர்க்கதவம்) அடைக்கப்புக்கால் ஒண்ணாதபடி பொராநின்ற கதவம். 'சாத்தி' என்றது-அடைக்கப்போகாமையாலே. 'அறிவானும்' என்று க்ஷேபிக்கிறார். (ஆலமரநீழல்) தான் தபஸ்ஸுபண்ணின ஆலமரநிழலிலே. தான் பகவத்ஸம்பந்தம் பண்ணுவதற்குமுன்னே சிஷ்யபரிக்ரஹம் பண்ணுவாரைப்போலே. ஸர்வஜ்ஞனை அஜாதசத்ருவுக்கு ப்ரஹ்மஜ்ஞாநமின்றியே யிருக்கிற பாலாகி உபதேசித்தாற்போலே. (அறம்) ஸமாஸ்ரயணப்ரகாரம், (நால்வர்க்கு) அகஸ்த்ய

---

அரு—கோழைப்படுகை-நெகிழ்ந்துபோகை. பண்ணுவதுக்கு-தனக்குண்டாவதுக்கு முன்னே யென்றபடி. "அறிவானும்" என்று இவனுக்கு ஜ்ஞாநஹீநத்வம் சொல்லுகையாலே, இவன் உபதேசிக்கிறதற்கு இதுவுமொரு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார். (ஸர்வஜ்ஞனை வித்யாதி.) அஜாதசத்ரு - தர்மபுத்ரன். இந்தவிடம் தெரியாது.

வ்யா—புலஸ்த்யாதிகளுக்கு. (ஆலமமர்நிழற்சடைத்தரன்) தாமஸகுணத்துக்குச்சேர்ந்தது செய்யுமதல்லது "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" "ஸத்வாத்ஸம்ஜாயதேஜ்ஞாநம்" என்கிறபடியே, கூற அவன்கடவனோவென்கிறார்.

(நெறிவாசல்) ஸ்வரூபாநுரூபமான உபாயமென்றுமாம். (ஆய்நின்றானை) ஸித்தம். (சாத்தி) வருந்திச் சாத்தலாமித்தனை; தாளிடவொண்ணாது, முகத்திலே யறையும். நல்லவிஷயங் காட்டாவிடில் கூறுகொட்டும். "ஹரந்தி ப்ரஸபம் மந:" "பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே." பண்ணுவிடில் உபாயமுண்டோ. (அறிவானும் படபடென சிக்ஷிக்கக்கொள்ளு மத்தனையல்லது அறிவுக்கு அடைவுண்டோ. சீராமப்பிள்ளைக்கு பட்டர், "இது வேதாரகமாகவிருக்கிற ஸாதுவை நலியாதே" என்றருளிச்செய்தார். நால்வர்—தக்ஷாதிகள். (ஆலமமரித்யாதி) எம்பெருமான் கொடுத்த வெளிச்செறிப்புமாத்ரத்தையும் விஷஹரணசக்தியையுங்கொண்டு இத்துறையிலே இழியப்போமோ. (௪)

அவ.—ஐந்தாம்பாட்டு—நாட்டிலே ஈச்வரனை நிச்சயித்துப்போருகிறவனை "அறிவானும்" என்னுநீர் சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்; அவ்வீச்வரத்வம்போலே காணுங்கோள் அறிவுமென்கிறார்.

(அரன் நாரணன்நாமம்) ஒருத்தனுக்கு நாமம் - அரன்; ஒருத்தனுக்கு நாமம் நாராயணன். ஸ்ருஷ்டமான ஜகத்து தீம்பிலே கைவளர்ந்து தன்னை முடித்துக்கொள்ளப் புக்கால், அத்தை ஸம்ஹரிக்கைக்காக அவன் கொண்டவடிவுக்கு ப்ரகாரபூதனை தான்

---

அரு—ஆதிக்கு தக்ஷப்ரஜாபதி, கச்யபப்ரஜாபதி. கூறுகொட்டியான இந்த்ரியங்கள் எப்போது நிவ்ருத்தமாமென்ன; அருளிச்செய்கிறார் (ஹரந்தி ப்ரஸபம் மந:" "பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே) என்று. துர்க்ரஹமான இந்த்ரியங்களை நிக்ரஹிக்க வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பண்ணுவிடில் இத்யாதி). ஸர்வேச்வரனை யறிகைக்கு உபாயமுண்டோ என்றபடி. ருத்ரன் அறிவுகேட்டாலே துரபிமானி என்கைக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்ய மருளிச்செய்கிறார். (சீராமப்பிள்ளைக்கு இத்யாதி) பிள்ளை, ருத்ரனுடைய துரபிமானத்தையிட்டு அநேகமாக நிந்திக்க, அவனுக்கு அது தாரகங்காணும்; அவன்வழி என் போகிறீர் என்றார் பட்டரென்றபடி. இத்துறையிலே ஸர்வேச்வரனை அறியப்போமோ? அறிவானும் என்றந்வயம்.

அரன் நாரணன்நாமம் ஆன்விடை புள்ளூர்தி
உரை நூல் மறையுறையுங் கோயில் - வரைநீர்
கரும மழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார் மேனி யொன்று. (ரு)

ப-உ. அரன் - அரனென்று, நாமம் (ஒருவனுக்கு) பெயர்; நாரணன் - நாரணனென்று, நாமம் - (ஒருவனுக்கு) பெயர்; ஆன் - ஜ்ஞாநமில்லாத, விடை - எருது, ஊர்தி - (ஒருவனுக்கு) வாஹநம்; புள்- (கருடனென்கிற) பக்ஷி, ஊர்தி - (ஒருவனுக்கு) வாஹநம் ; நூல் - ஆகமம், உரை - (ஒருவன்விஷயத்தில்) ப்ரமாணம்; மறை - வேதம், உரை - (ஒருவன்விஷயத்தில்) ப்ரமாணம்; வரை - மலை (கைலாஸம்), உறையும் கோயில் - (ஒருவனுக்கு) வஸிக்குமிடம் ; நீர் - ஜலம் (ஸமுத்ரம்), உறையும்கோயில் - (ஒருவனுக்கு) வஸிக்குமிடம்; அழிப்பு- நாசம்செய்தல், கருமம் - (ஒருவனுக்கு) தொழில் ; அளிப்பு-க்ருபை செய்தல், கருமம் - (ஒருவனுக்கு) தொழில்; வேல் - வேலென்பது, கையது - (ஒருவனுக்கு) கையிலிருக்குமாயுதம் ; நேமி - சக்ரம், கையது - (ஒருவனுக்கு) கையிலிருக்குமாயுதம்; உருவம் - (ஒருவனுடைய) வடிவு, எரி-தீபோன்றது ; உருவம் - (ஒருவனுடைய) வடிவு, கார் - மேகம்போன்றது; ஒன்று - (இவ்விரண்டில்) ஒருத்தன், மேனி - சரீரம்.

---

வ்யா—அரனுகிறான், ஈச்வரன் கையடைப்பாகக்கார்யம்செய்யு மிடத்திலும் அழியும் லீலாவிபூதியிலே இவனுக்கு அந்வயம், மாணுவிக்கு நிர்வாஹ கரானுரைப்போலே. (நாரணன்) உபயவிபூதியும் தனக்குவாஸஸ்தாநமாய் அவற்றுக்கு ஆலம்பநமாயிருக்கு மென்றிட்டு, “நாராயணன்” என்றுதிருநாமம். (ஆன்விடைபுள்ளூர்தி) கைக்கொளாண்டிகளைப்போலே ஒருத்தனுக்கு ஒரு எருதுவாஹநம் ; ஒருத்தனுக்கு ஒரு வேதாத்மாவாயிருந்துள்ள பெரியதிருவடி. (உரைநூல் மறை) ஒருத்தனுக்கு உத்கர்ஷம்சொல்லுவது ஆகமம்; ஒருத்தனுக்கு உத்கர்ஷம்சொல்லுவது அபௌருஷேயமானவேதம். (உறையுங்கோயில் வரைநீர்) தன்காடிந்யத்துக்குச் சேர்ந்தமலை ஒருவனுக்குவாஸஸ்தாநம் ; தன்னுடைய தண்ணளிக்குச்சேர்ந்தநீர் ஒருவனுக்கு. (கருமமழிப்பளிப்பு) ஒருவனுக்குக் கர்மம் அழிக்கை; ஒருவனுக்குக்கர்மம்

---

அரு—ஐந்தாம்பாட்டு.—மாணுவி - மஹாநவமியிற் பண்ணும் அலங்காரம். அது உடனே அழியுமென்றபடி. ஊர்தி - வாஹநம். உரை -உத்கர்ஷத்தைச் சொல்லுகிறது.

வ்யா.—ரக்ஷை. அழிக்கைஎன்றால் அதொன்றிலும்நிற்கும். அளிப்பு என்றால் அழிக்குமதிலும் செல்லும். (கையதுவேல்நேமி)ஒருவனுக்கு ஆயுதம் பிணந்தின்னிகளைப்போலே வேல்; ஒருவனுக்கு ஆயுதம், "தலஸ்வைஶோயா_தா ஶங்கசக்ரகதாதரஃ" "தமஸஃபரமோதாதா சங்கசக்ரகதாதரஃ" என்கிற ஆயுதம். நிலாத்துக்குறிபகவான், பட்டரை,பரமபதத்திலும் ஈச்வரன் சதுர்ப்புஜனாயிருக்குமென்னுமிடத்துக்குப்ரமாணமுண்டோவென்றுகேட்க; "தலஸ்வைஶோயா_தா ஶங்கசக்ரகதாதரஃ" "தமஸஃபரமோதாதா சங்கசக்ரகதாதரஃ" என்று பேசாநின்றதிறே என்றருளிச்செய்ய, அவன் சோபிக்க, "ப்ரமாண கதியிருந்தபடி இது, ப்ரஸங்கராமித்தன்னையிறே" என்றருளிச்செய்தார். (உருவமெரிகார்) ஒருவனுக்கு வடிவு எரி; ஸம்ஸாரதப்தனாய்ச்சென்றவனுக்கு நெருப்பிலே விழுமாப்போலே. ஒருவனுக்குவடிவுகார்; தப்தனாய்ச் சென்றவனுக்கு ஒருநீர்ச்சாவியிலே வர்ஷித்தாற்போலே ச்ரமஹரமானவடிவு. (மேனியொன்று) இப்படி விஸத்ருசமாயிருக்கையாலே, ஒன்று சரீரம்; ஒருத்தன் சரீரி. "ஶுஷ்வைவிஷ்ணுஸ்ஶ ஜநாநாம்ஸ்வ‑த்மா" "அந்தஃப்ரவிஷ்டச் சாஸ்த்தாஜநாநாம்ஸர்வாத்மா" என்றால், "ஸவஜ்ஞாஸ்யஶரீரம்" "ஸர்வஞ்சாஸ்யசரீரம்" என்று தோற்றுமாப்போலே, ஒருத்தன் சரீரம் என்றால், ஒருத்தன் சரீரிஎன்று தோற்றுமிறே.

அவ.—ஜ்ஞாநமில்லாமையாலே இவனைச்வர்யமும் ஆறல்பீறலென்கிறார்.

(அரன்) சிலரை நசிப்பிக்குமவனொருவன். (நாரணன்) ததீயத்தை யொழிய உளனாகாதவ னொருவன். "நீயென்னையன்றியிலே" (ஆன்விடை) அனைச்வர்யஸூசகம். (புள்) "கெருடவாகனன்நிற்க"

அரு.—வேறொரு சப்தத்தாலேசொல்லாமல், "அழிப்பு-அளிப்பு" என்று இத்தையிட்டுச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார். (அழிக்கையென்று லித்யாதி) அவன் க்ருத்யந்தானும், இவனே அந்தராத்மாவா யிருக்கச்செய்கையாலே, அதுவும் இவனிட்டவழக் கென்கைக்காக இந்தசப்தத்தாலே சொல்லுகிறதென்று பாவம். திருவாழியே ஆயுத மென்கைக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார். (நிலாத்துக்குறிபகவானித்யாதி)

மேல் யோஜனைக்கு அவதாரிகை யருளிச்செய்கிறார். (ஜ்ஞாநமில்லாமை இத்யாதி) ஆறல் பீறல்-சாடு. ஆறல் சோறும், பீறல் புடைவையும், என்றர்த்தம். நையசல் என்று த்வநி.

வ்யா.—இவனைச்வர்யஸூசகம். (உரை) ஆப்திகேட்கவேண்டில்விப்ரலம்பாதிதோஷதூஷிதம். (மறை) அபௌருஷேய நித்யநிர்த்தோஷச்ருதி, (வரை) காடிந்யத்துக்கு ஸத்ருசமானவிடம். (நீர்) தண்ணளிக்குத்தக்கவிடம். (கருமம் அழிப்பு)நசிப்பிக்கை. (அளிப்பு)ரக்ஷிக்கை. (வேல்) காணவயிறழலும், (நேமி) விட்டாலும் "இன்னாரென்றறியேன்" என்னப்பண்ணும். (எரி) நெருப்பைத்தூவும். (கார்) காண ஜீவிப்பிக்கும். (மேனியொன்று) ஒன்றுசரீரம்; மற்றையவன் சரீரியென்று தன்னடையிலே வருமிறே. அந்தர்யாமி ப்ராஹ்மணத்தை நினைக்கிறார்.

(அரன்) தன்னையொழிய ஒன்றையழியாதே நிற்கில் ஈச்வரத்வமில்லை. (நாரணன்) தன்னை ஒழிந்தவற்றில் ஒன்றழியில் ஈச்வரத்வமில்லை. (ஆன்) அநீச்வரத்வ ஸூசகம்; (புள்) ஈச்வரத்வஸூசகம். (நூல்) சொன்னவனுக்கு ஆப்தியில்லையாகில் அப்ரமாணம். (மறை) ஆப்தவாக்யமான ப்ரமாணம். (அழிப்புஅளிப்பு) இவற்றை ஸூசிப்பிக்கிறது-அரன்நாரணன், வாசகசப்தத்துக்கு வசநக்ரியைபோலே. (வேல்) கலக்கவரிலும் பயமாம். (நேமி) பிரிந்தாலும், "இன்னாரென்றறியேன்" என்னப்பண்ணும். (உருவம், எரி மேனி ஒன்று; கார்மேனியொன்று). இங்ஙனே சேர்த்திருக்கவேண்டாவோ. க்ஷேபம். அறிவுடையார்க்குச் சொல்லவேணுமோ சேர. (ரு)

அவ.—ஆறும்பாட்டு.—அவனை சரீரதயா சேஷமென்றீராகில் நீரும் சேஷபூதரன்றோ; நீர் உபதேசிக்கிறபடி எங்ஙனேயென்னில்; எனக்கு அவன் ப்ரஸாதம் அடியாகையாலே விஸ்ம்ருதிசங்கை யில்லை யென்கிறார்.

---

அரு.—உரை-ஆகமம். 'நூல்' என்று ஸாமாந்யமாய், உரையாகிற நூலென்னுதல்; மறையாகிற நூலென்னுதல். விட்டாலும் - கொல் என்று மேலேவிட்டாலும். அப்போதும் போச்யமாயிருக்குமென்றபடி.

அழிப்பு என்கிற வாச்யத்தை இவற்றுக்கு வாசகமான, "அரன்-நாரணன்" என்கிறசப்தம் காட்டும்படியென்னென்ன; அருளிச்செய்கிறார். (வாசகசப்தத்துக்கித்யாதி) இந்தவாக்யந் தெரியாது. ருத்ரனை விட்டு ஈச்வரனைப் பற்றுகைக்கு இம்மட்டுப் போருமோ? அவன் ஸ்வரூப ஸ்வபாவங்களெல்லாம் சொல்லவேண்டாவோ? என்ன; அருளிச்செய்கிறார். (அறிவுடையார்க்கித்யாதி) (ரு)

ஒன்று மறந்தறியே னோதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ வேழைகாள்—அன்று
கருவரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்க மேயான் திசை. (கூ)

ட-உ.—அன்று-அப்பொழுது, கருவரங்கத்துள்-கர்ப்பஸ்தாநத்தில், கிடந்து - இருந்தபடியிருந்து, திருவரங்கமேயான் - ஸ்ரீரங்கத்துக்கு ஸ்வாமியான எம்பெருமானுடைய, திசை-விஷயங்களை, கண்டேன் - ஸாக்ஷாத்கரித்தேன்; கைதொழுதேன் - அஞ்சலிபண்ணினேன்; ஒன்றும் - ஒரு அம்சமும், மறந்தறியேன் - மறந்தறியமாட்டேன்; ஏழைகாள் - அறிவில்லாதவர்களே! நான் - யான், இன்று-இப்பொழுது, ஓதநீர்வண்ணனை, சைத்யம்மிகுந்த ஜலத்தினுடைய ஸ்வபாவத்தையுடையவனை, மறப்பனோ - மறப்பனோ?

வ்யா.—(ஒன்று மறந்தறியேன்-அன்று கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்) கர்ப்பவாஸம பண்ணுநிற்கச் செய்தே, "ஐயோ! நோவுபட்டாயாகாதே" என்று அவன் கடாக்ஷிக்க, அவனைக்கண்டேன். தமமுடைய விலக்காமையைக்கொண்டு ஸாக்ஷாத்கரித்ததாகச் சொல்லுகிறார். (திருவரங்கமேயான் திசை - ஒன்றும் மறந்தறியேன்) பெரியபெருமா ளிடையாட்டத்தில் அவனுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளில் ஒன்றும் மறந்தறியேன். (ஓதநீர்வண்ணனை நான் இன்று மறப்பனோ) ச்ரமஹரமான வடிவையுடைய பெரியபெருமாளை இன்று மறப்பனோ. இதுதான் தேஹயாத்ரையாய் பாப்ரதிபாதகயோக்யமான காலத்திலே மறப்பனோ. (ஏழைகாள்) இவ்விஷயத்தில் புதியதுண் டறியாதவர்களே! என்கிறார். திசை என்றது - அவனிடையாட்டத்திலே என்றபடி. அத்திக்கிலே என்றும் சொல்லக்கடவதிறே.

(ஒன்றித்யாதி) கண்டவளவிலே ஒன்றும் மறந்தறியேன். உம்முடைய ஸௌஜந்யமோவென்னில்; அன்று; (ஓதநீர் வண்ணனை) மறக்க வொண்ணுதவழகு. (ஏழைகாள்) மறக்கவொண்ணுத விஷயத்தை விட்டு நினைக்கவொண்ணுத விஷயத்தைப்பற்றி நிற்கிறவர்களே. (அன்று) "அறியாக்காலத்துள்ளே" "ஜாயமாநம்ஹி—ஜாயமாநம்ஹி". (கருவித்யாதி) மறக்கைக்கு ஹேதுவுள்ள விடத்திலே

ஆறும்பாட்டு.—கர்ப்பாவஸ்தையிலே காணக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார்.

(தம்முடைய வித்யாதி) ஜாயமாநம்ஹி-ஜாயமானகாலத்திலே()

**திசையும் திசையுறு தெய்வமும், தெய்வத்**
**திசையும் கருமங்க ளெல்லாம்—அசைவில்சீர்**
**கண்ணன் நெடுமால் கடல்கடைந்த, காரோத**
**வண்ணன் படைத்த மயக்கு.** (எ)

ப-உ.—திசையும் - திக்குக்களும், (திகுபலக்ஷிதபூமியும்) திசை - திக்குக்களிலே, உறு - சேர்ந்திருக்கிற, தெய்வமும் - தேவதைகளும், தெய்வத்து - (அந்த) தேவதைகளுக்கு, இசையும் - சேர்ந்த, கருமங்களெல்லாம் - வ்யாபாரங்களெல்லாம், அசைவு - நாசம், இல் - இல்லாத, சீர் - கல்யாணகுணங்களையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனுயவதரித்தவனும், நெடு - அபரிச்சிந்நமான, மால் - பெருமையையுடையனுமாய், கடல் - ஸமுத்ரத்தை, கடைந்த - மதனம்பண்ணின, (அபீஷ்டப்ரதனுமாய்), கார் - கறுத்த, ஓதம் - ஸமுத்ரம்போன்ற, வண்ணன் - வடிவையுடையனுமான (ஸ்ரியஃபதி), படைத்த - உண்டாக்கின, மயக்கு - அறிவுகெடப்பண்ணும் வஸ்துக்கள்.

---

வ்யா—மறந்திலேன் ; நினைக்கைக்கு ஹேதுவுள்ள விடத்திலே இன்று மறப்பனே. திருவரங்கமேயா னிடையாட்டம் பரதசையிலேயோ; எல்லைநிலத்திலே.

அன்று கருவாங்கத் துட்கிடந்து, திருவரங்கமேயான் திசை, கைதொழுதேன் கண்டேன் ; ஒன்றும் மறந்தறியேன் ; ஓதநீர் வண்ணனே, நான் இன்று மறப்பனே எழைகாள் - என்றந்வயம். (சு)

அவ.—ஏழாம்பாட்டு.—அல்லாததேவதைகள் சரீரதயா சேஷபூதர்; நிர்வாஹ்யர் ; அவனே சேஷி ; நிர்வாஹகனென்று சொல்லும்படி யெங்ஙனே! அவர்களும் ஓரோதேசங்களுக்கு ஈச்வரருமாய் அவர்களுக்குப் ப்ரதானமான செயல்களு முண்டாய்ச்செல்லாநிற்க வென்ன; அதுக்கும் அடி அவனே; அது அவன் ஸ்வாதந்த்ர்யத்துக்கு வர்த்தகமென்கிருர்.

(திசையும்) திக்கோடே கூடின பூமியும். (திசையுறு தெய்வமும்) அத்திக்கிலே வ்யாப்தரான தேவர்களும். (தெய்வத்திசையும் கருமங்களெல்லாம்) அவ்வவ தேவதைகளுக்குப் பொருந்தின கர்மங்க ளெல்லாம். த்ரிபுரதஹநாதி. (அசைவில் சீர்) அல்லாதாருடைய சீருக்கு அசைவுண்டு போலேகாணும். (கண்ணன்) தன்னை

---

ஏழாம்பாட்டு.—இப்படிப்பட்டவர்களுக்கும் அவனே காரணமென்கையாலே அவன் ஸ்வாதந்த்ர்யத்தை வர்த்திப்பிக்கிறது - அவன் பெருமையைக் காட்டுகிறதென்றபடி.

மயங்க வலம்புரி வாய்வைத்து வானத்
தியங்கு மெறிகதிரோன் றன்னை-முயங்கமருள்
தேராழி யால்மறைத்த தென்னீ திருமாலே
போராழிக் கையால் பொருது. (அ)

ப-உ.—திரு-லக்ஷ்மியினிடத்தில், மாலே-வ்யாமோஹமுடையவனே! நீ-நீ, முயங்கு-நிறைந்திருக்கிற, அமருள்-யுத்தபூமியில், போர்-யுத்தத்துக்கு ஸாதநமான, ஆழி - சக்ரத்தையுடைய, கையால் - கையினாலே, பொருது - போர்செய்து, மயங்க - சலங்கும்படி, வலம்புரி-ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, வாய்வைத்து - திருப்பவளத்திலே வைத்து, வானத்து - ஆகாயத்தில், இயங்கும் - உலாவுகிற, எறி - விடப்படும், கதிரோன்தன்னை - கிரணங்களையுடைய ஸூர்யனை, தேராழியால் - சக்ரத்தினால், மறைத்தது - தோற்றாமல் செய்தது, என் - எதுக்காக.

---

வ்யா.—இதரஸஜாதீயனுக்குவது தன்னுடைய இச்சையாலே. (நெடுமால்) 'யதோவாசோ நிவர்த்தந்தே-யதோவாசோ நிவர்த்தந்தே' என்று ஓதப்படும் பெரியவன். (கடல்கடைந்த) பெரியவன் என்றிராதே அரியனசெய்து நோக்குமவன். (காரோதவண்ணன்) நோக்காதே யழிக்கிலும் விடவொண்ணாதவடிவு. (படைத்தமயக்கு) பலசக்தியையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியையும் கொடுத்துவைத்தால் தன்வழி வாராதவர்களை அறிவு கெடுக்கும்படி. அல்லாதா ரறியாவிடுவான். "தைவீஹ்யேஷா குணமயீ - தைவீஹ்யேஷா குணமயீ"

---

அரு.—சேதநருக்கு பலசக்தியையும் போக்த்ருத்வ சக்தியையும், தன்நிமித்தமான உபாயத்தை அநுஷ்டிக்கைக்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி சக்தியையும் கொடுத்திருக்கச் செய்தேயும், தன்னை ஆச்ரயியாதே யிருக்குமவர்கள் இதரதேவதைகளைப்பற்றிக் கெட்டுப்போகைக்காக அந்ததேவதைகளைப்படைத்தமாயை. (அறியாவிடுவான்) ஒருத்தரும் அறியாதபடி பண்ணிவைத்தமாயை. அன்றியே, தேவர்களுக்கு பலப்ரதசக்தியையும், அத்தை லபிக்கைக்கு சேதநருக்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியையும் கொடுத்துவைத்தால், அவர்களைவிட்டுத் தன்வழியே வாராதவர்களை, அவர்களைப்பற்றி அறிவுகெடும்படி தேவதைகளை ஸ்ருஷ்டித்தமாயை. இத்தை ஒருத்தருமறியாதபடி பண்ணினனென்றபடியாகவுமாம். (எ)

வ்யா.—(தெய்வத்திசையும்) ஸ்ருஷ்ட்யாதி கர்மங்கள். (அசைவில்சீர்)நித்யமான கல்யாணகுணம். (கண்ணன் நெடுமால்) ஆச்ரிதரைவிடாதபெரும்பித்தன். (கடல்கடைந்த) அபேக்ஷிப்பாரே வேண்டுவது. (காரோதவண்ணன்) குணஹீநனாலும் விடவொண்ணாது.

அவ.—எட்டாம் பாட்டு.—இம்மயக்குப்பொதுவோவென்னில் ஆச்ரிதரைத் தன்னை யழிய மாறியும் நோக்குமென்கிறார்.

(மயங்கவித்யாதி) அர்ஜுநன் நிமித்தமாக நிறுத்தி யுத்தம்பண்ணப்புக்கால், இவன் க்ரமத்தாலே தொடுத்துவிட்ட அம்புக்கு எதிரிகள் போகாதவளவில், தன் திருவாயிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வைக்குமித்தனை; அதுக்கு ஒருத்தராலும் இருப்பக்கப்போகாது; அநுகூலரோடு ப்ரதிகூலரோடு வாசியற எல்லாரும் மயங்குமித்தனை. உகவையாலே மயங்குவாரும் பயத்தாலே மயங்குவாரும். "தேவாநாம்வவ்ரு யேதேஜஃ ப்ரஸாதஶ்சைவயோகிநாம்-தேவாநாம்வவ்ருதேதேஜஃ ப்ரஸாதச் சைவயோகிநாம்" என்கிறபடியே. "ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத் - ஸகோஷோதார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்" "கிமேஷநஷ்டம்கஶ்மலம் வஞ்சிதியார்தராஷ்ட்ரானைரே; தவிஜயாகாங்க்ஷிணே ஸஞ்ஜயோபஶயத், ஶத்ருபீஷணீயாநாம் விஜயஸ்திதிரிதி - அத்யைவநஷ்டம் குருணும் பலமிதிதார்த்தராஷ்ட்ராமேநிரே; தத்விஜயாகாங்க்ஷிணே ஸஞ்ஜயோகதயத்,ஈத்ருசிபவதீயாநாம் விஜயஸ்திதிரிதி".(வானத்து) மறைக்கவொண்ணாத நிலத்திலே. (இயங்கும்.) ஒருக்ஷணம் ஓரிடத்தில் நில்லாதவனை. (எறிகதிரோன்றன்னை) குறித்துப்பார்க்கப் போகாதபடி கிரணங்களை விடாநின்றுள்ளவனை. (முபங்கித்யாதி) "ஸத்யஸங்கல்பஃ-ஸத்யஸங்கல்பஃ" என்கிறச்ருதிக்குச் சேருமோ; "நமேமோகம்வசோபவேத் - நமேமோகம்வசோபவேத்" என்றருளிச்செய்த வார்த்தைக்குச் சேருமோ; ஈச்வரத்வத்துக்குச் சேருமோ. (திருமாலே) ஸத்யஸங்கல்பத்தையழிக்குமவனைச் சொல்லுகிறது. (போராழியித்யாதி) ஆயுதமெடுக்கவொண்ணாதென்று சொன்ன பீஷ்மாதிகள்முன்னே ஆயுதத்தையெடுத்துப் பொருது.

---

அரு.—எட்டாம்பாட்டு.—ஆயுதமெடேனென்ற நீ ஆயுதமெடுத்தது, ஸத்யஸங்கல்பத்துக்குச் சேருமோ; ஸாதாரணமான ஈச்வரத்வத்துக்குப்பொய்சொல்லி யழிகை சேருமோ.

பொருகோட்டோ ரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு, அன்
றொருகோட்டின் மேற்கிடந்த தன்றே-விரிதோட்ட[முன்
சேவடியை நீட்டித் திசைநடுங்க விண்துளங்க
மாவடிவின் நீயளந்த மண். (கூ)

ப-உ.—விரி - மலர்ந்த, தோட்ட - இதழ்களையுடைய தாமரைப் பூப்போலே, சே - சிவந்த, அடியை - திருப்பாதத்தை, நீட்டி - நீளச்செய்து, திசை - திக்கு, (திகுபலக்ஷித பூமி) நடுங்க - அச்சப்படும்படியும், விண் - ஆகாயம் (மேல் லோகத்திலுள்ளார்), துளங்க - நடுங்கும்படியும், மா - பெரிய, வடிவின் - ரூபத்தையுடைய னுய்க்கொண்டு, நீ - நீ, அளந்த - ப்ரமாணித்த, மண் - பூமியானது, பொரு- போர்செய்கிற, கோட்டு-கொம்புகளையுடைய, ஓர் - அத்விதீயமான, ஏனமாய் - வராஹரூபியாய்க்கொண்டு, புக்கு-முழுகி, இடந்தாய்க்கு - பிரித்த உனக்கு, அன்று - அக்காலத்தில், உன் - உன்னுடைய, ஒருகோட்டின்மேல் - ஒருகொம்பின்மேலே, கிடந்ததன்றே - இருந்ததன்றோ?

---

வ்யா.—(மயங்க) எல்லார்க்கும் ஆச்ரிதவிஷயத்தில் அவர்கள் ஸங்கல்பித்தபடியே நடத்தும்பக்ஷபாதி. (மயங்க) "ஆயுதமெடேன்" என்றுவைத்து அர்ஜுநனம்பாலே தனித்தனியே கொல்லப்பற்றுமே ஒருகாலே முழுக்காயாக அவிய. (வானத்து) தூரத்தே நிற்கிறவனை. (இயங்கும்) ஸஞ்சரிக்கிறவனை. (முயங்கமருள்) தனியிடத்திலல்ல; எல்லாரும் காண, எத்திறம் அறிந்தேன். (திருமால்) நாட்டார் பரிமாற்றமல்ல; அவை அந்தःபுரத்தில் பரிமாற்றம். போரிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே கொன்றான்; ஆதித்யனை மறைத்தான், ஸ்ரீ பீஷ்மரைத்தொடர்ந்தான். (முயங்கமருள்) நெருங்கின யுத்தம். (தேராழி) ரதாங்கம்; திருவாழி (அ)

அவ.—ஒன்பதாம்பாட்டு.—ஆச்ரிதரை யொழியவும் ஜகத்துக்கு ஸத்தாநாசம்வரில் பரிஹரிக்குமென்கிறார்.

---

அரு.—"மயங்கவலம்புரி வாய்வைத்து-முயங்கமருள் - வானத்தியங்கு மெறிகதிரோன்றன்னை-தேராழியால் மறைத்து நீ-ஆழிக்கையால் பொருதது-திருமாலே-என்தான்." என்றந்வயமாக்கி அருளிச்செய்கிறார். (போரிலேயித்யாதி) (அ)

ஒன்பதாம்பாட்டு.—தோடு-இதழ். பாட்டுக்கெல்லாம் பலிதமருளிச்செய்கிறார். (ஆச்ரிதரித்யாதி)

மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும்
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர் - எண்ணில்
அலகளவு கண்டசீ ராழியாய்க்கு அன்றிவ்
வுலகளவு முண்டோவுன் வாய். (௯௦)

ப-உ.—மண்ணும்-பூமியும், மலையும்- பர்வதங்களும், மறி-அலை மடங்கும், கடலும்-ஸமுத்ரமும், மாருதமும்- காற்றும், விண்ணும்-ஆகாசமும், விழுங்கியது - அமுது செய்தது, மெய்யென்பர் - யதார்த்தமென்று (வேதவைதிகபுருஷர்கள்) சொல்லுகிறார்கள், எண்ணில்-அநுஸந்தித்தால், அலகு - ஸங்க்யையும், அளவுகண்ட - எல்லைகண்டிருக்கிற, (எண்ணிறந்த) சீர் - கல்யாணகுணங்களையும், ஆழியாய்க்கு - சக்ரத்தையுமுடைய உனக்கு, அன்று - அக்காலத்தில், இவ்வுலகளவும் - இந்த ஜகத்துக்குச் சரியாய், உன்வாய் - உன்னுடைய திருப்பவளம், உண்டோ - இருந்ததோ?

வ்யா—(பொருகோட்டோரேனமாய்)பொராநின்ற கோட்டையுடைத்தான ஏனமாய். அத்விதீயமானஏனமாய். ஜாதிச்செருக்காலே பூமியை யுழுதுகொடு திரியாநிற்கும். (புக்கித்யாதி) ப்ரளயங்கொண்டு, உழுகைக்கு பூமியில்லாதவன்று தன்திருவயிற்றிலே வைத்துநோக்கும். இத்தால் சொல்லிற்றாயிற்று - உதாரனாயிருப்பானொருவன் நாலுபேருக்குச் சோறிடநினைத்தால் நாற்பதுபேருக்கு இட்டுமிகும்படி சோறுண்டாக்குமாப்போலே, ரக்ஷ்யத்தினளவன்றிறே ரக்ஷகன் பாரிப்பு.(விரிதோட்டசேவடியைநீட்டி)விரியாநின்ற தோடுசேர்யுடைத்தான தாமரைபோலேயிருந்துள்ள சேவடியைநீட்டி. "விரிதோட்ட"என்று-ஸம்ருத்தியாகவுமாம். திருமேனியிலே ஒளிவிரியும் தோட்டையுடையவனே. (திசைநடுங்க) திக்குக்களெல்லாம்நடுங்க. (விண்துளங்க) விண்ணிலுள்ளதேவஜாதியெல்லாம் நடுங்கும்படியாக. (மாவடிவின் நீயளந்தமண்) பெரியவடிவைக்கொண்டு நீயளந்தமண். ஆச்ரிதர்கார்யம் பெரியவடிவைக்கொண்டு புக்குச்செய்யிலும் செய்யும்; சிறிய வடிவைக்கொண்டு பெரியனாய்ச்செய்யிலும் செய்யும்.

(பொரு)ஆபந்நராய் விலக்காதார்க்கும், தன்னைக்கொண்டு கார்யங்கொள்ளுவார்க்கும் செய்யும்படி. (விரிதோட்ட) விரிகிறதோட்டை யுடையவைபோலே இருந்துள்ள. (விண்துளங்க) அபிமாநிக

அரு.—"நீ யளந்தமண், அன்று, ஒரு கோட்டின்மேல் கிடந்ததன்றே" என்றந்வயமாக்கி யருளிச்செய்கிறார் (திருவெயிற்றிலேயித்யாதி.)

வ்யா—ளான தேவர்கள் நடுங்க. பெரியவடிவாலே யளந்தமண் திருவெயிற்றுக்கு ஒரு நீலரத்நம்போலேயிருப்பதே ! என்ன ஆச்சர்யம். (கூ)

அவ.—பத்தாம் பாட்டு.—(மண்ணுமித்யாதி) சேராதன செய்தும் ஆச்ரிதரை நோக்குமவனென்கிறார்.

(மண்ணுமித்யாதி) ஆதாரமான மண்ணும், அதற்கு உறுதியான மலையும், வேலியான கடலும், தாரகமான காற்றும், அவகாசப்ரதாநம் பண்ணும் ஆகாசமும். (விழுங்கியது மெய்யென்பர்) ஐந்த்ரஜாலிகர் செயல்போலே பொய்யன்று இது, ஆப்தரான ஆழ்வார்கள் மெய்யென்பர்கள். (எண்ணில்) ஆராயில். (அலகளவுகண்ட சீராழியாய்க்கு) எண்ணிறந்த குணங்களையும் திருவாழியையு முடையனான உனக்கு. அலகாவது - பரிச்சேதகமிறே. அத்தை அளவுகண்டசீர் - அபரிச்சேதகமான அலகைப் பரிச்சிந்நமாக்கின சீர். (இவ்வுலகளவுமுண்டோ உன்வாய்) இந்த ரக்ஷணத்தில் த்வரைதான் சிறியவடிவிலே பெரிய ஜகத்தைவைத்தான்.

(மண்ணுமித்யாதி) சேராச்சேர்த்தியானவை யடைய மெய்யென்பர். இந்த்ரஜாலமென்னப்பெற்றதோ; ருஷிகள் கூப்பிடா நிற்பர்கள். (எண்ணிலலகளவுகண்ட) எண்ணை அளவுபடுத்தும் குணங்கள். “ഗുണானாമാകரஃ - குணாநாமாகரஃ” “ബഹവോ നൃപ കல്யாணഗുണாஃ-பஹவோந்ருபகல்யாணகுணாஃ”. (ஆழியாய்க்கு) குணங்களும் அப்படியே, சீரியகை. (உலகளவுமுண்டோ) ரக்ஷகத்வப்பாரிப்புக்கு அடைவில்லாமை. (௰)

அரு.—பத்தாம்பாட்டு.—(அலகளவு) அலகை அளவுகண்ட. பரிச்சேதகம். ‘கலாகாஷ்டாதிரூபமான வத்ஸராதிகளை எண்ணிப் பரிச்சேதிக்கை. “கோடி, சங்கம், மஹாசங்கம், பத்மம்” என்றாற்போலே, காலத்துக்கு அவதியற்றிருக்கையாலே (அபரிச்சேதகமான அலகு) என்கிறது.

பஞ்சபூதங்கள் பரஸ்பரம் பிந்நமாயிருக்கையாலே (சேராச்சேர்த்தி) என்கிறது. (எண்ணிலலகளவு) எண்ணு நிற்கிற அலகை; குணங்களும் அப்படியே. திருவாழியிருக்கையாலே கையும் (சீரியகை) என்றபடி. (அடைவில்லாமை) சிறியவாயிலே பெரிய உலகை வைக்கை. (க0)

**வாயவனை யல்லது வாழ்த்தாது, கையுலகம்
தாயவனை யல்லது தான்தொழா - பேய்முலைநஞ்
சூணாக வுண்டா னுருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி. (கக)**

ப-உ.—வாய் - வாகிந்த்ரியம், அவனையல்லது - அவனையொழிய, வாழ்த்தாது-ஸ்தோத்ரம்செய்யாது. கை-கரமானது, உலகம்-லோகத்தை, தாயவனையல்லது - அளந்துகொண்டவனையொழிய, தாந்தொழா-ஸ்வயம்நமஸ்கரிக்காது. கண்-நயநேந்த்ரியம், பேய்-பேயானபூதனையினுடைய, முலை - ஸ்தநத்திலிருக்கிற, நஞ்சு-விஷத்தை, ஊணாக-தாரகமாக, உண்டான் - அமுதுசெய்தவனுடைய, உருவல்லால் - வடிவையொழிய, காணா - பார்க்கமாட்டாது. செவி - ச்ரோத்ரேந்த்ரியம், பேரல்லால் - (அவனுடைய) திருநாமமல்லது, கேளா - கேட்கமாட்டாது.

---

வ்யா.—அவ.—பதினோராம்பாட்டு.—(வாய்) இவனுடைய ரக்ஷகத்வத்தில் த்வரையைக்கண்டு தம்முடைய இந்த்ரியங்கள் வ்யாகுலமானபடி சொல்லுகிறது.

(வாயித்யாதி) நீ அளவிதாம்படி அமையுங்காண் என்றாலும் கேளாது. (கையித்யாதி) திருவுலகளந் தருளினவனுடைய நீர்மையைக் கண்டால், நான் வேண்டாவென்னிலும் தொழுதல்லது நில்லாது. (பேயித்யாதி) பேய் நஞ்சாகக் கொடுத்தால், இவன் தாரகமாகவுண்டான். அவள் தன்னெஞ்சில் தண்மையாலே முடிந்தாளத்தனை. (உருவித்யாதி) அவனுருவல்லது கண்கள் காணா; அவன் பேரல்லது செவிகள்கேளா. ஆச்ரிதவிஷயத்திலும் ஸாமாந்யவிஷயத்திலு மிருக்குமிருப்பிலே ஸர்வேந்த்ரியங்களும் அபஹ்ருதமானபடி.

(வாயித்யாதி) தான் புறம்பே வாழ்த்தப் பார்க்கிலும் தாம் செய்யா. (உலகம் தாயவனை) தொழாதார் தலையிலு மிருந்து

---

அரு.—பதினோராம்பாட்டு.—நீயளவிதாம்படி-உன் ப்ரேமமிருந்தபடிபோருமென்றபடி. பேய்ச்சியை முடித்துத் தன்னைக் கொடுக்கையாலே (ஆச்ரிதவிஷயம்). உலகமளக்கை (ஸாமாந்ய விஷயம்.) ஏறவாங்கிலும் - அவன் வேண்டாவென்று ஏறவாங்கிலும், நான்றான் தொழவேண்டாவென்று ஏறவாங்கிலும், அவனையொழிய வேறொன்றையும் தொழாதென்றபடி. இத்தால், இந்த்ரியங்களெல்லாம் அநந்யார்ஹமாயிற்றென்றபடி.

செவிவாய்கண் மூக்குடலென் றைம்புலனும், செந்தீ
புவிகால்நீர் விண்பூத மைந்தும் - அவியாத
ஞானமும் வேள்வியும் நல்லறமு மென்பரே
ஏனமாய் நின்றார்க் கியல்வு. (கஉ)

ப-உ.—செவி - ச்ரோத்ரேந்த்ரியம், வாக் - வாகிந்த்ரியம், கண் - சக்ஷுரிந்த்ரியம், மூக்கு - க்ராணேந்த்ரியம், உடல் - த்வகிந்த்ரியம், என்று - என்கிற, ஐம்புலனும் - ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களும், செம்- சிவந்த, தீ - நெருப்பு, புவி-பூமி, கால் - காற்று, நீர் - ஜலம், விண்- ஆகாசம், (என்கிற, பூதமைந்தும்- ஐந்துபூதங்களும், (இவற்றின் சார் யமான சரீரமும்), அவியாத - விச்சேதமில்லாத, ஞானமும் - (பக்தி ரூப) ஜ்ஞானமும், வேள்வியும் - யாகமும், நல் - ச்ரேஷ்டமான, அற மும் - தர்மமும், ஏனமாய் - வராஹமாய், நின்றார்க்கு - இருக்கிற (ஸர்வேச்வரனுக்கு), இயல்வு - தகுந்த உபாயம், என்பர் என்று - சொல்லுவர்கள்.

---

வ்யா.—தொழுவித்துக்கொள்ளும்திருவடிகளையுடையவனை யல் லது. (தாம்தொழா) அவனும் ஏறவாங்கிலும் நானும் ஏறவாங்கிலு ம். (ஊணுகவித்யாதி) கொடாவிடில் பிழையேனென்று கொடுக்க, உண்ணாவிடில் பிழையேனென்று உண்டான். அநர்ஹமாயிற்று. ஹ்ருஷீகேசனன்றோ. (கக)

அ.—பன்னிரண்டாம் பாட்டு.—(செவி) தம்முடைய அனுபவ மான பக்தியைச் சொல்லுகிற தென்னவுமாம்; பக்தியைவிதிக்கிற தென்னவுமாம்.

---

அரு—(செவி யித்யாதி) ஸ்ரோத்ராதி ஜ்ஞானேந்த்ரியங்களைத்தும். (செந்தீயித்யாதி) இத்தால்-பஞ்சபூதாத்மகமான சரீரத்தைச் சொல் லுகிறது. இந்த்ரியங்களும் சரீரமும் ஹேபதயா அநுஸந்தேயம். (அவியாத ஞானமும்) கீழிலவற்றைப்பற்றி விடாதஜ்ஞானமும். அவி யாத ஞானம் - அந்தர்க்ருஹீதமான ஆத்ம ஜ்ஞானம். அன்றியே, தைலதாராவ தவிச்சின்ன ஸ்ம்ருதிஸந்தானரூபஜ்ஞான மென்றுமாம்.

பன்னிரண்டாம்பாட்டு.—“அவியாதஞானமும்” என்கையாலே பக்திக்கு ஜ்ஞாபகம். இது ஸாத்யபக்தியாதல்; ஸாதநபக்தியாதல். (பற்றிவிடாத) த்யாஜ்யம் என்கிறநிலையை விச்சேதமின்றிக்கே பற்றி யிருக்கிற ஜ்ஞானம். உபாஸகனுக்கு அநுஷ்டிக்கவேணு மென்னு

வ்யா—(வேள்வியும்) பக்தி விவ்ருத்யர்த்தமாகவும் பாபக்ஷயத்துக்கா கவும்அநுஷ்டிக்கிறகர்மங்கள். "𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 𑌤𑍁 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌯𑍈𑌵 𑌤𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 - அக்னிஹோத்ராதிதுதத்கார்யாயைவதத்தர்சநாத்" "𑌆𑌶𑍍𑌰𑌯𑌾𑌣𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌹𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 - ஆச்ரயாணத் தத்ராபிஹித்ருஷ்டம்" என்றும், "𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌤𑌪𑌸𑌾𑌨𑌾𑌶𑌕𑍇𑌨, 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌨𑍍𑌤𑌿 - யஜ்ஞேநதாநேநதபஸாநாஶகேந, ப்ராஹ்மணாவிவிதிஷந்தி" என்றும் சொல்லுகிறபடியே. (நல்லறம்) விவேகாதிகள், (என்பரே ஏனமாய் நின்றூர்க்கியல்வு) ஏனமாய் நின்றுரைப் பெறுகைக்குப்பண்ணும் ப்ரவ்ருத்தி யிவையென்பர். ஆபத்தே அடையாளமாகத்தானே ரக்ஷிக்குமென்கையாலே - அவன் உபாயமாகத் தம்முடைய அநுபவமான பக்தியைச் சொல்லுகிறதென்றுமாம்.

அவ.—(செவி) கீழ்-ப்ராப்யசிக்ஷை பண்ணினூர்; இனி ப்ராபகஞ்சொல்லுகிறூர்.

(செவியித்யாதி) ஸர்வேந்த்ரியங்களுக்கு முபலக்ஷணம். (செந்தீயித்யாதி) ஆக இருபத்துநாலுக்கு முபலக்ஷணம். (அவியாதவித்யாதி) கர்மயோகாந்தர்க்கதமான ஜ்ஞாநம். ப்ரக்ருதிஹேயதயாஜ்ஞேயை; ஆத்மா உபாதேயதயாஜ்ஞேயன்; ஈச்வரன் உபாதேயதமனுய்க்கொண்டு ஜ்ஞேயன். "𑌚𑌞𑍍𑌚𑌲𑌂 𑌹𑌿 - சஞ்சலம்ஹி." (வேள்வி) கர்மயோகம். (நல்லறம்) ஆந்ருசம்ஸ்யாதி தர்மங்கள். (என்பர்) வேதசாஸ்த்ரங்களிலே ப்ரஸித்தி. (ஏனமாய்நின்றூர்) தளர்ந்தபோது எடுக்குமவன். "என்பரே!" என்று க்ஷேபமானபோது, ப்ரவ்ருத்திகொண்டு புகுவதைக் கைவாங்கினவன்று எடுக்கவிருக்க. "ஞானப்பிரானையல்லாலில்லை" "அறிவானும்" என்றூற்போலே. (இயல்வு) உபாயம். (௧௨)

வ்யா.—அவ.—பதின்மூன்றும்பாட்டு.—(இயல்வாக) "வாயவனையல்லது வாழ்த்தாது" என்னும்படியா யிருந்தது உம்மது, அல்லாதார்க்கு அவனை ஆச்ரயிக்கும்போது அவதாநம் வேணும், எங்ஙனே

---

அரு.—மதுக்கு ஸூத்ரமும், விஷயவாக்யமும் அருளிச்செய்கிறூர் (𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 - அக்நி ஹோத்ராதி இத்யாதி.)

கீழ்-கீழிற்பாட்டில். "அவியாதஞாநம்" என்கைக்கு, இப்படிப்பட்ட ஜ்ஞாநம்பிறக்கை அருமையோவென்ன; அருளிச்செய்கிறூர் (𑌚𑌞𑍍𑌚𑌲𑌂 𑌹𑌿-சஞ்சலம்ஹி என்று.) இயல்வு - ஏனமாய் நின்றூர்க்கு. இவற்றை உபாயமென்பரே! என்று க்ஷேபம். (௧௨)

இயல்வாக வீன்துழாயா னடிக்கே செல்ல
முயல்வா ரியலமரர் முன்னம் - இயல்வாக
நீதியா லோதி நியமங்களால் பரவ
ஆதியாய் நின்றா ரவர். (௧௩)

ப-உ.—முன்னம் - முதலில், இயல்-தகுந்தயோக்யதையையுடைய, அமரர் - தேவர்கள் (நித்யஸூரிகள்), ஈன் - அழகிய, துழாயான்-திருத்துழாயையுடைய ஸர்வேச்வரனுடைய, அடிக்கே - திருவடிகளிலே, செல்ல - கிட்ட, இயல்வாக - தகுதியாக, முயல்வார் - யத்நம் செய்வார்கள். (அல்லாதவர்களுக்கு) இயல்வாக - ஸத்ருசமாக, நீதியால் - ந்யாயமாக, ஓதி - அத்யயநம்பண்ணி, நியமங்களால் - மநநம் முதலான நியமங்களாலே, பரவ - புகழும்படி, அவர் - அப்பெருமையுடையவர், ஆதியாய் நின்றார் - முதல்வராயிருந்தார்.

வ்யா.—கூடும்படியென்னில்; ப்ரக்ருத்யா ஆச்ரயித்திருப்பர்கள் நித்யஸூரிகள் ; அல்லாதாரும் ஆச்ரயிக்கும்படி தானே ப்ரதமபாவியாமென்கிறார்.

(இயல்வாக) ஸத்ருசமாக. (ஈன்றுழாயா னடிக்கே செல்ல) ஆக, முதலியாகத் தோள்மாலை யிட்டிருக்கிற வதுக்குப் போரும்படியாக. (முயல்வாரியலமரர்முன்னம்) இயற்றியையுடையரான நித்யஸூரிகள் முன்னே மஹாயத்நம் பண்ணுவர்கள். விஷயப்ரவணராய் அவனையறியாதவர்களும், (இயல்வாக) ஸத்ருசமாக. (நீதியாலோதி) முறையாலே திருநாமங்களைச்சொல்லி. (நியமங்களால், பரவ) பரவும்படிக்கிடாக. சாஸ்த்ரங்களில் சொல்லுகிற நியமங்களாலே பரவசராய்ப் பரவும்படிக்கிடாக. (அவர் ஆதியாய்நின்றார் அவர் தாமே ப்ரதமஸுக்ருதமானார்.

அ௬.—பதின்மூன்றாம் பாட்டு.—உமக்கு அவதாநம் வேண்டாதபடி இந்த்ரியங்கள் தானே பற்றிற்று, அல்லாதார்க்கு அவதாநங் கூடும் படியென்னென்று சங்காபிப்ராயம். ப்ரதமபாவி-ப்ரதமஸுஹ்ருத்து.

ஆக - ஸத்ருசமாக என்றவித்தால் என்று பலிதம். இத்தையருளிச்செய்கிறார். (முதலியாகத் தோள்மாலை யித்யாதி) (அடிக்கேசெல்ல) திருவடிக்கு, சேரவென்றது-தகுதியாக. திருமேனிக்குப் பாங்கான அடிமைகளைப்பண்ணி யென்றபடி. அப்போது, ஸத்ருசமாக என்றது-தங்கள்ஸ்வரூபத்துக்கு ஸத்ருசமாக. "நீதியாலோதி" என்கையாலே - ஓதுகிற ஸம்ஸாரிகள் அத்யாஹார்யம்.

அவரவர் தாந்தா மறிந்தவா றேத்தி
இவரிவ ரெம்பெருமா னென்று - சுவர்மிசைச்
சாத்தியும் வைத்தும் தொழுவர், உலகளந்த
மூர்த்தி யுருவே முதல். (கச)

ப-உ.—அவரவர்-ரஜஸ்தமঃ ப்ரசுரரான அதிகாரிகள், தாந்தாம றிந்தவாறு - தங்கள்குணாநுரூபமாகத் தாங்களறிந்தபடியே, ஏத்தி - துதித்து, இவரிவர் - இந்தஇந்தவ்யக்திகள், எம்-நமக்கு, பெருமான்- ஸ்வாமி, என்று - இப்படி ஆதரித்து, சுவர்மிசை - பித்திமேல், சாத் தியும் - எழுதியும், வைத்தும் - (விக்ரஹரூபமாய்) ப்ரதிஷ்டைசெய் தும், தொழுவர் - ஆச்ரயிப்பார்கள். உலகு - ஜகத்தை, அளந்த - அளந்துகொண்ட, மூர்த்தி - ஸர்வேச்வரனுடைய, உருவே - திரு மேனியே, முதல் - ப்ரதாநம்.

வ்யா—அவ.—உபகரணங்களையுங் கொடுத்து, ருசியையும் ஜநி ப்பித்து உபாயமுமாய், தானே பலப்ரதாநம்பண்ணு மென்கிறார்.

(இயலமரர்) இயற்றியையுடைய அமரர்: (முன்னம்) முந்துற முன்னம். (இயல்வாக) இதுவே யாத்ரையாக. (ஈன்றுழாயான்) பரி பூர்ணன். (அடிக்கேசெல்ல) திருவடிகளுக்கே சேர. (முயல்வார்) யத் நம்பண்ணுவார். (இயல்வாக) ஸத்ருசமாக. (நீதியாலோதி) சாஸ்த் ரோக்தமானபடியே. (நியமங்கள்) ச்ரவணாதிகள். (பரவ) ஆச்ரயித்து. (ஆதியாய்நின்றார்) அவர்களுக்கு உபேயத்துக்கு அடியானாற்போலே வேண்டினவிடத்துக்கு இவர்களுக்கு உபாயத்துக்கு அடியாய் நின் றால் ஆச்ரயிக்கவொண்ணாதோ. அவனே இதுக்கும் வேண்டின பின்பு அவனையே பற்றவமையாதோ வென்றுமாம். (கரு)

அவ.—பதினாலாம்பாட்டு.—ப்ரக்ருத்யா ஆச்ரயிக்குமவர்களையும் சொல்லி, ஆச்ரயிப்பித்துக்கொள்ளுமவனையும் சொல்லிற்று; இது ஒன்றும் பெறாதாரைச் சொல்லுகிறது.

(அவரவர்) ரஜঃப்ரசுரரும், தமঃ ப்ரசுரரும். (தாந்தாமறிந்தவா றேத்தி) குணாநுகுணமாக வெளிச்செறிந்தபடி ஏத்தி. (இவரிவரெம்

அ ந.—மேல்யோஜனைக்கு அவதாரிகை யருளிச்செய்கிறார் (உபகர ணங்களையு மித்யாதி) அவர்களுக்கு-நித்யஸூரிகளுக்கு. "நீதியா லோதி" என்கிற உபாஸநத்துக்கு அவனைக்கொண்டு ஸாதிக்கவே ண்டினால் அத்தைவிட்டு அவன் றன்னையே பற்றவமையாதோ வென் கிறார். (அவனேயிதுக்கு மித்யாதி.) (கச)

முதலாவார் மூவரே, அம்மூவ ருள்ளும்
முதலாவான் மூரிநீர் வண்ணன் - முதலாய
நல்லா னருளல்லால் நாமநீர் வையகத்துப்
பல்லா ரருளும் பழுது. (கரு)

ப-உ.—மூவரே-(ப்ரஹ்மவிஷ்ணுருத்ரர்களாகிற) மூன்றுபேரே, முதலாவார் - ப்ரதாநராவார்கள். அம்மூவருள்ளும் - அந்த மூவரிலும், மூரி - பரவாநின்றுள்ள, நீர் - ஜலத்தையுடைய ஸமுத்ரம்போலிருக்கிற, வண்ணன் - வடிவையுடைத்தானவன், முதலாவான் - ப்ரதாநனுவான். முதலாய - காரணபூதனுன, நல்லான்-உபகாரம்செய்கிறவனுடைய, அருளல்லால் - க்ருபையொழிய, நாமம் - ப்ரஸித்தமான, நீர் - ஜலம் சூழ்ந்த, வையகத்து - ஜகத்தில், பல்லார் - பலருடைய, அருளும் - தயையும், பழுது - வ்யர்த்தம்.

---

வ்யா.—பெருமானென்று) ரஜஸ்தமஸ்ஸுக்கு விஷயமானுனை என்னுடையஸ்வாமியென்று. (சுவரித்யாதி) ஸர்வேச்வரன்பக்கல் "எவ்வண்ணம் சிந்தித்திமையாதிருப்பர்" என்கிற செயலில் பித்தியிலேயெழுதியும் வைத்தும் தொழுவர்.

(உலகித்யாதி) இவர்களுடையவும் ஆச்ரயணீயங்களுடையவும் தலையிலே அடியைவைத்தவனே ப்ரதாநம். (மூர்த்தியுருவேமுதல்) ஸர்வேச்வரனுடைய திருமேனியே ப்ரதாநம்.

அவ.—அவனைவேண்டாதார் படுகிறபாடுபாரீர்.

(அவரவர்) பிந்நருசிகள். தாந்தாமறிந்தவாறு சாஸ்த்ரத்தின் பின்செல்லார். (இவரிவர்) ஸகரபுத்ரர்கள், கண்டானை, 'என் குதிரைபிடித்தாய்" என்று பிடிக்குமாப்போலே தோற்றினுனை. (உலகளந்த) ஸமாச்ரயிப்பார் தலையிலும் ஸமாச்ரயணீயர் தலையிலும் ஒக்கத்துகைத்த ஸர்வேச்வரன். (உருவேமுதல்) - வடிவேமுதல். (கச)

அ—பதினைந்தாம்பாட்டு.—(முதலாவார்) அவ்வோ தேவதைகளும் ஆச்ரயணீயராய்ச் செல்லா நிற்கச்செய்தே அவர்கள் அப்ரதாநர், இவன் ப்ரதாநனென்று சொல்லுகிறது உம்முடைய

---

அரு—பதினாலாம்பாட்டு.—செயலில் - அநுகூலர் செய்கிற ந்யாயத்திலே, தாங்களும் ருச்யநுகுணமான பிம்பங்களைப்பண்ணித் தொழுவர்க ளென்றபடி.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறுர் (அவனை வேண்டாதாரித்யாதி.) (கச)

பழுதே பலபகலும் போயினவென்று, அஞ்சி
அழுதே னரவணைமேற் கண்டு - தொழுதேன்
கடலோதம் காலலைப்பக் கண்வளரும், செங்கண்
அடலோத வண்ண ரடி. (௧௯)

ப-உ.—கடல் - ஸமுத்ரத்தினுடைய, ஓதம் - திவலைகள், கால்-திருவடிகளை, அலைப்ப-ஸ்பர்சிக்க, (அத்தாலே) கண்வளரும்-பள்ளி கொண்டருளுமவனுமாய், செம் - சிவந்த, கண் - நேத்ரங்களையுடையனுமாய், அடல்-மேல்விழுகிற, ஓதம்-(ஸௌந்தர்ய) தரங்கங்களோடுகூடின, வண்ணர் - வடிவையுடையனுமானவனுடைய, அடி - திருப்பாதங்களை, அரவு - திருவநந்தாழ்வானாகிற, அணைமேல் - படுக்கையின்மேலே, கண்டு-ஸாக்ஷாத்கரித்து, தொழுதேன்-நமஸ்கரித்தேன். பலபகலும் - காலமெல்லாம், பழுதே-வ்யர்த்தமாய், போயினவென்று-போய்விட்டதே என்று, அஞ்சி-பயப்பட்டு, அழுதேன்-சோகித்தேன்.

வ்யா.—பக்ஷத்தாலே யிழ்றயென்ன; அர்த்ததத்வமிருந்த படியைப் பார்க்கலாகாதோ வென்கிறார்.

(முதலாவார் மூவரே; இருந்ததே குடியாக ஆச்ரயணீயரன்றிறே, மூவரிறே ப்ரதாநர். (அம்மூவரித்யாதி) ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு ஜீவவ்யவதாநத்தாலே அந்தர்யாமியாயும் தன் பக்கலிலே ஸ்வேநரூபேண நின்றும் காரணமாவான். (மூரிநீர் வண்ணன்) * பொன்னுருவும் தீயுருவுமானவர்களன்று, பரப்பை யுடைத்தான கடல்வண்ணன். (முதலாய) காரணமான. (நல்லானருளல்லால்.) அறவனானவனருளல்லால். (நாமமித்யாதி) அவனுடைய அருளொழிய அல்லாதாரெல்லாருடைய வருளும் பழுது. அதிகாரிகளாகையாலே அவர்களை புறப்படச்சொன்ன வித்தனை; பழுதாமிடத்தில் அவர்களோடு அல்லாதாரோடு வாசியில்லை. அவனுக்கு வசராய்க் கொண்டு பலர்தரிலாவென்னில்; இரண்டும் வ்யர்த்தம்.

(முதலாய நல்லான்) பெற்ற தாயாகையாலே பரிவன். "யஉ-ஜுஹூரணாமதவதுஃ - தர்மஜ்ஞச்சரணாகதவத்ஸல:" முலைப்பாலிருக்க விஷபாநம் பண்ணுவரோ. (நாமம்) நாமமாத்ரனான பல்லா

அரு.—பதினைந்தாமபாட்டு.—(வசராய்) சரீரபூதராய். இரண்டும்-கேவல ஸ்வதந்த்ரராயும், அந்தர்யாமியாகையாலே சரீரவத் பரதந்த்ரராயும் இரண்டு மென்றபடி. (௧௫)

ரென்னுதல்; ப்ரஸித்தமான நீர் வையகமென்னுதல். (பல்லார்) கீழ்ச் சொன்ன ப்ரஹ்ம ருத்ராதிகளகப்பட. தனித் தனியும், திரளவும். (பழுது) வ்யர்த்தம். (கரு)

வ்யா:—அவ.—பதினாறாம் பாட்டு:—(பழுதே) * நல்லானருள் பெற்றவெனக்குச் சோகமுண்டாயிற் றென்கிறார்.

(பழுதே பலபகலும் போயினவென்றஞ்சியழுதேன்) போன காலம அநாதி; வருங்காலம் அநந்தம்; இத்தோடொத்தகாலமிறே போயிற்றென்றழுதேன். இழவுக்கு அழுதாராகில் அச்சமாவதென்! வருமத்தைக்குறித்தன்றோ அஞ்சிற்றென்னில்; அதிகாரி நாலு கில் போனகாலம்போலே யாகிறதோ வருகிற காலமுமென்கிறார். "யஸ்யராமம் நபஶ்யேத்து யம்ராமோ நபஶ்யதி। நிந்திதஸ்ஸவஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே - யச்சராமம்நபச்யேத்து யஞ்ச ராமோநபச்யதி। நிந்திதஸ்ஸவஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம்வி கர்ஹதே" என்று சொல்லுகிறது பெருமாளுடைய * ஒருநாளை யிழவுக்கிறே. (கடலோதம் காலலைப்ப) திருவடிகளை, கடலோதமா னது துடைகுத்துமாப்போலே அலைப்ப. (கண்வளருமித்யாதி) (அரவணை மேல்கண்டு தொழுதேன்) தகட்டிலழுத்தின மாணிக்கம் போலே.

அவ.—பண்டு உபாயாந்தரங்களிலும் தேவதாந்தரங்க ளிலும் ப்ரவணனாயிழந்தேனென்று சொல்லுகிறார்.

(பழுதே) பழுதும் பழுதல்லாததும் கூடப்பெற்றேனோ. (பல பகல்) இழந்த அநாதிகாலம் பலவாய், அதுக்கநந்தரம் அநந்தகால மானபடி. (போயின) போனநீர்களைக் கோலவோ. வரும் காலமும் பழைய காலமும் ஒன்று; பழையனானே இன்னம் அப்படியாகிற் செய்வதென்னென்கிறார். "ஶாஸ்த்ரேஷ்வபி - காலேஷ்வபிச" (அரவணைமேல்கண்டு) பர்யங்கவித்யையிற்படியே பூர்ணமாகக்கண்டேன் (கண்டுதொழுதேன்) கண்டால் செய்யும் தொழில். (காலலைப்ப) சிறு திவலை துடைகுத்த. (செங்கண்) வாத்ஸல்யம் தோற்றுகை. (அடலோதம்) நெருங்கின ஓதம். (கசு)

---

அரு.—பதினாறாம்பாட்டு.—இழந்த நாளைக்கு துःகப்பட்ட பேருண் டோவென்ன; அருளிச்செய்கிறார் (யஸ்யராமம்-யச்சராமம்இத்யாதி.)

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார். (பண்டித்யாதி.) கீழிற் பாட்டின் தாத்பர்யத்தை யுட்கொண்டு (உபாயாந்தரம் தேவதாந்த

---

* ஒருநாளையிழவு - ஒருநாள்சேவையிழக்கை

ரம்) என்கிறது. அஞ்சுகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார். (வருங்காலமித்யாதி.) காலத்தையுந் தன்னையும் பார்த்தால் பயமநுவர்த்திக்கு மென்கிறார்.) (காலேஷுவிவ - காலேஷ்வபிச) என்று. (கசு)

அடியும் படி கடப்பத்தோள் திசைமேற் செல்ல
முடியும் விசும்பளந்த தென்பர் - வடியுகிரா
லீர்ந்தான் இரணியனதாகம், இருஞ்சிறைப்புள்
ஊர்ந்தான் உலகளந்தநான்று. (கஎ)

ப-உ. வடி - கூர்மையான, உகிரால்-நகத்தினால், இரணியனது-ஹிரண்யகசிபுவின், ஆகம் - உடலை, ஈர்ந்தான் - பிளந்தவனாய், இரு-பெரிய, சிறை - பக்ஷத்தையுடைய, புள் - பக்ஷியான பெரியதிருவடியை, ஊர்ந்தான் - நடத்துகிறவன், உலகளந்த நான்று - ஜகத்தை அளந்த காலத்திலே, அடி - திருப்பாதம், படி - பூமியை, கடப்ப - அளக்க, தோள் - புஜம், திசைமேல் - திக்குக்களுக்குமேலே, செல்ல - போக, முடியும் - கிரீடமும், விசும்பு - ஆகாசத்தை, அளந்தது-ஆக்ரமித்தது; என்பர் - என்றுசொல்லுவர்கள்.

---

வ்யா.—அவ.—பதினேழாம்பாட்டு.—ஸம்ஸாரத்தில் நினைத்தபடியெல்லாம் அநுபவிக்கப்போமோ? பரமபதத்திலே போனாலன்றோ அநுபவிக்கலாவதென்ன; இங்கே வெள்ளமிட்டவன்று தான் பெற்றேனோ வென்கிறார்.

(அடியும்படி கடப்ப) "கோலமாமென் சென்னிக்கு" என்றும் திருவடிகளைக்கொண்டு காடுமோடையு மளப்ப. (தோள்திசைமேல் செல்ல) திருத்தோள்கள் திக்குக்களிலே செல்ல. (முடியு மித்யாதி) திருவபிஷேகமும் அண்டபித்தியளவும் நிமிர்ந்தது. (வடியித்யாதி) கூரிய உகிராலே ஹிரண்யனுடைய மார்வைப்பிளந்தான். (இரும் சிறையித்யாதி) பெரியதிருவடி முதுகிலிருக்கப்பெறாத ம்ருதுவான திருவடிகளைக் கொண்டு உலகளந்த வன்று. அடியும்படி கடப்பத் தோள் திசைமேற்செல்ல முடியும் விசும்பளந்த தென்கிறார். நான் கேட்டார் வாய் கேட்டுப்போமத்தனை யென்கிறார்.

அவ.—பழுதென்னென்னில்; இன்று கதைகேட்க விருந்தேனென்பாரிறே.

(அடியும்படி கடப்ப) சென்று காணவேண்டும் திருவடிகள் தானே வந்து பூமியை யகப்படுத்திக்கொண்டது. தோள் திக்குக்

களை யெல்லை கண்டது. முடியும் அபரிச்சேத்யமான ஆகாசத்தை அளவுபடுத்திற்று. நின்றார் நின்றபடியே வெற்றிகொள்ளுமாப்போலே. (வடியித்யாதி) ஓரிடத்திலே விரோதி நிரஸநம்பண்ணி ஓரிடத்திலே சென்று முகம்காட்டு மளவன்றியே ஜகத்துக்கெல்லாம் ஏககாலத்திலே உதவினவிது. (கஎ)

அரு.—பதினேழாம்பாட்டு.—“என்பரே” என்றதைப்பற்ற அருளிச்செய்கிறார் (நான்கேட்டார் வாயித்யாதி.)

மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார் (பழுதென்னென்னிலித்யாதி.) என்பாரிறே - என்கிறாரிறே. இருஞ்சிறைப்புள்ளூருகை-கஜேந்த்ராழ்வானுக்கு. (கஎ)

**நான்ற முலைத்தலை நஞ்சுண்டு, உறி வெண்ணெய்**
**தோன்ற வுண்டான் வென்றி சூழ் களிற்றை-யூன்றிப்,**
**பொருதுடைவு கண்டானும் புள்ளின் வாய் கீண்டானும்**
**மருதிடைபோய் மண்ணளந்தமால். (கஅ)**

ப-உ. நான்ற - தொங்குகிற, முலைத்தலை - ஸ்தநத்திலிருக்கிற, நஞ்சு-விஷத்தை, உண்டு - அமுதுசெய்து, உறி - தூக்கில்வைத்த, வெண்ணெய்-உருக்காத நெய்யை, தோன்ற - ப்ரசித்தமாய், உண்டான் - அமுதுசெய்தருளினவனும், வென்றி - ஜயத்தையுடைய, சூழ்-(சத்ருக்களை) ஆக்ரமிக்கிற, களிற்றை-குவலயாபீடமென்கிற யானையை, ஊன்றி - உறைக்கும்படி, பொருது - யுத்தம்செய்து, உடைவு-நாசத்தை, கண்டானும் - செய்தவனும், புள்ளின் - பக்ஷியான கொக்கினுடைய, வாய் - உதடை, கீண்டானும் - பிளந்தவனும், மருது - அர்ஜுனமரங்களுடைய, இடை - நடுவில், போய் - சென்று, மண்-பூமியை, அளந்த - (திருவடிகளாலே) ஆக்ரமித்த, மால் - ஸர்வாதிகன் கிடீர்.

வ்யா—அவ—பதினெட்டாம்பாட்டு—திருவுலகளந்ததிலேயோ இழந்தது, அத்தோடொக்க வளையாதே தீண்டிப் பரிமாறின க்ருஷ்ணாவதாரத்தி லுமிழந்திலேனோ வென்கிறார்.

(நான்றவித்யாதி.) இவன் தன்னுடைய வாயை முலையிலே வைக்க ஸ்வரூபாபத்தியைப் பெற்றாள் அவள். ஆரேனுமாக இவனை ஸ்பர்சித்தார்க்கு ஸ்வரூபாபத்திதப்பாது - எல்லாருக்கும் வந்தேறிபோம். “ஸ்தநாப்யேவேணாஹி நிஷ்கு்ருதே - ஸ்வேநரூபேணபிகிஷ்

பத்யதே'' என்கிறபடியே. (உறிவெண்ணெய் தோன்ற வுண்டான்) உறியிலே * சேமித்து வைத்த வெண்ணெயைக்கண்டு எட்டியுண்டு. களவுதோற்றும்படி யுண்டான். (வென்றி சூழ்களிற்றை) வென்றி மிக்ககளிற்றை. வெற்றியையுடைத்தாய் இவனைச்சூழ்க்க நினைத்த களிற்றையென்றுமாம். (ஊன்றி) "ஆனைப்பூசல்" என்றிராதேகிட்டி. "மருப்பொசித்தபாகன்" என்னும்படியே. (பொருதுடைவுகண்டானும்)† பசலைக்கலம்போலே உடையும்படிகண்டவன். "இடைவுகண்டான்" என்றுமாம். (புள்ளினித்யாதி) "மண்ணளந்தமால்" என்று-திருவுலகளந்தருளினநீர்மை பின்னாட்டுகிறது. க்ருஷ்ணாவதாரத்துக்கும் திருவுலகளந்தருளினவிடத்துக்கும்அழகும் மௌக்த்யமும்ஆச்ரிதபக்ஷபாதமு முள்ளிட்டவை இரண்டிடத்துக்கு மொத்திருக்கும்.

(நான்றவித்யாதி.) தன்க்ருத்ரிமமாணபால்போனவாறே அந்த முலை பையானபடி. (தோன்றவுண்டான்.) சிசுபாலாதிகளும் ஏசும்படி. (வென்றியித்யாதி.) வெற்றியையும் சூழ்ச்சியையு முடைய. (ஊன்றி) தரித்துநின்று. (உடைவு) கருவிப்பைபோலே யாக்கினபடி. (மண்ணளந்தமால்) பின்னாட்டினபடி. (கஅ)

அரு—.பதினெட்டாம் பாட்டு.—ஸ்வரூபாபத்தி-சாடு; தாய் வடிவு போய் பேய்வடிவானாள்-அர்தம்; மோக்ஷம் பெற்றாள் என்று-த்வனி. இவளுக்கு மோக்ஷங் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார். (ஆரேனுமாகவித்யாதி.) உறிவெண்ணெய், தோன்ற-கண்ணுக்குத் தோன்றவென்னுதல்; களவுதோன்ற வென்னுதல். இடைவு - இடைந்து போம்படி. கருவிப்பை-ஆயுதமிருக்கிற வுறை. ஆயுதம் வாங்கினால் பைசுருங்குமாப்போலே கொம்பைப்பிடுங்கவே ஆனைசுருங்கினபடி.()

**மாலும் கருங்கடலே என்னோற்றாய், வையகமுண்**
**டாலினிலைத் துயின்ற வாழியான் - கோலக்**
**கருமேனிச் செங்கண்மால் கண்படையுள், என்றும்**
**திருமேனி நீ தீண்டப்பெற்று.** (கக)

ப-உ. வையகம்-ஜகத்தை, உண்டு-அமுதுசெய்து, ஆலினிலை-வடத்தின்தளிரிலே, துயின்ற - கண்வளர்ந்தருளுகிறவனுமாய், ஆழியான் - சக்ரத்தையுடையனுமாய், கோல - அழகிய, கரு - கறுத்த, மேனி - விக்ரஹத்தையும், செம்-சிவந்த, கண்- நேத்ரத்தையுமுடையனுமாய், மால் - (ஆச்ரித) வ்யாமோஹத்தை யுடையனுமானவன்,

* சேமித்துவைத்த - அடக்கிவைத்த.
† பசலைக்கலம் - பச்சைமட்கலம்.

கண்படையுள் - பள்ளிகொண்ட விடத்தில், என்றும் - எக்காலத்தி லும், திருமேனி - அவன்விக்ரஹத்தை, நீ - நீ, தீண்டப்பெற்று - அநுபவிக்கப் பெற்று, மாலும் - மயங்குகிற, கருங்கடலே - கறுத்த ஸமுத்ரமே, என் - என்ன, நோற்ருய் - நோன்பை அநுஷ்டித்தாய்.

வ்யா.—அவ.—பத்தொன்பதாம் பாட்டு.—(மாலும்) அவதார மொழியப் பெற்ருருமுண்டு கிடீரென்கிருர்.

(மாலும்.) மதுபாநமத்தரைப்போலே பிச்சேருகின்ற. (கரும் கடலே) பெற்றபேறு உன்னுடம்பே கோட்சொல்லுகிறதில்லையோ. இல்லையாகில் உடம்பு வெளுத்திராதோ. (என்நோற்ருய்) ஆசையைவிட்டு நானும் நோற்கும்படிசொல்லாய். (வையகமித்யாதி) சிறு வயிற்றிலே பூமி யெல்லாவற்றையு மடக்கிப்பவனுன ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனுடைய திருமேனியைத் தீண்டப் பெற்று.

(மாலுங் கருங்கடலே) நான் தீண்டப்பெருதே மயங்கா நின்றேன்; நீ தீண்டப்பெற்று பரவசமாகா நின்ருய் - பூமியைப்போலே ஒருகாலன்றியே நித்யஸம்ச்லேஷம் பெறுவதேகடல்! என்று கொண்டாடுகிருர்.

(மாலும்) மதுபாந மத்தரைப்போலே பிச்சேறுகிற கடலே. (கருங்கடலே) உடம்பு வெளுக்கவேண்டாவே. (ஆழியான்) ஏகார்ணவத்திலும், திருப்பாற் கடலிலும் துயின்றதாதல். * ஆசிலேகையை வைத்து ப்ரளயத்தை இருதுண்டமாக விடுவேனென்றிருக்கு மென்றுமாம். பிராட்டிமாரோடு † ஊடினபோதும் உனக்குப் பிரிவில்லை. கடலும் எம்பெருமானும், ஸ்ரீபரதாழ்வானும் பெருமாளும்போலே நிறம். ப்ரஹ்ம ப்ராப்திபலமாய், கைங்கர்ய மாநுஷங்கிக மானாற்போலே, திருமேனிதீண்டுகை ப்ராப்யம்; கைங்கர்யம், அவகாதத்தில் ஸ்வேதம்போலே; உபாயத்திலும் ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தால் வ்யவஸாயம் ஆநுஷங்கிகம்.

அரு.—பத்தொன்பதாம்பாட்டு.—அவதரித்தவிடத்தில யசோதாதிகள் மடியிலேவைத்து ஸ்பர்சிக்கப்பெற்ருர்கள். ஆசரியாதேயிருக்க க்ஷீராப்திமடியிலேவைத்து ஸ்பர்சிக்கப்பெற்ற தென்றபடி.

கீழிற்பாட்டிலே, "மண்ணளந்த" என்றத்தைப்பற்ற மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிருர். (பூமியைப்போலே யித்யாதி.) "என்

* ஆசிலே - ஆயுதத்தின்பிடியிலே.
† ஊடினபோது - பிரிந்தபோது.

றும் - நீ தீண்டப்பெற்று” என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறூர் (பிராட்டிமாரோடித்யாதி.) “கருங்கடல், கோலக்கருமேனி” என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறூர் (கடலும் எம்பெருமானு மித்யாதி.) “தீண்டப்பெற்று” என்கைக்கு, தீண்டுகை பலமோ, கைங்கர்யமன்றோ பலமென்ன; அருளிச்செய்கிறூர் (ப்ரஹ்மப்ராப்தீத்யாதி.) ப்ரஸங்காத் அருளிச்செய்கிறூர் (உபாயத்திலுமித்யாதி.) ஜ்ஞாநம்-ப்ரதாநம். கண்படையுள்-கண்வளர்ந்தருளுகிற அவஸ்தையிலே. (கசு)

பெற்றூர் தளை கழலப் பேர்ந்தோர் குறளுருவாய்ச்
செற்றூர் படிகடந்த செங்கண்மால் - நற்றூ
மரைமலர் சேவடியை வானவர்கைகூப்பி
நிரைமலர்கொண் டேத்துவரால் நின்று. (௨०)

ப-உ. பெற்றூர் - தாய்தந்தைகளுடைய, தளை-விலங்கு, கழல-நழுவும்படி, பேர்ந்து - (பரமபதத்திநின்றும்) கிளம்பி, (க்ருஷ்ணனுயவதரித்து) ஓர் - அத்விதீயமான, குறளுருவாய்-வாமநவேஷத்தையுடையனுய், செற்றூர் - சத்ருவான மஹாபலியினுடைய, படி - பூமியை, கடந்த - அளந்தவனுய், செம் - சிவந்த, கண் - நேத்ரத்தையுடையனுன, மால் - (ஆஸ்ரித) வ்யாமோஹத்தை யுடையவனுடைய, நல் - அழகிய, தாமரைமலர் - கமலம்போலிருக்கிற, சே - சிவந்த, அடியை - திருத்தாள்களை, வானவர் - தேவர்கள், கைகூப்பி - அஞ்சலிபண்ணி, நின்று - (கூட்டமாய்) இருந்து, நிரை - (இதழ்) நிறைந்த, மலர்கொண்டு - பூக்களைக்கொண்டு, ஏத்துவர்-ஸ்தோத்ரம்பண்ணுவர்கள். ஆல் - ஆச்சர்யம்.

---

வ்யா.—அவ.—இருபதாம்பாட்டு.—“பெற்றூர் தளைகழல” என்கிறவித்தால் - க்ருஷ்ணுவதாரம் சொல்லவுமாம்; வாமநாவதாரந் தன்னையே சொல்லுகிறதாகவுமாம்.

(பெற்றூர் தளைகழலப்பேர்ந்து) பிறந்து - என்னுமாம். ஆரேனுமாக ஸ்பர்சிக்கப் பெற்றூர்க்குத் தளைகழல. (பேர்ந்தோர் குறளுருவாய்ச் செற்றூர்படிகடந்த) இந்த்ரனுக் கன்றுகாதே சத்ரு தனக்காகாதே. “த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்” “யஸ்த்வாம் த்வேஷ்டி ஸமாம் த்வேஷ்டி-யஸ்த்வாந்த்வேஷ்டி ஸமாந்த்வேஷ்டி” (செற்றூரித்யாதி) மஹாபலி, “என்னது” என்றபிமாநித்த பூமியையளந்த ஸர்வேச்வரன். (நல்தாமரைமலர் சேவடியை) செவ்வி மாறுதே யிருந்துள்ள திருவடிகளை. (வானவர்கைகூப்பி, நின்று

நிரைமலர்கொண்டேத்துவர் ஆல்) திரளநின்று பூவைக்கொண்டேத்துவ ரென்னவுமாம்; தொடுத்தமாலை கொண்டேத்துவ ரென்னவுமாம்.

அவ.—படுக்கையாய்க்கிடந்த கடலுக்குத் தன்னைக் கொடுக்கச் சொல்லவேணுமோ தேவதாந்தரங்களுக்குத் தன்னைக் கொடாநிற்க வென்கிறார்.

(பெற்றார்) நிதியெடுக்கப்பெற்று ரென்னுமாப்போலே. "என் பிள்ளை" என்று அபிமானித்தால் தளை கழலாநின்றால், "அடியோம்" என்றார் தளை கழலச்சொல்லவேணுமோ. (பேர்ந்து) ஸ்ரீவைகுண்டத்தி னின்று மென்னவுமாம். திருப்பாற்கடல் நின்றும் வந்தானாகவுமாம். (ஓர் குறள்) நாட்டில் வாமநர்கள் இவன் வளர்ந்தருளின விடத்தோடொக்கும். (செற்றார்) தன்னைச் செற்றார், "த்வ ப்ராணாஹி - மமப்ராணாஹி". (படிகடந்த) இக்காடுமோடையு மளந்த. பிறரது பெற்றாப்போலே யிருப்பதே. (செங்கண்) அபேக்ஷிதம் முடிக்கப் பெறுகை. (மால்) செய்தது போராதென்றிருக்கை. (நல்தாமரை) செவ்விக்கும், அழகுக்கும், குளிர்த்திக்கும் ஸத்ருசமான தாமரை தேடுகிறார். (வானவர்) எட்டாதபதம் பரணிட்டுக்கொண்டிருக்கிற. (கைகூப்பி) "சுவஸாதிஷ்வ்ரதிவேதிரே - அவசாஃப்ரதிபேதிரே". (நிரைமலர்) ஏற்கவே * தொடையொத்ததுளபம் கொண்டிருந்தார்களோ. (ஏத்துவரால்) இப்படி பிறந்தார் பெறுதொழிவதே. (நின்று) * திண்ணகத் தெதிர்த்து நின்று. (உ௦)

அரு.—இருபதாம்பாட்டு.—க்ருஷ்ணபக்ஷத்திலே (பிறந்தென்றுமாம்) என்கிறது. வாமநபக்ஷத்தை யருளிச்செய்கிறார் (ஆரேனுமாக வித்யாதி.) (ஸ்பர்சிக்கப்பெற்றார் தளைகழல) ஸம்ஸார ஸம்பந்தம் கழல என்றபடி. (நிரைமலர்) நிரை, வானவருக்காதல், மலருக்காதல் விசேஷணம். ஆல் - அசை.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (படுக்கையாயித்யாதி.) "வானவர்" என்கையாலே-தேவதாந்தரம். (இப்படி) சாடு. இப்படி-இப்படி இவர்களைப்போலே இந்தபூமியிலே பிறந்தார் அவனை ஏத்தப் பெறுதொழிவதே! என்று விஷாதம். ஆல்-விஷாதஸூசகம். (உ௦)

**நின்று நில மங்கை நீரேற்று மூவடியால்**
**சென்று திசை யளந்த செங்கண்மாற்கு - என்றும்**

* திண்ணகத்து - ப்ரவாஹத்தில்.

படை யாழி புள்ளூர்தி பாம்பணையான் பாதம்
அடையாழி நெஞ்சே யறி. (உக)

ப-உ. சென்று - கிட்டி, நின்று - நின்று, அம் - அழகிய, கை - கையிலே, நிலம் - பூமியை, நீரேற்று - (தான) ஜலத்தைப்பிடித்து வாங்கிக்கொண்டு, மூவடியால் - மூன்றுபாதங்களாலே, திசை-திக்குக்களோடுகூடின ஜகத்தை, அளந்த - ஆக்ரமித்துக் கொண்டவனாய், செம் - சிவந்த, கண் - நேத்ரத்தையுடையனுமான, மாற்கு - ஸ்வாமிக்கு, என்றும் - எக்காலத்திலும், படை - ஆயுதம், ஆழி - சக்ரம்; ஊர்தி - வாஹநம், புள் - பெரியதிருவடி; பாம்பு - திருவநந் தாழ்வானே, அணையான் - படுக்கையாகவுடையவனுடைய, பாதம் - திருவடிகளை, அடை - ஆச்ரயி. ஆழி - கம்பீர ஸ்வபாவத்தையுடைய, நெஞ்சே - மநஸ்ஸே, அறி - நன்றாய்த் தெரிந்துகொள்.

---

வ்யா.—அவ.—இருபத்தோராம்பாட்டு.—(நின்று) ஸர்வேச்வரனவன், அர்த்தித்வம் தோற்றும்படிக் கிடாகநின்று. (நிலம் அங்கைநீரேற்று) கொடுத்துவளர்ந்த அழகியகையிலே பூமியை நீரேற்று. (மூவடியித்யாதி) திக்குக்கள்தோறும் சென்றளந்து, அத்தாலே அலப்யலாபம்பெற்றானா யிருக்கிறவனுக்கு. (என்றுமித்யாதி) எல்லாவற்றையுமுடையவன் கிடீர் இரந்தான். கையிலே திருவாழியைப் பேராதேபிடிக்கவல்லவனும், திருவடிமுதுகிலே *நற்றரிக்க இருக்கவல்லவனும்; திருவநந்தாழ்வானகிற படுக்கையிலே சாயவல்லவனும் ஸர்வேச்வரனாகிறான். (பாதமடையாழி நெஞ்சேயறி) மஹாபலியைப்போலே யாகாதே, அவன் திருவடிகளையடை. (ஆழிநெஞ்சே யறி) அளவுடைய நெஞ்சேயறி. † ஓலக்கவார்த்தை யென்றிராதே இத்தை புத்திபண்ணியிரு.

அவ.—இரண்டுபாட்டாலும் ஸர்வேச்வரன் கிடீர் ஆச்ரிதார்த்தமாக இப்படி எளியனானனென்று சொல்லிற்றாய் ஈடுபடுகிறார்.

(நின்றித்யாதி) பிராட்டியை ஸ்ரீஜநகராஜன் நீர்வார்க்கப் பெற்றாற்போலே சென்று நின்றென்னுதல். (சென்று) நடந்தபடிசென்றளந்தென்னுதல். (செங்கண்மால்) தந்தாமது பெற்றாலும் இனியராகவேணுமோ. (என்றும்) பரிபூர்ணன் கிடீர். (பாதமடை ஆழி நெஞ்சே) என்னை ஒதுவிக்கவல்லநீ, என்செல்லாமையறி. அல்லாத

---

* நற்றரிக்க - நன்றாய் தங்கும்படி.

† ஓலக்கவார்த்தை-ஸபையில் டம்பமாகச்சொல்லும் வார்த்தை.

வார்த்தைபோலல்ல; இத்தை புத்திபண்ணு. [சீரால்பிறந்து] அன்று அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் தபஸ்ஸுபண்ணினவன் வயிற்றிலே, "விதாநம்ரோவயாஜோஹ - பிதரம்ரோசயாமாஸ" என்று-ஆசைப்படவந்து பிறக்கை. [சிறப்பால் வளராது] வெண்ணெயையும் பெண்களையும் களவுகண்டு மூலையடியே வளருகை. [பேர்வாமனாகாக்கால்] நாராயணனானாலாகாதோ. [பேராளா] ஐச்வர்யத்திலே இளைப்பாறவேணுமோ. [மார்வித்யாதி] பருத்திபட்ட பன்னிரண்டும் பட்டபூமி. (உக)

அரு—இருபத்தோராம் பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார். (இரண்டுபொட்டாலுமித்யாதி)இங்கு "நிலமங்கை"என்று பூமிப்பிராட்டியாக்கி அருளிச்செய்கிறார். (பிராட்டியையித்யாதி) யஜ்ஞவாடத்தளவும் சென்றுநின்றென்னுதல்; நின்றவிடத்திலே நின்று திசையெங்கும் சென்றளந்தென்னுதல். தமக்கு உபதேசிக்கிற நெஞ்சுக்குச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார். (என் செல்லாமை யென்று) இப்படி வாமநனிடத்திலே ஈடுபட்டபேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார். (சீரால் பிறந்தித்யாதி) (இளைப்பாறவேணும்) நீர்மையில் இளைப்பாறப் போகாமையாலே மேன்மையிலே இளைப்பாற வேணுமென்றபடி. உன்கையிலே பன்னிரண்டும் பட்டபூமி. இப்படி வாமநனாகாதபோது ஏற்கவருமையோ வென்றபடி. ()

அறியு முலகெல்லாம் யானேயு மல்லேன்
பொறி கொள் சிறை யுவணமூர்ந்தாய் - வெறிகமழும்
காம்பேய் மென் தோளி கடைவெண்ணெ யுண்டாயைத்
தாம்பே கொண்டார்த்த தழும்பு. (உஉ)

ப-உ. பொறிகொள்-நாநாவர்ணமான, சிறை - பக்ஷத்தையுடைய, உவணம் - கருடனை, ஊர்ந்தாய்-நடத்துமவனாய், வெறி-பரிமளம், கமழும்-வீசுகிற, காம்பு - மூங்கிலோடு, ஏய் - ஸமாநமான, மெல்- ம்ருதுவான, தோளி - புஜத்தையுடைய (யசோதை), கடை - மதித்த, வெண்ணெய் - உருக்காத நெய்யை, உண்டாயை - அமுதுசெய்த உன்னை, தாம்பே - கயிற்றையே, கொண்டு - எடுத்து, ஆர்த்த - இணைத்துக்கட்டுகையாலுண்டான, தழும்பு - வ்ரணம், யானேயுமல்லேன் - நானொருவனே யல்லேன்; உலகெல்லாம் - நாடடங்க, அறியும் - அறிந்திருக்கும். (உஉ)

வ்யா.—அவ.—இருபத்திரண்டாம் பாட்டு.—(அறியும்) ஆச்ரி தார்த்தமாக எளியனானென்னும்படி நீரறிந்தபடி. யெங்ஙனே யென்னில்; (உலகெல்லாம் அறியும் யானேயுமல்லேன்) சிசுபாலன் கூடவறியானோ. (பொறியித்யாதி) பொறிகொண்டிருந்துள்ள சிற கையுடைத்தான திருவடியை யூர்ந்தவுன்னை. (வெறிகமழும்) பிள்ளை முகம் வாடவொண்ணாதென்று எப்போதும் ஒப்பித்தபடியே இருக் கையாலே பரிமளம் கமழாநின்ற. (காம்பு ஏய் மென்தோளி) மூங் கிலோடொத்து ம்ருதுவான தோளையுடையவள். (கடைவெண்ணெ யுண்டாயை) அவள், மார்த்தவம் பாராதே கடைந்த வெண்ணெயுண் டாயை. (தாம்பித்யாதி) கைக்கெட்டிற்றொருதாம்பாலே கட்டின தழும்பு. (அறியுமுலகெல்லாம்) கயிற்றைநீட்டவொண்ணாது; உரலைச் சிறுக்கவொண்ணாது; இவனுடம்பிலே இடங்காணுமித்தனையிறே.

அவ.—ஆச்ரித பக்ஷபாதம்போலே ஆச்ரிதபவ்யதையும்.

(உலகெல்லாம்) சிசுபாலனையிட்டுச் சொல்லவேணுமோ. (யா னேயித்யாதி) அநுக்ரஹமுடைய நானே யல்லேன். (பொறியித் யாதி) நிரபேக்ஷனாய் அர்த்திக்கப்பிறந்தநீ. (வெறி) ஸ்வாபாவிகமென் னுதல்; பிள்ளை * முசியாமைக்கென்னுதல். (காம்பு)பசுமையும்,திரட் சியும், செவ்வையும். (மென்தோளிகடை வெண்ணெயித்யாதி) இரு வர்க்கு தாரகம்; அபலைகட்டிலே கட்டுண்பதே. (தாம்பேகொண்டு) குறுங்கயிற்றைக்கொண்டு. (உஉ)

அரு.—இருபத்திரண்டாம்பாட்டு.—ஆர்த்த-ஆர்க்கப்பட்ட என் றர்த்தமாக்கி யருளிச்செய்கிறார். (கயிற்றைநீட்ட வித்யாதி.)

மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார். (ஆஸ்ரிதபக்ஷபாத மித் யாதி) இட்டு - அவன்மாத்ரமல்ல வென்றபடி. இருவர்க்கும் - தாய்க்கும் மகனுக்கும். அவளுக்கு ஜீவநஹேது, இவனுக்கு ஆஸ்ரி தஸ்பர்சமென்றபடி. (உஉ)

**தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவா மங்கை**
**தழும்பிருந்த தாள்சகடம் சாடி - தழும்பிருந்த**
**பூங்கோதை யாள்வெருவப் பொன்பெயரோன் மார்பிடந்த**
**வீங்கோத வண்ணர் விரல்.** (உ௩)

ப-உ.—அம்-அழகிய, கை-கரமானது. சார்ங்கம் - சார்ங்கமென் கிற தநுஸ்ஸினுடைய, நாண்-நாணியினால், தோய்ந்த - படிந்த, தழு

* முசியாமைக்கு - இளையாமைக்கு.

ம்பு - வ்ரணத்தை, இருந்தவாம் - உடைத்தாயிருந்தது. தாள் - திருவடி, சகடம் - சகடாஸுரனை, சாடி - உதைத்து, (அத்தாலே) தழும்பிருந்த - வ்ரணத்தை யுடைத்தா யிருந்தது, வீங்கு - வ்ருத்தியடைந்த, ஓத - அலைகளையுடைய ஸமுத்ரம்போலுள்ள, வண்ணர்- திருமேனியையுடையவருடைய, விரல் -அங்குளிகள், பூம் - அழகிய, கோதையாள் - மயிர்முடியையுடைய (பிராட்டி), வெருவ - நடுங்கும்படி, பொன்பெயரோன் - ஹிரண்யனுடைய, மார்வு - வக்ஷஸ்ஸை, இடந்த - பிளந்ததாலுண்டான, தழும்பிருந்த - வ்ரணத்தையுடைத்தாயிருந்தன. (உகூ)

வ்யா.—அவ.—இருபத்துமூன்றும்பாட்டு.—ஒரு செயலைக்கொண்டு சொல்லும்படி யென்னென்னில்; ஒருசெயலிலேயோ ஒரு அவதாரத்திலேயோ தழும்பு சுமந்ததென்கிறார்.

(தழும்பிருந்தவித்யாதி) பிராட்டியுங்கூடக் கூசி ஸ்பர்சிக்கவேண்டும் அழகியகை, சார்ங்கநாண் தோய்ந்த தழும்பிருந்தவாம். ஜ்யாகிணத்தாலே கர்க்கசமாயிருக்கும். (தாள்சகடம் சாடித்தழும்பிருந்த பூங்கோதையாள் வெருவப்பொன் பெயரோன் மார்விடந்த) "அடலரியாய்ப்பெருகினனை" என்கிறபடியே. (விரல்தழும்பிருந்த) கால் தழும்பு, கைதழும்பு, அவாந்தரா வயவமான விரல் தழும்பு; ஒன்றேயோ தழும்பாயிற் றென்கிறார்.

(பூங்கோதையாள் வெருவ) "ஆச்ரிதருடைய கார்யம்" என்றால், உகக்குமவளும் பயப்படும்படி உடம்படையத்தழும்பு. (சாடி) அவன் * மூரிநிமிர்ந்தான். இவர்க்குக்குவாலாயிருக்கிறபடி. (பூங்கோதையாள் வெருவ) பொறுதென்றிருக்குமவள். வீரவாசியறியுமவள். ருஷிவேஷத்தோடே திரியவேணுமென்னுமவள். (வீங்கோதவண்ணர் விரல்) வளர்த்தியும் குளிர்த்தியும் [மஹாவிஷ்ணும்] விக்ரஹவ்யாப்தியாயிற்று. (உகூ)

அரு.—இருபத்துமூன்றும்பாட்டு.—மேலுக்குத்தாத்பர்ய மருளிச்செய்கிறார். (பூங்கோதையா ளித்யாதி) பூங்கோதையாளை ராமாவதாரத்தோடே சேர்த்து அருளிச்செய்கிறார். (பொறுதென்றித்யாதி) பொறுது என்று - ஆஸ்ரிதரக்ஷணம் போராதென்னவேணுமென்றிருக்குமவ ளென்றபடி. இப்படிப்பட்டவளும் வெருவும்படி சார்ங்கநாண் தோய்ந்த என்று இங்கும் கூட்டி யோஜிப்பது.

* மூரி நிமிர்ந்தான் - திமிர் போம்படி நிமிர்ந்தான்.

விரலொடு வாய் தோய்ந்த வெண்ணெய்கண்டு, ஆய்ச்சி
உரலோ டுறப்பிணித்த நான்று - குரலோவா
தேங்கி நினைந்தயலார் காண விருந்திலையே
ஓங்கோத வண்ணா வுரை. (உச)

ப-உ, விரலொடு-விரல்களாலே எடுத்து, வாய்தோய்ந்த-திருப்பவளத்தில்வைத்த, வெண்ணெய் - உருக்காதநெய்யை, கண்டு-பார்த்து, ஆய்ச்சி - இடைச்சி, உலரோடு-உலூகலத்தோடு, உற-இறுக்கி, பிணித்தநான்று - கட்டினவன்று, குரல் - கண்டத்வநி, ஓவாது - ஓயாமல், ஏங்கி - அழுது, நினைந்து - (வெண்ணெயை) த்யாநித்துக் கொண்டு, அயலார் - பிறர், காண - பார்க்கும்படி, இருந்திலையே - இருக்கவில்லையோ? ஓங்கு - வ்ருத்தியடைந்திருக்கிற, ஓத - கடலோடுஸமாநமான, வண்ணா - வடிவையுடையவனே, உரை - சொல்லு.

வ்யா.—இருபத்துநாலாம்பாட்டு.— (விரலித்யாதி) விரல்வாயிலே தோய்ந்தவளவிலே. ""வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு" என்றும் சொல்லாநின்றது; "விரலொடு வாய்தோய்ந்த" என்றும் சொல்லாநின்றது; இவையெங்ஙனே சேரும்படி" என்று பிள்ளை திருநறையூ ரரையர் பட்டரைக்கேட்க; "இவனுக்கு என்றுந் திருப்பணி யிதுவன்றோ, ஒருநாள் அங்ஙனுமாகிறது, ஒருநாள் இங்ஙனுமாகிறது" என்றருளிச்செய்தார், "வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான்" என்கிறபடியே. (உரலித்யாதி) உரலென்றும் அவனென்றும் பிரித்துக்காணப் போகாதபடி கட்டினவன்று. (குரலோவாதேங்கி) அழப்புக்கத்வநிமாறாதே; ஏங்கின ஏக்கம் கீழ்விழாதே. (நினைந்து) இப்படி அழாநிற்கச் செய்தேயும் பெரிய திருப்பணிகளாயிற்று நினைப்பது. வெண்ணெய்களவுகாணும்படி நினைந்து. (அயலார்காண இருந்திலையே) ஐந்துலக்ஷங் குடியில் பெண்களில் காணாதாருண்டோ. இவனாலே நெஞ்சு புண்பட்டாரெல்லாம் இவன்பட்டபாடுகாண வருவர்களிறே. * "க்ஷுத்ரை ரபி ஸ்வாபமாநை ரிமைஸ்ஸர்வைர்ஜநைஸ்ஸஹ - அத்யுத்கடை: புண்யபாபை ரிஹைவபலமச்நுதே"யிறே. (ஓங்கோதவண்ணாவுரை) இவனைக்கட்டிவைத்தது ஒருகடலைத் தேக்கிவைத்தாற்போலே காணும். (உரை) இவ்வடிவு காணவேணும்; இவ்வடிவோடே கூட வார்த்தையும் கேட்கவேணும். பொய்யாகில் உரலோடேகூட இழுத்துக்கொண்டு புறப்படுவேனே.

(விரலித்யாதி)வயிறுவளர்த்து அகப்படப்பெற்றோமோ. * மிடற்றுக்குக் கிழிழியப்பெற்றோமோ. (உரலொடு) உரலோடு தன்னோடு வாசியில்லாமை. (குரலோவாது) அழப்புக்கவாறே, "இக்கோலுண்டு பார்" என்ன; ஏங்கிநின்றான். (நினைந்து) வெண்ணெயை நினைத்திருக்கை. (அயலார்காண) பஞ்சலக்ஷம்குடியில் பெண்களுடைய; அவர்களை பந்தித்துத்தான் அகப்படாதிருக்கும்; அவர்கள் இவன் அகப்படவல்லனே என்றிருப்பார்கள். (இருந்திலையே) ராமசரத்தை ராவணன் மறக்கில் மறக்கலாம். (ஓங்கோதவண்ணா) நெருக்குண்கையாலே வந்தபூர்த்தி. (உரை) "நமோ நமோவஸ்து - நமேமோகம்" என்னும் நீசொல்லிக்காண். அவாப்த ஸமஸ்தகாமன் குறைபாயபூவதே; ஸர்வசக்தி மிடுக்கின்றி யொழிவதே; ஸர்வஜ்ஞன்புரையறுவதே. ()

அரு.—இருபத்துநாலாம்பாட்டு.—"இவை மௌக்த்ய வைசக்த்யங்கள் சேரும்படி" என்று அரையர். விரலாலே தொட்டுவாய் தோய்ந்தானே வென்ன அருளிச்செய்கிறார். (வைகலு மித்யாதி) அவ்விடத்துக்கு இதுவுமொரு அர்த்தம். காணாதே துःகப்பட்டவர்கள் காணக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார். (சுக்ருதைஃ அத்யுக்கடைঃ இத்யாதி) புண்யபலம். நாளாகை. "உரை" என்றத்தால் பலித்ததை யருளிச்செய்கிறார். (பொய்யாகி லித்யாதி) பொய்யென்றாயாகில் கையும் களவுமாகக்கட்டுண்டத்தை யவன் நினைத்திருக்குமோ வென்ன ; அருளிச்செய்கிறார். (ராமசரத்தை யித்யாதி) ஆஸ்ரிதவிஷயத்தில் உகந்து கட்டுண்கையாலே மறவாமல் நினைத்திருக்குமென்றபடி. புரையறுகை - அவிழ்க்கைக்கு உபாய மறியாதிருக்கை. (உச)

**உரைமேற் கொண் டென் னுள்ள மோவாது, எப்போது**
**வரைமேல் மரதகமே போல - திரைமேல் [ம்**
**கிடந்தானைக் கீண்டானைக், கேழலாய்ப் பூமி**
**யிடந்தானை யேத்தி யெழும். (உரு)**

ப-உ. வரைமேல்-பர்வதத்தின்மேல், மரதகமே போல - மரதகமணிபோல, திரைமேல் - ஸமுத்ரத்தின்மேலே, கிடந்தானை -பள்ளிகொண்டவனாய்,கீண்டானை - (ஹிரண்யனை)பிளந்தவனாய், கேழலாய்-வராஹமாய், பூமி - தரணியை, இடந்தானை - குத்தி எடுத்தவனை, என்-என்னுடைய, உள்ளம்-மநஸ்ஸு, ஓவாது-ஒழியாமல், எப்போ

* மிடற்றுக்கு - கழுத்துக்கு.

தும் - எந்தகாலத்திலும், மேல் - ச்ரேஷ்டமான, உரைகொண்டு - சப்தங்களைக்கொண்டு ஏத்தி - துதித்து, எழும்-உஜ்ஜீவிக்கும். (உரு)

வ்யா.—அவ.—இருபத்தைந்தாம்பாட்டு.—இவனுடைய இந் நீர்மை யநுபவித்தால் வேறென்றால் போதுபோக்க வொண்ணு தென்கிறார்.

(உரைமேல்கொண்டு) மேலானவுரையைக்கொண்டு. அதாவது-வாக்குக்கு விஷயமானத்தைக் கொண்டு. அன்றிக்கே, உரைக்கை யாலே மேற்கொண்டு. அதாகிறது - சொல்லிச் செல்லுகையிலே கிளர்ந்து. (என்னுள்ள மோவாதெப்போதும்) என்னுடைய ஹ்ருத யமானது உச்சிவீடு விடக்கடவதன்றிக்கே. ஸ்வரூபமொருகாலாக அழியுமோ. ஒருமலையிலே ஒருமரதக கிரியானது பரப்புமாறப் படிந் தாற்போலே யாயிற்று திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின போதிருக்கும்படி. ஸர்வேச்வரனாய் ஸர்வசக்தியானவனுடைய ஸௌலப்ய சரிதங்களைச் சொல்லுகைக்கு.

(என்னுள்ள மித்யாதி) தாஸவ்ருத்திகனான வென்னுடைய மந ஸ்ஸானது இடைவிடாது. (எப்போது மித்யாதி) ஒருபர்வத சிகரத் திலே இந்த்ரநீலமணி யிருந்தாற்போலே விளங்குகிற ஸமுத்ரசாயி யானவனை. (கிடந்தானைக்கீண்டானை) ஆர்த்தரைக்கண்டால் படுக்கை அடிகொதிக்கும்படி. (ஏத்தி எழும்) ஸ்துதித்து உஜ்ஜீவிக்கும்.

அவ.—(உரை மேல்கொண்டு) இவனுக்கு நினைவும் பேச்சும் வெண்ணெயிலே யானாற்போலே, ஆழ்வார்க்கு நினைவும் பேச்சும் இவன்பக்கலிலே யானபடிசொல்லுகிறது.

(உரைமேல்கொண்டு) வாக்குக்கு விஷயமாகக்கொண்டு. வாக் வ்ருத்தியை மேற்கொண் டென்னவுமாம். (என்னுள்ள மித்யாதி) ஒருமலைமேலே மரதகம் கிடந்தாற்போலே திரைமேலே கண்வளர்ந் தருளுகிறவனை. (கீண்டானை யித்யாதி) வராஹரூபியாய்ப்புக்கு அண் டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்து பூமியை யிடந்தவனை. (ஏத்தி யெழும்) ஏத்தி உஜ்ஜீவியாநின்றது. (உரு)

அரு.—இருபத்தைந்தாம்பாட்டு.—(உரைமேல்) மேலுக்கவதா ரிகை யருளிச்செய்கிறார். (இவனுக்கித்யாதி) கேழலாய்க்கீண்டிடந் தானை யென்றபடி. சேதந ஸமாதியாலே உள்ளம் ஏத்தி எழும் என் று க்ரியை. வாக் வ்ருத்தியை மேற்கொள்ளுகை - வாக் வ்ருத்தியை யுடைத்தாகை யென்றபடி. (உரு)

**எழுவார் விடைகொள்வா ரீன்றுழா யானை**
**வழுவா வகை நினைந்து வைகல் - தொழுவார்**
**வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடமே, வானோர்**
**மனச் சுடரைத் தூண்டும் மலை. (உசு)**

ப.உ. எழுவார்-(பலத்தையடைந்து)விட்டுப்போவார், (ஐஶ்வர்யகாமர்) விடைகொள்வார் - ஆஜ்ஞையைப்பெறுவார், (கேவலர்) ஈன் - போக்யமான, துழாயானை - திருத்துழாயையுடையவனை, வழுவாவகை - நீங்காத உபாயத்தை, நினைந்து-அநுஸந்தித்து, வைகல் - தினந்தோறும், தொழுவார் - ஆஶ்ரயிப்பார், (பகவத்காமர்) (இம்மூவர்களுடைய) வினை-பாபமாகிற, சுடரை - அக்நியை, நந்துவிக்கும் - நாசஞ்செய்யும், வேங்கடமே - திருவேங்கடமென்கிற மலையே, வானோர் - தேவர்களுடைய (நித்யஸூரிகளுடைய,) மனச்சுடரை - திருவுள்ளமாகிற விளக்கை, தூண்டும் - வ்ருத்திபண்ணும், மலை - பர்வதம். (உசு)

வ்யா.—அவ.—இருபத்தாறும் பாட்டு.—(எழுவார்) எல்லார்க்கும் நினைவும் செயலும் ஒக்கப்பரிமாறலாவது பரமபதத்திலேயன்றோ வென்னில்; நித்யஸூரிகளுங்கூட அவனுடைய ஸௌலப்யங் காண வருகிறது திருமலையிலேயன்றோ வென்கிறார்.

(எழுவார்) ஐச்வர்யம் வேணுமென்று மேலேமேலே ப்ரார்த்திக்குமவர்கள். (விடைகொள்வார்) ஆத்ம ப்ராப்தியே யமையும்; நீ வேண்டாவென்று இவன் பக்கலில் நின்றும் அகலு மவர்கள். (ஈன்றுழாயானை யித்யாதி) இவனை நாங்கள் பிரியாதொழிய வேணுமென்று நினைத்து, காலமெல்லாம் தொழுவார்கள். (வினை யித்யாதி) பகவத்ப்ராப்தி விரோதி, ஆத்மப்ராப்தி விரோதி, ஐச்வர்யப்ராப்தி விரோதியான பாபங்களை, எரிகிறநெருப்பை யவித்தாற்போலே நசிப்பிக்கும் வேங்கடமே. (வானோரித்யாதி) நித்யஸூரிகளுடைய கிளர்ந்த மநஸ்ஸை அவனுடைய ஸௌலப்யம் காணப்போரிகோ ளென்று கிளர்த்தாநிற்கும் திருமலை. காலாந்தரமன்று, ஸந்நிஹிதம்.

(எழுவார்) ப்ரயோஜநம் கைபுகுந்தவாறே போவார் ஐஶ்வர்யார்த்திகள். (விடைகொள்வார்) பலம் நித்யமாகையாலே மீட்சியில்லை கேவலர்க்கு. (வினை யித்யாதி) இம்மூவர்க்கும் உத்தேஶ்ய விரோதிகளைப் போக்கும். நந்துவிக்கை - அவிக்கை. (வானோரித்யாதி)

இங்குள்ளார் * ஒழிவில் காலமென்ன, அங்குள்ளார் * அகலகில்லேன் என்னச் சொல்லும். (உசு)

அரு.—இருபத்தாறும்பாட்டு.—(எழுவார்) "மலை" என்கையாலே ஸங்கிஹிதம். இது ப்ரத்யக்ஷமன்றோ வென்றபடி.

மீட்சியில்லாமையாலே இவனைவிட்டு விடைகொண் டகன்று போகிறதே அவர்களுக்கு ஸ்வபாவ மென்றபடி. (உசு)

மலையால் குடைகவித்து மாவாய் பிளந்து
சிலையால் மராமரமேழ் செற்று - கொலையானைப்
போர்க்கோ டொசித்தனவும் பூங்குருந்தம் சாய்த்தனவும்
கார்க்கோடு பற்றியான் கை. (உஎ)

ப-உ. மலையால் - பர்வதத்தினால், குடை-சத்ரத்தை, கவித்து - மூடி, மா - (கேசி என்கிற) குதிரையினுடைய, வாய் - உதட்டை, பிளந்து-கிழித்து, சிலையால் - தநுஸ்ஸினால், மராமரம்-ஆச்சா மரம், ஏழ் - ஏழையும், செற்று - அழியச்செய்து, கொலை - (பிறரை) கொல்லுகிற, யானை - (குவலயாபீடமென்கிற) ஆனையினுடைய, போர் - யுத்தஸாதநமான, கோடு - கொம்பை, ஒசித்தனவும் - முறித்தனவும், பூங்குருந்தம் - பூத்தகுருக்கத்திமரத்தை, சாய்த்தனவும் - தள்ளினவும், கார் - (ஸ்வபாவத்தால்) மேகத்தோடொத்த, கோடு - சங்கத்தை, பற்றியான் - பிடித்தவனுடைய, கை - கரங்கள் கிடீர். (உஎ)

வ்யா.—அவ.—இருபத்தேழாம் பாட்டு—(மலையித்யாதி) திருவேங்கட முடையானுடைய திருக்கையைப் பார்த்தார்போலே.

(மலையால் குடைகவித்து) வர்ஷத்துக்குக் குடை யபேக்ஷிதமிறே. இந்த்ரன் ஆஸுரப்ரக்ருதி யல்லாமையாலே பசிக்ராஹத்தாலே செய்தானாகில், மலையையெடுத்து நம்மை நோக்கிக்கொள்வோமென்று மலையைக் குடையாகக்கவித்து. (மாவாய்பிளந்து) பண்ணின ப்ராதிகூல்யத்தின் கனத்தாலேகேசியைக்கொன்று. (சிலையித்யாதி) அவதாரத்துக்கடுத்த ஆயுதத்தாலே மராமரமேழையும் செற்று. (கொலை யித்யாதி) கொல்லக்கடவதாக நிறுத்தின குவலயாபீடத்தினுடைய பொராகின்றகோட்டை அநாயாஸேந முறித்தனவும். (பூங்குருந்தம் சாய்த்தனவும்) பூப்பறித்தனவும். (கார்க்கோடித்யாதி) ச்ரமஹரமாய் முழக்கத்தையுடைத்தா யிருக்குமென்கை. அன்றிக்கே, திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்ய மிருந்தபோது மேகத்

த்தைப்பற்றி யிருந்த சங்குபோலே யிருந்ததென்கை. இடையர்செய் வதெல்லாம் முன்கை உரத்தாலே, க்ஷத்ரியர், என்றும் வில்லாலே யென்னுமிடம் தோற்றுகிறது. ஸ்ரீபாஞ்சஜந்யம் பிடிக்கவும்பொறுத ம்ருதுவானகையைக் கொண்டு கிடீர் இதெல்லாம் செய்தது.

அவ.—சேஷ்டிதங்களிலேஉருகுகிறுர்.ஸுகுமாரமானகையைக் கொண்டே இப்பெரிய செயல்களைச் செய்வதே. செய்யாநின்றல் அநாயாஸேந செய்வதே!

(மலையித்யாதி) மலையாக விநியோகங் கொண்டானே. (மாவாய்பிளந்து) நாரதாதிகள் கூப்பிடும்படிவந்த கேசியை நெட்டிக் கோரை கீண்டாற்போலே கீண்ட. (சிலையித்யாதி) எய்யவொண்ணுத படி திரளநின்றமராமரங்களை. (கொலையித்யாதி) கொலையிலே உற்ற ஆனை. (பூங்குருந்தம்) தழைத்துப் பூத்து நின்ற. (கார்க்கோடு) குளிர்ந்து ஸ்ரமஹரமாய் பெருத்து முழங்குகை. ஸ்ரீபாஞ்சஜந்யம் தொடப்பொறுதகைகிடீர். (உஎ)

அரு.—இருபத்தேழாம் பாட்டு.—(மலையால்) கோடு - சங்கம். மேகஸ்வபாவத்தையுடைய சங்கென்னுதல்; மேகத்தோடே கூடின சங்கென்னுதல். க்ருஷ்ணன் கையாலே செய்கையையும், பெருமாள் வில்லாலே செய்கையையும் பற்ற தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (இடையரித்யாதி). "பற்றி" என்று ப்ரயாஸந் தோற்றுகையாலே பொறுத ம்ருதுவானகை என்கிறது.

மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறுர் (சேஷ்டிதங்களி லித்யாதி). நெட்டி-வாடின. (உஎ)

**கைய வலம்புரியும் நேமியும், கார்வண்ணத்**
**தைய மலர்மகள் நின் னுகத்தாள் – செய்ய**
**மறையான் நின் னுந்தியான் மாமதிள் மூன்றெய்த**
**இறையான் நின்னுகத் திறை.** (உஅ)

ப-உ. கார் - மேகம்போன்ற, வண்ணத்து - திருமேனியையுடைய, ஐய! ஸ்வாமியே! வலம்புரியும் - ஸ்ரீ பாஞ்சஜந்யமும், நேமியும் - திருவாழியும், கைய - கையிலிருக்கின்றன; மலர் - பூவிலவதரித்த, மகள், பெண் (லக்ஷ்மி), நின் - உன்னுடைய, ஆகத்தாள் - மார்விலிருக்கிறுள்; செய்ய-நிர்த்துஷ்டமான, மறையான் - வேதத்தை

யுடையவன் (ப்ரஹ்மா), நின் - உன்னுடைய, உந்தியான் - நாபியில் பிறந்தவன்; மா - பெரிய, மதிள் - ப்ராகாரத்தையுடைய, மூன்று - மூன்றுபட்டணத்தையும், எய்த - அடித்த, இறையான் - ஈஶ்வராபிமாநியான ருத்ரன், நின்னாகத்து - உன்திருமேனியில், இறை - ஒரு மூலையிலிருக்கிறவன். (உஅ)

வ்யா—அவ.—இருபத்தெட்டாம்பாட்டு.—(கையித்யாதி) ஐஶ்வர்யம் சொல்லுகிற தென்னவுமாம். நீர்மை சொல்லுகிறதென்னவுமாம்.

(கையவலம்புரியும் நேமியும்) கைய - கையிலேயுள்ள. (கார்வண்ணத்தைய) ஶ்ரமஹரமான வடிவையுடைய ஸ்வாமியானவனே. (மலர்மகள் நின்னாகத்தாள்) * கோலமலர்ப்பாவை நின்திருமார்விலாள். (செய்யவித்யாதி) நேரே உன்னைக் காட்டவற்றான வேதத்தையுடைய ப்ரஹ்மா உன் திருநாபீகமலத்திலானான். (மாமதிளித்யாதி) த்ரிபுரதஹநம்பண்ணி ஈஶ்வராபிமாநியா யிருக்கிற ருத்ரன் உன் திருமேனியைப்பற்றி இறையாயிற்று. அன்றியே, (நின்னாகத்திறை) என்று திருமேனியில் ஏகதேசத்திலே என்னவுமாம்.

(கையித்யாதி) ஐஶ்வர்யமாதல்; அழகாதல். (கார்வண்ணம்) வேறே வேணுமோ; வடிவேயமையாதோ. (ஐய) என்னது என்னலாயிருக்கை. (மலர்மகள் நின்னாகத்தாள்) * அலர்மேல் மங்கையுறைமார்வன். (மாமதிளித்யாதி) ஊரைச்சுட்டுப் பேரைப்படைத்தான். கோட்சொல்லி ப்ரஸித்தராமாப்போலே. ஆகத்தில் ஏகதேசத்தைப் பற்றினனென்னுதல். ஆகத்தைப்பற்றி இறையானனென்னுதல். (உஅ)

அரு.—இருபத்தெட்டாம் பாட்டு.—(கையவலம்புரி) திவ்யாயுதங்கள் அழகுக்கு முடல். (உஅ)

**இறையும் நிலனு மிருவிசும்பும் காற்றும்**
**அறைபுனலும் செந்தீயு மாவான் - பிறைமருப்பில்**
**பைங்கண்மால் யானை படுதுயரம் காத்தளித்த**
**செங்கண்மால் கண்டாய் தெளி. (உகூ)**

ப-உ. இறையும் - ஸர்வேச்வரனும், நிலனும் - பூமியும், இரு - விசாலமான, விசும்பும் - ஆகாசமும், காற்றும் - வாயுவும், அறை -

ஒலிக்கிற, புனலும் - ஜலமும், செம் - சிவந்த, தீயும் - நெருப்பும், (இந்த பஞ்சபூத நிர்மிதலீலா விபூதியை) ஆவான் - (சேஷமாக) உடைத்தாயிருக்குமவன், பிறை - பாலசந்த்ரன்போன்ற, மருப்பு - கொம்பையும், பை - அழகிய, கண் - நேத்ரங்களையுமுடைய, மால் - (கைங்கர்யத்தில்) வ்யாமோஹத்தையுடைய, யானை - கஜேந்த்ராழ்வானல், படு - அநுபவிக்கப்பட்ட, துயரம் - துஃகத்தை, காத்து - போக்கடித்து, அளித்த - ரக்ஷித்த, செம் - சிவந்த, கண் - நேத்ரத்தையுடைய, மால்கண்டாய் - ஸர்வேச்வரன் கிடாய்; தெளி - இதைநன்ருய் அறி. (உகூ)

வ்யா.—அவ.—இருபத்தொன்பதாம்பாட்டு.—(இறையும்) ஐச்வர்யங்கண்டு அஞ்சவேண்டா; ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபமென்கிருர்.

(இறையும்) பரமபதத்திலிருப்பைச் சொல்லுகிறது. (நிலனுமித்யாதி) ஜகதாகாரனுய் லீலாவிபூதி யுக்தனனபடி சொல்லுகிறது. (பிறைமருப்பிலித்யாதி) பிறைபோலும் கொம்பையுடைத்தாய், ஜாத்யுசிதமான கண்ணையுடைத்தாய், பெருத்த ஆனையினுடைய. (படுதுயரங் காத்தளித்த) ஆனைக்குப்போரும்படியான துயரைப் போக்கி ரக்ஷித்த. (செங்கண்மால்கண்டாய் தெளி) வாத்ஸல்யாம்ருதத்தை வர்ஷியாநின்ற கண்ணையுடையனன ஸர்வேச்வரன். (தெளி) இவனுக்கு ஆஶ்ரிதபாரதந்த்ர்யமே ஸ்வரூபமென்னுமிடத்தை புத்திபண்ணு.

அவ.—ஐச்வர்யங்கண்டு * வெருவாதே சீலத்தையநுஸந்தியென்கிருர்.

(இறையும்) நியாமகனுய்க்கொண்டு பரமபதத்திலிருக்கும். (நிலனுமித்யாதி) இந்த விபூதியையுடையனு யிருக்கிறவிருப்பு. (மால் யானை) உடம்பில் பெருமை † பாடாற்ற வொண்ணுமை. (அளித்த) புண்பட்டத்தை ஸ்பர்சித்தருளினபடி. (செங்கண்) வாத்ஸல்யம். (மால்) அரைகுலையத்தலை குலையவந்து தோற்றினபடி. அவன், தம்மை "ராஶுவஃ - மாசுசஃ" என்ற திருவுள்ளத்தை, தாம் "ராஶுவஃ-மாசுசஃ" என்கிருர். வாசலைத்திறந்து ஸுவப்பாரைப்போலே பெறுகைக்கு அங்கும் போகவேண்டா; இசைவே வேண்

* வெருவாதே - பயப்படாதே.

† பாடாற்ற - ஸஹிக்க.

டுவது; ஆர்த்தியேவேண்டுவது. அவனே வாராவிடில் ஸமாப்யதிக தரித்ரனே அவன். மற்றவனைப்பெற உபாயமுண்டோ. வாஸனையாலே "அம்மே" என்பாரைப்போலே அழைத்ததித்தனை. (உகூ)

அரு.—இருபத்தொன்பதாம் பாட்டு.—(இறையும்) மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (ஐஸ்வர்யங் கண்டித்யாதி). தெளிவு போருமோவென்ன; அருளிச்செய்கிறார் (வாசலைத்திறந்தித்யாதி). இசைவுமாத்ரத்திலே வரக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (அவனே வாராவிடி லித்யாதி). ஸமாப்யதிக தரித்ரனுகப் பொருனென்றபடி. ஸ்ரீ கஜேந்த்ராழ்வான் அழைத்தானே யென்ன; அருளிச்செய்கிறார் (வாஸனையாலேயித்யாதி). (உகூ)

**தெளிதாக வுள்ளத்தைச் செந்நிறீஇ, ஞானத்**
**தெளிதாக நன்குணர்வார் சிந்தை - எளிதாகத்**
**தாய் நாடு கன்றேபோல் தண்டுழா யானடிக்கே**
**போய் நாடிக்கொள்ளும் புரிந்து.** (௩௰)

ப-உ. தெளிதாக-கலக்கம்போம்படி, உள்ளத்தை - மநஸ்ஸை, செம் - நன்றாக, நிறீஇ - நிறுத்தி, ஞாநம் - புத்தியால், தெளிதாக - நைர்மல்யமுண்டாம்படி, நன்கு - செவ்வையாய், உணர்வார்- அறிந்தவர்களுடைய, சிந்தை - மநஸ்ஸு, எளிதாக - வருத்தமற, தாய் - (தன்) மாதாவை, நாடு - தேடும், கன்றுபோல் - வத்ஸம்போல், தண் - குளிர்ச்சியுடைய, துழாயான் - திருத்துழாயையுடைய எம்பெருமானுடைய, அடியே - திருவடிகளையே, புரிந்து - விரும்பி, போய் - சென்று, நாடிக்கொள்ளும் - தேடிக்கொள்ளும். (௩௰)

வ்யா.—அவ.—முப்பதாம்பாட்டு.—(தெளிதாக) ஸம்ஸாரத்திலே ஸமாஸ்ரயணீயர் பலருண்டென்று ப்ரமிக்கவேண்டா; ஸம்பந்த ஜ்ஞாநமுண்டாகவே நெஞ்சுதானே அவனை ஆராய்ந்து பற்றும்.

(உள்ளத்தை - தெளிதாக) விஷயப்ராவண்யத்தாலே கலுஷமான ஹ்ருதயத்தினுடைய காலுஷ்யம்போக. (செந்நிறீஇ) செவ்விதாக நிறுத்தி. (ஞானத்தித்யாதி) ஞானத்தாலே எளிதாம்படி, "அவன் ஸ்வாமி நாம் சேஷபூதர்" என்று அவனை உணர்வாருடைய சிந்தை, அநேகம் பசுக்கள் நின்றால் தாயைத் தேடுங் கன்றுபோலே, தண்டுழாயானடியே புரிந்துபோய் நாடிக்கொள்ளும். (செந்நிறீஇ)

இந்த்ரியங்களைத் தான் வெல்லப்பாராதே எம்பெருமான் பக்கலிலே மூட்டி விஷயங்களை ஜயிக்கப்பார்க்கை.

(தெளிதாக) ஜ்ஞாநத்தாலே விசதமான பக்தியாலே. (எளிதாக) விஷயங்களில் பழக்கம்போலே தானே * மூளும்படியாயிருக்கை. தாயாரிருக்கிறபடி. (அடியே) அல்லாதஸ்தலங்களைக்கடந்து. (புரிந்து) விரும்பி. (௩0)

அரு.—மூப்பதாம்பாட்டு.—(தெளிதாக) புரிந்து - பின்னை ஒன்றையும் பாராமல் திரும்பி. "தண்டுழாயான்" என்றத்தைப்பற்ற (தாயாரென்கிறது). (௩0)

புரியொருகை பற்றியோர் பொன்னாழி யேந்தி
அரியுருவு மாளுருவு மாகி - எரியுருவ
வண்ணத்தான் மார்பிடந்த மாலடியை யல்லால், மற்
றெண்ணத்தா னாமோ விமை. (௩௧)

ப-உ.. புரி - சங்கத்தை, ஒருகை - ஒருகையிலே, பற்றி - பிடித்து, ஒருகை - மற்றொருகையிலே, ஓர் - அத்விதீயமான, பொன் - அழகிய, ஆழி-சக்ரத்தை, ஏந்தி-தரித்து, அரியுருவும் -ஸிம்ஹரூபமும், ஆளுருவுமாகி - மனுஷ்யரூபமுமாய், (நரஸிம்ஹமாய்) எரி - அக்நியினுடைய, உருவம் - வடிவுபோன்ற, வண்ணத்தான் - வடிவையுடைய (ஹிரண்யனுடைய), மார்வு - வக்ஷஸ்ஸை, இடந்த - பிளந்த, மால் - விஷ்ணுவினுடைய, அடியல்லால் - பாதத்தையொழிய, இமை - க்ஷணமும், மற்று - வேறுவிஷயத்தை, எண்ணத்தானாமோ - நினைக்கத்தானாமோ. (௩௧)

வ்யா.—அவ.—முப்பத்தோராம் பாட்டு.—(புரியித்யாதி) அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்தால் வேறே யொன்றை ஒருசற்றுப்போது அநுஸந்திக்கலாமோவென்கிறார்.

(புரியித்யாதி) வலம்புரியில், "வலம்" என்கிறவிடத்தைக் குறைத்துக்கிடக்கிறது. (அரியித்யாதி) ஆயுதங்களை யொழியவும் இரண்டு வடிவாலும் பார்ப்பேனென்று வேண்டிக்கொண்டபடியாலே நரத்வ ஸிம்ஹத்வங்களை ஒரு வடிவாகக்கொண்டான். (எரியித்யாதி) அநபிபவநீயனான ஹிரண்யனுடைய மார்வைப்பிளந்த. (மாலித்யாதி) இமைகொட்டி விழிக்கும்போது வேறொன்றை யெண்ணலாமோ.

* மூளும்படி - கூடும்படி.

அன்றிக்கே, நெஞ்சை யநாதரித்து வேறொன்றை யெண்ணப் போமோ. இமை-பார் என்றுமாம்.

அவ.—இவ்விஷயத்தை ஒருக்ஷணகாலம் விட்டிருக்கை ஸாஹஸிகமென்கிறார்.

(புரியித்யாதி) ஹிரண்யன்மேலேவிழுகிறவனை விலக்கினாற்போலே. (பொன்னாழியேந்தி) ஹிரண்யன் திருவுகிருக்கிரையாய்ப் போனான். திருவாழி அழகுக்குப் பிடித்தவித்தனை. (அரியித்யாதி) விசாரியாநிற்கப் பற்றுமே இரண்டு வடிவையுங்கொண்டு தோற்றினபடி. (எரியுருவவண்ணத்தான்) அணுகவொண்ணாதபடி அநபிபவநீயனாயிருந்தபடி. (மால்) கார்யப்பாட்டாலன்றியே பிள்ளை பக்கல்வ்யாமோஹத்தால் கீண்டான். (இமை)பாரென்னவுமாம், (௩௧)

அரு.—முப்பத்தோராம்பாட்டு.—(புரி) இரண்டு வடிவாலும் கேவலஸிம்ஹத்தாலும் கேவல மநுஷ்யனாலும். இமை இமைகொட்டுதல்; பார்த்தல்.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (இவ்விஷயத்தை யித்யாதி). (பற்றி) ஹிரண்யன்மேலே போகிற சங்கை; பற்றி, - வாங்கியென்கிறபடி. (௩௧)

இமையாத கண்ணா லிருளகல நோக்கி
அமையாப் பொறிபுலன்க ளைந்தும் - நமையாமல்
ஆகத் தணைப்பா ரணைவரே, ஆயிரவாய்
நாகத் தணையான் நகர். (௩௨)

ப-உ. இமையாத - ஸங்கோசமில்லாத, கண்ணால்- (உள்) கண்ணால், இருள் - அந்தகாரம் (அஜ்ஞாநம்), அகல - போம்படி, நோக்கி - பார்த்து, அமையா - அடங்காத, பொறிஐந்தும் - இந்த்ரியங்களைந்தும், புலன்களைந்தும் - (தஜ்ஜந்ய) ஞானங்களைந்தும், நமையாமல் - உபத்ரவம்செய்யாமல், ஆகத்து - ஹ்ருதயத்தில், அணைப்பார் - (அவனை) சேர்ப்பார், ஆயிரவாய் - ஸஹஸ்ர வக்த்ரத்தையுடைய, நாகத்தணையான், ஆதிசேஷனைப்படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனுடைய, நகர் - பட்டணத்தை, அணைவர் - சேருவர்கள். (௩௨)

வ்யா.—அவ.—முப்பத்திரண்டாம் பாட்டு.—(இமையாத வித்யாதி) அவன்மேல்விழ விலக்காதார்க்கு இந்த்ரியஜயம்பண்ண சக்தரன்றாகிலும் கிட்டலாமென்கிறார்.

(இமையாதகண்ணால்) "கண்" என்றும் - "உட்கண்" என்றும்-சொல்லக்கடவது. அதில் உட்கண்ணாலே. "உநஸாதூ விஶு ஷேந - மநஸாது விசுத்தேந" என்னும்படி. (இருளகல நோக்கி) அஜ்ஞாநாந்தகாரம் போம்படியாக நோக்கி. (அமையாவித்யாதி) அமைக்கப்போகாத இந்த்ரியங்களைந்தும். (நமையாமல்) ஜயியாதிருக்கச்செய்தே. (ஆகத்தணைப்பார்) அவன்மேல்விழ விலக்காதவர்களனைவரும். (அணைவரே ஆயிரவாய் நாகத்தணையான் நகர்) என்கிறவித்தால், ஒருவனே யெல்லாவடிமைகளும் செய்யவேணுமென்னு மிடமும் ஒரு தேசவிசேஷமுண்டென்னு மிடமும், அத்தேசமே ப்ராப்யமென்னுமிடமும் சொல்லுகிறது.

அவ.—ஸர்வேச்வரனுடைய பரமபதம் ஆஶ்ரயியாதார்க்குக் கிடைக்குமோ; ஆஶ்ரயித்தால் பேரவிரகுண்டோ? ருசிமாத்ரமுடையார் அவனாலே பெறுமித்தனையென்றும், அவனல்ல தில்லையென்றும்.

(இமையாத கண்) நெஞ்சென்னுமுட்கண். திருவாசலைநீக்கி அவனையும் தன்னையும் உள்ளபடியறிகை, (அமையா) திரியவிடுவிக்கவொண்ணாத பொறியைந்தும் புலனைந்தும். (நமையாமல்) நியமியாமல். (ஆகத்தணைப்பார்) * மூலையடியென்னுதல்; அவன் மேல்விழா நின்றால் இறாயாமலென்னுதல். (நாகத்தணை) பர்யங்கவித்யை. (௩௨)

அரு.—முப்பத்திரண்டாம்பாட்டு.—(இமையாத)"தெளிதாக" என்கிறபாட்டிலே "செங்கிறீஇ" என்று இந்த்ரியஜயத்தைச்சொன்னார்; இப்பாட்டில் அதில்லாவிட்டாலுமென்கிறார். (அவன்மேல் விழவித்யாதி) ஆகம் - மநஸ்ஸு.

அர்த்தசிக்ஷா பூர்வகமாக மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார் (ஸர்வேச்வரனுடைய வித்யாதி). ஆஶ்ரயியாதார்.—ஸம்ஸாரிகள். ஆஶ்ரயித்தார்-உபாஸகர். ருசியுடையார் - ப்ரபந்நர். "அணைவரே" என்றது பிரிநிலையாய், அணையார் என்றாய், ஆகத்தை - ஸ்த்ரீகள் தேஹத்தை அணைத்து மூலையடியே திரியும் ஸம்ஸாரிகள் பரமபதத்தைக் கிட்டாரென்னுதல். அன்றியே, "அணைவரே" என்றது தேற்றமாய், இந்த்ரிய ஜயம்பண்ணாவிட்டாலும் அவனை ஹ்ருதயத்திலேவைக்குமவர்கள் பரமபதத்தைக் கிட்டுவரென்னுதல் (௩௨)

* மூலையடி - யதேச்ச ஸஞ்சாரம்

‡. இறையாதபடி - பின்வாங்காதபடி

நகரமருள் புரிந்து நான்முகற்குப், பூமேல்
பகரமறை பயந்த பண்பன் - பெயரினையே
புந்தியால் சிந்தியா தோதி யுரு வெண்ணும்
அந்தியா லாம் பய னங்கென். (௩௩)

ப-உ. பூமேல் - (நாபீகமல) புஷ்பத்தின்மேல், நான்முகற்கு - சதுர்முகனான ப்ரஹ்மாவுக்கு, நகரம்-இருப்பிடத்தை, அருள்புரிந்து - க்ருபைசெய்து கொடுத்து, பகர - (பிறர்க்கு) உபதேசிக்கும்படி, மறை - வேதத்தை, பயந்த - உபகரித்த, பண்பன் - நல்லகுணங்களையுடையவனுடைய, பெயரினை - திருநாமத்தை, புந்தியால் - புத்தியினால், சிந்தியாது - த்யாநியாதே, ஓதி - ஜபித்து, உருவெண்ணும் - கணக்கெண்ணும், அந்தியால்-ஸந்த்யாவந்தநாதி கர்மத்தால், அங்கு-அவ்விடத்தில், ஆம் - உண்டாகிற, பயன் - ப்ரயோஜநம், என்-ஏது.

வ்யா.—அவ.—முப்பத்துமூன்றாம்பாட்டு.—(நகரம்) ஸர்வேச்வரனை நெஞ்சாலே ஆதரியாதே பண்ணுகிற கர்த்தவ்யதந்த்ரத்தால் என்ன ப்ரயோஜநமுண்டென்கிறார்.

(நான்முகற்குப் பூமேல் நகரமருள்புரிந்து) (பகரவித்யாதி) பிறர்க்கு ஓதுவிக்கும்படி ப்ரஹ்மாவை ஓதுவித்த நீர்மையையுடையவனுடைய. செல்வப்பிள்ளையைத் தேவைக்கு ஓதுவிக்குமாப்போலே. (பெயரினையே புந்தியால் சிந்தியாது) அவனுடைய திருநாமங்களையே நெஞ்சால் நினையாது. (ஓதியித்யாதி) அல்லாதவற்றை யோதிச் சென்று அவ்வுருவையெண்ணும் ஸந்த்யாவந்தநாதிகளால் என்ன ப்ரயோஜநமுண்டு. எம்பெருமானுக் குடலல்லாத கேவலஸந்த்யை வ்யர்த்தம்.

(நகரமித்யாதி) திருநாபீகமலத்தைக்*கலவிருக்கையாக ப்ரஸாதித்தான். ப்ரஹ்மாவுக்கு ஜந்மதேசத்தையே கொடுத்தான். அந்தரங்கர்க்குக் கிட்ட மாளிகை சமைக்குமாப்போலே. (பகரவித்யாதி) அந்த வேண்டப்பாட்டுக்குமேலே நாட்டாரை ஓதுவிக்கைக்கு வேதத்தைக் கொடுத்தான். (பண்பன்) அந்நீர்மை மறக்கவொண்ணாமை. (பெயரித்யாதி) ஸ்வாபாவிகஸம்பந்தத்தை யநுஸந்தித்து அவனை யுகப்பியாதே. (ஆம்பயனங்கென்) எம்பெருமானை யகலுகையே பலித்துவிடுவது.

---

* கலவிருக்கை - ஸபாஸ்தாநம்.

(பெயரினையே) அவன் குணங்களுக்கு வாசகமான திருநாமம். (ஓதியித்யாதி) அஹ்ருதயமாகப் பண்ணும் ஆயாஸரூபமான கர்மத்தைப் பற்றுவதே. (௩௩)

அரு.—முப்பத்துமூன்றும்பாட்டு.—(நகர்)வேண்டப்பாடு-மேன்மையாய், அத்தாலே கிட்டவைக்கும்படியான அதிசயம்.

**என்னெருவர் மெய்யென்ப ரேழுலகுண்டு, ஆலிலையில்**
**முன்னெருவ னுய முகில் வண்ணு - நின்னுருகிப்**
**பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால், பேரமர்க்கண்**
**ஆய்த்தாய் முலைதந்தவாறு.** (௩௪)

ப-உ. ஏழுலகு - ஸப்தலோகங்களையும், உண்டு - அமுதுசெய்து, ஆலிலையில் - வடபத்ரத்தில், முன் - ஆதியில், ஒருவனுய - அத்விதீயனுயிருந்த, முகில் - மேகப்போன்ற, வண்ணு - வடிவையுடையவனே! முலைதந்தாள் - ஸ்தநம்கொடுத்த, பேய்த்தாய் - தாயாய் வந்த பிசாசமானபூதனை, - பேர்ந்திலள் - திரும்பமாட்டாமல் பிணமாய்க்கிடந்தாள்; பேர் - பெரிய, அமர்க்கண் - யுத்தபூமியிலே, ஆய்த்தாய்-இடைத்தாய் (யசோதை), நின்-உன் விஷயத்தில், உருகி-ப்ரீதிபண்ணி, முலைதந்தவாறு - ஸ்தநம்கொடுத்த ப்ரகாரத்தை, ஒருவர் - அத்விதீயர் (ருஷிகள்), மெய்யென்பர் - பரமார்த்தமென்று சொல்லுவர்; என் - அது எங்ஙனே. (௩௪)

வ்யா.—அவ.—முப்பத்துநாலாம்பாட்டு.—(என்னெருவர்) ப்ரளயத்தில் லோகத்தை யெல்லாம் தன் திருவயிற்றிலே வைத்து ஒரு * பவனை ஆலிலையிலே தனியே கண்வளராநின்ற ஈஸ்வரனுக்கு அஞ்சுகிற யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹம் ஒரு ஸ்நேஹமே! என்கிறார்.

(என்னெருவர் மெய்யென்பர்) இத்தை ஒருவர் மெய்யென்னும்படி யெங்ஙனே யென்னவுமாம். "என்" என்று-"எத்திறம்" என்னும்படியே சொல்லவுமாம். (ஒருவர் மெய்யென்பர்) அறிந்தருஷிகளிலே சிலர், அர்த்தவாதசங்கையில்லை, இது மெய்யென்பர். (ஏழுலகித்யாதி) ஏழுலகத்தையும் திருவயிற்றிலே வைத்து ஆலிலையிலே. (முன்) முன்பு தனியேயாய். ஶ்ரமஹரமான வடிவையுடையவனே. (பேயித்யாதி) பேயானதாய் முலையைத்தந்து திருமேனியினின்றும் போதே கிடக்கச்செய்தே. (நின்னுருகி பேரமர்க்கண் ஆய்த்தாய்

* பவனை - அப்போதுண்டான, (க)
முகிழ்விரியாத. (உ)

முலேதந்தவாறு) உனக்கு நல்லவளாய், யசோதைப்பிராட்டி, விஷத்துக்கு அம்ருதமாக முலேதந்தவாறு ; இதென்ன ஆச்சர்யம்.

அவ.—ஸோபாதிகமாகவன்றியே ஸ்வபாவத ஏவ ஸ்நேஹிக்குமவனை நினைக்கிறார்.

(என்) எத்திறம். (ஒருவர் மெய்யென்பர்) விலக்ஷணர் மெய்யென்பர். இத்தை ஒருவர் மெய்யென்பதே! "என்" என்றபோது ஜகத்தில் நடையாடுவதொரு ஸ்நேஹமாகிலன்றோ மெய்யென்னலாவது. (ஏழித்யாதி) நீ செய்யும் செயலுக்கு அடைவுண்டாகிலிறே உன்னை ஆஶ்ரயித்தார் செயலுக்கு அடைவுண்டாவது. (ஒருவனுய) பரிஹரிக்கத் தாயும் தமப்பனும் ஒருவருமில்லை. (முகில்வண்ணா)பரிவர் வேண்டியிருக்கிறபடி. (நின்னுருகி) உன் குணங்களுக்கு உருகி. (பேர்ந்திலளால்) அப்பிணம் கிடக்கச்செய்தே. அப்பேயின் கையில் அகப்பட்ட தடையப்படுத்திக் கால்நடைதந்து, நஞ்சுக்குப் பரிஹாரமாக அம்ருதமான முலேயைக்கொடுத்தபடி. (௩௪)

அரு.—முப்பத்துநாலாம்பாட்டு.—(என்னொருவர்)"ஏழூலகுண்டாலிலேயில் முன்னொருவனுயமுகில்வண்ணா, பேய்த்தாய்முலேதந்தாள்பேர்ந்திலளால், நின்னுருகி, பேரமர்க்கண் ஆய்த்தாய் முலேதந்தவாறு, என்னொருவர்மெய்யென்பர்" இத்தை ஒருவர் மெய்யென்னும்படி என்-எங்ஙனே யென்று க்ஷேபமாதல் ; ஒருவர் மெய்யென்பர், என்-இதென்ன நீர்மை தான் என்று ஈடுபாடாதல். (பேரமர்க்கண்) பெரிதாயிருக்கிற யுத்தஸ்தலத்திலே. (பேய்ச்சியுண்டு) அவள் பிணமாய்க் கிடக்கிற அவஸ்தையிலே என்னுதல். பெரிய அமர்போலே ஒன்றுக் கொன்று பொராநிற்கிற கண். அந்த அவஸ்தையைக் கண்டு துஃகத்தாலே பார்த்த கண்ணையுடைய யசோதை யென்னுதல்.

மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார். (ஸோபாதிகேத்யாதி) க்ஷேபபரம். இத்தையருளிச் செய்கிறார். (ஒருவரித்யாதி) மெய்யென்னப் போகாமைக்கு ஹேதுவருளிச் செய்கிறார் (என்னென்றபோதித்யாதி). ஜகத்திலே பிணத்திலே யிருக்கச்செய்தே கண்டால் பயப்படுகை யொழிய எடுத்து முலே கொடுக்கப்போமோ ; ஆகையாலே இது பொய்யென்றபடி. (அடையப்படுத்தி) அவள் * உறுக்கி உண்ணச்சொன்னாற்போலே இவளும் விஷத்துக்கு மாற்றாகையாலே உறுக்கியுண்ணச்சொல்லி. (௩௪)

* உறுக்கி – அதட்டி.

ஆறிய வன்பி லடியார்த மார்வத்தால்
கூறிய குற்றமாக் கொள்ளல்நீ - தேறி
நெடியோ யடியடைதற் கன்றே, ஈரைந்து
முடியான் படைத்த முரண்.　　(௩டு)

ப-உ. ஆறிய - தணிந்த, அன்பு - ப்ரீதி, இல் - இல்லாத, அடியார் - தாஸபூதர், தம்-தம்முடைய, ஆர்வத்தால் - ஸ்நேஹத்தால், கூறிய - (ஸ்வப்ரயோஜநமாய்) சொன்ன சொற்களை, நீ - நீ, குற்றமாகக் கொள்ளல் - தப்பாகக்கொள்ளாதொழிய வேணும்; ஈரைந்து முடியான் - பத்துத்தலைகளையுடைய ராவணன், படைத்த - செய்த, முரண் - பகை, தேறி - (க்ரமமாய்) தெளிந்து, நெடியோயடி - பெரியனான உன்னுடைய திருப்பாதங்களை, அடைதற்கன்றே - கிட்டுகைக்காகவன்றோ. (௩டு)

வ்யா.—அவ.—முப்பத்தைந்தாம்பாட்டு.—யசோதைப் பிராட்டியோபாதி ஸ்நேஹமின்றிக்கே, அவளுடைய ஸ்நேஹத்தை யுடைத்தாக பாவிக்கிறவர்களுடைய குற்றத்தைப் பொறுத்தருளவேணுமென்கிறார்.

(ஆறியவன்பிலடியார்) * எறிமறிந்த பக்தியில்லாதவர்கள். (தம் ஆர்வத்தால் கூறிய) தங்களுடைய ஸ்நேஹத்தாலே சொன்னவற்றை. (குற்றமாக்கொள்ளல்) நீ குற்றமாகக்கொண்டருளாதொழியவேணும். நீர்குற்றத்தைச் செய்துவைத்து, "குற்றமாகக்கொள்ளாதொழியவேணும்" என்னப்போமோவென்னில்; (ஈரைந்துமுடியான் படைத்த முரண் - தேறி நெடியோய் அடியடைதற்கன்றே) ராவணன் பண்ணின ப்ராதிகூல்யம் க்ரமத்திலே சிசுபாலனுக்கு உன்னையடைகைக்கு உடலாயிற்றில்லையோ. ப்ராதிகூல்யமாநுகூல்யமாய்ப் பலித்தால். ஆநுகூல்யாபாஸம்ஆநுகூல்யமாகத் தட்டுண்டோ. "தேறி" என்றது, செய்த குற்றத்தைக் குற்றமாகக்கொள்ளாதொழியவேணுமென்னவுமாம். அன்றிக்கே, "தேறி" என்றது, சிசுபாலன் கையும் திருவாழியுமாயிருந்தபடி யென்னென்று நினைத்துக்கிடக்க, அது அந்திமஸ்ம்ருதியானாற்போலே யாகவுமாம்.

(ஆறியவன்பு) எறிமறிந்து தன்னைப்பேணாதே அத்தலைக்குப் பரிகை. யசோதைப்பிராட்டி பரிவு தம்முடைய ப்ராதிகூல்யத்தோ

* எறிமறிந்த - சாந்தமான.

டொக்குமென்கை. அவனுடைய ப்ராதிகூல்யம் தேறி அடைகைக்கு உடலாயிற்றில்லையோ. "செய்த குற்றம் நற்றமாகவேகொள்" பொறுக்கவே அடைய நன்றுமென்றிருக்கிறுர். (நெடியோய்) ஆநுகூல்ய லேசமுடையார்திறத்து நீ யிருக்குமிருப்பு எல்லைகாணப் போமோ. (௩௫)

அரு.—முப்பத்தைந்தாம்பாட்டு.—(தேறி) கலங்கினது தேறுமாப்போலே க்ரமத்திலே யென்றபடி. ராவணனுடைய இரண்டாஞ் ஜந்மமான சிசுபாலனுக்கும்.

(அன்பின்) இல் - அல்லாமையாய், தனக்குப் பரிவரில்லையோ வென்ன; அருளிச்செய்கிறுர் (யசோதைப்பிராட்டி யித்யாதி). இத்தனை ப்ராதி கூல்யமுடைய வுமக்குக்கிட்டப்போமோவென்ன; அருளிச்செய்கிறுர் (அவனுடைய வித்யாதி). (௩௫)

**முரணை வலி தொலைதற்காமென்றே, முன்னம்**
**தரணி தனதாகத்தானே - இரணியனைப்**
**புண்ணிரந்த வள்ளுகிரால் பொன்னாழிக் கையால், நீ**
**மண்ணிரந்து கொண்ட வகை. (௩௬)**

ப-உ. முன்னம் - முன்பே, தரணி - பூமியை, தனதாகத்தானே - ஸ்வீயமாகவே அபிமாநித்திருந்த, இரணியனை - ஹிரண்யகசிபுவை, புண்ணிரந்த - புண்படும்படி பிளந்த, வள் - கூர்மையான, உகிரால் - நகங்களோடுகூடிய, பொன் - அழகிய, ஆழி - சக்ரத்தையுடைய, கையால் - கரத்தால், நீ - நீ, மண் - பூமியை, இரந்துகொண்ட - யாசித்த, வகை - ப்ரகாரம், முரணை - கொடுமையான, வலி - வல்லமையை, (அஹங்காரமமகாரங்களை) தொலைதற்காமென்றே - நசிப்பிக்கலாமென்றே. (௩௬)

வ்யா.—அவ.—முப்பத்தாறும்பாட்டு.—(முரணை) யசோதைப்பிராட்டி ஸ்நேஹமின்றியிலே யிருக்கச்செய்தே அவளுடைய ஸ்நேஹமுண்டாக பாவித்துச்சொன்னவற்றைக் குற்றமாகக்கொள்ளாதொழியவேணுமென்று நீர் இரக்கவேணுமோ? தன்னுடைமையை வேறொருத்தனதாக்கிவந்து இரக்குமவனுக்கு.

(முன்னமித்யாதி) முன்பே பூமியடையத் தன்னதாக அபிமாநித்திருந்த ஹிரண்யனைப்புண்படுத்திப் பிளந்த வுகிரையுடைத்தா

யிருந்துள்ள பொன்னுழிக்கையால், (நீயித்யாதி) ப்ரகாரம். (முரணை வலி தொலைதற்காமென்றே) ஸர்வேஶ்வரனாயிருந்துள்ள நம்முடைய அர்த்தித்வந்தோற்றநின்ற ஸௌலப்யத்தைக்காண நாட்டாருடைய அஹங்கார மமகாரத்தாலே பிறந்ததண்மை நெகிழுமன்றே நீயிப்படி. செய்தது. (முன்னம் தரணிதனதாகத்தானே) முன்னே பூமியடங்கலும் தன்னதாக அபிமானித்த மஹாபலிபக்கலிலே யென்னவுமாம்.

(முரணையித்யாதி) யசோதைப் பிராட்டியைப்போலே எங்களை உருக்கலாமென்றே. (முன்னமித்யாதி) தன்னதாக வுகக்குமாகில், நாம் இன்று பெற்றோமாக வமையாதோ வென்று இரந்துகொண்ட வகை. (௩௬)

அரு.-- முப்பத்தாறும்பாட்டு.—"மண்ணிரந்துகொண்டவகை முரணைவலி தொலைதற்காமென்றே" என்றந்வயம். ப்ராதிகூல்யத்தினுடைய மிடுக்கைப்போக்குகைக்காக வென்படி.

இத்தையவதாரிகையிலே யருளிச்செய்கிறார் (யசோதைப்பிராட்டி யித்யாதி). எங்களை உருக்கலாமென்றது கீழ்ப்பாட்டிலே-அவனுடைய சேஷ்டிதத்தைக் கண்டவளாகையாலே எங்களையுமுருக்கலாமென்று நீ மண்ணிரந்துகொண்டது, நாங்கள் வன்னெஞ்சராகையாலே உருகமாட்டோமென்றபடி, இரக்கவேண்டுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (தன்னதாக வுகக்குமாகிலித்யாதி). (௩௬)

**வகை யறு நுண் கேள்வி வாய்வார்கள், நாளும்**
**புகை விளக்கும் பூம் புனலு மேந்தித்-திசைதிசையின்**
**வேதியர்கள்சென் றிறைஞ்சும் வேங்கடமே,வெண்சங்க**
**மூதியவாய் மாலுகந்த வூர்.** (௩௭)

ப-உ. வகையறும் - உபாயாந்தரங்களைச் சேதிக்கும்படி, நுண்-ஸூக்ஷ்மமான அர்த்தங்களையுடைய, கேள்வி - ஶ்ரவணத்தை, வாய்வார்கள் - அடைந்திருக்கும், வேதியர்கள் - வேதார்த்தமறிந்தவர்கள், நாளும் - தினந்தோறும், புகை - தூபமும், விளக்கும் - தீபமும், பூம்புனலும் - புஷ்பத்தோடு கூடின ஜலத்தையும், ஏந்தி - தரித்து, திசைதிசையும் - திக்குகள்தோறும், சென்று - போய், இறைஞ்சும் - ஆஶ்ரயிக்கும், வேங்கடமே - வேங்கடமென்கிற திருமலையே, வெண்-வெளுத்த, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, ஊதிய -

த்வநிப்பித்த, வாய் - திருப்பவளத்தையுடைய, மால் - ஸ்வாமி, (க்ருஷ்ணன்) உகந்த - விரும்பின, ஊர் - தேசம். (௩எ)

வ்யா.—அவ.—முப்பத்தேழாம் பாட்டு. (வகையித்யாதி) நாம் அந்த அவதாரத்துக்குப் பிற்பட்டோமிறே; அது தீர்த்தம் ப்ரஸாதித்துப் போயிற்றிறே யென்ன; அவன்றான் ஸம்ஸாரத்திலே திருமலையையுகந்துவந்து நிற்கவும் அதுக்கு வெறுக்கவேணுமோ வென்கிறது.

(வகையறும்) "வஹுஶாவாஹ்யநந்தாஶ்ச - பஹுசாகாஹ்யநந்தாச்ச" என்னும்படி ப்ரயோஜநாந்தர பரமான தேவதாந்தர ஸ்பர்சியான வகையறுகை. (நுண்கேள்விவாய்வார்கள்) ஸ்தூலமாகவன்றிக்கே ஶ்ரவணவேளையிலே ஸூக்ஷ்மமானகேள்வி வாய்த்தவர்களான. (வேதியர்கள்) வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். (புனையித்யாதி) புஷ்பாத் யுபகரணங்களைக்கொண்டு. (திசையித்யாதி) ஸர்வதோதிக்கமாக வந்து தொழப்படும் திருமலை. (வெண்சங்கமித்யாதி) பாரதஸமரத்திலே அர்ஜுநன் தொடுத்துவிட்ட அம்புகளுக்கு எதிரிகள் எட்டுமளவன்றியே யொழிந்தால் ஒருவராலும் * இறாய்க்கப்போகாதபடி நின்ற நிலையிலே † முழுக்காயாக அவியும்படிக் கீடாக ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாயிலேவைத் தூதின க்ருஷ்ணனுகந்தவூர்.

(வகையறும்) முழுகுவாரைக் கண்டவாறே முழுகி, ஜபிப்பாரைக்கண்டவாறே ஜபியா. (நுண்கேள்வி) ஸூக்ஷ்மார்த்தம் கேட்டுக் கைபுகுந்தார். "வஞ்சலம்ஹிமந꞉ க்ருஷ்ண - சஞ்சலம்ஹிமந꞉ க்ருஷ்ண." (திசைதிசையில்) ஸர்வதோதிக்கமாக. (வேதியர்கள்) வேததாத்பர்யம் கைப்பட்டார். (வெண்சங்கம்) ஆஶ்ரிதபக்ஷபாதி வர்த்திக்கிறவூர். (௩எ)

அரு.—முப்பத்தேழாம்பாட்டு.—அதுக்கு-பெறப்பட்டதுக்கு. வகையறுகை. ப்ரயோஜநாந்தர தேவதாந்தரங்களைப் ப்ரதிபாதிக்கிற சாகைகளையும் தத்பரமான புத்திகளையும் அறுகை. இவ்விடத்துக்கு வகையறுகை - ஸாதநாந்தரங்களை யறுகை. ஸூக்ஷ்மார்த்தம் கைபுகுருகை யருமையோவென்ன; அருளிச்செய்கிறார் (வஞ்சலம்ஹிமந꞉-சஞ்சலம்ஹிமந꞉ என்று). (௩எ)

---

* இறாய்க்கப்போகாதபடி - ப்ரதிக்ரியை பண்ணப்போகாதபடி.
† முழுக்காயாக அவியும்படி - உருதெரியாமல் அழியும்படி.

ஊரும் வரியரவ மொண்குறவர் மால்யானை
பேர வெறிந்த பெருமணியை · காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே, மேலசுரர்
எம்மென்னு மால திடம். (௩அ)

ப-உ. ஊரும் - ஸஞ்சரிக்கிற, வரி - ரேகைகளையுடைய, அரவம் - ஸர்பமானது, மால் - பெரிய, யானை - கஜம், பேர - கிளம்பும்படி, ஒண் - விலக்ஷணரான, குறவர் - வேடர், எறிந்த - வீசின பெரு-ஶ்லாக்யமான, மணியை - மாணிக்கத்தை, காருடைய - மேகத்தோடுகூடின, மின்னென்று - மின்னலென்று, (எண்ணி) புற்று - வல்மீகத்தை, அடையும் - ப்ரவேசிக்கும், வேங்கடமே - திருமலையே, மேல - உத்தமரான, சுரர் - தேவர்கள், எம்மென்னும் - எங்களதென்று, மாலதிடம் - அபிமாநித்திருக்கும், தேசம். (௩அ)

வ்யா.—அவ.—முப்பத்தெட்டாம்பாட்டு.—(ஊரும்)பரமபதத்திலுள்ளாரடைய உத்தேஶ்யரான வோபாதி திருமலையில்வர்த்திக்கும் ஸர்பம், குறவர், பட்டிதின்னு மானையடைய இவர்க்குத் தேஶ்யமாயிருக்கிறபடி. "எம்பெருமான் பொன்மலைமே லேதேனுமாவேனே."

(ஊரும்) ஒரு கார்யப் பாடறத் திருமலையிலே ஊர்ந்து திரிகையே உத்தேஶ்யமாயிருக்கிறபடி. (வரியரவம்) பாம்பினுடைய உடம்பில்வரி திருவேங்கடமுடையானுடைய திருமேனியில் ஓரவயவத்தோபாதி உத்தேஶ்யமாயிருக்கிறபடி. (ஒண்குறவர்) திருவேடுவர்க்கு ஒண்மையாவது - "இவர்கள் பாட்டன் பாட்டனிலே யொருத்தன் பூமியிலே இறங்கினன்" என்னும் பழியின்றிக்கே யிருக்கை. (மால்யானையித்யாதி) மலைபோலேயிருந்துள்ள ஆனை, தன்னை ஒருமலை சலித்தாற்போலேயிருக்கப் போம்படிக்கிடாக. (எறிந்த பெருமணியை) மஹார்க்கமானமணியை. ஆனை மேகம்போலே யிருக்கையாலும், அதிலே பட்டமணி மின்போலே யிருக்கையாலும், பாம்பானது, இடிக்கஞ்சுகையாலே மின்னின வநந்தரம் இடி யுண்டாமென்றுகொண்டு அதுக்கு முன்னே புற்றடையா நிற்குந்திருமலை. (மேல சுரர் எம்மென்னுமாலதிடம்) ஆக்கரான தேவர்களன்றியே, மேலான, சுரர் - நித்ய ஸூரிகள் - எம்மென்னுமாலதிடம் - * அஹமஹமிகயா விரும்புமிடம்.

அவ.—அங்கே புக்காலோவென்னில் உள்ளேப்புகவொட்டா நின்றதோ.

(ஊரும்) * ஞாதரிமஹூதி - ப்ராதரிகச்சதி போலே. (வரி) அதுவும் ஸ்ப்ருஹணீயம். (மால் யானை) மலைநடந்தாற்போலே. (பேர) ஆமிஷார்த்தமாக வந்து மலைபேர்ந்தாற்போலே பேர. (பெரு மணியை) மலைபோலே யிருக்கை. (ஊரும் வரியரவம்) இவை ஸ்வை ரஸஞ்சாரத்தாலே ஸௌபாக்யம் கொண்டாடப் புறப்பட்டு. (புற்ற டையும்) இடிக்கு முன்னான மின்னுகையாலே. (௩அ)

அரு.—முப்பத்தெட்டாம்பாட்டு.—* என்னென்ற-என்னதென்ற. மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார். (அங்கே புக்காலித் யாதி). (உள்ளுப்போகவொட்டாது) ஊரில் போக்யதையென்றபடி.

இடந்தது பூமி யெடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனை முன் னஞ்ச - கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது. (௩௯)

ப-உ. பேர் - பெரிய, ஓதம் - அலைகளையுடைய கடல்போன்ற, வண்ணர் - வடிவையுடையவர், இடந்தது - தோண்டினது, பூமி - தரணி; எடுத்தது - தரித்தது, குன்றம் - மலை ; கஞ்சனை - கம்ஸனை, முன் - முற்காலத்தில், அஞ்ச - பயப்படும்படி, கடந்தது - ஆக்ரமி த்தது; நீர்-பெரிய ஜலத்தையுடைத்தாய், ஓதம் - அலையெறிகிற, மா- பெரிய, கடல் - ஸமுத்ரத்திலே, கிடந்தது - பள்ளிகொண்டது ; பெரிது - மிகவும், நின்றது - நின்றருளினது, வேங்கடமே - திரும லையே கிடீர். (௩௯)

வ்யா.—அவ.—முப்பத்தொன்பதாம்பாட்டு (இடந்தது) ஆபத் திலே பூமியை ரக்ஷிப்பது, அவதாரங்கள் ஸாது பரித்ராணார்த்தம் துஷ்க்ருத் விநாசார்த்தமாவது, எப்போதும் உகந்து திருமலையிலே நிற்பதென்கிறார்.

(இடந்ததுபூமி)ப்ரளயாபத்திலே பூமியை யெடுத்தவழகு காண லாவது. (எடுத்தது குன்றம்)|கோவர்த்தநோத்தாரணத்திலே அவ்வழ கு காணலாவது. (கடந்ததித்யாதி) கம்ஸனஞ்சும்படி யவனை யழித்த வன்று வெற்றியழகு காணலாவது. (கிடந்ததுவும் நீரோதமாகடலே) கண்வளர்ந்த வழகு காணலாவது ஆழ்ந்த கடலிலே சாய்ந்தபோது. (பேரோத வண்ணர் பெரிது. நின்றதுவும் வேங்கடமே) கடல்போலே

* என்னென்ற-என்றபாடத்தைக்கொண்டும் இந்த அரும்பதம்

ஸ்ரமஹரமான வடிவை யுடையவன், எப்போது முகந்து நிற்பது திருமலையிலே.

(இடந்தது) ப்ரளயத்தாலே வந்த நலிவுதீர. (எடுத்தது) இந்த்ரனால் வந்த நலிவுதீர.(கடந்தது) கம்ஸனால் வந்த நலிவுதீர. (கிடந்ததுவும்) அவதாரத்துக்கு ஏகாந்தமாம். நாம் பெருமானை யுகந்தோமென்று சோற்றையுகப்புதோம், சோற்றை யுகந்தோமென்று நாலும் பத்தும்பட்டினி விடுவுதோம்; ஸ்த்ரீகளை யுகந்தோமென்று சதுரங்கம் பொருதல் உறங்குதல் செய்வுதோம்; ஒன்றிலும் ஸ்நேஹமில்லை. (நகூ)

அரு.—முப்பத்தொன்பதாம் பாட்டு.—ஆழ்வார்கள், ஈஶ்வரனுடையகுணசேஷ்டிதங்களை வாய்புலத்துகையாலே இருந்திலை - அஸ்மதாதிகளுக் கில்லையென்னு மிழவாலே யருளிச்செய்கிருர் (நாம் பெருமானை யித்யாதி). (நகூ)

பெருவில் பகழிக் குறவர் கைச்செந்தீ
வெருவிப் புனம் துறந்த வேழம் - இருவிசும்பில்
மீன் வீழக் கண்டஞ்சும் வேங்கடமே, மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று. (சய)

ப-உ. பெரு - பெருத்த, வில் - தநுஸ்ஸையும், பகழி - பாணத்தையுமுடைய, குறவர் - வேடர், கை - கரத்திலே (பிடித்த), செம் - சிவந்த, தீ - நெருப்பை (கண்டு), வெருவி - பயந்து, புனம் - வயலை, துறந்த - விட்ட, வேழம் - யானையானது, இரு - விசாலமான, விசும்பில் - ஆகாசத்தில் நின்றும், மீன் - நக்ஷத்ரம், வீழ - விழ, (அத்தை) கண்டு - பார்த்து, அஞ்சும் - பயப்படும்படியான, வேங்கடமே - திருமலையே, மேல் - முற்காலத்தில், அசுரர் - அரக்கர்களுக்கு, கோன் - ஸ்வாமியான ஹிரண்யன், வீழ - விழ, (அதை) கண்டு - பார்த்து, உகந்தான் - ஸந்தோஷித்தவன், குன்று - (நித்யவாஸம்பண்ணும்) மலை. (சo)

வ்யா.—நாற்பதாம்பாட்டு. (பெருவில்) திருமலையை யுகக்கிருர். "சுவஷ்ஹ்ரூஹஜநஃ - அவஷ்டப்யமஹத்தநுஃ" என்கிறபடியே, சக்ரவர்த்தித்திருமகன் கையும் வில்லும்போலே பெரியவில்லையும்

தெரிந்த பகழியையுமுடையரான திருவேடுவர். (குறவரித்யாதி) * சூளிலே கொளுத்திக் கையிலே கொடுபோகிற நெருப்பொளியிலே வில்லின் பெருமையையுங் கண்டு நெருப்பு தனக்கு ஆனை யஞ்சும்படியாகவும், பட்டிமேய்ந்த ஆனை இப்புனங்கொய்தாலுமிங்கு வாரேனென்று ஸங்கல்பித்துப்போனது. (இருவிசும்பித்யாதி) வெளியையும் பரப்பையுமுடைத்தான ஆகாசத்தினின்றும் மீன்விழக்கண்டு இனி ஓரிடத்திலும் போக்கில்லையென்று நின்ற நிலையிலே நின்று அஞ்சுகிற திருவேங்கடம். மேல்-பண்டு. (அசுரரித்யாதி)"சிறுக்கனுடையவிரோதிபோயிற்று" என்றுகந்து இன்னமுமாஶ்ரிதவிரோதியேதேனும் வரிலும் பரிஹரிக்கவேணுமென்றவன் பற்றி நிற்கும் திருமலை.

(பெருவிலித்யாதி) இதிலுத்தரார்த்தம் மீன்வீழக் கண்டஞ்சும்-நிலத்திலே நெருப்பை விழவிட்டார்களென்று குறவரெறிந்த கொள்ளிக்கு வெருவினதாகையாலே. (வேங்கடம்) நிர்ப்பயமான தேசம் ; அஸ்த்தானே பயசங்கை பண்ணுமித்தனை. (சο)

அரு.—நாற்பதாம் பாட்டு.—நக்ஷத்ரம் விழுந்தால் பயப்படவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (நிலத்திலே நெருப்பை யித்யாதி). குறவர் பரண்களிலேயிருந்து கொள்ளியை யெறியுமதுகண்டிருக்குமதாகையாலே மீன்விழுகிறத்தையுமவர்களெறிந்தார்களாக நினைத்து பயப்பட்டதென்றபடி. (சο)

குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும்
இன்று முதலாக வென்னெஞ்சே - என்றும்
புறனுரையே யாயினும் பொன்னாழிக் கையான்
திறனுரையே சிந்தித் திரு. (சக)

ப-உ. என் - என்னுடைய, நெஞ்சே - மனமே, என்றும் - ஸர்வகாலமும், புறனுரையேயாயினும் - அந்யபரமான சொல்லாலேயாகிலும் (அஹ்ருதயச் சொல்லாலேயாகிலும்), பொன் - அழகிய, ஆழி - சக்ரத்தை, கையான் - கரத்திலேந்திய ஸர்வேச்வரனுடைய, திறன் - விஷயத்தில், உரையே - (நமஃ - என்கிற) சொல்லையே, சிந்தித்து - த்யானித்து, இரு - ஸ்திரப்படு. இன்றுமுதலாக - இப்பொழுது தொடங்கி, குன்றனைய - மலைபோன்ற, குற்றம் -

* சூளிலே - பந்தத்திலே.

அபராதங்களை - செயினும், அனுஷ்டித்தாலும், குணக்கொள்ளும் - குணமாகஸ்வீகரிக்கும். (சக)

வ்யா.—நாற்பத்தோராம்பாட்டு (குன்றனைய) அவன் குற்றம் பொறுக்கைக்காகத் திருமலையிலே வந்து நின்றான். ஆபிமுக்யத்தைப் பண்ணினாலும் தோஷாம்சத்தைப்பாராதே குணாம்சத்தைக் கொள்ளும். அவனுள்ளவன்றே இவ்வாத்மாவுண்டென்கிறார். இத்தனைநாளும் இத்தைச் செய்யாதொழிவா னென்னென்னில்; (இன்று முதலாக)இவனுக்கே ஸ்வபாவமென்றறிந்த இன்று தொடக்கமாக. (என்னெஞ்சே) எனக்கு ஹிதம் பார்க்கும் நெஞ்சே. ஸஹ்ருதயமாக அவன் குணங்களைப் பேசப்போமோ வென்னில்; (புறனுரையேயாயினும்) அஹ்ருதயமான பேச்சேயாகிலும். ப்ரயோஜந மின்றிக்கே அநர்த்தமாயிற்றாகிலு மென்றுமாம். (பொன்னாழி யித்யாதி) ஸர்வேஸ்வரன் திறத்தில் சப்தங்களையே யறிந்து. (சிந்தித்திரு)க்ருதார்த்தமாயிரு.

அவனோடே ஸம்பந்தமுண்டாகிலும் முன்பு அங்ஙன் செய்தருளாவிடுவானென்னென்னில்; "குற்றம்-குணம்" என்று நினையாமை. (பொன்னாழி) தானே ஸஹ்ருதயமாக்கும். (சக)

அரு.—நாற்பத்தோராம் பாட்டு.—குற்றம் பொறுக்கை ஸ்வபாவமென்றறிந்த இன்றென்றபடி. (சக)

**திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்**
**திருமகட்கே தீர்ந்தவா றென்கொல் - திருமகள்மேல்**
**பாலோதம் சிந்தப் படநாகணைக் கிடந்த**
**மாலோத வண்ணர் மனம்.** (சஉ)

ப-உ. பாலோதம் - பாற்கடலில் திவலை, சிந்த - சிதற, படம் - பணங்களையுடைய, நாகணை - திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, கிடந்த - பள்ளிகொண்ட, மால் - பெரிய, ஓதம் - ஸமுத்ரம் போன்ற, வண்ணர் - வடிவையுடையவருடைய, திருமகள்மேல் - லக்ஷ்மிமேல் (செல்லுகிற), மனம் - திருவுள்ளம், திருமகளும் - லக்ஷ்மியும், மண்மகளும் - பூதேவியும், ஆய்மகளும் - நப்பின்னைப்பிராட்டியும், சேர்ந்தால் - ஸம்ஶ்லேஷித்தால், திருமகட்கே - பெரியபிரா

ட்டியார் விஷயத்திலேயே, தீர்ந்தவாறு - ப்ரீதமானபடி (நடக்கிற படி), என்கொல்! எங்ஙனேதான்! (௬௨)

வ்யா.—அவ.—(திருமகளும்) பாராதே பொறுக்கைக்கடி பிராட்டிமா ரருகே யிருக்கையென்கிறார்.

(திருமகளித்யாதி) அநந்தாழ்வான், "திருமகட்கே தீர்ந்தவாறென்கொல், மண்மகட்கே தீர்ந்தவாறென்கொல், ஆய்மகட்கே தீர்ந்தவாறென்கொல்" என்று பணிக்கும். (டாலோதம் சிந்த) "திருப்பாற்கடலின் குறுந்திவலை திருமுகத்திலே படும்படிக் கீடாகத்திருவநந்தாழ்வான் மேலே கிடந்த மாலோத வண்ணருடைய திருமகள்மேல் வைத்த திருவுள்ளம், திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறென்சொல்" என்றருளிச்செய்வர் பட்டர். பிராட்டியோடு கலந்தபோது, "வஷூஜ ஈாமெஷூ2ீ - புஷ்பாங்கராகைஸ்ஸமம்" என்கிறபடியே அல்லாத பிராட்டிமார் உபகரண கோடியிலே நிற்பர்கள்; அல்லாத பிராட்டிமாரோடு பரிமாறும்போது, இவள் தன்னிடையிலும் முலையிலும், கலந்தாற்போலே யிருக்கும். போகந்தான் உன்மஸ்த்தகமானால் வ்ருத்த கீர்த்தநாதிகளுக்குக் கூட்டமாய் நிற்பர்கள். இத்தால் சொல்லிற்றாயிற்று, இதர விஷயங்களிருவர்க்கும் போராமையாலே "சீறு-பாறு" என்கைக்குடலாம்; இங்கு போக்யதாதிசயத்தாலே கிண்ணகத்தி லிழிவாரைப்போலே திரண்டு அவகாஹிக்கவேணுமென்றதாயிற்று. (௬௨)

மனமாசு தீரு மருவினையும் சாரா
தனமாய தானே கைகூடும் - புனமேய
பூந்துழாயா னடிக்கே போதொடு நீரேந்தித்
தாந்தொழா நிற்பார் தமர். (௬௩)

ப-உ. புனமேய - தன் நிலத்திலிருந்தாற்போலே (செழித்து), பூம் - பூத்த, துழாயான் - திருத்துழாயையுடையவனுடைய, அடிக்கே - திருப்பாதங்களுக்கே, போதொடு - விகாஸோந்முகமான அரும்புகளோடு, நீர் - ஜலத்தை, ஏந்தி - தரித்து, தமர் - பக்தர், தாம் - தாங்களே, தொழாநிற்பார் - அடிமைசெய்வர்கள்; (அடிமை செய்யவே) மனம் - மனதிலிருக்கிற, மாசு - (அஞ்ஞாநம் முதலிய)

அழுக்கு, தீரும் - கழியும் ; அரு - அஸாத்யமான,வினையும் . பாபங்களும், சாரா - கிட்டாது; தனமாய -ஸம்பத்தான பக்தியும், தானே - அதுவே, கைகூடும் - சேரும். (சங)

வ்யா.—அவ.—நாற்பத்துமூன்றும்பாட்டு.— (மனமித்யாதி) பிராட்டிமாரடியாக அவனைப்பற்றினார்க்கு போகத்தில் ப்ரதிபந்தகங்கள் போகவேணுமென்றும் பக்த்யாதிகளுண்டாகவேணுமென்றும் இவர்களுக்குக் கரைய வேண்டாவென்கிறது.

(மனமாசுதீரும்) மனஸ்ஸுக்குமாசாகிறது - ருசிவாஸனைகள். (அருவினையும் சாரா) அவித்யாதிகர்மங்களணையா. (தனமித்யாதி) இப்படியானவதிகாரிக்கு தனமான கைங்கர்ய பூர்வபாவியான பக்த்யாதிகள் தானே யுண்டாம். (புனமித்யாதி) தமரானவர்கள் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே தாங்களே தொழாநிற்பர்கள். இவர்களுக்கு அவனுடைய திருவடிகளிலே புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு தொழுவது அவனை யநுபவிக்கையிலே அந்வயம்.

* திறனுரையே சிந்தித்திருக்கவொட்டுமோ இவனுடைய அவித்யாதிகளென்னில் ; (தனமாய) அவித்யாதிகள் போனார்க்கு வரும் தநம். "க்ஷுஶிக்ஷமத ஸ்ரீஶாநு-அந்தரிக்ஷகத ஶ்ஶ்ரீமான்" (பூந்துழாயானடிக்கே) குடிக்கிற வேப்பங்குடிநீர். (தாமித்யாதி) இவன் வகுத்தது செய்ய அவன் வகுத்தது செய்யாதொழியுமோ. (சங)

அரு.—நாற்பத்துமூன்றும் பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (திறனுரையேயித்யாதி). அவன் வகுத்தது செய்கை-அநிஷ்டத்தைப்போக்கி இஷ்டத்தைக்கொடுக்கை. (சங)

தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே
தம ருகந்த தெப்பேர் மற்றப்பேர் - தமருகந்த
தெவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியா னும். (சச)

ப-உ. ஆழியான் - சக்ராயுதனான ஸர்வேஶ்வரன், தமர் - பக்தர், உகந்தது - விரும்பியது, எவ்வுருவம் - எந்த விக்ரஹமோ ; அவ்வுருவம் - அந்த விக்ரஹத்தை, தானே-ஸ்வயமே, ஆம் - ஸ்வீகரி

கணக்கிட்டவனுடைய, பண்பு - குணங்களை, அமரர்க்கு - தேவர்களுக்கு, அறியவாமே - தெரிந்துகொள்ளப்போமோ; அதுநிற்க-அது கிடக்க, நாமே - நாமே, அறிகிற்போம் - அறிய ஸமர்த்தரானோம்.

வ்யா.—அவ.—நாற்பத்தைந்தாம்பாட்டு.(ஆமே இது அவன் காட்டக்கண்டவருக்கொழிய அல்லாதார்க்கறியப் போகாதென்கிறார்.

(ஆமேயமரர்க்கறிய) எத்தனையேனுமதிசயித ஜ்ஞாநரான தேவர்களுக்கு மறியப்போகாதென்கிறது. (அது நிற்க நாமே யறிகிற்போம்) அவ்விடையாட்டம் நிற்க நமக்கறியத்தட்டென். (நன்னெஞ்சே) அவன் காட்டக்கண்ட நெஞ்சே. (பூமேயவித்யாதி) ப்ரஹ்மாவின் மடியிலே ஒரு சிறுபிள்ளையாய்க் கண் வளருவாரைப் போலே கிடந்து "இவனுக்கு வரங் கொடுக்க வேண்டா, இது அநர்த்தமாம்" என்று ராவணன்தலையைத்தன் திருவடிகளாலே எண்ணினவனுடைய நீர்மையை "அமரர்க்கு அறியவாமே" என்கிறது-இத்தால் ப்ரஹ்மாவினுடைய அறிவு கேடு சொல்லுகிறது.

(ஆமே) அபிமாநிகளான ப்ரஹ்மாதிகளுக்கு மெளியனும் (தாள் பணிந்த வாளரக்கன்) புதுத்தண்டன்கண்டு * இறுமாந்து விளைவதறியாதே வரங்கொடுத்தபடி. (சரு)

அரு.—நாற்பத்தைந்தாம்பாட்டு.—இது ஆஸ்ரிதபார தந்த்ர்யம். ராவணன் பத்துத் தலையையும் மறைத்துவர அத்தைச் சிறுபிள்ளைகள் காலையாட்டுமாப்போலே எண்ணிக் காட்டினான்.

(ப்ரஹ்மாதிகளுக்கு மெளியனும்) அவர்களுக்கு மெளியனுமவன் நமக்கெளியனாகச் சொல்லவேணுமோவென்று இரண்டாம் தாத்பர்யம். (சரு)

**பண் புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற**
**வெண் புரிநூல் மார்பன் வினைதீரப் - புண்புரிந்த**
**ஆகத்தான் தாள்பணிவார் கண்டீர், அமரர்தம்**
**போகத்தால் பூமியாள்வார். (சகூ)**

ப-உ. பண் - ஸ்வரத்தோடு, புரிந்த - யுக்தமான, நான்மறையோன் - நாலுவேதங்களையுடைய ப்ரஹ்மாவினுடைய, சென்னி-

* இறுமாந்து - மிகவும் ஸந்தோஷித்து.

தலையிலே, பலி - பிக்ஷையை, ஏற்ற - வாங்கினவனாய், வெண் - வெளுத்த, புரி - புரியையுடைய, நூல் - ஸூத்ரத்தை, மார்பன் - வக்ஷஸ்ஸிலேயுடைய (ருத்ரனுடைய), வினை - பாபங்கள், தீர - போம்படி, புண் - வ்ரணத்தோடு, புரிந்த - கூடிய, ஆகத்தான் - திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனுடைய, தாள் - திருவடிகளை, பணிவார்கண்டீர் - தொழுமவர்கள் கிடீர், அமரர்தம் - நித்யஸூரிகளுடைய, போகத்தால் - செல்வத்தோடு கூட, பூமி - தரணியோடுகூடின லீலா விபூதியை, ஆள்வார் - நிர்வஹிப்பர்கள். (சசு)

வ்யா.—அவ.—நாற்பத்தாறும்பாட்டு.—(பண்ணித்யாதி) ருத்ரனுடைய லஜ்ஜைகேடு சொல்லுகிறது.

(பண்புரிந்த நான்மறையோன்) ஸ்வரயுக்தமாக ஸர்வேஶ்வரனாலே ஓதுவிக்கப்பட்ட ப்ரஹ்மாவின். (சென்னிப்பலியேற்ற) "வாமாங்குஷ்ட நகாக்ரேண ச்சிந்நம் தஸ்ய ஶிரோமயா - வாமாங்குஷ்டநகாக்ரேண சிந்நம்தஸ்ய சிரோமயா" என்கிறபடியே ப்ரஹ்மாவின் தலையை யறுக்க, அவன், "கபாலியாவாய்" என்று சபிக்க. அவனுடைய தலையோட்டிலே பிக்ஷையேற்ற. (வெண்புரிநூல் மார்பன் வினைதீர) விநீதவேஷனாய் ப்ராயச்சித்தியானபடி. இவனோடு ஸம்பந்தித்தார்க்கெல்லா மதுவேயிறேபணி. அகமுடையவளும் தகப்பனுரைக்கொன்றாள்; இவனை யாஶ்ரயித்தவனும் தகப்பனைக்கொன்றான். "வினைதீர" என்கிறவித்தால் இவனுடைய கர்மவஶ்யத்வமும், தான் பண்ணின கர்மம் தன்னால் பரிஹரிக்கப்போகாமையும் சொல்லுகிறது. இத்தால் ஈஶ்வரத்வ சங்கையில்லை யென்றபடி. (புண்புரிந்த வித்யாதி) ஈஶ்வராபிமானியாய் ஒருத்தனாய்த் திரிந்தவன் வாசல்தோறும் இடறித்திரிவதே! என்று திருவுள்ளத்திலே புண்பட்ட ஸர்வேஶ்வரனுடைய தாள் பணிவார் கிடீர். (அமரரித்யாதி) பூமியுமாண்டு பரமபதத்தில் போகமுமநுபவிப்பார்கள். அன்றியே, போகபூமியிலே யிருக்கச்செய்தே பரமபதத்தில் போகமெல்லா மநுபவிப்பார்களென்றுமாம்.

அவ.—ப்ரஹ்மாவாலே ஒரு ருத்ரனலைந்துகொடுகிடக்க அது தீர்த்தாரார்.

(பண்ணித்யாதி) ஓத்துச்சொல்லாநிற்கத் தலையறுத்தபடி. மூலையடியே திரிந்தார் பாதகியானவாறே முழுகித்திரியும்படி. "விண்ணுளாரிலும் சீரியர்" என்றுமாம். (சசு)

அரு.—நாற்பத்தாறும்பாட்டு.—பலி - பலி ; பிக்ஷையென்றபடி. அகமுடையவள்-பார்வதி. தகப்பனைக்கொன்றது-தக்ஷப்ரஜாபதி பகவத்பரனுகையாலே யாகத்திலே பெண்ணுன பார்வதியையழையாதிருக்க, அவள் ருத்ரனைக் கூட்டிக்கொண்டுபோக, அவன் ருத்ரனை யுதாஸிக்கையாலே, ருத்ரன், ஜடையிலே வீரமுஷ்டிகளை யுண்டாக்கிக்கொல்லுகையாலே "அவள்கொன்றுள்" என்கிறது. இவளையாஸ்ரயித்தவன்-ருத்ரன். அவன் ப்ரஹ்மாவைத் தலையையறுத்தான்.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறுர் (ப்ரஹ்மாவாலே யித்யாதி). ருத்ரனுக்கு ஒத்துச்சொல்லாகிறக, வெள்ளைப் பூணூலும், என்கையாலே முழுகினமைதோற்றுகிறது. பூமியிலேயிருக்க அமரர்போகம் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறுர் (விண்ணுளாரிலுமித்யாதி). (சகூ)

**வாரி சுருக்கி மதக் களி றைந்திளையும்**
**சேரி திரியாமற் செந்நிறீஇக் - கூரிய [நாள்**
**மெய்ஞ் ஞானத் தாலுணர்வார் காண்பரே, மேலொரு**
**கைந்நாகம் காத்தான் கழல்.**

ப-உ. மதம்-கொழுத்த, களிறு - இந்த்ரியங்களாகிற யானைகள், ஐந்தினையும் - ஐந்தையும், வாரி-விஷயங்களாகிற ஜலத்தில், சுருக்கி - ஒடுக்கி, சேரி - விஷயங்களாகிற தெருவில், திரியாமல் - ஸஞ்சரியாதபடி, செந்நிறீஇ - நன்றுய் நிறுத்தி, கூரிய - ஸூக்ஷ்மமான, மெய் - பரமார்த்தமான, ஞானத்தால் - பக்தியால், உணர்வார் - அறிய ஸமர்த்தரானவர்கள், மேலொருநாள் - முன்பொருகாலத்தில், கை - குணவானுன, நாகம் - கஜத்தை, காத்தான் - ரக்ஷித்தவனுடைய, கழல் - திருவடிகளை, காண்பர் - ஸாக்ஷாத்கரிப்பர்கள். (சஎ)

வ்யா.—அவ.—நாற்பத்தேழாம்பாட்டு. (வாரிசுருக்கி யித்யாதி) இந்த்ரியங்களுடைய போகத்தைச் * செறுத்து, விஷயத்தினுடைய ஸந்நிதியில் நில்லாமல் பரிஹரித்து, மெய்யான பக்தியையுடையவர்களவனைக் காண்பரென்கிறுர். "விஷயாவிநிவர்த்தந்தே நிராஹாரஸ்யதேஹிந: । ரஸவர்ஜம்ரஸோப்யஸ்ய பரம்த்ருஷ்ட்வா நிவர்த்ததே" - விஷயாவி நிவர்த்தந்தே நிராஹாரஸ்யதேஹிந: ரஸவர்ஜம்ரஸோப்யஸ்ய பரம்த்ருஷ்ட்வா நிவர்த்ததே"

* செறுத்து-நெருக்கி.

(வாரிசுருக்கி) மதித்த வானைகளைத் தண்ணீரிலே செறுக்கு மாப்போலே இந்த்ரியங்களினுடைய போகத்தைக் குறுக்கி. (சேரி திரியாமல்) தெருவேதிரியில்கொல்லுமிறே ஆனை. அப்படி விஷயத்தி னுடைய ஸந்நிதியில் திரியாமல். (செந்நிறீஇ) செவ்விதாக நிறுத்தி; பதார்த்தங்களில் போகாமல் ப்ரத்யக்வஸ்து விஷயமாக்கி. (சூரிய வித்யாதி) விஹித கர்மங்களை பலாபிஸந்திரஹிதமாக வநுஷ்டித்து க்ஷீணபாபராய் ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநமுண்டாய் ஈஶ்வர பாரதந் த்ர்யமென்னு மிடம், "உபாஸநாத்யுபாயஸ்திதி தர்சநஸ்மாநாகார ப்ரத்யக்ஷாபிவ்யக்திவிசதேததநந்த ரம்" என்று சொல்லுகிற பக்தியாலே காண்பர்கள். (மேலித்யாதி) பண்டொருநாள் ஸ்ரீகஜேந்த்ரமோக்ஷம் பண்ணினவனுடைய திரு வடிகளை. இத்தால் விரோதியான முதலையைப்போக்கித் தன்னைக் காட்டிக் கொடுத்தாற்போலே இவர்களுடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கித் தன்னைக்காட்டிக்கொடுக்குமென்கிறது. (சேரிதிரியாமல்) ஆள்நடையாடாதவிடத்தே கொண்டுபோய். (சூரியவித்யாதி) சுபா ஶ்ரயமாகவும், நாதனுகவும், உபாயமாகவும், உபேயமாகவும், அநு ஸந்திக்கை.(கைந்நாகம்) "பரமாபதமாபந்ந:".

அரு.—நாற்பத்தேழாம்பாட்டு.—ஆனைக்கு மதஹேதுவான ஜலத் தைச்செறுக்கவே மதம் போமாப்போலே, முமுக்ஷுவுக்குமாஹா ராதிகளைச் செறுக்கவே வீர்யம் போமென்னு மதுக்கு ப்ரமாணமரு ளிச்செய்கிறார் (விஷயாவிநிவர்த்தந்தே, இத் யாதி). தண்ணீரிலே செறுக்கை தண்ணீர்காட்டாதிருக்கை .(சஎ)

**கழ லொன் றெடுத் தொருகை சுற்றி யோர் கைமேல்**
**சுழலும் சுராசுரர்களஞ்ச - அழலும்**
**செருவாழி யேந்தினன் சேவடிக்கே செல்ல**
**மருவாழி நெஞ்சே மகிழ்.** (சஅ)

ப-உ. ஒருகழல் - ஒருதிருவடியை, எடுத்து - தூக்கி, ஒருகை - ஒருகையாலே, சுற்றி - (நமுசியை) ப்ரமிப்பித்து, சுழலும் - கலங்கி யிருக்கிற, சுராசுரர்கள் - தேவர்களும் அரக்கர்களும், அஞ்ச - பயப் படும்படி, அழலும் - எரிகிற, செரு - யுத்தஸாதநமான, ஆழி - சக்

ரத்தை, ஓர்கைமேல் - ஒருகரத்தில், ஏந்தினன் - பிடித்தவனுடைய, சே - சிவந்த, அடிக்கே - பாதங்களிலே, செல்ல - கிட்டும்படி, ஆழி - கம்பீரமான, நெஞ்சே - மனமே, மருவு - பொருந்து; மகிழ் - ஸந்தோஷப்படு. (சஅ)

வ்யா.—அவ.—நாற்பத்தெட்டாம் பாட்டு.—(கழல்) இப்படி "இந்த்ரிய ஜயம்பண்ணி நாம் பெறுகையாவதென்" என்று தம்முடைய திருவுள்ளம் பயப்பட, எளிதாகப்பற்றலாம், நீ பயப்படவேண்டா வென்கிறார்.

(கழலித்யாதி) நமுசியுடைய ஒரு காலையெடுத்துக் கையாலே சுற்றி என்னவுமாம். அன்றியே, பூமியளக்க வென்று தன்னுடைய ஒரு திருவடி மலரையெடுத்து (அவஸரத்திலே) நமுசியை ஒருகையாலே சுற்றியென்னவுமாம். (ஓர்கைமேலித்யாதி) ஒரு திருக்கை மலரிலே அநுகூலப்ரதிகூலரோடு வாசியற அழலாநின்ற * செருவுடைத்தான திருவாழியை யேந்தினவனுடைய. (சேவடிக்கேசெல்ல, ஆழிநெஞ்சே மகிழ்ந்து மருவு) உகந்துகந்து அநுபவி.

(கழலித்யாதி) அளந்தபடி. (ஆழிநெஞ்சே) உனக்கு உபதேசிக்கவேண்டா விறே. சேவடிதானே யிருந்த விடத்தேவந்தால், † இருயாமையே வேண்டுவது (சஅ)

அரு.—நாற்பத்தெட்டாம்பாட்டு.—ஆழிநெஞ்சு - அன்புடையநெஞ்சு. "மருவு" என்றத்தைப் பற்றவருளிச்செய்கிறார் (சேவடிதானே யித்யாதி). (சஅ)

**மகிழலகு கொன்றேபோல் மாறும்பல் யாக்கை**
**நெகிழமுயல் கிற்பார்க்கல்லால் - முகிழ் விரிந்த**
**சோதிபோற் றோன்றும் சுடர்பொன் னெடுமுடி, எம்**
**ஆதிகாண் பார்க்கு மரிது.** (சகூ)

ப-உ. மகிழ் - மகிழமரத்தினுடைய, ஒரு அலகுபோல் - ஒரு விரைபோல், மாறும் - வேறுவேறாய் வருகிற, பல் - அநேகமான, யாக்கை - சரீரத்தை, நெகிழ - நீங்க, முயல்கிற்பார்க்கல்லால் - யத்நம்பண்ணுமவர்களுக்கல்லது, முகிழ்விரிந்த - விகஸித்த, சோதி போல் - தேஜஸ்ஸைப்போல், தோன்றும் - காணப்படுகிற, சுடர் -

* செரு-சண்டை,

† இருயாமை-பின்வாங்காமை.

தீப்தியையுடைய, பொன் - அழகிய, நெடு - நீண்ட, முடி-கிரீடத்தையுடையனாய், எம் - நமக்கு, ஆதி - காரணபூதனானவன், காண்பார்க்கும் - காணவேணு மென்றிருப்பார்க்கும், (கேட்பார்க்கும்), அரிது - துர்லபன். (சகூ)

வ்யா.—அவ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு. (மகிழலகித்யாதி) இப்படி யிராதார்க்கு அவனைக் கிடையாதென்று பின்னையுமதினுடைய வருமைசொல்லுகிறது.

(மகிழலகித்யாதி) அலகானது கோடிஸ்த்தாநத்திலும் நின்று காணிஸ்த்தாநத்திலும் நிற்குமாப்போலே, இவ்வாத்மாவானது தேவசரீரத்திலே புகுவது திர்யக் சரீரத்திலே புகுவதாய் மாறிமாறி வருகிற பலயாக்கையை நெகிழ்ந்துபோம்படியாகப் பண்ணுவார்க்கல்லால். (முகிழித்யாதி) விகஸிதமாயிருந்த தேஜஸ்ஸைப்போலே தோன்றுமதாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தையுடையனாய் எனக்குக் காரணமாயிருக்கிறவனைக் காணுமவர்களுக்கரிது.

அவ.—ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் அருசியும் எம்பெருமானைக் காண்கையில் ருசியுமுடையார்க்கு எளிதாகக் காணலாமென்கிறது. "பொய்ந்நின்ற" இத்யாதி.

(மகிழித்யாதி) கர்மாநுகுணமாக சரீரங்கள்தோறும் நுழைகை. "யாதானுமோராக்கை". (முகிழ்விரிந்தசோதி) "செவ்விப்படிக்கோலம்."(எம்மாதி) ப்ராபகனை. (காண்பார்க்கும்)கேட்பார்க்குமரிது. இப்படியாஸ்ரயிப்பார்க் கல்லது ப்ரக்ருதியை யுகப்பார்க்கு முகங்கொடுக்குமிதரபுருஷனல்லன். (சகூ)

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—"முயல்கிற்பார்க்கல்லால்" என்றத்தைப்பற்ற வவதாரிகை யருளிச்செய்கிறார் (இப்படி யிராதார்க்கித்யாதி). பண்ணுவார்க்கு-கர்மாத்யுபாயங்களைப் பண்ணுவார்க்கு,

மேலுக்கு ப்ரதிபத்திபரமாக அவதாரிகையருளிச்செய்கிறார் (ப்ரக்ருதி ப்ராக்ருதங்களித்யாதி) சகாரத்தாலே கேட்பார்க்குமென்கிறது. மகிலழகு - மகிழம்விரை. (சகூ)

**அரிய புலனைந்தடக்கி யாய் மலர்கொண்டு, ஆர்வம்**
**புரிய பரிசினாற் புல்கில் - பெரியனாய்**

**மாற்றாது வீற்றிருந்த மாவலிபால், வண்கைநீர்**
**ஏற்றானைக் காண்பதெளிது.** (௫௦)

ப-உ. அரிய - கொடுமையான, புலனைந்து - ஐந்து இந்த்ரியங்களை, அடக்கி - ஸ்வாதீநப்படுத்தி, ஆய் - சோதித்த, மலர் - புஷ்பங்களை, கொண்டு - ஸம்பாதித்து, ஆர்வம் - ப்ரீதி, புரிய - வ்ருத்தியடையும்படியான, பரிசினால் - ப்ரகாரத்தாலே, புல்கில் - தொழுதால், பெரியனாய் - (தன்னை) பெருக்க நினைத்திருக்குமவனாய், மாற்றாது - (தாநத்தில்) வேறுபடாமல், வீற்றிருந்த - வேறுபாடுதோற்றும்படியிருந்த, மாவலிபால் - மஹாபலிபக்கலில், வண் - பெரிய, கை - கரத்திலே, நீர் - (தாந) ஜலத்தை, ஏற்றானை - பிடித்தவனை, காண்பது - ஸாக்ஷாத்கரிப்பது, எளிது - ஸுலபமாயிருக்கும். (௫௦)

வ்யா.—அவ.—ஐம்பதாம் பாட்டு.—இந்த்ரியங்களை விஷயங்களிற் போகாமல் காத்து அவன் பக்கலிலே ஸ்நேஹிக்கில் காண எளிதென்கிறார்.

(அரியவித்யாதி) ஒரு * செய்யிலே பாயும் நீர் இரண்டு செய்யிலே பாய்ந்தால் இரண்டு செய்க்கும் போராதொழியுமிறே. ஸர்வேஶ்வரனையிச்சிக்கக் கடவவான விந்த்ரியங்களை விஷயங்களிற் போகாதபடியடக்கி. "அரிய" என்றது "தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்" தஸ்யாஹம்நிக்ரஹம்மந்யே வாயோரிவஸு துஷ்கரம்" ப்ரதிகூலமானவாயுவை நியமிக்கவரிதானாற்போலே மநஸ்ஸை நியமிக்கவரிதென்று அர்ஜுநன் சொன்னபடியே யிருக்கை. (ஆய் மலர்கொண்டு) செவ்விப்பூக்களைக்கொண்டு. (ஆர்வம் புரியபரிசினால்) ஸ்நேஹம் மிக்க ப்ரகாரத்தாலே. புல்கில்) அணையில். (பெரியனாயித்யாதி) உதாரமான கையைக்கொண்டு நீரேற்றவனைக் காண்கையெளிது.

(புல்கில்) புல்கப்பெறில். (பெரியனாய்) ஐஶ்வர்யமும் ஔதார்யமும். (வண்கை) கொடுத்துவளர்ந்தகை. (நீரேற்றானைக் காண்பதெளிது) அப்ரதிஷேதமுடையார்க்கு அர்த்தியாய் வருமென்றவாறு. (௫௦)

அரு.—ஐம்பதாம்பாட்டு.—"அடக்கி" என்று விஷயங்களைவிட்டே பற்றவேணுமே, அவற்றையுங்கூட விரும்பினாலாகாதோவென்ன;

* செய்யிலே-வயலிலே.

அருளிச்செய்கிறார் (ஒருசெய்யித்யாதி). மாற்றாதே வீற்றிருந்த ஔதார்யம் மாறாதே வீற்றிருந்த.

"ஏற்றானை" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (அப்ரதி ஷேதமித்யாதி). (ருo)

எளிதி லிரண்டடியும் காண்பதற்கு, என்னுள்ளம்
தெளியத் தெளிந்தொழியும் செவ்வே – களியில்
பொருந்தாதவனைப் பொரலுற்று, அரியாய்
இருந்தான் திருநாமமெண், (ருக)

ப-உ. என்னுள்ளம் - என்னுடைய மனமே! எளிதில் - ஸுலபத்தில் இரண்டடியும்-இரண்டுபாதங்களையும், காண்பதற்கு - ஸாக்ஷாத்கரிக்க, தெளிய-நிர்மலமானால், செவ்வே-நன்றாக, தெளிந்தொழியும்-ப்ரஸந்நனாய்விடுவன். (ஆனபின்பு) களியில்-கர்வத்தினால், பொருந்தாதவனை-அடிக்காதவனை, பொரல் - போர்செய்து முடிக்கையிலே, உற்று-ஒருப்பட்டு, அரியாய் - நரஸிம்ஹமாய், இருந்தான் - ஸ்திதனானவனுடைய, திருநாமம்-திருநாமங்களை, எண்-த்யாநம்செய். (ருக)

வ்யா.—அவ.—ஐம்பத்தோராம்பாட்டு.—(எளிதில்) தம்முடைய திருவுள்ளத்தை ஸம்போதித்து, நீ விஷய காலுஷ்யத்தைத் தவிர்; அவன் ப்ரஸந்நனென்கிறார்.

(எளிதிலித்யாதி) எளிதின்றிக்கே யிருந்துள்ள விரண்டு திருவடிகளுங்காண்பதற்கு. எளிதாக வென்னவுமாம். (என்னுள்ளம்)என்னெஞ்சே! என்றபடி. (தெளிய) விஷயகாலுஷ்யத்தைத் தவிர. (செவ்வேதெளிந்தொழியும்)அவன் நேரேப்ரஸந்நனும்.(களியித்யாதி) செருக்காலே பொருந்தேனென்றிருந்த ஹிரண்யனை. (பொரலுற்று அரியாயிருந்தான் திருநாமமெண்) சிறுபிள்ளைக்காக * உதவி ஹிரண்யனை முடித்தவனுடைய திருநாமத்தை எண்ணு.

(என்னுள்ளம்) உள்ளமே! நீ தெளியில் அவன் செவ்வே நம்மிறத்துத் தெளிந்தொழியும். ப்ரமாணமென்! ப்ரஹ்லாதன் தெளிய அவன்விஷயத்துத்தெளிந்துநின்று கார்யம் பார்த்தபடிகண்டிலையோ.

பாடாந்தரம்- * உதவி-பொருத.

(பொரலுற்று) பொருது. சீற்றத்துக்கிரை * போராமல் † சோம்பியிருந்தான். (திருநாமம்) வாக்காலே. (தெளி) எண்ணவொட்டாதவன் பட்டபாடறிவுதியிறே. (ருக)

அரு.—ஐம்பத்தோராம் பாட்டு.—என்னுள்ளம் - அண்மைவிளி. பொரலுற்று. பொருகையிலேயுற்று. காணத்தகுந்திருநாமமென்றந்வயம். (ருக)

எண்மர் பதினொருவ ரீரறுவ ரோரிருவர்
வண்ண மல ரேந்தி வைகலும் - நண்ணி
ஒருமாலே யால்பரவி யோவாது, எப்போதும்
திருமாலைக் கைதொழுவர் சென்று. (ருஉ)

ப-உ. எண்மர் - அஷ்டவஸுக்களும், பதினொருவர் - ஏகாதசருத்ரர்களும், ஈராறுவர் - பன்னிரண்டு ஆதித்யர்களும், ஓர்-அத்விதீயமான, இருவர்-அஸ்விநீதேவதைகளிருவரும், வண்ணம்-நாநாவர்ணத்தையுடைய, மலர்-பூவை, ஏந்தி-தரித்துக்கொண்டு, வைகலும்-தினந்தோறும், நண்ணி-கிட்டி, ஒரு-அத்விதீயமான, மாலையால்-புருஷஸூக்தாதி சப்தஸந்தர்ப்பங்களாலே, பரவி - துதித்து, எப்போதும்-ஸர்வகாலமும், ஓவாது-விடாமல், திரு - லக்ஷ்மியோடு கூடின, மாலை - ஸர்வேஸ்வரனை, சென்று - கிட்டி, கைதொழுவர் - கையால் நமஸ்கரிப்பர்கள். (ருஉ.)

வ்யா.—அவ.—ஐம்பத்திரண்டாம்பாட்டு.— (எண்மரித்யாதி) கீழ் தம்முடைய திருவுள்ளத்தைக்குறித்து, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குதவினவனுடைய திருநாமத்தை யெண்ணு; அவன் ப்ரஸந்நனென்றது - மற்றும் துர்மாநிகளான தேவாதிகளுமவனை யாஸ்ரயிக்கத்தக்க காரணங்கள் அதிகாரம் பெற்றதென்கிறார்.

(எண்மரித்யாதி) அஷ்டவஸுக்கள், ஏகாதஸருத்ரர்கள், த்வாதஸாதித்யர்கள், அஸ்விநிகள். (வண்ணமலரேந்தி) நாநாவர்ணமான புஷ்பங்களைக்கொண்டு. (வைகலும் நண்ணி ஒருமாலையால்) புருஷஸூக்தத்தாலே. (ஓவாதெப்போதும்) விச்சேதமின்றிக்கே. (திருமாலித்யாதி) ஸ்ரியঃபதியைச்சென்றுஆஸ்ரயிப்பர்கள் "தஜூவ

* போராமல்-பொறாமல்.
† சோம்பியிருந்தான்-வாடியிருந்தான்.

ரு)விபாதராயணஸம்ஹவாக-ததுபர்யபிபாதராயணஸ்ஸம்பவாத்" தேவர்களுக்கும் பவிஷ்யத்திற் - பெறவிருந்துள்ள வதிகாரார்த்தமாக ஆதித்யாந்தர்யாமியா யிருந்துள்ள பரமாத்மோபாஸநம் விதியா நின்றதே.

வ்யாபாரயோக்யரான ப்ரயோஜநாந்தரபரர் ஒரு மாலையால் பரவியோவுகையன்றிக்கே, எல்லாக் காலமும் எப்போதுமென்றுமாம். (திருமால்) வேண்டுவதெல்லாம் பெறுகைக்கடி. (ருஉ)

அரு.—ஐம்பத்திரண்டாம்பாட்டு.—வகுத்த விஷயமாகையாலே, அதிகாரம்பெற்றது.தேவர்களும் பெற்றார்கள்; கரணங்களும்பெற்றன வென்றபடி.

தேவர்களுக் காஸ்ரயமுண்டோவென்ன ; அருளிச்செய்கிறார் (தஉ-ரவரு)வி - ததுபர்யபி இத்யாதி).

எண்மர் - வ்யாபார யோக்யரானதிக்பாலர்கள். எப்போதும் எல்லாக்காலமாதல், எல்லாப்புஷ்பமாதல். (ருஉ)

சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற் கரவு. (ருங)

ப-உ.—அரவு - திருவநந்தாழ்வான், திரு - பிராட்டியோடு கூடின, மாற்கு - ஸர்வேஸ்வரனுக்கு, சென்றால் - உலாவினால், குடையாம்-சத்ரமாயிருப்பர்; இருந்தால்-எழுந்தருளி யிருந்தால், சிங்காசனமாம்-ஸிம்ஹாஸநமாயிருப்பர்; நின்றால்-நின்றால், மரவடியாம் - பாதுகையாயிருப்பர்; நீள்-விசாலமான, கடலுள்-ஸமுத்ரத்தில், (பள்ளி கொண்டால்), என்றும்-ஸர்வகாலமும், புணையாம் - தெப்பமாயிருப்பர்; மணிவிளக்காம்-ரத்நத்தால் செய்யப்பட்ட தீபமாயிருப்பர்; பூம்பட்டாம் - அழகிய பரியட்டமாயிருப்பர்; புல்குமணையாம் - தழுவிக் கொள்ளும் மெத்தையாயிருப்பர். (ருங)

வ்யா.—அவ.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு.—(சென்றால்) கீழே யெல்லா நேர்த்தியும் நேர்ந்து தங்களுக்குறுப்பாக வாஸ்ரயிக்குமவர்

களைச் சொல்லிற்று; இதில் தங்களையெல்லாமழிய அங்குத்தைக் குறுப்பாமவர்களைச் சொல்லுகிறது.

(சென்றால் குடையாம்) கைங்கர்யம் ஸ்வபுத்யதீநமன்றென்கிறது. நான்குடையாய் நின்றேன், நீ இங்கேவா வென்கையன்றிக்கே அவனுலாவப் புக்கால் குடை யபேக்ஷிதமானபோது குடையாகை. (இருந்தால் சிங்காசனமாம்) இருக்கை திருவுள்ளமானபோது திவ்ய ஸிம்ஹாஸநமாம். நிற்கை திருவுள்ளமானபோது மரவடியாம். கண் வளர வபேக்ஷிதமானபோது கடலிலே எல்லாக்காலத்திலும் படுக்கையாம். (மணிவிளக்காம்) ஒருவிளக்காலே ஒரு பதார்த்தத்தைக் க்ராணவேணுமென்றபோது மங்களதீபமாயிருக்கும். (பூம்பட்டாம்) திருப்பரியட்ட மபேக்ஷிதமானபோது அழகிய பட்டாம். (புல்கு மணையாம்) தழுவணை யபேக்ஷிதமானபோது தழுவணையாம். (திருமாற்கு) ஸ்ரியஃபதிக்கு. (அரவு) கட்டிப்பொன்போலே எல்லாவடிவையுமாக்கிக்கொள்ளலாம்படி யிருக்கிறபடி.

(சென்றால்) "குடையானேன்-செல்" என்று சேஷியை நியமியாதே. (இருந்தால்) அபேக்ஷையுள்ளபோது. (நின்றால்) நின்றபின்பு. (புணை) தெப்பம். (மணிவிளக்கு) மங்களதீபம். (பூப்பட்டு) பும்ஸ்த்வாவஹமான பரியட்டம். (புல்குமணை) பிராட்டிமாருடனால், வ்யஸநம் மறப்பிக்கவற்றாகை, ஊடலுக்கு ஹேதுவாகவுமாம். (திருமாற்கு) இளையபெருமாளுக் கந்தரங்கஸேவை. (அரவு) தான் ஒரு சேதநனென்று கூசவேண்டாதபடி தன்னை யமைத்தபடி. ராஜஜீவேசநங்களில் கூனர் குறளரைப்போலே. (ருங)

அரு.—ஐம்பத்துமூன்றாம் பாட்டு.—திருவநந்தாழ்வானைச்சொன்னது உபலக்ஷணமாய், தங்களை யெல்லாமென்று - நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. க்ஷீராப்தியிலே யழுந்தாமைக்குத் தெப்பமாய். வ்யஸநம் மறப்பிக்கை தன்னுடைய ஸ்பர்சத்தாலே யவர்களைப்பிரிந்த வ்யஸநம் தோற்றாதபடிபண்ணுகை. தன்னுடையஸ்பர்சம்போக்யமாம்படி உடம்புகொடுக்கையாலே பிராட்டிமாரூடுகைக்கும் ஹேது வென்றபடி,

"திருமாற்கரவு" என்றசேர்த்தி எப்படி யிருக்கிறதென்ன; "ராமோணவநேத்ரயஃ- ரமமாணுவநேத்ரயஃ" என்று-ரமித்த இளைய பெருமாளைப்போலே யென்கிறார் (இளையபெருமாளுக்கித்யாதி). (ருங)

**அரவ மடல்வேழம் ஆன்குருந்தம் புள்வாய்**
**குரவை குடமுலை மற் குன்றம் - கரவின்றி**
**விட்டிறுத்து மேய்த்தொசித்துக்கீண்டுகோத்தாடி, உண்**
**டிட்டெடுத்த செங்கணவன். (ருச)**

ப-உ.—செம்-சிவந்த, கண்-நேத்ரத்தையுடைய; அவன் - அந்த ஸர்வேஶ்வரன், கரவு-மறைத்தல், இன்றி - இல்லாமல், அரவு - காளியனை, விட்டு-அனுப்பி, அடல்-சண்டைக்குவந்த, வேழம் - குவலயாபீடமென்கிற யானையை, இறுத்து - முறித்து, ஆன்-பசுக்களை, மேய்த்து-புஜிக்கப்பண்ணி, குருந்தம் - குருக்கத்திமரத்தை, ஒசித்து - ஒடித்து, புள்வாய்-பகமென்கிறபக்ஷியினுடைய வாயை, கீண்டு-பிளந்து, குரவை - கைகோத்த விளையாட்டை, கோத்து-தொடுத்து, குடமாடி-குடக்கூத்தாடி, முலை - (பூதனையின்) ஸ்தநத்தை, உண்டு - புஜித்து, மல்-மல்லரை, அட்டு - கொன்று, குன்றம் - கோவர்த்தநமலையை, எடுத்த - தூக்கின, (இது முதலான செயல்களிருந்தபடி என்). (ருச)

வ்யா.—அவ.—ஐம்பத்துநாலாம்பாட்டு.—(அரவம்) ஆஶ்ரிதர்க்குச் சிலவிரோதம்வந்து போக்கவேண்டில் படுக்கையும் பொருந்தாமல் வந்துநிற்குமென்கிறது. இப்பாட்டு - நிரனிறை

(அரவமித்யாதி) காளியனைவிட்டு, குவலயாபீடத்தின் கொம்பைமுறித்து, ஆனைமேய்த்து, குருந்தமொசித்து. புள்வாய் கீண்டு-பகாஸுரனைக்கொன்று, குரவைகோத்து, குடமாடி, பேய்முலையுண்டு, மல்லரை யட்டு, குன்றமெடுத்த ஸர்வேஶ்வரன். எடுத்தவிச்செயல்க ளெம்பெருமான் சேஷவிஷயத்திற் குறைந்து பரிமாறும்படி யவன்ஸ்வரூபம்.

"செங்கணவன் - விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி உண்டு அட்டு எடுத்தவை - அரவமித்யாதி". (ருச)

அரு.—ஐம்பத்துநாலாம்பாட்டு.—எடுத்த - இப்பாட்டிலெடுத்த இந்த வ்யாபாரங்கள், தாழ்ந்து பரிமாறின சேஷியுடைய ஸ்வரூபஞ்சொல்லுகிறது.

அந்வயங்காட்டுகிறார் (செங்கணவனித்யாதி). (ருச)

**அவன்தம ரெவ்வினைய ராகிலும், எங்கோ**
**னவன்தமரே யென்றொழிவ தல்லால் - நமன்தமரால்**
**ஆராயப் பட்ட றியார் கண்டீர், அரவணைமேல்**
**பேராயர்க் காட் பட்டார் பேர். (ருரு)**

ப-உ.—அவன் - அந்த ஸர்வேஶ்வரனுடைய, தமர் - பக்தர், எவ்வினையராகிலும்-எந்தக் கர்மங்களையுடையராளுலும், எம்-நமக்கு, கோன் - ஸ்வாமியான, அவன் - அந்த ஸர்வேஶ்வரனுடைய, தமரே- பக்தர்களிறே; என்று-இப்படி கொண்டாடி, ஒழிவதல்லால்-நீங்குவதல்லாமல், அரவணைமேல்-ஸர்ப்பமாகிறபடுக்கையின்மேல்,(இருக்கத்தக்க), பேர்-பெரிய, ஆயர்க்கு - இடையரான க்ருஷ்ணனுக்கு, ஆள் பட்டார் - அடிமைபூண்டவர்களுடைய, பேர் - நாமமும், நமன்-யமனுடைய, தமரால் - தூதரால், ஆராயப்பட்டறியார்கண்டீர் - தேடப்பட்டறியார்கிடீர். (ருரு)

வ்யா.—அவ.—ஐம்பத்தைந்தாம்பாட்டு.—(அவன் தமர்) இப்படி அவ ளுஶ்ரிதவிரோதி நிரஸநஸ்வரூபனுன பின்பு அவனுடைய தமரை யமபட ளுராய்வதெங்ஙனே யென்கிருர்.

(அவனித்யாதி.) அவனுக் கநுகூலமானவர்கள் எத்தொழிலராகிலென்; விஹிதத்தைச் செய்யிலென், நிஷித்தத்தைச் செய்யிலென். (எங்கோனித்யாதி) "ப்ரபவதிஸம்யமநேமமாபிவிஷ்ணுঃ" என்னும்படியே. (நமன்தமரித்யாதி)நமன்தமராலாராயப்படா தொழிகிருர், அரவணைமேல் பேராயர்க்காட்பட்டார்பேர். இவர்கள் தாங்களோ வென்னில்; அன்று; ஒருபாகவதனுடைய பேரை ஒரு அபாகவதன் தரித்தால் அவனுடைய பேரும் யமஸதஸ்ஸிலே வாசிக்கப்பெருதென்கிறது, போராயில்,குவலயாபீடம் தொடக்கமானவை பட்டதுபடுமத்தனை. "யமஸதநப்ரவிஷ்டாந் மதுஸூதநப்ரபந்நாந்".

(எங்கோனவன்தமரே) என்னுயனுனவடியார். (எவ்வினையராகிலென்னென் றொழிவதல்லால்) அவர் புண்யம்பண்ணிலென், பாபம்பண்ணிலென்; அத்துறை நா மாராயுந் துறையல்லவென்று கைவிடுமதொழிய. "த்யஜபடதூரதரேண தாநபாபாந்". (அரவணைமேல் பேராயர்க் காட்பட்டார்)படு

க்கைபாராட்டிலிறே ஆராய்வது. "நன்று செய்தாரென்பர்போலும்" என்று பிராட்டிக்கு மகப்பட நிலமல்லாதவிடத்தே யமனே ஆராயப் புகுகிறான். அவனுடைய ஒருபேரான ஸம்ஸாரிபேரும் தீட்டி வாட்டான். (ருரு)

அரு.—ஐம்பத்தைந்தாம் பாட்டு.—ஆட்பட்டார் பேர் - ஆட்பட்டாருடைய மநுஷ்யரென்றாய், "பேர்" என்கிற ஸமாதியாலே திருநாமமுமாராயப்படாதென்றபடி.

படுக்கைபாராட்டில் - ஸமுத்ரம்பார்த்து கேவலம் நித்ரைபண்ணினலன்றே யமனாராய, இதப்படியன்றியே, அவனேறிட்டுக்கொண்ட பின்பு இவனுலாராயப்போகாதென்றபடி. பாகவதனுடைய பேரன்றியே அவனுடைய திருநாமம்சுமந்த ஸம்ஸாரிபேரையு மெழுத்தாணியைத்தீட்டி ஓலையிலேவாட்ட எழுதமாட்டானென்றபடி. (ருரு)

பேரே வரப்பிதற்ற லல்லாலெம் பெம்மானை
ஆரே யறிவா ரதுநிற்க-நேரே
கடிக்கமலத் துள்ளிருந்தும் காண்கிலான், கண்ணன்
அடிக்கமலந் தன்னை யயன். (ருகூ)

ப-உ,—பேர் - திருநாமத்தை, வர (வாயில்) வரும்படி, பிதற்ற லல்லால்-பலகால் சொல்லுகை யொழிய, எம்-நமக்கு, பெம்மானை - ஸ்வாமியானவனை, ஆர் - எவர்கள், அறிவார் - தெரிந்து கொள்வர்கள், அது நிற்க-அந்த விஷயமிருக்க, கடி - பரிமளமுள்ள, கமலத்து - நாபீகமலத்தினுடைய, உள்-மத்யத்தில், நேரே-நிரந்தரம், இருந்தும்-வாஸம் பண்ணியும், அயன்-ப்ரஹ்மா, கண்ணன் - திருமாலுடைய, அடிக்கமலந்தன்னை - தாமரைப்பூப்போன்ற பாதத்தை, காண்கிலான் - அறிய ஸமர்த்தனல்லன். (ருகூ)

வ்யா.—அவ.—ஐம்பத்தாறும்பாட்டு.—(பேரே)பேராயர்க்காட்படுகையாவது, அவன் விஷயீகரிக்கப்புக்கால் தன் செல்லாமை தோற்ற நிற்கையல்லது இவனவனைப் பரிச்சேதித்தறிகையாவதென்னென்கிறது.

(பேரித்யாதி) பேராலே அவன் வரும்படி. (பிதற்றலல்லால்) திருநாமத்தைச் சொல்லலாமென்றுமாம். அன்றிக்கே, ஏதேனும்

சொல்லப்புக்காலும் திருநாமம் வாயிலே வரும்படி பிதற்றலல்லால். இதுக்கீடாகச் சொல்லுகை யென்றுமாம். (எம்பெம்மானித்யாதி) என்னுடைய ஸ்வாமியை ஆரேயறிவார். அவ்விடையாட்டம் நிற்க, (நேரித்யாதி) அறிவார் கிடக்கிடீர், அறியாதாரைக் கேட்கலாகாதோ. ஸர்வேஶ்வரனுடைய பரிமளத்தை யுடைத்தான திருநாபீகமலத்திலே அவ்யவதாநேந பிறந்து அவன்றன்னாலே ஓதுவிக்கப்பட்டு அங்கேயிருக்கிற ப்ரஹ்மா, ஸர்வேஶ்வரனைக் காண்கிறிலன் - அறிகிறிலன்.

நம்மாலறிய வொண்ணுமோவென்னில்; (பேரேவரப் பிதற்றல்) கன்று நின்றவிடத்தே தாய் வருமாப்போலே வாஸிதமாக வென்றுமாம். (எம்பெம்மானை) நமக்கு நேரே காட்டினபடி. (உள்ளிருந்தும் காண்கிலான்) கடற்கரையிலே குடில் கட்டிக்கொண்டிருக்குங் காட்டில் கடலைப் பரிச்சேதிக்க வொண்ணுமோ? அபரிச்சேத்யமென்றறியில் அறியலாம். பெரியகிழாயார் "ப்ருஹ்விஷாம்வரஃ- ப்ரஹ்மவிதாம்வரஃ". (ருசா)

அரு.—ஐம்பத்தாறும் பாட்டு.—மேலுக்கவதாரிகை (நம்மாலித்யாதி). திருநாமம் வாயிலேவாஸிதமாக. பெரியகிழாயார்-பெரியவன். ப்ரஹ்மா பெரியவனேவென்ன; அருளிச்செய்கிறார் (ப்ருஹ்விஷாம்வரஃ - ப்ரஹ்மவிதாம்வரஃ என்று). (ருசா)

அயனின்ற வல்வினையை யஞ்சினே னஞ்சி
உய நின் திருவடியே சேர்வான் - நயநின்ற
நன்மாலை கொண்டுநமோ நாரணா வென்னும்
சொன்மாலை கற்றேன் றொழுது. (ருஎ)

ப-உ.—அயல் - பக்கத்தில், நின்ற - இருக்கிற, வல் - ப்ரபலமான, வினையை - பாபத்தைக்குறித்து, அஞ்சினேன் - பயப்பட்டேன்; அஞ்சி - பயப்பட்டு, உய - உஜ்ஜீவிக்க, நின் - உன்னுடைய, திருவடி - திருப்பாதங்களை, சேர்வான் - அடைவதற்காக, நயம்நின்ற - இன்பமாயிருக்கிற, நல் - ஶ்ரேஷ்டமான, மாலைகொண்டு - சப்த ஸந்தர்பங்களைக்கொண்டு, தொழுது - ஆஶ்ரயித்து, நமோநாரணாவென்னும் - திருமந்த்ரமென்கிற, சொல்மாலை - சப்தஸந்தர்ப்பத்தை, கற்றேன் - அப்யஸித்தேன். (ருஎ)

வ்யா.—அவ.—ஐம்பத்தேழாம் பாட்டு.—(அயல் நின்ற) நீர் பகவத்விஷயத்தில் செய்ததென்னென்னில்; ஸம்ஸாரம் பயஸ்தாந மென்னுமிடமும் உஜ்ஜீவிப்பா ரவனைப்பற்றியென்னு மிடமுமறிந் தேனென்கிறார்.

(அயலித்யாதி) நானிட்டவடியிலேயிட்டு வாராநின்ற மஹா பாபங்களை யஞ்சினேன். (அஞ்சி உய) அவற்றை யஞ்சி உஜ்ஜீவி க்கைக்காக. (நின் திருவடியே சேர்வான் நயம்நின்ற நன்மாலைகொ ண்டு) நிர்வசநரூபமாக நின்ற நல்லமாலை கொண்டு. (நமோநாரணா வென்னும் சொன்மாலை கற்றேன்) சொல்தொடை கற்றேன். (தொ ழுது) வணங்கி, சொன்மாலைகற்றேன். ஆற்றாமையாலே நானுகைக் குப் பேசினேன்.

(அயல் நின்ற) விஶ்லேஷத்தாலேவரும் வ்யஸநத்துக் கஞ்சி, திருநாமஞ் சொல்லுந்தனையும் கடக்க, சாபலத்தாலே நின்ற. (ருஎ)

அரு.—ஐம்பத்தேழாம்பாட்டு.—அயல்நின்ற - அண்டையிலே யென்றபடி. நயம்நின்ற-சாஸ்த்ரரூபமாய்நின்ற. அதாவது-திருமந்த்ரார்த் தத்தை நிர்வஹிக்கிற தமிழ்த்தொடை என்றபடி. "கற்றேன்" என்று வருத்தம் தோற்றுகையாலே ஆற்றாமை சொல்லுவிக்கச் சொன்னே னென்றபடி. நானுகைக்கு - ஸத்தை பெறுகைக்கு.

வல்வினையானது தூரப்போகாமல் கிட்டநிற்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (விஶ்லேஷத்தாலேயித்யாதி). இத்தனைநாளுங் கூடியிருந்து நாமிவனைப்பிரிந்து போகிறோமென்றஞ்சி துக்கப்பட்டு, சாபலத்தாலே நின்றதென்றபடி. (ருஎ)

தொழுது மலர்கொண்டு தூபம்கை யேந்தி
எழுது மெழு வாழி நெஞ்சே-பழுதின்றி
மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கைதொழுவான்
அந்தரமொன் றில்லை யடை. (ருஅ)

ப-உ.—நெஞ்சே - மனமே, மலர் - பூவை, கொண்டு - ஸம் பாதித்து, தூபம் - புகையை, கையேந்தி - கையிலேபிடித்து, தொ ழுது - ஆஶ்ரயித்து, எழுதும் - உஜ்ஜீவிப்போம்; எழு - எழுந்திரு;

வாழி - இந்த ஸம்பத்து உனக்கு நித்யமாய்ச் செல்லுக; பழுதின்றி- தோஷமில்லாமல், மந்திரங்கள் - மந்த்ரங்களை, கற்பனவும் - அப்ய ஸிக்கையும், மால் - ஸர்வேஶ்வரனுடைய, அடியே - பாதங்களையே, கைதொழுவான் - அஞ்சலிபண்ணுகைக்காக, (ஆனபின்பு) அந்தரம் - விலம்பம், ஒன்றில்லை - கொஞ்சமுமில்லை; அடை - கிட்டு. (ருஅ)

வ்யா.—ஐம்பத்தெட்டாம்பாட்டு.—(தொழுது) கையாலே தொழுது. புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு தொழுது. (எழுதும்) எழுவோம். போவோம். (எழு) போகு. (வாழிநெஞ்சே) நெஞ்சே! உனக்கு நன்மையுண்டாக. (பழுதின்றியித்யாதி) விச்சேதமின்றிக் கே எல்லாத்திருமந்த்ரங்கள் கற்கிறதும் கைதொழுகை. ஆனபின்பு, (அந்தரமொன்றில்லை யடை) ஒருக்ஷணமாத்ரம்போகாதே அவன் திருவடிகளிலே யடை.

(எழுதும்) உஜ்ஜீவிப்போம். (எழு) ஒருப்படு. (வாழி)ஒருப்பட்ட படிக்கு மங்களாசாஸநம். இது வுனக்கு நித்யமாயுண்டாக. (பழுதி ன்றி) குருகுலவாஸம் பண்ணிப் பழுத்துவிழக்காண்கை. முதலிலே சொல் என்னில் உத்பத்திதோஷமாமிறே. (கற்பனவும்) கிடந்தா னைக் கண்டேறுதே சந்தையிட்டுக் கற்கை. (ருஅ)

அரு.—ஐம்பத்தெட்டாம் பாட்டு.—கைதொழுகை - தொழுகைக் காக வென்று தமுல். அந்தரமொன்றில்லை - ரந்த்ரமின்றிக்கே சீக்ர மாகவென்றபடி. மந்த்ரத்துக்குப் பழுதில்லாமையேதென்ன; அருளிச் செய்கிறுர் (குருகுல வாஸமித்யாதி). பழுத்துவிழுகை - அடியிலே யிருக்க மடியிலேவிழுகை. அநுவர்த்தந பூர்வகமாகக்கேளாவிட்டால் விரோத மேதென்ன; அருளிச்செய்கிறுர் (முதலிலே யித்யாதி). ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணுமல் சொல்லென்று கேட்கி லென்றபடி. உத்பத்திதோஷம்-மந்த்ரத்துக்கு வீர்யமின்றிக்கேயொழிகை.(ருஅ)

**அடைந்த வருவினையோ டல்லல்நோய்பாவம் [மை**
**மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் - துடங்கிடை**
**முன்னிலங்கை வைத்தான் முரணழிய, முன்னொருநாள்**
**தன் விலங்கை வைத்தான் சரண்.** (ருக)

ப-உ.—அடைந்த - ப்ராப்தமான, (ப்ராசீநமான) அரு - கொடு மையான, வினை - பாபம், அல்லல் - துன்பம், நோய் - வ்யாதி,

பாவம்-கெட்டநடத்தை, மிடைந்தவை-நெருங்கினவிவைகளை, மீண்டொழியவேண்டில் - திரும்பாமல்போகவிட இச்சித்தால், நுடங்கு - துவளுகிற, இடையை - மத்யத்தையுடைய பிராட்டியை, முன் - பூர்வகாலத்தில், இலங்கை வைத்தான் - லங்கையிலே ஸ்தாபித்த ராவணனுடைய, முரண் - பலம், அழிய - நசிக்கும்படி, முன்னொரு நாள் - முன்பு ஒரு காலத்தில், தன் - ஸ்வீயமான, வில் - சார்ங்கத்தை, அம் – அழகிய, கை - கரத்திலே, வைத்தான் - தரித்தவனே, சரண் – உபாயம். (சுo)

வ்யா.—அவ.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—(அடைந்த)காலக்ஷேபம் பண்ணும்படி சொல்லுகிறது.

(அடைந்தவருவினை) ஆத்மஸ்வரூபத்திலன்றியே அசித்ப்ரத்யாஸத்தியாலே வந்தேறியான அஜ்ஞாநாதிகள். (அல்லல்) மாநஸவ்யாதி. (நோய்)சரீரவ்யாதி. ஆதிவ்யாதிகளென்றபடி. (பாவம்)பரிக்ரஹித்த சரீரத்தாலே பண்ணின நிஷித்தாநுஷ்டாநம். (மிடைந்தவை) சரீராரம்பகஹேதுவான பாபங்களுமாக நெருங்கினவை. (மீண்டொழியவேண்டில்) "கஹம்த்வாஸவ‑வாபேஹ்யோமோக்ஷயிஷ்யாமி - அஹந்த்வாஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்னும்படி ஒரு ராஜகுலஸம்பந்தத்தாலே மீளாதபடி போகவேண்டில், (நுடங்கிடையை) பிரியத் தகாதவளை, (முன்னித்யாதி) பண்டுலங்கையிலே வைத்தவனுடைய மிடுக்கொழிய. (தன்விலங்கை வைத்தான்) தன்னுடைய திருவில்லை யழகிய திருக்கையிலே வைத்தவன் உபாயம். இத்தால், ஸர்வேஸ்வரனுக்கு போக்யமாயிருந்துள்ள வாத்மாவை "என்னது" என்றிருக்குமவன் பிராட்டியைப் பிரித்த ராவணனோடொக்குமென்னுமிடமும், "இவ்வாத்மா அவனுடையது" என்றநுகூலித்தவனுக்குப் பிராட்டியிருந்த மார்விலே அம்பேற்றிப் பரிஹரித்தாற்போலே பரிஹரிக்குமென்னுமிடமும், அவளோடு கூடினவ னுபாயமென்கையாலே, பற்றுவார்கள் அவள் முன்னாகப்பற்ற வேணுமென்னுமிடமும் சொல்லுகிறது.

திருவுள்ளம் இந்த்ரிய ஜயம்பண்ணென்றது, தொழு என்றது, திருநாமம் சொல்லென்றது, நினையென்றது. பலபடிகள் சொன்ன விவற்றுக்குத் தாத்பர்யமென்னென்னில்; இதுக்குக் கீழெல்லாம் ஷட்கத்ரயத்திற் சொன்னவார்த்தைபோலே ஸ்வரூபம் விசத

மாகைக்குச் சொன்னநிலே ; இது சரமஸ்லோகத்தில் நிலேபோலே. உணர்ந்தவன்று அவனல்லதில்லே.

(அடைந்தவருவினே) அவித்யாதிகள். ஆத்மா ஹேயஸம்ஸர்க்கத்துக் கநர்ஹனுகையாலே "அடைந்த" என்றது. பரமாத்மாவுக்கும் ப்ரவேசமொக்குமிறே. "அநஶ்நந் - அநச்நந்" (அல்லல்நோய்) ஆதிவ்யாதி. (பாவம்) சரீரத்துடன் பண்ணும்பாவம். (மிடைந்தவை)ஸமிதை யிடாமாணிபோலே; பரணிக்கூடு வரிந்தாற்போலே. (மீண்டொழியவேண்டில்) தொடருகிற பாம்பைத்திரிய விடுத்தாற்போலே "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" யிறே. ஸர்வசக்தியைக் கொண்டு கார்யங்கொள்ளவேண்டாவோ. (நுடங்கிடையை) ஏக த்ரவ்யத்தை பிந்நமாக்கின. (இலங்கை வைத்தான்) தாயையும் தமப்பனேயும் பிரித்தபையல் மிடுக்கழிய. பிராட்டி அம்பெய்யுமன்று இவனல் போக்கலாவது. "தத்தஸ்யஸத்ருசம்பவேத் - தத்தஸ்யஸத்ருசம்பவேத்". கூர்மையை விஸ்வஸித்திருக்குமத்தனே அவளுக்குப் பரியுமாப்போலே பரியும்; அவதாரஸௌலப்யம். பிறந்து முன்னே யுன்னேப்பெறுகைக்கு யத்நம் பண்ணுநின்றான்; இனிப்ரதிபத்தியே யுள்ளது (ருகூ)

அரு.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—இதில் உபாயஸ்வீகாரம் சொல்லுகிறதென்று கண்டுகொள்வது. மீண்டொழிய-மீளுகையொழிய. போனது திரியவுமிவனிடத்திலே மீளாதபடி.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (திருவுள்ள மித்யாதி). திருவுள்ளமானது "எழுதும் எழு" என்று இங்கே சொன்னீர் ; இப்படி பல்படியாகச் சொல்லுகிறதுக்குக் கருத்தென்னென்று ஆழ்வாரைக்கேட்கவென்று சங்காபிப்ராயம். ஸ்வரூபம் விசதமானுலவனே உபாயமாக வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உணர்ந்தவன்றித்யாதி).

வந்தேறியானது பரமாத்மாவுக்குமொவ்வாதோவென்று சங்கை. "இறை" என்று-சங்காஸூசகம். அதுக்கு உத்தரம். (அநஶ்நந்-அநச்நந் என்று). ஸமிதையிடாமாணி-சுப்பிலேமேலே சூழ்த்துக்கொளுகிறபூச்சி. பற்றுகைக்கு ஸௌலப்யமென்னென்ன; அருளிச்செய்கிறார். (அவதாரம் ஸௌலப்யமென்று). அது இப்போதில்லேயேயென்ன ; அருளிச்செய்கிறார். (பிறந்துமுன்னேயித்யாதி). (ருகூ)

சரணு மறைபயந்த தாமரையானேடு
மரணுய மன்னுயிர்கட் கெல்லாம் - அரணுய
பேராழிகொண்ட பிரானன்றி மற்றறியாது
ஓராழி சூழ்ந்த வுலகு. (கூ0)

ப-உ.—சரணு - உபாயமாக, மறை - வேதத்தை, பயந்த - உபதேசிக்கப்பட்ட, தாமரையானேடு - நாபீகமலத்திற் பிறந்த ப்ரஹ்மாவோடுகூட, மரணுய - மரணதர்மத்தையுடைய, மன் - நித்யரான, உயிர்கட்கெல்லாம் - ஜீவாத்மாக்களுக்கெல்லாம், அரணுய - ரக்ஷகமான, பேர் - பெரிய, ஆழிகொண்ட - சக்ரத்தையுடைய, பிரானன்றி - உபகாரகனையல்லது, ஓர் - அத்விதீயமான, - ஆழி ஸமுத்ரத்தால், சூழ்ந்த - ஆவரிக்கப்பட்ட, உலகு - பூலோகத்திலுள்ளார், மற்று - வேறொன்றை, அறியாது. அறியமாட்டார்கள். (கூ0)

வ்யா.—அவ.—அறுபதாம்பாட்டு.—(சரணித்யாதி) கீழ் அவனையே உபாயமென்றது; பேறு இவர்களதேயானபின்பு இவ்வாத்மாக்கள் உபாயமானுலாகாதோ வென்னில்; கீழ் போக்கறிவான்; இப்போது தாங்கள் படுகிறது இன்னத்தாலே என்றறியார்கள்; வரக்கடவதறியார்கள். ஈஸ்வரன் இவை யெல்லாமறிந்து பரிஹரிக்க வல்ல ஜ்ஞாந சக்த்யாதிகளையுடையவன். "பழகியான் தாளே" என்னுமாப்போலே, ஆகையாலே அவனே உபாயமாமித்தனை; இத்தை லோக மறியாதென்கிறது.

(சரணுவித்யாதி) எல்லார்க்கும் ஹிதத்தைச்சொல்லக்கடவதான வேதத்தை யோதுவிக்கப்பட்ட ப்ரஹ்மாவோடு."சரணுமறைபயந்த" என்றத்தை, "அரணுய" என்றத்தோடே கூட்டி ஈஸ்வரனுக்குவிசேஷணமாக்கவுமாம். (மரணுய மன்னுயிர்கட்கெல்லாம்) கல்பாதியிலே யுண்டாய் கல்பாந்தத்திலில்லையாகிற ப்ரஹ்மாவோடே கூட "நஜாயதேம்ரியதேவா - நஜாயதேம்ருய தேவா" "ஜாயஸ்வம்ரியஸ்வ-ஜாயஸ்வ ம்ருயஸ்வ" என்று ஜநநமரண தர்மாக்களான வுயிர்களுக்கெல்லாம். (அரணுய) ரக்ஷகமான. (பேராழியித்யாதி) கீழ்பெருமாள் ப்ரஸ்துதராகையாலே கடலைவெதுப்பித் தமக்கு வசமாக்கிக்கொண்ட சக்கரவர்த்தித் திருமகனென்னவுமாம். கையிலே திருவாழியையுடையனாய் உபகாரகனான ஸர்வேஸ்வரனுடைய உபாயபாவத்தை

யறிவர். (மற்றறியாதோராழிசூழ்ந்தஉலகு) மற்றுயிருந்துள்ள கடல் சூழ்ந்த லோகமானது உபாயமாகவறியாது.

(சரணுமறைபயந்த) அபிமதஸித்திகளுக் கடைத்த உபாயபேதங்களையுடைய வேதங்களை ஜகத்துக்கோதுவிக்கும்*ப்ரஹ்மவிதாம்வரனன ப்ரஹ்மா மந்த்ரக்ருத் என்பது.(மரணுய)சாவது பிறப்பதாகிற சரீரதர்மம். (மன்னுயிர்) ஆத்மதர்மம் மரணதர்மங்களுடைய. அஜ்ஞனய், அசக்தனய். அரணனவை - இவற்றை விநாசகன் அறியுமத்தனே. "ஃஏஷோய நாஹிஜாநாதி - மூடோயம் நாபிஜாநாதி" "வேஷாஹழ - வேதாஹம்". ஆப்பான், ஜீயர்க்கு, "ஜீயரே! இவ்வுலகு எம்பெருமானை யல்லாதிருந்ததோ" என்ன; "அதுக்குப் பொருளென்" என்ன; "உயர்ந்தோர் எம்பெருமானை யல்லதறியார்" என்ன; இத்தை பட்டரைக்கேட்க, "அதுக்கொருகுற்றமுண்டு, "ஓராழி சூழ்ந்த" என்று விசேஷிக்கவொண்ணுது" என்ன; இதுக்குப்பொருளோவென்ன; "ஜீயரே நான் சொல்லும்பொருளென்" என்ன; "உலகறியாது" என்ன; "அதுவேபொருள்" என்றுர். இத்தைப்பிள்ளையும் ஜீயருக்குரைக்கத் திருக்கலி கன்றி தாஸர் மறந்ததை உணர்த்திஞரென்றருளிச் செய்தார். (௯0)

அரு.—அறுபதாம்பாட்டு.—உபாயமாஞல்-உபாயயத்நம் பண்ணிஞல். அறிவான்-தன்னுடைய உபாயபாவத்தைத்தானே யொழிய வேறெருவரு மறிவாரில்லையென்றபடி. ஈஸ்வரனை யுபாயமாகவறியாது.

நித்யமானவேதத்தை யுண்டாக்குகையாவதென்னென்ன; அருளிச்செய்கிறுர் (மந்த்ரக்ருத்தித்யாதி). மந்த்ரத்ரஷ்டாவை "மந்த்ரக்ருத்" என்னக்கடவது. இவற்றை-அரணன உபாயத்தை. விநாசகன்-ஜந்மாதிகளைப்போக்குகிற ஈஸ்வரன். லோகமறியாது, ஈஸ்வரனறியுமென்னு மதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறுர்.(ஃஏஷோயழ-மூடோயம் இத்யாதி). "பிரானன்றி மற்றறியாது- உலகு" என்று உலகானது ஈஸ்வரனை யொழிய வேறெரு உபாயத்தை யறியாதென்னும் சப்தம்தோற்றுநிற்க, சப்தத்தை நெருக்கி உபாயமீஸ்வரனறியு மொழிய உலகறியாதென்னு மதுக்கு ஸம்வாதமாக வருளிச்செய்கிறுர்.(ஆப்பானித்யாதி) பொருளென்-பொருளேது "பொருளென்" என்று வெறுத்தாற்போலே சொல்ல, "ஆனுலும் கேட்ட வுமக்குச் சொல்ல

வேணுமே; உபாயமீஸ்வரனறியுமத்தனை உலகறியாது" என்று பட்டர் ஜீயர்க்கருளிச்செய்தாரென்றபடி. (சுo)

உலகு முலகிறந்த வூழியும், ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும் - உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும், திருமால்தன்
புந்தியிலாய புணர்ப்பு. (சுக)

ப-உ.—உலகும் - லோகங்களும், உலகு - லோகம், இறந்த - அழிந்துகிடக்கிற, ஊழியும் - ப்ரளயகாலமும், ஒண் - அழகிய, கேழ் - நிறத்தையுடைய, விலகு - (அலை) எறிகிற, கரும் - கறுத்த, கடலும் - ஸமுத்ரமும், வெற்பும் - மலைகளும், உலகினில் - ஜகத்திலிருக்கிற, செம் - சிவந்த, தீயும் - தேஜஸ்ஸும், மாருதமும் - காற்றும், வானும் - ஆகாசமும், புந்தியில் (ஸ்ருஷ்டி விஷயமான) ஸங்கல்ப ரூபஞ்ஞாநத்தில், ஆய - ஒருப்பட்ட, திருமால் - ஸ்ரியஃபதியினுடைய, புணர்ப்பு - ஸ்ருஷ்டி. (சுக)

வ்யா.—அவ.—அறுபத்தோராம்பாட்டு.—(உலகு) ஹிதத்திலே யறியாததுக்குத் தந்தாமுடைய உத்பத்தியிலே வைத்து அறிவுணர்த்துகிறார்.

(உலகும்) லோகமடங்கத்தானே சேஷித்தகாலமும். (ஒண்கேழ்) அழகிய நிறத்தையுடைத்தாய் அலை யெறியாநின்ற கடலும், லோகத்துக்காதாரமான மலையும். (செந்தீயித்யாதி) இவ்வோக்கமான கடலிலே லோகமலைந்து நோவுபடப்புக்கவாறே, ஐயோ! நோவுபடாநின்றதே! என்று அதுக்கு துக்கித்த பிராட்டிக்கு ப்ரியமாகத் தன் ஸங்கல்ப ஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்டித்து

(ஒண்ணித்யாதி) தெளிந்து அழகியதாய்ச் சலிக்கின்ற கடலும். (வெற்பும்) பூமிக்கு ஆணியடித்தாற்போலே யிருக்கும். (திருமாலித்யாதி) தாய்க்கு ப்ரியமாக ப்ரஜைகளை நோக்குமித்தனையிறே. இத்தலை யறிந்தோ ஸ்ருஷ்டித்தது; விலக்காமையேயுள்ளது. (சுக)

அரு.—அறுபத்தோராம்பாட்டு.—புந்தி - புத்தியாய், அத்தால் ஸங்கல்பஜ்ஞாநமென்கிறது. புணர்ப்பு - ஸ்ருஷ்டி. இவை யறியாதகாலத்திலுமவனே ஸ்ருஷ்டிக்கையாலே இப்போது உபாயமறிவானுமவனென்றபடி. (சுக)

**புணர்மருதி னூடுபோய்ப் பூங்குருந்தம் சாய்த்து
மணமருவ மால்விடையேழ் செற்று - கணம்வெருவ
வேழுலகம் தாயனவு மெண்டிசையும் போயினவும்
சூழரவப் பொங்கணையான் தோள்.** (கூஉ)

ப.உ.—புணர் - சேர்ந்திருக்கிற, மருதின் - மருதமரத்தினுடைய, ஊடு - நடுவில், போய் - சென்று, பூம் - புஷ்பித்த, குருந்தம் - குருக்கத்திமரத்தை, சாய்த்து - தள்ளி, மணம் - விவாஹம், மருவ - தலைக்கட்டுகைக்காக, மால் - பெரிய, விடை - எருதுகள், ஏழ் - ஏழையும், செற்று - கொன்று, கணம் - கூட்டம், வெருவ - நடுங்கும்படி, ஏழுலகும் - ஸப்தலோகங்களையும், தாயினவும் - அளந்தனவும், எண்டிசையும் - எட்டுதிக்குக்களிலும், போயினவும் - சென்றனவும், சூழ் - பரந்த, அரவம் - திருவநந்தாழ்வானுகிற, பொங்கு - கிளர்ந்த, அணையான் - படுக்கையுடையவனுடைய, தோள் - புஜங்கள் கிடீர். (கூஉ)

வ்யா.—அவ.—அறுபத்திரண்டாம்பாட்டு.—(புணர்) உத்பந்நமானபின் இவரதோ தம்கார்யத்துக்குக் கடவராயிருக்கிறதென்கிறது.

(புணரித்யாதி) ஒன்றென்னலாம்படி நிர்விவரமாயிருந்த மருதினிடைபோய். (பூங்குருந்தம் சாய்த்து) தர்சநீயமான குருந்தத்தைச் சாய்த்தும். (மணமித்யாதி) நப்பின்னைப்பிராட்டியுடைய பாணிக்ரஹண மங்களமானது தலைக்கட்டும்படிக்கீடாகப்பெரிய எருதுகளேழையும்செற்று. (கணமித்யாதி) "ஸமஜ்ஞ ஸ்துராணாம் ஸங்கைஸ்ஸுராணும்" என்கிறபடியே அநுகூலரோடு ப்ரதிகூலரோடு வாசியற "இது வென்னகப் புகுகிறதோ" என்று வெருவும்படிக்கீடாக வேழுலகை யுமநாயாஸேந கடந்தனவும், எட்டுதிக்குக்களிலும் போய் வ்யாபித்தனவும். (சூழித்யாதி) பரந்து, மேன்மை குளிர்த்தி நாற்றங்களையுடைத்தாயிருந்துள்ள திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவன்.

களை பிடுங்கும்படி. (பூங்குருந்தம்) பூவைக்காட்டி அந்யபரதை பண்ணி வஞ்சிக்கப்பார்க்கை. (மணமித்யாதி) தனக்கு வந்த கர்மத்தைத் தீர்த்தபடி. (ஏழுலகித்யாதி) பிராட்டிக்குச்செய்யும் செயலை

இந்த்ரனுக்குச்செய்கை. (எண்டிசையும் போயினவும்) திக்குக்களை வெளியடைக்கை. (சூழரவித்யாதி) இப்படிப்படுக்கையில் கண்வளரப் பெறாதே அலமந்து திரிவதே. "வாணஸ்ஷஸ்ய -தவதூஷ்யாயா யாஂ ஜஸிதஷயா - பாண்டரஸ்யாத பத்ரஸ்யச் சாயாயாம் ஜரிதம் மயா" ஸிம்ஹாஸநத்திலிருக்க அவஸரம் பெற்றிலன்; இக்காலத்தி லேயிறே நிழலிலே முத்துக்குடையிடுவது. (௬௨)

அரு.— அறுபத்திரண்டாம்பாட்டு.— இவரதோ இவருடைய யத்நமோ-பொங்கணை-கிளர்ந்தவணை.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (களை பிடுங்கும்படி யென்று) தோளே இவையெல்லாம் செய்ததென்றபடி. படுக்கைவிட்டு ரக்ஷணார்த்தமாகத்திரிந்த விடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (வாணஸ்ஷஸ்ய -தவதூஷ்ய-பாண்டரஸ்யாதபத்ரஸ்யஇத்யாதி) இக்காலத்திலே-வ்ருத்தனுனவிக்காலத்திலே.ராஜ சிஹ்நார்த்தமாகஸிம்ஹாஸநத்திலே யிருக்கிறபோது நிழலிலே குடையிடுவது. இதுக்கு முன்பெல்லாம் ரக்ஷணார்த்தமாக வெய்யிலிலே குடையிட்டுத் திரிந்தேனென்றபடி. (௬௨)

தோளவனை யல்லால் தொழா, என்செவியிரண்டும்
கேளவனதின் மொழியே கேட்டிருக்கும்- நாநாளும்
கோணாகணையான் குரைகழலே கூறுவதே
நாணாமை நள்ளேன் நயம். (௬௩)

ப-உ.—தோள் - கையானது, அவனையல்லால் - அந்த ஸர்வேஶ்வரனை யல்லது, தொழா - ஆச்ரயிக்கிறதில்லை; என் - என்னுடைய, செவியிரண்டும் - இரண்டுகாதுகளும், கேள் - பந்துவான, அவனது - அவனுடைய, இன் - மதுரமான, மொழி - பேச்சை, கேட்டு - ஶ்ரவணம்பண்ணி, இருக்கும் - (தரித்து) இருக்கும்; நா - நாக்கு, நாளும் - எப்போதும், கோள் - பலத்தையுடைய, நாகம்-ஸர்ப்பத்தை. அணையான் - படுக்கையாகவுடையவனுடைய, குரை - (ஆபரணத்தின்) த்வநியையுடைய, கழலே - திருவடிகளையே, கூறுவது - சொல்லாநிற்கும்; நாணாமை - லஜ்ஜையில்லாமல், (விஷயத்தை) நள்ளேன் - நெருங்கேன், நயம்-என்னுடை யப்ராண்யம். (௬௩)

வ்யா.—அவ.—அறுபத்துமூன்றும்பாட்டு.—(தோள்) இப்படி அவன் ஸுலபனென்றநுஸந்தித்த பின்பு என்னுடையஇந்த்ரியங்களவனையல்ல தறிகிறதில்லை.

(தோளித்யாதி) நான் வேறே யொன்றைத் தொழச்சொன்னாலும் என்தோளானது அவனை யல்லது தொழுகிறதில்லை. (என்செவியித்யாதி) என் செவிகள், உறவானவனுடைய இனிய மொழியைக் கேட்டிராநின்றது. (நாநாளும்) என்னுடைய நாக்கானது எப்போதும். (கோள் நாகணையித்யாதி) "கோள்" என்று ஒலிக்கும், மிடுக்குக்கும் பேர். "ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி - ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி" என்னும்படியே, அநந்தசாயியான ஸர்வேஶ்வரனையே கூறுமத்தனை. (நயம்நாணுமைநள்ளேன்) ஆசைப்படப்படுவதான சப்தாதிகளை லஜ்ஜியாதேகிட்டேன்; ஹாஸ்யமான விஷயமென்றுமாம். அவன் ரக்ஷகனாகவுமாம்,தவிரவுமாம்.

(தோளவனை) அவன் தான் தனக்குப் பகையென்னலாம்படியிருந்தாலுமென் செவிதானும்கேட்பது. ஆசைப்படும் விஷயங்கள். (நாணுமை நள்ளேன்)ஆண்பிள்ளைச் சொற்றாழ்வியை யாசைப்பட்டவனைப்போலே உணர்ந்தவனுக்கு லஜ்ஜிக்கவேணும். (கோள்) பிராட்டிக்கும் தனக்கும் கிடக்கைக குண்டாகை. (கூங)

அரு.—அறுபத்து மூன்றும்பாட்டு.—கேள் - உறவு. சப்தாதிகள்-ஆசைக்கும் ஹாஸ்யத்துக்கும் விஷயம் நயம் விரும்புகை.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (அவன்றானித்யாதி)"நயம்" என்றத்தை யருளிச்செய்கிறார் (ஆசைப்படுமித்யாதி) விஷயங்களைக்கண்டால் நாணவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆண்பிள்ளையித்யாதி)ஆண்பிள்ளைச் சொற்றாழ்வி-பெண்வடிவு கொண்ட புருஷன் - கோள்-மிடுக்கும், பரப்பும். கிடக்கைக்குண்டாகை-இருவரும் கிடக்கைக்கிடம்போருகை. (கூங)

நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உயவேனுயர்ந்தவரோடல்லால் - வியவேன்
திருமாலை யல்லது தெய்வமென் றேத்தேன்
வருமாறென் நம்மேல் வினை. (கூச)

ப.உ.—பிறர் - விஜாதீயனான ஸர்வேஶ்வரனுடைய, பொருளை - தநமான ஆத்மாவை, நயவேன் - விரும்பேன்; கீழாரோடு - தாழ்ந்த ஸம்ஸாரிகளோடு, நள்ளேன் - சேரமாட்டேன்; உயர்ந்தவரோடல்லால் - ஶ்ரேஷ்டர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களோடுதப்ப, உயவேன் - ஸஹவாஸம் பண்ணமாட்டேன்; திருமாலையல்லது - ஶ்ரியஃபதியை யல்லது வேறுசிலரை, தெய்வமென்று (ஆஶ்ரயணீய) தேவதையென்று, ஏத்தேன் - துதிக்கமாட்டேன்; வியவேன் - ஆச்சர்யப்படமாட்டேன்; நம்மேல் - நம்முடையமேலே, வினை-பாபம், வருமாறு - வரும்ப்ரகாரம், என் - எங்ஙனே. (கூச)

வ்யா.—அவ.—அறுபத்துநாலாம்பாட்டு.—(நயவேன்) ப்ராப்தத்தைச் செய்துஅப்ராப்தத்தைச் செய்யேனென்றிருக்கிற வென்பக்கல் பாபத்துக்கு வரப்போமோவென்கிறார்.

(நயவேன் பிறர்பொருளை) பிறர்பொருளைஆசைப்படேன். த்ரவ்யத்துக்கு உத்கர்ஷமாவது - த்ரவ்யந் தன்னுடைய நன்மையாலும் உடையவனுடைய நன்மையாலும். த்ரவ்யம்பரிணாமியானஅசித்தன்றிக்கே ஆத்மத்ரவ்யமாயிருந்தது. "யஸ்யாத்மாஶரீரம் - யஸ்யாத்மாசரீரம்" "பதிம்விஶ்வஸ்ய-பதிம்விஶ்வஸ்ய" என்று ஓதப்படுகிறவன் உடையவன். உத்க்ருஷ்டமான வாத்மாவை "என்னது" என்றிரேன். (நள்ளேன் கீழாரோடு) ஆத்மாவை "என்னது" என்றிருக்குமவர்களாயிற்றுக் கீழாராகிறார்; அவர்களோடு கிட்டேன்; தங்கள்படி யாக்கிக்கொள்வரென்று. (உயவேனுயர்ந்தவரோடல்லால்)உத்தமரென்னுமவர்களோடல்லது உசாவேன். (வியவேன் திருமாலையல்லது) ஶ்ரியஃபதியைக்கண்டல்லது விஸ்மயப்படேன். (தெய்வமென்றேத்தேன்) அவனையல்லது வேறு சிலரைத் தெய்வமென்று ஸ்துதியேன். (வியவேன் திருமாலை) ஶ்ரியஃபதியினுடைய வைஶ்வர்யத்தை யர்த்தவாதமென்றிரேன். (வருமாறென் என்மேல்வினை) "அவஶ்யமநுபோக்தவ்யம் - அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிறவசநத்தைக்கொண்டு என்பக்கலிலே வரப்போமோ பாபத்துக்கென்கிறார்.

(நயவேன்) வாக்யார்த்தம் க்ருத க்ருத்யனென்கிறார். எம்பெருமான் விரும்புமாத்மாவை யபஹரியேன். ராவணன் செயலைச்செய்யேன். கீழார்-அவனுக்குக் கூட்டுப்படும் மாரீசப்ரப்ருதிகள். உயர்ந்தவர்-விஶ்வாமித்ராதிகள். "மஹாத்மாநஸ்து - மஹாத்மாநஸ்து"

பெரியோர். (வியவேன்) "த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குசவிபூதயஃ - த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குசவிபூதயஃ" ப்ரஹ்மாதிக ளேக்கண்டால் அடுப்படைக்கல்லாக நினைத்திருக்குமத்தனை. (திருமாலையல்லது வியவேன் - தெய்வமென்றேத்தேன் - வருமாறென்னென்மேல் வினை) "அவஶ்யமநுபோக்தவ்யம் - அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிறவை என்னைநலியவோ. (௬௪)

அரு.—அறுபத்துநாலாம்பாட்டு.—உயவுகை-உசாவுகை. "பொருள்" என்றது உதாரத்துக்குபலக்ஷணமாக்கி யருளிச்செய்கிறார் (ராவணனித்யாதி) உயர்ந்தவர்-மஹாத்மாக்களாய்ப் பெரியோராயிருக்கிற விஶ்வாமித்ராதிகள். (௬௪)

வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார்
தினையேனும் தீக்கதிக்கண் செல்லார் - நினைதற்
கரியானைச் சேயானை யாயிரம்பேர், செங்கண்
கரியானைக் கைதொழுதக் கால். (௬௫)

ப-உ.—நினைதற்கு - த்யாநிக்க, அரியானை - துர்லபனாய், சேயானை - தூரத்திலிருக்கிறவனாய், ஆயிரம்பேர் - ஸஹஸ்ரநாமங்களையுடையனாய், செம் - சிவந்த, கண் - நேத்ரத்தையுடையனாய், கரியானை - கறுத்த திருமேனியையுடையனானவனை, கைதொழுதக்கால் - கையினால் நமஸ்கரித்தால், வினையால் - கர்மங்களால், அடர்ப்படார் - நெருக்குப்படமாட்டார்கள்; வெம் - க்ரூரமான, நரகில் - நரகத்தில், சேரார் - செல்லமாட்டார்கள்; தினையேனும் - கொஞ்சமும், தீ - துஷ்டமான, கதிக்கண் - வழியில், செல்லார் - போகமாட்டார்கள். (௬௫)

வ்யா.—அறுபத்தைந்தாம்பாட்டு.—(வினையித்யாதி) பாபத்தாலடர்க்கப்படார். (வெந்நரகில்சேரார்) பாபபலமானநரகிலும் சேரார். (தினையித்யாதி) தர்மபுத்ரன் நரகதர்ஶநம் பண்ணினவோபாதியுங்கூடாது இவர்களுக்கு. (நினைதற்கரியானை) ஸ்வ யத்நத்தாலே அறியப்போகாதவனை. (சேயானை) அதுக்கடி தூரஸ்தனானகை. (ஆயிரமித்யாதி) தான்கொடுத்த வறிவையுடையவர்களுக் கேத்துகைக்கு ஆயிரந்திருநாமத்தையும் கண் டநுபவிக்கைக்கு ஶ்ரமஹரமான வடிவையுமுடையவனை. (கைதொழுதக்கால்) அஞ்சலிபண்ணினால்.

(வினையாலடர்ப்படார்) என்னைப்போலே விதேயகரணமின்றியே பாவநமென்றுஸ்ரயித்தார்க்குப் பாபம்போம். (வினை) இங்கநுபவிக்கும் பாபபலமநுபவியார். (வெந்நரகு) போய் அநுபவிக்கும் பாபபலம். (தினை) அஸத்யாபாவத்தாலே. (நினைதற்கரியானை) ஸ்வயத்நத்தாலே நினைப்பார்க்கரியானை. (சேயானை) இவன்குற்றமன்று, வஸ்துஸ்வபாவம். (ஆயிரமித்யாதி) தானே காட்டுவார்க்கு இழிந்தவிடமெல்லாம் துறையாகை. (கைதொழுதக்கால்) பாலைக் குடிக்கநோய்போம். வகுத்தது செய்யவமையும். (௬௫)

அரு.—அறுபத்தைந்தாம்பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (என்னைப்போலே யித்யாதி) விதேயகரணம் - "தோளவனை யல்லால் தொழா" என்கிறபடியே ப்ராப்யமாகப்பற்றுகை. "செங்கட்கரியான்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (பாலைக் குடிக்கநோய்போமென்று). "கைதொழுதக்கால்" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (வகுத்ததித்யாதி). (௬௫)

**காலை யெழுந்துலகம் கற்பனவும் கற்றுணர்ந்த**
**மேலைத் தலைமறையோர் வேட்பனவும் - வேலைக்கண்**
**ஓராழி யானடியே யோதுவது மோர்ப்பனவும்**
**பேராழி கொண்டான் பெயர்.** (௬௬)

ப-உ.—காலை - பால்யாவஸ்தையில், எழுந்து - கிளர்ந்து, உலகம் - லோகத்தார், கற்பனவும் - அப்யஸிக்குமவை யெல்லாம், கற்று -அப்யஸித்து, உணர்ந்த - அறிந்தவர்களாய், மேலை - உயர்த்தியையுடைய, தலை - ச்ரேஷ்டர்களான, மறையோர் - வைதிகர்கள், வேட்பனவும் - ஆசைப்படுவனவும், வேலை - கரையோடுகூடின, கண் - விசாலமான, ஓர் - ஒப்பற்ற, ஆழியான் - ஸமுத்ரதில் பள்ளிகொண்டவனுடைய, அடியே - பாதங்களையே, ஓதுவதும்-சொல்லுவதும், ஓர்ப்பனவும் - மநநம் பண்ணுவதும், பேர் - பெரிய, ஆழி - சக்ரத்தை, கொண்டான் - உடையவனுடைய, பெயர் - திருநாமங்கள். (௬௬)

வ்யா.—அறுபத்தாறும்பாட்டு.—(காலையெழுந்து) ஸத்வோத்தரமானகாலத்திலே எழுந்திருந்து. (உலகம்) மோக்ஷேச்சையுடையவர்கள் கற்பனவும். (கற்றுணர்ந்தவித்யாதி) அறிவுதலைக்கட்டின

வர்கள் பாவநாப்ரகர்ஷத்தாலே ஸாக்ஷாத்கரிப்பனவும். (வேலையித் யாதி) இவற்றினுடைய ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கையுந்திருவாழியுமாய்க் கிடக்கிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையே (போாழிகொண்டான் பெயரே ஓதுவதும்ஓர்ப்பனவும்) ஸர்வேஶ்வரனுடைய திருநாமங்களே யிவர்களுடைய ஶ்ரவணத்துக்குமாநநத்துக்கும் விஷயமாவது.

(காலே) ஸத்வோத்தரமான காலம். (வேலைக்கணோராழியானடியே) கரையையுடைத்தாய் ஒப்பில்லாதகடல். (பேராழிகொண்டான்)இவர்களைரக்ஷிக்கைக் குருவினபத்திரமுந் தானுமாயிருக்கை. "கைகழலாநேமியான்." (௬௬)

அரு.—அறுபத்தாறும்பாட்டு.—மேலைத்தலைமறையோர் - உத்தரபாகத்தில் உபநிஷத்தாத்பர்யங் கைப்பட்ட ஜ்ஞாநாதிகர். (வேலைக்கண்) வேலை-ஸமுத்ரமாதல், கரையாதல். கண்-இடம். ஆழி - ஆயுதமாதல், ஸமுத்ரமாதல். (போாழி) முந்தினது நிரூபகம்; இரண்டாவது ஆயுதம். பத்திரம்-ஆயுதம். (௬௬)

பெயரும் கருங்கடலே நோக்குமாறு, ஒண்பூ
உயரும் கதிரவனே நோக்கும் - உயிரும்
தருமனையே நோக்குமொண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கு முணர்வு. (௬௭)

ப-உ.—ஆறு - நதியானது, பெயரும் - சலிக்கிற, கரும் - விசாலமான, கடலே - ஸமுத்ரத்தையே, நோக்கும் - பார்க்கும்; ஒண் - அழகிய, பூ - தாமரைப்பூவானது, உயரும் - உயரத்தில் வரும், கதிரவனே - ஸூர்யனையே, நோக்கும் - விரும்பும்; உயிரும் - ப்ராணிகளும், (முடிவில்) தருமனையே - யமனையே, நோக்கும் - பார்ப்பர்கள்; (அப்படியே) உணர்வு - ஜ்ஞாநமானது, ஒண் - அழகிய, தாமரையாள் - தாமரைப்பூவில் வாஸம்பண்ணுகிற லக்ஷ்மிக்கு, கேள்வன் - வல்லபனை, ஒருவனையே - ஒருத்தனையுமே, நோக்கும் - விரும்பும். (௬௭)

வ்யா.—அவ.—அறுபத்தேழாம்பாட்டு.—(பெயரும்) மோக்ஷேச்சையுடையவர்களுக்கு மறிவு தலைநின்றவர்களுக்கும், அவனுடைய திருவடிகளை யேத்துவது, அவனுடைய திருநாமங்களையே

ஏத்துவது என்றுசொல்லிற்று, ஜ்ஞாநத்துக்கு அவனேவிஷயமாகை யாலே யென்கிறது.

(பெயருமித்யாதி) ஆறானது, பூர்ணமாய்ச் சலியாநின்றகடலையே நோக்கா நின்றது. ஆறுகடலை நிறைக்கைக்கன்று புகுகிறது; புக்கல்லது தான் தரிக்கமாட்டாமை. தாமரைப்பூவானது, தூரஸ்தனாகிலும் ஆதித்யனுக் கலருமத்தனை, அக்ந்யாதிகளுக்கலராது. (உயிரும் தருமனையேநோக்கும்) யமனைக்கிட்டியல்லது வேறோரிடத்தில் புகவொண்ணாது. (ஒண்டாமரையித்யாதி) ஜ்ஞாநமாகில் ஸ்ரியঃபதியை யறியுமத்தனை; மற்றொன்றையறியாது. “தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது-க்தம்-தத்ஜ்ஞாந மஜ்ஞாநமதோந்யதுக்தம்” “வித்யாऽந்யா ஶில்பநைபுணம்-வித்யாந்யாசில்பநைபுணம்” என்னும்படியே. (௯எ)

**உணர்வாரா ருன்பெருமை யூழிதோ றூழி**
**உணர்வாரா ருன்னுருவந் தன்னை - உணர்வாரார் [தப்**
**விண்ணகத்தாய்மண்ணகத்தாய் வேங்கடத்தாய்,நால்வே**
**பண்ணகத்தாய் நீகிடந்த பால். (௯அ)**

ப-உ.—விண்-பரமபதத்தை, அகத்தாய் - ஸ்தாநமாகவுடையவனே! மண்-பூமியடங்கின லீலாவிபூதியை, அகத்தாய்-ஸ்தாநமாகவுடையுவனே! வேங்கடத்தாய் - திருமலையிலெழுந்தருளியிருக்கிறவனே! பண்-ஸ்வரப்ரதாநமான, நால்வேதம்-நான்குவேதங்களை, அகத்தாய் - இடமாகவுடையவனே! (அவைகளால் ப்ரதிபாதிக்கப்பட்டவனே) உன் - உன்னுடைய, பெருமை - மேன்மையை, ஊழிதோறூழி - காலமெல்லாம் கூடினாலும், உணர்வார் - அறியவல்லர், ஆர்-எவர்; உன் - உன்னுடைய, உருவந்தன்னை - ஸ்வரூபத்தை, உணர்வாரார் - அறியவல்லாரெவர்; நீ கிடந்த - நீ பள்ளிகொண்ட, பால் - க்ஷீரஸமுத்ரத்தை, உணர்வாரார் - அறியவல்லாரெவர். (௯அ)

வ்யா.—அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு.—(உணர்வாரார்)கீழ் அஜ்ஞாநத்துக்கு விஷயமவனென்றது; உணரவரிதென்கிறது இப்பாட்டில்.

(உணர்வாராருன்பெருமை) “ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶம்-ஜுஷ்டம் யதாபச்யத்யந்யமீசம்” என்கிறபடியே, குணங்களோடே கூடியிருக்கிற வுன்னை யுணர்வாராரென்கிறது. (ஊழியித்யாதி)

காலத்தையெல்லா மொருபோகியாக்கி உன்னுடைய ஸ்வரூபரூப குணங்களை யுணரப்புக்கால் உணரவரிதென்கிறது. (விண்ணகத்தாய் மண்ணகத்தாய்)ஸ்ரீவைகுண்டத்திலே யிருந்தநீ அவதாரரூபேணபூமி யிலேவந்தவதரித்து அத்தாலே ஸௌலப்யத்தையுடையவனே! கடல்கிட்டிற்றென்று பரிச்சேதிக்கப்போகாதிறே. (வேங்கடத்தாய்) ஸம்ஸாரிகளுடைய ஸகலதுரிதங்களும் போம்படி திருமலையிலே வந்து நிற்கிறவனே! (நால்வேதப்பண்ணகத்தாய்) ஸ்வரத்துக்குள் ளீடாய்நின்று ப்ரதிபாதிக்கிற வேதங்களுக்கு ப்ராவர்த்தகனானவனே! நீகிடந்தபால் உணர்வாரார்.

(உணர்வாராரித்யாதி) உன்னாலுமறியவொண்ணாது உன்னை ஸ்வர்யம். (ஊழிதோறூழியித்யாதி) காலமெல்லாங்கூடினாலும் ஸௌ லப்யமறியவொண்ணாது. விண்ணகம் - அவதாரம், இவையென்கை. விண்ணகத்தானாய், பாற்கடலானாய், மண்ணகத்தானாய்,வேங்கடத்தா னாய் நின்றான். (நால்வேதப்பண்ணகம்) ஐஸ்வர்யம் ப்ரதிபாதிக்கிறது கண்ணுக்கு விஷயமிறே. மற்றையது இங்குச்சொல்லிற்று அநுவா தம் காண்கையாலே. [தஸ்யயோநிம் - தஸ்யயோநிம்] அவனுடைய பிறப்பு.* உயர்வற உயர்நலமுடையவன் பிறப்பிறே. [தீராஃ-தீராஃ] தீமதாமக்ரேஸராஃ - தீமதாமக்ரேஸராஃ. * மயர்வறமதிநலம் பெற் றார். [பரிஜாநந்தி - பரிஜாநந்தி.] க்ஷணந்தோறும் எத்திறமென்பர்.

அரு.—அறுபத்தெட்டாம்பாட்டு.—நீ கிடந்தபால் - பாலிலே நீகிடந்தது. ஏவமாதியெல்லா முணர்வாரா ரொன்றபடி.

"உரு" என்று கண்ணுக்கு விஷயமாய் ஸௌலப்யம். கீழ்ச் சொன்ன பரத்வ ஸௌலப்யங்களுக்கெல்லையேதென்ன; அருளிச் செய்கிறார் (விண்ணகம் அவதாரமென்று) பரத்வ ஸௌலப்யங்களு க்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (மற்றையதிங்கித் யாதி) இவையெல்லார்க்குந் தோற்றவில்லையே யென்ன; ஜ்ஞாநா திகர்க்குத் தோற்றுமென்கிறார் (காண்கையாலென்று) அப்படி கண் டார்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (தஸ்யயோநிம்-தஸ்யயோ நிம் இத்யாதி) "தஸ்ய" என்று பரத்வம் "யோநிம்" என்று ஸௌ லப்யம்.

(சுஅ)

பாலன் றனதுருவா யேழுலகுண்டு, ஆலிலையின்
மேலன்று நீவளர்ந்தது மெய்யென்பர் - ஆலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு. (சூகூ)

ப-உ.—பாலன்றனது - பால்மாறுத முக்த சிசுவினுடைய, உருவாய் - திருமேனியையுடையனாய், ஏழுலகு - ஸப்தலோகங்களையும், உண்டு - அமுதுசெய்து, ஆலிலையின்மேல் - வடத்தின் தளிரில், அன்று - அக்காலத்தில், நீ - தேவரீர், வளர்ந்தது - கண் வளர்ந்ததை, மெய்யென்பர் - (வைதிகர்கள்) யதார்த்தமென்பர்கள் ; அன்று - அக்காலத்தில், ஆல் - வடமானது, வேலைநீர் - ஸமுத்ரஜலத்தில், உள்ளதோ - இருந்ததோ ? விண்ணதோ - ஆகாசத்திலிருந்ததோ? மண்ணதோ - பூமியிலிருந்ததோ? சோலை - தோப்புகளால், சூழ் - சுற்றப்பட்ட, குன்று - கோவர்த்தந பர்வதத்தை, எடுத்தாய் - தூக்கினவனே! சொல்லு - உரை. (சூகூ)

வ்யா.—அவ.— அறுபத்தொன்பதாம்பாட்டு.—(பாலன்) எல்லா மொழிய ஒரோவொன்றை யறியப்போமே வென்கிறது.

(பாலனித்யாதி) ரக்ஷகாபேக்ஷமான வடிவையுடையையாய். (ஏழுலகுண்டு) ஸ்வவ்யதிரிக்த ஸகலபதார்த்தத்தையும் ரக்ஷித்து. (ஆலிலையின்மேல்) ஸர்வர்க்கு மாதாரமான ஸர்வரக்ஷகனுக்குக் கண்வளரப்போகாத வாலிலையின்மேலே. (அன்றித்யாதி) அன்று வளர்ந்தத்தை ஆப்ததமரானவர்கள் மெய்யென்பர்கள். வேதமர்யாதையில்லையாகில் சூன்யமாதல், உண்டாகில் ஸத்யமாதலே யுள்ளது. (சோலையித்யாதி). ஏழுவயஸ்ஸிலே மலையைக் கீழ்மேலாக வெடுத்தநீ அவற்றைச் சொல்லவேணும். (அன்று) திக்கெல்லாமழிந்தவன்று. (வேலையித்யாதி) நீ கண்வளர்ந்த பாற்கடலுள்ளதோ, நிராலம்பநமானவாகாசத்ததோ, கரைந்துபோனபூமியிலதோ, சொல்லவேணும். பின்பு மலையெடுத்த வாச்சர்யமிதுக்கு ஸத்ருசமோ. இத்தால் அவன்றன்படியை யவன்றானேசொல்லுகையு மரிதென்றபடி.

(பாலன்றனதுருவாய்) பாலனுடைய ரூபத்தையுடையையாய். அப்ராக்ருதமாய் மஹத்தரமான திருமேனியைச் சிறுக்கி ஸஜாதீயமாக்குகை மெய்யென்பர் ருஷிகள். "எத்திறம்" என்ன ;"பொய்'

என்னவொண்ணுது. (மெய்) நீயே ஸர்வத்துக்கும் தாரகனனமையும் மெய். இருந்தபடியென். (சோலையித்யாதி) ஏழுபிராயத்திலே பெரிய மலையையெடுத்த வாச்சர்யமுஞ் சொல்லவேணும். இது ஆழ்வார்வந் தால் கேட்கவிருந்தோமோ வென்றுனே எம்பெருமான். இது அத் யந்தம் விஸ்மயமென்கிறுர். (சுகூ)

அரு.—அறுபத்தொன்பதாம்பாட்டு.—இவர்கள் "மெய்" என் கிறது, என்கொண்டென்ன ; அருளிச்செய்கிறுர் (வேதமர்யாதை யித்யாதி). வளர்ந்த - கண்வளர்ந்ததை.

இவர் "சொல்" என்கைக்கு அவன்று னிவர்வார்த்தைகேட்க ஆசைப்பட்டிருக்குமோவென்ன ; அருளிச்செய்கிறுர் (இது ஆழ் வாரித்யாதி). கேட்கவிருந்தான்போலே யென்று வ்யாக்யாதா. (சுகூ)

**சொல்லுந் தனையும் தொழுமின், விழுமுடம்பு**
**செல்லுந் தனையும் திருமாலை - நல்லிதழ்**
**தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்**
**நாமத்தா லேத்துதிரேல் நன்று. (எ0)**

ப-உ.—திருமாலை - பிராட்டியோடு கூடின ஸர்வேஸ்வரனை, விழும் - நசிக்கத்தக்க, உடம்பு - சரீரமானது, செல்லுந்தனையும் - விழுமளவும், நல் - அழகிய, இதழ் - தளங்களையுடைய, தாமத் தால் - மாலையாலும், வேள்வியால் - யாகத்தாலும், தந்திரத்தால் - மந்த்ரமில்லாத க்ரியைகளாலும், மந்திரத்தால் - க்ரியையில்லாத மந் த்ரத்தினுலும்,தொழுமின் - ஆஶ்ரயியுங்கோள். சொல்லுந்தனையும் - வாகிந்த்ரியம் நடக்குமளவும், நாமத்தால் - திருநாமங்களாலே, ஏத் துதிரேல் - புகழ்வீர்கோளாகில், நன்று - நல்லது. (எ0)

வ்யா.—அவ.—எழுபதாம்பாட்டு.—இப்படி அபரிச்சின்ன சக்தி யானபின்பு அவனை யெல்லாருமாஶ்ரயியுங்கோளென்கிறுர்.

(சொல்லுமித்யாதி) நாக்குச்சொல்லப் பாங்கானபோதெல்லா ம்சொல்லி ஆஶ்ரயியுங்கோள். (விழுமுடம்பு செல்லுந்தனையும்) உட ம்பு பாங்கானபோதெல்லாமாஶ்ரயியுங்கோள். (திருமாலை) பாங் கானபோதாஶ்ரயிக்க யாவதாத்மபாவி ஆஶ்ரயித்தாளுகக் கொள் ளும் பித்தனைச்சொல்லுகிறது. (நல்லிதழ்தாமத்தால்) நல்ல

செவ்விப்பூவையுடைய மாலையால்.(வேள்வியால்) செவ்விமாலை கிடையாதாகில் கர்த்தவ்யமான கர்மத்தாலே,அது கிடையாதாகில் அதுக் கடியான தந்த்ரத்தாலே, அடையப்போகாதாகில் மந்த்ரத்தைக் கொண்டு செய்வது ; க்ரியாரூபமான தந்த்ரமரிதாகில் வாக்வ்ருத்தியான மந்த்ரத்தாலே செய்வது. மந்த்ரத்துக்கு தேசகாலநியதியுமதிகாரி நியதியும் வேணுமென்றிருந்திகோளாகில் நாமத்தாலே ஏத்துவது. தாய்பேர்சொல்லக் குளித்துவரவேண்டாவிறே. (திருமாலை) நியதியுண்டென்னில், "அம்மே" என்னுமோபாதி சொல்லவமையும். (எ0)

அரு.—எழுபதாம்பாட்டு.—விழுமுடம்பு-திருவடிகளிலேவிழுந்தாஸ்ரயியுங்கோள். வேள்வி - ஸ்வயமேவபண்ணுகை. மந்த்ரம் - சங்கையாய்ப்பண்ணுவிக்கை. க்ரியாரூபமான மந்த்ரம் - வேதமந்த்ரம். வாக்வ்ருத்தியானமந்த்ரம் - பகவந்மந்த்ரம். நியதி-விஷயநியதி. மிதுனமென்றபடி. (எ0)

நன்று பிணி மூப்புக் கையகற்றி நான்கூழி
நின்று நிலமுழுது மாண்டாலும் - என்றும்
விட லாழி நெஞ்சமே வேண்டினேன் கண்டாய்
அடலாழி கொண்டான்மாட் டன்பு. (எக)

ப-உ.—ஆழி - கம்பீரமான, நெஞ்சமே - மனமே, பிணி - நோயையும், மூப்பு - கிழத்தனத்தையும், நன்று - செவ்வையாய், கையகற்றி - விட்டு, நான்கூழி - நாலுயுகங்களில், நின்று - ஸ்திரமாயிருந்து, நிலமுழுதும் - பூமியோடுகூடின அண்டமெல்லாம், ஆண்டாலும் - நிர்வஹித்தாலும்,அடல் - யுத்தத்தில் பின்வாங்காத, ஆழி - சக்ரத்தை, கொண்டான்மாட்டு - பிடித்தவனுடைய விஷயத்தில், அன்பு - ஸ்நேஹத்தை, என்றும்-எக்காலத்திலும், விடல் - விடாதே கொள் ; வேண்டினேன் கண்டாய், இரக்கிறேன் கிடாய். (எக)

வ்யா.—அவ.—எழுபத்தோராம் பாட்டு.—(நன்று) ஐஸ்வர்ய கைவல்யங்களில் புகாதே அவன்றன்னையே ஆசைப்படப்பாரென்கிறார்.

(நன்றித்யாதி) இத்தால் கைவல்யத்தைச்சொல்லுகிறது. நான்கூழியித்யாதி) ப்ரஹ்மாவினுடைய வைஸ்வர்யத்தைப் பெற்றாலும்

(ஆழிநெஞ்சமே) அளவுடைய நெஞ்சே! நீயே முற்பட்டிருக்கிற வுன்னை யிரக்கிறேனிறே. (அடலாழிகொண்டான் மாட்டன்பு - விடல்)விடாதே கொள். (வேண்டினேன் கண்டாய்)பால்குடிக்க இரக்கிறேனிறே. ஐஶ்வர்யம் நிலைநில்லாது; கைவல்யம் பகவத்கைங்கர்யத்தைப் பார்க்க அல்பமென்கை.

அன்றியே, இரண்டையும் சேர்த்துத்தரிலும், விடல் - இவை நன்றானவன்றும் விடுகைக்கு அவனல்லாமையையும், பற்றுகைக்கு அவனாகவமையும். (வேண்டினேன்) இவ்வர்த்தம். (அடலாழியித்யாதி) எனக்குக் கைக்கூலிதந்து பற்றும் விஷயம். (எக)

அரு.—எழுபத்தோராம்பாட்டு.—நன்றாக - ஸவாஸநமாக. பிணியையும் மூப்பையும் கையகற்றி-கைவிட்டு. நான்கூழி-நாலுயுகஸஹிதமாயிருக்கிறகாலம். "நின்று" என்கையாலே,ஐஶ்வர்யஸ்தைர்யத்தையும் "நன்று" என்று கைவல்யவைலக்ஷண்யத்தையுஞ் சொல்லி, இவற்றையென்று மாண்டாலும் அவனிடத்திலன்பு விடல் என்கிறார் (ஐஶ்வர்யமித்யாதி). (எக)

அன்பாழி யானை யணுகென்னும் நாவவன்றன்
பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும் - முன்பூழி
காணானைக் காணென்னும் கண்செவி கேளென்னும்
பூணாரம் பூண்டான் புகழ். (எஉ)

ப - உ.—அன்பு - ப்ரீதிக்கு ஆதாரமான மநஸ்ஸே, ஆழியானை - திருவாழியுடையவனை, அணுகு - கிட்டு; என்னும் - என்று சொல்லும்; நா - வாகிந்த்ரியம், அவன்தன் - அவனுடைய, பண்பு - அழகுக்கு, ஆழி - ஸமுத்ரமாயிருக்கிற, தோள் - புஜங்களை, பரவி - பரக்கச்சொல்லி, ஏத்து - துதி; என்னும் - என்றுபேசும்; கண் - நயநேந்த்ரியம், முன்பு - பூர்வமுள்ள, (அபராதம் பண்ணின) ஊழி - காலத்தையும், காணானை - அறியாதவனை, காண் - பார்; என்னும் - என்றுசொல்லும்; செவி - ஶ்ரவணேந்த்ரியம், பூண் - அணியத்தக்க, ஆரம் - முத்துமாலையை, பூண்டான் - தரித்தவனுடைய, புகழ் - கீர்த்தியை, கேள்-ஶ்ரவணம்பண்ணு; என்னும்-என்றுசொல்லும். (எஉ)

வ்யா.—அவ.—எழுபத்திரண்டாம்பாட்டு.—(அன்பு) சிஷ்யர்கள் ஆசார்யர்களானார்கள்.

(அன்பு) என்று நெஞ்சைச்சொல்லிற்று. "அடலாழிகொண்டா ன்மாட்டன்பு - விடாதே" என்று திருவுள்ளத்தை யிரக்க, அதுவும் நீர் ஆழியானைவிடாதே கொள்ளுமென்கிறது. (நாவித்யாதி) நாவா னது அவனுடைய ஸௌந்தர்யஸாகரமான தோள்களை அக்ரமமாக ஏத்தென்று நின்றது; முடியும்படி யாதொன்றறியாது காணும். (முன்பித்யாதி) ஸாபராதராயிருந்துள்ள நம்மாலவனைக் கிட்டப் போமோவென்னில்; ஓரடிவரகின்றால் குற்றமே யன்றியே குற்ற ங்கிடக்கும்நாளும் காணவறியானென்கிறது. (முன்பூழிகாணானை) அவனைக்காணும் என்று நின்றது கண். (செவியித்யாதி) குற்றம் பார்த்துப் போகிறானாகிலும் விடப்போகாத ஆபரண சோபையையு டையனானவனுடைய புகழைக்கேளென்று நின்றது செவி,

(ஆழியானை) ராஜபுத்ரர்களிடைச்சேரிக்கு மகப்படுமாப்போ லே. (பண்பு ஆழித்தோள்) ஸௌந்தர்யஸாகரமான. (பரவியேத்து) நீஏத்தும் க்ரமம் தப்பாமே. (முன்பித்யாதி) நாம் பண்ணிவைத்தபா பங்களை நினைத்துச் சிறிலோவென்னில்; பாபமும் கீழ்க்கிடந்த கால மும் மறக்கும். கண்கண்டவாறே தெரியுமிறே சிறிநோக்கும் நோக் கும், வாத்ஸல்யத்தாலே நோக்கும் நோக்கும். (செவிகேளென்னும்) செவிக்கு விக்ருதிசொல்ல அவஸரமில்லை. (பூணாரம்) ஆபரணமான உடம்புக் காபரணம். [ ஸவ-஭ூஷண-஭ூஷாஹா-ஹாঃ - ஸர்வ பூஷண பூஷார்ஹாஃ] மற்றையாபரணங்களுக் காபரணமென்றும். (பூண்டான்) பூணவல்லவழகு. (புகழ்) ப்ரஹ்மபூஷணம். (எஉ)

அரு.—எழுபத்திரண்டாம் பாட்டு.—கரணங்கள் கரணிக்குப தேசிக்கையாலே (ஆசார்யர்களானார்கள்) என்கிறது.

காண்கைக்கு ப்ரயோஜநமேதென்ன; அருளிச்செய்கிறார் (கண்கண்டவாறேயித்யாதி). கீழில்இந்த்ரியங்களைப்போலே அவனைச் சொல்லி, பின்னை இன்னபடி செய்யென்னுமல் கேவலம் "கேள் என் னும்" என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (செவிச்கித்யாதி). விக்ருதிசொல்ல-தன்னுடைய பக்திக்கு விஷயஞ்சொல்ல அவஸர மில்லை யென்றபடி. முன்பு அவஸரமில்லாமையாலே பின்பு "பூணா ரம்பூண்டான்" என்று விஷயத்தைச்சொல்லிற் றென்றபடி. அன்றி க்கே, தன்னுடைய பக்தியாலே விஷயஞ்சொல்ல அவஸரமின்றியே, "கேள் என்னும்" என்னவுமாம். பூண் - திருமேனியாதல், மற்றை

யாபரணமாதல். ஆரம்-விக்ரஹபூஷணம். புகழ் - ஸ்வரூபபூஷணமென்றபடி. ப்ரஹ்மம்-ஸ்வரூபம். (எ௨)

புகழ்வாய் பழிப்பாய் நீ பூந்துழாயானை
இகழ்வாய் கருதுவாய் என்னெஞ்சே - திகழ்நீர்க்
கடலு மலையு மிருவிசும்பும் காற்றும்
உடலு முயிரு மேற்றான். (எ௩)

ப-உ.—என்னெஞ்சே! என்னுடைய மனமே! நீ - நீ, பூம் - அழகிய, துழாயானை - திருத்துழாயாலே அலங்கரிக்கப்பட்டவனை, புகழ்வாய் - ஸ்தோத்ரம் பண்ணினாலும் பண்ணு; பழிப்பாய் - நிந்தித்தாலும் நிந்தி. இகழ்வாய் - அநாதரம் செய்தாலும் செய்; கருதுவாய் - விரும்பினாலும் விரும்பு. (அந்த ஸர்வேஶ்வரன்) திகழ் - ப்ரகாசிக்கிற, நீர் -ஜலத்தையுடைய, கடலும்-ஸமுத்ரத்தையும், மலையும் - பர்வதத்தையும், இரு - விசாலமான, விசும்பும் - ஆகாசத்தையும், காற்றும் - வாயுவையும், உடலும்-சரீரத்தையும், உயிரும் - ஆத்மாவையும், ஏற்றான் - தரித்தவன். (எ௩)

வ்யா.—அவ்.—எழுபத்துமூன்றாம்பாட்டு.—(புகழ்வாய்) கீழ் தம்முடைய இந்த்ரியங்கள் ப்ரவணமானபடி சொல்லிற்று; அவ்விஷயந்தானினியறிய ப்ராப்தமாயிருந்தது, நீ அத்தைப்பற்றிலும் பற்று, விடிலும்விடு என்கிறது.

(புகழ்வாய் பழிப்பாய்) புகழிலும் புகழ்; பழிக்கிலும் பழி.(இகழ்வாய்கருதுவாய்) இகழிலும் இகழ்; கருதிலும் கருது. (பூந்துழாயானை) பழித்தல், இகழ்தல் செய்யப்போமோவென்கிறது. (என்னெஞ்சே) நாட்டுக்குச் சொல்லுகிறேனோ; உனக்கன்றோ. (திகழ்நீர்கடலும் மலையும்) இரண்டாலுமாகக்கார்யத்தைச்சொல்லுகிறது. (இருவிசும்பும் காற்றும்) காரணபூதங்களுக்கு உபலக்ஷணம்.(உடலுமுயிரும்) காரணமான சிதசித்துக்களைச் சொல்லுகிறது. (உடலுமுயிருமேற்றான்) இத்தால் இவையெல்லாமவனுக்குக் கார்யதயாசேஷம், அவன் சேஷியென்கிறது.

அவை மத்யஸ்த்தமென்னும்படி தம்முடைய ப்ராவண்யம். (புகழ்ப்பாதி) வாசகத்துக்கு. (இகழ்வாய் கருதுவாய்) மநஸ்ஸு. (என்

னெஞ்சே) புகழ்ந்து பழகின நெஞ்சே. பூந்துழாயானைப்புகழ்ந்த ல்லது நிற்கவொட்டாது. (ஏற்றான்) ஆதாரத்தைப்பற்றிலும் பற்று, ஆதேயத்தைப்பற்றிலும் பற்று. இது இருந்தபடி. (எங)

அரு.—எழுபத்துமூன்றும்பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (அவையித்யாதி). மத்யஸ்த்தமென்கிறது – தம்முடையகரணங்கள் இகழுகைக்கும் கருதுகைக்கும் பொதுவாயிருக்கும். தமக்குக் கருதுகை ப்ரயோஜநம். "ஏற்றான்" என்று சேஷித்வஞ் சொல்லுகையாலே ப்ராப்யம். ஏற்றான் - சரீரவத்தரித்தான் ஏற்றான்-ஆதாரபூதனென்றபடி. (எங)

**ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான்**
**நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்-கூற்றொருபால்**
**மங்கையான் பூமகளான் வார்சடையான், நீண்முடியான்**
**கங்கையான் நீள்கழலான் காப்பு. (எசு)**

ப-உ.—ஏற்றான் - எருதையுடையனாய், எயில் - மதிளையுடைய த்ரிபுரத்தை, எரித்தான் - கொளுத்தினவனாய், நீற்றான் - சாம்பல் பூசினவனாய், கூற்றொருபால் - (சரீரத்தில்) ஒருபக்கத்தில், மங்கையான் – பார்வதியைத் தரித்தவனாய், வார் - தொங்கின, சடையான் - சிக்குப்பட்ட மயிர்முடியையுடையனாய், கங்கையான்-கங்காநதியை ஏந்தினவனான ருத்ரன், புள் - கருத்மானை, ஊர்ந்தான் – வாஹநமாகவுடையனாய், மார்வு - (ஹிரண்யனுடைய) வக்ஷஸ்ஸை, இடந்தான் - பிளந்தவனாய், நிழல் - குளிர்ந்த (ஶ்ரமஹரமான), மணி - நீலரத்நம்போன்ற, வண்ணத்தான்-வடிவையுடையனாய், பூ - தாமரைப்பூவில் வஸிக்கிற, மகளான் – பிராட்டியையுடையனாய், நீள் - தீர்க்கமான, முடியான் – கிரீடத்தையுடையனாய், நீள் - நீண்ட, கழலான்-திருவடியையுடையனான விஷ்ணுவினுடைய, காப்பு - ரக்ஷையாயிருக்கும். (எசு)

வ்யா.—அவ.—எழுபத்துநாலாம்பாட்டு.—(ஏற்றான்) இது இவனுக்கேற்றமாகச்சொல்லுவானென் ; அல்லாத ருத்ரனு மிப்படி சேஷியாயன்றோ விருப்பதென்னில் ; அவனுடைய ப்ரகாரங்களைப் பார்த்தால் ரக்ஷ்யமாய்த்தோற்றும் ; இவனைப் பார்த்தால் ரக்ஷகனாயிருக்குமென்கிறது.

(ஏற்றான்புள்ளூர்ந்தான்) * வேதாத்மாவான திருவடியைத் தனக்கு வாஹநமாகவுடையனா யிருக்குமாகில், அவனப்ரஸித்தமாயிருப்பதொரு எருத்தை வாஹநமாக வுடையனாயிருக்கும். (எயிலெரித்தான்) ஆஶ்ரிதரை யொருவ்யாஜத்திலே யழிக்குமவன். (மார்விடந்தான்) ஆஶ்ரிதனுக்காகத் தன்னையழியமாறும் இவன். (நீற்றான்) "ஹஸ்த்ஸ்நஃ-பஸ்மச்சந்நஃ" என்று ப்ராயச்சித்தம் பண்ணும் அவன். (நிழல்மணிவண்ணத்தான்) கண்டால் ஶ்ரமஹரமான வடிவு இவனது. (கூற்றொருபால் மங்கையான்) ஒரு ஸ்த்ரீயைத் தனக்கே வைத்துக்கொண்டிருக்கும் அவன். (பூமகளான்) "அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ-அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" என்னுமவளைத் தனக்காக வுடையவன் இவன். (வார்சடையான்) ஸாதகவேஷன் அவன். (நீண் முடியான்) ஆதிராஜ்யஸூசகமான திருமுடியை யுடையவன் இவன். (கங்கையான்) பாவநார்த்தமாகக் கங்கையைத் தரித்துக்கொண்டிருக்கும் அவன். (நீள்கழலான்) அந்தத் தீர்த்தபூதையான கங்கைக் குத்பாதகமான திருவடியை யுடையவன் இவன். "ஏற்றான் - எயிலெரித்தான் - நீற்றான் - கூற்றொருபால் மங்கையான் - வார்சடையான்-கங்கையானான அவன், புள்ளூர்ந்தான் - மார்விடந்தான் - நிழல்மணிவண்ணத்தான் - பூமகளான்-நீண்முடியான் - நீள்கழலான் காப்பு" அவனுடைய ரக்ஷையிவன். "உடலுமுயிரும்" என்றதோடு இவனோடு வாசியில்லை அவனுக்கு சேஷமாமிடத்தில். (எசு)

அரு.—எழுபத்துநாலாம்பாட்டு.—எயில்-மதிளாய், த்ரிபுரம். நீற்றான். நீற்றையுடையவன். கூற்றொருபால் - லோகரக்ஷணார்த்தமாக வன்றியே தனக்கே கூறாகவென்றபடி. (எசு)

**காப்புன்னை யுன்னக் கழியு மருவினைகள்**
**ஆப்புன்னை யுன்ன வவிழ்ந்தொழியும் - மூப்புன்னைச்**
**சிந்திப்பார்க் கில்லை திருமாலே, நின்னடியை**
**வந்திப்பார் காண்பர் வழி.** (எரு)

ப.உ.—உன்னை - உன்னை, உன்ன - த்யாநித்தால், காப்பு - ரக்ஷகரான யமன் முதலானார், கழியும் - நீங்குவர்கள். உன்னையுன்ன - உன்னை யநுஸந்தித்தால், அரு-க்ரூரமான, வினைகள்-கர்மங்களின், ஆப்பு-பந்தம், அவிழ்ந்து - விட்டு, ஒழியும்-நசிக்கும். திரு-பிராட்டி

திறத்தில்.மாலே - வ்யாமோஹத்தையுடையவனே! உன்னைச்சிந்திப்பார்க்கு - உன்னைத்யாநம் பண்ணுமவர்களுக்கு, மூப்பு - கிழத்தனம் முதலானவிகாரங்கள், இல்லை - கிடையாது. நின் - உன்னுடைய, அடியை-பாதத்தை, வந்திப்பார் - நமஸ்கரிக்குமவர்கள், வழி - (அர்ச்சிராதி) மார்க்கத்தை, காண்பர் - பார்ப்பர்கள். (எரு)

வ்யா.—அவ.—எழுபத்தைந்தாம் பாட்டு.—(காப்பு) சேஷியாயிருந்துள்ள உன்னையுணர ப்ரதிபந்தகமெல்லாம் போமென்கிறது.

உன்னையுணரக் காப்புக்கழியும். "காப்பு" என்கிறது ஈஸ்வரனுக்குப் புரவர்போலே இவ்வாத்மாக்கள் செய்த கர்மங்களை யாராயக்கடவரான சந்த்ராதித்யர்கள் தொடக்கமான பதினுலுபேருடைய சிறைகள். கர்மவஸ்யனுகையிறே இவர்கள் காக்கைக்கடி.(உன்னையுன்ன அருவினைகளாப்பு அவிழ்ந்தொழியும்) அக்காப்புக்கடியான அவித்யாதிகளாலுண்டான பந்தம் உன்னை நினைக்க நெகிழும். (மூப்பித்யாதி)காப்பு மருவினைகளும்போன வதிகாரிகளுக்கு, மூப்பாவது கைவல்யம். அன்றியே, ஷட்பாவவிகாரங்களுக்கு முபலக்ஷணமாகவுமாம். (திருமாலே) ஈச்வரன் ஸ்வாதந்த்ர்யத்தாலே ஆராயப்புக்காலும் ப்ராயச்சித்தஸாத்யமில்லாத பாபம் நாம்பொறுக்குமத்தனை யன்றோவென் றுணர்த்துவாளொருத்தி யருகேயுண்டென்கிறது. "ஜாஸீநாமாவணஸ்யாஹம் ஊஷியாமீஹஃபவஃஸா! ராஜஸம்ஸ்ரயவஸ்யாநாம் கூவந்தீநாம்வராஜுயா - தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்பலா । ராஜஸம்ஸ்ரயவச்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா" என்னும்படியே. (நின்னடியை வந்திப்பார்காண்பர்வழி) உன் திருவடிகளிலே விழுவார்கள் நல்லவழிகாண்பர். "வழி" என்று - அர்ச்சிராதியாகவுமாம் பரமபதம் போலேபரமபதத்துக்குப் போம்வழி; நரகம்போலே பொல்லாதாயிருக்கும் நரகத்துக்குப் போம்வழி.

(காப்பித்யாதி) "ப்ரஹ்மஹந்த்ரூணாம் நவைஷ்ணவாநாம் ப்ரபுரஹமங்யக்ருணும் நவைஷ்ணவாநாம்" "தேவஷி - தேவர்ஷி" இத்யாதி. (அருவினை) அவித்யாதிகளால் பிறக்கும் புண்யபாபங்கள்.. சாரீரமான மூப்பு. (திருமாலே) "யுவாகுமாரஃ-யுவாகுமாரஃ" "யுவதிஸ்சகுமாரிணீ-யுவதிச்சகுமாரிணீ" என்கிறவுங்

களை யாச்ரயித்தால் உங்களைப்போலே * பரமம் ஸாம்யமுபைதியி றே - வந்தியாதார்க்கு முள்ளும் முடக்குமானவழி. (எரு)

அரு.—எழுபத்தைந்தாம்பாட்டு.—புரவர்-தலையாரிகள். ஈச்வர னுடைய பட்டணமான லோகத்தைக்காக்கிற சந்த்ராதித்யர்கள். வழி-ஸித்தோபாயமாதல். "காண்பர்"என்கைக்கதிசயமென்னென்ன; அருளிச்செய்கிறார் (பரமபதமித்யாதி). காப்பு இங்குயமவச்யதை யும் இதரசேஷமுமாக்கி யருளிச்செய்கிறார் (ப்ரஹாரஹ - ப்ர புரஹம் இத்யாதி). (எரு)

வழிநின்று நின்னைத் தொழுவார், வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே யாவர் – பழுதொன்றும்
வாராத வண்ணமே விண்கொடுக்கும், மண்ணளந்த
சீரான் திருவேங்கடம். (எசு)

ப-உ.—வழி - (பக்தி) மார்க்கத்தில், நின்று - (ஸ்திரமாய்) இருந்து, நின்னை - உன்னை, தொழுவார் - ஆச்ரயிக்குமவர்கள், வழுவா - அழிவில்லாத, மொழி - (வேதச்) சொற்களிலே, நின்ற - ப்ரதிபாதிக்கப்பட்ட, மூர்த்தியர் - ஸ்வரூபத்தையுடையவர்களாய், ஆவர் - ஆவர்கள். மண் - பூமியை, அளந்த - ஆக்ரமித்த, சீரான் - கல்யாண குணங்களையுடையவனே! திருவேங்கடம் - திருமலை, பழுதொன்றும்- ஒருகுறையும், வாராதவண்ணம் - ஸம்பவியாதபடி, விண் - பரமபதத்தை, கொடுக்கும் - தரும். (எசு)

வ்யா.—அவ.—எழுபத்தாறும்பாட்டு.—(வழிநின்று) உன்னைத் தொழுவார் பிழைப்பரென்று சொல்லவேணுமோ? உன்னோடு ஸம்பந்தித்த தேசமே எல்லா நன்மையும் கொடுப்பதாகவிருக்க வென்கிறது.

(வழிநின்று நின்னைத்தொழுவார்) "ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:-ஆத்மாவாரேத்ரஷ்டவ்ய ச்ரோதவ்யோமந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" "விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத விஜ்ஞாயப்ரஜ்ஞாம் குர்வீத" "உபாஸநம் ஸ்யாத் த்ருவாநுஸ்ம்ருதி: தர்சநஸமாநாகாரதா ப்ரத்யக்ஷதாபத்தி: விசதே தநஜநாத்-உபாஸ நம்.த்ருவாஸ்ம்ருதி:தர்சநஸமாநாகாரதாப்ரத்யக்ஷதாபத்தி: விசதே

ததநந்தரம்" என்னுமளவுஞ் சொல்லுகிறது. (வழுவாமொழி நின்ற மூர்த்தியரேயாவர்) யதாபூதவாதியானவேதத்திற் சொன்ன வடிவை யுடையராவர். "பரஂஜ்யோதிரூபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே - பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்கிறபடியே. (பழுதித்யாதி)ப்ராப்ய ப்ராபகங்களொன்றும் குறையாதபடி பரமபதத்தைக்கொடுக்கும், திருவுலகளந்த நீர்மையையுடையவனுடைய திருமலை. "மண்ணளந்த சீரான்" என்று ஸம்புத்தியாகவுமாம்.

(வழுவாமொழி) ஒருவர்க்கொருவர் ஓதுவித்துப்போருகை. (மூர்த்தியரே யாவர்) அதுக்கீடான ஸ்வரூபத்தையுடையராவர். (மண்ணளந்த சீரான்) அந்தஸ்வபாவமுண்டு திருமலைக்கு. எம்பார் விடிவோடே அநுஸந்திக்கும்பாட்டு. (எகூ)

அரு.—எழுபத்தாறும்பாட்டு.—வழிநின்று-உபாஸநமார்க்கத்திலே நின்று. அதுக்கீடான-வேதோச்சாரணத்துக்கீடான. "ஹா ஊ ஹா ஊ ஹா ஊ, ஹாவு ஹாவு ஹாவு - அஹமந்நமஹமந்நமஹமந்நம்" என்று உச்சரிக்கைக்கீடான என்றபடி. (எகூ)

**வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும், அஃகாத**
**பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் - நான் கிடத்**
**நின்றானிருந்தான் கிடந்தான் நடந்தானே [தும்**
**என்றால் கெடுமாமிடர். (எஎ)**

ப-உ.—வேங்கடமும் - திருமலையும், விண்ணகரும் - ஸ்ரீவைகுண்டமும், வெஃகாவும் - திருவெஃகாவும், அஃகாத - மாறாத, பூம் - புஷ்பங்களையுடைய, கிடங்கின் - அகழையுடைய, நீள் - தீர்க்கமான, (போக்யதையுடைய), கோவல் - திருக்கோவலூராகிற, பொன் - அழகிய, நகரும் - திவ்யநகரமும் (ஆன), நான் கிடத்தும் - இந்த நாலு திவ்ய தேசங்களிலும், (க்ரமமாக) நின்றான் - நின்றருளினான்; இருந்தான் - எழுந்தருளியிருந்தான்; கிடந்தான் - பள்ளிகொண்டான்; நடந்தான் - ஸஞ்சரித்தான்; என்றால்-என்று சொன்னால், இடர்-துக்கம், கெடுமாம் - போம். (எஎ)

வ்யா.—அவ.—எழுபத்தேழாம்பாட்டு.—(வேங்கடமுமித்யாதி) உகந்தருளின தேசங்கள் பூமியிலே உண்டாயிருக்க, ஸம்ஸாரமுண்டோவென்கிறது.

(வேங்கடமுமித்யாதி) பூமாறுதேயிருந்துள்ள அழகையுடைத்தான திருக்கோவலூரும். "விண்ணகரும்" என்று பரமபதத்தைச் சொல்லுகிறது. (நான் கிடத்துமித்யாதி) நான் கிடத்தும் நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தபடியையுஞ்சொல்ல,நின்றுமிருந்தும் கிடந்தும் நடந்தும் செய்தபாப பரம்போமென்கிறது. (என்றால் கெடுமாமிடர்) தாய்பேர்சொல்ல க்லேசம்போமாப்போலே.

அவ.—நம்முடைய இடரானவை திருமலையை யாஶ்ரயிக்கப் போமோவென்னில; அநாதிகாலம் நம்மைப்பெறுகைக்கு அவன் படுகிறபாட்டை யநுஸந்தியாய்.

(நடந்தானே) (வேங்கடமும் விண்ணகரும்) இவர்களுக்கெல்லாம் ஒரு போகியாயிருக்கிறபடி. (பொன்னகர்)தானே வந்துநோக்கினவிடம். (எஎ)

அரு.—எழுபத்தேழாம்பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (நம்முடையவித்யாதி). திருப்பதிகளைச் சொல்லுகிறவிடத்திலே பரமபதத்தைச்சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பொன்னகர்தானேயித்யாதி). (எஎ)

இடரார் படுவா ரெழுநெஞ்சே, வேழந்
தொடர்வான் கொடுமுதலை சூழ்ந்த - படமுடைய
பைந்நாகப்பள்ளியான் பாதமே கைதொழுதும்
கொய்ந்நாகப் பூம்போது கொண்டு. (எஅ)

ப-உ.—வேழம்-யானையை, தொடர்வான் - பின்சென்ற,கொடு - க்ரூரமான, முதலை - மகரத்தை, சூழ்ந்த - அழித்தவனாய், படமுடைய - பணத்தையுடைத்தான, பை - பரந்த, நாகம் - திருவநந்தாழ்வானை, பள்ளியான் - படுக்கையாகவுடையனானவனுடைய, பாதம் - திருவடிகளை, கொய் - அறுக்கத்தக்க, பூம் - அழகிய, நாகம்- புன்னையினுடைய, போது - பூக்களை, கொண்டு - ஸம்பாதித்து,

கைதொழுதும் - ஆஶ்ரயிப்போம். இடர் - துக்கத்தை, ஆர் - எவர், படுவார் - அநுபவிப்பர்; நெஞ்சே-மனமே, எழு-எழுந்திரு. (எஅ)

வ்யா.—அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு.—(இடரித்யாதி)* நீ துக்கப்படுகைக்கு சங்கையுண்டோவென்னில்; போராய்நெஞ்சே ! இனி நம்பக்கலிடர் வந்ததாகில் முதலைபட்டது படுமித்தனை.

(வேழமித்யாதி) ஆனையைத் தொடருவதான கொடிய முதலையை முடித்த, "சூழ்ச்சி" என்று வஞ்சித்தலாய், முடித்தவென்றபடி. (படமித்யாதி) இத்தால்அநாஶ்ரிதர் வந்தாலும் ஆஶ்ரிதர் வந்தாலும் அவனிருக்கும்படிசொல்லுகிறது. (கொய்ந்நாக மித்யாதி) கொய்யப்பட்டுச் செவ்வியையுடைய நாகப்பூவைக்கொண்டு "பைந்நாகப்பள்ளியான்பாதமேகைதொழுதும் - இடரார்படுவார் - எழுநெஞ்சே" என்றந்வயம்.

(எழு) போது. "நாகப்பூ" என்கையாலே அப்ராக்ருத புஷ்பம் தேடிப்போகவேண்டா, காட்டிலொரு பூவமையுமென்கிறது. இவர்கள் என்றும் காட்டிலேயிறே பழகிற்று. (எஅ)

அரு.—எழுபத்தெட்டாம் பாட்டு.—ஆஶ்ரிதர்-திருவநந்தாழ்வான். அநாஶ்ரிதர்-முதலை. நாகப்பூ-புஷ்பவிசேஷம். காட்டிலே திரிகையாலே (காட்டுப்பூ) என்கிறார்கள். (எஅ)

கொண்டானையல்லால் கொடுத்தாரை யார்பழிப்பார்
மண்தா வெனவிரந்து மாவலியை - ஒண்தாரை
நீரங்கைதோய நிமிர்ந்திலையே, நீள்விசும்பி
லாரங்கை தோயவடுத்து. (எகூ)

ப-உ.—மண் - பூமியை, தாவென - கொடு என்று, மாவலியை - மஹாபலியை, இரந்து - யாசித்து, ஒண் - அழகிய, தாரைநீர் - தாரையாகவிட்ட ஜலமானது, அம் - அழகிய, கை - கரத்திலே, தோய - விழுந்தஉடனே, நீள் - பரந்த, விசும்பிலார் - ஆகாசத்தில் வர்த்திக்கிற தேவர்களுடைய, அம் - அழகிய, கை - கரமானது, தோய - உறையும்படி, அடுத்து - கிட்டி, நிமிர்ந்திலையே - வளரவில்லையோ ? கொண்டானை - (தாநம்) வாங்கினவனை, பழிப்பாரல்

(பா) * இனி.

லால் - நிந்திப்பார்களேயொழிய, கொடுத்தானை - (தானம்) கொடுத்தவனே, பழிப்பாரார் - ஆர்நிந்திப்பர்கள். (நிந்திக்கமாட்டார்களே என்று கருத்து). (எகூ)

வ்யா.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—(கொண்டானே) குணமே குற்றமாம், குற்றம்குணமாங் கிடீர் ஸம்ஸாரம். ராவணனோ பாதிவத்யனாயிருக்க ஔதார்யகுணம் இவன் பக்கலிலே கிடக்கையாலே தன்னதான பூமியை யவனுக்காக மேலெழுத்திட்டு அவன் கொடுத்தானாக இவன் கொண்டத்தை, தன்கையிலே நீர்வார்த்தவனைப்பாதாளத்திலே தள்ளினனென்று பழிசொல்லா நிற்பர்கள். தன்னதல்லாத பூமியைத் தன்னதென்று கொடுத்தவனையிறே நெல்வாலிலே வைத்துத் தெறிக்கவேண்டுவது. அவனைப் பழிசொல்லுவாரில்லை. (கொண்டானையித்யாதி) ஆரத்தை யிரக்கிறுனேவிவன். (ஒண்டாரையித்யாதி) அலப்யலாபம் பெற்றாரைப்போலே, "வஷேஹணவீஜம் ஷூதிஸஂஜஹஷ்ஹ - வர்ஷேணபீஜம்ப்ரதி ஸஞ்ஜஹர்ஷ" என்னுமாப்போலே. அழகிய கையிலே நீர்விழுங் காட்டில் வளர்ந்திலேயோ. (நீள்விசும்பித்யாதி) பரந்த விசும்பிலே ஆரமும் கையுமடுத்துத் தோயும்படிக்கிடாக. அன்றிக்கே, நீள்விசும்பிலார்-விசும்பிலுள்ளார் அழகிய தோளிலே யணையவென்றுமாம். நாமாஶ்ரயிக்கவேணுமோ, தானே அர்த்தியாய். நானர்த்தியோவென்ன; (நிமிர்ந்திலேயே).

(கொண்டானை யல்லால்) தன்னதென்று கொடுக்கப் புகுமாகில் நமக்கிதில் ப்ராப்தியில்லை யென்று * இருந்தாலாகாதோ என்றிருக்க,அது குணமாகை தவிர்ந்து நிற்கைக் குடலாவதே. பையலை நெல்லிலேவைத்துத் தெறிக்கவேணுமென்பாருண்டாயிற்றே. ஆரறியப்பட்டான். (மண்தாவென) தன்னதிலேகதேசத்தை (மாவலியை) அஸுரனைக்கிடீர். (நீர்தோய நிமிர்ந்திலேயே) மறுமநஸ்ஸுப் படுமென்று அப்போதே. (நீள்விசும்பிலாரங்கை தோயவடுத்து) ஆஶ்ரயிக்க நிமிர்ந்திலேயே யென்றுமாம். (எகூ)

அரு.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—நெல்வாலிலே-வாலானநெல்லின் நுனியிலே. பரமத்திலே சிறுகச்சிறுக வறுத்துத் தெறிக்கவேணுமென்றபடி. ஆர்பழிப்பார் - ஒருவரும்பழிக்கிறார்களில்லை. ஒண்தா

(பா) * இரந்தாலாகாதோ வென்றிரக்க அது நிந்திக்கைக் குடலாவதே.

ரை - ஒள்ளியதாரை ; தெளிந்தஜலம். ஆரத்தையுடையமார்வும் கையையுடைய தோளும் அதித்துக்கூட்டி ஆகாசத்தைக்கிட்டும்படிக்கீடாக என்னுதல்.அர்த்தியாயன்றோ செய்தானென்று தாத்பர்யம்.

வாமநன்கருத்தை யருளிச்செய்கிறார் (தன்னதென்றித்யாதி). இதில் ப்ராப்தியில்லை - பூமி என்னதென்று பலி சொல்லுமதில் விசாரிக்கப்ராப்தியில்லை. ப்ரயோஜநமே போருமென்றிருந்தான். அடுத்துத்தோய-கூட்டித் தோய ஸ்பர்சிக்க."ஸமெ ஜஷஸாணாழ-ஸங்கைஸ்ஸூராணும்" என்னும்படி எல்லாருமாச்ரயிக்கநிமிர்ந்திலையேயென்றுமூன்றுமர்த்தம். (எகூ)

அடுத்த கடும் பகைஞர்க் காற்றேனென்றோடி
படுத்த பெரும்பாழி சூழ்ந்த - விடத்தரவை
வல்லாளன் கைகொடுத்த மாமேனி மாயவனுக்கு
அல்லாது மாவரோ ஆள். (அ௦)

ப.உ.—அடுத்த - நெருங்கின (ஸஹஜமான), கடும் - கொடிதான, பகைஞர்க்கு - த்வேஷத்தையுடைய (பெரிய திருவடிக்கு), ஆற்றேன் - பொறுக்கமாட்டேன், என்று - என்று, ஓடி - சீக்ரமாய்ச் சென்று, படுத்த - விரித்த, பெரும் - மஹத்தான, பாழி - படுக்கையை, சூழ்ந்த - சுற்றிக்கொண்ட, விடத்து - விஷத்தையுடைய, அரவை - (ஸுமுகனென்கிற) ஸர்பத்தை, வல்லாளன் - பலவானன கருத்மானுடைய, கை - கரத்திலே, கொடுத்த - (ரக்ஷிக்கும்படி)ஸமர்ப்பித்தவனாய், மா - சிறந்த, மேனி - விக்ரஹத்தையுடையனாய், மாயவனுக்கல்லாது - ஆச்சர்ய பூதனானவனுக்கொழிய, ஆளாவரோ - அடிமையாவர்களோ. (அ௦)

வ்யா.—அவ.—எண்பதாம்பாட்டு.—(அடுத்த) பரிஹாரமில்லாத ஆஶ்ரிதவிரோதம் பிறக்கிலும் அவர்களைப் பொறுப்பித்து புருஷகாரமாக அவர்களைக் †கைக்கொண்டு ரக்ஷிக்குமென்கிறது."சுஹயழ-அபயம்" என்று புகுந்த ஸ்ரீவிபீஷணப் பெருமாளை "புகுரவொட்டோம்." என்றவரைப்பொறுப்பித்து,"ஆநயெநம் ஹரிஶ்ரேஷ்-ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட" என்றுஅவனைக்கொண்டழைப்பித்தாற்

(பா) † கொண்டு.

போலே, பாதாளத்திலே ஸுமுகனென்றொரு ஸர்பத்தைப் பெரிய திருவடியமுதுசெய்ய நினைக்க, அத்தையறிந்துஸ்வர்க்கத்திலே உபேந்த்ரமூர்த்தியா யெழுந்தருளியிருக்கிற விடத்திலே திருப்பள்ளிக்கட்டிலைக் கட்டிக்கொண்டு கிடக்க, திருவடி பாதாளத்திலே சென்று தேடிக்காணமல் திருவடிகளிலே வந்து இவன் கிடக்கிறபடியைக் கண்டு * சிவிகையார்சொல்லும் வார்த்தையை விண்ணப்பஞ்செய்ய, திருவாழியை இவன்கையிலேகொடுத்து பலத்தை க்ஷயிப்பிக்க, பின்பு திருவடி ஸ்தோத்ரம்பண்ண, க்ருபைபண்ணித் திருவடிகையிலே † அடைக்கலமாகக் காட்டிக்கொடுத்து ரக்ஷித்தானென்கிற உபாக்யாநத்தை யநுஸந்தித்தருளிச் செய்கிறார்.

(அடுத்தவித்யாதி) அடுத்த-ஸஹஜசத்ரு. (கடும்பகைஞன்) திருவடியோடு விரோதங்கொண்டால் பிழைக்கப்போகாதென்கை. (ஆற்றேனென்றோடி) "பாழி" என்று - படுக்கைக்குப்பேர். (சூழ்ந்த) சுற்றின.(விடத்தரவை)சரண்யனுக்கு க்ருபாவிஷயமென்கிறது. (வல்லாளன்கைகொடுத்த) ப்ரஸந்நனானபோது அவனைப் பொறுக்கமாட்டேனென்னாதே ரக்ஷிக்கவல்லனானவன் கையிலே காட்டிக்கொடுத்த. (மாமேனி) காட்டிக்கொடுத்தபின்பு வடிவிற்பிறந்த பௌஷ்கல்யம். (மாயவனுக்கித்யாதி) எல்லாவவஸ்த்தையிலும் விட்டுக்கொடாத ஆச்சர்யபூதனுக்கொழிய வேறொருவருக்காளாவரோ.

அவ.—"நக்ஷாமி - நக்ஷமாமி" என்னும் தப்புக்குப் போக்கடி காணவல்லனென்கிறார்.

(வல்லாளன்) நலியநினைக்கில் அத்தைவெல்லவல்லாருமில்லை; ரக்ஷிக்கநினைக்கில் அத்தைத் தடுக்கவல்லாருமில்லை. (அல்லாதுமாவரோ ஆள்)ஆஸ்ரிதவிரோதியென்று கைவிடவேண்டும் விஷயத்தையும் பொருத்திவிட வல்லவனையொழிய. கடித்தவாயாலே தீர்க்கை. $ "வத்யதாம் - வத்யதாம்" என்றவனையே. "ஸுஹ்ருதோ நஹிதோ-அஸ்மாபிஸ்துல் யோபவது" என்னப்பண்ணுகை.

(அடுத்த) ஸஹஜசத்ருவினுடையஸத்தையுண்டாகில் பகையாயேயிருக்கும். (கடும்பகை) பேர்சொல்ல முடியும்படி கொடிதாகை

* சிவிகையார் - பல்லக்குத் தூக்குகிற ஓர் நீசஜாதி.

† அடைக்கலமாக - புகலிடமாக.

$ வத்யதாம் என்று அரும்பதத்துக்கு பாடமில்லை.

யும். (பெரும்பாழி) இந்த்ராநுஜன்படுக்கை. திருப்பாற்கடலாகவு மாம். (அ0)

அரு.—எண்பதாம்பாட்டு.—விடத்தரவை - விஷத்தையுடைய சென்கையாலே க்ருபாவிஷயம் தோஷயுக்தமென்றபடி. வல்லாளன்-ஜ்ஞாநாதிக்யத்தால் வந்தமிடுக்கு.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார். (நக்ஷத்ரேதி - நக்ஷமாமி இத்யாதி)-என்றவரையே. "வத்யதாம் - வத்யதாம்" என்றவரையே.

ஆளமர்வென்றி யடுகளத்து ளஞ்ஞான்று
வாளமர்வேண்டி வரைநட்டு - நீளரவைச்
சுற்றிக்கடைந்தான் பெயரன்றே, தொல்நரகைப்
பற்றிக்கடத்தும் படை. (அக)

ப.உ.—ஆள் - ஜனங்களால், அமர் - பொருந்தின, வென்றி - ஜயத்தையுடைய, அடுகளத்துள் - யுத்தஸ்தாநத்தில், அஞ்ஞான்று - அக்காலத்தில், வாள் - ஒளியையுடைய, அமர் - யுத்தத்தை, வேண்டி - அபேக்ஷித்து, வரை - (மந்தரமென்கிற) மலையை, நட்டு - நாட்டி, நீள் - நீண்ட, அரவை - (வாஸுகியாகிற) ஸர்பத்தை, சுற்றி - சூழ்த்து, கடைந்தான் - மதித்தவனுடைய, பெயரன்றே - திருநாமமன்றே, தொல் - அநாதியான, நரகை - நரகத்தை, பற்றி - பிடித்துக்கொண்டுபோய், கடத்தும் - தாண்டிவைக்கும், படை-ஸாதநம்.

வ்யா.—அவ.—எண்பத்தோராம் பாட்டு.—(ஆளமர்) ப்ரயோஜநாந்தரபரார்க்குங்கூட உடம்புநோவக் கடலைக்கடைந்து அம்ருதம் கொடுத்து அவர்களைச் சாவாமல் காத்தவனுடைய பேரன்றோ அநாதியான நரகத்தினின்றும் கைப்பிடித்தேறவிடும் பரிகரமென்கிறார்.

(ஆளமரித்யாதி) அமர்ந்து - நிறைந்து. ஆள்நிறைந்து வென்றியையுடைத்தாய் முடிப்பதானயுத்தஸ்தலத்திலே. (வாளமர்வேண்டி) மதிப்புடைத்தான பூசலைவேண்டி மந்தரத்தைநட்டு (அஞ்ஞான்று) அஸுரர் தேவர்களைமுறித்து வாயிலிட்டுச் செல்லுகிறவன்று. (வாளித்யாதி) தேவர்களுக்கு மதிப்பும் ஆயுஸ்ஸு முண்டாகும்படி. (நீளரவை) சேதநத்தை. (பற்றிக்கடத்தும்படை) அள்ளியெடுத்துக்

கொடுபோய் பரமபதத்திலே வைக்கும். (பற்றி) "அல்லேன்" என்று ஒழியவிடாது. (அக)

அரு.—எண்பத்தோராம்பாட்டு.—"வாள்" என்று ஒளியாய், அத்தாலதிப்பை யுடைத்தாகை. தேவர்களுக்குவெற்றியையுடைய பூசலென்றபடி. அமர்-பூசலாதல், ஆயுஸ்ஸாதல். படை-ஸாதநம். (அக)

**படையாரும் வாள்கண்ணார் பாரசிநாள், பைம்பூந்**
**தொடையலோ டேந்தியதூபம்- இடையிடையில்**
**மீன்மாய மாசூணும் வேங்கடமே, மேலொருநாள்**
**மான்மாய வெய்தான் வரை. (அஉ)**

ப-உ.—படை - (வேலென்கிற) ஆயுதத்தோடு, ஆரும் - ஸமானமான, வாள் - ஒளியையுடைய, கண்ணார் - நேத்ரங்களையுடையபெண்கள், பாரசிநாள் - த்வாதசியன்றைக்கு, பை - அழகிய, பூ-புஷ்பங்களுடைய, தொடையலோடு - மாலைகளோடுகூட, ஏந்திய - தரித்த, தூபம் - புகையானது, இடையிடையில் - நடுநடுவே, மீன் - நக்ஷத்ரங்களோடுகூடின ஆகாசம், மாய - மறையும்படி, மாசூணும் - அழுக்கடையும்படி பண்ணாநிற்கும், வேங்கடமே - திருமலையே, மேலொருநாள் - முன்பொருகாலத்தில், மான் - மான் என்னும் ம்ருகம், மாய-மடியும்படி, எய்தான் - அடித்தவனுடைய, மலை - பர்வதம். (அஉ)

வ்யா.—எண்பத்திரண்டாம்பாடு.—(படையித்யாதி) வாள்போன்ற ஒளியையுடைத்தான கண்களையுடையரான ஸ்த்ரீகள். (பாரசிநாள்) த்வாதசிநாள். (பைம்பூமித்யாதி) அழகிய தாகத்தொடுத்த மாலையோடே யேந்தினதூபம். (இடையிடையிலித்யாதி) பூக்களோடேகூடின புகையானது, ஆகாசத்திலே கலக்கத்தோற்றின நக்ஷத்ரங்களை மாசூணப்பண்ணாநின்றது. (மேலொருநாளித்யாதி) பண்டொருநாள் ராக்ஷஸன் மாயாம்ருகமாய்வர, "இத்தைப் பிடித்துத் தரவேணும்" என்று பிராட்டியருளிச்செய்தது மறுக்கமாட்டாமே அத்தை முடித்தவனுடையமலை.

அவ.—இப்பாட்டாலே ஸர்வஸமாஶ்ரயணீயத்வமும் ஆஶ்ரித பாரதந்த்ர்யமுஞ் சொல்லுகிறது.

(வாள்கண்ணூர்) தங்களைச் சிலர் ஆஶ்ரயிக்க விருக்குமவர்கள். (மீன்மாய) ஆகாசந் தோற்றுதபடி பூக்களும் புகையுமாகத் தோற்றுகை. (மானித்யாதி) பிராட்டிக்கு நியாம்யனானாற்போலே நியாம்யனாய்ப்புக்கு, தன்ன நர்த்தமென்று மீளாது கார்யஞ்செய்யுமவன்.(அஉ)

அரு.—எண்பதிரண்டாம்பாட்டு.—பார் - பூமி. அசிநாள் என்கையாலே (த்வாதசிநாள்) என்கிறது. (அஉ)

வரைகுடை தோள்காம்பாக ஆநிரைகாத்து, ஆயர்
நிரைவிடையேழ் செற்றவாறென்னே - உரவுடைய
நேராழியுட்கிடந்து நேரா நிசாசரர்மேல்
பேராழி கொண்டபிரான். (அங)

ப-உ.—உரவுடைய-பலத்தையுடைய, நீர் - ஜலத்தையுடைய, ஆழியுள் - ஸமுத்ரத்துக்குள், கிடந்து - பள்ளிகொண்டு, நேரா - எதிரிட்ட,நிசாசரர்மேல்-அஸுரர்களான மது கை டபர்கள்மேலே, பேர் - பெரிய, ஆழி - சக்ரத்தை, கொண்டான் - எடுத்த, பிரான் - உபகாரகனே! வரை - மலை, குடையாக - சத்ரமாகவும், தோள் - புஜம், காம்பாக - ஆதாரதண்டமாகவும் (செய்து), ஆநிரை - பசுக்கூட்டங்களை, காத்து-ரக்ஷித்து, ஆயர் - இடையரை (முன்னிட்ட), நிரை - திரண்ட, விடையேழ் - ஏழுஎருதுகளையும், செற்றவாறு - அழித்தப்ரகாரம், என்னே - எங்ஙனே. (அங)

வ்யா.—எண்பத்துமூன்றாம்பாட்டு.—(வரையித்யாதி)மலை குடையாகவும், தோள்காம்பாகவும், பசுக்களைக்காக்க. (ஆயரித்யாதி) நப்பின்னைப்பிராட்டிக்கு ப்ரதிபந்தகமானஎழுவ்ருஷபத்தையும் முடித்தபடி எங்ஙனே. (உரவுடைய வித்யாதி)“உரவு” என்று மிடுக்குக்குப்பேர். ஸர்ப்பமென்றுமாம். திருப்பாற்கடலிலே கிடந்து. (நேராவித்யாதி) எதிரான மதுகைடபர் மேலே திருவாழியை வாங்கின உபகாரகன். இத்தால் ஆஶ்ரிதர்க்கு விரோதம் வந்தபோது தன்னுடம்பு நோவக்கார்யம் செய்யுமென்றபடி.

ஒருசெயலேயோ. (வரையித்யாதி) வந்ததுக்குத் தக்கது கொண்டு கார்யஞ்செய்வதே. (உரவுடைய நீர்) * முதுநீர். (பேராழியித்

* முதுநீர் - வலிவையுடைய ஜலம்

யாதி) கையில் திருவாழியைக்கொண்டு இந்த்ரன் நோவாதபடி உன் தோள் நோவ ரக்ஷிப்பதே. (அ௩)

அரு.—எண்பத்து மூன்றும்பாட்டு.—மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறூர் (ஒரு செயலேயோ வென்று). (அ௩)

பிரானுன் பெருமை பிறராரறிவார்
உராயுலகளந்த நான்று - வராகத்
தெயிற்றளவு போதாவாறென்கொலோ, எந்தை
யடிக்களவு போந்தபடி (அச)

ப-உ.—பிரான் - உபகாரகனே! உராய் - ஶ்ரமமின்றி, உலகு-பூமியை, அளந்தநான்று - ஆக்ரமித்த காலத்தில், எந்தை - என்ஸ்வாமியான உன்னுடைய, அடிக்கு - பாதத்துக்கு, அளவுபோந்த - ப்ரமாணமாய்ச் சரிப்பட்ட, படி - பூமியானது, வராகம் - ஏனமான உன்னுடைய, எயிற்றளவும் - கொம்புக்கும், போதாவாறு - பூர்ணமாகாதபடி, என்கொலோ - எங்ஙனே!. (ஆனபின்பு), உன் - உன்னுடைய, பெருமை - ஆதிக்யத்தை, பிறர் - வேறொருவர், ஆர் - எவர்- அறிவார் - தெரிந்துகொள்வர்கள். (அச)

வ்யா.—எண்பத்துநாலாம்பாட்டு.—(பிரானித்யாதி) உபகாரகனை வுன்னுடைய பெருமையை வேறுசிலராலறியப்போமோ. (உராயித்யாதி) "உராய்" என்று, பட்டர் "அநாயாஸேந அளந்தவன்று" என்றருளிச்செய்தார். உலாவியென்றுமாம். பூமியிலே பொருந்த விட்டென்னிலுமாம். (எந்தையடிக்களவு போந்தபடி வராகத்தெயிற்றளவு போதாவாறென்கொலோ) ஒருநாள் திருவடிக்குள்ளடங்கியது திருவெயிற்றுக்குப் போந்ததில்லையென்கிறது. ரக்ஷ்யத்தினளவன்று ரக்ஷகன் பாரிப்பு. நானொருவனுமே உன் குணங்களிலே குமிழ் நீருண்ணுநின்றேன். (அச)

அரு.—எண்பத்துநாலாம்பாட்டு.—உராய் - அநாயாஸமாதல்; உரோசியென்றும் - பூமியிலே பொருந்த விட்டென்னுதல். "என்கொலோ - பிறராரறிவார்" என்கையாலே (நானொருவனுமேயென்கிறது). (அச)

படிகண்டறிதியே பாம்பணையினன், புள்
கொடிகண்டறிதியே கூறாய் - வடிவில்
பொறியைந்து முள்ளடக்கிப் போதொடு நீரேந்தி
நெறிநின்ற நெஞ்சமே நீ. (அரு)

ப-உ.—நெஞ்சமே - மநஸ்ஸே! பொறியைந்தும் - இந்த்ரியங்களைந்தையும், வடிவில் - சரீரத்தினுடைய, உள் - உள்ளே, அடக்கி- நியமித்து, போதொடு - புஷ்பங்களோடுகூடி, நீர் - ஜலத்தை, ஏந்தி- தரித்து, நெறி - வழியில், நின்ற - ஸ்திரமான, நீ - நீ, பாம்பணையினன்-திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய, புள்- பக்ஷியாகிற, கொடி - த்வஜத்தை, கண்டு - பார்த்து, அறிதியே - அநுபவித்தாயோ? படி - திருமேனியை, கண்டறிதியே - பார்த்தநுபவித்தாயோ? (இல்லையே என்று கருத்து). (அரு)

வ்யா—அவ.—எண்பத்தைந்தாம்பாட்டு.—"பிறராரறிவார்" * என்பாரைத்தம்முடைய திருவுள்ளம் நானறிந்திருக்க வென்ன; நீயும் இந்த்ரிய ஜயம்பண்ணி ஆஶ்ரயணத்திலே யிழிந்தாயல்லது ஸாக்ஷாத்கரித்தாயோ வென்கிறார்,

(படியித்யாதி) திருமேனி கண்டறிதியோ. (பாம்பணையித்யாதி) அவனுடைய படுக்கைகண்டறிதியோ. (கூறாய்) சொல்லாய். (வடிவித்யாதி) சரீரத்தில் இந்த்ரியங்களைந்தையு மடக்கி. வடிவில்லாத இந்த்ரியங்களை யடக்கி யென்றுமாம். "கண்டவாதிரிந்த தொண்டனேன்" என்னுமாப்போலே என்னவுமாம். (போதொடித்யாதி) புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு ஆஶ்ரயணத்திலே யிழிந்தாயித்தனையிறே நீ,

நாமறியா திருக்கப்பெற்றபடி யென்னென்ன; திருவுள்ளத்தைக் குறித்து,(வடிவில் பொறியைந்து முள்ளடக்கி)வடிவிலே-உடம்பிலே யடக்கி. வடிவில்லாதபடி ஒருபடிப் பட்டிராதென்றுமாம். (அரு)

அரு.—எண்பத்தைந்தாம்பாட்டு.—புட்கொடிகண்டறிதியே - கண்டாயோ? இல்லையேயென்றபடி. வடிவு-ஸ்வபாவமாய் அத்தால்

---

(பா) * என்றவாறே,

ஒரு படிப்பட்டிராமை. இத்தையருளிச்செய்கிறார், (கண்டவாதிரி ந்தவித்யாதி).

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (நாமறியாதிருக்கப்பெற் றபடி யித்யாதி). (அடு)

நீயும் திருமகளும் நின்றாயால், குன்றெடுத் துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா - வாசல்
கடைகழியா வுட் புகா காமர்பூங்கோவல்
இடைகழியே பற்றியினி. (அசு)

ப-உ.—பாயும் - மேலேவிழுகிற, பனி - மழையை, குன்றெடு த்து - மலையைத்தூக்கி, மறைத்த - தடுத்த, பண்பாளா - ஸௌலப்ய குணமுடையவனே! வாசற்கடை - வீட்டுக்கு வெளிப்ரதேசத்தில், கழியா - போகாமலும், உள்புகா - உள்ளேபோகாமலும், காமர் - அலங்காரமான, பூ - அழகிய, கோவல் - திருக்கோவலூருடைய, இடைகழி - மத்யப்ரதேசத்தை, பற்றி - அவலம்பித்து, நீயும் - நீ யும், திருமகளும் - பிராட்டியுமாக, இனி - இப்போது, நின்றாய் - இருந்தாயே! ஆல் - ஆச்சர்யம். (அசு)

வ்யா.—அவ.—எண்பத்தாறும்பாட்டு.—(நீயும்) இவர், தம்மு டைய திருவுள்ளத்தைக் குறித்து, "ஸாக்ஷாத்கரித்திலையிறே" என்னத் தரியானிறே அவன்.

(நீயுமித்யாதி) "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என் னடியார் அது செய்யார்" என்ற நீயும், உன்னுடைய பரிகரம் நலியப் புக, "ந கஸ்சிந் நாபராத்யதி - நகச்சிந்நாபராத்யதி" என்ற அவளு மாய் நின்றாயால். (குன்றித்யாதி) உடம்பிலேவிழப்புக்க மழை யை மலையையெடுத்துப் பரிஹரித்த நீர்மைபோலே யிருந்தது இப் போது நெருக்கு. அபேக்ஷிதமாக நெருக்கினபடி. (வாசலித்யாதி) இடைகழிக்கு உள்ளும் புறம்பும் காட்டுத்தீபோலே யிராநின்றது. காமுகரானவர்கள் உகந்த விஷயத்தினுடைய கண் வட்டம் விட்டுப் போகமாட்டாதாப்போலே. (இனி) இப்போது. இனி திருக்கோவலூ

ரிலே நிற்கிறது கர்மபலாநுபவத்துக் கன்றிறே. ஸம்ஸாரிகளை நரகத்தில் புகாமல் காக்கவிறே.

(நீயுமித்யாதி) ஆஶ்ரிதரக்ஷணத்தில் முற்பாடனான நீயும் "ஸமுத்ரே மோக்ஷயிஷ்யாமி - அக்ரதஸ்தேகமிஷ்யாமி" என்று உனக்கு முற்படும் பிராட்டியும். (பண்பாளா) அன்று அங்ஙனே உதவினாய். (கடைகழியாவுள் புகா) அங்கு அவர்களாபத்துத்தீர்த்தான்; இங்கு தன்னாபத்து தீர்த்தபடி. புறம்பு காட்டுத்தீயோ டொக்கும். (அரு)

அரு.—எண்பத்தாறும்பாட்டு.—இடை கழிக்குப் புறம்பு ஸம்ஸாரிகளும், உள்ளே உபாஸகனான ருஷியுமாகையாலே, அநந்யப்ரயோஜநரான ஆழ்வார்கள் பற்றியிருக்கிற இடைகழியைப் பற்றிநின்றானென்றபடி. "இனி" என்று மேலில் பாட்டைப்பற்றவருளிச்செய்கிறார் (திருக்கோவலூரித்யாதி) இன்று இங்ஙனே உதவினாய். (அசு)

இனியார் புகுவா ரெழுநரகவாசல்
முனியாது மூரித்தாள் கோமின் - கனிசாயக்
கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு
நன்கறிந்த நாவலம் சூழ் நாடு. (அள)

ப-உ.—கனி - (விளவின்) பழம், சாய - விழும்படி, கன்று - வத்ஸத்தை, எறிந்த - வீசிப்பொகட்ட, தோளான்-புஜங்களையுடையவனுடைய, கனை - (ஆபரண) த்வநியையுடைய, கழல் - திருவடிகளை, காண்பதற்கு - ஸாக்ஷாத்கரிக்கைக்கு, நாவல் - நாவல்மரத்தின் சாயையிலிருக்கிற, சூழ் - விசாலமான, நாடு - தேசம் (ஜம்பூத்வீபம்), நன்று - செவ்வையாய், அறிந்தது - (உபாயத்தை) தெரிந்துகொண்டது; (ஆனபின்பு), எழு - ஏழுவிதமான, நரகம் - நரகத்தினுடைய, வாசல் - த்வாரங்களில், இனி - இதுக்குமேல், புகுவார் - நுழைவர்கள், யார் - எவர்; முனியாது - கோபித்துக்கொள்ளாமல், மூரி - த்ருடமான, தாள் - பூட்டை, கோமின்-பூட்டுங்கோள். (அள)

வ்யா.—எண்பத்தேழாம்பாட்டு.—(இனியித்யாதி) "எழுநரகவாசல்" என்கிறது-கிளர்த்தியை யுடைத்தான நரகமென்னவுமாம்; ஏழு வகை நரகமென்னவுமாம். (முனியாது) யமபடருடைய கோபத்து

க்கு இனி பலமில்லையென்கிறது. (மூரித்தாள் கோமின்) இனிப்புகு வாரில்லை; மிடுக்குடையதாளைக் கோவுங்கோள்.(கனிசாய வித்யாதி) "கனை கழல்" என்றது - இலக்கைக்குறித்து நடக்கிறபோது திருவடிக ளினுபாரணத்வநியை ஜம்பூத்வீபமானது நன்றாகவறிந்தது.நன்றாகவ றிகை - ஸம்ஸாரத்தினின்றும் போகோமென்றிருக்கை. உகந்தருளின தேசமிங்குண்டாயிற்றேயென்று அஸூயையைபண்ணாதே பொறுத்திரு க்கை.

(இனியித்யாதி) எங்கள் பதத்துக்கு அழிவுசொல்லுவதே என்று பொடியாதே. (கனை கழல்) ஆபரணவொலி. (நாவலம்) ஜம்பூத்வீபம். "ஏகாந்தரணிம் ஆஶ்ரிதௌ - ஏகாந்தரணிமாஶ்ரிதௌ" ஒரு படுக் கையிலே யிருப்பார்க்கு பயமுண்டோ. (அஎ)

அரு.—எண்பத்தேழாம்பாட்டு. — கீழ்வாக்யத்தை விவரிக்கி ருர் (உகந்தருளின தேசமித்யாதி). "அஸூயை" என்றது - பகவத் த்விட்டுக்களாகையாலே திவ்யதேசத்தை விட்டு தேசாந்தரத்தேபோ தல்; அங்கொரு அதிசயங்கண்டால் ப்ராணத்யாகம் பண்ணுதல். பொடியாதே - ஆழ்வாரைப்பொடியாதே. திவ்யதேசமுள்ள நாட்டி லிருப்பு மாத்ரம் போருமோவென்ன ; அருளிச்செய்கிருர் (ஏகாந் தரணிம் - ஏகாந்தரணிம்; இத்யாதி). (அஎ)

**நாடிலும் நின்னடியே நாடுவன், நாடோறும்**
**பாடிலும் நின்புகழே பாடுவன் - சூடிலும்**
**பொன்னாழி யேந்தினன் பொன்னடியே சூடுவேற்கு**
**என்னுகி லென்னே யெனக்கு. (அஅ)**

ப-உ.—நாடிலும் - விரும்பினுலும், நின் - உன்னுடைய, அடி யே - பாதத்தையே, நாடுவன் - விரும்புவன்; நாடோறும் - ப்ரதிதிந மும், பாடினும் - ஸ்தோத்ரம்பண்ணினுலும், நின்புகழே - உன்னு டைய கீர்த்தியையே, பாடுவன் - துதிப்பன்; சூடிலும் - சிரஸ்ஸில ணிந்தாலும், பொன் - அழகிய, ஆழி - சக்ரத்தை, ஏந்தினன் - தரித் தவனுடைய, பொன் - அழகிய, அடியே-பாதங்களையே, சூடுவேற் கு - தலையில் தரிக்கப்பட்டவனுன, எனக்கு - எனக்கு, என்னுகில்- எப்படியானுல், என் - என்ன. (அஅ)

வ்யா.—எண்பத்தெட்டாம்பாட்டு.—(நாடிலுமித்யாதி) நினைக்கிலும் உன் திருவடியையே நினைப்பன். எப்போதும் பாடிலும் உன்னுடைய புகழையே பாடுவேன். (சூடிலுமித்யாதி) ஒன்றைச் சூடிலும் திருவாழியேந்தின உன்னுடைய விலக்ஷணமான திருவடிகளைச் சூடாநின்ற வெனக்கு பரமபதத்திலே போனாலும் வாங்மனஃகாயங்கள் அங்கே ப்ரவணமாகையாகச் செய்வது; அது இங்கே பெற்றேனாகில் எனக்கு இங்கே யிருக்கை நல்லதென்கிறார். அவன் படிக்கு ஸம்ஸாரிகள் படியைப்பார்த்தால் யமனுக்கு அவகாசமுண்டாயிருந்தது. "தேநமைத்ரீபவது" என்றும் "யதிவா-யதிவா" என்றும் சொல்லத் தலையறுப்புண்டிலனே. (பொன்னடியே) இதுவே ப்ரயோஜநமாக வாக்காயங்களை யொழிய நினைக்கிலும். (என்னுகிலென்னே யெனக்கு) நாட்டார் நரகம்புகிலென் தவிரிலென். ஆரானுழ. (அஅ)

அரு.—எண்பத்தெட்டாம்பாட்டு.— "சூடுவேற்கு" என்றது மாநஸமாகச்சூடுகையைச்சொல்லி, இப்படி மாநஸமாகச்சூடுவார்க்கு என்று பரகதமாக்குகிறார் (அவன்படிக்கித்யாதி). இப்படி நினைத்தமட்டிலே அவனைப்பெறலாயிருக்க அதுவும் செய்யாமையாலேயமனுக்கு அவகாச முண்டென்றபடி.

இப்படி அல்பாநுகூல்யத்திலே அவன் கார்யம் செய்யலாயிருக்க இழந்த பேருண்டோ வென்ன ; அருளிச்செய்கிறார் (தேநமைத்ரீ-தேநமைத்ரீ இத்யாதி). சூடுகை - மாநஸப்பற்றுக்கி யருளிச்செய்கிறார் (வாக்காயங்களை யித்யாதி). (எனக்கு-என்னுகிலென்) இப்படி அல்பாநுகூல்யத்திலே பெறலாயிருக்க இத்தை இழக்கிறஸம்ஸாரிகள் படி எனக்கு ஏதானுல் தாவிலே. அத்தை யாராயக்கார்யமில்லை என்றபடி. ஆரானுழ - இப்படி ஆர்தான் பிறருக்குத் துக்கப்படுவாரென்றபடி. (அஅ)

**எனக்காவா ராரொருவரே, எம்பெருமான்**
**தனக்காவான் தானே மற்றல்லால் - புனக்காயாம்**
**பூமேனிகாணப் பொதியவிழும் பூவைப்பூ**
**மாமேனி காட்டும் வரம்.** (அகூ)

ப-உ.—எனக்கு - எனக்கு, ஆவார் - ஒப்பாவார், ஆரொருவரே - ஒருவராகிலும் ஆருண்டு; எம்பெருமான் - ஸர்வேஸ்வரன், தா

னே - ஸ்வயமே, தனக்கு - தனக்கு, ஆவானல்லால் - ஒப்பாமல்லது, மற்று - எனக்கொப்பாவனே ? புனம் - தன்னிலத்திலிருக்கிற, காயாம்பூ - காயாம்பூவினுடைய, மேனி - நிறமும், காண - பார்க்கப் பார்க்க, பொதியவிழும் - மலரும், பூவைப்பூ - பூவைப்பூவினுடைய, மேனி - நிறமும், மா - ஶ்லாக்யமான, மேனி-விக்ரஹத்தை, வரம்-நன்றாக, காட்டும் - தர்சிப்பிக்கும். (அகூ)

வ்யா.—எண்பத்தொன்பதாம்பாட்டு.—(எனக்கித்யாதி)என்னோடொப்பா ரொருவருமில்லையிறே என்னவுமாம். எனக்காவா ரெவரென்னவுமாம். என்னோடொப்பா ரொருவருமில்லை யென்று நீர்சொல்லுவானென்; பரமசேதநனுண்டே யென்னில்; (எம்பெருமானித்யாதி) என்னோடொத்தா ரில்லையென்றே னித்தனையல்லது, எம்பெருமானுடைய உயர்த்தியில்லை யென்றேனோ. நீர்என்னோடொப்பா ரில்லையென்று சொல்லிற்று எத்தாலே யென்னில்; அவனோடு ஸத்ருசமான பதார்த்தங்கள் வர்த்திக்கிற தேசத்திலே நின்றேன்; ஓரடியன்றே குறைய நின்றது. அவன் என்று ஸாக்ஷாத் கரிக்கு மத்தனை யன்றே வேண்டுவது. (புனக்காயாம் பூமேனி) புனத்திலே நிற்கிற காயாம்பூமேனியை. (காணப்பொதிய விழும்பூவைப்பூ) காணக்காண அலராநின்ற பூவைப்பூ. இவையிரண்டு மவனுடைய வரமானமாமேனியைக் காட்டா நின்றது. நாட்டார்க்கு நினைக்கையிலுள்ள வருத்தம் போரும் எனக்கு மறக்க. நானுமொருவனே. வரமாக - தன்னிலும் விசதமாகவென்றுமாம். (அகூ)

அரு.—எண்பத்தொன்பதாம்பாட்டு,—எனக்குஹிதபார் எவர், ஈஶ்வரனையொழிய வொருவருமில்லை யென்று இரண்டாமர்த்தம்; ஸத்ருச பதார்த்தம் - காயாம்பூ முதலானவை. அவற்றைக்கண்டு தரிக்கலாயிருக்கையாலே என்னோடொப்பாரில்லை யென்றபடி. அவற்றைக்கண்டு தரிக்கப் போமோ, அவனைக்காணவேண்டாவோ வென்ன ; அருளிச்செய்கிறார், (ஓரடியன்றேவித்யாதி). குறை - ப்ரத்யக்ஷமாக அவனைக்காணுமை. ஆனல் வேணதுளதென்ன ; அருளிச்செய்கிறார் (அவனென்றித்யாதி). ஸத்ருச பதார்த்தங்களை அவனாகக்கொண்டு ஸாக்ஷாத்கரிக்கு மத்தனையென்றபடி. (பொதியவிழும்) கண்பொதிய - கண்காணவென்றபடி. பூக்கள் காட்டுகையாலேமறக்கவருமை. (அகூ)

வரத்தால் வலிநினைந்து மாதவநின் பாதம்
சிரத்தால் வணங்கானு மென்றே - உரத்தினால்
ஈரரியாய் நேர்வலியோ னாய விரணியனை
ஓரரியாய் நீயிடந்த தூன். (கூ௦)

ப-உ.—மாதவ - ஸ்ரியஃபதியானவனே! ஈர் - பிளக்கப்பட்ட, அரியாய் - சத்ருவாய், நேர் - எதிரில் (நிற்கவல்ல), வலியோனாய - பலவானான, இரணியனை - ஹிரண்யகசிபுவை, ஓர் - ஒப்பற்ற, அரியாய் - ஸிம்ஹமாய், உரத்தினால் - பலத்தாலே, ஊன் - கொழுத்த (உடம்பை), நீ - நீ, இடந்தது - கிழித்தது, வரத்தால் - (தேவர்களுடைய) ஆசீர்வாதத்தால் (வந்த), வலி - பலத்தை, நினைந்து - எண்ணி, நின் - உன்னுடைய, பாதம் - திருவடிகளை, சிரத்தால் - தலையால், வணங்கானும் - தொழாதேயிருந்தான், என்றே - என்றோ!. ()

வ்யா.—அவ.—தொண்ணூறும்பாட்டு.—(வரத்தால்)நரஸிம்ஹரூபியான ஈஸ்வரனுடைய ஆஸ்ரித விரோதி நிரஸந சீலத்தையும் வாத்ஸல்யத்தையுமநுஸந்திக்கிறார்.

(வரத்தால்வலி நினைந்து) வரத்தாலே தனக்கு மிடுக்குண்டாக நினைத்தானல்லது வரங்கொடுத்தவர்கள் சக்தி பகவததீந மென்றறிந்திலன். (மாதவ) வரங்கொடுத்தவர்களாலும் வணங்கப்படுமவன். (நின்பாதமித்யாதி) அவனிழவுக்கு வெறுக்கிறார். (உரத்தினாலீரரியாய்) மிடுக்காலே ஈரப்படும் அரியானவன் - சத்ருவானவன். பெரிய சத்ருவென்றுமாம். (நேர்வலியோன்) நேரே வலியான ஹிரண்யனை. (ஓரரியாய்) நாட்டில் நடையாடும் ஸிம்ஹமன்று. தன்னுடைய இச்சையாலே பிறந்த ஸிம்ஹமென்றுமாம். ஓரப்படும் அரியாய் -எல்லாரும் த்யாநம்பண்ணும் ஸிம்ஹமென்றுமாம்.

(வரத்தால்) தேவர்கள் வரத்தை மிடுக்காக நினைத்தான். வணங்குவித்துக்கொள்ளும் விஷயமிருக்கும்படி. (வணங்கானுமென்றே) பிள்ளை பக்கல் பரிவு தப்பச் செய்தோம். என்னுமென்றுமாம். உன் வஸ்து அழியாமைக்கென்றுமாம். (ஈரரி) பெரிய சத்ரு. (ஓரரி) ஸிம்ஹங்களில் ஒப்புப்பிடிக்க வொண்ணாது. (கூ௦)

அரு.—தொண்ணூறும்பாட்டு.—"ஓர்" என்று - விசாரமாய் (இச்சையாலே யென்றது). பரிவு தப்பச் செய்தோம்-பரிவு தப்பும்படி தண்டித்தோமே யென்னுமநுதாபமில்லாதவனென்னுதல்; வணங்காமையாலே தன் வஸ்துவான ஹிரண்யனுக்கு ஸ்வரூபநாசம் வாராமைக் சென்னுதல். விரோதியான சரீரத்தைப் போக்கினனென்றபடி. (கூO)

ஊனக் குரம்பையி லுள்புக் கிருள் நீக்கி
ஞானச் சுடர்கொளீஇ நாடோறும் - ஏனத்
துருவா யுலகிடந்த வூழியான் பாதம்
மருவாதார்க் குண்டாமோ வான். (கூக)

ப-உ.—ஊன - மாம்ஸமயமான, குரம்பையில் - சரீரமாகிற குடிசையில், உள்புக்கு - உள்ளேநுழைந்து, இருள் - அஞ்ஞாநத்தை, நீக்கி - போக்கி, ஞானம் - ஞானமாகிற, சுடர் - விளக்கை, கொளீஇ - ஏற்றி, ஏனத்து - வராஹத்தினுடைய, உருவாய்-ரூபத்தையுடையனாய்க்கொண்டு, உலகு - ஜகத்தை, இடந்த - பிரித்தெடுத்த, ஊழியான் - ப்ரளயகாலத்தில் வர்த்திக்கிறவனுடைய, பாதம் - திருவடிகளை, நாடோறும்-திநந்தோறும், மருவாதார்க்கு - கிட்டாதவர்களுக்கு, வான்-பரமபதம், உண்டாமோ - கிடைக்குமோ ? (கூக)

வ்யா.—அவ.—தொண்ணூற்றோராம்பாட்டு.—(ஊனக் குரம்பை) பரமபதம் ஸ்வயத்நஸாத்யமன்று என்றவோபாதி இச்சையும் வேண்டாவோ வென்கிறது. ஹேயத்திலே ஹேயதாபுத்தியும், உபாதேயத்திலே உபாதேயதாபுத்தியும் வேண்டாவோ பேற்றுக்கு.

(ஊனமித்யாதி) சரீரங் கண்டதெல்லாம் பொல்லாதாயிருக்கச் செய்தே ஆபாதப்ரதீதியில் நன்றுபோலே யிருப்பதொன்றுண்டு; அந்தவிருள் சரீரத்தை அவகாஹிக்கப்போம். (ஞானச்சுடர்கொளீஇ) ஜ்ஞாநமாகிற விளக்கை ப்ரகாசிப்பித்து. இதினுடைய ஹேயதையும் அந்யதா ஜ்ஞாநமும் யதார்த்தஜ்ஞாநத்தாலேபோம். ஆக, யதார்த்த ஜ்ஞாந பூர்வகமாக பரஜ்ஞாநம் வேணும். (நாடோறுமித்யாதி) நோவுபட்டபோது உதவினவனாய் இவை யில்லாதவன்று தானுண்டாய் ரக்ஷிக்குமவனுடைய திருவடிகளில் ருசி யில்லாதார்க்கு முண்டோ பரமபதம். (நாடோறும்) அவன் ஆபிமுக்யம் பண்ணுகிற

படியை அநுஸந்திக்க வைமுக்ய சங்கையுண்டோ? ஜீயர் திருவடிகளை ஆஶ்ரயித்திருப்பானொரு வைஷ்ணவன் வர, "நீபலநாள் வரத் தவிர்த்தாயே" என்றருளிச்செய்ய, "நீர் ஒருகா லருளிச்செய்தபடியைநினைத்திருக்கவமையாதோ" என்ன, "நம்பிக்கை நிலையிலே வர்த்திக்கிறதும்மாண்டு, "நாடோறு மேனத்துருவா யுலகிடந்த வூழியான் பாதம்மருவாதார்க்குண்டாமோவான்" என்கிற விப்பாட்டுங் கெடுவாய்கேட்டறியாயோ" என்கிறார். ருசியில்லாதார்க்கும் ஸ்ரீ வைகுண்டம் கிடைக்குமோ.

கீழ்ப்பாட்டு ருசியுடையவனுக்குதவினபடி. (ஊனக் குரம்பை) ஹேயமாய் அல்பமாய் அஸ்திரமாய் அநர்த்தமாய் அகவாய் தெரியாதபடி மேலே தோலை வைத்து மினுக்கி, ஆபாதப்ரதீதியில் நன்றென்று தோற்றும்படி யிருக்கிற வித்தை உள்ளபடியே அநுஸந்தித்து அபுருஷார்த்தமென்றும், புருஷார்த்தவிரோதியென்றும் பேசிற்று. "பொய்ந் நின்ற" இத்யாதி, (ஞானச்சுடர்கொளீஇ) ப்ரகாரமான தன்னை யநுஸந்தித்து ப்ரகாரியான * தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கி. (ஏனமித்யாதி) இத்தலைநினையாதபோதும் நினைத்திருந்து நோக்குமவன். விரோதியான இவ்வாகாரத்தை யன்றோ துடைத்தது. "ஏனத்துருவாயிடந்த-ஞானப்பிரான்". (கூக)

அரு.—தொண்ணூற்றோராம்பாட்டு.—அவகாஹிக்கை - சரீர தோஷங்களை யறிகை - ஊழியான் - ஸம்ஹாரகாலத்திலும் தான் உளனாய்ரக்ஷிக்குமவன். நாடோறும் மருவவேணுமென்னு மதுக்கு ஸம்வாதமாக வருளிச்செய்கிறார் (ஜீயரித்யாதி). நாடோறும் மருவுகைக்குப் பண்ணின உபகார மேதென்ன; அருளிச்செய்கிறார் (இத்தலை யித்யாதி). விரோதியைப்போக்கி உபதேசித்த தெங்கேயென்ன; அருளிச்செய்கிறார் (ஏனத்துருவாயித்யாதி). (கூக)

**வாஞகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்**
**தேஞகிப் பாலாம் திருமாலே - ஆஞய்ச்சி**
**வெண்ணெய் விழுங்க நிறையுமே, முன்ஞெருநாள்**
**மண்ணை யுமிழ்ந்த வயிறு. (கூஉ)**

ப-உ.—வாஞகி - ஆகாசரூபஞய், தீயாய் - அக்நிரூபஞய், மறி - அலையெறிகிற, கடலாய் - ஸமுத்ரரூபஞய், மாருதமாய் - வா

யுருபனாய், (தான் இந்திந்தரூபங்களை எடுத்துக்கொண்டு ஜகத்தை நிர்வஹித்துப் போருகிறவனாய்), தேனாகி - தேன்போலே ஸர்வரஸனாய், பாலாம் - பால்போலே போக்யனான, திருமாலே - ஸ்ரிய:பதியே! ஆன் - பசுமேய்க்கும் குலத்தில் பிறந்த, ஆய்ச்சி - இடைச்சியினுடைய, வெண்ணெய் - உருக்காதநெய்யை, விழுங்க - அமுதுசெய்ய, முன்னொருநாள் - முன்பு ஒருகாலத்தில், மண்ணை - பூமியை, உமிழ்ந்த - வெளிப்படுத்தின, வயிறு - திருவுதரம், நிறையுமே - பூர்ணமாகுமோ. (கூஉ)

வ்யா.—தொண்ணூற்றிரண்டாம் பாட்டு.—(வானாகி) அவ்வவ ஜாதிகளிலே அவதரித்து அதிலுள்ளாருடைய தாரகமே தனக்கு தாரகமாயிருக்கிறபடி. ஸ்ரீவராஹமானானாகில் கோரைக்கிழங்கு தாரகமாம்; இடையனானாகில் வெண்ணெய் தாரகமாயிருக்கிறபடி. (வானித்யாதி) பஞ்சபூதங்களாலே ஒரு அண்டமாய் அண்டாந்தர்வர்த்திகளானபுருஷர்களுக்குநிர்வாஹகனாய். (தேனித்யாதி) "ஸவ-ரஸ:-ஸர்வரஸ:" என்கிறபடியே பிராட்டியோடே கூட பரமபதத்திலே யிருக்கிறவனே! உபயவிபூதியுக்தனா யிருக்கிற இருப்புக்குச் சேருமோ ஓரிடைச்சி வெண்ணெயை விழுங்குகை. (முன்னித்யாதி) ப்ரளயங்கொள்ளாதபடி வயிற்றிலே வைத்து வெளிநாடுகாணப்புறம் பேயுமிழ்ந்து ரக்ஷித்தவயிறு. இத்தனை வெண்ணெயாலே நிறைக்க வேண்டியிருந்ததோ; பின்னை உன் வயிற்றை வண்ணானுக்கிடமாட்டாயோ வென்கிறார். ருசியுடையாரோடு ஸம்பந்தமுள்ள தொன்றாலல்லது உபய விபூதியோகம் குறைபட்டிருக்கு மவனுடைய ருசி சொல்லுகிறது. (ஆனாய்ச்சி வெண்ணெய்)முடைநாறும் வெண்ணெய். (நிறையுமே) குறைக்குமிட்டு அடைக்கவேணும். ஸம்ஸாரிகளுக்குப்ரளயம்போலே இவனுக்கு வெண்ணெய் பெறுவிடில். (கூஉ)

அரு.—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—வண்ணான் தாழியில் எப்போதும் கஞ்சி தோய்க்கிறதே ஸ்வபாவமாகையாலே, வயிற்றை வளர்க்கமாட்டாவிட்டால் வண்ணான் கையிலே கொடுத்தால் எப்போதும் கஞ்சி யுண்டென்று லோகவார்த்தை. வயிறு தாழிஸ்தானம். "நிறையுமே" என்றத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ருசியுடையாரோடித்யாதி). (கூஉ)

**வயிறழல வாளுருவி வந்தானை யஞ்ச**
**எயிறிலக வாய்மடுத்த தென்நீ - பொறியுகிரால்**

பூவடிவை யீடழித்த பொன்னாழிக் கையா,நின்
சேவடிமே லீடழியச் செற்று. (கூரு)

ப-உ.—பூ - புஷ்பத்தினுடைய,வடிவை-வண்ணத்தை, ஈடழித்த - திரஸ்கரித்த, பொன் - அழகிய, ஆழி - சக்ரத்தை, கையா - கையிலேந்தினவனே ! வயிறு - உதரம், அழல - எரியும்படி, வாள்-கத்தியை, உருவி - உருவிக்கொண்டு, வந்தானை - வந்தஹிரண்யனை, அஞ்ச - பயப்படும்படி, நின் - உன்னுடைய, சே - சிவந்த, அடிமேல் - பாதங்கள்மேலே (ஏறிட்டு), பொறி - நாநாவர்ணமான, உகிரால் - நகத்தினால், ஈடழிய - கட்டுக்குலையும்படி, செற்று - முடித்து, எயிறு - தந்தங்கள், இலக-ப்ரகாசிக்கும்படி, நீ - நீ, வாய்மடுத்தது - வாய்க்குள் வைத்துக்கொண்டது, என் - என்ன ஆச்சர்யம். (எதுக்காக). (கூரு)

வ்யா.—அவ.—தொண்ணூற்றுமூன்றும்பாட்டு.—(வயிறித்யாதி)கீழ்ப்பாட்டிலே ஆஶ்ரிதவாத்ஸல்யம் சொல்லிற்று; இதில் ஆஶ்ரிதவாத்ஸல்யகார்யமான அவர்கள் விரோதிகள் பக்கலுண்டான சீற்றஞ் சொல்லுகிறது.

(வயிறித்யாதி) வயிறழலுகிறது ஆர்க்கென்னில் ; ஆழ்வாருக்கு; முன்பொருநாள் ஹிரண்யன் செய்ததாயிராதே தம்முடைய எதிரே வாளுமுருவிக்கொண்டு புறப்பட்டாற்போலே யிருந்தபடி. “என்றுமென்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள் அங்ஙனமாவர்களே” என்கிறபடியே. (வந்தானை) தம்முடைய மேலே வந்தாற்போலே யிருக்கிறபடி. (பூவடிவை யீடழித்தபொன்னாழிக்கையா) ஸௌகுமார்யத்தாலும் அழகாலும் பூவைக்கீழ்ப்படுத்துவதான கையிலே திருவாழியையுடையவனே. (பொறியுகிரால்) பார்த்தபடியே யிருக்க வேண்டியிருக்கிற உகிராலே. (நின்சேவடிமே லீடழியச்செற்று) என்றும் நாங்கள் ஆசைப்பட்டுப்போகிற திருவடிகளிலே அவனையேறிட்டு இனிமுளையாதபடி முடித்து. (எயிறிலகவாய்மடுத்த தென்நீ) பிராட்டிமார்க்கும் ஸம்போகத்தில் திருமுத்து தோற்றாதபடி பண்ணும் ஸ்மிதம்வேண்டா,எயிறுதோற்றும்படிக்கிடாகப்பண்ணின ஹாஸத்தைக்கண்டால் அதுவே அமையுமென்னும்படி யிருக்கிற வாயை மடுத்ததென்நீ. உனக்கும் சீற்றத்துக்கும் விஷயமுண்டோ? முடித்த பின்னும் சீற்றம்மாறுதொழிவதே! முடித்தால் சீற்றம்மாறுவது தன்

னளவுக்கு; "கூயிகிஂவிதூராவநே-த்வயிகிஞ்சித்ஸமாபந்நே" என்னும் விஷயங்களிலன்று. "ஈய ராரோஹாதேஜா:-அதராமோமஹாதேஜா:" "கொடியவாய் விலங்கின்னுயிர்மலங்கக் கொண்ட சீற்றம்"என்று சரணகதர்க்குத் தஞ்சமானதனமாவது ஆஸ்ரிதார்த்தமாக ஹிரண்யனைப்பற்றப் பண்ணும் சீற்றம்.

"எங்ஙனேயுய்வர்தாநவர் நினைந்தால்" என்று நரஸிம்ஹத்தைக்கண்ட அஸுரராக்ஷஸஜாதியாகப் படும்பாட்டை அவனைக்கண்ட வநுகூலர்படும்படி.

(வயிறழல)"ஈஹஸாநுஹந்த்ரு நஸஂஶய: ।ராக்ஷஸோப்யேதி-அஸ்மாந்ஹந்தும்நஸம்சய:ராக்ஷஸோப்யேதி" இத்யாதிவத். தனித்தனியே சொல்லில் ஒருவரல்லா வொருவர் பிழைக்கிலுமாம் என்று வேர்ப்பற்றிலே நலிய. (பொறியுகிரால்) போகத்துக்கு ஏகாந்தமான அழகையுடைய அறுகாழியென்னுதல்; திருவாழி பிடிக்கத்தகும் கையென்னுதல். (செற்றுவைத்து வாய்மடுத்ததென்நீ) ஸங்கல்பம் தவிர்ந்து திருவாழி தவிர்ந்து திருவுகிராலே பிளந்து பிணத்தின் முகத்திலே நாமடிக்கொள்வதே. (கூங)

அரு.—தொண்ணூற்று மூன்றும்பாட்டு.—இப்படி பீதராய் மங்களாசாஸநம் பண்ணின பேருண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (என்றுமென் பிள்ளைக்கித்யாதி) முடிந்தபின்னும் சீற்றம் மாறுமைக்குஹேதுவை யருளிச்செய்கிறார் (முடித்தாலித்யாதி). ஆஸ்ரிதவிரோதமாகக் கொண்ட சீற்றம் அதிகமென்னு மதுக்குப்ரமாணமருளிச்செய்கிறார். (ஈயரா: - அதராம: – இத்யாதி).

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (எங்ஙனேயுய்வரித்யாதி). "ஈஹஸாநுஹந்து - அஸ்மாந்ஹந்தும்" என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தனித்தனியே யித்யாதி). (கூங)

செற்றெழுந்து தீவிழித்துச் சென்றவிந்த வேழுலகும்
மற்றிவையா வென்று வாயங்காந்து – முற்றும்
மறையவற்குக் காட்டிய மாயவனை யல்லால்
இறையேனு மேத்தாதென் நா. (கூச)

ப-உ.—எழுந்து - கிளர்ந்து, தீவிழித்து - நெருப்புவிழும்படி பார்த்து, சென்ற - (தன்னிடத்தில்) சேர்ந்த, இந்தவேழுலகும் - இந்த ஏழுலோகத்தையும், செற்று - அழித்து, மற்று - அதுக்கு மேலே, இவையாவென்று - (அழிந்தவை) இதுகளென்று, வாய் - திருப்பவளத்தை, அங்காந்து - திறந்து, முற்றும் - ஸகலத்தையும், மறையவற்கு - வைதிகரான மார்க்கண்டேயருக்கு, காட்டிய - தர்சிப்பித்த, மாயவனையல்லால் - ஆச்சர்ய சக்தியுடையவனையல்லது, இறையேனும் - கொஞ்சமும், என்நா - என்னுடைய, நாக்கு, ஏத்தாது - துதியாது. (கூச)

வ்யா.—அவ.—தொண்ணூற்று நாலாம் பாட்டு.—(செற்றெழுந்து) இப்பாட்டு கீழ்ப்பாட்டில் வ்ருத்தாந்தமாகவுமாம்; இந்த வைஶ்வரூப்யம் துர்யோதநஸதஸ்ஸிலே காட்டினதாகவுமாம்; மார்க்கண்டேயபகவானுக்கு இதையைத் தன் வயிற்றிலே யிருந்தபடியைக்காட்டினதாகவுமாம். "தஜவஶ்ய மஹம்ஸவ்யம் தஸ்ய குக்ஷௌ மஹாத்மந:- ததபச்யமஹம் ஸர்வம் தஸ்யகுக்ஷௌமஹாத்மந:" என்கிறபடியே.

(செற்றெழுந்து தீவிழித்து) என்றது - நீயொரு தூதுவரவிட வேண்டாவென்று துர்யோதநாதிகளைச் சீறிப்பார்த்தபடியாகவுமாம். (சென்ற வித்யாதி) நரகில் பாபகர்மம் போக்குகைக்கென்று ஸங்கல்பம் வேண்டா. (மறையவற்கு) ஸ்ரீமார்க்கண்டேய பகவானுக்காகவுமாம்; பீஷ்மத்ரோணாதிகளாதல். "ஸாமாந்ய லக்ஷ்யாவயம்- ஸாமாந்யலக்ஷ்யாவயம்". (இறையேனும்) பரவ்யூஹாதிகளில் போகாது. (கூச)

அரு.—தொண்ணூற்றுநாலாம்பாட்டு.—வேண்டா வென்று சொன்ன துர்யோதநாதிகள் வதம்; பீஷ்மாதிகள்கோபித்துப்பாராதே ஸாமாந்யமாக ஸாந்தமாகப் பார்க்கைக்கு விஷயமென்றார்கள். (வாய் அங்காந்து) துர்யோதந பக்ஷத்தில் பொய்யாஸந வேளையிலேவிஶ்வரூபத்தைக்காட்டினது. மறையவர்க்கும் வாயை ஆவென்று காட்டுகை. (கூச)

நா வாயிலுண்டே நமோ நாரணாவென்று
ஓவாதுரைக்கு முரையுண்டே - மூவாத

மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே, என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும் திறம். (கூரு)

ப.உ.—நா - நாக்கு, வாயிலுண்டே - வாயிலே யிருக்கிறதே; ஓவாது - ஓயாமல், நமோநாரணவென்று - நமோநாராயணயவென்று, உரைக்கும் - சொல்லும்படியான, உரை - திருமந்த்ரம், உண்டே-இருக்கிறதே; மூவாத-திரும்புதலில்லாத, மா-ஸ்ரேஷ்டமான, கதிக்கண் - (மோக்ஷ) மார்க்கத்தில், செல்லும் - போகைக்கு, வகை - உபாயம், உண்டே - இருக்கிறதே; ஒருவர்-ஒருத்தர், தீக்கதிக்கண் - துர்மார்க்கங்களிலே, செல்லும் - போகிற, திறம் - ப்ரகாரம், என் - எதுவாகலாம். (கூரு)

வ்யா.—அவ.—தொண்ணூற்றைந்தாம் பாட்டு.—(நாவாயில்) இதுவிடப்போகாதாயிருந்தது, இது கீழ்ப்போகாதாயிருந்தது, இதுக்கு எங்ஙனே விலக்கடியுண்டானபடி; அபரிகரராயிருக்கில் செய்யலாவதில்லை யிறேயென்னில், ஈஸ்வரன் ஒரு பரிகரம் தேடும்படி வைத்தானேவென்கிறது.

(நாவாயிலுண்டே) "ஸூஷ்டஸ்வநவாஸாய - ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" என்கிறபடியே நாக்காகில் அவனை யேத்தக்கடவது. (நமோவித்யாதி) அந்நாக்குக் கண்டவோபாதி திருமந்த்ரமும் இவனுக்கு இளைப்பாறிச்சொல்ல வேண்டாததுண்டே. ஒரு ஸஹஸ்ராக்ஷரீ மாலாமந்த்ரம், இது சொல்லுமதில் நரகாநுபவம் அமையுமென்னுத் திருமந்த்ரமுண்டே. (மூவாத வித்யாதி) அபுநராவ்ருத்திலக்ஷணமான ப்ராப்யத்துக்குச் செல்லும் அர்ச்சிராதிமார்க்கமுண்டே. (என்னொருவரித்யாதி) நரகத்துக்குப் போகவழி நேராகக்கண்டிலோம். இதுக்கு விலக்கடி எங்ஙனே யுண்டாயிற்று. ஸம்ஸாரிஹிதம்காண்கிறிலோம், நாளோ செல்லாநின்றது. (என்னொருவரித்யாதி)வலிய விலக்கடிதேடவேணும். (கூரு)

அரு.—தொண்ணூற்றைந்தாம்பாட்டு.—திருநாமத்தினுடைய போக்யதையாலே விடப்போகாது; பாவநத்வத்தாலே தீக்கதியான் கீழ்ப்போகாது. ஓவாது - ஓயாதே. நடுஇளைப்பாறுதே ஒருமூச்சிலே சொல்லலாயிருக்கை. ஹிதம் காண்கிறிலோம் - ஹிதசிந்தைபண்ணக்

காண்கிறிலோம். இவையெல்லாமிருக்க இத்தைவிட்டு வலியத்தேட வேணுமென்கிறபடி. (௬௫)

திறம்பா தென்னெஞ்சமே செங்கண்மால் கண்டாய்
அறம்பாவ மென்றிரண்டு மாவான் - புறந்தானிம்
மண்தான் மறிகடல்தான் மாருதந்தான், வான்தானே
கண்டாய் கடைக்கட் பிடி. (௬௬)

ப-உ.—என் - என்னுடைய, நெஞ்சமே - மநஸ்ஸே! செம் - சிவந்த, கண் - நேத்ரங்களையுடைய, மால்கண்டாய் - ஸர்வேஸ்வரன் கிடாய், அறம் - புண்யம், பாவம் - பாபம், என்று - என்கிற, இரண்டும் - இரண்டுக்கும், ஆவான் - ஸ்வாமியாவான்; இம்மண் தான் - இந்த பூமிக்கும் ஸ்வாமி; மறி - அலையெறிகிற, கடல் தான் - கடலுக்கும் ஸ்வாமி; மாருதந்தான் - காற்றுக்கும் ஸ்வாமி; வான் தான் - ஆகாசத்துக்கும் ஸ்வாமி; புறந்தான் கண்டாய் - இவைகளுக்கு வெளியிலுண்டான மஹதாதிகளுக்கும் ஸ்வாமி கிடாய்; கடைக்கண் - முடிவில், திறம்பாது - தவறாதபடி, பிடி - பற்று. (௬௬)

வ்யா.—அவ.—தொண்ணூற்றாம்பாட்டு.—(திறம்பாது)விலக்கடியில்லையென்று இருக்கலாயிருக்கிறதில்லை, இவ்வர்த்தத்தைக்கை விடாதே கொள்ளென்று தம்முடைய திருவுள்ளத்தைப்பார்த்து அருளிச்செய்கிறார்.

(திறம்பாதென்னெஞ்சமே) நான் சொல்லிற்றுத் தப்பாதுபோருகிற நெஞ்சே! அர்த்த தத்வங்கண்டாலல்லது கால்வாங்கேனென்றிருக்கிற நெஞ்சமே! (அறமித்யாதி) விஹிதத்தைச்செய்து நிஷித்தத்தைப் பரிஹரித்துப்போருகிற நம்மோடு விஹிதநிஷித்தங்களோடு வாசியில்லை அவனைக்குறித்துப் பாதந்த்ரமாமிடத்தில். "ஏஷ ஏவ ஸாது கர்ம காரயதி - ஏஷ ஏவஸாதுகர்ம காரயதி". தம்முடைய பக்கல் கர்த்ருத்வம் தவிர்ந்தபின்பு ஒரு அசேதநக்ரியையைப் பற்றுவரன்றே. (செங்கண்மால்கண்டாய்) ஸர்வேஸ்வரன் கண்டாய். "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ - தஸ்யய காகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ".

(இம்மண்ணித்யாதி) ப்ரதிபந்தகமான அசித்தோடே கூடின சேதநனுமவனே. அநுக்தமான மஹதாதிகளைச் சொல்லுகிறது. அவனை யொழிய ஸ்வதந்த்ரமாயிருப்ப தொன்றுமில்லை. (கண்டாய் கடைக்கட்பிடி) இவ்வர்த்தத்தைத் திறம்பாது கடைக்கட்பிடி. கடைபோகப்பிடி. இவ்வர்த்தத்தினுடைய கடைப்பிடி கண்டாயே என்றுமாம். (அறமித்யாதி) ஆபாத ப்ரதீதியில் அவனையொழிய புண்யபாபமென்று தோற்றுவது; நிலைநின்று பார்த்தால் அவனே கடவனென்று தோற்றும். "திறம்பாது" என்று நெஞ்சோடே கூட்டவுமாம். "திறம்பாது.அறம்பாவமென்றிரண்டு மாவான்" என்னவுமாம். "திறம்பாது கடைக்கட்பிடி" என்னவுமாம்.

நாட்டார்க்குப் பலவழியுண்டாகிலும் நம்முடைய வழியைப் பற்றி யிராய்நீ. (திறம்பாதென்னெஞ்சமே) சொல்லென்றலைக்கிற நெஞ்சமே. (செங்கண்மால்) நம்முடைய விஷயத்திலிருக்கிறபடி கண்டாயே. (அறமித்யாதி) பெறுகைக்கும் இழக்கைக்கும் அவனுடைய நிக்ரஹாநுக்ரஹங்களையொழியப் போக்கில்லை; ஸர்வமும் பகவததீநமன்றே. (கடைக்கட்பிடி) அறுதியாகப்பிடி. (கூசு)

அரு.—தொண்ணூற்றாறும்பாட்டு.—கர்மாதிகளிருக்க அவனைப் பிடிக்க வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தம்முடைய பக்கலித்யாதி).

கடைபோகப்பிடி - நடுவேவிடாதே முடியப்பிடியென்று க்ரியையாதல்; கடைப்பிடி - அவன் சரீரி, அல்லாதவையெல்லாம் சரீரதயாபரதந்த்ரமென்கிறஎல்லையான அர்த்தத்தைக்கண்டாயே யென்று க்ருபையாதல்; திறம்பாதே - இவ்வர்த்தத்திலே சலியாதே யென்று நெஞ்சொத்துக் கூட்டுதல்; திறம்பாது-அறம்பாவமிரண்டும் அவனிட்ட வழக்கென்னுமது தப்பாதென்னுதல்; திறம்பாதே - கடைபோகச்சலியாதே பிடியென்னுதல்.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார். (நாட்டார்க்கித்யாதி).(கூசு)

**பிடிசேர் களிறளித்த பேராளா, உன்றன்**
**அடிசேர்ந் தருள்பெற்றா ளன்றே - பொடிசேர்**
**அனற்கங்கையேற்றா னவிர்சடைமேல் பாய்ந்த**
**புனல்கங்கை யென்னும்பெயர்ப்பொன், (கூள)**

ப-உ.—பிடி - கைப்பிடித்த பூவோடு, சேர் - கூடியிருக்கிற, களிறு - யானையை, அளித்த - க்ருபை பண்ணி ரக்ஷித்த, பேராளா- மஹாப்ரபாவனானவனே! பொடிசேர் - சாம்பலோடுகூடினவனாய், அனற்கு - நெருப்புக்கு, அம் - அழகிய, கை - கரத்தை,ஏற்றான் - ஏந்தினருத்ரனுடைய, அவிர்-ப்ரகாசிக்கிற, சடைமேல் - சடையின் மேலே, பாய்ந்த - விழுந்த, புனல் - ஜலத்தையுடைய, கங்கை என்னும் பெயர் - கங்கையென்று பேரையுடைய, பொன் - ஶ்லாக்யமான ஸ்த்ரீயானவள், உன்றன் - உன்னுடைய, அடி - பாதத்தின்மேலே, சேர்ந்தன்றே - கிட்டியன்றோ, அருள் பெற்றாள்-க்ருபையை அடைந்தாள். (தயைக்குப் பாத்ரமானாள்). (கூஎ)

வ்யா.—அவ.—தொண்ணூற்றேழாம்பாட்டு.—(பிடிசேர்) "அறம்பாவமென்றிரண்டுமாவான்" என்றதுக்கு வ்யாக்யாநம் இப்பாட்டு.

(பிடிசேர்களிறளித்த) ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்கள். "ஶாந்தோ தாந்த உபரதஸ்திதிக்ஷு:" - சாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷு:" என்னுமவனிறே மோக்ஷத்துக்கதிகாரி. அன்றிக்கே, தன் பக்கல் ப்ரவணமாகாதே விஷயப்ரவணமாகையிறே பாபமாவது; தன் பிடிபக்கல் ப்ரவணமாய் தன் பக்கலின்றிக்கே இருந்த களிற்றை ரக்ஷிக்கும்போது பாபம்தானிட்டவழக்காக வேணுமிறே. (பேராளா) பிடிசேர்ந்தகளிற்றை ரக்ஷித்தானென்றால் அவன் செய்தானாகில் கூடுமென்றிருக்கை. (உன்றனடிசேர்ந்தருள்பெற்றாளன்றே) இத்தால் தர்மம் அவனிட்ட வழக்கென்கிறது. (பொடிசேரித்யாதி) பஸ்மச்சந்நனாய் அக்நியைக்கையிலே ஏற்றானாயிருந்துள்ள ருத்ரனுடைய விளங்காநின்ற ஜடைமேலே பாய்ந்த புனலையுடைத்தான கங்கையென்னும் பேரையுடைத்தான விலக்ஷணையான ஸ்த்ரீ உன் திருவடிகளிலே சேர்ந்தன்றோ நாட்டுக்குப் பாவநமாயிற்று.

அவ.—"பொடிசேர்" என்றவித்தால் ப்ராயச்சித்தம்பண்ணி அத்தால் சுத்தனன்றியிலேயிருக்கிறவனையும்சுத்தனாக்கிற்று திருவடிகளில் ஸ்பர்சத்தாலே என்கிறது.

(பிடிசேர்களிறு) அவன் பிடியை நினைக்க நீ அவனைநினைத்திலையோ. ஒருகால் நினைத்தானாகில்முன்புஸ்வரூப மிதுவன்றோவென்கிறது. ஜந்மவ்ருத்தங்களன்று ப்ரயோஜநமென்கிறார். (அருள்பெற்றாள்) பிறரை சுத்தராக்கும்படி பார்த்தருளினாள். (கூஎ)

அரு.—தொண்ணூற்றேழாம்பாட்டு.—அன்றிக்கே-மோக்ஷாதிகாரிகளன்றிக்கே. அனற்கு அங்கை யேற்ருன்-அநலுக்கு அங்கையேருன். (கூஎ)

பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும், ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன். (கூஅ)

ப-உ.—பொன் - பொன்போலே, திகழும் - ப்ரகாசிக்கிற, மேனி - வடிவையும், புரி-பின்னப்பட்ட, சடை-சடையையும், அம்-அழகிய, புண்ணியனும் - புண்யத்தையுமுடைத்தான ருத்ரனும், நின்று-நின்று, உலகம் - லோகத்தை, தாய - அளந்த,நெடுமாலும்-மேலானவனை ஸர்வேஸ்வரனும், என்றும்-ஸர்வகாலத்திலும், இருவரங்கத்தால் - இரண்டு சரீரத்தையுடையராய், திரிவரேலும் - ஸஞ்சரித்தார்களே யாகிலும், ஒருவன்-(புண்ணியனை) ஒருத்தன், ஒருவன் - (நெடுமாலான)ஒருத்தனுடைய, அங்கத்து - சரீரத்தைப் பற்றி, என்றும் - எக்காலத்திலும், உளன் - ஸத்தையுடையனுவான். (கூஅ)

வ்யா.—அவ.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு.—(பொன்திகழு மேனி) ஈஸ்வரனுய் அதிகாரியாய்த் தானும் சிலர் கார்யத்துக்குக் கடவனுயிருக்கிறவனே,இவனுடைய ஸம்பந்தத்தாலே சுத்தனுனென்றுசொல்லும்படி யெங்ஙனே யென்னில்; ஈஸ்வராபிமாநியாயிருக்கும்போது சொல்லுமத்தை ப்ரமாணிக்கவொண்ணுது; இவனுடைய ஸ்வரூபத்தைப் பார்க்கலாகாதோவென்கிருர்.

(பொன்திகழுமேனி)ஸர்வேஸ்வரனுயிருக்கும்போது மேகஸ்யாமமாயிருக்குமிறே.(புரிசடை)*தாழ்சடையானுக்கும் நீண்முடியானுக்கும் வாசிபார்த்துக்கொள்ளலா மித்தனையிறே. (அம்புண்ணியனும்) "ஹ்ருஷ்வாத்ராநம்தேவதேவோபவூ—வ- ஹ்ருத்வாத்மாநம் தேவதேவோபபூவ" என்கிறபடியே. (நின்றுலகந்தாயநெடுமாலும்) ஸ்வைரமாக அதிமாநுஷ சேஷ்டிதத்தைப் பண்ணினவனும். அவன் தலையிலும் பிறர் தலையிலுமாகத் திருவடிகளை வைத்தவனும். (என்றுமித்யாதி)இருவரும் ஸபரிகரராய்த் திரிந்தாரேயாகிலும். (ஒருவனித்

யாதி) ஒருவனுக்கு ஸ்திதி ஒருத்தன் சரீரத்தைப்பற்றி. "வலத்த னன் திரிபுரமெரித்தவன்" என்னும்படியே.

அவ.—ருத்ரனுடைய ஐஸ்வர்யம் பொய்யோவென்னில்; பக வததீநமென்கிறார்.

(நின்றுலகமித்யாதி) ருத்ரன் தலையிலும் நாட்டார் தலையிலும் ஒக்க அடியிட்டவன். (இருவரங்கத்தால்) இரண்டு வடிவுகளாலே யென்றுமாம். அங்கத்தில் ஏகதேசத்திலே உளனென்றுமாம். (கூஅ)

அரு.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு.—புண்ணியனும் - புண் ணியம் பண்ணுகையாலே தேவனானவன் என்றபடி. இருவரங்கம்-அங்க சதுரங்கபல மென்னுமாப்போலே ஸேனை.

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (ருத்ரனுடைய வித்யாதி). அங்கம் சரீரமாதல் ஏகதேசமாதல். (கூஅ)

உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமனென்றும்
உளன்கண்டாய், உள்ளுவா ருள்ளத் - துளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தி னுள்ளானென் றோர். (கூகூ)

ப-உ.—நல் - அநுகூலமான, நெஞ்சே - மநஸ்ஸே! உத்தமன் - புருஷோத்தமன், உளன்கண்டாய் - (நம்ஸத்தைக்காக) இருக்கிறான் கிடாய்; என்றும் - ஸர்வகாலத்திலும், உளன்கண்டாய்-(நம்ரக்ஷணத் துக்காக) இருக்கிறான் கிடாய்; உள்ளுவார் - த்யாநிப்பவர்களு டைய, உள்ளத்து - நெஞ்சிலே, உளன்கண்டாய்-வாஸம்பண்ணுகிற வன் கிடாய்; வெள்ளத்தில் - திருப்பாற்கடலிலே, உள்ளானும் - வாஸம்செய்தவனும், வேங்கடத்துமேயானும் - திருமலையை வாஸஸ் தாநமாக உடையவனும், உள்ளத்தில் - ஹ்ருதயத்தில், உள்ளான் - நித்யவாஸம்பண்ணுகிறவன்; என்று - இப்படி, ஓர் - புத்திபண்ணு.

வ்யா.—அவ.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.—(உளன்கண் டாய்) நாட்டில் பெரியராயிருக்கிறவர்களும் தங்களுக்கேற க்ஷேத்ரஜ் ஞராயிருக்கிறபடி அறிந்திருக்கச் செய்தே ஈஸ்வரர்களாக ப்ரமிக்கிற

படி கண்டு திருவுள்ளம் பயப்பட, நாம் கழுத்திலே கயிறிட்டுக்கொண்டால் அறுத்துவிழ விடுகைக்கு ஒருத்தனுண்டு காணென்கிறது.

(உளன்கண்டாய்) இலனானவனை யுளனென்கிறதன்று ; அவனுடைய ஸத்தை நம்முடைய ரக்ஷணத்துக்கும் நம்முடைய ஸத்தை நம்முடையவிநாசத்துக்கும்.நாம் ப்ரதிபத்திபண்ணுகிறதுபிறரை யஞ்சியன்று, நம்மையஞ்சி. பித்தத்தாலே மோஹித்துக் கழுத்திலே கயிறிட்டுக்கொண்டேனாகில் அறுத்துவிழவிடுகிடாய் என்றறிவுடையார்க்குச் சொல்லிவைக்குமாப்போலே. (நன்னெஞ்சே) எம்பெருமான் நமக்குளனென்று சொல்லப்பாங்காயிருக்கிற நெஞ்சே! (உத்தமனித்யாதி) அவனுடைய உண்மை ஸுஹ்ருத்தாய்க்கொண்டு. அதாவது - பரஸம்ருத்யைகப்ரயோஜநனாயிருக்கை. (உள்ளுவாரித்யாதி) இவனொருநா ளுளனென்றிருக்கில், பின்னை இவனென்றும் நமக்குளனென்றிருக்கும்.தான் புகுரப்புக்கால் விலக்காதவர்களுடைய ஹ்ருதயம் விட்டுப்போகவறியான். (வெள்ளத்தினித்யாதி) திருப்பாற்கடலிலே கிடக்கிறதும் திருமலையிலே நிற்கிறதும் தம்முடைய ஹ்ருதயத்திலே புகுருகைக்கு அவஸரம் பார்த்தென்றறி.

புறம்புள்ளார்கிடக்கிடீர். (உளன்கண்டாய்) பிறர்க்குபதேசிக்கிறவர்.எம்பெருமானுளனென்றிருக்கிறாரல்லர்; நாம் நமக்கில்லாதாப்போலே அவன் நமக்கென்று முளன். (நன்னெஞ்சே) இவ்வர்த்தத்திலெண்ணிலும் எனக்குபதேசிக்க வல்ல நெஞ்சே. (உத்தமன்) தன் பேறாகஉபகரிக்கை.(என்றும்) "அஸந்நேவஸபவதி" ஆனவன்றேடு, "ஸந்தமேநம்ததோ விது:" ஆனவன்றேடு வாசியில்லை. (உள்ளுவார்) புகுரஸம்வதிப்பார். (உள்ளத்துளன்) "இடவகைகளி கழ்ந்திட்டு". (வெள்ளமித்யாதி) என்று முளனானமை காட்டுகிறார். "அணைப்பார்க் கருத்தனாவான்".

அரு.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.—பிறரையஞ்சி-பௌத்தாதிகள் ஈஶ்வரனில்லை யென்கிறதுக்கு அஞ்சி "உளன்" என்கிறதன்று; நம்மையஞ்சி - நம்முடைய ஸத்தையுண்டாக்குகைக்கு அவனுளனென்கிறது. இப்போது "உளன்" என்கிறது எப்படியிருக்கிறதென்ன; அருளிச்செய்கிறார் (பித்தத்தாலே யித்யாதி).

மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (புறம்புள்ளாரித்யாதி). அங்கங்கே யிருக்கிறதெல்லாம இவனிடத்திலே யிருக்கைக்கோ வென்ன அருளிச்செய்கிறார் (அணைப்பார்க்கித்யாதி). (௯௯)

**ஓரடியும் சாடுதைத்த வொண்மலர்ச் சேவடியும்**
**ஈரடியும் காணலா மென்னெஞ்சே - ஓரடியில்**
**தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசேர்**
**மாயவனையே மனத்து வை. (௧௦௦)**

முதற்றிருவந்தாதி முற்றிற்று.

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ப-உ.—என் - என்னுடைய, நெஞ்சே - மநஸ்ஸே! ஓர் - ஒரு, அடியில் - திருப்பாதத்தால், தாயவனை - (ஜகத்தை) அளந்தவனை, கேசவனை - கேசியென்கிற அஸுரனையழித்தவனை, தண் - குளிர்ந்த, துழாய்மாலை - திருத்துழாய் மாலையாலே, சேர் - அலங்கரிக்கப்பட்ட, மாயவனையே - ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய ஸ்ரிய:பதியையே, மனத்து - ஹ்ருதயத்திலே, வை - வைத்துக்கொள்; (இப்படி வைத்தால்), ஓரடியும் - (ஜகத்தை யளந்த) ஒருதிருப்பாதத்தையும், சாடு - சகடத்தை, உதைத்த - அடித்த, ஒண் - அழகிய, மலர் - புஷ்பம்போன்ற, சே - சிவந்த, அடியும் - திருப்பாதமுமான, ஈரடியும் - இரண்டு திருவடிகளையும், காணலாம் - ஸாக்ஷாத்கரிக்கலாம். (௧௦௦)

வ்யா.—அவ.—நூறும்பாட்டு.—(ஓரடியும்)பெறுமத்தாலே பெவதும்அவன் திருவடிகளையவனாலே பெறுவதென்கிறது.

(ஓரடியும்) லோகத்தை யடங்கலும் தன்னதாக்கின திருவடிகளையும். (சாடித்யாதி) சகடாஸுரனை நிரஸித்த போக்யமான திருவடியையும்.(ஈரடியுங்காணலாம்)இவ்விரண்டு திருவடிகளும் ப்ராப்யம். (என்னெஞ்சே)காணவேணுமென்றிருக்கிற வென்னெஞ்சே. இதுக்கு பாயமேதென்னில்;அவனென்கிறது. (ஓரடியிற்றாயவனை)ஓரடியாலே எல்லாவற்றையுமளந்தஸுலபனை. (கேசவனை) விரோதி நிரஸந ஶீலனானவனை. (தண்டுழாய்மாலை சேர் மாயவனையே மனத்துவை) ஸுலபனுமன்றிக்கே விரோதியைப்போக்கு மவனுமன்றிகே யிருக்கிலும்

விடவொண்ணாதபோக்யனான மாயவனையே. நாமுன் ஸஹகாரிகளென் றிராதேகாண்பதுமவனையே; காட்டுவானுமவனே. நமக்குப்ரதிபத்தி யே உள்ளது.

(ஓரடியித்யாதி) சாடுதைத்த ஓரடியையும் திரு வுலகளந்த சே வடியையுங்காணலாம். காணவொண்ணாதோவென்றிருக்கிற வென் னெஞ்சே! (தாயவனை) கீழ்ச்சொன்ன வோரடி. (கேசவனை) சாடு தைத்த திருவடிகளையுடையவனை. திருவடிகளைத் தருவானும் வி ரோதியைப்போக்குவானும். (தண்டுழாய்) போக்யதை. (மாயவன்) இவனென்று நினையாதபடி பண்ணவல்லவன். (மனத்துவை) அநு ஸந்தி. (௧00)

அவ.—(வையமித்யாதி) நினைத்தவாறு பேசியல்லது நிற்கமாட் டாமல் பேசுகிறார். (௧)

## முதற்றிருவந்தாதி வ்யாக்யாநம்

முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—நூறும்பாட்டு.—திருவடிகளே உபாயமும் உபேயமுமான லும் அவையிரண்டும் அவனாலே பெறவேணுமென்றபடி. (௧00)

அந்தாதியாகையாலே முதற்பாட்டுக் கவதாரிகை யருளிச் செய்கிறார். (நினைத்தவாறித்யாதி). (௧)

## அரும்பதம் முற்றிற்று.

அப்பிள்ளை திருவடிகளேசரணம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

இயற்பா

பூதத்தாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# இரண்டாம் திருவந்தாதி.



இந்த க்ரந்தம்.

அபாரகருணாஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

மணிப்ரவாள வ்யாக்யாநஸஹிதம்.

அப்பு அரும்பதஸஹிதம்

இச்சபாபண்டிதரான

சிங்கப்பெருமாள்கோவில்

ஸ்ரீமான் - மாடபூசி

தர்க்கதீர்த்தர் - ராமாநுஜாசார்யரால்

எழுதப்பட்ட ப்ரதிபதஸஹிதம்

———(:)———

அநேக தேசாந்த ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

லேககப்ரமாதாதி ஜநிததோஷங்களில்லாமல்

மேற்படி

ராமாநுஜாசார்யராலும்

ஸி. முத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்

பரிசோதிக்கப்பட்டு



ஸ்ரீ வைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்) யாரால்

சென்னப்பட்டணம்,

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷரசாலையில்

ஸ்ரீபராங்குசதிருவவதாராதி - ருOOஉ.

ப்லவஸமவத்ஸரத்தில்

பதிப்பித்துப் ப்ரசுரம் செய்யப்பட்டது.

கக௦க.

விஜயதேதராம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

1882-ம் வருஷத்திய ஆறுவது ஆக்டுப்ரகாரம் ரிஜிஸ்டர் செய்து ஸ்தாபிக்கப்பட்டது.

---

ப்ரதிமாதம் 5 - பாரங்களுக்குக் குறையாமல் சாஸ்வதமாய் அச்சிட்டு மூன்றுதலைமுறைகளுக்கு பேட்ரன்களுக்கு 12-காபிகளும், பாகஸ்தர்களுக்கு 5-காபிகளும் போஷகர்களுக்கு 1-காபியும் ப்ரதிமாதம் கொடுக்கப்படும்.

பேட்ரன் சந்தா ரூபாய் - 200, பாகஸ்தர்களுக்கு சந்தா ரூபா 100, போஷகர்களுக்கு சந்தா ரூபா 20, மொத்தமாயாவது ப்ரதி இங்லீஷ்மீ 15உக்குள் 10-ல் ஒருபாகமாயாவது கட்டவேண்டும். இவர்களுக்குப் ப்ரவேசவர்த்தனைக்ரமமாக ரூபா, 2-0-0, ரூபா, 1-0-0, ரூபா, -0-4-0.

மற்ற விவரங்களெல்லாம் சட்டபுஸ்தகத்தில் பார்த்துக்கொள்ளவேண்டும். இதின் விலை அணா 2.

## இந்த ஸபையாரால் இதுவரையில் அச்சிட்டு ப்ரசுரம்செய்யப்பட்ட க்ரந்தங்கள்.

| | |
|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் ப்ரதிபததாத்பர்யஸஹிதம் மேலான காகிதம்தமிழ்லிபி | 3—4—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் டிடோ | 0—5—0 |
| பராசரவிசிஷ்ட பரமதர்மசாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | 0--14—0 |
| ராமசரமஸ்லோகம் ஸவ்யாக்யாநம் டிடோ | 0—3—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபதடீகா அரும்பதஸஹிதம் டிடோ | 1—2—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி டிடோ | 0--12—0 |

---

| | |
|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் ப்ரதிபததாத்பர்யஸஹிதம் உயர்ந்த காகிதம் தெலுங்குலிபி | 3—4—0 |
| ராமசரமஸ்லோகம் டிடோ | 0—3—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் டிடோ | 0—5—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபத டீகா அரும்பதஸஹிதம் | 1—3—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி டிடோ | 0--12—0 |

இப்படிக்கு,

காரலபாடி - ஆழ்வாரய்ய,

கார்யதர்சி-தனாதிகாரி.

நெ. 31, வெங்கடாசலமுதலிதெருவு, சென்னை.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவக்ரந்தமுத்ராபகஸபை, (லிமிடெட்.)

# இயற்பா

## இரண்டாம் திருவந்தாதி.



இந்த க்ரந்தம், திவ்யப்ரபந்தத்தில் ௩-வது ஆயிரமான இயற்பாவில் ௨-வது, ப்ரபந்தம். இதில் பாசுரம். ௧௦௦. இதை யருளிச்செய்தவர், நிர்ஹேதுகபகவத்கடாக்ஷ லப்தவிபவரான பூதத்தாழ்வார். இவர் முதலாழ்வார்கள் மூவரில் இரண்டாமவர். இவர், மஹாபலிபுரமென்கிற திருக்கடல்மல்லை யென்னும் திவ்யதேசத்தில் குருக்கத்திப்பூவி லவதரித்த லோகோஜ்ஜீவநகாரரான அயோநிஜர். பூதம் என்று உண்மைக்கும், ஆத்மாவுக்கும் பெயர். இவர்வாஸ்தவார்த்தத்தைத் தம்முடைய ப்ரபந்தத்தில் அருளிச்செய்தபடியாலும், "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் - ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்" என்கிறபடியே ஜ்ஞாநாதிகரான இவர் ஸர்வேஸ்வரனுக்கு ஆத்மாவாயிருக்கிறபடியாலும் இவருக்கு பூதத்தாழ்வாரென்று திருநாமம்.

இவர், த்வாபரயுகாதி - அ௲௦௬௦௦-வது ஸம்வத்ஸரமான ஸித்தார்த்தி ஸம்வத்ஸரம் ஐப்பசி மாஸம் சுக்லநவமீ புதன்கிழமை அவிட்டநக்ஷத்ரத்தி லவதரித்தார். இவர்க்கு நாமாந்தரங்கள்: பூதாஹ்வயர் - மல்லாபுராதீசர். திருவாராதநம்: ஆழ்வார்கள் நைநார். ஆசார்யர்: ஸேனைமுதலியார். இவர் ப்ரபாவத்தைப்பார்த்து ஸ்ரீகௌமோதகியினம்சமென்பர்கள். இவர் பாடின திருப்பதிகள், கோயில், திருமலை, திருக்கடல்மல்லை, திருக்கோவலூர்.

இவர் ப்ரபாவங்களும், இப்ப்ரபந்தத்துக்கு வ்யாக்யாநம் அதுக்கு அரும்பதம் ஸாதித்தருளின பூர்வாசார்யர்களும், அவர்கள் ப்ரபாவங்களும், இவ்வாழ்வாரோடு ஸமான வ்ருத்திகரான பொய்கையாழ்வார் அருளிச்செய்த முதற்றிருவந்தாதி பீடிகையில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

## திருநக்ஷத்ர தனியன்.

𑌤𑍁𑌲𑌾𑌧𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌭𑍂𑌤𑌂 𑌭𑍂𑌤𑌂𑌕𑌲𑍍𑌲𑍋𑌲𑌮𑌾𑌲𑌿𑌨𑌃।
𑌤𑍀𑌰𑍇𑌫𑍁𑌲𑍍𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌾𑌮𑌲𑍍𑌲𑌾𑌪𑍁𑌰𑍍𑌯𑌾𑌮𑍀𑌡𑍇𑌗𑌦𑌾𑌂𑌶𑌕𑌮𑍍॥

𑌮𑌲𑍍𑌲𑌾𑌪𑍁𑌰𑌵𑌰𑌾𑌧𑍀𑌶𑌂𑌮𑌾𑌧𑌵𑍀𑌕𑍁𑌸𑍁𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍।
𑌭𑍂𑌤𑌂𑌨𑌮𑌾𑌮𑌿𑌯𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍॥

துலாதநிஷ்டாஸம்பூதம் பூதம்கல்லோலமாலிந:
தீரேபுல்லோத்பலாமல்லா புர்யமீடேகதாம்சகம்.

மல்லாபுரவராதீசம் மாதவீகுஸுமோத்பவம்
பூதம்நமாமியோவிஷ்ணோ: ஜ்ஞாநதீபமகல்பயத்

## வாழி திருநாமம்.

அன்பேதகளி நூறு மருளினன் வாழியே
ஐப்பசியி லவிட்டத்தி லவதரித்தான் வாழியே
நன்புகழ்சேர் குருக்கத்தி நாண்மலரோன் வாழியே
நல்லதிருக் கடல்மல்லை நாதனார் வாழியே
இன்புருகு சிந்தைதிரி யிட்டபிரான் வாழியே
எழில்ஞானச் சுடர்விளக்கை யேற்றினன் வாழியே
பொன்புரையும் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே
பூதத்தார் தாளிணை யிப்பூதலத்தில் வாழியே.

இப்படிக்கு,

ஸபாபண்டிதர்கள்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

# இரண்டாந் திருவந்தாதி.

## தனியன் வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(என்பிறவி தீரவித்யாதி) இதில் திவ்யப்ரபந்த ப்ரதாதாவுமாய் திவ்யதேசத்தை ஜந்மதேசமாக வுடையருமாயிருக்கிற பூதத்தாருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை ஜந்ம ஸம்பந்தமறும்படி பஜித்தேனென்கிறது. * இன்னமுதா வன்பே தகளியளித்தாருமாய், நன்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள்சேரும் கடல்மல்லைப் பூதத்தார் பொன்னம் கழல்களை என்பிறவி தீரவிறைஞ்சினேனென்கிறது.

**திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச்செய்த தனியன்.**

என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா
அன்பே தகளி யளித்தானை - நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

ப-உ —இன் - போக்யமான, அமுதா - அம்ருதமாக, அன்பேதகளி - அன்பேதகளி என்னும் ப்ரபந்தத்தை, அளித்தான் - க்ருபைசெய்து கொடுத்தவராய், நல் - ஶ்லாக்யமான, புகழ் - கீர்த்தியை, சேர் - அடைந்திருக்கிறதுமாய், சீதத்தார் - குளிர்த்தியையுடைய, முத்துக்கள் - முத்துக்களானவை, சேரும் - அடைந்திருக்கிறதுமான, கடல்மல்லை-திருக்கடல்மல்லை என்கிற திவ்யதேசத்தில் அவதரித்த, பூதத்தார் - பூதத்தாழ்வாருடைய, பொன்அம் - மிகவும் ஸ்ப்ருஹணீயமான, கழலை - திருவடிகளை, என் - என்னுடைய, பிறவி - ஸம்ஸாரம், தீர - நசிக்கைக்காக, இறைஞ்சினேன் - வணங்கினேன்,

வ்யாக்யானம்.—இனி அவர் உபகாரகத்வ வைபவம் சொல்லுகிறது. இன்னமுதா வன்பே தகளியளிக்கையாவது - * அமுதன்ன சொன்மாலையான "இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்" "நாரணற்கு ஞானத்தமிழ்புரிந்தநான்" என்னும்படியான * அன்பேதகளியா என்னும் ப்ரபந்தத்தை "உத்தமன் பேரேத்தும் திறமறிமின்" என்னும்படி உபகரிக்கை. அன்றிக்கே, கொடுக்கை.

கீழ் ஜ்ஞாந வைபவம் சொல்லிற்று, இனி ஜந்மவைபவம் சொல்லுகிறது (நல்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள்சேரும் கடல்மல்லைப் பூதத்தாரென்று). அதாவது - ஶ்லாக்யமான யஶஸ்ஸு சேருமூருமாய்சீதளாதிசய முக்தாமணிகள் சேரும்படியாயுமிருக்கிற ஸ்தலமென்கை. * சீதக்கடலிலே பிறந்த முக்தாதிகளும் சீதளமாயிருக்குமிறே. நன்புகழாவது - "யஶஸஸ்சைகபாஜநம் - யசஸஸ்சைகபாஜநம்" "சேரும் கொடைபுகழ் எல்லையிலானே" "அந்தமில் புகழ் காரெழிலண்ணலே" "எண்ணிறந்த புகழினனே" என்னும்படியான * கடல்மல்லைத் தலசயனத்துறைவாரையும், * எப்புவியும் பேசும் புகழ் பூதத்தாரையும் உடைத்தாகையாலு முண்டானமுத்துக்கள் * வந்துதித்த வெண்டிரைகள் வெண்முத்தத்தைக் கொழிக்கை. * மாமணிவந்துந்து முந்நீர்மல்லையிலே. சங்கிடங்கொள் முத்தொன்றும், கரைகடந்த முத்தொன்றும், சேரும் ஸ்தலம். "இக்கரையேறி" என்னக்கடவதிறே. "கரைகண்டோர்" என்னும்படியான முக்தராயிற்று இவரும்.

கடல்மல்லை - விலக்ஷணவஸ்துக்கள் சேரும்தேசம். * சங்கு தங்கு தடங்கடல் கடல்மல்லையிறே. "மாமயிலை" என்றிறே இவர் தாமும் மண்டியிருப்பது. "கச்சிக்கிடந்தவனூர் கடல்மல்லைத் தலசயனம்" என்று - அடுத்தடுத்துப்படிக்கும் தேசமாகவிறேபாடினார். ஆகையால், அவன் படுகாடுகிடக்கும் தேசமென்கிறது. (கடல்மல்லைப்பூதத்தார்) "தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதம்" என்னலாம்படியான தரத்தையுடையவர். "பாற்கடல்பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும் சீதனையேதொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" என்னக்கடவதிறே. "இண்டைகொண்டு தொண்டரேத்த வெவ்வுள்கிடந்தான்" என்கிறபடியே* மிக்க சீர்த்தொண்டரானபுண்

## இதைத் தனியன் வ்யாக்யாநத்தின் முதலில் சேர்த்துக்கொள்ளவும்

:o:

(என்பிறவிதீரவித்யாதி) என்பிறவியாவது - இவர்தாம் "இப் பிறவியாவது" என்றருளிச்செய்தபடியே * மாறிமாறிப் பல்பிறப்பும் பிறந்து *பல்பிறவியில்பிறந்து* பிறவிப்பெருங்கடலிலே *உடலாழிப் பிறப்பிலே புக்குழலுகை. ஏவம் விதமான ஜந்மபரம்பரைகள் தீரும்படி ஜந்மவைபவத்தையுடைய பூதத்தார் பொன்னங்கழலை யிறைஞ்சினேனென்கிறது. இறைஞ்சுகை - பஜிக்கை. அதாவது - ஸேவிக்கையென்றபடி. "பொன்னம் கழலே தொழுமின் முழு வினைகள் முன்னம் கழலு முடிந்து" என்னுமாப்போலே, *பூதத் திருவடிகளுடைய பொன்னம்கழற்கு ஆனஜந்மம்கழலுமிறே.

டரீகர் * வண்டுகொண்டு நறுந்துழாயலங்கல்கொண்டு சாத்தக்கிடந்த விடமிறே.

(கடல்மல்லைப் பூதத்தார்) திருக்கடல் மல்லையில் குருக்கத்திப் பூவிலேயிறே பூதத்தார் ஐப்பசியில் அவிட்டத்திலே அவதரித்தது. இவரும் * இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சூட்டினரிறே. அத்தையிட்டு * கடல்மல்லைப் பூதத்தாரென்கிறது. அவனுக்கும், "கடல்மல்லைத் தலசயனத்துறைவார்" என்றிறே நிரூபகம். (பூதத்தார் பொன்னங்கழல் - இறைஞ்சினேன்) "மேவினேனவன்பொன்னடி" என்னுமாப்போலே. "தமிழ்த்தலைவன் பொன்னடி" என்னக்கடவதிறே. (பொன்னம்கழல் - என்பிறவி தீரவிறைஞ்சினேன்) இவர் பொன்னடியடியாகவிறே ஜந்மஸம்ஸாரபந்தம் நீங்குவது. இத்தால், பூதத்தார் பாதத்தைப் பணியவே பிறப்பறும் என்றதாயிற்று. (க)

இரண்டாந் திருவந்தாதியின் தனியன் வ்யாக்யாநம்

முற்றிற்று.

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்.

---





ஸ்ரீரஸ்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த

# இரண்டாந் திருவந்தாதி வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(அன்பேதகளி) கீழில் திருவந்தாதியிலே உபயவிபூதி யுக்தனானவன் ஜகத்துக்கு சேஷியென்றார்; இவர் அவ்வுபய விபூதியையும் தம்முடைய பக்தியாலே அநுஸந்தித்து பக்தி பரவசராய்க் கவிபாடுகிறார். அவர்க்கிந்த பக்தியில்லையோ வென்னில்; உண்டு; காரண கார்யரூபமான அவஸ்த்தாபேதமேயுள்ளது. உபயவிபூதியையும் அநுஸந்தித்துப் பிறந்தஜ்ஞாநமவரது; அதபக்வமாய் பக்திரூபாபந்நமானபடி யிவரது, ஆழ்வார்களொருத்தர்க்கொருத்தர் பாவஜ்ஞராயிறே பரிமாறுவது.

அரும்பதவிளக்கம்.—ப்ரவேசே: பக்தியாலே யநுஸந்திக்கை-ஜ்ஞாநத்வாரா உபயவிபூதியையும் பக்திக்கு விஷயமாக்குகை. ஜ்ஞாநத்தாலே யறிந்து ஸ்வரூபரூபகுண விபூதிகளிலே ஸ்நேஹம் பிறக்கையென்றபடி. ஜ்ஞாநவிசேஷம் பக்தியாகையாலே, காரணமான ஜ்ஞாநத்தோடு கார்யமான பக்தியோடு பேதமில்லை, அவஸ்த்தாபேதமேயுள்ளது; அவரதும் பக்தியென்றபடி. ஜ்ஞாநபக்திகள் ஏகாஸ்ரயத்திலே உண்டாகவேண்டியிருக்க, அவருடைய ஜ்ஞாநமிவருக்கு பக்வமாகக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் (ஆழ்வார்களித்யாதி).

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தையிடு திரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். (க)

ப-உ.—அன்பே - பக்தியே, தகளியா - அகலாகவும், ஆர்வமே-அபிநிவேசமே, நெய்யாக - நெய்யாகவும், இன்பு - ஆநந்தத்தாலே, உருகு - கரைந்திருக்கிற, சிந்தை-மநஸ்ஸானது, இடு - போடத்தக்க, திரியா - வர்த்திகையாகவும், (செய்து), ஞானம் - ஜ்ஞாநப்ரதமுமாய், தமிழ் - த்ராவிடபாஷாரூபமுமான ப்ரபந்தத்தை, புரிந்த -

செய்த, நான் - யான், நன்பு - ஜ்ஞாநஸ்வரூபமான ஆத்மா, உருகி - கரைந்து; நாரணற்கு - ஸர்வேஸ்வரனுக்கு, ஞானம் - பரபக்தியாகிற, சுடர் - உஜ்வலமான, விளக்கு-தீபத்தை, ஏற்றினேன் - ஜ்வலிக்கச்செய்தேன். (க)

வ்பா.—அவ —முதற்பாட்டு.—ஜகத் வைசித்ரியினுடைய நிர்வாஹகத்வம் போரு மென்னைத்திருத்தினபடியென்றநுஸந்திக்கிறார்.

(அன்பேதகளியா) "வையந்தகளியா" என்று வையத்தைத் தம்முடைய பச்தியிலே அநுஸந்தித்து பக்தியைத் தகளியாகக் கொள்ளுகிறார். தைலவர்த்திகளுக்கு ஒரு ஆதாரம்வேணும். (ஆர்வமே நெய்யாக) அதடியாகப்பிறந்த அபிநிவேசமே நெய்யாக. ஆர்வமாகிறது - அன்பினுடைய த்விதீயபர்வம். (இன்புருகுசிந்தை யிடுதிரியா) விஷயத்தினுடைய ரஸ்யதையாலே சிதிலமானஹ்ருதயம் திரியாக. "நன்பு" என்று ஜ்ஞாநம், "தஜ்-ணஸாரத்வாத் - தத்குணஸாரத்வாத்" என்கிறபடியே ஜ்ஞாதாவைக்காட்டுகிறது; "ஜ்ஞாஹ்யு - அதாஹ்ய:" என்கிற ஆத்மா. இந்தபக்திக் கநுரூபமான ஸம்பந்தத்தையுடையவருக்கு. (ஞானச் சுடர்விளக்கேற்றினேன்) பரபக்தியாகிற விளக்கேற்றினேன். (ஞானத்தமிழ் புரிந்த நான்) பரபக்தி பரவசனாய்க் கவிபாடுகிறநான். (க)

அரு.—பாட்டுக்கவதாரிகை அருளிச்செய்கிறார்(ஜகத்வைசித்ரியித் யாதி). ஜகத்தை, பூமியும் ஸமுத்ரமும் ஆதித்யதேஜஸ்ஸுமாக விசித்ரமாக்கினாற்போலே, என்னையும் நாநாவித பக்தியுடையேனும்படி பண்ணுவதே! என்றீடுபடுகிறார். முதற்பாட்டில் ஜ்ஞாநவிஷயமான வையத்தைத் தகளியாக்கினாரவர். இவர் ஜ்ஞாநவிசேஷமான பக்தியைத் தகளியாக்குகிறாரென்றபடி. தகளிதானேதுக்கென்ன, அருளிச்செய்கிறார் (தைலவர்த்தீத்யாதி). (க)

**ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்**
**தானத்தால் மற்றவன்பேர் சாற்றினால் - வானத்**
**தணியமரராக்குவிக்கு மஃதன்றே, நங்கள்**
**பணியமரர் கோமான் பரிசு. (உ)**

ப-உ.—நாரணன் தன் - சேஷியான ஸர்வேஸ்வரனுடைய, நாமங்கள் - அஸாதாரணமான திருநாமங்களையும், மற்று - இதைக்காட்

டிலும் வேறான (குணயோகத்தைச்சொல்லும்), அவன் - அவனு டைய, பேர் - திருநாமங்களையும், ஞானத்தால் - ஜ்ஞாநத்தாலே, நன்கு - நன்றாக, உணர்ந்து - அறிந்து, தானத்தால் - ஸ்தாநத்தால் (பக்தியால்), சாற்றினால் - சொன்னால், நங்கள் - நமக்கு பந்துவாய், பணி - கைங்கர்யபரருமான, அமரர் - நித்யஸூரிகளுக்கு, கோமான்- ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, பரிசு - ப்ரகாரம், வானத்து - பரமாகாசமான ஸ்ரீவைகுண்டத்துக்கு, அணி - அலங்காரமான, அமரர் - நித்யஸூரிகளோடு ஸமாநமாக, ஆக்குவிக்கு மஃது அன்றே- செய்விக்குமதன்றோ. (௨)

வ்யா.—அவ.—இரண்டாம்பாட்டு.—(ஞாநத்தால்) பக்திபரவ சராய்க் கவிபாடினார்க்கு அவன்கொடுக்கும் பரிசுசொல்லுகிறது.

(ஞானத்தால் நன்குணர்ந்து) பக்தியாலே ன்றாகவுணர்ந்து (நாரணன் தன்நாமங்கள்) அஸாதாரணமான நாராயணாதி நாமங்க ளை, விபூதியோகத்தைப்பற்றின நாமங்களை. (தானத்தால் மற்றவன் பேர்சாற்றினால்) பக்தியாயே உணர்ந்தபடியே சொன்னால். (வானத் தித்யாதி) பரமபதத்துக் காபரணமான நித்யஸூரிகளோடே ஒரு கோவையிலே கோக்குமதிறே. (நங்களித்யாதி) ஒருநாள் பணிந்து ஒருநாள் பணியாதிராதே பணிகையேஸ்வபாவமான அமரர் கோமா னுடையபடி. (௨)

அரு.—இரண்டாம்பாட்டு.—தானம்-ஸ்தாநமாய் பக்தி ஸ்தாந த்திலே. (௨)

பரிசு நறுமலரால் பாற்கடலான் பாதம்
புரிவார் புகப்பெறுவர் போலாம் - புரிவார்கள்
தொல்லமரர் கேள்வித் துலங்கொளிசேர் தோற்றத்து
நல்லமரர் கோமான் நகர். (௩)

ப-உ.—பரிசு - இளசான, நறு - அழகிய, மலரால் - புஷ்பத் தினால், பாற்கடலான் - க்ஷீராப்தியில் பள்ளிகொண்டவனுடைய, பாதம் - திருவடியை, புரிவார் - விரும்புவோர்கள், புரிவார்கள் - (பக வத்ப்ராப்தியில்) விருப்பமுடையவர்களாய், தொல்-பழையர்களான, அமரர் - (ப்ரஹ்மாதி) தேவர்கள், கேள்வி - கேட்டறியத்தக்கதாய், துலங்கொளிசேர்-மிகுந்ததேஜஸ்ஸோடு கூடினதாய், தோற்றத்து-

ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற, நல் - ஶ்லாக்யமான, அமரர்-நித்யஸூரிகளுக்கு, கோமான் - ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, நகர்-பட்டணமான ஸ்ரீவைகுண்டத்தை, புக - ப்ரவேசிக்க, பெறுவர் போலாம் - பெறுவராம். (௫)

வ்யா.—அவ.—மூன்றாம்பாட்டு.—(பரிசு) அவன் செய்ததிலே தா மீடுபடுகிறார்.

(பரிசு நறுமலரால்) பக்திப்ரகாரத்தாலே செவ்விப்பூவைக்கொண்டு. (பாற்கடலான்பாதம் புரிவார்) ஸம்ஸாரிகளை யக்கரைப்படுத்த வேணுமென்று திருப்பாற்கடலிலே கண்வளருகிறவனுடைய திருவடிகளை ஆஶ்ரயிக்குமவர்கள். (புகப்பெறுவர்போலாம்). (புரிவார்களித்யாதி) ஸாதகராய் முற்பட நாலுநாளிருந்துள்ள ப்ரஹ்மாதிகளென்றும் கேட்டேபோவதாம். (துலங்கொளிசேர் தோற்றத்து) ஈதௌக-ஜாநமஜீவுஜக-அத்யர்க்கா நல தீப்தம் கத்" என்று மொளியையுடைத்தாயிருந்துள்ள. (நல்லமரர்கோமான்நகர்) என்றும ஸாத்யரான நித்யஸூரிகளுக்கு சேஷியாயிருந்துள்ளவனுடைய நகரை, "பரிசு நறுமலரால் பாற்கடலான்பாதம் புரிவார் புகப்பெறுவர்போலே"; என்ன ஆச்சர்யமோ வென்றீடுபடுகிறார். (௫)

அரு.—மூன்றாம்பாட்டு.—புரிகை - முயலுகை. துலங்குகை - விளங்குகை. தோற்றம் - மிக்க வொளியையுடைத்தாய்ப் ப்ரகாசிக்கை. (௫)

**நகரிழைத்து நித்திலத்து நாண்மலர்கொண்டு, ஆங்கே**
**திகழுமணி வயிரம் சேர்த்து - நிகரில்லாப்**
**பைங்கமல மேந்திப் பணிந்தேன் பனிமலராள்**
**அங்கம் வலங்கொண்டா னடி.** (௬)

ப-உ.—நகர் - (என்னுடையமநஸ்ஸை) நகரமாக, இழைத்து - செய்து, ஆங்கே - அந்தநகரத்தில், திகழும்-உஜ்வலமான, மணிவயிரம் - (அபிநிவேஶமாகிய) மாணிக்க வயிரங்களை, சேர்த்து - சேகரித்து, நித்திலம் - (ஸ்நேஹமாகிற) முத்தை, நாள் - ஶ்லாக்யமான, மலர் - இதழாக, கொண்டு - ஸம்பாதித்து, நிகரில்லா - ஒப்பில்லாத, பை - அழகிய, கமலம் - (ப்ரீதியாகிற)தாமரைப்பூவை, ஏந்தி - கொண்டு, பனி-குளிர்ந்த, மலராள்-கமலமலரை வாஸஸ்தாநமாகவுடைய பிராட்டியை, அங்கம் - திருமேனியில், வலம் - வலதுதிருமார்பில்

கொண்டான்-வைத்துக்கொண்டவனுடைய, அடி-திருப்பாதங்களை, பணிந்தேன் - ஆஸ்ரயித்தேன். (௪)

வ்யா.—அவ.—நாலாம்பாட்டு.—(நகரிழைத்து) "அன்பேதக ளியா" என்றும் விளக்குருபித்தாற்போலே ஒரு புஷ்பமாகருபித்து அத்தைக்கொண்டு ஆஸ்ரயிக்கிறார்.

(நகரிழைத்து) நெஞ்சைக் கோயிலாகக்கொண்டு. (சித்திலத்தித்யாதி) குளிர்ந்த முத்தையிதழாகக்கொண்டு. (ஆங்கித்யாதி) அதிலே திகழாநின்ற மணிவயிரங்களாகிற அல்லியையுமுண்டாக்கி. (நிகரித்யாதி) ஒப்பின்றிக்கே யிருந்துள்ள ஆர்வமாகிற புஷ்பத்தைக் கொண்டு பணிந்தேன். (பணிமலராளித்யாதி) பணிவுக்கு விஷயமாவான் ஸ்ரிய:பதியிறே. அவளுடைய ஸந்நிதியில் அபுஷ்கலமான ஸமாஸ்ரயணமும் புஷ்கலமாமிறே. (௪)

அரு.—நாலாம்பாட்டு.—பக்தியைப் புஷ்பமாகருபிக்கையாலே இங்கு மணிமுக்தாதிகள் ஸங்ககாயாநுராகங்கள். அங்கம் வலம்-திருமேனியில் வலப்பார்ச்வத்திலே. (௪)

அடிமூன்றி லிவ்வுலக மன்றளந்தாய் போலும்
அடி-மூன் றிரந் தவனி கொண்டாய் - படிநின்ற
நீர்ராதமேனி நெடுமாலே, நின்னடியை
யாரோத வல்லா ரறிந்து. (ரு)

ப-உ.—அடிமூன்று - மூன்றடியை, இரந்து-யாசித்து, அவனி-பூமியை, கொண்டாய் - ஸ்வாதீனமாகக்கொண்டாய்; அன்று - அக்காலத்தில், அடிமூன்றில் - மூன்றடியினால், இவ்வுலகம் - இந்தலோகங்களை, அளந்தாய்போலும் - அளந்துகொண்டாயோதான்; படி-பூமியிலே, நின்ற - இருக்கிற, நீர் - (சௌசத்யமுதலான) குணங்களையுடைய, ஓதம் - ஸமுத்ரம்போன்ற, மேனி - விக்ரஹத்தையுடைய, நெடு - ஸர்வோத்க்ருஷ்டனை, மாலே - ஸர்வேஸ்வரனே! நின்-உன்னுடைய, அடியை - ஸ்ரீபாதத்தை, ஆர் - எவர், அறிந்து - தெரிந்துகொண்டு, ஓதவல்லார் - சொல்லத்தகுந்தவர்கள். (ரு)

வ்யா.—அவ.—ஐந்தாம்பாட்டு.—(அடிமூன்றில்) அவனுடைய உத்கர்ஷம் சிறிதறியுமத்தனையல்லது, ஸௌலப்யமொருவருமறிவாரில்லை யென்கிறது.

(அடிமூன்றி லித்யாதி) மூன்றடியில் இரண்டடியாலே லோகத்தையளந்தாய். (அடிமூன்றித்யாதி) அளக்கைக்கடியாக மூன்றடியையிரந்து பூமியைக்கொண்டாய். (படிநின்ற) பூமியிலேஸ்வாபாவிகமாக நின்றவென்றுமாம். (நீரோகமித்யாதி) கடலோதம்போலேயிருந்துள்ள திருமேனியை யுடையனாய் வளர்ந்தவனே. வ்யாமோஹத்தை யுடையவனென்றுமாம். (நின்னடியாயித்யாதி) உன்னுடைய ஸௌலப்யத்தையறிந்து சிலராலே ஆஸ்ரயிக்கப்போமோ. (ரு)

அரு.—ஐந்தாம்பாட்டு.—படிநின்ற-அளக்கிறபோது பூமியிலே நின்ற. (ரு)

**அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர் கொண்டு, ஆர்வம்**
**செறிந்த மனத்தராய்ச் செவ்வே - அறிந்தவன்றன்**
**பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே**
**காரோத வண்ணன் கழல்.** (சா)

ப-உ.—அறிந்து-(குணதோஷங்களை) அறிந்து, ஐந்தும்-ஐந்து இந்த்ரியங்களையும், உள் - சரீரத்துக்குள்ளே, அடக்கி-விஷயங்களில் போகாதபடிசெய்து, ஆய் - சோதிக்கப்பட்ட, மலர் - பூக்களை, கொண்டு-ஸம்பாதித்து, ஆர்வம் - ப்ரீதியினால், செறிந்த மிகுந்த,மனத்தராய் - மநஸ்ஸையுடையராய்க்கொண்டு, செவ்வே - நன்றாக, அறிந்து - தெரிந்துகொண்டு, அவன்தன் - அவனுடைய, பேர் - திருநாமத்தை, ஓதி - சொல்லி, ஏத்தும்-ஸ்தோத்ரம்பண்ணுகிற, பெரும் - அதிகமான, தவத்தோர்-பாக்யசாலிகள், கார் -கறுத்த, ஓதம் - ஸமுத்ரம்போன்ற, வண்ணன்-வர்ணத்தையுடையவனுடைய,கழல் - திருவடிகளை, காண்பர் - ஸாக்ஷாத்கரிப்பர்கள். (சா)

வ்யா.—அவ.—ஆறும்பாட்டு.—(அறிந்து) ஜ்ஞாநத்துக்கு விஷயமன்றாகில் சூந்யமாகிறதோவென்னில்; அபிநிவேசத்தை யுடையராய் ஆஸ்ரயிக்கவல்ல பாக்யவான்கள் அறிவரென்கிறது.

(அறிந்து) சப்தாதிகள்த்யாஜ்யமென்றறிந்து. (ஐந்துமுள்ளடக்கி) விஷயங்களில் நின்றும் இந்த்ரியங்களைமீட்டு ப்ரத்யக்காக்கி. (ஆய்மலர்கொண்டு) செவ்விப்பூக்கொண்டு. (ஆர்வமித்யாதி) அபிநிவேசம் நெருங்கின மநஸ்ஸையுடையராய். (செவ்வேயறிந்து) நாம் சேஷம், அவன் ஸ்வாமியென்னுமிடத்தையறிந்து. (அவன் தன் பே

ரோதியேத்தும் பெருந்தவத்தோர்) அவனுடைய திருநாமங்களைச் சொல்லி. ஏத்துகிற பாக்யவான்கள். (காண்பர்) நிச்சிதம். (காரோத வண்ணன்கழல்)கடலுதாஹரணமான வடிவையுடைய திருவடிகளை.

**கழலெடுத்து வாய்மடித்துக் கண்சுழன்று, மாற்றார்**
**அழலெடுத்த சிந்தையராயஞ்ச – தழலெடுத்த**
**போராழி யேந்தினான் பொன்மலர்ச் சேவடியே**
**ஓராழி நெஞ்சே யுகந்து. (எ)**

ப-உ.—கழல் - திருவடிகளை, எடுத்து - உயர்த்தி, வாய்-உதட்டை, மடித்து - உள்ளே அடக்கி (பற்களால் கடித்து), கண் - நேத்ரங்களை, சுழந்து - ப்ரமிப்பித்து, மாற்றார் - சத்ருக்கள், அழலெடுத்த - தீபெழுந்த, சிந்தையராய் - மநஸ்ஸையுடையராய்க்கொண்டு, அஞ்ச - பயப்படும்படியாக, தழலெடுத்த - அனல்வீசுகிற, போர் - யுத்தஸாதநமான, ஆழி - சக்ரத்தை, ஏந்தினான் - தரித்தவனுடைய, பொன் - பொன்போல் ஸ்ப்ருஹணீயமாய், மலர் - புஷ்பம்போல் ஸுகுமாரமான, அடியே - திருவடியே, ஆழி - கம்பீரமான, நெஞ்சே - மநஸ்ஸே! உகந்து-ப்ரீதமாய்க்கொண்டு, ஓர்-த்யாநம்பண்ணு.()

வ்யா.—அவ.—ஏழாம்பாட்டு.—(கழலெடுத்து) அவனையுகந்தார் காண்பாரானபின்பு, நீயுமவனையே உகந்தாஸ்ரயியென்று திருவுள்ளத்தைப் பார்த்துச்சொல்லுகிறார். ப்ரதிபந்தகமுண்டாகில் செய்வதென்னென்னில், நமுசிபட்டது படுமத்தனை.

(கழலித்யாதி) அஞ்சக்கழலெடுத்து வாய்மடித்துச் சுழலாநின்ற கண்களையுடைய நமுசிப்ரப்ருதிகள் ஹ்ருதயத்திலே கொளுத்தினபயாக்நியை யுடையரா யஞ்சும்படி திருவடியையெடுத்து. (வாய்மடித்துக் கண்சுழன்று) "கழலெடுத்து" என்று ஈஸ்வர விசேஷணயாகவுமாம். (தழலித்யாதி) அக்நியைஉமிழாநின்ற திருவாழியைக் கையிலே ஏந்தினவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையே. (ஆழி நெஞ்சே யுகந்தோர்) அளவுடைய நெஞ்சே உகந்தாஸ்ரயி.

அரு.—ஏழாம்பாட்டு.—திருமேனியென்னுதல்-வந்தேறியன்றியே ஸ்வாபாவிகமாகநின்ற நிறத்தையுடைய திருமேனியென்னுதல். (எ)

உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கொள் கொங்கை
அகம்குளிர வுண்ணென்றா ளாவி - உகந்து
முலையுண்பாய் போலே முனிந்துண்டாய், நீயும்
அலைபண்பா லானமையா லன்று. (அ)

ப-உ.—உகந்து - ஸ்நேஹத்தைச்செய்து, உன்னை - உன்னை, வாங்கி - எடுத்து, ஒளி-காந்திவீசுகிற, நிறங்கொள் - அழகையுடைத்தான, கொங்கை-ஸ்தநங்களை, அகம் - உள்ளம், குளிர - குளிரும்படி, உண்ணென்றாள் - சாப்பிடச்சொன்னாள் ; ஆன்மையால்-ஆகையால், அன்று - அக்காலத்தில், நீயும் - நீயும், அலை - அதிசயித்த, பண்பால் - குணத்தாலே, உகந்து - விருப்புற்று, முலையுண்பாய் போலே - ஸ்தந்யபாநம்பண்ணுவார்களைப்போலே, முனிந்து - சீறி, ஆவி - உயிரை, உண்டாய் - ஸ்வீகரித்தாய் (முடித்தாய்). (அ)

வ்யா.—அவ.—எட்டாம்பாட்டு.—(உகந்து) பொய்யுகப்புபாதகமாம் படிசொல்லுகிறது.

(உகந்து) யசோதைப்பிராட்டி யுகக்குமாப்போலேயுகந்து. (உன்னைவாங்கி) அவளோசழக்காக வெடுக்குமாப்போலே யெடுத்து. (ஒளிநிறங்கொள்கொங்கை) முலைப்பாலாலேநெறித்து அத்தாலே புகருடைத்தானகொங்கை. (அகங்குளிரவித்யாதி) உண்டல்லது நிற்கப்போகாதபடி ஹ்ருதயங்குளிரும்படிக் கிடாகச்சொன்னவளுடைய ப்ராணனை. (உகந்தித்யாதி) அவள் பொய்யே உகந்துமுடிக்க நினைத்தாரபோலே நீயும்பொய்யே உகந்து முலை உண்ணுமாப்போலே முனிந்து முடிக்க நினைத்தாய். (அலையித்யாதி) அவள் பொய்யே உகந்துமுடிக்க நினைத்தாற்போலே நீயும் பொய்யேயுகந்து மிக்க நீர்மையையுடையை யாகையாலன்று ; உனக்கு மித்ரபாவமும் அமைந்திருக்கச் செய்தே யவளைமுடித்து உன்னைத் தந்தது ஆஸ்ரிதர் பக்கலுண்டான ஓரமிறே. (அ)

அன்றதுகண் டஞ்சாத ஆய்ச்சியுனக் கிரங்கி
நின்றுமுலைதந்த விந்நீர்மைக்கு - அன்று
வரன் முறையால் நீயளந்த மாகடல்சூழ் ஞாலம்
பெருமுறையா லெய்துமோ பேர்த்து. (கூ)

ப-உ.—அன்று - பூதனை ஸ்தநம் கொடுக்குங்காலத்தில், அது - அந்த சரிதத்தை, கண்டு - பார்த்து, அஞ்சாத-பயப்படாத, ஆய்ச்சி- இடைச்சியானயசோதை, உனக்கு - உன்னுடையவிஷயத்தில், இரங்கி - தயவுசெய்து, நின்று - ஸ்திரப்பட்டு, முலைதந்த - ஸ்தநம்கொடுத்த, இந்நீர்மைக்கு - இந்த நல் ஸ்வபாவத்துக்கு, அன்று - மஹாபலி பக்கல் தாநமவாங்கினகாலத்தில், வரன் - ச்லாக்யமான, முறையால், ஸ்வஸ்வாமிபாவமாகிற ஸம்பந்தத்தாலே, நீ - நீ, அளந்த - ஆக்ரமித்த, மா - பெரிய, கடல் - ஸமுத்ரத்தினல், சூழ் - சுழறப்பட்ட, ஞாலம் - பூமியானது, பேர்த்து - மறுத்து விசாரிக்குமிடத்தில், பெரு - அதிகமாயிருக்கும், முறையால் - க்ரமத்தினுல், எய்துமோ - ஒப்பாமோ ? (கூ)

வ்யா.—அவ.—ஒன்பதாம்பாட்டு.—(அன்றது) யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்துக்கு உபமாநமுண்டோவென்கிறது.

(அன்றது கண்டஞ்சாதவாய்ச்சி) அப்பெரிய வ்யஸநத்தைக் கண்டு பயப்படாத தாயார். (உனக்கிரங்கி) உன்பக்கலிலே சிதிலையாய். (நின்றித்யாதி) தரையிலேகால்பாவி முலைதந்தஸ்வபாவத்துக்கு.(வரன்முறையால்) ஈஸ்வரனை ப்ராப்தியாலே. (நீயளந்தவித்யாதி) நீயளந்த பெரியகடல்சூழ்ந்த பெரியபூமியானது பெருமுறையாலெய்துமோ அவளுடைய ஸ்வபாவத்துக்கு. இந்தபூமியானது திரியட்டு இது பெரியது, இது பெரியதென்னும் முறையாலே எதிர்க்குமோ. அவளுடைய ஸ்வபாவத்துக்கு நீ பெரிதாகச்செய்ததுவும் ஒப்பன்றென்கிறது. (கூ)

அரு.—ஒன்பதாம்பாட்டு.—எய்துமோ-நீர்மைக்கு பூமிஸத்ருசமோ என்னுதல். உன்னுடைய அளந்தவ்யாபாரந்தானெக்குமோ வென்னுதல். (கூ)

**பேர்த்தனைமா சகடம்பிள்ளாய், மண்ணிரந்து**
**காத்தனை பல்லுயிரும் காவலனே - ஏத்திய**
**நாவுடையேன் பூவுடையேன் நின்னுள்ளி நின்றமையா**
**காவடியேன் பட்ட கடை.** (க0)

ப-உ.—பிள்ளையாய் - பாலனைக்கொண்டு, மா பெரிய, சகடம்- சகடாஸுரனை, பேர்த்தனை - வேரைக்களைந்தாய் ; காவலனே-ரக்ஷ

கனே! மண் - பூமியை, இரந்து - யாசித்து, பல்-அநேகமான, உயிரும்-ப்ராணிகளேயும், காத்தனே - ரக்ஷித்தாய்; நின்-உன்னிடத்தில், உள்ளி - அவகாஹித்து, நின்றமையால் - இருக்கையாலே, ஏத்திய-ஸ்துதிக்கத்தக்க, நாவுடையேன் - நாக்கையுடைத்தானேன்; பூவுடையேன் - (அர்ச்சிக்க) புஷ்பங்களேயுடையேனுனேன்; அடியேன்-தாஸனுனநான், பட்ட - அநுபவித்த, கடை - தாழ்மையை, கா - (போக்கி) ரக்ஷி. (கo)

வ்யா.—பத்தாம்பாட்டு.—(பேர்த்தனேயித்யாதி) பிள்ளேயாயிருந்து பெரிய சகடத்தை உதைத்தாய். (மண்ணிரந்தித்யாதி) மஹாபலியாலே நோவுபடாமே பூமியையிரந்து ரக்ஷித்தாய். இப்படி ரக்ஷிக்கைக்கடி என்னென்றுல்; (காவலனே) எல்லாவற்றையுமுடையனுகை. (நின்னுள்ளி நின்றமையால் - ஏத்திய நாவுடையேன் பூவுடையேன்) உன்னே ஸமாஶ்ரயணீயனுக உடையேனுகையாலே ஆஶ்ரயிக்கும் த்ரவ்யங்களேயு மிந்த்ரியங்களேயும் புஷ்கலமாகவுடையேனுனேன். (அடியேன் பட்டகடை) உன்னுடையேனுயிருந்து வைத்து நான் முன்பு தேவதாந்தரங்களே யநுவர்த்தித்துப் பட்டபொல்லாங்கு இனிப்படாதபடி காத்தருளவேணும். (கo)

**கடைநின் றமரர் கழல்தொழுது, நாளும்**
**இடைநின்ற வின்பத்த ராவர் - புடைநின்ற**
**நீரோத மேனி நெடுமாலே; நின்னடியை**
**யாரோத வல்லா ரவர்.** (கக)

ப-உ.—கடைநின்று - வாசலிலிருந்து, நாளும்-தினந்தோறும், அமரர் - (ப்ரஹ்மாதி) தேவர்களுடைய, கழல் - பாதங்களே, தொழுது - ஆஶ்ரயித்து, இடைநின்ற - (மோக்ஷத்துக்கும பூமிக்கும்)நடுவிலிருக்கிற, இன்பத்தராவர் - ஸுகத்தையுடையராவர்கள்; புடைநின்ற - சுற்றிகொண்டிருக்கிற, நீர் - ஜலத்தையுடைய, ஓதம்-ஸமுத்ரம்போன்ற, மேனி - விக்ரஹத்தையுடைய, நெடுமாலே - ஸர்வோத்க்ருஷ்டனுன ஸ்வாமியே! நின் - உன்னுடைய, அடியை - பாதங்களே, ஓதவல்லாரவர்-ஸ்தோத்ரம் பண்ணத்தக்கவர்கள், யார் - எவராவார். (கக)

வ்யா.—அவ.—பதினுேராம்பாட்டு.—(கடைநின்றமரர்)தேவதாந்தரங்களேயநுவர்த்தித்துப்பட்ட அநர்த்தத்தைப் பரிஹரியென்ன;

இப்படி செய்வாருணடோவென்னில்; அவரிப்படி செய்தன்றோ அநர்த்தப்படுகிறூர்.

(கடை யித்யாதி) தேவதாந்தரங்கள் வாசலிலே நின்று அவர்களை நாள்தோறுந்தொழுது மத்யமபுருஷார்த்தமான ஸுகத்தைப் பெறுவர். (புடைநின்றவித்யாதி) எங்கும்புக்க நின்ற நீரையுடைத்தான கடலில் நிறத்தையுடைய ஸர்வேஸ்வரனே! ப்ராப்யமானஉன்னுடைய திருவடிகளை யறிந்தாஸ்ரயிக்க வல்லாரார். (கக)

அரு.—பதினோராம்பாட்டு.—கடைகா-காத்தருளவேணும். (கக)

அவரிவ ரென்றில்லை யரவணை யான்பாதம்
எவர்வணங்கி யேத்தாதா ரெண்ணில் - பவரும்
செழுங்கதிரோனொண்மலரோன்கண்ணுதலோனன்றே
தொழுந்தகையார் நாளும் தொடர்ந்து. (கஉ)

ப-உ.—அவர் - (ஆஸ்ரயணீயரான) அந்த தேவர்கள், இவர் - (ஆஸ்ரிதரான) இம்மனுஷ்யர்கள், என்று - இப்படி, இல்லை - (பேதம்) இல்லை; அரவணையான் - திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய, பாதம் - திருவடிகளை, வணங்கி - தொழுது, ஏத்தாதார் - ஸ்துதிபண்ணாதவர்கள், எவர் - யார்! எண்ணில் - ஆராயில், பவரும் - பரம்பியிருக்கிற, செழும் - அழகிய, கதிரோன் - கிரணங்களையுடைய ஸூர்யனும், ஒள் - ப்ரகாசமுடைய, மலரோன் - தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய ப்ரஹ்மாவும், கண்ணுதலோனன்றே - நெற்றியில் கண்ணையுடைய ருத்ரனுமாகிற இவர்கள், தொடர்ந்து - (அவனிருக்குமிடம்) சென்று, நாளும் - தினந்தோறும், தொழும் - ஆஸ்ரயிக்கையே, தகையார் - ஸ்வபாவமாகவுடையவர்கள். (கஉ)

வ்யா.—அவ.—பன்னிரண்டாம்பாட்டு.—(அவரிவர்) சிறியார் பெரியாரென்னாதே. ஸர்வேஸ்வரன் திருவடிகளை ஆஸ்ரயியாதாரெவர்.

(அவரித்யாதி) எல்லாரும் அவனையே ஆஸ்ரயிக்கிறதோ வென்னில்; ப்ரஸித்தரான ப்ரஹ்மாதிகளும், அவனைத்தொழும் ஸ்வபாவராயன்றோ விருக்கிறது. (எண்ணிலித்யாதி) பரந்தழகியதான கிரணங்களையுடைய ஆதித்யனும் ப்ரஹ்மாவும் லலாடநேத்ரனும். (நாளுந்தொடர்ந்து தொழுந்தகையார்) தொழும் ஸ்வபாவத்தையுடையராவர். (கஉ)

அரு.—பன்னிரண்டாம்பாட்டு.—சங்கைபண்ணுகைக்காக பதோ பாதாகம் பண்ணுகிறார் (அவரித்யாதி). இதின்மேலே சங்கைக்கு உத்தரமாய் மேலுக்கவதாரிகையுமாக அருளிச்செய்கிறார் (ப்ரஸித்தானவித்யாதி). (கஉ)

தொடரெடுத்த மால்யானை சூழ்கயம்புக் கஞ்சி
படரெடுத்த பைங்கமலம் கொண்டு,- அன் றிடரடுக்க
ஆழியான் பாதம் பணிந்தன்றே, வானவர்கோன்
பாழிதா னெய்திற்றுப் பண்டு. (கங)

ப-உ.—தொடர் - (காலிலிட்ட)சங்கிலியை, எடுத்த - (தும்பிக்கையாலே) எடுத்த, மால் - பெருத்த, யானை - ஆனையானது, சூழ் - விசாலமான, கயம் - மடுவில், புக்கு - ப்ரவேசித்து, படர் - மலர்ந்தும், எடுத்த - உயர்ந்துமிருக்கிற, பை - அழகிய, கமலம் - தாமரைப்பூவை, கொண்டு - எடுத்து, அன்று - அக்காலத்தில், இடர் - (முதலையால்வந்த) துஃகமானது, அடுக்க - ஸம்பவிக்க, அஞ்சி - அதுக்குப் பயப்பட்டு, ஆழியான் - சக்ரத்தை யேந்தினவனுடைய, பாதம்- திருவடிகளை, பணிந்தன்றே - தொழுதன்றோ, வானவர் - நித்யஸூரிகளுக்கு, கோன் - ஸ்வாமியானவனுடைய, பாழிதான் - ஸ்தானத்தை, பண்டு - முன்பு, எய்திற்று - அடைந்தது. (கங)

வ்யா.—அவ.—பதின்மூன்றும்பாட்டு.—(தொடரெடுத்தமால்) விலக்ஷணதிகாரமாகில் இடையாதோவென்னில்; ஓரானைக்கன்றோ எளிதாய்த் தோன்றுகிறது.

(தொடரித்யாதி) வல்லியை முறித்துக் கையிற்கொண்ட ஆனை, மதித்திருந்துள்ள ஆனை. (சூழ்கயம்புக்கு) பரந்தபொய்கையிலே புக்கு. (இடரடுக்கவஞ்சி) முதலையால் வந்த விடருக்குப்பயப்பட்டு. (படரெடுத்தபைங்கமலங்கொண்டு) படர்ந்தோங்கி குளிர்ந்த தாமரைப்பூவைக்கொண்டு. (ஆழியானித்யாதி) ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே விழுந்தன்றோ நித்யஸூரிகளோடே கூடியிருக்கிறவனுடைய படுக்கையிலே ஏறப்பெற்றது. (கங)

அரு.—பதின்மூன்றும்பாட்டு.—புள்ளூர்ந்துத்தோன்றிற்றென்றபடி - வல்லி - விலங்கு-பாழி-படுக்கை - "இடரடுக்க" என்றபோது இடர்கிட்ட என்றபடி. (கங)

பண்டிப் பெரும்பதியை யாக்கி, பழிபாவம்
கொண்டு இங்குவாழ்வாரைக் கூறுதே - எண்டிசையும்
பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள்
தீர்த்தகர ராமின் திரிந்து. (கச)

ப-உ.—பண்டியை - வயிற்றை, பெரும் - விசாலமான, பதி - ஊராக, ஆக்கி - செய்து, பழி - பிறரால் ஏறிட்ட தீமைகளையும், பாவம் - புத்தி பூர்வமாகச்செய்த தீமைகளையும், கொண்டு - ஸம்பாதித்து, இங்கு - இவ்வுலகத்தில், வாழ்வாரை - கல்யாணத்தை யநுபவிப்போர்களை, கூறுதே - அநுஸந்தியாமல், பேதைகாள் - புத்தியில்லாதவர்களே! எண்டிசையும் - எட்டுத்திக்கிலும், பேர்த்த-வ்யாபித்திருக்கிற, கரம்நான்கு-நாலுகைகளை, உடையான்-உடைத்தான ஸர்வேஶ்வரனுடைய, பேர் - திருநாமங்களை, ஓதி - அநுஸந்தித்து, திரிந்து - ஸஞ்சரித்து, தீர்த்தகரராமின் - (ஜகத்தை) பரிசுத்தப்படுத்துகிறவர்களாக ஆகுங்கோள். (கச)

வ்யா.—அவ.—பதினாலாம்பாட்டு.—(பண்டி) அவன்படி இதுவானபின்பு ஸம்ஸாரிகளை யேற்றித்திரியாதே அவன் திருவடிகளிலே பணிந்து திருநாமங்களைச்சொல்லி உங்களுடைய ஸ்பர்சத்தாலே லோகத்தைச் சுத்தமாக்கிக்கொள்ளுங்கோ ளென்கிறார்.

(பண்டிப் பெரும்பதியையாக்கி) அன்றிக்கே, வயிறாகிற பெரும்பதியை உண்டாக்கி யென்றுமாம். (பழிபாவ மித்யாதி) அடியுண்டாயும் அடியின்றிக்கேயுமான பாபமே வாழ்வாகவிருப்பாரைப் பேசாதேஎட்டுத்திக்கும் விம்மவளர்ந்த நாலு தோள்களையுடையனானவனுடைய திருநாமங்களைச்சொல்லி. (கச)

அரு.—பதினாலாம்பாட்டு.—பெரும்பதியையாக்கி-முன்பு இந்த லோகத்தை உண்டாக்கி, அதுக்கு ஆபத்துவர, "எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான்" என்று அவனுக்கு விசேஷணமாதல். பண்டியாகிற வயிற்றைப் பெரும்பதி-பெருக்கப்பண்ணி என்று ஸம்ஸாரிக்கு விசேஷணமாதல். அடியுள்ளது பழி; மற்றையது பாபம். திரிந்து தீர்த்தகரராமின் - உங்கள் ஸஞ்சாரத்தாலே பாவநராக்குங்கோள். (கச)

திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி, அன்று
பிரிந்தது சீதையை மான்பின்போய் - புரிந்ததுவும்

கண்பள்ளி கொள்ள வழகியதே, நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் றனக்கு. (கரு)

ப-உ.—வெம் - கொடிய, சமத்து - யுத்தத்தில், தேர்-ரதத்தை, கடவி - நடத்தி, திரிந்ததுவும் - ஸஞ்சரித்ததும், மான் - (மாயா) ம்ருகத்தினுடைய, பின்போய், - பின்தொடர்ந்து, அன்று - அக்காலத்தில், சீதையை - ஸீதாதேவியை, பிரிந்ததுவும் - விஸ்லேஷித்ததுவும், கண் - பூமியில், பள்ளிகொள்ள - படுக்க, புரிந்ததுவும் - விரும்பியதும், நாகத்தின் - திருவநந்தாழ்வான்மேலே, தண் - குளிர்ந்திருக்கும்படி, பள்ளிகொள்வான் தனக்கு - சயநிக்கும் ஸ்ரியஃபதிக்கு, அழகியதே-உகப்பாயிருந்ததன்று. (கரு)

வ்யா.—அவ.—பதினைந்தாம்பாட்டு.—(திரிந்தது) திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமாகையாலே அல்லாத வவதாரங்களிலும் ஆஸ்ரிதார்த்தமாக மிகப்பட்ட இறுக்குக்களை நினைத்து வெறுக்கிறார்.

(வெஞ்சமத்துத் தேர்கடவித்திரிந்தது) யுத்தத்திலே யுடம்புக்கீடாகே யுன்னையழியமாறப் படைபொருத்துத் தேர்கடவித்திரிந்தது. (அன்றுமான்பின் போய்பிரிந்தது சீதையை) ரக்ஷிக்கிறவிடத்தி லிருவரும் கூடவிருந்து ரக்ஷிக்கப்பெற்றோமோ. (புரிந்ததுவுங்கண் பள்ளிகொள்ள) தரையிலே பள்ளிகொள்ளக்கற்றது. (நாகத்தின் தண்பள்ளி கொள்வான் தனக்கு அழகியதே) திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளப்பெற்ற ஸௌகுமார்யத்தையுடைய னைவனுக்கு ஜகத்ரக்ஷணம் சாலவழகிதாயிருந்தது. (கரு)

அரு.—பதினைந்தாம்பாட்டு.—புரிந்ததுவும் - திருவயோத்யையைக் கைகேயிக்குக் கொடுத்ததும் காட்டிலே தரையிலே கிடக்கைக்கு. (கரு)

தனக்கடிமை பட்டது தானறியானேலும்
மனத்தடைய வைப்பதாம்மாலை - வனத்திடரை
ஏரியாம்வண்ண மியற்றுமிது வல்லால்
மாரியார் பெய்கிற்பார் மற்று. (கசா)

ப-உ.—தனக்கு - தனக்கு, அடிமை-தாஸ்யமானது, பட்டது - ஸம்பந்தித்தது (என்னுமிடத்தை), தான் - ஸ்வயம், அறியானேலும் - தெரிந்துகொள்ளாமல் போனாலும், மாலை - ஸர்வேஸ்வரனை,

மனத்து - மநஸ்ஸிலே, அடைய - புகும்படி, வைப்பது - ஸ்திரப்படுத்துவது, ஆம் - இஷ்டஸித்திக்குப்போரும். வனம் - காடெழுந்த, திடரை - மேட்டை, ஏரியாம்வண்ணம் - தடாகமாகும்படி, இயற்றும் - யத்நம்பண்ணுகிற, இதுவல்லால் - இந்த ப்ரகாரமல்லாமல், மற்று - அதுக்குமேலே, மாரி - மழையை, யார் - எவர், பெய்கிற்பார் - பெய்யப்பண்ணுவர்கள். (கசு)

வ்யா.—பதினாறும்பாட்டு.—(தனக்கடிமையித்யாதி) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம் - ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்திதம்" என்னும்படியே விசதமாக வறியானாகிலும். (மனத்தித்யாதி) "யத்யதாசரதிஶ்ரேஷ்ட: - யத்யதாசரதிஶ்ரேஷ்ட:, என்னும்படியாகிலும் ஸர்வேஸ்வரனை ஹ்ருதயத்திலேவைப்பதாம். (வனத்திடரித்யாதி) காட்டில் திடரைக்கல்லிக் குளமாக்குமதொழிய வர்ஷத்தை இவனாலே பெய்விக்கப்போமோ. இத்தால் ருசிமாத்ரம் இவன் தலையிலேயுண்டாமித்தனையொழிய ப்ராப்தி இவனாலே உண்டாக்கிக் கொள்ளப்போமோ என்றதாயிற்று. அன்றிக்கே, ஏரியாம் வண்ணமியற்றுமது, மற்று வர்ஷிப்பிக்குமது, இரண்டும்செய்யப்போமோ வென்னவுமாம். ருச்யுத்பாதகனுந் தானே, ப்ராப்தியைப்பண்ணிக் கொடுப்பானுந் தானே யென்னவுமாம். (கசு)

அரு.—பதினாறும்பாட்டு.—அறியானாகிலும் - தனக்குசேஷத்வ முண்டென்று சேதநனறியானாகிலும். இரண்டு மவனையல்லால் வேறு ஆர்செய்வார், ஒருத்தர்க்குப் போதாதென்றபடி. இந்த வர்த்தத்துக்கு, "மநத்தடையவைப்பாதாம்" என்று க்ஷேபம்; வைக்கமாட்டாரென்றபடி. மூந்தினவர்த்தத்துக்கு, "வைப்பதாம்" வைக்கலாமென்றபடி; இரண்டாமர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்திலே ஏறிடுகிறார் (ருச்யுத்பாதகனுமித்யாதி). (கசு)

மற்றாரியலாவார் வானவர்கோன் மாமலரோன்
சுற்றும் வணங்கும் தொழிலானை - ஒற்றைப்
பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று, மாலைக்
குறையிரந்து தான்முடித்தான் கொண்டு. (கஎ)

ப-உ.—வானவர் - தேவர்களுக்கு, கோன் - ஸ்வாமியான இந்த்ரன், மா - ஸ்லாக்யமான, மலரோன் - கமலத்தில் வஸிக்கிற ப்ரஹ்மா இவர்கள், சுற்றும் - நாற்புறங்களிலும், வணங்கும் - நமஸ்கரிக்கும்படியான, தொழிலானை - சேஷ்டிதங்களையுடையவனை, ஒற்றை- ஒன்றான, பிறை - கலையையுடைய சந்த்ரன், இருந்த - வாஸம்பண்ணுகிற, செம் - சிவந்த, சடையான் - ஜடையையுடைய ருத்ரன், மாலை - ஸ்ரியஃபதியை, பின்சென்று - அநுஸரித்து, தான் - ஸ்வயம், இரந்துகொண்டு - யாசித்துக்கொண்டு, குறை - ந்யூநதையை, முடித்தான் - நிறைவேற்றிக்கொண்டான். மற்று - அந்தஸ்ரியஃபதியைக் காட்டிலும் வேறான, ஆர் - எவர், இயலாவார் - ஆஸ்ரயிக்க யோக்யராவர்கள். (கஎ)

வ்யா.—அவ.—பதினேழாம்பாட்டு.—(மற்றார்) இவனே ஆஸ்ரயணீயனென்பா னென்னென்னில்; வேறொருவரில்லாமை யென்கிறது.

(மற்றாரியலாவார்) மற்றாஸ்ரயணீயராவாரார். (வானவரித்யாதி) லோகத்தில் ப்ரதாநனான இந்த்ரனோடேகூடின ப்ரஹ்மாதிகளிறே. அவர்களுமவனை ஆஸ்ரயித்திறே தந்தாமுடைய அபிமதங்கள் பெறுகிறது. இந்த்ரன்,ப்ரஹ்மா, நேர்கொடு நேராஸ்ரயிக்கப்போகாதே பாடே பக்கேசென்று வணங்குமாஸ்ரயணப்ரகாரங்களை யுடையனானவனை. ஈஸ்வரனுடைய சேஷ்டிதங்களை யவர்கள் சுற்றி வணங்குவாரென்னவுமாம். (ஒற்றைப்பிறையித்யாதி) சடையிலே பிறையைத் தரித்தானாய் ஸுகப்ரதாநனான ருத்ரன் பின்சென்று-அநுவர்த்தித்து. (மாலை) ஸர்வேஸ்வரனை. (கொண்டு) ஹ்ருதயத்திலேகொண்டு. (குறையிரந்து) குறைகளையிரந்து. (தான்முடித்தான்) தன்னுடைய அபேக்ஷிதங்களைப் பெற்றான். (கஎ)

கொண்டதுலகம் குறளுருவாய்க் கோளரியாய்
ஒண்திறலோன் மார்வத் துகிர்வைத்தது - உண்டதுவும்
தான்கடந்த வேழுலகே தாமரைக்கண் மாலொருநாள்
வான்கடந்தான் செய்த வழக்கு. (கஅ)

ப-உ.—வான் - ஆகாசத்தை, கடந்தான் - அதிக்ரமித்த (அபரிச்சேத்யனான), தாமரை - கமலம்போன்ற, கண் - நேத்ரங்களையுடைய, மால் - ஸர்வேஸ்வரன், குறள் - சிறிதான, உருவாய் - திரு

மேனியையுடையவனாய், உலகம் - லோகத்தை, கொண்டதுவும் - ஆக்ரமித்ததும், கோள் - மிடுக்கையுடைய, அரியாய் - ஸிம்ஹமாய், ஒண் - அழகிய, திறலோன் - பலத்தையுடைய ஹிரண்யகசிபுவினுடைய, மார்வத்து - மார்விலே, உகிர் - நகங்களை, வைத்ததுவும் - வைத்துக்கிண்டதும், ஒருநாள் - ஒருகாலத்தில், தான் - ஸ்வயம், கடந்த - அளந்த, ஏழுலகு - ஸப்தலோகங்களை, உண்டதுவும்-அமுதுசெய்ததுவுமான இவைகள், செய்த - அநுஷ்டித்த, வழக்கு - ந்யாயங்கள். (ப்ராப்தங்கள்). (கஅ)

வ்யா.—அவ.—பதினெட்டாம்பாட்டு.—(கொண்டது) அதாவது-இவன் ஜகத்ரக்ஷணம் பண்ணும்படிசொல்லுகிறது.

(குறளுருவாய்க்கொண்டதுகலம்) ஸ்ரீவாமனனாய் லோக மளந்துகொண்டது. (கோளரிஇத்யாதி) கைதொட்டு ஆஶ்ரிதவிரோதிகளைப் போக்கும்படி. (தான்கடந்த வேழுலகையுண்டதுவும்) தன் திருவடிகளிலே அடங்கின லோகங்களையே திருவயிற்றிலே வைத்ததுவும். (தாமரைக்கண்மால்) புண்டரீகாக்ஷனான ஈஶ்வரன். (ஒருநாள்வான் கடந்தான்) நித்யஸூரிகளுக் கவ்வருகானவன். ஸ்வர்க்கத்தை யளந்தவனென்றுமாம். (செய்தவழக்கு)தன்னுடைமையை ரக்ஷிக்க ப்ராப்தமிறே. (கஅ)

**வழக்கன்று கண்டாய் வலிசகடம் செற்றாய்**
**வழக்கென்று நீமதிக்க வேண்டா - குழக்கன்று**
**தீவிளவின் காய்க்கெறிந்த தீமை திருமாலே**
**பார்விளங்கச் செய்தாய் பழி.** (கசு)

ப-உ.—திருமாலே - ஶ்ரிய:பதியே! வலி - பலத்தையுடைய, சகடம் - சகடாஸுரனை, செற்றாய் - கொன்றாய்; (அது) வழக்கு-ந்யாயம், அன்றுகண்டாய் - ஆகாதுகிடாய்; வழக்கென்று - ந்யாயமென்று, நீ - நீ, மதிக்கவேண்டா - எண்ணவேண்டா; குழம் - அழகிய, கன்று - வத்ஸாஸுரனை, தீ - கொடிய, விளவின்-விளாமரத்தினுடைய, காய்க்கு - காய்க்கு (காய்விழும்படி), எறிந்த-வீசிப்போகட்ட, தீமை - கடும் நடத்தையை, பார் - பூமியிலே, விளங்க - ப்ரகாசிக்கும்படி, பழி - தப்பாக, செய்தாய் - அநுஷ்டித்தாய். (கசு)

வ்யா.—அவ.—பத்தொன்பதாம்பாட்டு.—(வழக்கன்று)நீ ஜகத்ரக்ஷணம் பண்ணுகிறது பழியாய்விட்டது.

(வலிசகடஞ்செற்றாய் வழக்கன்றுகண்டாய்) பிள்ளையாயிருந்து பெரியசகடத்தை முறித்ததும் வழக்கன்று. அது செய்தோமிறே யென்னில், இதிறேநானும் வேண்டாவென்கிறது. (வழக்கென்று நீ மதிக்கவேண்டா) இது வழக்கென்று நீ புத்திபண்ணியிருக்கவேண்டா. (குழக்கன்றித்யாதி) அஸுரனுனகன்றும் விளாவான அஸுரனும் தன்னிலேயொத்து உள்ளறிந்தவுன்னை நலிந்ததாகில் செய்வதென்னென்று பயப்படுகிறார். (திருமாலே) இருவருங்கூட விருக்கவன்றோதகுவது. (பாரித்யாதி) பூமியடங்கலும் ப்ரகாசிக்கும்படி பழிசெய்தாய். விபூதியில் ஏகதேசத்தை ரக்ஷிக்கப்புக்கு அவ்விபூதியையும் அழிக்கப்பார்த்தாய். (௧௯)

அரு.—பத்தொன்பதாம்பாட்டு.—மேலிற்பதத்துக் கவதாரிகை (அதுசெய்தோமிறே இத்யாதி). தனக்கொரு ஹாநிவந்தால் அவ்விபூதியுமழியுமென்றபடி இது அவன்செய்த பழிபாவது. (௧௯)

**பழிபாவம் கையகற்றிப் பல்கா லும் நின்னை**
**வழிவாழ்வார் வாழ்வரா மாதோ - வழுவின்றி**
**நாரணன்றன் நாமங்கள் நன்குணர்ந்து நன்கேத்தும்**
**காரணங்கள் தாமுடையார் தாம்.** (௨0)

ப-உ.—பழி - அபுத்தி பூர்வமாகச்செய்யும் தப்பையும், பாவம் - புத்தி பூர்வமாசச்செய்யும் தப்பையும், கையகற்றி - கைவிட்டு, பல்காலும், ஸர்வகாலமும், வழி - சாஸ்த்ரமார்க்கத்திலிருந்து, நின்னை - உன்னை, வாழ்வார்-போக்யமாக அநுபவிப்பார்களும், வழுவு - ஒழிவு, இன்றி - இல்லாமல், நாரணன்தன் - ஸர்வசேஷியினுடைய, நாமங்கள் - திருநாமங்களை, நன்கு - செவ்வையாய், உணர்ந்து - அறிந்து, நன்கு - அழகியதாய், ஏத்தும் - ஸ்துதிக்கைக்கு, காரணங்கள்தாம்- ஹேதுக்களை, தாம் - தாங்கள், உடையார் - பெறறவர்களும், வாழ்வராம் - மேன்மேல் ஸுகத்தை யநுபவிப்பர்கள். மாதோ - என்பது அசை. (௨0)

வ்யா.—அவ.—இருபதாம்பாட்டு.—(பழிபாவம்) ஜகத்ரக்ஷணத்தை யநுஸந்தித்து அவனை யாஸ்ரயித்தவர்களென்றோ ஆழ்வார்களென்கிறது.

(பழிபாவங்கையகற்றி) அடியுண்டாயும் அடியின்றிக்கேயுமுள்ள விரோதங்களைப் போக்கி. (பல்காலுமித்யாதி) என்றுமுன்னை யாஸ்ர

யித்துவாழ்வார் வாழ்ந்தேபோவர். "நஸுவாஹ்யே தவஸு - நஸுகால்லப்யதேஸுகம்" என்கிற திவணேயாகாதே. மாதோவென்பது இடைச்சொல்லு. (வழுவித்யாதி) வழுவின்றிக்கேயிருக்கிற நாராயணனுடைய திருநாமங்களை பக்தியாலேயுணர்ந்து நன்றாகவேத்தும். (காரணங்கள் தாமுடையார்தாம்) காரணங்கள், ஹேதுக்கள். ஏத்துகைக்கடியான பக்திருசி, ஆநுகூல்யம், பகவத்கடாக்ஷம், ஸுக்ருதம். "தாரணங்கள் தாமுடையார்" என்றபோது தாரணமென்று த்ருதியுடையாரென்றபடி. (உ0)

அரு.—இருபதாம்பாட்டு.—ஸுகத்துக்கநந்தரம் துக்கமென்கிற ந்யாயம் இங்கில்லையாகாதே என்கிறது; முடியவாழ்வேயாயிருக்கும் பகவத்ஸமாஶ்ரயணமென்றபடி. இடைச்சொல்பாத பூரணமாய் அவ்யயமென்றபடி. (உ0)

**தாமுளரே தம்முள்ள முள்ளுளதே, தாமரையின்**
**பூவுளதே யேத்தும் பொழுதுண்டே - வாமன்**
**திருமருவு தாள்மருவு சென்னியரே, செவ்வே**
**அருநரகம் சேர்வ தரிது. (உக)**

ப-உ.—தாம் - (கர்த்தாவான) தாங்கள், உளரே - இருந்தார்களே; தம் - தங்களுடைய, உள்ளம் - (கரணமான) மநஸ்ஸு, உள் - சரீரத்துக்குள்ளே, உளதே - இருந்ததே; தாமரையின்பூ - உபகரணமான) கமலபுஷ்பம், உளதே - இருந்ததே; ஏத்தும் - ஸ்துதிக்கைக்கு, பொழுது - காலம், உண்டே - இருந்ததே; வாமன் - குணாதிகனை ஸர்வேஶ்வரனுடைய, திரு - ஐஶ்வர்யத்தோடு, மருவு - கூடியிருக்கிற, தாள் - திருவடிகளை, மருவு - கிட்டும்படியான, சென்னியரே - தலையையுடையராயிருந்தார்களே; (இப்படி இருக்க) செவ்வே-நேராக, அரு - க்ரூரமான, நரகம்-நரகத்தை, சேர்வது - அடைவது, அரிது - துர்லபம். (உக)

வ்யா.—அவ.—இருபத்தோராம்பாட்டு.—(தாமுளரே) ஏத்தும்போது தானுண்டாகவேணுமேயென்னில்;

(தாமுளரே) இவன்தான் தன்னையுண்டாக்க வேண்டியிருந்ததோ? 'வஹவஷேவசூதாஸஹநு ஹஸ்தவாஷாஷிஸம்யதா। விஷித்ரா ஷேஹஸம்பத்திரீஶ்வராயநிவேஷிதும்-பூர்வமேவக்ருதாப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா। விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும்"

அன்றோ. (தம்முள்ளமுள்ளுளதே) தனக்குப் புறம்பன்றே ஹ்ரு தயம். (தாமரையின்பூவுளதே) இவனுடைய விபூதிக்குப்புறம்பே தேடிப்போகவேண்டாவே பூ. (ஏத்தும் பொழுதுண்டே) ஏத்துகைக்குக்காலம் ஈஸ்வரனேயுண்டாக்கினனே. (வாமனித்யாதி) எல்லார்தலையிலும் காலைவைத்தவனைத் தன்னுடைமையைப் பெறுகைக்கு அர்த்தியுமாயிருந்தவனுடைய ஐஸ்வர்யம் பொருந்தின திருவடிகளைவைக்க விலக்காத தொருதலையுமுடையரே. (செவ்வே அருநரகஞ்சேர்வதரிது) இப்படி உபகரணங்கள் குறைவற்றிருக்கச் செய்தே நரகத்துக்கு நேர்வழிகிடையாது. (உக)

அரிய தெளி தாகும் ஆற்றலால் மாற்றி
பெருக முயல்வாரைப் பெற்றால் - கரியதோர்
வெண்கோட்டு மால்யானை வென்றி முடித் தன்றே
தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து. (உஉ)

ப-உ.—ஆற்றலால் - ஸர்வ சக்தியோகத்தால், மாற்றி - (சேதநனுடைய ப்ரவ்ருத்திகளை) வேறுபடுத்தி, பெருக - மிகவும், முயல்வாரை - யத்நம்பண்ணும் மஹாபுருஷரை, பெற்றால் - அடைந்தால், அரியது - துர்லபமான மோக்ஷம், எளிதாகும் - ஸுலபமாகும்; கரியது - கறுத்தும், வெண் - வெளுத்த, கோட்டு - கொம்புகளையுடையதுமான, ஓர் - அத்விதீயமான; மால் - பெருத்த, யானை - ஆனையானது, தண் - குளிர்ந்த, கோட்டு - மடுவின் கரையிலே, மா - ஸ்ரேஷ்டமான, மலரால், தாமரைப்பூவினால், தாழ்ந்தன்றே - அடிமைசெய்தன்றே, வென்றி - ஜயத்தை, முடித்து - முடித்தது (பெற்றது). (உஉ)

வ்யா.—அவ.—இருபத்திரண்டாம்பாட்டு.—(அரியது) ஸத்தையேபிடித்து நோக்கிக்கொண்டு போருவானொரு ஸமாஸ்ரயணீயனைப் பெற்றால் எல்லாம் ஸுலபமிறே என்கிறது.

(அரியதெளிதாகும்) அரிதாவது-பகவல்லாபமும், பகவத்பஜநமும் - இவை இரண்டு மெளிதாகும். (ஆற்றலாலித்யாதி) இவன் தலையிலே ஒரு தேவையிடுகிறதென்; எல்லாம் நாமே ஏறிட்டுக்கொண்டு செய்வோமென்பானொரு ஸர்வசக்தியைப்பெற்றால், ஸுகலாபம் ஸம்மதானபின்பு எல்லாவற்றையு மீஸ்வரன் பக்கலிலே விடுகிற

தென்; நாமே பஜிப்போமென்பானொரு அதிகாரியைப்பெற்றாலென்றுமாம். மேலிதுக்கு த்ருஷ்டாந்தம் (கரியதோரித்யாதி). கறுத்தவடிவையும் வெளுத்த கொம்பையுமுடைத்தான பெரிய ஆனை. (தண்கோட்டித்யாதி) கோட்டென்று கரையிலே என்கிறது. "தண்தோட்டுமாமலர்" என்று பாடமானபோது, இதழையுடைத்தான பெரிய புஷ்பத்தாலே என்கிறது. (மாமலரால் தாழ்ந்து வென்றி முடித்தன்றே) புஷ்பத்தைக்கொண்டு திருவடிகளிலே பணிந்தன்றோ ஆனைவென்றியை முடித்தது; விஜயத்தைப்பெற்றது அவன் ப்ரஸாதத்தாலேயன்றோ வென்கிறது. (௨௨)

அரு.—இருபத்திரண்டாம்பாட்டு.—ஆற்றலால்மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்றால் - தன் மிடுக்காலே சேதநனிடத்திலே உண்டாகவேண்டும் அத்வேஷாதிமுதலான ப்ரயத்நங்களை யெல்லாம், மாற்றி, இவையெல்லாந் தானே ஏறிட்டுக்கொண்டு, பெருக - மிகவும் யத்நம்பண்ணு மீஸ்வரனைப்பெற்றால் என்னுதல்; தன் மிடுக்காலே ஈஸ்வரயத்நத்தை மாற்றி, மிகவும் ஸ்வயத்நம்பண்ணும் சேதநனைப்பெற்றா லென்னுதல். இத்தால் பக்திப்ரபத்திகளைச் சொல்லுகிறது. (தாழ்ந்தன்றே) தாழவில்லையென்று ப்ரபத்திபரம்; தாழ்ந்தன்றே என்று பக்திபரம். கரையிலே-மடுவின் கரையிலே. (௨௨)

தாழ்ந்து வரங்கொண்டு தக்க வகைகளால்
வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் - தாழ்ந்த
விளங் கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய், ஞாலம்
அளந்தடிக் கீழ்க்கொண்ட வவன். (௨௩)

ப-உ.—தாழ்ந்த - தொங்கியிருந்த, விளம்-(அஸுரனான)விளாமரத்தினுடைய, கனிக்கு - பழத்தைக்குறித்து, கன்று - வத்ஸாஸுரனை, எறிந்து - வீசியெறிந்தவனாகட்டு, வேற்றுருவாய் - உதாரனானதன் ரூபத்தைக்காட்டிலும் வேறுபட்ட யாசகரூபத்தை யுடையனாய்க் கொண்டு, ஞாலம் - பூமியை, அளந்து - ஆக்ரமித்து, அடிக்கீழ் - திருப்பாதத்தின்கீழே, கொண்ட - ஸ்வீகரித்த, அவன் - அந்தஸ்ரியபதி, வரம் - அநுக்ரஹத்தை, கொண்டு - ஸம்பாதித்து, தக்க - தகுந்த, வகைகளால் - ப்ரகாரங்களாலே, தாழ்ந்து - வணங்கி, வாழ்ந்து - இஷ்டத்தையடைந்து, கழிவாரை - மேன்மேல்ஸுகத்தை யாசைப்பட்டவர்களை, வாழ்விக்கும் - ரக்ஷிக்கும். (௨௩)

வ்யா.—அவ.—இருபத்துமூன்றாம்பாட்டு.—தன்னை யாஸ்ரயிப் பார்க்கு ப்ரதிபந்தகத்தையும் போக்கித் தானும் ஸுலபனென் கிறது.

(தாழ்ந்தித்யாதி) வரங்கொண்டு - அவன் ப்ரஸாதத்தைக்கொ ண்டு, சாஸ்த்ரங்களில் சொல்லுகிறவகைகளாலே தாழ்ந்து - ஆஸ்ர யித்து, அதுதானே வாழ்வாகக் காலத்தைப் போக்குவாரை ரக்ஷிக் கும். ப்ரதிபந்தகஞ் செய்வதென்னென்னில் தாழ்ந்த விளங்கனிபட் டது படுமத்தனை. (தாழ்ந்தவித்யாதி) "வேற்றுருவாய்" என்கிறது - சிறுகாலைக் காட்டி பெரியவடிவைக் கொண்டளந்தது. ஸ்ரியஃபதி யானவன் அர்த்தியாய் நின்றதென்றுமாம். பூமியையளந்து தன் திருவடிகளிலே யிட்டுக்கொண்டவன் வாழ்விக்கும். (உரு)

**அவன் கண்டாய் நன்னெஞ்சே யாருளும் கேடும்**
**அவன் கண்டா யைம்புலனாய் நின்றான்-அவன்கண்டாய்**
**காற்றுத்தீ நீர்வான் கருவரைமண் காரோதச்**
**சீற்றத்தீ யாவானும் சென்று.** (உச)

ப-உ.—நல் - ஸ்வாதீனமான, நெஞ்சே - மநஸ்ஸே! ஆர்-பூர்ண மான, அருளும்-க்ருபையினாலடையத்தக்க போகத்துக்கும், கேடும்- ஸம்ஸாரத்துக்கும், அவன் கண்டாய் - அந்த ஸர்வேஸ்வரனே நிர் வாஹகன்கிடாய். ஐம்புலனாய் - ஐந்து இந்த்ரியங்களுக்கும் ஸ்வாமி யாய், நின்றான் - இருக்கிறவன், அவன்கண்டாய் - அந்த ஸ்ரியஃபதி கிடாய். காற்று - வாயு, தீ - நெருப்பு, நீர் - ஜலம், வான் - ஆகா சம், கரு - பெரிய, வரை - மலை, மண் - பூமி, கார் - கறுத்த, ஓதம் - கடலை, சீற்றம் - கோபிக்கக்கடவ, தீ - படபாக்நி, இவைகளுக்கு, ஆவானும் - நிர்வாஹகனுவானும், அவன்கண்டாய் - அந்த ஸர்வேஸ் வரன்கிடாய். (ஆகையால்), சென்று-(அவனை) கிட்டி, (ஆஸ்ரயி). ()

வ்யா.—இருபத்துநாலாம்பாட்டு.—(அவனித்யாதி) ஸம்ஸார ப்ரவர்த்தகனுமவனே என்கிறது. "ஸாத்விகாஸ்சைவயே பாவா ராஜஸாஸ்தாமஸாஸ்சயே - மத்த ஏவேதி தாந்வித்தி" "மாமேவ யேப்ரபத்யந்தே மாயாமேதாம்தரந்திதே" என்கிறபடியே அவனைப்பற்றி ஸம்ஸாரபந்த மறுக்கவே ணுமென்கிறது. "காரோதச்சீற்றத்தீ" என்று (வடவை) படவை யைச்சொல்லுகிறது. (உச)

அரு.—இருபத்துநாலாம்பாட்டு.— (ஆரருளும்) "வடியிதஂ உயஜொநஜொநாஃ - கடயிதுங்தயமாநமநாஃ" என்கிறபடியே, போக மோக்ஷசூந்யராயிருக்கிற சேதநரைக் கரணகளேபரங்களைக்கொடுத்துபோக மோக்ஷபாகிகளாக்குகை ஆரருள்; கேடு - மஹாப்ரளயம். இவை இத்தனைக்கும் நிர்வாஹகனுகையாலே, சென்று - அவனைக்கிட்டி - உஜ்ஜீவியென்று க்ரியை அத்யாஹார்யம். (உச)

சென்ற திலங்கைமேல் செவ்வே தன் சீற்றத்தால்
கொன்ற திராவணனைக் கூறுங்கால் - நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே, விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து. (உரு)

ப-உ.—விண்ணவர்தம் - நித்யஸூரிகளுடைய, வாய் - வாக்கினுலே, ஓங்கு - ஸ்துதிக்கப்பட்ட, தொல் - ஸ்வாபாவிகமான, புகழான் - கீர்த்தியையுடைய ஸர்வேஶ்வரன், வந்து - அவதரித்து, செவ்வே - நேராக, சென்றது - நடந்தது, இலங்கைமேல் - லங்கையிலே; தன் - தன்னுடைய, சீற்றத்தால் - கோபத்தினுல், கொன்றது - முடித்தது, இராவணனை - ராவணுஸுரனை; கூறுங்கால் - பேசப்புக்கால், நின்றதுவும் - நின்றருளினதும், வேய் - மூங்கில், ஓங்கு, வளர்ந்திருக்கிற, தண் - குளிர்ந்த, சாரல் - மலைப்பக்கங்களையுடைய, வேங்கடமே - திருமலையிலே. (உரு)

வ்யா.—அவ.—இருபத்தைந்தாம் பாட்டு.— (சென்றதித்யாதி) உத்பத்யாதிகளேயோ? உத்பந்நங்களானுல் ப்ரதிபந்தகங்களைப் போக்குவானுமவனென்கிறது.

(சென்றதிலங்கைமேல்செவ்வே) ஸங்கல்பத்தாலன்றியே நேரே கால்நடையே லங்கையிலே நடந்தது. (தன்சீற்றமித்யாதி) கோபம் தானிட்ட வழக்காயிருக்கிறவன் தானே கோபத்தின் வழக்காய் முடித்தது ராவணனை. (கூறுங்கால்)பேசுங்கால். (விண்ணவரித்யாதி) நித்யஸூரிகள் ஸ்துதிக்கப்படா நின்ற பழைய புகழையுடையவன். ஸ்ரீராமாவதாரமாகையாலே ராவண வதஸமநந்தரம் ப்ரஹ்மாதிகளாலே ஸ்துதிக்கப்படுகிற புகழையுடையவனென்றுமாம். (விண்ணவர் தம்வாயோங்கு தொல்புகழான்வந்து நின்றதுவும் வேயோங்கு தண் சாரல் வேங்கடமே) அவதாரத்துக்குப் பிற்பாடரானவர்க ளிழக்க

வொண்ணுதென்று அவர்கள் விரோதியைப்போக்குகைக்காகத் திருமலையிலே வந்துநின்றது. (உரு)

அரு.—இருபத்தைந்தாம்பாட்டு.—* சாபம் - வில்லு. வில்லிருக்கச் செய்தேயும் கோபத்தாலே கொன்றானென்றபடி. (உரு)

வந்தித் தவனை வழிநின்ற வைம்பூதம்
ஐந்து மகத் தடக்கி யார்வமாய் - உந்திப்
படியமரர் வேலையான் பண்டமரர்க் கீந்த
படியமரர் வாழும் பதி. (உசு)

ப-உ.—வழி - ஸந்மார்க்கத்துக்கு, நின்ற-விரோதியாயிருக்கிற, ஐம்பூதம் - பஞ்சபூதங்களையும், ஐந்தும் - பஞ்சேந்த்ரியங்களையும், அகத்து - சரீரத்துக்குள்ளே, அடக்கி - அமைத்து, ஆர்வமாய் - ப்ரீதியுடையராய்க்கொண்டு, அவனை-அந்த ஸர்வேஸ்வரனை, வந்தித்து-ஆஸ்ரயித்து, உந்தி-முற்கோலிவந்து, படி-ஆஸ்ரயிக்கும்படி, அமரர் - (ப்ரஹ்மாதி) தேவர்களுக்காக, வேலையான் - திருப்பாற்கடலிலே பள்ளிகொண்ட ஸர்வேஸ்வரன், பண்டு - அநாதியான, அமரர்க்கு - தேவர்களான நித்யஸூரிகளுக்கு, ஈய்ந்த-கொடுத்தது, படி - பூமியிலுள்ள, அமரர் - தேவதைகளான ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழும் - வாழுகிற, பதி - திருமலை. உசு)

வ்யா.—அவ.—இருபத்தாறும்பாட்டு.—(வந்தித்து) திருமலை ப்ரஸ்துதமாகையாலே, பின்னையுந்திருமலைக்குள்ளே ப்ரஸ்துதஞ் சொல்லுகிறது.

(வழிநின்ற வித்யாதி) பகவத்ப்ராப்தி விரோதியானபூதங்களைந்தையும் அவித்து. (ஆர்வமாய்)அபிநிவேசத்தையுடையராய். (அவனை வந்தித்து)அவனையாஸ்ரயித்து. (உந்திப்படியமரர்வேலையான்) * ஸஹஸோஹமிகயா - அஹமஹமிகயா - ப்ரஹ்மாதிகளாஸ்ரயிக்கத்திருப்பாற்கடலிலே கண்வளர்ந் தருளுகிறவன். (பண்டமரர்க்கீந்த) நித்யஸூரிகளுக்குப் பரிசில் கொடுத்தது. படி - பூமி, (படியமரர்வாழும்) பூமியில் ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுகிறதிருமலை. (உசு)

அரு.—இருபத்தாறும்பாட்டு.—அவனை வந்தித் திருக்கிறபடியமரர்வாழ்வுறே; பதியானது - திருமலையானது. உந்திப்படியமரர்

* இந்த பதம் வ்யாக்யாநத்தில் காணவில்லை,

வேலையான் - திருப்பாற்கடல்நாதன். நித்யஸூரிகளுக்கு உபகார மாகக்கொடுத்தது. (உசு)

**பதியமைந்து நாடிப் பருத்தெழுந்த சிந்தை**
**மதியுரிஞ்சி வான்முகடு நோக்கி - கதிமிகுத்தங்**
**கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே**
**மால்தேடி யோடும் மனம். (உஎ)**

ப-உ.—பதி - திருமலையிலே, அமைந்து - பொருந்தி, நாடி - விசாரித்து, பருத்து - வ்யாபித்து, எழுந்த-கிளம்பின, சிந்தை - மநோரதத்தையுடைத்தாய், மதி - சந்த்ரனை, உரிஞ்சி - கிட்டி, வான்-ஆகாசத்துக்கு, முகடு - உச்சியான (அண்டபித்தியை), நோக்கி - பார்த்து, மால் - பரிபூர்ணனான ஸர்வேஶ்வரனை, தேடி - ஆராய்ந்து,ஓடும்-செல்லுகிற, மனம் - மநஸ்ஸானது, கதிமிகுத்து - சீக்ரகமநத்தையுடைத்தாய்க் கொண்டு, அம் - அழகிய, கோல் - கொம்பை, தேடி-ஆராய்ந்து, ஓடும் - செல்லுகிற, கொழுந்ததேபோன்றதே - கொடிபோலிராநின்றதே. (உஎ)

வ்யா.—அவ.—இருபத்தேழாம்பாட்டு.—(பதியமைந்து நாடி) கீழ்திருமலையில் நின்றபடியையநுஸந்தித்தார். அங்குநினைத்த பரிமாற்றங் கிடையாமையாலே நினைத்தபடிபரிமாறலாம் பரம பதத்திலிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடாநின்றதென்னெஞ் சென்கிறார்.

(பதியமைந்தித்யாதி)திருமலையிலே பொருந்தியாராய்ந்து விஸ்த்ருதமாய்க் கிளர்ந்த மநோரதத்தையுடைத்தாய். (மதியுரிஞ்சி) சந்த்ரனைக்கடந்து - (வான்முகடுநோக்கி) அண்டபித்தியை நோக்கி. (மால் தேடியோடும் மனம்)கரைகட்டாக்காவேரிபோலே ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனைத் தேடியோடாநின்ற நெஞ்சு. (கதிமிகுத்தித்யாதி) வேகத்தையுடைத்தாய் - அழகிய தோர்கொம்பைத்தேடா நின்ற கொடிபோன்றிருந்தது."கதிர்"என்று பாடமான போது, ஒளியையுடைத்தானகொடி. (உஎ)

அரு.—இருபத்தேழாம்பாட்டு.—(கதிமிகுத்து) கதி - கதியாய், வேகம் மிக்கென்றபடி. (உஎ)

**மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும்**
**நினைப்பரிய நீளரங்கத் துள்ளான் - எனைப்பலரும்**
**தேவாதி தேவனெனப் படுவான், முன்னொருநாள்**
**மாவாய் பிளந்த மகன்.** (உஅ)

ப-உ.—எனைப்பலரும்-பூஜ்யரெல்லாரும், தேவாதிதேவன்-நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியான பெரியவன்; எனப்படுவான்-என்றுசொல்லப்படா நிற்பனும், மா-பெரிய, கடலான் - க்ஷீராப்தியில் பள்ளிகொண்டவனும், முன்னொருநாள் - முன்பொருகாலத்தில், மா - குதிரையான கேசியினுடைய, வாய் - வாயை, கீண்ட - பிளந்த, மகன் - சிறுபிள்ளையாயும், மற்றும் - அதுக்குமேலே, நினைப்பரிய - நினைக்கைக்கு அஸாத்யமாய், நீள் - விசாலமான, அரங்கத்து - கோயிலில், உள்ளான் - நித்யவாஸம் பண்ணுகிறவனும், வேங்கடத்தான்-திருமலையை ஸ்தாநமாகவுடையனுமானவன், மனத்து - (என்) நெஞ்சிலே, உள்ளான் - நித்யவாஸம்பண்ணுகிறான். (உஅ)

வ்யா.—அவ.—இருபத்தெட்டாம்பாட்டு.—(மனத்துள்ளான்) இவர் அவன்பிரியாதநிலத்தைவிரும்பப்புக்கவாறே அவனிவருடைய மநஸ்ஸையே விரும்பாநின்றானென்கிறது.

(எனைப்பலருந் தேவாதி தேவனெனப்படுவான்) விவக்ஷித ரெல்லாம் * அயர்வறுமமரர்களதிபதியென்ன ப்ரஸித்தனானவன், ஜகத்ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து க்ருஷ்ணனாயவதரித்து விரோதிநிரஸநம்பண்ணி வருவதுபோவதாக வொண்ணாதென்று திருமலையிலே வந்து நின்ற தேவாதி தேவன், என்றும் பரிச்சேதிக்கப் போகாத பரப்பையுடைத்தான கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறவன், என்னெஞ்சை விரும்பிப்புறம்புபோகிறிலன். (உஅ)

அரு.—இருபத்தெட்டாம்பாட்டு.—எனை - எனையர், பூஜ்யர் - நினைப்பரிய, அவனுக்கும் உள்ளுக்கும் விசேஷணம். (உஅ)

**மகனாகக் கொண்டெடுத்தாள் மாண்பாய கொங்கை**
**அகனார வுண்பனென் றுண்டு - மகனைத்தாய்**
**தேறாத வண்ணம் திருத்தினாய் தென்னிலங்கை**
**நீறாகவெய் தழித்தாய் நீ.** (உகூ)

ப-உ.—தென் - ஸ்ப்ருஹணீயமான, இலங்கை - லங்கையை, நீறாக - சாம்பலாம்படி, எய்து - அடித்து, அழித்தாய் - நாசம்செய்தவனே! நீ - நீ, மகனாக-புத்ரனாக, கொண்டு - ஸ்நேஹம்பண்ணி, எடுத்தாள் - எடுத்த பூதனையினுடைய, மாண்பாய - அழகிய, கொங்கை - முலையை, அகன் - வயிறு, ஆர - நிறையும்படி, உண்பன் - அமுதுசெய்வேன்; என்று - இப்படி நினைத்து, உண்டு - அமுது செய்து, மகனே - பிள்ளையானஉன்னை, தாய் - மாதாவான யசோதைப்பிராட்டி, தேறாதவண்ணம் - விஸ்வஸியாதபடி, திருத்தினாய் - சிக்ஷித்தாய். (உக)

வ்யா.—அவ.—இருபத்தொன்பதாம்பாட்டு.—(மகனாக) க்ருஷ்ணாவதாரம் ப்ரஸ்துதமாகையாலே அதிலேசுழியாறுபடுகிறார்.

(மகனித்யாதி)பிள்ளையாக வெடுத்துத் தாயார்ஓசழக்காக வெடுக்குமாப்போலே எடுத்து நஞ்சாலே நிறைந்தத்தைப் பாலாலே நிறைத்ததாகப்பண்ணி அத்தாலே தர்சநீயமான கொங்கையை. (அகனித்யாதி) அவள்நிலையிதேயிவனது. அவள்முலைகொடுத்தல்லது தரியாளாய்நின்றாற்போலே இவனுமுண்டல்லது தரியானாய் வயிறாரவுண்பனென்றுண்டு. (மகனித்யாதி) மகனென்றாலும் தாயென்றாலும் க்ருஷ்ணன் பக்கலிலும் யசோதைப் பிராட்டி பக்கலிலும் நிற்கும்; புத்ரஸ்நேஹமென்றால் சக்ரவர்த்தி பக்கலிலே கிடக்குமாப்போலே. அவனும் விரும்பி முலையுண்ணாநிற்க இவளும் விரும்பி முலைகொடாநிற்கிலும்.பூதனைமடியிலேயிருந்தானாகக்கொண்டு துணுக்குத்துணுக்கென்னும்படியாகத்தாயாரைத் தொட்டுவிட்டாய்.(தென்னிலங்கை.) ஒருதாயானை மார்பிலேகையைவைத் துறங்கும்படி பண்ணின நீ. ''கீதி-ஹூ-ஒதாஂவதாகாஂயோவோகேஹூயதிவ்ரூஹ॥ கிஂநாஶ ஊ-ஆ-ஹூஂதஸ்ய - கீர்த்திபூதாம்பதாகாம் யோலோகேப்ரமயதிப்ரபு:। கிந்நாமதுர்லபம் தஸ்ய'' என்று சொல்லும்படிபண்ணினநீ - பருவம் நிரம்பி ஆயுதஶ்ரமங்களும் பண்ணிச் செய்தாய். பருவம்நிரம்புவதற்கு முன்னே இச்செயலைச் செய்தாயென்று. (உக)

அரு.—இருபத்தொன்பதாம்பாட்டு.—மாண்பு - அழகு. அகம் உள்ளாய்-வயிறாற. (தேறாதவண்ணம்) தன் மடியிலேயிருக்கச்செய்தேயும் பூதனைமடியிலே யிருக்கிறானாக அதிசங்கை பண்ணும்படி செய்தா யென்றபடி - ராவணவதம் பருவம் நிரம்பினபின்பு செய்த

செயலாகையாலே அவள் நிர்ப்பரையானாள். பெருமாள் விஜயகீர்த்தி முதலான குணங்களையுடையரா யிருப்பரோவென்ன; அருளிச்செய்கிறார். (கீர்த்தி-ரூ-ஏதாழ் - கீர்த்திபூதாம் இத்யாதி). நீருகவெய்த ழித்த நீ தேறுதவண்ணந்திருத்தினாய் என்றந்வயமாக்கி அருளிச் செய்கிறார் (பருவம் நிரம்பியித்யாதி). (உகூ)

நீயன் றுலகளந்தாய் நீண்ட திருமாலே
நீயன் றுலகிடந்தா யென்பரால் - நீயன்று
கா ரோத முன்கடைந்து பின்னடைத்தாய் மாகடலை
பேரோத மேனிப் பிரான். (௩௰)

ப-உ.—பேர் - பெரிய, ஓதம் - ஸமுத்ரத்தோடொத்த, மேனி-விக்ரஹத்தையுடைய, பிரான் - உபகாரகனான, நீண்ட - அபரிச்சிந்நனான, திருமாலே - ஶ்ரியஃபதியே! அன்று - (இந்த்ரன் நோவுபட்ட) அக்காலத்தில், நீ - நீ, உலகு - லோகத்தை, அளந்தாய் - ஆக்ரமித்தாய்: அன்று - ப்ரளயகாலத்தில், நீ - நீ, உலகு - பூமியை, இடந்தாய் - (அண்டபித்தியில் நின்றும்) பிரித்தெடுத்தாய்; அன்று - (இந்த்ரனை தூர்வாஸமுனிசபித்த) காலத்தில், நீ - நீ, முன் - முன்னே, கார்-கறுத்த, ஓதம் - ஸமுத்ரத்தை, கடைந்து-மதநம்பண்ணி, பின் - பின்பொருகாலத்தில், மா-பெரிய, கடலை-ஸமுத்ரத்தை, அடைத்தாய் - (அணையினால்) தடுத்தாய்; என்பர் - என்று (வைதிகர்) சொல்லுவர்கள். ஆல்-ஆச்சர்யம். (௩௰)

வ்யா.—அவ.—முப்பதாம்பாட்டு.—(நீயன்று) எல்லார்தலையிலும், ஒக்கத்திருவடிகளைவைத்த அவதாரத்தைச் சொல்லுகிறது.

(நீண்டதிருமாலே நீயன்றுலகளந்தாய்) அபரிச்சேத்யனாய் ஶ்ரியஃபதியான நீ பெறுதது பெற்றாற்போலே பூமியையளந்தாய். (நீயன்றித்யாதி) அதுக்கடியாக பூமியையிடந்தாய். (பேரோதமேனிப்பிரான் நீ அன்றுகாரோத முன்கடைந்து மாகடலைப் பின்னடைத்தாய்) பெரியகடல் வெள்ளம்போலே ஶ்ரமஹரமானவடிவை யுடையையாய் உபகாரகனானநீ, கறுத்த நிறத்தை யுடைத்தான கடலைமுற்படக் கடைந்து அது தன்னைப் பின்படைப்பதும் செய்தாய். "பேரோத மேனிப்பிரான்" என்று கடைகிறபோது ஒருகடலை யொருகடல் நின்று கடைந்தாற்போலே யிருக்கை. (௩௰)

பிரானென்று நாளும் பெரும்புலரி யென்றும்
குரா நற் செழும்போது கொண்டு - வராகத்
தணியுருவன் பாதம் பணியுமவர் கண்டீர்
மணியுருவங் காண்பார் மகிழ்ந்து. (௩௧)

ப-உ.—பிரானென்றும்-ஸ்வாமியே! என்றும், நாளும் - (பாழாய்க் கழிந்த) திநத்திலும், பெரும் - அழகிய, புலரியென்றும் - விடிவு (உண்டாவதே!) என்றும், (ஆதரத்துடன்), குரா - குராவென்னும் காட்டுமரத்தினுடைய, நல் - அழகிய, செழும் - பெருத்திருக்கிற, போது - புஷ்பங்களை, கொண்டு - ஸம்பாதித்து, வராகம்-பன்றியோடுஸத்ருஶமாய், அணி - அழகியதாயிருக்கிற, உருவன் - திருமேனியையுடையவனுடைய, பாதம் - திருவடிகளை, பணியுமவர்கண்டீர் - ஆஶ்ரயிக்குமவர்கள்கிடீர், மணி - ரத்நம்போல் ஶ்லாக்யமான, உருவம்-விக்ரஹத்தை, மகிழ்ந்து - உகந்து, காண்பார் - ஸாக்ஷாத் கரிப்பர்கள். (௩௧)

வ்யா.—அவ.—முப்பத்தோராம்பாட்டு.—(பிரானென்றும்) தன்னையே வணங்கும்படி பண்ணினவனையும் வணங்குகைக் கிடானகாலத்தையுங் கொண்டாடுகிறார்.

(நாளும் பிரானென்றும்) கைகழிந்துபோன வென்னைத் தன் பக்கலிலே ஆபிமுக்யம் பண்ணுவித்து ருசியைப்பிறப்பித்த உபகாரகனென்றும். (பெரும்புலரியென்றும் குராநற்செழும்போதுகொண்டு) குராவினுடைய நன்றாய்ச்செவ்வியையுடைத்தானபூவைக்கொண்டு. (வராகத்தித்யாதி) இன்னபுஷ்பங்கொண்டென்னை யாஶ்ரயிக்க வேணுமென்றிராதே, காட்டில் புஷ்பத்துக்கு ஸஜாதீயமான வடிவையுடையவன் திருவடிகளைப் பணியுமவர்கள். (மகிழ்ந்துமணியுருவங் காண்பார்) பலத்துக்கு பலமிறே. “ஸாஸாவம்கதர்வேயழ - ஸாஸாசம் கர்த்துமவ்யயம்” என்கிறபடியே ஸாதநதசையிலே இனிதாயிருக்கை. (௩௧)

அரு.—முப்பத்தோராம்பாட்டு.—“புலரி” என்று நாளாய், பெரும்புலரியென்று கொண்டாட்டம். (௩௧)

மகிழ்ந்தது சிந்தை திருமாலே, மற்றும்
மகிழ்ந்ததுன் பாதமே போற்றி - மகிழ்ந்த

தழலாழி சங்க மவை பாடி யாடும்
தொழிலாகம் சூழ்ந்து துணிந்து. (௩௨)

ப-உ.—திருமாலே - ஸ்ரியஃபதியே! சிந்தை - மநஸ்ஸு, துணிந்து - த்யாநத்தில் ஒருப்பட்டு, மகிழ்ந்தது - ப்ரீதியையடைந்தது; மற்றும்-வேறானவாகிந்த்ரியமும், உன்-உன்னுடைய, பாதமே-திருவடிகளையே, போற்றி - ஸ்தோத்ரம்பண்ணி, அழல் - (சத்ருக்கள் மேல்) நெருப்புவீசுகிற, ஆழி - சக்ரம், சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யம், அவை - அவ்விரண்டுகளை, பாடி - காநம்பண்ணி, மகிழ்ந்தது-ஸந்தோஷித்தது. ஆகம் - சரீரமானது, ஆடும் - நர்த்தநம் செய்கையாகிற, தொழில் - வ்யாபாரத்திலே, சூழ்ந்து - வ்யாபரித்து, மகிழ்ந்தது - உகந்தது. (௩௨)

வ்யா.—அவ.—முப்பத்திரண்டாம்பாட்டு.—(மகிழ்ந்தது) இவ்விஷயத்தில் நீர்செய்ததென்னென்னில்; மநோவாக்காயங்களங்கே ப்ரவணமாயிற்றென்கிறார்.

(திருமாலே சிந்தைசூழ்ந்து துணிந்து நின்பாதமேபோற்றி மகிழ்ந்தது) என்னுடைய மநஸ்தத்வம், மநோரதித்து-அத்யவஸித்து. ஸ்ரியஃபதியானவனுடைய திருவடிகளைப்போற்றி மகிழ்ந்தது. (மற்றும்) என்றது-வாக்கும்என் படி. (மகிழ்ந்ததழலாழிசங்கமவைபாடி) மிகவும் ப்ரதிபக்ஷத்திலே அக்நியுமிழாநின்ற திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்பாடி மகிழ்ந்தது. ஆகம் ஆடுகையாகிறதொழிலிலே மகிழ்ந்தது. மகிழ்கையே தொழிலாயிற்று. (௩௨)

அரு.—முப்பத்திரண்டாம்பாட்டு.—மற்றும் - மநஸ்ஸுக்குமற்றான-அநந்தரமான வாக்குமென்றபடி. (௩௨)

துணிந்தது சிந்தை துழாயலங்கல், அங்க
மணிந்தவன்பே ருள்ளத்துப் பல்கால் - பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல் விறல்வேங்கடவனையே
வாய்திறங்கள் சொல்லும் வகை. (௩௩)

ப-உ.—சிந்தை - மநஸ்ஸானது, துழாயலங்கல் - திருத்துழாய் மாலையை, அங்கம்-திருமேனியில்,அணிந்தவன் - பூண்டவனுடைய, பேர்-திருநாமங்களை, உள்ளத்து - த்யாநிக்க, துணிந்தது - நிச்சயித்

த்து; அங்கம் - சரீரமானது, பலகால் - ஸர்வகாலமும், பணிந்தது வும் - ஆஶ்ரயித்ததும்; வேய் - மூங்கில்களாலே, பிறங்கு - நிறைந்திருக்கிற, சாரல் - மலைப்பக்கங்களையுடைய, விறல் - பெருமையையுடைய, வேங்கடவனையே - திருமலைக்கு ஸ்வாமியானவனையே; வாய் - வாக்கு, திறங்கள் - (அவனுடைய) ஸ்வபாவங்களை, சொல் லும்வகை - சொல்லும் ப்ரகாரத்திலே, துணிந்தது - அத்யவ ஸித்தது. (ருரு)

வ்பா.—அவ.—முப்பத்துமூன்றாம்பாட்டு.—(துணிந்தது) மகிழ்ந்த மாத்ரமேயோ வேறொருவிடத்துக் சாகாதபடியாயிற் றென்கிறார்.

(துழாயலங்க லங்க மணிந்தவன் பேருள்ளத்துப்பலகால் சிந்தை துணிந்தது) திருத்துழாய்மாலையைத் திருமேனியிலே அணிந்தவனுடைய பேரைப் பலகாலு முள்ளுகையிலே சிந்தைதுணிந்தது. (அங்கம்பணிந்ததுவும் வேய்பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே) சரீரம் பணிந்ததுவும், திருமலையிலே நிற்கிற ஸர்வேஶ்வரனையே. (வாய் திறங்கள் சொல்லும்வகை துணிந்தது) வாக்கானது அவனுடைய திறங்களைச்சொல்லுகையிலே துணிந்தது. (ருரு)

**வகையா லவனி யிரந்தளந்தாய் பாதம்**
**புகையால் நறுமலரால் முன்னே - மிகவாய்ந்த**
**அன்பாக்கி யேத்தி யடிமைப்பட்டே னுனக்கு**
**என்பாக்கி யத்தா லினி. (ருசு)**

ப-உ.—வகையால் - (அழகு - சேஷ்டைமுதலான) ப்ரகாரங்களாலே, முன்னே - முற்காலத்தில், அவனி - பூமியை, இரந்து - யாசித்து, அளந்தாய்-ஆக்ரமித்தஉன்னுடைய, பாதம்-திருவடிகளை, புகையால் - தூபத்தினால், நறு - அழகியதான, மலரால் - பூவினால், மிக - அதிகமாக, வாய்ந்து - கிட்டி, அன்பாக்கி - ப்ரீதியையுடையேனாகச் செய்துகொண்டு, ஏத்தி - ஸ்துதித்து, இனி-இதுமுதலாக, என் - என்னிடத்தில்பண்ணின, பாக்கியத்தால் - உன்னுடைய கடாக்ஷமாகிற புண்யத்தினாலே, உனக்கு-உனக்கு, அடிமைப்பட்டேன்-கைங்கர்யஞ்செய்யுமவனானேன். (ருசு)

வ்யா.—அவ.—முப்பத்து நாலாம்பாட்டு.—(வகையால்) உன் ஸௌந்தர்யத்துக்குத் தோற்று அடிமைப்படும்படி நீயே முன்னே க்ருஷிபண்ணினாயென்கிறது.

(வகையித்யாதி) ராவணனோபாதி வத்யனாயிருக்க மஹாபலியும் இவன்பக்கல் ஔதார்யகுணங் கிடக்கையாலே அவனுந் தன்னதாக்கித் தருவனானான்; நாமும் பூமியையவனதாக்கிக் கொள்ளுவோம்; ஆஶ்ரயித்த இந்த்ரனும் தன் கார்யம்பெறுவான்; என்கிறவகைகளாலே அவனியிரந்தளந்த வுன் திருவடிகளை. (புகையால் நறுமலரால்) உன் திருவடிகளைப் புகையால் நறுமலரால். (மிகவாய்ந்த வன்பாக்கியேத்தி யடிமைப்பட்டேன்) புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு மிக்க வன்மையுடையேனாய் ஸௌந்தர்யத்துக்குத் தோற்று அடிமைப்பட்டேன். (இனி என் பாக்கியத்தால்)இப்போது என்னுடைய ஸுக்ருதத்தாலே. இஸ்ஸுக்ருதத்துக் கடியாக முன்னே பூமியையளந்து க்ருஷிபண்ணிவைத்தாய். (௩௪)

அரு.—முப்பத்துநாலாம்பாட்டு.—இப்படி யடிமைப்படும்படி அவனியளந்தாயென்றந்வயம். (வாய்ந்த) வாய்கை-உண்டாகை.(௩௪)

**இனிதென்பர் காம மதனிலு மாற்ற**
**இனிதென்பர் தண்ணீரு மெந்தாய் - இனிதென்று**
**காமநீர் வேளாது நின்பெருமை வேட்பரேல்**
**சேமநீ ராகுஞ் சிறிது.** (௩௫)

ப-உ.—எந்தாய்-என்னுடைய ஸ்வாமியே! காமம். (சப்தாதி) விஷயங்களை, இனிதென்பர் - போக்யங்களென்று சொல்லுவர்கள்; தண்ணீர் - ஜலம், அதனிலும் - அதைக்காட்டிலும், ஆற்ற - மிகவும், இனிது - போக்யம், என்பர் - என்று சொல்லுவர்கள்; காமம்-விஷயங்களையும், நீர் - ஜலத்தையும், இனிதென்று - போக்யமென்று, வேளாது - ஆசைப்படாமல், நின் - உன்னுடைய, பெருமை-அதிசயத்தை, சிறிது - அல்பம், வேட்பரேல் - ஆசைப்படுவர்களேயானால், சேமம் - (அது) ரக்ஷகமான, நீராகும்-ஸ்வபாவமாகும்.(௩௫)

வ்யா.—அவ.—முப்பத்தைந்தாம்பாட்டு.— (இனி தென்பர்) இவ்விஷயங்கிடக்க சப்தாதிவிஷயங்கள் இனிதென்றிருப்பதே! என்று வெறுக்கிறார்.

(காமமினிதென்பர்) காமத்தையு மழகியதென்பர். "என்பர்" என்கிறத்தாலே தமக்கிதிலன்வய மின்றிக்கே இருக்கிறபடி. காமதந்த்ரம் போமவர்கள் காமதந்த்ரத்தையினிதென்று சொல்லுவர்கள். (அதனிலுமித்யாதி)காமத்திலும் மிகவினிது தண்ணீரென்றுசொல்லாநிற்பர்கள். விரக்தர்க்கும் வேணுமிறே தண்ணீர். "ஸுவனவஹிஸுமநஸ - ஆப ஏவஹிஸுமநஸ:" என்கிறபடியே விரக்தரோடு அவிரக்தரோடு வாசிபறத் தண்ணீரில் வந்தால் எல்லாரும் ஸுமநஸ்ஸுக்களாயிருப்பர்கள். (எந்தாய்) இவருடைய தண்ணீருங் காமமும், "வாஸுதேவஸ்ஸர்வம் - வாஸுதேவஸ்ஸர்வம்" உண்ணுஞ் சோறு" இத்யாதிவத். (இனிதென்று காமநீர்வேளாது சிறிது நின் பெருமை வேட்பரேல் சேமநீராகும்) பாக்யஹாநி யடியாகவிறே அதஸ்மிந் தத்புத்திபண்ணி சப்தாதிவிஷயங்களிலே ருசிபிறப்பது; ஸ்வபாவத: இனிமை யின்றிக்கேயிருக்கிலும் காமத்திலுந் தண்ணீரிலுமாசைப்படாதே உன்னுடைய குணங்களிலே அல்பமாசைப்படுவராகில் ரக்ஷையேஸ்வபாவமாம். "பஹூநாம் ஜந்மநாம்-புத்திநாசாத்ப்ரணஸ்யதி"என்கிறபடியே சப்தாதிகளிலாசை விநாசத்தைப் பலிப்பிக்கும் "மித்ரபாவேந - மித்ரபாவேந" என்று பகவத்விஷயத்திலே போலியான வாசையுண்டாகில், "நத்யஜேயம்கதஞ்சந - நத்யஜேயம்கதஞ்சந" என்றிருக்குமவன். எல்லாவாசை யுண்டாகிலும் கிடையாது சப்தாதிகள். ஓரடிவர நிற்கில் அவனதே யாம் பகவத்விஷயம். (ருரு)

அரு.—முப்பத்தைந்தாம்பாட்டு.—ஸுமநஸ்ஸுக்களாகை - அபேக்ஷிதராகை. (ருரு)

சிறியார் பெருமை சிறிதின்க ணெய்தும்
அறியாருந் தாமறியா ராவர் - அறியாமை
மண்கொண்டு மண்ணுண்டு மண்ணுமிழ்ந்தமாயனென்
றெண்கொண்டென் னெஞ்சே யிரு. (ருசு)

ப-உ.—சிறியார் - க்ஷுத்ரர்களால் நினைக்கப்பட்ட, பெருமை - (தங்களுடைய) உத்கர்ஷமானது, சிறிதின்கண் - க்ஷுத்ரனுகையில், எய்தும் - சேர்த்துவிடும்; அறியாரும் - (க்ருத்யாக்ருத்யங்களை)அறியாதவர்களும், தாம் - தாங்கள், ஆறியாராவர் - புத்தி சூந்யர்களாயிய

ஆவார்கள்; என் - என்னுடைய, நெஞ்சே - மநஸ்ஸே! அறியாமை-(ஒருவருக்கும்) தெரியாமல், மண் - பூமியை, கொண்டு - இரந்து கொண்டு, மண் - பூமியை, உண்டு - அமுதுசெய்து, மண் - பூமியை, உமிழ்ந்த - வெளிப்படுத்தின, மாயனென்று - அத்புதவ்யாபாரங்களையுடையவனொருவனுண்டென்று, எண்கொண்டு - நினைத்து, இரு-ஸ்திரப்படு. (௩௬)

வ்யா.—அவ.—முப்பத்தாறும்பாட்டு.—(சிறியார்) ப்ரமிப்பார் ப்ரமிக்கிறார். நீ இவ்வர்த்தத்தை புத்திபண்ணியிரு என்கிறார்.

(சிறியாரித்யாதி) தாங்களே சிறியராயிருந்து வைத்துத் தங்களைச்சொல்லும் பெருமை ஸ்வரூபத்திலே நிற்கும். (அறியாருமித்யாதி) அவ்விடத்திலே தமக்கு மிடையில்லை. (அறியாமையித்யாதி) நெஞ்சே! நீ பெரியார்கோடியிலேயிரு. "பேராளன் பேரோதும் பெரியோரை" என்னும்படி யொருவனேறுவென்கிறது. "ஶோகஸ்யவஃ - மாசுசஃ" என்னும்படியே. (௩௬)

அரு.—முப்பத்தாறும்பாட்டு —ப்ரமிக்கை - விஷயங்களிலும் தேவதாந்தரங்களிலும். இரண்டுக்கு மநுகுணமாக அருளிச்செய்கிறார் (தாங்களே இத்யாதி). தேவதாந்தரந்தான் ப்ரஹ்மாதிகள் அஹங்காரத்தாலே பார்ப்பாரைப்போலே பெருக்க நினைத்திருந்தாலும் க்ஷேத்ரஜ்ஞருமாய், அதஏவ கர்மவஶ்யருமான தங்கள் ஸ்வரூபத்திலே நிற்குமென்றபடி. விஷயங்களானபோது தேஹாத்மாபிமாநிகளாய்த் தங்களையும் விஷயங்களையும் பேரப்பொலியப்பெருக்கநினைத்திருந்தார்களேயாகிலும், அல்பமாய் அஸ்திரமாயிருக்கிற தங்களுடையவும் விஷயங்களுடையவும் ஸ்வரூபத்திலே நிற்குமென்றபடி. (அறியாருந்தாமறியார்) இவற்றைப் பற்றுமவர்கள் அஜ்ஞராமிடத்திலருமையில்லை. அஜ்ஞரேயென்றபடி தமக்கு மிடையில்லை—தங்களுடைய அஜ்ஞதைக்கு அருமையில்லை. அறியாமைமண் - மஹாபலியறியாமல் பின்னிற்பானை. (௩௬)

இருந்தண் கமலத் திருமலரி னுள்ளே
திருந்து திசைமுகனைத் தந்தாய் - பொருந்தியநின்
பாதங்க ளேத்திப் பணியாவேல் - பல்பிறப்பும்
ஏதங்க ளெல்லா மெமக்கு. (௩௭)

ப-உ.—இரும் - பரந்தும், தண் - குளிர்ந்துமிருக்கிற, கமலத்து - நாபீகமலத்தினுடைய, இரு - விசாலமான, மலரின் - பூவினுடைய, உள்ளே - மத்யத்திலே, திருந்து - ஸமர்த்தனான, திசைமுகனை - நான்குமுகத்தையுடைய ப்ரஹ்மாவை, தந்தாய் - (ஸ்ருஷ்டித்துக்) கொடுத்தவனே! பொருந்திய - இணைந்திருக்கிற, நின் - உன்னுடைய, பாதங்கள் - திருவடிகளை, ஏத்தி - ஸ்துதித்து, பணியாவேல் - வணங்காமல்போனால், எமக்கு - எங்களுக்கு, எல்லாம் - ஸமஸ்தமான, பல்பிறப்பும் - அநேக ஜந்மங்களும், ஏதங்கள் - துக்கரூபங்களாகும். (வ்யர்த்தமாகும்). (௩எ)

வ்யா.—அவ.—முப்பத்தேழாம்பாட்டு.—(இருந்தண்) சரண்யனைப்பற்றி யாஸ்ரயியாவாகில் ஜந்மங்களெனக்குதுக்கமென்கிறார்.

(இருந்தணித்யாதி) ப்ரஹ்மாவுக்கிருக்கப் பரப்புபோந்து குளிர்ந்து விலக்ஷணமான பூவினுள்ளேஸ்ருஷ்டிக்கவும் ப்ரமித்துப்போய் கேட்டுவரவும் வேண்டாதபடி தானே ஸமர்த்தனான ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவன் பொருந்திய உன்திருவடிகளையேத்திப் பணியாவாகில். (எனக்குப் பல்பிறப்பெல்லா மேதங்கள்) பல ஜந்மங்களையும் நீ பண்ணுவிக்கிறது ஒன்றல்லாவொன்றுபகவத் ஸமாஸ்ரயணத்துக்கு உறுப்பாமென்று. "ஏதங்கள்" என்கிறது—புருஷபேதங்கள்தோறும் துக்கங்களும் பேதித்திறேயிருப்பது. ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - நீ நினைத்தபடியன்றாகில் அப்புருஷர்களுக்கெல்லா முண்டான துக்கங்களெனக் கொருவனுக்குமுண்டாம். ப்ராஹ்மணவை ஸ்ருஷ்டித்தாயென்கிற வித்தாலே சரண்யனென்கிறது. "யோப்ரஹ்மாணம்விதாதிபூர்வம்" "யோப்ராஹ்மணம் விததாதிபூர்வம்" "முமுக்ஷுர்வைசரண மஹம்ப்ரபத்யே" என்கிறபடியே. (௩எ)

அரு.—முப்பத்தேழாம்பாட்டு.—ஏதம் - துக்கம். துக்கந்தான் ஜந்மாநுகுணமான துக்கமாகையாலே துக்கபேதத்தாலே புருஷபேதமும் தோற்றுமென்றபடி. இந்த ஜந்மத்திலே யாஸ்ரயியாவிட்டால் முன்புள்ள ஜந்மங்களும் வ்யர்த்தமாகையாலே அந்த துக்கங்களெல்லா மிப்போ தோற்றுமென்கை. இப்போதாஸ்ரயமுண்டாகில் அந்த ஜந்மங்களும் ஸபலமாய்த் தோற்றுமென்றபடி. அப்புருஷர்கள்—அந்தந்த ஜந்மவிசிஷ்டரான புருஷர்கள். (௩எ)

எமக்கென் றிருநிதிய மேமாந் திராதே
தமக்கென்றும் சார்வ மறிந்து - நமக்கென்றும்
மாதவனேயென்னும் மனம்படைத்து, மற்றவன்பேர்
ஓதுவதே நாவினு லோத்து. (ருஅ)

ப-உ.—இருநிதியம் - தனக்கும் பிறர்க்குமான இருவருடைய தநத்தை, எமக்குஎன்று - நமக்குவேணும் என்று, ஏமாந்து - ப்ரமித்து, இராதே - இராமல், தமக்கு - தங்களுக்கு, என்றும் - ஸர்வ காலமும், சார்வம் - ரக்ஷகம் (இதுவேஎன்று), அறிந்து - தெரிந்துகொண்டு, நமக்கு - நமக்கு, என்றும் - எக்காலத்திலும், மாதவனே - ஸ்ரியஃபதியே, என்னும் - (ஆஸ்ரயணீயன்) என்கிற, மனம் - சிந்தையை, படைத்து - உடையராய்க்கொண்டு, மற்று - அதுக்குமேலே, அவன் - அந்த ஸ்ரியஃபதியினுடைய, பேர் - திருநாமங்களை, நாவினால் - வாக்கினால், ஓதுவதே - சொல்லுவதே, ஓத்து - அத்யேதவ்யமான வேதம். (ருஅ)

வ்யா.—அவ.—முப்பத்தெட்டாம்பாட்டு.—(எமக்கென்று) அர்த்தத்தைப் புருஷார்த்தமாக புத்திபண்ணியிராதே ஸ்ரியஃபதியை யாஸ்ரயித்திருவென்கிறார்.

(எமக்கித்யாதி) கழஞ்சு பொன்னுண்டென்றறிந்து ஸர்வேஸ்வரனைப் பற்றி நிர்ப்பரராயிருப்பாரைப்போலேயிராதே. (தமக்கித்யாதி) தமக்கு நித்யமான ஆஸ்ரயமென்றறிந்து. (நமக்கித்யாதி) நமக்கென்று மநுபாவ்யன் ஸ்ரியஃபதியென்னும் நெஞ்சைப்படைத்து அம்மிதுநத்துக்கு வாசகமான சப்தத்தைச் சொல்லுகை வாகிந்த்ரியத்துக்கு ஸ்தோத்ராவது. (ருஅ)

ஓத்தின் பொருள்முடிவு மித்தனையே, உத்தமன்பேர்
ஏத்தும் திறமறிமி னேழைகாள் - ஓத்ததனை
வல்லீரேல் நன்றதனை மாட்டீரேல், மாதவன்பேர்
சொல்லுவதே ஓத்தின் சுருக்கு. (ருகூ)

ப-உ.—ஏழைகாள் - வேததாத்பர்ய மறியாதவர்களே! ஓத்து அதனை - வேதத்தின் அர்த்தத்தை, வல்லீரேல் - அறிய ஸமர்த்தர்களானால், உத்தமன் - புருஷோத்தமனுடைய, பேர் - திருநாமத்தை, ஏத்தும் - ஸ்துதிக்கிற, திறம் - ப்ரகாரமான, இத்தனையே - இவ்வளவே, ஓத்தின் - வேதத்தினுடைய, பொருள் - அர்த்தங்களில்,

முடிவு - நிஷ்க்ருஷ்டாம்சம்(என்றும்), அதனை - அந்த வேதார்த்தத்தை, நன்று - செவ்வையாக, மாட்டீரேல் - அறியமாட்டீர்கோளாகில், மாதவன் - ஸ்ரியஃபதியினுடைய, பேர் - திருநாமத்தை, சொல்லுவதே - உச்சரிக்கையே, ஓத்தின் - வேதத்தினுடைய, சுருக்கு - ஸங்க்ஷேபித்துச்சொன்ன வர்த்தம (என்றும்), அறிமின் - அறியுங்கோள். (௩௯)

வ்யா.—அவ.—முப்பத்தொன்பதாம்பாட்டு.— (ஓத்தின்பொருள்) இந்த்ராதிகளையும் ஆஸ்ரயணீயராகச் சொல்லாநிற்கச் செய்தே, நீரும் ப்ராமாணிகராயிருந்து லக்ஷ்மீபதியையே ஸமாஸ்ரயணீயனென்று சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்; உங்களுக்கு அபிநாந வ்யுத்பத்தியேயாய் தாத்பர்யஜ்ஞாநமில்லாமையாலேசொல்லுகிறீர்கோள்; தாத்பர்யஜ்ஞாநமுண்டாகில் அவர்களைச்சொல்லுகிறது விபூதித்வேந; விபூதிமானாய் ஸமாஸ்ரயணீயனாயிருப்பான் லக்ஷ்மீபதியே என்றிருங்கோளென்கிறார்.

(ஓத்தின் பொருள் முடிவு மித்தனையே) வேதார்த்தத்தின் முடிவுமிதுவே. அதேதென்னில்; (உத்தமன் பேரேத்தும்திறம்) எல்லாத்துக்கும் ப்ரகாரியாயிருந்துள்ளவனுடைய திருநாமத்தையேத்துகை. (அறிமினேழைகாள் ஓத்ததனை வல்லீரேல்) ஸாங்காத்யயநத்தைப்பண்ணி, "வேதெஸ்ஸர்வைரஹமேவவேத்ய:" - வேதைச்ச ஸர்வைரஹமேவவேத்ய:" என்கிறபடியே வல்லீர்களாகில் அறியுங்கோள். (நன்றதனைமாட்டீரேல்) அப்படியறியமாட்டி கோளாகில்; (மாதவனித்யாதி) ஓத்தினுடைய ஸங்க்ரஹம் லக்ஷ்மீபதியினுடைய திருநாமத்தைச் சொல்லுகை. அவன் ப்ரஸாதமடியாகப் பிறந்தஜ்ஞாநமுடையார் சொன்னத்தை அர்த்தமென்றிருங்கோள். (௩௯)

சுருக்காக வாங்கிச் சுலாவி நின்று ஐயார்
நெருக்காமுன் நீர்நினைமின் கண்டீர் - திருப்பொலிந்த
ஆகத்தான் பாத மறிந்து மறியாத
போகத்தா லில்லை பொருள். (ச0)

ப-உ.—ஐயார் - கோழைபானது, சுலாவி - (சரீரமெங்கும்) பரவி, நின்று - இருந்து, சுருக்காக - (கண்டத்திலே)அடங்கும்படி, வாங்கி - இழுத்துக்கொண்டு, நெருக்காமுன்-(கண்டத்தை) அடைப்பதற்குமுன்னமே, திரு - லக்ஷ்மியாலே, பொலிந்த - அதிசயித்திருக்

கிற, ஆகத்தான்-திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனுடைய, பாதம்-திருவடிகளை, நீர் - நீங்கள், நினைமின்கண்டீர் - அநுஸந்தித்திருங்கிடிகோள்; அறிந்தும் - (விஷயங்களை க்ஷுத்ரங்களென்று) அறிந்தும், அறியாத - அவ்வறிவின் கார்யமான த்யாகத்தைச் செய்யப்போகாத, போகத்தால் - விஷயாநுபவத்தினால், பொருள் - ப்ரயோஜநம், இல்லை - கிடையாது. (சo)

வ்யா.—அவ.—நாற்பதாம்பாட்டு.—(சுருக்காக) நீங்கள் நிற்கிற நிலைபொல்லாது; கடுக ஸ்ரிய:பதியினுடைய திருவடிகளை நினையுங்கோள்.

(சுருக்காதவித்யாதி) பஞ்சதாவான சரீரத்தைச் சுருங்கவலித்து உடம்பெங்கும் தானே யாம்படி வ்யாபித்து ஶ்லேஷ்மாவானது நெருக்குவதுக்குமுன்பே நினையுங்கோள். அர்த்தஸௌகம்ஸௌகமன்றேவென்னில்; உத்தேச்யத்தையறியாதபடி அநர்த்தத்தைப்பண்ணும். (திருப்பொலிந்தவித்யாதி) ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை அறிந்திருக்கச்செய்தே அறிந்ததாகவொட்டாத போகத்தால். (அறிந்துமறியாத போகத்தாலில்லை பொருள்) பொல்லாதென்றிருக்கச் செய்தே கைவிடப்போகாத அர்த்தஸௌக்யத்தால் ப்ரயோஜநமில்லையென்றுமாம். (நெருக்காமுன் திருப்பொலிந்தவாகத்தான் பாதம் நீர் நினைமின்கண்டீர்) "நினைமின்" என்கிற விதி இரண்டிடத்திலும் கிடக்கிறது. (சo)

அரு.—நாற்பதாம்பாட்டு.—(பஞ்சதா) பஞ்சப்ரகாரதயா; பஞ்சபூதாத்மகமான சரீரமென்னுதல், பஞ்சப்ராணனுடைய சக்ரமென்னுதல். போகம் - ஐஶ்வர்யம். அறிந்துமறியாத - ஸர்வேஶ்வரனையறிந்து மறியவொட்டாத வர்த்தமென்னுதல், தன்னை த்யாஜ்யமென்றறிந்தும் கைவிடப்போகாத அர்த்தமென்னுதல். பொருள் - ப்ரயோஜநம். ஆகையாலே பாதம் நினைமினென்று. இங்குங்கூட்டுவது. (சo)

பொருளா லமருலகம் புக்கியல லாகாது
அருளா லறமருளு மன்றே - அருளாலே
மாமறையோர்க் கீந்த மணிவண்ணன் பாதமே
நீமறவேல் நெஞ்சே நினை. (சக)

ப உ.—பொருளால் - புருஷார்த்தமென்கிற புத்தியால், அமருலகம் - தேவலோகத்தில், புக்கு-ப்ரவேசிப்பதற்கு, இயலாகாது - யத்நிக்கக்கூடாது; அருளால் - க்ருபையாலே அறம் - புண்ய ஸாத்யமானலோகத்தை, அருளுமன்றே - (ஸர்வேஸ்வரன்) கொடுப்பனன்றோ; மா - பெரியோர்களான, மறையோர்க்கு - வைதிகர்களுக்கு, அருளாலே - க்ருபையாலே, ஈந்த - (மோக்ஷத்தை) கொடுத்தவனுமாய், மணி - நீலரத்ந ஸத்ருசமான, வண்ணன் - வடிவையுடையவனுமான ஸ்ரியஃபதியினுடைய, பாதமே - திருவடிகளையே, நெஞ்சே - மநஸ்ஸே! நீ - நீ, மறவேல் - விஸ்ம்ருதிபண்ணாதேகொள்; நினை - (அவற்றை) த்யாநம்பண்ணு. (௪௧)

வ்யா.—நாற்பத்தோராம்பாட்டு.—(பொருளித்யாதி) பொருளாலே ஸ்வர்க்கத்தில் புகயத்நம்பண்ணப்போகாது. (அருளாலித்யாதி)க்ருபையாலே இவை ஸ்வர்க்கத்தை யாசைப்பட்டதாகில் ஸ்வர்க்கத்தைக் கொடுப்போமென்றிருக்கும். (அருளாலேஇத்யாதி) தன் க்ருபையாலே தன்னைக் கொடுக்குமவன் திருவடிகளைமறவாதேகொள். அவற்றைநினை, "மாமறையோர்" என்றது-"ஶுகோ முக்தோ வாமதேவோ விமுக்த꞉ - சுகோமுக்தோவாமதேவோபிமுக்தஃ" என்றவர்கள்; ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகளென்றுமாம். ஸ்ரீமார்க்கண்டேயனென்றுமாம். (௪௧)

அரு.—நாற்பத்தோராம்பாட்டு.—ஆனாலும் ஸ்வர்க்காதிகளுக்கு அர்த்தம் ஸாதநமாயன்றோ இருக்கிறதென்ன; அருளிச்செய்கிறார் (பொருளித்யாதி). அறமருளும் - அர்த்தத்தாலே தர்மத்தை ஸாதித்தாலும் தர்மம் அசேதநமாகையாலே தர்மகார்யமான ஸ்வர்க்கத்தை அருளாலே கொடுக்குமென்றபடி. (௪௧)

**நினைப்பன் திருமாலை நீண்டதோள் காண**
**நினைப்பார் பிறப்பொன்றும் நேரார் - மனைப்பால்**
**பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்**
**துறந்தார் தொழுதாரத் தோள்.** (௪௨)

ப-உ.—நீண்ட - (போக்யதையால்) மிகுந்த, தோள்-புஜங்களை, காண - ஸாக்ஷாத்கரிக்கைக்கு, திருமாலை - ஸ்ரியஃபதியை, நினைப்பன் - த்யாநியாநின்றேன்; நினைப்பார் - த்யாநிக்குமவர்கள், ஒன்று - ஒருவிதமான, பிறப்பும் - ஜந்மத்தையும், நேரார் - கிட்டார்கள்.

மனைப்பால் - ஓரிடத்தில், பிறந்தார் - ஜந்மித்தவர்கள், பிறந்து - ஜந்மித்து, எய்தும் - அடையும், பேர் - பெரிய. இன்பமெல்லாம் - ஸமஸ்தஸுகங்களையும், அத்தோள் - அந்த புஜத்தை, தொழுதார்-ஆஶ்ரயித்தவர்கள், துறந்தார் - த்யஜித்தவர்களாவர்கள். (சஉ)

வ்யா.—நாற்பத்திரண்டாம் பாட்டு.—(நினைப்பன் திருமாலை) அத்ரிபகவானுடைய ஆஶ்ரமத்தில் பிராட்டியோடே வந்தாற்போலே நினையாநின்றேன். எதுக்கு நினைக்கிறதென்னில்; அவளோட்டைச் சலவியாலே நோக்கியதை யளவிறந்ததோளைக்காண. ஸ்வர்க்காதிகளுக்கன்று; (நினைப்பார் பிற பொன்றும் நேரார்) அத்தோளை நினைக்குமவர்கள் ஸம்ஸாரத்தை யொருநாளும் கிட்டார்கள். (மனைப்பாலித்யாதி) ஸம்ஸாரஸுகத்தைத் துறந்தவர்கள் அத்தோளைத் தொழப்பெறுவர்கள். (சஉ)

தோளிரண் டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும்
தாளிரண்டும் வீழச் சரந் துரந்தான் - தாளிரண்டும்
ஆர்தொழுவார் பாத மவைதொழுவ தன்றே, என்
சீர்கெழுதோள் செய்யும் சிறப்பு. (சங)

ப-உ.—இரண்டு எட்டு ஏழும மூன்றும் - இருபதான, தோள்-புஜங்களையும், அனைத்து-ஸமஸ்தமான, முடியும் - தலைகளையும், தாளிரண்டும் - இரண்டு கால்களையும்,வீழ - விழும்படி, சரம் - பாணங்களை, துரந்தான் - விட்டவனுடைய, தாளிரண்டும் - இரண்டு திருவடிகளையும், ஆர் - எவர், தொழுவார் - ஆஶ்ரயிப்பர்களோ; பாதமவை - (அவர்களுடைய) சரணங்களை, தொழுவதன்றே-ஆஶ்ரயிப்பதன்றோ, என-என்னுடைய, சீர் - அழகு, கெழு-அமைந்த, தோள்-புஜங்கள், செய்யும் - பண்ணும், சிறப்பு - உபகாரம். (சங)

வ்யா.— அவ.—நாற்பத்து மூன்றும்பாட்டு.— (தோளிரண்டு) தோளைத் தொழவறியோம்; அத்தோளைத் தொழுவார் தாளைத்தொழு மித்தனையென்கிறார்.

(தோளித்யாதி) எட்டு மிரண்டும் ஏழும்மூன்றுமாக இருபது தோள்களும், முடியனைத்தும் தாளிரண்டும் மற்றும் விழும்படிக்கிடாகச் சரத்தைவிட்டவன். ஆஶ்ரிதவிரோதியாகையாலே நம்மாலே ஸ்ருஷ்டனென்றும் பாராதே முடியச்செய்தவனுடைய திருவடிகளிரண்டையும் யாவர் சிலர் தொழுதார்கள். ஏதேனும் ஜந்மமாகிலும்

அவர்களுடைய தாளைத்தொழுகையன்றே புருஷார்த்தம்தாவந்த தோள்செய்யு முபகாரம். (சங)

**சிறந்தார்க் கெழுதுணையாம் செங்கண்மால் நாமம்**
**மறந்தாரை மானிடமா வையேன் - அறம்தாங்கும்**
**மாதவனே யென்னுமனம்படைத்து மற்றவன்பேர்**
**ஓதுவதே நாவினா லுள்ளு. (சச)**

ப-உ.—சிறந்தார்க்கு - ஸ்ரேஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, எழு - போகத்தக்க, (அர்ச்சிராதி மார்க்கத்துக்கு), துணையாம் - ஸஹாயமாயிருக்குமவனாய், செம் - சிவந்த, கண் - நேத்ரங்களையுடைய, மால் - வ்யாமோஹத்தையுடையவனுடைய, நாமம் - திருநாமத்தை, மறந்தாரை - விஸ்மரித்திருக்குமவர்களை, மானிடமா - மனுஷ்யர்களாக, வையேன் - நினைக்கமாட்டேன். அறம் - (ஆந்ருஶம்ஸ்யமான) தர்மத்தை, தாங்கும் - தரித்திருக்கும், மாதவனே - ஸ்ரிய:பதியே! என்னும் - என்று ப்ரீதமாகும், மனம் - மநஸ்ஸை, படைத்து-உண்டாக்கி, மற்று - அதுக்குமேலே, அவன்பேர் - அந்த ஸ்ரிய:பதிக்கு வாசகமான திருநாமத்தை, நாவினால் - நாக்காலே, ஓதுவது - சொல்லுகைக்கு, உள்ளு - அநுஸந்தி. (சச)

வ்யா.—நாற்பத்துநாலாம்பாட்டு.—(சிறந்தாரித்யாதி) திருநாமத்தைச்சொன்னவர்களுக்கு ப்ராக்ருதங்களில் அருசியைப்பண்ணுவித்து உத்க்ரமணதசையில் ஆதிவாஹிகர்க்கு முன்னேசானே துணையாகக் கொண்டுபோகக்கடவனும். வாத்ஸல்யத்தாலே சிவந்த கண்களையுடைய ஸர்வேஸ்வரனுடைய திருநாமத்தை மறந்தாரை மநுஷ்யராக புத்திபண்ணியிரேன். அஜ்ஞரை ஸர்வஜ்ஞரென்றிருப்பன். அறிகைக்கு யோக்யதையுண்டா யிருக்கையாலே. குருவிந்தக்கல்லை மாணிக்கமென்று நினைத்திருந்தால் ரத்நமாகாதிறே; ரத்நபரீக்ஷகன் ரத்நமாமென்றதிறே ரத்நமாவது; அப்படியே நெஞ்சிலே மனிசரென்று வைக்கப்பட்டவர்கள் மநுஷ்யராவரென்கிறார். "மானிடவ ரல்லரென்று என்மனத்தேவைத்தேனே" என்கிறபடியே. (அறந்தாங்குமித்யாதி) ஆந்ருசம்ஸ்யத்தாலே தரியாநின்ற ஸ்ரிய:பதியினுடைய திருநாமத்தை நாவினாலே ஓதவுள்ளு. (சச)

அரு.—நாற்பத்துநாலாம்பாட்டு.—மறந்தாரை - ஒருகால் சொல்லி மறந்தாரை. இவர் மநுஷ்யரல்லரென்றபோதே மநுஷ்யரான்

யிக்கேபோவர்களோவென்ன ; அருளிச்செய்கிறார் (குருவிந்தக்கல்லை யித்யாதி). ஒக உள்ளு - ஒதுகைக்கு விசாரியுங்கோளென்று பரோபதேசம். (சச)

உளதென் றிறுமாவா ருண்டில்லை யென்று
தளர்தலத னருகும் சாரார் - அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று. (சரு)

ப-உ.—அளவரிய - பரிச்சேதமில்லாத, வேதத்தான் - வேதத்திஞல் ப்ரதிபாதிக்கப்பட்டவனாய், வேங்கடத்தான் - திருமலையை வாஸஸ்தாநமாக வுடையவனாய், விண்ணோர்-நித்யஸூரிகளுடைய, முடி - சிரஸ்ஸுக்கள், தோயும் - உறைந்திருக்கிற, பாதத்தான்-திருவடியையுடையவனுமான ஸர்வேஶ்வரனுடைய, பாதம் - திருவடிகளை, பயின்று-ஆஶ்ரயித்து, உளது என்று - (தனம்) உண்டு என்று, இறுமாவார் - கர்வப்படார்கள் ; உண்டு - முன்புண்டாயிற்று; இல்லை - இப்போது இல்லை ; என்று - இப்படி நினைத்து, தளர்தல் - சோகித்தலாகிற, அதனருகும்-அதன் ஸமீபத்திலும்கூட, சாரார் - கிட்டார். (சரு)

வ்யா.—அவ.—நாற்பத்தைந்தாம்பாட்டு.—(உளதென்று) நித்யஸூரிசளுக்கு ஸ்பருஹணீயமானவனுடைய திருவடிகளைப்பயிலுமவர்கள் அர்த்தத்திஞுடைய லாபாலாபங்களுக் கிடுபடார்.

(உளதென்றிறுமாவார்) தரித்ரர் அர்த்தமுண்டானவாறே மாதா பிதாக்களையும் ஆசார்யர்களையும் அவமாநம் பண்ணுவர்கள் ; இவர்க ளிப்படிசெய்யார்கள். (உண்டில்லையித்யாதி) இல்லையென்று தளராரென்னுதே உண்டில்லையென்று தளராரென்றதென்னென்னில் ; நித்யதரித்ரன் சோகமறியான் ; ஒருநாளுண்டாய் அதில்லையானவாறே, பாவியேன் பண்டுஸுகமே ஜீவித்தோம், இப்போது இடிபடாநின்றோமென்று மிகவும் தளர்த்திக் குடலாமென்று உண்டில்லையென்று தளராரென்று சொல்லுகிறது. பகவத் விஷயத்தில் பிரிவு முத்தேஶ்யமோவென்னில் ; "அழுநீர் துளும்ப வலமருகின்றன வாழியரோ" "கிமர்த்தம் தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிசோகஜம் - கிமர்த்தம் தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிசோகஜம்" ஸம்ஸாரத்தில் ஸம்ஸாரியிற் காட்டில் ஜ்ஞாநவானுக்கு வாசி விஶ்லேஷத்தில்

துடைச்சியன்றே. இத்தையன்றே * உண்ணுஞ்சோற்றில் மூன்கூறும் * துவளில் மாமணியுஞ் சொல்லுகிறது; "முன்னநோற்ற விதிகொலோ முகில்வண்ணன் மாயங்கொலோ" நான் பண்ணின ஸுக்ருதமோ; இடைவீடின்றிக்கே அவன் தன்னுடைய க்ருபையோ; "நிர்குணஃ பரமாத்மாஸௌ தேஹம் வ்யாப்ய திஷ்டதி - நிர்க்குணஃ பரமாத்மாஸௌ தேஹம்தேவ்யாப்யதிஷ்ட்டதி" என்னும்படிகளாலே பிரிவு முத்தேஸ்யம். "தளர்தலதனருகுஞ்சாரார்" என்றது - சோகமுண்டாய் அநுதாபம்பிறந்து மீளாரெனகிறது; முதலிலேதளராரெங்கிறது-அஸ்திரமென்றுநினைத்து. ஒருகால் ஸ்திரமென்றுநினைத்து ஒருகால் அஸ்திரமென்று நினைத்திருக்குமவர்களன்றிறே. ஸ்திரமானது அஸ்திரமாயிற்றென்னிலிறே சோகமுள்ளது. (அளவரியவேதத்தான்) அபரிச்சிந்நமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்படுமவன். கண்ணாலேகாண வாசைப்படுமவனுக்கு வேதப்ரதிபாத்யனென்றால் என்ன ப்ரயோஜநமுண்டென்னில்; (வேங்கடத்தான்) எல்லாருங்கண்டு ஆஸ்ரயிக்கும்படிக் கீடாகத் திருமலையிலே நின்றான். எங்களுடைய அர்த்தத்தோபாதி யும்முடையவர்த்தமும் ப்ரத்யக்ஷமாயிற்றிறே யென்னில்; (விண்ணோர் முடிதோயும் பாதத்தான்) நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயனானவன். அவனுடைய ஸத்பாவத்துக் கிசைந்தால் அவர்களுக்குங்கூட ஸ்ப்ருஹணீயனானவனே யிங்குவந்து நிற்கிறானென்று ஆதரிக்கவேண்டாவோ ப்ராமாணிகராகில். (விண்ணோர்முடிதோயும் பாதத்தான் பாதம் பயின்று உளதென்றிறுமாவார்) இவர்களுக்கிறுமாக்கவும் தளரவும் அவஸரமில்லை. (சரு)

அரு.—நாற்பத்தைந்தாம்பாட்டு.—நிர்க்குணஃ - நாணேறாத வில்லையுடைய சக்ரவர்த்தித் திருமகன். இது புஷ்பாஹரணார்த்தமாக மஹாமேருவைக்குறித்து பீமஸேநன் போகிறபோது வழியிலே திருவடியைக்கண்டு சொன்னவார்த்தை தளர்தலாகிறவதனருகும் - அசேதநமான எங்களர்த்தம்போலே உம்முடைய வர்த்தமான அர்ச்சாவதாரமும் அர்ச்சகபராதீநமன்றோ என்று சங்காபிப்ராயம். இது ரக்ஷகமாகப்போகிறதோ என்று தாத்பர்யம். (சரு)

**பயின்றதரங்கம் திருக்கோட்டி, பன்னாள்**
**பயின்றதுவும் வேங்கடமே பன்னாள் - பயின்ற**

தணிதிகழும் சோலே யணிநீர்மலேயே
மணிதிகழும் வண்தடக்கை மால் (சசு)

ப-உ.—மணி - நீலரத்நம்போல், திகழும் - ப்ரகாசிக்கிறவடிவையும், வண் - (தாநத்தில்) சிறந்த, தடம் - விசாலமான, கை-கரங்களேயுமுடைய, மால் - ஸர்வேஶ்வரன், பயின்றது - ஆதரித்துப் போந்தது, அரங்கம் - கோயில், திருக்கோட்டி - திருக்கோட்டியூர் (இந்த திருப்பதிகளே); பல்நாள் - சிரகாலம், பயின்றதுவும் - நித்யவாஸம்பண்ணினதும், வேங்கடமே - திருமலேயிலே; பல்நாள்-அநேககாலம், பயின்றது - நெருங்கியிருந்தது, அணி - அழகு, திகழும் - விளங்காநின்ற, சோலே - தோப்புகளேயுடைய, அணி - அலங்காரமான, நீர்மலேயே - திருநீர்மலேயிலே. (சசு)

வ்யா.—அவ.—நாற்பத்தாறும்பாட்டு.—(பயின்றது) இவர்களே இப்படிப் பயிலப்பண்ணுகைக்கு இவர்கள் பட்டதன்று அவன் படுவது.

(பயின்றதித்யாதி) மணிபோலே ஶ்ரமஹரமானவடிவையும் உதாரமானகையையுமுடைய ஸர்வேஶ்வரன் பலகால்பயின்றது, கோயில், திருக்கோட்டியூர், திருமலே; பலநாள்பயின்றது, தர்சநீயமாய்த் திகழாநின்ற சோலேயையுடைத்தாய் ஸம்ஸாரத்துக் காபரணமாயிருந்துள்ள திருநீர்மலேயே. (சசு)

மாலே யரியுருவன் பாதமல ரணிந்து
காலே தொழுதெழுமின் கைகோலி—ஞாலம்
அளந்திடந் துண்டுமிழ்ந்த வண்ணலே மற்றல்லால்
உளங்கிடந்த வாற்றா லுணர்ந்து (சஎ)

ப-உ.—ஞாலம் - பூமியை, அளந்து - ஆக்ரமித்து, இடந்து - பிரித்தெடுத்து, உண்டு-அமுதுசெய்து, உமிழ்ந்த-வெளிப்படுத்தின, அண்ணலே - ஸ்வாமியை, அல்லால் - இவைசளாகாமல், மற்று-வேறும், உளங்கிடந்த - ஹ்ருதயத்தைப்பற்றியிருக்கிற, ஆற்றால் - ப்ரகாரத்தால், உணர்ந்து - அறிந்து, அரியுருவன் - நரஸிம்ஹவிக்ரஹத்தை யுடையவனுடைய, பாதமலர் - தாமரஸபுஷ்பதுல்யமான திருவடிகளிலே, மாலே - புஷ்பமாலேயை, அணிந்து - சாத்தி, காலே-உதயகாலத்தில், கை - கரங்களே, கோலி - கூப்பிக்கொண்டு, தொழுது - வணங்கி, எழுமின் - உஜ்ஜீவியுங்கோள். (சஎ)

வ்யா.—அவ.—நாற்பத்தேழாம்பாட்டு,—(மாலே) அவன் ஸ்வ பாவ மிப்படியானபின்பு எல்லாருமவனே ஆஶ்ரயியுங்கோ ளென் கிறது.

(அரியுருவன்பாதமலர் மாலேயணிந்து கைகோலிக்காலே தொழு தெழுமின்) ஆஶ்ரிதார்த்தமானவடிவைத் தனக்கு வடிவாக உடைய வனுடைய திருவடிகளிலே மலர்மாலேயையணிந்து கைகூப்பி ப்ரா ஹ்மமான முஹூர்த்தத்திலேதொழுது உஜ்ஜீவியுங்கோள். "கைகோ லி" என்று ஏற்கவே கோலிஎன்கிறது. "கைகூப்பி" என்றுமாம். (ஞாலமித்யாதி) சேதநர்க்கநுபாவ்யமான குணங்களேயுடைய சேஷி யை. (மற்றல்லாலித்யாதி) மற்றுநீங்க ளநுஸந்திக்கும்படி எல்லாத் தையுமுணர்ந்து காலே தொழுதெழுமின். மற்றெல்லா மிதிபாடாந் தரம். (௪எ)

அரு.—நாற்பத்தேழாம்பாட்டு.—மற்றல்லால் - நான்சொன்ன படியன்றியே. உளங்கிடந்தவாற்ருல் - உங்கள் ஹ்ருதயத்திலே கிட ந்த ஆஶ்ரயண ப்ரகாரத்திலே உணர்ந்து தொழுமினென்கை. மற் றெல்லாமென்றபக்ஷத்துக்கு ஆஶ்ரயண ப்ரகாரங்களெல்லா முணர் ந்து தொழுமினென்கை. (௪எ)

உணர்ந்தாய் மறைநான்கு மோதினய் நீதி
மணந்தாய் மலர்மகள் தோள்மாலே—மணந்தாய்போய்
வேயிரும் சாரல் வியலிருஞாலம்சூழ்
மாயிருஞ் சோலே மலே. (௪அ)

ப-உ.—மறைநான்கும் - நான்கு வேதங்களேயும், உணர்ந்தாய் - (ஸ்ருஷ்டிஸமயத்தில்) ஸ்மரித்தாய்; நீதி - அர்த்தநிச்சாயகமாக ஸ்ம் ருத்யாதிகளே, ஓதினய் - அத்யயநம்பண்ணிவைத்தாய்; மலர்மகள்- கமலவாஸிநியான பிராட்டியினுடைய, தோள் - புஜங்களே, மணந் தாய் - ஸமஶ்லேஷித்தாய்; மாலே-வ்யாமோஹத்தையுடையவனே! வேய் - மூங்கில்களாலே, இரும் - நிறைந்த, சாரல் - மலேப்பக்கங் களேயுடைய, வியல் - ஆச்சர்யகரமான, இரு - விசாலமான, ஞா லம்—பூமியிலுள்ள ஜனங்களால், சூழ் - சூழப்பட்ட, மா-உயர்ந்த, இரும் - பரந்த, சோலே - தோப்பையுடைய, மலே - திருவேங்கடத்தி லே, போய் - சென்று, மணந்தாய் - சேர்ந்தாய். (௪அ)

வ்யா.—அவ.—நாற்பத்தெட்டாம்பாட்டு.—(உணர்ந்தாய்) எல்லாரு முன்னை யுணரும்படி எல்லாத்தையு முண்டாக்கினாய்.

(உணர்ந்தாய் மறைநான்கும்) ஸம்ஸ்காராத்மகமாக உன்திருவுள்ளத்திலே கிடந்த வேதத்தை ப்ரகாசிப்பித்தாய். (ஓதினாய்நீதி) வேதோப ப்ரும்ஹணமான இதிஹாஸபுராணங்களைஉண்டாக்கினாய். (மணந்தாய்மலர்மகள் தோள்) வேதப்ரதிபாத்யை யானவளுடைய தோளைஸம்ஸ்லேஷித்தாய். (போய்வேயித்யாதி) வேதப்ரதிபாத்யனாகில் பரமபதத்திலே யிறேயென்னுதபடி ஸம்ஸாரிகளுக் கநுபவிக்கலாம்படி திருமலையைவிரும்பினாய். (சஅ)

அரு.—நாற்பத்தெட்டாம்பாட்டு.—வேய் - உயரப்போயிருக்கிற மூங்கில். மாயிருஞ்சோலை மணந்தாய் - விரும்பினையென்கை. (சஅ)

**மலையேழும் மாநிலங்களேழு மதிர**
**குலைசூழ் குரைகடல்க ளேழும்—முலைசூழ்ந்த**
**நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவனென்று**
**அஞ்சாதென் னெஞ்சே யழை.** (சகூ)

ப-உ.—மலையேழும் - ஏழுகுலபர்வதங்களும், மா - பரந்த, நிலங்களேழும் - ஏழுத்வீபங்களும், குலை - கரையினால், சூழ் - ஆவரிக்கப்பட்ட, குரை - சப்தியாநின்ற, கடல்களேழும் - ஏழு ஸமுத்ரங்களும், அதிர - நடுங்கும்படி, முலை - ஸ்தநத்தில், சூழ்ந்த - வ்யாபித்த, நஞ்சு - விஷத்தினாலுண்டான, உரத்து - பலத்தையுடைய, பெண்ணை - பெண்ணான பூதனையை, நவின்று - மழலைச்சொல்லைச் சொல்லிக்கொண்டு, உண்ட - அமுதுசெய்து முடித்த, நாவனென்று - நாக்கையுடையவனென்று, என் - என்னுடைய, நெஞ்சே-மநஸ்ஸே! அஞ்சாது - பயப்படாமல், அழை - கூப்பிடு. (சகூ)

வ்யா.—அவ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—திருமலையை விரும்பின பின்பு லோகமெல்லா மதிரும்படி அவன் பேரைச்சொல்லி அழையென்கிறார்.

(மலையேழுமித்யாதி) முலையெங்கும் வ்யாபித்த நஞ்சாலே மிடுக்குடையளான பூதனையை முக்தமான சொலவுகளை அவள் முகத்தேசொல்லிச் சுவையாநின்ற நாவையுடையவனென்றழை. ப்ரதி

பந்தகமுண்டாகில் செய்வதென்னென்னில்; (அஞ்சாது) பூதனை பட்டது படுமித்தனை. (சகூ)

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—சூலைசூழ் - கரையாலே சூழப்பட்ட. (சகூ)

**அழைப்பன் திருமாலை யாங்கவர்கள் சொன்ன**
**பிழைப்பில் பெரும்பெயரே பேசி—இழைப்பரிய**
**வாயவனே யாதவனே யென்றவனை யார்முகப்பும்**
**மாயவனை யென்று மதித்து** (ருo)

ப-உ.—இழைப்பு - (நெஞ்சில்) அழுத்துகைக்கு, அரிய - துர்லபனான, ஆயவனே - இடையனானவனே! என்றும் - என்றும், யாதவனே என்றும் - யதுகுலத்திலவதரித்தவனே! என்றும், மாயவனே என்றும் - ஆச்சர்யபூதனானவனே! என்றும், மதித்து - புத்திபண்ணி, ஆங்கு-அந்தத் திருவாய்ப்பாடியிலுள்ள, அவர்கள் - அப்பெண்கள், சொன்ன-உச்சரித்ததாய், பிழைப்பு இல் (கேட்டுப்) பிழைக்கப்போகாததாயிருக்கிற, பெரும் - பெருமையையுடைய, பெயரே - திருநாமத்தையே, பேசி - சொல்லி, திருமால் - ஸ்ரியःபதியான, அவனை - அந்த ஸர்வேஸ்வரனை, யார்முகப்பும் - எல்லார்முன்பும், அழைப்பன் - கூப்பிடுவேன். (ருo)

வ்யா.—ஐம்பதாம்பாட்டு.—(அழைப்பன் திருமாலை) ஸ்ரியःபதியையழைப்பன். (ஆங்கித்யாதி) திருவாயப்பாடியிலவர்கள் சொன்னவற்றை யநுஸந்திக்கப் புக்கால் பிழைக்கவரிதாய் அத்தாலே அரைக்ஷணம் விடப்போகாத திருநாமங்களைச்சொல்லி. "ஆங்கவர்கள்" என்றது - திருவாய்ப்பாடியிலுள்ளவர்களைப் பார்த்து நம்முடைய பக்கலிலே இரங்குவரென்று. (இழைப்பரியவாயவனே) நினைக்கவரிதாம்படி பெண்களைப் படுத்தும் க்லேசத்தையுடைய க்ருஷ்ணனே. (யாதவனே என்றவனை) இடைத்தனத்தோபாதியும் ஸ்ரீவஸுதேவர் மகனானதுவும் ஆகர்ஷகமானபடி. (யார்முகப்பும்) எல்லார்முகப்பும். (மாயவனேயென்றுமதித்து) ஆச்சர்யபூதனேயென்று மதித்து. திருமாலையழைப்பன். (ருo)

அரு.—ஐம்பதாம்பாட்டு.—பிழைப்பில - ஈடுபடுத்துமதாய் என்றபடி. ஆயவனென்றமையாதோ? மாதவனும் வேணுமோ வென்ன;

அருளிச்செய்கிறார் (இடைத்தனத்திலித்யாதி). முகப்பும் — எல்லார் முன்பும். (ருo)

**மதிக்கண்டாய் நெஞ்சே மணிவண்ணன்பாதம்**
**மதிக்கண்டாய் மற்றவன்பேர் தன்னை - மதிக்கண்டாய்**
**பேராழிநின்று பெயர்ந்து கடல்கடைந்த**
**நீராழிவண்ணன் நிறம்.** (ருக)

ப-உ.—நெஞ்சே — மநஸ்ஸே! மணி — நீலரத்நதுல்யமான, வண்ணன் - வடிவையுடையவனுடைய, பாதம் - திருவடிகளை, மதிக்கண்டாய் - புத்திபண்ணுகிடாய்; மற்று - அதற்குமேலே, அவன்-அந்த ஸர்வேஶ்வரனுடைய, பேர்தன்னை-திருநாமங்களை, மதிக்கண்டாய் - புத்திபண்ணுகிடாய்; பேர் — பெரிய, ஆழிநின்று — ஸமுத்ரத்திலிருந்து, பெயர்ந்து - எழுந்திருந்து, கடல் - அந்த ஸமுத்ரத்தை, கடைந்த - மதநம்பண்ணின, நீர்-ஜலம்நிறைந்த, ஆழி-ஸமுத்ரம்போன்ற, வண்ணன் - திருமேனியையுடையவனுடைய, நிறம் - அழகை, மதிக்கண்டாய் - புத்திபண்ணுகிடாய், (ருக)

வ்யா.—ஐம்பத்தோராம்பாட்டு.—(மதியித்யாதி)ஶ்ரமஹரமான வடிவையுடையவனுடைய திருவடிகளை நெஞ்சே மதிக்கண்டாய். அவனுக்கு வாசகமான திருநாமத்தை மதிக்கண்டாய். (மதிக்கண்டாயித்யாதி) கண்வளருகைக்குப் போரும்படி பெரிதான திருப்பாற்கடலில நின்றும் பேர்ந்து பின்னையத்தைக்கடைவதுஞ் செய்து நீரையுடைத்தான கடல்போலே யிருக்கிறவனுடைய திருநிறத்தை யநுஸந்தி. (ருக)

**நிறங்கரியன் செய்ய நெடுமலராள் மார்வன்**
**அறம்பெரிய னாரதறிவார் - மறம்புரிந்த**
**வாளரக்கன் போல்வானை வானவர்கோன் தானத்து**
**நீளிருக்கைக் குய்த்தான் நெறி.** (ருஉ)

ப-உ.—நிறங்கரியன் - கறுத்த வர்ணத்தையுடையனும்,செய்ய - சிவந்த, நெடு — பெரிதான, மலராள் - கமலவாஸிநியான பிராட்டியை, மார்வன் — வக்ஷஸ்ஸிலேயுடையனும், அறம் - ஆந்ருசம்ஸ்ய தர்மத்தினாலே, பெரியன் — சிறந்தவனும், மறம் - க்ரூரகர்மத்தை,

புரிந்த - செய்த, வாள் - வாளென்கிறஆயுதத்தையுடைய, அரக்கன் போல்வானை - ராக்ஷஸனான ராவணனோடொத்த மஹாபலியை, வானவர் - தேவர்களுக்கு, கோன் - ஸ்வாமியான இந்த்ரனுடைய, தானத்து - பதத்திலே, நீள் - சிரகாலம், இருக்கைக்கு - (மேல்மந் வந்தரத்தில்) வஸிக்கும்படிக்கு, உய்த்தான்-பண்ணிக்கொடுத்தவனாயு மிருக்கிற ஸர்வேஸ்வரனுடைய, அது - அந்த, நெறி - ப்ரகாரத்தை, ஆர் - எவர், அறிவார் - அறியவல்லர். (ருஉ)

வ்யா.—ஐம்பத்திரண்டாம்பாட்டு.—(நிறங்கரியனித்யாதி) ஸ்ர மஹரமான வடிவையுடையனாய், நீலமேகத்திலே மின்னற்போலே பிராட்டியைத் திருமார்விலேயுடையனாய், அவளோட்டைக் கலவி யாலே ஆந்ருசம்ஸ்ய ப்ரதானனானபடியை யாரறிவார். (மறம்புரிந்த வித்யாதி) ராவணனோபாதியும் வதத்துக்கு யோக்யனாயிக்கச்செய்தே இவன் பக்கலிலே ஔதார்யகுணங் கிடக்கதென்று, “ஜஹ்நுஸுதாஜிதஃ - மந்வந்தரம்பூர்ணமபேதசத்ருஃ” என்னும்ப டியே மேலிந்த்ரபதம் செலுத்துவதாக வைத்தவனுடைய ஆந்ரு சம் ஸ்யத்தை யறிவாரார். (ருஉ)

அரு.—ஐம்பத்திரண்டாம்பாட்டு.—வானவர்கோன் தானத்தி லே நீளிருக்கைக்கு-ஒருமந்வந்தர மிருக்கைக்காக. உய்த்தாய்-மஹா பலியைப் பாதாளத்திலே நிறுத்தினாய். (ருஉ)

நெறியார் குழல்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியா திளங்கிரியென் றெண்ணிப் - பிரியாது
பூங்கொடிக்கள் வைகும் பொருபுனல் குன்றென்னும்
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு. (ருங)

ப-உ.—நெறியார் - ஸந்மார்க்கத்திற்செல்லுகிற (பக்தஜநங்களு டைய), முன்நின்று - முன்புறத்திலிருந்து, பின்தாழ்ந்து - பின்புறத் தில் தொங்கியிருக்கிற, குழல்கற்றை- மயிர்முடியை, அறியாது-உண ராமல், இளங்கிரி என்று - சிறியமலை என்று, எண்ணி - நினைத்து, பிரியாது - நீங்காமலிருக்கிற, பூ - புஷ்பம்நிறைந்த, கொடிக்கள் - லதைகள், வைகும் - வாஸம்பண்ணுகிறதாயும், பொரு - அலைமோ துகிற, புனல் - ஜலத்தையுடையதாயுமிருக்கிற, குன்று - மலை ; என் னும் - இப்படி ப்ரஸித்தமான, வேங்கடமே - திருமலையே, யாம்-நா ங்கள், விரும்பும் - ஆசைப்படும், வெற்பு - மலை. (ருங)

வ்யா.—ஐம்பத்துமூன்ரும்பாட்டு.—(நெறியாரித்யாதி) ஆஶ்ரயித்தவர்களுடைய முன்னின்று பின்தாழ்ந்த குழற்கற்றையையறியாதே ஒரு சிறுமலையென்றெண்ணி, மூச்சுவிடுதல் உடம்பாடுதல் செய்யாமையாலே இன்னமலை யென்றறியாமையாலே, பூக்களையுடைத்தான கொடிகள் தங்குகிற பொராநின்ற புனலையுடைத்தாயிருந்துள்ள மலை என்கிற திருவேங்கடமே நாமாசைப்படும் மலை.(ருங)

அரு.—ஐம்பத்துமூன்ரும்பாட்டு.—நெறியார் - ஸ்தாவர ப்ரதிஷ்டராயிருந்து த்யாகிக்கிறவர்கள். பிரியாது இடைவிடாதே. (ருங)

**வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டும்**
**நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல் - நிற்பென்**
**றுளங்கோயி லுள்ளம்வைத் துள்ளினேன், வெள்ளத்**
**திளங்கோயில் கைவிடே லென்று. (ருச)**

ப-உ.—சோலை - திருமாலிருஞ்சோலை, வேங்கடம் - திருமலை, என்று - என்கிற திருநாமத்தையுடைய, இரும் - விசாலமான, வெற்புஎன்று - திருமலை என்று சொல்லப்படுகிற, இவ்விரண்டும் - இந்த இரண்டுஸ்தாநமும், நிற்புஎன்று - (உகந்தருளின) வாஸஸ்தாநமென்று, நீ - நீ, மதிக்கும் - எண்ணும், நீர்மைபோல் - ஸ்வபாவம்போலே, உளம் - ஹ்ருதயமாகிற, கோயில்- இருப்பிடமும், நிற்புஎன்று- (உகந்து) வர்த்திக்கும் ஸ்தாநமென்று, உள்ளம்வைத்து - அறிந்து, வெள்ளம் - திருப்பாற்கடலாகிற, இளங்கோயில் - பாலாலயத்தை, கைவிடேல் என்று-கைவிடாதொழியவேணுமென்று, உள்ளினேன்- ப்ரார்த்தித்தேன். (ருச)

வ்யா.—அவ.—ஐம்பத்துநாலாம்பாட்டு.—இவர் திருமலையைவிரும்பப் புக்கவாறே அவனிவருடைய ஹ்ருதயத்தைவிரும்ப, பிரானே! அவற்றைக் கைவிடவொண்ணாதென்கிருர்.

(வெற்பித்யாதி) வெற்பென்று சொல்லப்படாநின்ற தெற்குத் திருமலை பெரியதிருமலை இவைபோலே என்னுடைய ஹ்ருதயத்தையும் உனக்குக் கோயிலாக நினைத்தாயென்றறிந்து. (வெள்ளத்திளங் கோயில் கைவிடேலென்றுள்ளினேன்) நான் க்ருதக்நனாகவொண்ணாதென்று ஹ்ருதயத்திலே புகுருகைக்குபாலாலயமாகக்கொண்ட திருப்பாற்கடலைக் கைவிடாதே கொள்ளென்று இரக்கிறேன். (ருச)

அரு.—ஐம்பத்துநாலாம்பாட்டு.—என்னுள்ளத்தையும் நிற்பா ணகோயிலென்று நினைத்தாய் என்று, உள்ளம்வைத்து - அறிந்து, கைவிடேலென்று, உள்ளினேன் - இரந்தேன் என்றபடி. (ருச)

என்று மறந்தறியே னேழ்பிறப்பு மெப்பொழுதும்
நின்று நினைப்பொழியா நீர்மையால் - வென்றி
அடலாழி கொண்ட வறிவனே. இன்பக்
கடலாழி நீயருளிக் காண். (ருரு)

ப-உ.—வென்றி - ஜயத்தையுடைத்தான, அடல் - யுத்தோந் முகமான, ஆழி - சக்ரத்தை, கொண்ட - ஏந்தின, அறிவனே - ஸர்வஜ்ஞனவனே! ஏழ்பிறப்பும் ஏழு ஜந்மத்திலும், எப்பொழுதும் - எல்லாவவஸ்தையிலும், நின்று - ஸ்திரப்பட்டு, நினைப்பு - நினைவு, ஒழியா - தவறுமலிருக்கிற, நீர்மையால்-ஸ்வபாவத்தால், என்றும் - எக்காலத்திலும், மறந்தறியேன்-விஸ்மருதிபண்ணியறியமாட்டேன்; நீ - நீ, இன்பக்கடலாழி - அபரிச்சிந்நமான ஆநந்தஸமுத்ரத்தை, அருளிக்காண் - கொடுத்தருளவேணுங்காண். (ருரு)

வ்யா.—அவ.—ஐம்பத்தைந்தாம்பாட்டு.—(என்றும்) உன்னை நினைக்கை யரிதான ஸம்ஸாரத்திலே உன்னை நினைக்கும்படி பண்ணினாய்; இனி ப்ராப்தியளவும் பண்ணாயோவென்கிறார்.

(என்று மறந்தறியேன்) ஒருநாளு முன்னை மறந்தறியேன். ஸ்ரவண மநநநிதித்யாஸநாநந்தரம் பிறக்கும் உபாஸநாத்ருவாநுஸ்ம்ருதிகளாலேயோ நீர்மறவாதொழிந்ததென்னில்; (ஏழ்பிறப்பித்யாதி) "எதிர்சூழல் புக்கெனைத்தோர் பிறப்பும்" என்னும்படியே எல்லாஜந்மங்களிலும் எல்லாக்காலத்திலும் நீ நின்று உன்னுடைய நினைவுமாறுக ஸ்வபாவத்தாலே ஒருநாளும் மறந்தறியேன். (வென்றியித்யாதி) நாஞ்செய்தவஞ்சஞ்செய்தோமிறே. எல்லாஞ் செய்யவேணுமென்று நிர்ப்பந்திக்கக் கடவதோவென்ன; உன்பக்கலொருஜ்ஞாந சக்திகளுக்கு வைகல்யங்காண்கிறிலேன்; ஆனபின்பு, (இன்பக்கடலாழிநீயருளிக்காண்) "ஹ்யேவாநந்தயாதி-ஏஷஹ்யேவாநந்தயாதி" என்னும்படியே உன்னுடைய ஆநந்தஸமுத்ரத்தையும் நீயெனக்கருளாய். (ருரு)

காணக் கழிகாதல் கைமிக்குக் காட்டினால்
நாணப் படுமென்றால் நாணுமே - பேணிக்
கருமாலைப் பொன்மேனி காட்டாமுன் காட்டும்
திருமாலை நங்கள் திரு. (ருசு)

ப-உ.—திருமாலை - ஸ்ரிய:பதியை, காண - ஸேவிக்கவேணுமென்று, கழி - மிகுந்திருக்கிற, காதல் - ப்ரீதியானது, கைமிக்கு - விஞ்சி (அமைக்கப்போகாமல்), காட்டினால்-தோற்றினால், நாணப்படும்-அடங்கியிருக்கவேணும், என்றால்-என்று விசாரித்தால், நாணுமே-அடங்குமோ? கரு - கறுத்த நிறத்தையுடைய, மாலை - ஸ்வாமியான ஸ்ரியஃபதியை, பொன் - ஸ்புஹணீயமான, மேனி - திவ்ய மங்களவிக்ரஹமானது, காட்டாமுன் - காட்டுவதற்குமுன், நங்கள் - நமக்கு ஸ்வாமியான, திரு - பெரியபிராட்டியார், பேணி - ஆதரித்து, காட்டும் - தர்சிப்பிக்கும். (ருசு)

வ்யா.—அவ.—ஐம்பத்தாறும்பாட்டு.—(காண) நீர்சேஷபூதரானால் உம்முடைய ஸ்வரூபாநுரூபமாயிருக்கவேண்டாவோ? சேஷியை இப்படி நியமிக்கக்கடவதோ வென்னில்; அதுவிதேயமான போதிறே; ஆசைமிக்கால் செய்யலாவதுண்டோ வென்கிறார்.

(திருமாலைக்காணக் கழிகாதல் கைமிக்குக்காட்டினால் நாணப்படுமென்றால் நாணுமே) ஸர்வேஸ்வரனைக்காணமிகாநின்ற காதல் விஞ்சிக்காட்டினால், நீசேஷி - நான் சேஷபூதனென்னும் முறையிலே நிற்கப்போமோ. கண்டாலல்லது கழியாதே காதலென்றுமாம். ஸாபராதனென்று மீளவும்போகாது. கருமாலைப் பொன்மேனியானது காட்டுவதற்குமுன்னே எங்களுடைய புருஷகாரமாகப் பிராட்டி முன்னே காட்டாநின்றாள். "நகஸ்ஶ்சிந்நாபராத்யதி - நகச்சிந்நாபராத்யதி" என்று - எங்களுடைய குற்றம் அவள் பார்க்கவொட்டாமையாலும் முறையில் நிற்கவொண்ணாது. (ருசு)

அரு.—ஐம்பத்தாறும்பாட்டு.—அது விதேயமானபோது - நானெனக்கு வசமானபோது. பக்திபரவசனானால் என்வசமோ என்றபடி. மேலுக்கவதாரிகை அருளிச்செய்கிறார் (ஸாபராதனித்யாதி). கருமாலை - காளமேகஸ்யாமளனை ஸர்வேஸ்வரனை, திருமேனிதானுபாயமாகக் காட்டுகைக்குமுன்னே நங்கள் திரு மேனி காட்டுமென்றபடி. (ருசு)

அ

**திருமங்கை நின்றருளும் தெய்வம் நாவாழ்த்தும்
கருமம் கடைப் படுமின் கண்டீர் - உரிமையால்
ஏத்தினோம் பாத மிருந்தடக்கை யெந்தைபேர்
நாற்றிசையும் கேட்டீரே நாம்.** (௫எ)

ப-உ.—மங்கை - யௌவநத்தையுடையவளான, திரு - பெரிய பிராட்டியார், நின்றருளும் - நித்யவாஸம்பண்ணும்படி யிருக்கிற, தெய்வம் - ஸர்வாதிகனை, நா - நாக்காலே, வாழ்த்தும் - ஸ்தோத்ரம் பண்ணுகையாகிற, கருமம் - கார்யத்திலே, கடைப்படுமின்கண்டீர் - ஸ்திரசித்தராயிருங்கோள்கிடீர்; நாம் - நாங்கள், இரும் - பருத்தும், தடம் - நீண்டுமிருக்கிற, கை - புஜங்களையுடைய, எந்தை - எமக்கு ஸ்வாமியானவனுடைய, பாதம் - திருவடிகளை, உரிமையால் - (சேஷ சேஷிபாவமாகிற) தகுந்த ஸம்பந்தத்தினாலே, பேர் - திருநாமங்களைக்கொண்டு, ஏத்தினோம் - ஸ்துதித்தோம்; நால்திசையும் - நாலுவிதமான திக்கிலுள்ளாரெல்லாரும், கேட்டீரே - ஸ்ரவணம்பண்ணீர்களோ? (௫எ)

வ்யா.—ஐம்பத்தேழாம்பாட்டு.—(திருமங்கையித்யாதி) பெரியபிராட்டியார் நித்யகடாக்ஷம் பண்ணுகின்றதெய்வத்தை நாவாழ்த்துகையாகிற கருமத்தைக் கைவிடாதே. (இருந்தடக்கையெந்தை பேர்நாற்றிசையுங்கேட்டீரே) பெரிய தோளையுடையனானவென் ஸ்வாமியுடைய பேரன்றோ எல்லாத்திக்குக்களிலுமுள்ளது; அது கேட்டிலிகோளோ. (நாமுரிமையா லேத்தினோம்பாதம்) நாங்களவனுடைய பேரையும் திருவடிகளையும் சேஷபூதரென்னும் ப்ராப்தியாலே ஏத்தினோம். (௫எ)

அரு.—ஐம்பத்தேழாம்பாட்டு.—எல்லாருமவனுக்கு சேஷபூதராகையாலே அவனே ஸ்துத்யனென்று தாத்பர்யம். (௫எ)

**நாம்பெற்ற நன்மையும் நாமங்கை நன்னெஞ்சத்து
ஓம்பி யிருந்தெம்மை யோதுவித்து - வேம்பின்
பொருள் நீர்மையாயினும் பொன்னாழி பாடென்று
அருள் நீர்மைதந்த வருள்.** (௫அ)

ப-உ.—வேம்பு - வேம்புஎன்கிற, பொருளின் - வஸ்துவினுடைய, நீர்மை-ஸ்வபாவம்போலே, ஆயினும்-இருந்தாலும், பொன்-

ஸ்ப்ருஹணீயமான, ஆழி - சக்ரத்தையுடையவனே, பாடு - கானம் பண்ணு, என்று - என்று, நாமங்கை - ஸரஸ்வதியானவள், நல்-விலக்ஷணமான, நெஞ்சத்து - ஹ்ருதயத்தில், ஓம்பியிருந்து - ஆதரித்திருந்து, எம்மை - நம்மை, ஓதுவித்து - சொல்லிவைத்து, நாம் - நாம், பெற்ற - அடைந்த, நன்மையும் - புருஷார்த்தமும், அருள்-க்ருபை பண்ணுகையே, நீர்மை - ஸ்வபாவமாகவுடைய ஸர்வேஶ்வரன், தந்த - கொடுத்த, அருள் - அநுக்ரஹம். (ருஅ)

வ்யா.—அவ.—ஐம்பத்தெட்டாம்பாட்டு.—(நாம்பெற்ற) நீரிப்படி ஏத்துகைக்கடியென்னென்னில்; ஸரஸ்வதி என் ஹ்ருதயத்திலே இருந்து என்னை ஓதிவைத்ததென்கிறது.

(நாம் பெற்றயித்யாதி) எங்களுக்கிந்த நன்மையுண்டாயிற்று,நாமங்கையானவள் ஹ்ருதயத்திலேயிருந்து நம்மை ஓம்பியோதுவித்தத்தாலே. ராஜபுத்ராதிகள் ராஜவைபவமறியாதிருக்கச் செய்தே அத்தைச் சொல்லவறியாமையாலே விரஸமானாலும் ஸரஸமாகத்தங்கள் ஸ்வரூபத்துக்குக் கற்பிக்கும் தாஸவ்ருத்தைகளைப்போலே. அவள் ஹ்ருதயத்திலே யிருந்தோதுவிக்கைக்கடி சொல்லுகிறது. (வேம்பித்யாதி) இனியவிது வேம்புபோலே கையாநின்றதேயாகிலும் பாடென்றருளி யல்லது நிற்கப்போகாத அவனுடைய நீர்மையாலே தந்தவருள் - தந்தப்ரஸாதம் ஸரஸ்வதி யோதுவிக்கைக்கடி. (ருஅ)

அரு.—ஐம்பத்தெட்டாம்பாட்டு.—ஓம்பி-வளர்த்து, கிளர்ந்தென்றபடி. ஸரஸ்வதியையிட்டுப் பாடுவித்ததெப்படி யிருக்கிறதென்ன, த்ருஷ்டாந்த பூர்வகமாக அருளிச்செய்கிறார் (ராஜபுத்ரனித்யாதி). தங்கள் ஸ்வரூபத்துக்கு-தாஸிகளான தங்கள் ஸ்வரூபத்துக்குச் சேரக் கற்பிக்கிற என்றபடி. அநக்ஷரமாகவும்-குறையாயும். இது - இந்தத் தமிழ்மாலை. பாடென்றருளும் அருள் நீர்மை – பாடென்றருளி நீர்மை தந்தவருள் என்றபடி. சில சில விரஸமாகச்சொன்னால், அத்தை ஸரஸமாக - பஹுமாநமாகக் கற்பிப்பார்கள். (ருஅ)

**அருள் புரிந்தசிந்தை யடியார் மேல்வைத்து**
**பொருள் தெரிந்து காண்குற்றவப்போது-இருள் திரிந்து**
**நோக்கினேன் நோக்கி நினைந்தேன தொண் கமலம்**
**ஓக்கினே னென்னையுமங் கோர்ந்து. (ருகூ)**

ப-உ.—அருள் - க்ருபையோடு, புரிந்த - கூடின, சிந்தை - திருவுள்ளத்தை, அடியார்மேல் - தாஸபூதர்களான எங்கள்மேலே, வைத்து - ஸ்தாபித்து, பொருள் - வஸ்துவென்று, தெரிந்து - அறிந்து, காண்குற்ற - கடாக்ஷித்தருளுகிற, அப்போது - அக்காலத்தில், இருள் - அஜ்ஞாநம், திரிந்து - நசித்து, நோக்கினேன் - (உன் ஸ்வரூபத்தை) ஸாக்ஷாத்கரித்தேன்; நோக்கி - ஸேவித்து, ஒண் - அழகிய, கமலம் - தாமரஸபுஷ்பம்போன்ற, அது-அத்திருவடிகளை, நினைந்தேன் - அநுஸந்தித்தேன்; என்னையும் - என்னையும், ஓர்ந்து - உள்ளபடியறிந்து, அங்கு - அத்திருவடிகளில், ஒக்கினேன் - ஸமர்ப்பித்தேன். (௫௯)

வ்யா.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—(அருள்புரிந்தவித்யாதி) அடியோமான வெங்கள்மேலே அருள்புரிந்த சிந்தையைவைத்து அத்தாலே நாங்கள் பதார்த்தங்களையறிந்து காணவுற்றபோது, நீசேஷி - நான் சேஷபூதனென்கிற ஜ்ஞாநத்துக்கு விரோதியான அஜ்ஞாநத்தைப்போக்கி யுணர்ந்து உன்னுடைய கமலம்போன்ற திருவடிகளை நினைத்தேன்; ஆராய்ந்துபார்த்து பரதந்த்ரனாயிருக்கையாலே, என்னை உன் திருவடிகளிலே ஸமர்ப்பித்தேன்; அருள்புரிந்துள்ள உன் திருவுள்ளத்தை எங்கள் மேலே வைத்து எங்களை யொரு பதார்த்தமாக புத்தி பண்ணின போதென்றுமாம். (௫௯)

அரு.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—பொருள்தெரிந்து காண்குற்றவப்போது-நீ எங்களை ஒரு பொருளாக விசாரித்துத் திருவுள்ளம் பற்றினபோதென்று ஈஸ்வரபரமாதல். (௫௯)

ஒருருவ னல்லை யொளியுருவம் நின்னுருவம்
ஈருருவ னென்ப ரிருநிலத்தோர் - ஒருருவம்
ஆதியாம் வண்ண மறிந்தா ரவர்கண்டீர்
நீதியால் மண்காப்பார் நின்று. (௬0)

ப-உ.—ஓர் - ஒருபடியாயிருக்கும், உருவனல்லை - (விஜாதீய) ஸ்வரூபத்தையுடையவனன்று; ஒளி-(ஆஸ்ரிதபரதந்த்ரனாய்) உஜ்வலமான, உருவம் - ஸ்வரூபம், நின் - உன்னுடைய, உருவம்-ஸ்வரூபம்; இரு-விசாலமான, நிலத்தோர் - பூமியிலுள்ளார், ஈர் உருவன் - இரண்டுவிதமான ஸ்வரூபத்தையுடையவன், என்பர்-என்று

சொல்லுவர்கள். ஓர் - ஆஶ்ரித ரக்ஷகத்ரமாய் ஒருபடிப்பட்ட, உருவம் - ஸ்வரூபமே, ஆதி - ஜகத்காரணமாய், ஆம் - (ஆஶ்ரிதர்க்கு) உஜ்ஜீவநகரமான, வண்ணம் - ப்ரகாரத்தை, அறிந்தார் - உணர்ந்தவர்களான, அவர்கண்டீர் - அந்த மஹாத்மாக்கள்கிடீர், நீதியால் - (எல்லாருக்கு முபதேசிக்கையாகிற) ந்யாயத்தாலே, நின்று - ஸ்திரமாயிருந்து, மண் - பூமியை, காப்பார் - ரக்ஷிப்பர்கள், (கூ0)

வ்யா.—அறுபதாம்பாட்டு.—(ஒருருவனல்லே) "நித்யோ நித்யானாம்-நித்யோநித்யாநாம்" என்கிறபடியே ஸர்வவிஸஜாதீயம் என்கிறதன்றுனக்கு வடிவு. (ஒளியுருவம் நின்னுருவம் "ஹந்தா நாகஞ்ச ப்ரகாஶதே - பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே" என்கிறதுனக்குஸ்வரூபம். (இருநிலத்தோரீருருவனென்பர்) அறியாதார் பெரிய ஈஶ்வரனென்பர்கள். (ஒருருவமித்யாதி) எல்லார்க்கும் ஸத்தை அவனேயென்றறிந்த வைஷ்ணவர்கள் பூமியை முறை குலையாமல் காப்பார். "தீர்த்தகராமின் திரிந்து" என்னும்படியே. (கூ0)

அரு.—அறுபதாம்பாட்டு.—(ஒருருவம) அத்விதீயமாய், ஸர்வஸ்மாத்பரமாயிருக்குமது, உன்ஸ்வரூபமன்று. (ஒளியுருவம்)ஆஶ்ரித பரதந்த்ரனாயிருக்கும் வடிவே யுனக்குவடிவு. முறைகுலையாமல்-சேஷ சேஷிபாவங்கெடாமல். (கூ0)

நின்றதோர் பாதம் நிலம் புதைப்ப, நீண்டதோள்
சென்றளந்த தென்பர் திசையெல்லாம் - அன்று
கருமாணி யாயிரந்த கள்வனே, உன்னைப்
பிரமாணித்தார் பெற்ற பேறு. (கூக)

ப உ.—நின்றதோர் - நிற்கிறதொரு, பாதம் - திருவடியானது, நிலம் - பூமியை, புதைப்ப - மறைக்க, நீண்ட - வளர்ந்த, தோள் - புஜமானது, திசையெல்லாம் - திக்குகளெல்லாவற்றையும், சென்று - போய், அளந்தது - ஆக்ரமித்தது; என்பர் - என்றுசொல்லுவர்கள். அன்று - (இந்த்ரன்ப்ரார்த்தித்த) அக்காலத்தில், கரு - கறுத்த திருமேனியையும், மாணியாய் - ப்ரஹ்மசாரி வேஷத்தையுமுடையவனாய்க்கொண்டு, இரந்த - யாசித்த, கள்வனே - வஞ்சகனே! (இப்படி பலியை வஞ்சித்து இந்த்ரனை ரக்ஷித்தது), உன்னை-உன்னை, பிரமாணித்தார் - விஶ்வஸித்தவர்கள், பெற்ற - அடைந்த, பேறு - புருஷார்த்தமன்றோ? (கூக)

வ்யா.—அவ.—அறுபத்தோராம்பாட்டு.—(நின்றதோர்பாதம்) வடிவேயோ? அவனுடைய சேஷ்டிதமும் ஆஸ்ரிதபரதந்த்ரமென் கிறது.

(நின்றதித்யாதி) இரந்து நின்ற நிலையிலே பூமி யெல்லாம் ஓரடியாலே மறையும்படிக்கீடாக. (நீண்டவித்யாதி) கையிலே நீர் விழுந்தவாறே அலப்யலாபம்போலே வளர்ந்த தோளானது திக்கு க்களெல்லாம் சென்றளந்ததென்பர். (அன்றித்யாதி) உன்னைப்பே ணாதே உன்னுடைய விபூதியை யவன் தன்ன தென்ன, அவன் பக்க லிலே யிரந்தாயாய் வஞ்சித்தாய்; இச்செய்தது இந்த்ரன் ஒருத்த னுக்குச் செய்ததேயோ? ஆஸ்ரிதவிஷயத்தில் தன்னை யழியமாறி வஞ்சிக்கும். தூதுபோம், ஸாரத்யம் பண்ணும். எல்லாம் செய் து ரக்ஷிக்குமென்று உன்னைப்ரமாணிக்தவர்கள் மார்விலே கைவைத் துறங்கும்படி பண்ணினையத்தனையன்றோ. (௬௧)

பேறொன்றுமுன்னறியேன்பெற்றறியேன்பேதமையால்
மாறென்று சொல்லி வணங்கினேன் - ஏறின் [போய்
பெருத் தெருத்தம் கோடொசியப் பெண்நசையின் பின்
எருத் திறுத்த நல்லாய ரேறு. (௬௨)

ப-உ.—ஏறின் - ருஷபங்களுடைய, பெருத்த - வ்ருத்தியடைந் த, எருத்தம் - பிடரியையும், கோடு - கொம்புகளையும், ஒசிய - மு றியும்படிக்கு, பெண் - நப்பின்னைப்பிராட்டி விஷயமான, நசையின் - ஆசையினுடைய, பின்போய் - பின்னே சென்று, எருத்து - (ருஷ பங்களின்) பிடரியை, இறுத்த - முறித்த, நல் - ஸ்ரேஷ்டரான, ஆ யர் - இடையர்களுக்கு, ஏறு - தலைவனான க்ருஷ்ணன், மாறு - (நம் பாபங்களுக்கு) சத்ரு, என்று சொல்லி - என்று நினைத்து, வணங்கி னேன் - ஆஸ்ரயித்தேன்; பேதமையால் - அறிவில்லாமையால், முன் - இதுக்கு முன்பு, ஒன்று - இப்படியொரு, பேறு - புருஷார் த்தம், (உண்டென்று), அறியேன்-அறியமாட்டேன். பெற்றறியேன்- அடைந்தறியமாட்டேன். (௬௨)

வ்யா.—அவ.—அறுபத்திரண்டாம்பாட்டு.—(பேறொன்று) நப் பின்னைப்பிராட்டிக்கு ப்ரதிபந்தகமான எருதுகளைப்போக்கி அவ ளைத்தனக்காக்கிக் கொள்ளுகையாலே நம்முடைய ப்ரதிபந்தகங்களை யும் போக்குமென்கிறது.

(பேறித்யாதி) பேறொன்றுண்டாக முன்பறியேன். அறியாமையேயன்று, பெற்றுமறியேன். (பேதமையால்) பெறாமைக்கடி அறிவுகேடு; ஏறின்பெருத்தெருத்தங் கோடொசியப்பெண்ணசையின் பின்போய், எருத்திறுத்த நல்லாயரேறு, மாறென்றுசொல்லி வணங்கினேன்) எருத்தினுடைய பெருத்தக்குத்தும் கொம்புகளும் ஒசியும்படிக்கிடாக நப்பின்னைப் பிராட்டியைப் பெறலாமென்கிற நசையாலே எருத்திறுத்த நல்லாயரேறு நம்ப்ரதிபக்ஷத்துக்கும் மாறென்று சொல்லி வணங்கினேன். (சுஉ)

அரு.—அறுபத்திரண்டாம்பாட்டு.—எருத்தம்-கழுத்து. மாறு-சத்ரு. (சுஉ)

ஏற்றேழும் வென்றடர்த்த வெந்தை, எரியுருவத்
தேறேறி பட்டவிடு சாபம் - பாறேறி
யுண்டதலை வாய்நிறையக் கோட்டங்கையொண்குருதி
கண்ட பொருள் சொல்லில் கதை. (சுங)

ப-உ.—ஏறு ஏழும் - ஏழு ருஷபங்களையும், வென்று - ஜயித்து, அடர்த்த - முறித்த, எந்தை - என் ஸ்வாமியானக்ருஷ்ணன், எரி - நெருப்பினுடைய, உருவத்து - ரூபத்தையுடையவனாய், ஏறு-ருஷபத்தை, ஏறி - ஏறியிருக்கிற ருத்ரனால், பட்ட - அநுபவிக்கப்பட்டும், விடு - (ப்ரஹ்மாவாலே) விடப்பட்டுமிருக்கிற, சாபம் - சாபத்தை (போக்குகைக்காக), பாறு - பருந்து, ஏறி - மேல் விழுந்து, உண்ட - புஜித்த, தலை - சிரஸ்ஸோடு கூடின, வாய் - வாயானது, நிறைய - பூர்ணமாகும்படி, கோடு - குவிந்த, அம்-அழகிய, கை - கரத்தினால்,(தெறிக்கப்பட்ட), ஒண் - அழகிய, குருதி - ரக்தத்தை, கண்ட - பார்த்த, பொருள் - அர்த்தத்தை, சொல்லில் - சொல்லப்புக்கால், கதை - பெரிய கதையாயிருக்கும், (சுங)

வ்யா.—அவ.—அறுபத்துமூன்றாம்பாட்டு.—(ஏறேழும்) அபிமாநியான ருத்ரனுடைய சாபத்தைப் போக்குகையாலும் அவனே ஆஶ்ரயணீயனென்கிறது.

(ஏறேழுமித்யாதி) ஏறேழையும்வென்றஸ்வாமி. (எரியித்யாதி) எரியினுடைய உருவையுடையனாய் ருஷபத்தை ஏறினருத்ரனை ப்ரஹ்மா "கபாலீத்வம்ஹவிஷ்யஸி-கபாலீத்வம்பவிஷ்யஸி" என்றிட்ட

சாபத்தை ஒட்டினவழகியனை. (பாறேறியித்யாதி) கழுதும்பருந் துமேறி உண்ணுகின்ற தலையையுடையவாய் கிறையும்படிக்கீடாக அழகிய குருதியைக்கண்ட அர்த்தத்தைச்சொல்லில் அதொருமஹா பாரதம். எழெழுத்தையடர்த்தவிடத்தில் அத்தாலொரு தோஷமின் றிக்கேயிருக்க ஒருதலையை யறுத்ததுக்காக பாதகியானவனுடைய சாபத்தைப்போக்கினவனோ? ஈஸ்வரன், பாதகியானவனோ? தலையறுப்புண்டு சோச்யனானவனோ? பார்த்துக்கொள்ளுபத்தனே. (௬௩)

அரு.—அறுபத்துமூன்றும் ... டு.—கோட்டம்-கொட்டுவாய்-அடிச்சொடினதை. "பாறு" என்று பறவையாய் பக்ஷியென்றபடி. ()

* கதையின் பெரும் பொருளும் கண்ணா, நின் பேரே
இதைய மிருந்தவையே யேத்தில் - கதையும்
திருமொழியாய் நின்ற திருமாலே, உன்னைப்
பருமொழியால் காணப் பணி. (௬௪)

ப-உ.—கண்ணா - க்ருஷ்ணனே! கதையின் - இதிஹாஸ புராணங்களுடைய, இதயம் - தாத்பர்யத்தை, இருந்தவையே - உள்ளபடியே, ஏத்தில் - (அறிந்து) ஸ்துதிக்கில், பெரும் - முக்யங்களான, பொருளும் - அர்த்தங்களும், நின் - உனக்கு வாசகமான, பேரே - திருநாமமேயாயிருக்கும். கதையும் - விசேஷித்துச்சொல் லப்படுகிற, திரு - அழகிய, மொழியாய் - சப்தங்களுக்கு ப்ரதிபாத்யனாய், நின்ற - இருக்கிற, திருமாலே - ஸ்ரியஃபதியே! உன்னை - உன்னை, பரு பரிபூர்ணமான, மொழியால் - சப்தங்களாலே, (ஸ்துதித்து), காண - அநுபவிக்கும்படி, பணி - அருள்செய். (௬௪)

வ்யா.—அவ.—அறுபத்நாலாம்பாட்டு.—(கதையித்யாதி) இதிஹாஸ புராணங்களுடைய ஹ்ருதயமிருக்கபடி அறிந்துசொன்ன வற்றில் நிர்ணீதமானவாத்தம ஆஸ்ரிதபவ்யனானவனுடைய திருநாமத்தைச் சொல்லுகையென்கிறது.

(கதையினித்யாதி) இதிஹாஸ புராணங்களிலே ப்ரதிபாதிக்கப்பட்ட ஸ்ரியஃபதியாயிருந்துள்ள வுன்னைக் குறையற்றசொல்லாலே யேத்தி அநுபவிக்கும்படி யருளிச்செய். அநவாப்தியான சொல்லன்றிக்கே உன்னைக்கண்டு ஹ்ருஷ்டனாய் ஏத்தப்பணி. (௬௪)

* கதையும் – என்று உரையின்பாடம்.

அரு.—அறுபத்துநாலாம்பாட்டு.—“ கண்ணு கதையி ளிதய மிருந்தவையே எத்தில் பெரும்பொருளும் நின்பேரே” என்றதன்வயி த்து அருளிச்செய்கிறார் (இதிஹாஸேத்யாதி). காண் என்றதைப் பற்ற அருளிச்செய்கிறார் (அநவாப்தியான இத்யாதி). (சுச)

**பணிந்தேன் திருமேனி பைங்கமலம் கையால்**
**அணிந்தேனுன் சேவடிமே லன்பாய்த் - துணிந்தேன்**
**புரிந்தேத்தி யுன்னைப் புகலிடம் பார்த்து, ஆங்கே**
**இருந்தேத்தி வாழு மிது. (சுரு)**

ப-உ.—திரு - அழகிய, மேனி - விக்ரஹத்தை, பணிந்தேன் - வணங்கினேன். உன் - உன்னுடைய, சே - சிவந்த, அடிமேல் - திருவடிகளின்மேலே, பை - அழகிய, கமலம் - தாமரஸபுஷ்பத்தை, அன்பாய் - ப்ரேமத்தையுடையனாய்க்கொண்டு, கையால் - கரத்தினலே, அணிந்தேன் - சாத்தினேன். புரிந்து - விரும்பி, உன்னை - உன்னை, ஏத்தி - ஸ்துதித்து, புகலிடம் - (அவதாராநந்தரம்) ப்ரவேசிக்கும் ஸ்ரீவைகுண்டத்திலே, பார்த்து - ஸாக்ஷாத்கரித்து, ஆங்கே - அவ்விடத்திலேயே, இருந்து - இருந்து, ஏத்தி - ஸ்தோத்ரம் பண்ணி, வாழும் - வாழ்கையாகிற, இது - இப்புருஷார்த்தத்தில், துணிந்தேன் - அத்யவஸித்தேன். (சுரு)

வ்யா.—அறுபத்தைந்தாம்பாட்டு.— (பணிந்தேன் திருமேனி) கண்டேனென்னும் சொல்லை சேஷபூதராகையாலே பணிந்தேனென்றுசொல்லுகிறார். (பைங்கமலமித்யாதி) உன் திருவடிகளிலே ஸ்நேஹத்தையுடையேனாய் அழகிய தாமரைப்பூவை யணிந்தேன். (புரிந்தேத்தி உன்னைப் புகலிடம்பார்த்தாங்கே யிருந்தேத்திவாழுமிது துணிந்தேன்) உன்னை ஸேவித்திருந்துபார்த்து ஏத்தி பரமபதத்திலிருக்கும்படியைப்பார்த்து ஆங்கேயிருந்தேத்துகைதானே வாழ்வாக விருக்கிற வித்தையத்யவஸித்தேன். பெருமாள் புக்கருளினல் பின்னும் முன்னும் நின்றுவைத்த வனத்தையும் பின்பும் பிறகுவாளியையும் கண்டேத்துகையிலே துணிந்தேன். (சுரு)

அரு.—அறுபத்தைந்தாம்பாட்டு.—உன்னையிங்கே ஸேவித்துப் புரிந்தேத்தி-பார்த்தேத்தி. புரிகை-பார்க்கை. அன்றிக்கே, புரிகை - சுற்றும் பார்க்கையாய், அத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (பெருமா

ளித்யாதி). புக்கருளினால் - புறப்பட்டருளினால். புகவிடமென்றதுக் கநுகுணமாக புக்கருளினாலென்கிறது. (சுரு)

**இது கண்டாய் நன்னெஞ்சே யிப்பிறவி யாவது**
**இது கண்டா யெல்லாம் நாமுற்றது - இதுகண்டாய்**
**நாரணன் பேரோதி நரகத் தருகணையாக்**
**காரணமும் வல்லையேல் காண்.** (சுா)

ப-உ.—நல் - நன்றாய் இசைந்த, நெஞ்சே மநஸ்ஸே! இப்பிறவியாவது - இந்த ஸம்ஸாரமாகிறது, இது கண்டாய் - (தோஷயுக்தமான) இதுவேகிடாய்; நாம் - நாம், உற்றது எல்லாம் - அநுபவித்ததெல்லாம், இது கண்டாய் - இந்தத்துக்கமே கிடாய்; நாரணன் - சேஷியான ஸர்வேஶ்வரனுடைய, பேர் - திருநாமத்தை, ஓதி - சொல்லி, நரகம் - நரகம் போன்ற ஸம்ஸாரத்தினுடைய, அருகு - சமீபத்திலும், அணையா - சேராமைக்கு, காரணமும் - ஹேதுவும், இது கண்டாய் - (இஸ்ஸம்ஸாரத்தில் தோஷதர்சநமான) இதுவேகிடாய்; வல்லையேல் - (காண) ஸாமர்த்ய முடையையாகில், காண் - பார். (சுசு)

வ்யா.—அவ.—அறுபத்தாறும்பாட்டு.—ப்ராப்திக்கும் ப்ரதிபந்தக நிவ்ருத்திக்கு மடிஸம்ஸாரதோஷ தர்சநம்பண்ணுகை; எத்துகையில் துணிகையன்று.

(நன்னெஞ்சே இப்பிறவியாவதிதுகண்டாய்) பாபத்தாலே நன்றென்றிருந்ததன்று, பகவத் ப்ரஸாதத்தாலே பொல்லாதென்று தோற்றினவிதுகண்டாய் ஸம்ஸாரமாவது. (இதுகண்டாயெல்லாநாமுற்றது) அங்குத்தைக் கஸாதாரணராயிருக்கச் செய்தே நாமநுபவித்ததெல்லாங் கண்டாயிறே; இதுக்கொரு ப்ரமாணம் வேண்டாவிறே. (இதுகண்டாயித்யாதி) வகுத்தவனுடைய திருநாமத்தைச்சொல்லி நரகஸமீபத்தில் செல்லாமைக்குக் காரணம் இதினுடைய தோஷதர்சநமே. (வல்லையேல்காண்) அநுபவித்திருக்கச்செய்தே விடப்போகாதொழிகிறது பாபம், இல்லையாகில் இதினுடைய தோஷ தர்சநத்தைப்பண்ணு. (சுசு)

அரு.—அறுபத்தாறும்பாட்டு.—எல்லாம்நாமுற்றது-ததேகப்ராப்யராயிருக்கிற நாமிதரபோகத்தை யெல்லாமுற்றதுகண்டாயே. இல்லையாகில் - பாபமில்லையாகில். (சுசு)

**கண்டேன் திருமேனி யான்கனவில், ஆங்கவன்கைக்**
**கண்டேன் கனலும் சுடராழி - கண்டேன்**
**உறுநோய் வினையிரண்டு மோட்டுவித்துப், பின்னும்**
**மறுநோய் செறுவான் வலி.** (௬௭)

ப-உ.—யான் - நான், திரு - அழகிய, மேனி - திருமேனியை, கனவில் - ஸ்வப்நத்தில (கண்டாற்போலே), கண்டேன் - அநுபவித்தேன்; ஆங்கு-அக்கனவில், அவன்-அவனுடைய, கை - ஸ்ரீஹஸ்தத்தில், கனலும் - அனலையுமிழுகிற, சுடர்-உஜ்வலமான, ஆழி-சக்ரத்தை, கண்டேன் - அநுபவித்தேன்; உறு - (ஆத்மாவோடு) கூடியும், நோய் - துக்கஜநகமுமான, வினை - புண்யபாபங்கள், இரண்டும் - இரண்டையும், ஓட்டுவித்து - துறத்திவிட்டு, பின்னும்-பின்னையும், மறு - திரும்பிவரக்கடவதாய், நோய்-துக்கஜநகமான வாஸனையை, செறுவான்-போக்கடிக்குமவனுடைய, வலி - பலத்தை, கண்டேன் - அநுபவித்தேன். (௬௭)

வ்யா.—அறுபத்தேழாம்பாட்டு.—(கண்டேனித்யாதி) ஆத்மாவுக்கு நித்யதர்மமான ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷிக்கைக்கு ஆனைத்தாளான மநஸ்ஸாலே புறப்பட்டு பாஹ்யேந்த்ரியங்களாலே காண்கையன்றிக்கே "ஸ்வப்நதீகம்பம் - ஸ்வப்நதீகம்பம்" என்கிறபடியே மநஸ்ஸாலே காண்கை கனவிலே காண்கையாவது. (ஆங்கித்யாதி) அபாதிதமாகக்கண்டேன். (கண்டேனித்யாதி) அநுபவிக்கக்கடவதான புண்யபாபங்களைப் போக்கிப் பின்பு வாஸனையும் போக்குமவனுடைய மிடுக்கைக்கண்டேன். வாஸனையைப் போக்குகைக்கு வலிகண்டேனென்றுமாம். (௬௭)

அரு.—அறுபத்தேழாம்பாட்டு.—அபாதிதமாக-ப்ரத்யக்ஷம்போலே. மறுநோய் - வாஸனை. செறுவானுடைய வலியைக்கண்டேனென்னுதல்; செறுகைக்கு வலிகண்டேனென்னுதல். (௬௭)

**வலிமிக்க வாளெயிற்று வாளவுணர் மாள**
**வலிமிக்க வாள்வரை மத்தாக - வலிமிக்க**
**வாணாகம் சுற்றி மறுகக் கடல் கடைந்தான்**
**கோணாகம் கொம்பொசித்த கோ.** (௬௮)

ப-உ.—வலிமிக்க - மிகுந்த பலத்தையுடையவர்களும், வாள் - ஒளியையுடைய, எயிறு - பற்களையுடையவர்களும், வாள் - வாளாயுதத்தையுடையவர்களுமான, அவுணர் - அரக்கர், மாள - நசிக்கும்படி, வலிமிக்க - மிக்கபலத்தையுடைய, வாள் - ஒளிவிடுகிற, வரை - (மந்தர) பர்வதத்தை, மத்தாக-மத்தாகச் (செய்து), வலிமிக்க - அதிக மிடுக்கையும், வாள் - ஒளியையுமுடைய, நாகம் - (வாஸுகியாகிற) ஸர்ப்பத்தை, சுற்றி - (கயிறாகச்) சுற்றி, மறுக-சுழலும்படி, கடல் - ஸமுத்ரத்தை, கடைந்தான் - மதநம்பண்ணினவன், கோள் - மிடுக்கையுடைய, நாகம் - (குவலயாபீடமென்கிற) யானையினுடைய, கொம்பு - தந்தத்தை, ஒசித்த - முறித்த, கோ - (ஸர்வ) ஸ்வாமி (கிடீர்). (௬அ)

வ்யா.—அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு.—(வலி மிக்க) இவனைக்கொண்டு வாஸனையைப் போக்குவிக்கையன்றிக்கே உப்புச்சாறு கொள்ளுமவர்களைச்சொல்லுகிறது.

(வலியித்யாதி) மிடுக்கையுடையராய் ஸாயுதரான அஸுரர் முடிய. (வலிமிக்கவாள்வரை மத்தாக) கடையப்புக்கால் பிதிர்ந்து போகாதபடி மிடுக்கையுண்டாக்கி மந்தரத்தை மத்தாகக்கொண்டு. (வலிமிக்க வித்யாதி) நாற்காற்கடைந்தவாறே யற்றுப்போகாதபடி வாஸுகிக்கு மிடுக்கைக்கொடுத்து. (மறுசக்கடல் கடைந்தான்) கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறியும்படி கடலைக்கடைந்தான். (கோணாகம் கொம்பொசித்தகோ) நம்மை முடிக்கவந்தகுவலயாபீடத்தைக் கொன்று நாட்டுக்கொரு சேஷியைத்தந்தான். ௬அ)

**கோவாகி மாநிலம் காத்து, நங் கண்முகப்பே
மாவேகிச் செல்கின்ற மன்னவரும் - பூமேவும்
செங்கமல நாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும்
தண்கமல மேய்ந்தார் தமர்.** (௬௯)

ப-உ.—கோவாகி - ஸ்வாமிகளாகி, மா - பரந்த, நிலம் - பூமியை, காத்து - ரக்ஷித்து, நம் - நம்முடைய, கண்முகப்பே - கண்வட்டத்திலே, மா - குதிரையை, ஏகி-ஏறி, செல்கின்ற - செல்லுகிற, மன்னவரும் - ராஜாக்களும், செம் - சிவந்த, கமலப்பூ - தாமரைபுஷ்பம், மேவும் - பொருந்தியிருக்கிற, நாபியான் - நாபியையுடையவனு

டைய ஸர்வேஶ்வரனுடைய, சே - சிவந்த, அடிக்கே - திருவடிகளிலே, ஏழ்பிறப்பும் - ஏழுஜந்மங்களிலும், தண் - குளிர்ந்த, கமலம் - தாமரைப்பூவை, ஏய்ந்தார் - சாத்தினவர்களான, தமர் - பக்தர்கள் கிடீர்.

(சூகூ)

வ்யா.—அறுபத்தொன்பதாம்பாட்டு.—(கோவாகி) தேவர்களையொழியச்சிலர் வாழாதே யிருக்கச்செய்தே சிலர் வாழ்ந்தாராயிருக்கிற ராஜாக்களும். (பூமேவுமித்யாதி) அழகியதாமரைப்பூவைத்திருநாபியிலே யுடையனானவனுடைய திருவடிகளிலே குளிர்ந்த தாமரைப்பூவை யணிந்த தமர்களிறே ராஜாக்களாய்த் திரிகிறவர்கள்.

அரு.—அறுபத்தொன்பதாம்பாட்டு.—அம்ருதபானமுகத்தாலே வாழ்ந்த தேவர்களையொழிய இவ்வருகுள்ள ராஜாக்களுமவனை யாஶ்ரயித்து ஐஶ்வர்யம் பெற்றார்களென்கிறதிப்பாட்டு. (சூகூ)

**தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்**
**தமருள்ளும் தண்பொருப்பு வேலை - தமருள்ளும்**
**மாமல்லை கோவல் மதிள் குடந்தை யென்பரே**
**ஏவல்ல வெந்தைக் கிடம்.** (எ0)

ப-உ.—தமர் - பக்தஜநங்களுடைய, உள்ளம் - ஹ்ருதயம், தஞ்சை - தஞ்சைமாமணிக்கோயில், தலை-(திருப்பதிகளில்)ப்ரதாநமான, அரங்கம் - கோயில், தண்கால் - திருத்தண்கால், தமர் - பக்தர், உள்ளும் - த்யாநிக்கும், தண் - குளிர்ந்த, பொருப்பு - (திருவேங்கட) மலை, வேலை-திருப்பாற்கடல், தமர் - பக்தர், உள்ளும் - அநுஸந்திக்கும், மாமல்லை - திருக்கடல்மல்லை, கோவல் - திருக்கோவலூர், மதிள் - ப்ராகாரத்தையுடைய, குடந்தை - திருக்குடந்தை (இவைகள்), ஏவல்ல - (சத்ருக்களை) நிரஸிக்க ஸமர்த்தனாய், எந்தைக்கு-எமக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுக்கு, இடம் - வாஸஸ்தாநம்; என்பர்-என்றுசொல்லுவர்கள்.

(எ0)

வ்யா.—அவ.—எழுபதாம்பாட்டு.—தனக்கு நல்லவர்களுக்கு அவன் ஸந்நிதிபண்ணுமிடங்கள் சொல்லுகிறது.

(தமருள்ளம்) அவற்றில் முற்பட்டது ஆஶ்ரிதருடைய ஹ்ருதயம். (தஞ்சை) தஞ்சைமாமணிக்கோயில். (தலையரங்கம்) திருப்பதிகளில் ப்ரதாநமான கோயில். (தண் கால், தமருள்ளுந்தண் பொரு

ப்பு) வைஷ்ணவர்களுக்கு ஸர்வஸ்வமான திருமலை. (வேலை) திருப்பாற்கடல். (தமருள்ளும் மாமல்லை, கோவல்) மூன்றுழ்வார்களையும் நெருக்கினவிடம். (மதிள்குடந்தை) திருமழிசைப்பிரானுகந்தவிடம் (என்பரே ஏவல்ல வெந்தைக்கிடம்) சக்ரவர்த்தித்திருமகனுக்கிடமென்று சொல்லுவர்கள். (எ0)

அரு.—எழுபதாம்பாட்டு.—ஏவல்ல - எய்யவல்ல. (எ0)

இடங்கை வலம்புரிநின் றூர்ப்ப, எரி கான்று
அடங்கா ரொடுங்குவித்த தாழி - விடம்காலும்
தீவா யரவணைமேல் தோன்றல் திசையளப்பான்
பூவா ரடிநிமிர்த்த போது (எக)

ப. உ.— விடம் - விஷத்தை, காலும் - உமிழாநின்ற, தீ-பயங்கரமான, வாய் - வாயையுடைய, அரவு - திருவநந்தாழ்வானுகிற, அணைமேல் - படுக்கையின்மேலே, (சாய்ந்தருளின) தோன்றல் - ஸௌகுமார்யப்ரதானனை ஸர்வேஶ்வரன், திசை - திக்குக்களோடுகூடினபூமியை, அளப்பான் - அளக்கைக்காக, பூவார் - புஷ்பம்போல் ஸௌகுமார்யம்நிறைந்த, அடி - திருப்பாதத்தை, நிமிர்த்தபோது - உயர்த்தினகாலத்தில், இடங்கை - இடது திருக்கையில், வலம்புரி - ஸ்ரீபாஞ்சஜந்யம், நின்று - இருந்து, ஆர்ப்ப - சப்திக்க, ஆழி - திருவாழி, எரி - அனலை, கான்று - உமிழாநின்றுகொண்டு, அடங்கார் - அடங்காத சத்ருக்களை, ஒடுங்குவித்தது - முடங்கப்பண்ணிற்று. ()

வ்யா.—அவ.—எழுபத்தோராம்பாட்டு.—கீழிவனுகந்தபடிசொல்லிற்று ; இவனையுகக்கும் நித்யஸூரிகள் படிசொல்லுகிறது.

(இடங்கையித்யாதி) திருவுலகளந்த விஜயத்தை அநுஸந்தித்து ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸ்ரீபாஞ்சஜந்யம் ஆர்க்க. (எரியித்யாதி) ஆர்க்கைக்கு அவஸரமின்றிக்கே அக்நியை யுமிழாநின்றுகொண்டு நமுசிப்ரப்ருதிகளை வாய்வாயென்று ஒடுங்குவித்தது திருவாழி. (விடமித்யாதி) கிடந்தவிடத்தேகிடந்து விஷத்தையுமிழாநின்ற திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளும் ஸௌகுமார்யத்தையுடையனை ஈஶ்வரன் பூமியை அளக்கைக்குப் புஷ்பஹாஸஸுகுமாரமான திருவடிகளை நிமிர்த்தபோது இப்படியானதென்கிறது. (எக

போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு, ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போது உள்ளம் · போது
மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணி வேங்கடவன்பே ராய்ந்து. (எஉ)

ப-உ.—வானரங்கள் - குரங்குகள், போது - (ப்ராஹ்மமான) காலத்தை, அறிந்து - தெரிந்துகொண்டு, பூ - பூக்களையுடைய, சுனை-சுனைகளிலே, புக்கு - ப்ரவேசித்து, ஆங்கு-அவ்விடத்தில், அலர்ந்த-விகஸித்த, போது - பூக்களை, அரிந்துகொண்டு - பறித்துக்கொண்டு, ஏத்தும் - ஸ்துதியாநிற்கும்; உள்ளம் - மநஸ்ஸே! போது - (நீயும் துதிக்க) போரு; வேங்கடவன் - திருவேங்கடமுடையானுடைய, பேர் - திருநாமத்தை, ஆய்ந்து - ஆராய்ந்து, மணி - நீலரத்நம்போன்றவடியையுடைய, வேங்கடவன் - திருவேங்கடமுடையானுடைய, மலரடிக்கே - புஷ்பம்போன்ற திருவடிகளுக்கே, செல்ல - கிட்டும்படி, போது - பூக்களை, அணி - சாத்து. (எஉ)

வ்யா.—அவ.—எழுபத்திரண்டாய்பாட்டு.— (போதறிந்து) திருமலையில் திர்யக்குக்கள் ஆப்ரயிக்கும்படி சொல்லுகிறது.

(போதறித்து) "ப்ராஹ்மே முஹூர்த்தே உத்தாய - ப்ராஹ்மேமுஹூர்த்தே உத்தாய" என்று ஸத்வோத்தரகாலமறிந்து. (வானங்களித்யாதி) குரங்குகள் பூஞ்சுனையிலே புக்கு அதில் செவ்விப்பூவையரிந்துகொண்டேத்தாநின்றது. (போதுள்ளம்) ஹ்ருதயமே! போரு. (அணிவேங்கடவன் பேராய்ந்து வேங்கடவன்மலரடிக்கே செல்லப் போதுமணி) ஸம்ஸாரத்துக் காபரணமான திருவேங்கடமுடையானுடைய திருநாமத்தைச்சொல்லி அவன் திருவடிகளிலே புஷ்பத்தையுமணி. மணிவேங்கடவனென்று சொல்லி அணியென்று க்ரியையாகவுமாம். (எஉ)

அரு.—எழுபத்திரண்டாம்பாட்டு.—போது-புஷ்பம். போது-இவ்வழியேபோரு. அணிவேங்கடவனென்னுதல்; மணிவேங்கடவன்-மணிமயமான வேங்கடவனென்னுதல். அப்போது போதுமணியென்னுமல் போது-போனத, புஷ்பத்தை அணியென்று மேலில் அணியைக்கூட்டுவது. (எஉ)

**ஆய்ந்துரைப்ப னாயிரம்பேர் ஆதிநடு வந்திவாய்**
**வாய்ந்த மலர்தூவி வைகலும்- ஏய்ந்த**
**பிறைகோட்டுச் செங்கண் கரிவிடுத்த பெம்மான்**
**இறைக்காட் படத்துணிந்த யான்.** (எங)

ப-உ.—பிறை - பாலசந்த்ரனோடு, ஏய்ந்த - ஸமானமான, கோடு - கொம்புகளையும், செம் - அழகிய, கண் - நேத்ரங்களையு முடைய, கரி - (குவலயாபீடமென்கிற) யானையை, விடுத்த - நிரஸித்த, பெம்மான் - ஸர்வேஸ்வரனை, இறைக்கு - ஸ்வாமிக்கு, ஆள்பட - அடிமைசெய்கையிலே, துணிந்த - நிச்சயித்த, யான் - நான், ஆதி - முதலும், நடு - மத்யமும், அந்திவாய் - அந்திமமுமான, வைகலும் - காலங்களெல்லாம், வாய்ந்த - கிடைத்த, மலர் - பூக்களை, தூவி - ஸமர்ப்பித்து, ஆயிரம்பேர் - ஆயிரம் திருநாமங்களையும், ஆய்ந்து - ஆராய்ந்து, உரைப்பன் - சொல்லாநிற்பன். (எங)

வ்யா.—எழுபத்துமூன்றும்பாட்டு.—(ஆய்ந்தித்யாதி) எல்லாத் திருநாமங்களையும் ஆராய்ந்துரைப்பன். எல்லாவவஸ்தைகளிலும் (வாய்ந்தமலர்தூவி)கைக்கெட்டின புஷ்பத்தைக்கொண்டுவேண்டின படியே பொகட்டு. (வைகலும்) காலமெல்லாம். (ஏய்ந்தபிறையித்யாதி) பிறைபோலே யேந்தினகொம்பை யுடைத்தாய் தர்சநீயமான கண்ணையுடைத்தான குவலயாபீடத்தை முடித்த வென்னுடைய ஸ்வாமிக்கு. (ஆள்படத்துணிந்த யான் ஆய்ந்துரைப்பன்) அவன் ப்ரதிபந்தகம் போக்க நானடிமைசெய்தேனென்கிறார். (எங)

**யானே தவம்செய்தே னேழ்பிறப்பு மெப்பொழுதும்**
**யானே தவமுடையே னெம்பெருமான் - யானே**
**இருந்தமிழ் நன்மாலை யிணையடிக்கே சொன்னேன்**
**பெருந் தமிழனல்லேன் * பெரிது.** (எச)

ப-உ.—எம்பெருமான் - எமக்கு ஸ்வாமியே! ஏழ்பிறப்பும் - ஏழுஜந்மங்களிலும், எப்பொழுதும் - எல்லாவவஸ்தைகளிலும், தவம் செய்தேன் - தபஸ்ஸைப்பண்ணினவன், யானே-நானே ; தவமுடையேன் - தபஸ்ஸின்பலத்தையடைந்தவனும், யானே-நானே ; இரும்-(லக்ஷணங்களினால்)பூர்ணமாய், தமிழ்-த்ராவிடரூபமாய், நல் - விலக்ஷணமான, மாலை-(சப்த) ஸந்தர்ப்பங்களை, இணை - சேர்ந்திருக்கிற,

(பா) * பெருகு.

அடிக்கே - திருவடிகளுக்கே, சொன்னேன் - சொல்லப்பெற்றேன், யானே - நானே; பெருந்தமிழன் - பெரியத்ராவிடபண்டிதன்; பெருகு - மிகவும், நல்லேன் - ஸ்ரேஷ்டனுமானேன். (எச)

வ்யா.—எழுபத்துநாலாம்பாட்டு.—(யானே தவஞ்செய்தேன்) நானே தபஸ்ஸு பண்ணினவனுகிறேன். (யானேதவமுடையே னெம்பெருமான்) தபஸ்ஸினுடைய பலமுடையேனும் நானே. தபஸ்ஸும் தபஸ்ஸினுடைய பலமும் உடையவன் நானே யென்கிறதெத்தாலே யென்னில்; (யானேயித்யாதி) விலக்ஷணமான தமிழாகிறமாலையைச் சேர்ந்ததிருவடிகளிலேசொன்னேன்; ஆகையால் (பெருந்தமிழன்) பெரியதமிழன். (பெரிதுநல்லேன்) மிகவும் நல்லேன்.(எச)

**பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று**
**இரு கணிள மூங்கில் வாங்கி - அருகிருந்த**
**தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்**
**வான்கலந்த வண்ணன் வரை. (எரு)**

ப-உ.—பெருகு - வழிகிற,மதம்-மதஜலத்தையுடைய, வேழம்-யானையானது, மா - ஶ்லாக்யமான, பிடிக்கு - பெண்யானைக்கு, முன்நின்று-முன்னேநின்று, இரு-இரண்டு, கண் - கணுக்களையுடைய, இளம் - இளையதான, மூங்கில் - மூங்கில்குருத்தை, வாங்கி-(மெள்ள) எடுத்து, அருகு - ஸமீபத்தில், இருந்த - இருந்த, தேன் - தேனிலே, கலந்து - தோய்த்து, நீட்டும் - ஸமர்ப்பிக்கும், திரு - சிறந்த, வேங்கடங்கண்டீர் - திருமலைகிடீர், வான் - மேகத்தோடு, கலந்த - ஸமானமான, வண்ணன் - வடிவையுடையவன் (வஸிக்கும்), வரை-மலை. (எரு)

வ்யா.—அவ.—எழுபத்தைந்தாம்பாட்டு.—(பெருகு) பெரிய தமிழன், மிகவும் நல்லேனென்றுசொன்னீர்; ஒரு கவிசொல்லிக் காணுமென்ன; சொல்லுகிறுர்.

(பெருகுமதவேழம்) மதித்துச் சமைந்ததாகில் சிறிதறிவுண்டாம்; மதம்பெருகாநின்று அறிவுகெட்ட ஸமயத்திலே. (மாப்பிடிக்கு) இப்படி அறிவுகெட்டத்தை த்யாநயுக்தரைப்போலே தன்புருவம் நெறித்தவிடத்திலே கார்யங்கொள்ளவற்றுகை. (முன்னின்று) அந்தேவாஸிகளைப்போலே பிடியினுடைய ஸ்வபாவத்தையறிந்து கண் வட்டத்திலேநின்று. (இருகணிள மூங்கில்வாங்கி) இரண்டுகணு

வளையச்செய்தே பருவத்துக்குள்ள முற்றனவற்றிருக்கை. (வாங்கி) மூங்கிலினுடைய மேன்மையுங் களிற்றினுடைய ஸாவதாநத்தையுஞ் சொல்லுகிறது. (அருகிருந்ததேன்) திருமஞ்சனத்துக்கு ஸம்பாரித்திருக்குமாப்போலே குறைவற்றிருக்கிறபடி. (தேன்கலந்து) த்ரவத்ரவ்யங்களிரண்டுங் கலந்தாற்போலேயிருக்கை. (நீட்டும்) இதுக்குக் கொடுக்கையே புருஷார்த்தமாயிருக்கிறபடியும், அதநாதரிக்கிறபடியும். (திருவேங்கடமித்யாதி) "வான்கலந்த" என்கிறது. உபமாநோபமேயங்கள் ஸஸத்ருசமாயிருக்கிறபடி. (எரு)

அரு.—எழுபத்தைந்தாம்பாட்டு.—சமைந்ததாகில் - மதமமைந்துவற்றினலென்றபடி. த்யாநயுக்தனைப்போலே-த்யாநயுக்தர் ஸர்வேஶ்வரனை வசீகரிக்குமாப்போலே. திருமஞ்சனத்துக்கு - பெருமான் திருமஞ்சனத்துக்கு. (எரு)

**வரைச் சந்தனக் குழம்பும் வான்கலனும், பட்டும்**
**விரைப் பொலிந்த வெண் மல்லிகையும்- நிரைத்துக்கொ [ண்டு**
**ஆதிக்கண் நின்ற வறிவ னடியிணையே**
**ஓதிப் பணிவ துறும்.** (எசு)

ப-உ.—வரை - மலையிலுண்டான, சந்தனக்குழம்பும் - பரிமளமுடைய சந்தநத்தையும், வான் - விலையுயர்ந்த, கலனும், - ஆபரணத்தையும், பட்டும்-நல்லதிருப்பரியட்டத்தையும், விரை-வாஸனையால், பொலிந்த - மிகுந்திருக்கிற, வெண் - வெளுத்த நிறத்தையுடைய, மல்லிகையும் - மல்லிகைப்பூவையும், நிரைத்துக்கொண்டு - அழகாய் ஸம்பாதித்துக்கொண்டு, ஆதிக்கண் - (ஸ்ருஷ்டிக்கு) முன்காலத்தில், நின்ற - இருந்த, அறிவன் - ஸர்வஜ்ஞனை ஸர்வேஸ்வரனுடைய, இணை - சேர்ந்திருக்கிற - அடியே - திருவடிகளையே, ஓதி - ஸ்தோத்ரம்பண்ணி, பணிவது - வணங்குவது - உறும் - சேரும். ()

வ்யா.—அவ.—எழுபத்தாறும்பாட்டு.—இப்படிஸங்கிஹிதனானவனை ஆஶ்ரயிக்கை உறுமென்கிறது.

(வரைச்சந்தனக்குழம்பும்) சந்தநகிரியிலே யுண்டான சந்தநக்குழம்பும். (வான்கலனும்) * தேசமான வணிகலனும். (பட்டும் விரைப்பொலிந்த வெண்மல்லிகையும்) பரிமளம்மிக்கு தர்சநீயமான மல்லிகையும். (நிரையித்யாதி) இதெல்லாத்துக்குங் காரணமாய்நின்று இத்தனையுஞ்செய்தானாகில் இதற்குமேல் செய்வதென்னென்னும்

ஜ்ஞாநத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையே யேத்திப் பணிவதுறும். (எசா)

அரு.—எழுபத்தாறும்பாட்டு,—சந்தநகிரி மலயபர்வதம். (எசா)

உறுங்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமன் நற்பாதம்
உறுங்கண்டா யொண்கமலந் தன்னால் - உறுங்கண்டாய்
ஏத்திப்பணிந்தவன்பே ரீரைஞ்ஞூறெப்பொழுதும்
* சாத்தியுரைத்தல் தவம். (எஎ)

ப-உ.—நல் - அநுகூலமான, நெஞ்சே - மநஸ்ஸே! உத்தமன் - புருஷோத்தமனுடைய, நல் - நன்மையையுடைய, பாதம் - திருவடிகள், உறுங்கண்டாய் - (ஆஶ்ரயிக்கச்) சேருங்கிடாய். ஒண் - அழகிய, கமலந்தன்னால், தாமரைப்பூவாலே, உறுங்கண்டாய் - (ஆஶ்ரயித்தல்) தகுங்கிடாய். சாத்தி-(அந்தக்கமலத்தை)ஸமர்ப்பித்து, ஏத்தி - துதித்து - பணிந்து - வணங்கி, அவன் - அவனுடைய, ஈரைஞ்ஞூறு-ஆயிரமான, பேர் - திருநாமங்களை, எப்பொழுதும் - ஸர்வகாலத்திலும் - உரைத்தல் - சொல்லுகையாகிற, தவம் - தபஸ்ஸு, உறுங்கண்டாய் - ப்ராப்தங்கிடாய். (எஎ)

வ்யா.—எழுபத்தேழாம்பாட்டு.—(உறுமித்யாதி)க்ஷுத்ரபதார்த்தங்களினுடைய காலைப்பற்றிக்கொண்டு திரிந்த உனக்குஸர்வஹ்ருத்தானவனுடைய திருவடிகளைப்பற்றுகை உறும். (உறுமித்யாதி) அப்ராக்ருத புஷ்பந்தேடிப்போகவேண்டா. (உறுமித்யாதி) ஆஶ்ரயணீய வஸ்துதன்னிலும் ஆஶ்ரயணந்தானே உறும். (எஎ)

அரு.—எழுபத்தேழாம்பாட்டு.—பற்றுகை உறும் - திருவடிகளைப் பற்றுகைப்ராப்தம். உறுங்கண்டாய் - ப்ராக்ருதபுஷ்பத்தைக்கொண்டாஶ்ரயிக்கையும் ப்ராப்தம். ஒண் கமலத்தைச்சாத்தி அவன்பேரீரைஞ்ஞூறையு மெப்பொழுது மேத்தி உரைக்கலாகிறதவம் ப்ராப்தம் இவை இத்தனைக்கு மென்றபடி. (எஎ)

தவம்செய்து நான்முகனே பெற்றான், தரணி
நிவர்ந்தளப்பநீட்டியபொற்பாதம் - சிவந்த தன்
கையனைத்து மாரக் கழுவினான், கங்கைநீர்
பெய்தனைத்துப் பேர் மொழிந்து பின். (எஅ)

* சாற்றி - என்று உரையின்பாடம்.

ப-உ.—தவம் - (நாமோச்சாரண மாகிற) தபஸ்ஸை, செய்து-அநுஷ்டித்து, (அதின்பலத்தை), நான்முகனே - ப்ரஹ்மாவே, பெற்ருன் - அடைந்தான்; தரணி - பூமியை, நிவர்ந்து - உயர்ந்து, அளப்ப - அளக்கைக்காக, நீட்டிய - தீர்க்கமாகச்செய்த, பொன் - ஸ்ப்ருஹணீயமான, பாதம் - திருவடிகளை, அனைத்து - ஸமஸ்த மான, பேர் - (அந்த ஸ்ரியஃபதி யினுடைய) திருநாமங்களை, மொழிந்து-சொல்லி, பின் - பின்பு, சிவந்த - சிவந்த நிறத்தையுடைய, தன்-தன்னுடைய, கை - கரங்கள், அனைத்தும் - முழுதிலும், ஆர - பூர்ணமாகும்படி (ஸபலமாகும்படி), கங்கைநீர் - கங்காஜலத்தை - பெய்து - விட்டு, கழுவினன் - விளக்கினன். (எஅ)

வ்யா.—அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு.—(தவஞ்செய்து)ஆஸ்ரயணீய வஸ்து கைபுகுந்தபின்பு ஆஸ்ரயித்த ப்ரஹ்மாவை ஒப்பாருண்டோவென்கிறது.

(தவமித்யாதி) தபஸ்ஸுபண்ணினும் பலம்பெற்ருனும் ப்ரஹ்மாவே. (தரணியித்யாதி) அங்யார்த்தமாக ப்ரவர்த்திக்கச்செய்தே பலம் பெற்ருனென்கிறது. (சிவந்தவித்யாதி) அநேகங்கைபடைத்தத்தாலுள்ள லாபம்பெற்ருன். (கங்கைநீர்பெய்தித்யாதி) "ஶ்ரீ த்வாயஸ்வாநீயஃ - க்ருஹீத்வாதர்மபாநீயம்" என்று திருவடி விளக்க வபேக்ஷிதமானவாறே தர்மஜலமானத்தைக் கையிலே கொண்டு அனைத்துத் திருநாமங்களைச்சொல்லிப் பின்னைத் திருவடிவிளக்கினன். (எஅ)

அரு.—எழுபத்தெட்டாம்பாட்டு.—நிவர்ந்து - நிமிர்ந்து. அங்யார்த்தம் - இந்த்ரன் நிமித்தம். பெய்து-ஜலத்தையுண்டாக்கி க்கையிலேகொண்டு. (எஅ)

பின்னின்று தாயிரப்பக் கேளான், பெரும்பணைத்தோள்
முன்னின்றுதானிரப்பாள்மொய்ம்மலராள்-சொல்நின்ற
தோள் நலந்தான் நேரில்லாத்தோன்றல், அவனளந்த
நீணிலந்தானத்தனைக்கும் நேர். (எகூ)

ப-உ.—தாய் - தாயாரான (கௌஸலை), பின்னின்று - அநுஸரித்து, இரப்ப - யாசிக்க, கேளான் - (அதை) அங்கீகரியாதவனுமாய், பெரும் - நீண்டும், பணை - பருத்து மிருக்கிற, தோள் - புஜங்களையுடைய, மொய் - அழகிய, மலராள் - கமலத்தில் வஸிக்கிற பிராட்டி,

தான் - ஸ்வயம், முன்நின்று - முற்பட்டு நின்று, இரப்பாள் - இரக்க, (அதையுங்கேளாதவனுமாய்), சொல் - ஸ்ரீராமாயணத்தில், நின்ற - ப்ரதிபாத்யனாயிருக்கிற, நேரில்லா - ஒப்பில்லாத, தோன்றல் - சக்ரவர்த்தித் திருமகனுடைய. தோள் - புஜங்களினுடைய, நலம் - பலம், அத்தனைக்கும், அவ்வளவுக்கும், அவன் - (வாமனனான) அவன், அளந்த - ஆக்ரமித்த, நீள் - விசாலமான, நிலம்-பூமியானது, நேர் - ஒப்பாயிருக்கிறது. (எகூ)

வ்யா.—அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு.— (பின்னின்று) திருவுலகளந்தருளின நீர்மை ராமாவதாரத்தில் குணங்களுக்கு நேரென்கிறது.

(பின்னித்யாதி) கௌஸல்யை, "நான் ஏகபுத்ரை, உம்மைப் பிரிந்து நான் ஜீவியேன்; நீர்காட்டுக்குப்போகவேண்டா" என்று சொன்னால் கேளான். (பெரும்பணைத்தோளித்யாதி) "ஸூஹ்ரு தஸ்தே ஹரிஷ்யாமி - அக்ரதஸ்த்தேகமிஷ்யாமி" என்று ப்ரார்த்திப்பாள் பெரியபிராட்டியார். (சொல்நின்ற) ஸ்ரீராமாயணத்திலே சொல்லப்படாநின்ற தோள்வலியையுடையனான பிள்ளையுடைய குணங்களுக்கு. (அவனளந்த நீணிலந்தானத்தனைக்கும்நேர்) அன்றளந்த தத்தனையும் அக்குணத்துக்குநேர். (எகூ)

அரு.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—நேரில்லாத்தோன்றல்- ஒப்பில்லாத அவதாரமான சக்ரவர்த்தித் திருமகனுடைய தோள் நலங்களுக்கு. (எகூ)

**நேர்ந்தேனடிமை நினைந்தேனதொண்கமலம்**
**ஆர்ந்தேனுன் சேவடிமேலன்பாய் - ஆர்ந்த**
**அடிக்கோலம் கண்டவர்க்கென்கொலோ, முன்னைப்**
**படிக்கோலம் கண்ட பகல்.** (அ௦)

ப. உ.—அடிமை - கைங்கர்யத்தை,நேர்ந்தேன் - கிட்டினேன். ஒண் - அழகிய, கமலம் - தாமரை புஷ்பம்போன்ற - அது - அந்தத் திருவடிகளை, நினைந்தேன் - அநுஸந்தித்தேன். உன் - தேவரீருடைய, சே - சிவந்த, அடிமேல் - திருவடிகளின் மேலே, அன்பாய் - ப்ரீதியுடையவனாய், ஆர்ந்தேன் - பரிபூர்ணனானேன். ஆர்ந்த - பூர்ணமான, அடி - திருப்பாதங்களினுடைய, கோலம் - அழகை, கண்

டவர்க்கு - அநுபவித்தவர்களுக்கு, முன்னை - முன்பு, படி - திருமேனியினுடைய, கோலம் - அழகை, கண்ட - ஸாக்ஷாத்கரித்த, பகல்- காலம், என்கொலோ - எப்படியாவதோ? (அ0)

வ்யா.—எண்பதாம்பாட்டு.—(நேர்ந்தேனடிமை) ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கிட்டினேன். (நினைந்தேனதொண்கமலம்) ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை நினைந்தேன். (ஆர்ந்தேனித்யாதி) உன்னுடைய சிவந்த திருவடிகளிலே ஸ்நேஹத்தை யுடையேனாய்ப் பரிபூர்ணனானேன். (ஆர்ந்தவித்யாதி) திருவுலகளந்த திருவடிகளைக் கண்டவெங்களுக்கு முன்ஸ்வாபாவிகமான வொப்பனைகளைக் கண்டகாலமென்னுவது; நாங்கள் கண்டபடிக் கொக்குமோவது. (அ0)

**பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன், கனவில்**
**மிகக்கண்டேன் மீண்டவனைமெய்யே - மிகக்கண்டேன்**
**ஊன்திகழுநேமி யொளிதிகழும் சேவடியான்**
**வான்திகழும் சோதி வடிவு. (அக)**

ப-உ.—பகல் - பகற்காலத்தை, கண்டேன் - ஸாக்ஷாத் கரித்தேன். நாரணனை - ஸர்வவ்யாபகனான ஸர்வேஶ்வரனை, கண்டேன் - ஸாக்ஷாத்கரித்தேன். கனவில் - ஸ்வப்நத்தைக்காட்டிலும், மிக-விசதமாக, அவனை - அந்தஸர்வேஶ்வரனை, மீண்டு - (விஷயங்களில் நின்றும்) திரும்பி, மெய்யே - ப்ரத்யக்ஷதுல்யமாம்படி, கண்டேன் - ஸாக்ஷாத் கரித்தேன். ஊன் - திவ்யமங்களவிக்ரஹத்தில், திகழும் - விளங்காநின்ற, நேமி - திருவாழியையும், ஒளி - தேஜஸ்ஸு, திகழும் - விளங்கா நின்ற, சே - சிவந்த, அடியான் - திருவடிகளையுமுடையவனுடைய, வான் - பரமபதத்தில், திகழும் - விளங்காநின்ற, சோதி- தேஜஸ்ஸையுடைய, வடிவு - திருமேனியை, மிக - விசேஷமாக, கண்டேன் - அநுபவித்தேன். (அக)

வ்யா.—அவ.—எண்பத்தோராம்பாட்டு.— (பகல்) நீர்கண்டபடி சொல்லிக்காணீரென்னச் சொல்லுகிறார்.

(பகற்கண்டேன்) காளராத்ரியாய்ச் செல்லாதே விடியக்கண்டேன். வடுகர் வார்த்தை போலே தெரிகிறதில்லை, எங்களுக்குத்தெரியும்படி சொல்லீரென்ன; (நாரணனைக்கண்டேன்) அஸ்தமியாதவாதித்யனைக்கண்டேன். (கனவிலித்யாதி) ப்ரத்யபிஜ்ஞார்ஹமாகக் கண்டேன். (மிகக்கண்டேன்) வடிவிலே திகழாநின்ற திருவாழியையும்,

ஒளிதிகழாநின்ற திருவடிகளேயு முடையவனுடைய பரமபதத்திலே திகழா நின்ற ஜ்யோதிஸ்ஸையுடைத்தான திருமேனியைக்கண்டேன்; மேகம்போலே திகழாநின்ற ஜ்யோதிஸ்ஸையுடைய வடிவென்னவுமாம். (அக)

வடிக்கோல வாள் நெடுங்கண் மாமலராள், செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னாள் - அடிக்கோலி
ஞாலத்தாள்பின்னும்நலம்புரிந்ததென்கொலோ
கோலத்தா லில்லை குறை. (அஉ)

ப-உ.—வடி – கோதில்லாமல் சுத்தமாக்கின, கோலம் - அழகையும், வாள் – ஒளியுடைய, நெடும் - (போக்யதையினால்) அபரிச்சிந்நமான, கண் - திருக்கண்களேயு முடையவளாய், மா - ஸ்லாக்யமான, மலராள்-கமலத்தை வாஸஸ்தாநமாகவுடையவளுமான பிராட்டி, செவ்வி - அழகிய, படிக்கோலம் - வடிவழகை, கண்டு - அநுபவித்து, பன்னாள் - யாவத்காலமும், அகலாள் - நீங்கமாட்டாள். ஞாலத்தாள் – ஸ்ரீபூமிப்பிராட்டி, பின்னும், பெரிய பிராட்டியாரவஸ்தையைக்கண்ட வநந்தரமும், அடிக்கோலி - அகலப்பாரித்து, நலம் புரிந்தது - ஆசைப்பட்டது, என்கொலோ - ஏதாயிருக்கிறதோ ? (அதுக்கடி), கோலத்தால் - அழகினால், குறை - குறைவு, இல்லை-அற்றிருக்கையிறே. (அஉ)

வ்யா.— அவ.— எண்பத்திரண்டாம்பாட்டு.— (வடிக்கோல) கீழ் நாராயணனைக்கண்டேனென்றார். இப்போது லக்ஷ்மீ ஸநாதமாகக் கண்டேனென்கிறார்.

படிக்கோலத்துக்கு ருஜீஷமாய்க் கழித்தா ராரோவென்னில்; (வடிக்கோலமித்யாதி) ஓராளுமொரு நோக்கும் நேரான கண்ணையுடையளாய் ஸௌகுமார்யத்தை யுடையளான பெரியபிராட்டியார். (செவ்வியித்யாதி) செவ்வியையுடைத்தாய் ஸ்வாபாவிகமான கோலத்தைக்கண்டு காலமெல்லாமகலாள். ஒருதேவையாலே யகலாதிருக்கிறளோ வென்னில், அன்று; வைத்தகண் வாங்கமாட்டாமையும், கால் வாங்கமாட்டாமையும். (அடிக்கோலியித்யாதி) அகலப்பாரித்து ஸ்ரீபூமிப்பிராட்டியார், பெரியபிராட்டியார் தண்ணீர் தண்ணீரென்கிற விஷயமென்று அறிந்தபின்பும் ஸ்நேஹிக்கைக்கடி யென்னென்கிறது. அவள் கண்ணுக்கு விஷயம் அவனொருத்தனும்; இவளுக்கு

விசிஷ்டம். இவளோடே கூடினவவன் விஷயபூயஸ்தையாலே "அடிக்கோலி" என்கிறது. தன்னில் மிடுக்கனானவன் அழுந்தப்புக்கால் கரையிலே நிற்கிறவன் புகாதே போகவன்றோவடுப்பது; எல்லாரிலு மளவுடைய பெரிய பிராட்டியார் குமிழ்நீருண்ணும் விஷயமானால் இவளகலப் போகாதே அகப்படுகைக்கு ஹேது வென்னென்னில்; ஹேது சொல்லுகிறது. (கோலவித்யாதி) நின்றார் நின்றநிலைகளிலே அகப்படவேண்டும் அழகு குறைவற்றிருக்கையாலே. இதர விஷயங்களிருவர்க்கும் அநுபவிக்கப்போராமையாலே சீறுபாறென்கிறது. கிண்ணகத்திலிழிவாரைப்போலே எல்லாருந் திரளவநுபவிக்க வேண்டும் பரப்புண்டாகையாலே இவ்விஷயத்தை யநுபவிப்பார்க்குப் ப்ரியமேயுள்ளது.

அரு.—எண்பத்திரண்டாம்பாட்டு.—"கண்டகலாள்" என்கையாலேபிராட்டியை ரூஜீஷமென்கிறது. வடி-வடிச்சு சாணையிட்டு. கோல - அழகியதாய். சப்தார்த்தம். (அகலப்பாரித்தித்யாதி) அடிக்கோலுகை-அகலுகைக்கு உத்யோகிக்கை. அடிக்கோல வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார். (அவள் கண்ணுக்கித்யாதி). ஆனால்நலம்புரிவானென்னென்னென்ன; சங்காபூர்வகமாக அருச்செய்கிறார் (தன்னிலித்யாதி). போகாதோ-இவனிடத்தில் நின்றும் புறம்பேபோகாதே. இப்படி இருவருங்கூடி அநுபவித்தால் ஸாபத்ந்யம் தோன்றாதோவென்ன; அருளிச்செய்கிறார். (இதரவிஷயங்களித்யாதி). (அஉ)

குறையாக வெம் சொற்கள் கூறினேன் கூறி
மறை யாங்கென வுரைத்த மாலை - இறையேனும்
ஈயுங்கொலென்றே இருந்தேனெனைப்பகலும்
மாயன்கண் சென்ற வரம். (அ௩)

ப-உ.—மறை-வேதங்களாலே, ஆங்குஎன - அதுவதுவென்று, உரைத்த-சொல்லப்பட்ட, மாலை - பெருமையையுடைய ஸர்வேஶ்வரனை, முறையாக - அபரிபூர்ணமாகும்படியாக, வெம் - கொடிய, சொற்கள் - உக்திகளாலே, கூறினேன் - சொன்னேன். கூறி - சொல்லி, மாயன்கண் — ஆச்சர்யபூதனானவனிடத்தில்நின்றும், சென்று - வரக்கடவ, வரம் - ப்ரஸாதத்தை, இறையேனும் - கொஞ்சமாகிலும், ஈயுங்கொல் - தருவனோ; என்று-என்று நினைத்து, எனைப்பகலும்-ஸர்வகாலமும், இருந்தேன் - இருந்தேன். (அ௩)

வ்யா.—அவ.—எண்பத்துமூன்றாம்பாட்டு.—(குறையாக) முன்பு ஸர்வ விஸஜாதீய வஸ்துவைப் பேசுகையாலே என்னோடொப்பாருண்டோ பெரியதமிழன், பெரிது நல்லேனென்று சொன்னார்; இப்போது அவ்வஸ்துதன்னை லக்ஷ்மீஸநாதமாக வநுஸந்திக்கையாலே அங்குத்தைக்கு விஸத்ருசமாகச்சொன்னேனென்கிறார்.

(குறையித்யாதி) அபரிபூர்ண மாம்படியாகவும் திருவுள்ளம் கோம்படியாகவும் வார்த்தைசொன்னேன். "வாஜிவ்ருதாஸ்து வேஷா:-வாச்விந்தாச்சவேதா:" என்றுசொல்லப்படுகிற ஸர்வாதிகனே, வேதம் "ஈஜூஜூஜூ, ஊஜூ - ஈத்ருசம் - இதம்" என்று சொல்லப் போகாதவனையென்றுமாம். (இறையேனு மித்யாதி) விஸத்ருசமாகச்சொன்னவளவேயோ? ஒன்று சொன்னேனாய் அதுக்குப் ப்ரத்யுபகாரமும் வேணுமென்றிருந்தேன். (அங)

அரு.—என்பத்துமூன்றாம்பாட்டு.—ஆங்கெனவுரைத்த - எல்லாரு மதுவதுவென வேதத்தாலே யுரைக்கப்பட்டவனென்னுதல். ஆங்கென - அதுவென்று போகிறதொழிய இதமித்தமென்று பரிச்சேதித்துச் சொல்லப்படாதவனென்னுதல். மாயன் கட்சென்றவரமிறையேனு மீயுங்கொலென்றிருந்தேன். காலமெல்லாமென்றபடி.()

வரங் கருதித் தன்னை வணங்காத வன்மை
உரங் கருதி * மூர்க்கத் தவனை - நரங்கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவ னடியிணையே
அங்கண்மா ஞாலத் தமுது. (அச)

ப-உ.—வரம் - (ப்ரஹ்மாதிகள்கொடுத்த) வரத்தை, கருதி - நினைத்து, தன்னை - தன்னை, வணங்காத - வணங்காதவனாய், வன்மை - வரபலத்தையும், உரம் - சரீரபலத்தையும், கருதி - எண்ணி, மூர்க்கத்தவனை - மூர்க்கனாயிருக்கிற (ஹிரண்யகசிபுவை), நரங்கலந்த - மநுஷ்யரூபத்தோடு சேர்ந்த, சிங்கமாய் - ஸிம்ஹரூபத்தை யுடையனாய்க் கொண்டு, கீண்ட - பிளந்த, திருவன் - அழகையுடைத்தான ஸர்வேஶ்வரனுடைய, இணை - சேர்ந்திருக்கிற, அடியே, திருவடிகளே, அம் - அழகிய, கண் - இடமுடைய, மா - விசாலமான, ஞாலத்து - பூமியில், அமுது - அம்ருதம். (அச)

வ்யா—எண்பத்துநாலாம்பாட்டு.—(வரமித்யாதி) தேவதைகள் பக்கலிலே வரம்பெற்றவனாய் தேவதைகளுக்கும் அடியா யிருந்துள்

(பா) * மூக்கத்தவனே.

ளவுன்னை வணங்காத துரபிமாநத்தையுடையவனான ஹிரண்யனை. (நரமித்யாதி) இதுக்கு முன்புள்ள தாமலொன்றாலும் படாதபடியென்னென்று வேண்டிக்கொள்ள, முன்பில்லாத நரங்கலந்த சிங்கமா யவனைக்கீண்ட ஸ்ரீமானுடைய சரணத்வயமே ஒருதேசத்திலே தேடிப் போக வேண்டாத அம்ருதம். "திருவன்" என்றது-"அழகியானொனே அரியுருவனானே" "நாரஸிம்ஹவபு:ஸ்ரீமாநு-நாரஸிம்ஹவபுஶ் ஸ்ரீமான்" என்னும் வடிவு. (அச)

அமுதென்றும் தேனென்று மாழியா னென்றும்
அமுதன்று கொண்டு கந்தானென்றும் - அமுதன்ன
சொன்மாலை யேத்தித் தொழுதேன், சொலப்பட்ட
நன்மாலை யேத்தி நவின்று. (அரு)

ப-உ.—அமுதென றும் - அம்ருதமென்றும், தேனென்றும் - மதுவென்றும், ஆழியானென்றும் - திருவாழியை யுடையவனென்றும், அன்று - தேவர்கள் சரணம் புகுந்தகாலததில், அமுது - அம்ருதத்தை, கொண்டு - வாங்கிக்கொண்டு கொடுத்து, உகந்தானென்றும் - ஸந்தோஷித்தவனென்றும், சொலப்பட்ட - (வேதங்களில்) சொல்லப்படுகிற, நல் - விலக்ஷணமான, மாலை - ஸர்வேஶ்வரனை, ஏத்தி - ஸ்துதித்து, நவின்று - சொல்லி, அமுதன்ன - அம்ருதம் போன்ற, சொல்மாலை - சப்தஸந்தர்ப்பங்களாலே, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, தொழுதேன் - ஆஶ்ரயித்தேன். (அரு)

வ்யா.—எண்பத்தைந்தாம்பாட்டு.— (அமுதென்று மித்யாதி) அம்ருதத்தோடு பர்யாய சப்தம்போலே காணும் ஆழியானென்கை. (அமுதன்றித்யாதி) தன்னைவேண்டாதே உப்புச்சாறு வேண்டுமவர்க்கு அது தேடிக்கொடுக்குமவன். (அமுதன்னவித்யாதி) அவனையுந் தேவர்க ளம்ருதத்தையும் ஒழிய இவருடைய அம்ருதம் அவனைப் பேசுஞ்சொல்லும். (சொலப்பட்டவித்யாதி) "யஸ்மிந்நக்ருத்ரிமகிராம் கதிரேககண்டா - யஸ்மிந்நக்ருத்ரிமகிராம் கதி ரேககண்டா" என்று ப்ரமாணங்களாலே சொல்லப்பட்ட. (நனமாலையேத்தி நவின்று) அமுதான சொன்மாலை யேத்தித்தொழுதேன். (அரு)

அரு.—எண்பத்தைந்தாம்பாட்டு.—அக்ருத்ரிமகிர்-வேதம். ()

நவின்றுரைத்த நாவலர்கள் நாண்மலர்கொண்டு, ஆங்கே
பயின்றதனால் பெற்றபயனென்கொல் - பயின்றார்தம்

மெய்த்தவத்தால் காண்பரிய மேகமணி வண்ணனை யான்
எத்தவத்தால் காண்பன்கொ லின்று. (அசு)

ப-உ.—நவின்றுரைத்த - (அவன் திருநாமங்களைப்) பலகால் சொன்ன, நாவலர்கள் - (ப்ரயோஜநாந்தரபரரான) கவிகள், நாள் - செவ்விய, மலர் - பூக்களை, கொண்டு - ஸம்பாதித்து, ஆங்கே - அந்த ஸர்வேஶ்வரனிடத்தில், பயின்றதனால் - ஆஶ்ரயித்ததனால், பெற்ற - அடைந்த, பயன் - ப்ரயோஜநம், என்கொல் - ஏதோ? பயின்றார்தம் . (ஸாதநாந்தரபரராய்) ஆஶ்ரயித்தவர்களுடைய, மெய் - சரீரத்தினால் (செய்யப்பட்ட), தவத்தால் - தபஸ்ஸினால், காண்பரிய - காண துர்லபனான, மேகம் - மேகம்போலும், மணி - நீலரத்நம் போலும் இருக்கிற, வண்ணனை, வடிவையுடையவனை, யான் - நான், இன்று - இப்பொழுது, எத்தவத்தால் - எந்ததபஸ்ஸினால், காண்பன் கொல் - அநுபவிக்கப் பெற்றேன். (அசு)

வ்யா.—அவ.—எண்பத்தாறும்பாட்டு.—(நவின்று) அவன் தானே காட்டக்கண்ட வென்னோடொப்பார்களோ? ஸாதநாநுஷ்டாநம் பண்ணிக் காண்கிறவர்களென்கிறார்.

(நவின்றித்யாதி) நாவலர்களானவர்கள் செவ்விப்பூவைக்கொண்டு ஸாதரமாக உரைப்பார்கள். (பயின்றவித்யாதி) பெற்றால்தான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணிப் பெற்றபேறென்? (பயின்றாரித்யாதி) ஆஶ்ரயித்தவர்களுடைய உடம்புநோவப்பண்ணின தபஸ்ஸால் காணவரிய ஶ்ரமஹரமான வடிவையுடையவனை இன்றென்ன தபஸ்ஸு பண்ணிக் கண்டேன்? அவன் காட்டக்கண்டேனத்தனையிறே. "யாவர் நிகரகல்வானத்தே" "வானைக்கோனைக் கவிசொல்லவல்லேற்கினிமாறுண்டே". (அசு)

அரு.—எண்பத்தாறும்பாட்டு.—நாவலர்கள் - நாவல்லவர்கள்; வித்வான்களென்றபடி. நவிலுகையும் சொல்லுகைக்குப் பர்யாயமாகையாலே மீமிசையாகையாலே ஸாதரமாகவென்கிறது. பேறென் - ஸாதநாநுஷ்டாநம பண்ணிப்போகையும் ஒருபேறே என்று க்ஷேபம்.

இன்று வறிகின்றே னல்லேன், இருநிலத்தைச்
சென்றாங் களந்த திருவடியை - அன்று
கருங்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி யெந்தை திறம். (அஎ)

ப-உ.—அன்று - ஸாதநாநுஷ்டாந யோக்யதையில்லாத அத்தசையில், கருக்கோட்டியுள், கர்ப்பஸ்தாநத்துக்குள்ளே, கிடந்து-இருந்து, திருக்கோட்டி - திருக்கோட்டியூரிலெழுந்தருளி யிருக்கிற, எந்தை - என்ஸ்வாமியினுடைய, திறம் - ப்ரகாரத்தை, கண்டேன், ஸாக்ஷாத்கரித்தேன். இரு - பரப்பையுடைய, நிலத்தை - பூமியை, ஆங்கு - அங்கே, சென்று - கிட்டி, அளந்த - அளந்துகொண்ட, திருவடியை - ஸ்ரீபாதத்தை, இன்று - இப்பொழுதாக, அறி கின்றேனல்லேன் - அறிகிறேனல்லேன். (அஎ)

வ்யா.—அவ.—எண்பத்தேழாம்பாட்டு.—(இன்று) ஸாதநாநுஷ்டாநமும் யோக்யதையுமின்றி யிருக்கக்கண்டிலேனோ வென்கிறார்.

(இன்றித்யாதி) இன்றாகவறிகிறேனோ? (இருநிலமித்யாதி)அவனளக்கிற விடத்திலே பூமிசென்றதோ? பூமிகிடந்தவிடமெல்லாம் தானே சென்றளந்தானித்தனையன்றோ? (அன்றித்யாதி) என் ஸ்வாமியிடையாட்டம் கர்ப்பஸ்தாநத்திலே கிடக்கச்செய்தே கண்டேன்.()

திறம்பிற் றினியறிந்தேன் தென்னரங்கத் தெந்தை
திறம்பா வழிசென்றார்க் கல்லால் - திறம்பாச்
செடிநரகை நீக்கித்தான் செல்வதன்முன், வானோர்
கடிநகர வாசற் கதவு. (அஅ)

ப-உ.—தென் - ஸ்ப்ருஹணீயமான, அரங்கத்து - கோயிலிலே (பள்ளிகொண்ட), எந்தை - என் ஸ்வாமியினுடைய, திறம்பா- சலியாத, வழி - மார்க்கத்தைப்பற்றி, சென்றார்க்கல்லால் - நடக்குமவர்களுக்கொழிய, திறம்பா - சலியாத (அநுபவித்துமுடிக்கப்போகாத), செடி - காடேறியிருக்கிற (அபாரமான), நரகை - நரகத்தை, நீக்கி - (ஸாதநாநுஷ்டாநத்தாலே) போக்கி, தாம் - தாங்கள், செல்வதன்முன் - (ஸர்வேஸ்வரனைக்) கிட்டுவதற்குமுன்னே, வானோர் - நித்யஸூரிகள் வஸிக்கிறதுமாய், கடி - மதிளையுடையதுமான, நகரம் - ஸ்ரீவைகுண்ட நகரத்தினுடைய, வாசற்கதவு - வாசலிலிட்டிருக்கிற கபாடம், திறம்பிற்று - தப்பிற்று, இனி - இப்பொழுது, அறிந்தேன் - தெரிந்துகொண்டேன். (அஅ)

வ்யா.—அவ.—எண்பத்தெட்டாம்பாட்டு.—(திறம்பிற்று)அவன் தானே விஷயீகரித்தார்க்கு அவனைக்கிடைக்கு மித்தனையல்லது வேறு சிலர்க்குக்கிடையாதென்கிறது.

(தென்னரங்கமித்யாதி) "ஶாஶ்வகூழ - மாமேகம்" என்றருளிச் செய்தபடியே அவனேயேஉபாயமாகப் பற்றினவர்களுக்கு "ஶாஶ்வகூழ-மாமேகம்" என்றதிலும் ஸௌலப்யகாஷ்டையைச் சொல்லுகிறது. (திறமபாவித்யாதி) தானே தூறுமண்டப் பண்ணின ஸம்ஸாரத்தை நீக்கிச் செல்லுமவர்களுக்கு நித்யஸூரிகளுடைய அாணையுடைத் தாயிருந்துள்ள கலங்காப் பெருநகரத்தில் கதவுதிறம்பிற்றென்னுமிட மறிந்தேன். தானே ஸம்ஸாரத்தை நீக்க இவனுக்குக் காலம்போரா து; பாபம்பண்ணினகாலம் அநாதியாகையாலே திறம்பிற்றினியறிந் தே னென்றந்வயம். (அஅ)

அரு.—எண்பத்தெட்டாம்பாட்டு.—தாஞ்செல்வதன்முன்-தாங் களேயத்நம்பண்ணிச் செல்லுமவர்க்கு முன்பே, எற்கவே. கதவுதிறம் பிற்று - புகவொண்ணாதபடி சாத்திக்கொண்டது. ஸாதநாநுஷ்டா நத்தாலே நீக்கப்போகாமைக் கருளிச்செய்கிறார் (தானே ஸம்ஸா ரத்தை இத்யாதி). (அஅ)

கதவிக் கதஞ்சிறந்த கஞ்சனைமுன் காய்ந்து
அதவிப்போர்யானை யொசித்துப் - பதவியாய்ப்
பாணியால் நீரேற்றுப் பண்டொருகால் மாவலியை
மாணியாய்க் கொண்டிலையே மண். (அகூ)

ப-உ.—கதம் - கோபத்தினால், சிறந்த - மிகுந்த, கஞ்சனை-கம் ஸனை, கதவி - கோபித்து, முன் - அவன்முன்னே, காய்ந்து - முடி த்து, அதவி - நெருக்கி, போர் - யுத்தோந்முகமான- யானை - குவல யாபீடத்தை, ஒசித்து - முறித்து, பதவியாய் - வழியினாலேயே, மா ணியாய் - ப்ரஹ்மசாரியாய்க்கொண்டு, பாணியால-திருக்கையினால், நீர் - (தாந) ஜலத்தை, ஏற்று - வாங்கி, பண்டு ஒருகால் - முன்பு ஒருகாலத்திலே, மாவலியை - மஹாபலியினிடத்திலிருந்து, மண் - பூமியை, கொண்டிலையே - வாங்கினையல்லையோ? (அகூ)

வ்யா.—எண்பத்தொன்பதாம்பாட்டு.—(கதவி) நெஞ்சிலகற்று தல் ஞானம். சீற்றத்தை யுடையனாயிருந்துள்ள கம்ஸனை. (கதவி முற்காய்ந்து) சீறிமுற்காய்ந்து; தலைமயிரைப் பற்றி முன்னேபிடித் தென்னவுமாம். (உதவியித்யாதி) ஆனையை வ்யாபரியாதபடிக் கீழாக அடர்த்துக்கொம்பை யொசித்து. (பதவியாய்) நீர்மையை யுடையவனாய். கம்ஸனைக் கொன்றாற்போலே மூலையடியன்றிக்கே

வழிகொடு வழியேயென்றுமாம். (பாணியால் நீரேற்று) குடங்கையால் நீரேற்று. (பண்டித்யாதி)ஐஸ்வர்யந் தோற்றக்கொண்டாயோ? அர்த்தித்வந்தோற்ற மாணியாயன்றோ கொண்டது. (அகூ)

அந.—எண்பத்தொன்பதாம்பாட்டு.—கதம் - சீற்றம் சிறப்பு - மிருக். முற்காய்ந்து - ஏற்கவே காய்ந்தென்னுதல்; முன்னே பிடித்தென்னுதல் - அதவி - அடர்த்து, போர்யானை - யுத்தோந்முகமானயானை. பதவி - பதஸ்தனு டென்னுதல் - பதமென்று வழியாய், வழியே - நேர் கொடுநேரே என்னுதல். (அகூ)

**மண்ணுலக மாளேனே வானவர்க்கும் வானவனாய்**
**விண்ணுலகம் தன்னகத்து மேவேனே - நண்ணித்**
**திருமாலைச் செங்க ணெடியானை,எங்கள்**
**பெருமானைக் கைதொழுதபின். (கூ0)**

ப.உ.—திருமாலை - ஸ்ரிய:பதியாயும், செம் - சிவந்த, கண் - நேத்ரங்களையுடையனாயும், நெடியான் - (எங்களுக்கு) ஆஸ்ரயிக்கத்தக்கவனாயும், எங்கள் - எங்களுக்கு, பெருமானை - ஸ்வாமியுமான ஸர்வேஸ்வரனை, நண்ணி - கிட்டி, கைதொழுதபின் - ஆஸ்ரயித்த பிற்பாடு, மண்ணுலகம் - பூமியை டகூடின லோகத்தை (லீலாவிபூதியை),ஆளேனோ - பரிபாலநம் பண்ணமாட்டேனோ? வானவர்க்கு - நித்யஸூரிகளுக்கும், வானவனாய் - பெருமையையுடையனாய்க் கொண்டு, விண்ணுலகம் தன் அகத்து-பரமபதத்திலே, மேவேனோ- பொருந்தியிரேனோ? (கூ0)

வ்யா.—அவ.—தொண்ணூறாம்பாட்டு.—கம்ஸனைக்கொன்றோம்; ஆனையைக்கொன்றோம்; பூமியையளந்தோமென்று நம்முடைய செயல்களைச் சொல்லுமத்தனையோ? உமக்குப் பெறவேண்டுமெது சொல்லீரோவென்னச் சொல்லுகிறார்.

(மண்ணித்யாதி) ஓரடிவர நின்ற பூமியையாளுகை யெனக்கொரு பணியோ? (வானவரித்யாதி) நித்யஸூரிகளுக்கவ்வருகாய் பரமபதத்திலிருக்கை எனக்கொரு பணியுண்டோ? (திருமாலைச் செங்கணெடியானை யெங்கள் பெருமானை நண்ணிக்கை தொழுதபின்) ஸ்ரிய:பதியாய் ஸமாஸ்ரயணீயனாய் எங்களுக்கு ஸ்வாமியானவனைக் கிட்டிக் கைதொழுதபின் போக மோக்ஷங்களிலெனக்கொரு குறையுண்டோ. (கூ0)

பின்னாலருநரகம் சேராமல் பேதுறுவீர்
முன்னால் வணங்க முயல்மினோ - பன்னூல்
அளந்தானைக் கார்க் கடல்சூழ் ஞாலத்தை, எல்லாம்
அளந்தானவன்சேவடி. (கக)

ப-உ.—பின்னால் - சரீரம் விழுந்தபின்பு, அரு - க்ரூரமான, நரகம் - நரகங்களில், சேராமல் - கிட்டாதபடி, பேதுறுவீர் - மனங் கலங்கியிருக்கிற நீங்கள், முன்னால் - (தேஹயாத்ரைக்கு) முன்னமே, பல் - அநேகமான, நூல் - சாஸ்த்ரங்களினால், அளந்தானை - நிச்சயிக்கப்பட்டவனை, கார் - கறுத்த, கடல் - ஸமுத்ரத்தினால், சூழ் - சுற்றப்பட்ட, ஞாலத்தை எல்லாம் - பூமியை முழுதும், அளந்தானவன் - ஆக்ரமித்தவனுடைய, சே - சிவந்த, அடி - திருப்பாதத்தை, வணங்க - ஆஸ்ரயிக்க, முயல்மினோ - யத்நம்பண்ணுங்கோள்,

வ்யா.—அவ.—தொண்ணூற்றோராம்பாட்டு.—(பின்னால்) "சுயஷ்தஸூயாவஜாவ்ஹா - அர்த்தஸ்சமயப்ராப்தாஃ" என்கிறபடியே ஒன்றிலேயொன்றுமுண்டான விஷயம். ப்ரகருதிவஸ்யரான பின்பு நரகம் ஒருவகைதப்பாது. அவ்விஷயத்தை வணங்கப் பாருங்கோள்.

(பன்னூலளந்தானை எல்லாப் ப்ரமாணங்களாலும் ஜிஜ்ஞாஸிக்கப்பட்டவனை. (காரித்யாதி) வேதைகஸமதிகம்யமாய் அரிதாயிருக்குமோவென்னில்; வரையாதே எல்லார் தலையிலும் அடியைவைத்த ஸுலபனுடையதிருவடிகளை. (பின்னால நரகஞ்சேராமல் பேதுறுவீர் முன்னால்வணங்க முயல்மினோ) முன்னடிதோற்றாதேபாபத்தைப் பண்ணிப்பின்னையநுதாபம்பிறந்து பேதுற்றிருக்கிற நீங்கள், சரீரஸமநந்தரம் வடிம்பிட்டு நிற்கிறது, பின்னைச்செய்கிறோமென்றிருக்கவொண்ணாது; முற்படவணங்கிப் பின்னை தேஹயாத்ரை பண்ணப் பாருங்கோள். (கக)

அரு.—தொண்ணூற்றோராம் பாட்டு.—விஷயம் ஸகலபலப்ரதம்; ஆஸ்ரயியுங்கோளென்றபடி. "பேதுறுவீர், பின்னாலருநகரஞ் சேராமல் முன்னால் வணங்கமுயல் மினோ" என்றநுவதித்தருளிச்செய்கிறார் (முன்னடிதோற்றாதே இத்யாதி.) (கக)

அடியால் முன் கஞ்சனைச்செற்று, அமரரேத்தும்
படியான் கொடிமேல் புள்கொண்டான்-நெடியான்றன்

நாமமே யேத்துமின்க ளேத்தினல், தாம்வேண்டும்
காமமேகாட்டும் கடிது. (கூஉ)

ப-உ.—அடியால் - பாதத்தினல், முன் - முன்னே, கஞ்சனை - கம்ஸனை, செற்று - (உதைத்துக்) கொன்று, அமரர் - (ப்ரஹ்மாதி) தேவர்களால், ஏத்தும் - ஸ்துதிசகத்தக்க, படியான் - ஸ்வபாவத்தை யுடையனும், கொடிமேல் - த்வஜத்தின்மேலே, புள் - கருடபக்ஷியை, கொண்டான் - வஹித்தவனும், நெடியான்தன் - தீர்க்கசிந்தையை யுடையனுமான, ஸர்வேஸ்வரனுடைய, நாமமே - திருநாமத்தையே, ஏத்துமின்கள் - ஸ்தோத்ரம்பண்ணுங்கோள். ஏத்தினல் - ஸ்தோத்ரம்பண்ணினல், தாம் - தாங்கள், வேண்டும் - அபேக்ஷிக்கும், காமம் - புருஷார்த்தங்களை, கடிது - சீக்கிரத்திலேயே, காட்டும் - தர்சிப்பிக்கும் (கொடுக்கும்). (கூஉ)

வ்யா.—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—(அடியால்) கம்ஸன் ஈஸ்வரனை வஞ்சிக்க நினைத்ததை யவனுக்கு முன்னே கோலித் திருவடிகளாலே மார்விலே ஏறி முடித்தவன். (அமரரேத்தும்படியான்) குடியிருப்புப் பெற்றோமென்று ப்ரஹ்மாதிகளேத்தும் ஸ்வபாவத்தை யுடையவன். (கொடிமேல்புட் கொண்டான்) ரக்ஷணத்துக்குக கொடிகட்டியிருக்கிறவன். (நெடியான்றன்னாமமேயேத்துமின்கள்.)ஒருநாள் ஒருதிருநாமஞ் சொன்னவனை ஒருநாளும் மறவாதவனுடைய திருநாமங்களையேத்துங்கோள். (ஏத்தினலித்யாதி) ப்ரதிபந்தகம் போக்குகை, ஐஸ்வர்யம், ஆத்மலாபம், தன்னைத்தருகை,எல்லாங் கிடைக்கும். (கடிது) தேவதாந்தரபஜநம்போலே பலத்துக்கு விளம்பமில்லை. (கூஉ)

கடிது கொடுநரகம் பிற்காலும் செய்கை
கொடிதென் றதுகூடா முன்னம் - வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய் கீண்டானைக்,கொங்கைநஞ்
சுண்டானை யேத்துமினே வுற்று. (கூரு)

ப-உ.—கொடு - க்ரூரமான, நரகம் - நரகம், கடிது-கொடியது; பிற்காலும் - அங்குசசென்றபின்பும், செய்கை - (யமபடர்கள்) க்ருத்யம், கொடிது - க்ரூரமானது; என்று - இப்படிநினைத்து, அது - அந்தநரகம், கூடாமுன்னம் - ஸம்பவிப்பதற்குமுன்னமே, வடி - கூர்மையான, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கொண்டானை - கையிலே

ந்தினவனும், கூந்தல் - கேசியினுடைய, வாய் - வாயை, கீண்டானை - பிளந்தவனும், கொங்கை - (பூதனையின்) ஸ்தநத்திலிருந்த, நஞ்சு - விஷத்தை, உண்டானை - புஜித்தவனுமானவனை, உற்று - பொருந்தி, ஏத்துமினோ - ஸ்துதியுங்கோள். (௯௩)

வ்யா.—அவ.—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—(கடிது) ஆஶ்ரயிக்கைக்கொரு உபாயஞ்சொல்லுகிறது.

(கடிதித்யாதி) நரகதர்சநமோகடிது; பின்பு அங்குச்செயல்களோ கொடிது. ருதிரவாயுகளிலே புகடுகை, வாட்போன்றிருந்துள்ள சோரைகளிலே ஏறிடுகை. இவற்றையநுஸந்தித்து. (அது கூடா முன்னம்) அவை கிட்டுவதுக்கு முன்னே. (வடிசங்கங்கொண்டானை) கூரிய ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலே ஆயுதமாகக் கொண்டவனை. கேசியின்வாயைக்கிழித்தவனை. (கொங்கை நஞ்சுண்டானை) பூதனையை முடித்தவனை. (ஏத்துமினோவுற்று) நரகங்கொடிதென்று அநுஸந்திக்க விரோதி நிரஸநசிலனானவனைக்கிட்டி ஏத்தலாம். (௯௩)

உற்று வணங்கித் தொழுமின், உலகேழும்
முற்றும் விழுங்கும் முகில் வண்ணன் - பற்றிப்
பொருந்தா தான் மார்பிடந்து பூம்பாடகத்துள்
இருந்தானை ஏத்துமென் நெஞ்சு. (௯௪)

ப-உ.—உலகேழும் - ஏழுலோகங்களையும், முற்றும்-ஸம்பூர்ணமாக, விழுங்கும் - அமுது செய்தவனையும், முகில் - மேகம்போன்ற, வண்ணன் - திருமேனியையுடையனையும், பற்றி - பிடித்து, பொருந்தாதான் - (தன்னை) அடுக்காதஹிரண்யனுடைய, மார்பு - வக்ஷஸ்ஸை, இடந்து - பிளந்து, பூ - அழகிய, பாடகத்துள் - பாடகமென்கிற திவ்யதேசத்தில், இருந்தானை - நித்யவாஸம் பண்ணுகிறவனை, என் - என்னுடைய, நெஞ்சு - மநஸ்ஸு, ஏத்தும் - ஸ்துதிக்கும், (நீங்களும் இப்படியே), உற்று - பொருந்தி, வணங்கி - திருவடிகளில் விழுந்து, தொழுமின் - ஆஶ்ரயியுங்கோள். (௯௪)

வ்யா.—அவ.—தொண்ணூற்றுநாலாம்பாட்டு.—(உற்று) என்னுடைய நெஞ்சு ஏத்துகிறாற்போலே நீங்களுமேத்துங்கோளென்கிறார். தான் நமஸ்கரித்துக் காட்டி ப்ரஜையை நமஸ்கரிப்பிப்பாரைப்போலே.

(உற்றித்யாதி) கிட்டி அபிமாநசூந்யராய்த் தொழுங்கோள். (உலகித்யாதி) லோகமொன்றும் பிரிகதிர்படாதபடி தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்து, ப்ரஜை பால்குடித்தால் தாயுடம்பு நிறம் பெறுமாப் போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனாய், பொருந்தாத ஹிரண்யன்மார்பைப் பற்றிபிடந்து பின்னுமாஶ்ரிதவிரோதிகளைப் போக்கவேணுமென்று திருப்பாடகத்திலே எழுந்தருளியிருக்கிறவனையேத்தா நின்ற தென்னெஞ்சு. (௬௪)

என் னெஞ்சமேயா னென் சென்னியான், தானவனை
வன் னெஞ்சம் கீண்ட மணி வண்ணன் - முன்னம்சே
யூழியா னூழி பெயர்த்தான், உலகேத்தும்
ஆழியா னத்தி யூரான். (௬௫)

ப-உ.—தானவனை - அஸுரனை ஹிரண்யனுடைய, வல் - கடினமான, நெஞ்சம் – மார்பை, கீண்ட - பிளந்தவனும், மணி - நீலரத்நம் போன்ற, வண்ணன் - திருமேனியையுடையவனும், முன்னம் - முற்காலத்தில், சே - அழகிய, ஊழியான் - பூமியோடுகூடின லோகங்களில் வஸிக்கிறவனும், ஊழி - காலோபலக்ஷிதமான லோகத்தை, பெயர்த்தான், உண்டாக்கினவனும், உலகு – லோகத்திலுள்ளவர்கள், ஏத்தும் - ஸ்துதிக்கைக்காக, ஆழியான் - திருப்பாற்கடலில் பள்ளிகொண்டவனும், அத்தியூரான்-அத்தியூரில் எழுந்தருளியிருக்கிறவனுமான ஸர்வேஶ்வரன், என்-என்னுடைய, நெஞ்சம் - ஹ்ருதயத்திலே, மேயான் – பொருந்தி வாஸம்பண்ணுநின்றான்; என் சென்னியான் - என்னுடைய சிரஸ்ஸில் வாஸம் பண்ணுநின்றான்.()

வ்யா.—தொண்ணூற்றைந்தாம்பாட்டு.– (என்னெஞ்சமேயானித்யாதி) ஹிரண்யனுடைய "ஈஶ்வரோஹம்" என்ற திண்ணியநெஞ்சைக்கீண்டுசிறுக்கன் விரோதிபோயிற்றென்று புகாத்த வடிவையுடையவன். (முன்னமித்யாதி) தன்னாலேஸ்ருஷ்டமான ஜகத்திலேயுள்ளான். (ஊழியித்யாதி) காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களையுமுண்டாக்கினவன்; எல்லாருமேத்தும்படி திருப்பாற்கடலிலேகண்வளர்ந்தருளுகிறவன். (அத்தியூரான்) திருவத்தியூரிலே நிற்கிறவன். (என் சென்னியான்) என்னெஞ்சினுள்ளான். "தலைமேல தாளிணைகள் நிலைபேரானென்னெஞ்சத்து" என்கிறப்டியே. (௬௫)

அரு.—தொண்ணூற்றைந்தாம்பாட்டு.—ஊழியான் - ஜகத்துக்கு உபலக்ஷணமாய் ஜகத்திலே யுள்ளானென்கிறது - பேர்க்கை - திருப்புகையாய் ஸம்ஹ்ருதமானத்தை யுண்டாக்குகை. (௬௫)

அத்தி யூரான் புள்ளை யூர்வான், அணிமணியின்
துத்தி சேர் நாகத்தின் மேல் துயில் வான் - * முத்தீ
மறை யாவான் மாகடல் நஞ்சுண்டான் றனக்கும்
இறையாவா னெங்கள் பிரான். (கசு)

ப-உ.—புள்ளை - பக்ஷியான பெரியதிருவடியை, ஊர்வான்-நடத்துமவனாய், அணி - பூணப்பட்ட, மணி, மாணிக்கங்களும், இன் - அழகிய, துத்தி - படத்தின்புள்ளிகளும், சேர்-சேர்ந்திருக்கிற, நாகத்தின்மேல், திருவநந்தாழ்வான் மேலே, துயில்வான், கண்வளர்ந்தருளுமவனாய், முத்தீ - மூன்றக்நிகளை ப்ரதிபாதிக்கிற-மறையாவான், வேதங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டவனுமாய், மா - பெரிய, கடல் - ஸமுத்ரத்திலேயுண்டான, நஞ்சு - விஷத்தை, உண்டான் தனக்கும் - விழுங்கினருத்ரனுக்கும், இறையாவான் - ஸ்வாமியானவனுமாய், எங்கள் - எங்களுக்கு, பிரான் - உபகாரகனுமானவன், அத்தியூரான் - திருவத்தி யூரிலெழுந்தருளியிருக்கிறான். (கசு)

வ்யா.—தொண்ணூற்றாறும்பாட்டு.— (அத்தியூரானித்யாதி) இரண்டாலும் ஸர்வேஶ்வரனென்றபடி. (முத்தீமறையாவான்.) மூன்றக்நியையுஞ் சொல்லப்படாநின்ற வேதத்தாலே ஸமாராத்யதயா ப்ரதிபாதிக்கப்பட்டவன். "முத்திமறையாவான்" என்று பாடமாகில் மோக்ஷப்ரதிபாதக வேதத்தாலே ப்ரதிபாத்யனென்றபடி.-(மாகடலித்யாதி) அபிமாநியானருத்ரனுக்கும் ஈஶ்வரனானவன். எங்கள் பிரானுகைக்காக திருவத்தியூரிலே நின்றான். (கசு)

அரு.—தொண்ணூற்றாறும்பாட்டு.—கருடவாஹநத்வம், சேஷசாயித்வமாகிற இரண்டாலும். அணிமணியின துத்திசேர் நாகத்தின் மேல் -:பணங்களிலே அழகிய மணிகளையுடைத்தாய் திருவடிநிலைகள்போலே யிருக்கிற திருமண்சேர்ந்த திருவநந்தாழ்வான்மேலே. ()

எங்கள் பெருமா னிமையோர் தலை மகன் நீ
செங்க ணெடுமால் திருமார்பா - பொங்கு
படமூக்கி னாயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய்
குடமூக்கில் கோயிலாக் கொண்டு. (கஎ)

ப-உ.—திரு - லக்ஷ்மியை, மார்பா - திருமார்பிலுடையவனே! இமையோர் - நித்யஸூரிகளுக்கு, தலைமகன்-அதிபதியாயும், செம்-

(பா) * முத்தி.

சிவந்த, **கண்** - நேத்ரங்களையுடையனும், நெடு - **ஸர்வாதிகனும்,** மால் - **ஸர்வேஶ்வரனும்,** எங்கள், எங்களுக்கு, பெருமான் - ஸ்வாமியுமான, நீ - நீ, குடமூக்கு - திருக்குடந்தையை, **கோயிலாக்** கொண்டு - கோயிலாகத்திருவுள்ளம்பற்றி, பொங்கு - வ்ருத்தியடைந்திருக்கிற, படம - பணங்களையும், மூக்கின்-நாஸிகையையுமுடையனும், ஆயிரவாய் - ஆயிரம் வாயையுடையனுமான, பாம்பு - திருவநந்தாழ்வானாகிற, அணைமேல்-படுக்கையின்மேலே, **சேர்ந்தாய்**-பள்ளிகொண்டருளினாய். (கூஎ)

வ்யா.—தொண்ணூற்றேழாம்பாட்டு.—(எங்கள் பெருமானித்யாதி)எங்களுக்கு ஸ்வாமியான ஸௌலப்யத்துக்கு மேலேநித்யஸூரி போக்யனாய், ப்ரஸித்தமான கண்ணையுடையனாய், ஶ்ரிய:பதியானவனே! (பொங்கித்யாதி) விஸ்த்ருதமான படங்களையும் மூக்கையுமுடையனான திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தாய், திருக்குடந்தையைக் கோயிலாகக் கொண்டு பாம்பணைமேல் சேர்ந்தாயென்றந்வயம். (கூஎ)

**கொண்டு வளர்க்கக் குழவியாய்த் தான் வளர்ந்தது**
**உண்ட துலகேழு முள்ளொடுங்கக் - கொண்டு**
**குடமாடிக் கோவலனாய் மேவி, என் னெஞ்சம்**
**இடமாகக் கொண்ட விறை.** (கூஅ)

ப-உ.—கோவலனாய் - இடையனாய், குடம்கொண்டு - குடங்களை எடுத்துக்கொண்டு, ஆடி - கூத்தாடி, என் - என்னுடைய, நெஞ்சம் - மநஸ்ஸை, மேவி - பொருந்தி, இடமாக - ஸ்தாநமாக, கொண்ட - அங்கீகரித்த, இறை - **ஸ்வாமியானவன்,** கொண்டு - (சிலர்) எடுத்துக்கொண்டு, வளர்க்க, - வளர்க்கும்படி, குழவியாய் - பாலனாய், தான் - ஸ்வயம், வளர்ந்தது-வ்ருத்தியடைந்தான்; (அக்காலத்தில்), உலகேழும் - ஸகலலோகங்களும், உள் - (வயிற்றின்) உள்ளே, ஒருக்க - அடங்கும்படி, உண்டது - அமுதுசெய்தான் ()

வ்யா.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு.—(கொண்டித்யாதி)எடுத்து வளர்க்க வேண்டுமபடி குழவியாய்த்தான் வளர்ந்தது. ஸ்தநந்தயாவஸ்தையிலே வயிற்றிலே வைத்தது அடங்க உலகேழும். தனக்குரக்ஷகர்வேண்டியிருக்கிற அவஸ்தையிலே லோகத்துக்கு ரக்ஷகனு

ஞன். (கொண்டித்யாதி) இடையனாய் ஜாதிக்குசிதமான கூத்தை யாடி என்னெஞ்சிலே பொருந்தி இரங்கப்பண்ணி என்னெஞ்சைக் கோயிலாகக் கொண்ட ஈஸ்வரனுண்டதுலகேழு முள்ளொடுங்க. ()

அரு.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு.—கோவலனாய் குடங் கொண்டாடி. (கூஅ)

இறையெம் பெருமா னருளென்று, இமையோர்
முறை நின்று மொய் மலர்கள் தூவ - அறைகழல
சேவடியான் செங்க ணெடியான், குறளுருவாய்
* மாவலியை மண் கொண்டான் மால். (கூகூ)

ப-உ.—எம்பெருமான் - எங்களுக்கு ஸ்வாமியான, இறை - ஸர்வேஸ்வரனே! அருள் - க்ருபைபண்ணு; என்று - இப்படி ப்ரார்த்தித்து, இமையோர் - தேவர்கள், முறைநின்று - வரிசையாயிருந்து, மொய் - அழகிய, மலர்கள் - புஷ்பங்களை, தூவ - ஸமர்ப்பிக்க, அறை - சப்தியாநின்ற, கழல - வீரத்தண்டையையுடைய, சே - சிவந்த, அடியான் - திருவடிகளையுடையனாயும், செம் - சிவந்த, கண் - நேத்ரங்களையுடையனாயும், நெடியான்-ஸர்வாதிகனுமான ஸர்வேஸ்வரன், மால் - (அவர்கள் விஷயத்தில்) வ்யாமோஹத்தையுடையனாய்க்கொண்டு, குறளுருவாய் - வாமநரூபத்தையுடையனாய் (அவதரித்து), மாவலியை - மஹாபலியினிடத்தில் நின்றும், மண் - பூமியை, கொண்டான் - வசமாக்கிக்கொண்டான். (கூகூ)

வ்யா.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.—(இறையித்யாதி) அஸ்மத்ஸ்வாமியான ஈஸ்வரனே! அருளென்று ஒன்று கேட்டவன்றுகப்பாடி காப்பாரை வளைப்பாரைப்போலே "ஈஸ்வரோஹம் - ஈஸ்வரோஹம்" என்றாதின காளங்களைப்பொகட்டு தேவர்கள் புஷ்பங்தூவியாஸ்ரயிக்க. (அறைகழல சேவடியான்) த்வநியாநின்ற வீரக்கழலையுடையசிவந்த திருவடிகளையுடையவன். எல்லாவாபரணங்களுக்கு முபலக்ஷணம். (செங்கணெடியான்) ஸர்வேஸ்வரன் குறளுருவாய்ச் சென்று (மாவலியை மண்கொண்டான் மால்) ஆஸ்ரிதார்த்தமாகச் சுருக்கினவடிவை யுடையனாய் மஹாபலி பக்கலிலே மண் கொண்ட வ்யாமுக்தன். (கூகூ)

---

(பா) * மாவடிவில்.

அரு.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.—மாவடிவிலென்றும் மாவலியை யென்றும் பாடபேதம்-மாவடிவு-பெரியவடிவு. (௯௯)

**மாலே நெடியோனே கண்ணனே, விண்ணவர்க்கு**
**மேலா வியன் துழாய்க் கண்ணியனே - மேலாய்**
**விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே, என்றன்**
**அளவன்றால் யானுடைய வன்பு. (௧௦௦)**

இரண்டாந்திருவந்தாதி முற்றிற்று.
பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.

———:o:———

ப-உ.—மாலே - (குணங்களின் பெருமையையுடையவனே! நெடியோனே - (ஸ்வரூபத்தினாலும் விபூதியினாலும்.) அபரிச்சின்நனே! கண்ணனே - (ஸமஸ்தத்துக்கும்) நிர்வாஹகனே! விண்ணவர்க்கு - நித்யஸூரிகளைக்காட்டிலும், மேலா - உயர்ந்தவனாயிருக்கிறவனே! வியன் - ஆஶ்சர்யகரமான, துழாய் கண்ணியனே-திருத்துழாய மாலையையுடையவனே! மேலாய்-அதுக்குமேல க்ருஷ்ணனாயவதரித்தவனாய், விளவின்காய் (அஸுரனான)விளாமரத்தின்காயை, கன்றினால் - (அஸுரனான) கன்றாலே, வீழ்த்தவனே - விழச்செய்தவனே! யானுடைய - (உன்விஷயமாய்) நானுடைத்தான, அன்பு - ஸ்நேஹம், என்றனளவு என்னிடத்தில், அன்று-(அடங்கிநின்றது) அன்று, ஆல் - ஆஶ்சர்யம். (௧௦௦)

வ்யா.—நூறாம்பாட்டு.—(மாலே) ஸர்வாதிகனே! (நெடியோனே) அபரிச்சேத்யனானவனே! (விண்ணவரித்யாதி) நித்ய ஸூரிகளுக்கவ்வருகாய்ஐஶ்வர்யஸூசகமான திருத்துழாய்மாலையையுடையாய்! (மேலாமித்யாதி) பண்டுகன்றாலே விளங்காயை விழவிட்டவனே! (என்றனித்யாதி) என்னாஶ்ரயத்தினளவன்று உன்பக்கல் ஸ்நேஹம். இத்தையகஞ்சுரிப்படுத்த வேணும். (௧௦௦)

## இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யாநம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்,

———:o:———

அரு.—நூறாம்பாட்டு.—ஆல் - ஆஶ்சர்யம். (௧௦௦)

இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யாநஅரும்பதம் முற்றிற்று.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

இயற்பா.

பேயாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# மூன்றாந் திருவந்தாதி.

இந்த க்ரந்தம்

அபாரகருணாஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

மணிப்ரவாள வ்யாக்யாநஸஹிதம்

இச்சபாபண்டிதரான

சிங்கப்பெருமாள்கோவில்

தர்க்கதீர்த்தர்·ராமாநுஜாசார்யரால்

எழுதப்பட்ட ப்ரதிபதஸஹிதம்

அநேக தேசாநீத ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

லேககப்ரமாதாதி ஜநிததோஷங்களில்லாமல்

மேற்படி

ராமாநுஜாசார்யராலும்

வி. முத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீ வைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்) யாரால்

சென்னபட்டணம்,

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷரசாலையில்

ஸ்ரீபராங்குசதிருவவதாராதி - ௫௦௨௨.

ப்லவ ஸம்வத்ஸரத்தில்

பதிப்பித்துப் ப்ரசுரம் செய்யப்பட்டது.

௧௯௨௧.

விஜயதேதராம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

1882-வருஷத்திய ஆறாவது ஆக்ட்டுப்ரகாரம் ரிஜிஸ்டர் செய்து ஸ்தாபிக்கப்பட்டது.



ப்ரதிமாதம் 5 - பாரங்களுக்குக் குறையாமல் சாஸ்வதமாய் அச்சிட்டு மூன்றுதலைமுறைகளுக்கு பேட்ரன்களுக்கு 12-காபிகளும், பாகஸ்தர்களுக்கு 5 - காபிகளும் போஷகர்களுக்கு 1 - காபியும் ப்ரதிமாதம் கொடுக்கப்படும்.

பேட்ரன் சந்தா ரூபாய் - 200, பாகஸ்தர்களுக்கு சந்தா ரூபாய் 100, போஷகர்களுக்கு சந்தா ரூபாய் 20, மொத்தமாயாவது ப்ரதி இங்லீஷ்மீ[r] 15உக்குள் 10 - ல் ஒருபாகமாயாவது கட்டவேண்டும். இவர்களுக்கு ப்ரவேசவர்த்தநீ க்ரமமாக ரூபாய், 2-0 0, ரூபாய், 1-0-0, ரூபாய், 0 4 0.

மற்ற விவரங்களெல்லாம் சட்டபுஸ்தகத்தில் பார்த்துக்கொள்ளவேண்டும். இதின் விலை அணா 2

## இந்த ஸபையாரால் இதுவரையில் அச்சிட்டு ப்ரசுரம்செய்யப்பட்ட க்ரந்தங்கள்.

| | | | |
|---|---|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | மேலான காகிதம் | தமிழ்லிபி | 3—4—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | டிடோ | | 0—5—0 |
| ராமசரமஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | டிடோ | | 0—3—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபதடீகா அரும்பதஸஹிதம் | டிடோ | | 1—2—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி | டிடோ | டிடோ | 0--12—0 |
| டிடோ மூன்றாந்திருவந்தாதி | டிடோ | டிடோ | 0--11—0 |
| தாத்பர்யஸஹித பராசர விசிஷ்ட பரம தர்மசாஸ்த்ரம் | | | 0--14—0 |

இப்படிக்கு,

கராலபாடி - ஆழ்வாரய்ய,

கார்யதர்சி - தனாதிகாரி,

நெ. 33, வெங்கடாசலமுதலித்தெரு, சென்னை.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்.)

# இயற்பா.

# மூன்றாந் திருவந்தாதி.

—⋊(*)⋉—

இந்த க்ரந்தம் திவ்யப்ரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமான இயற்பாவில் மூன்றாவது ப்ரபந்தம். இதில் பாசுரங்கள். ௧௦௦-இதை யருளிச்செய்தவர், நிர்ஹேதுக பகவத்கடாக்ஷலப்த திவ்யஜ்ஞாநமுடைய பேயாழ்வார். இவர் முதலாழ்வார் மூவரில் மூன்றாமவர்; சென்னபட்டணத்துக்கு ஸமீபத்திலிருக்கும் மயிலாப்பூரில்மணிகைரவமென்கிற கிணற்றில் செங்கழுநீர்ப்பூவிலவதரித்த அயோநிஜர். இவர் மஹாயோகியாய் லோகத்தைக் கொஞ்சமும் லக்ஷ்யம்செய்யாமல் பகவதாஸக்தமநஸ்காராய் உந்மத்தனைப்போல் ஸஞ்சரித்திருந்தாராகையால் இவருக்குப் பேயாழ்வாரென்று திருநாமமாயிற்று.

இவர், த்வாபராதி ௮௬௦௬௦௦௦ - ம் ஸம்வத்ஸரமான ஸித்தார்த்திநாமஸம்வத்ஸரம் ஐப்பசிமாஸம் சுக்லபக்ஷதசமி வியாழக்கிழமை கூடிய சதயநக்ஷத்ரத்தி லவதரித்தார். இவருக்கு நாமாந்தரங்கள் — மஹதாஹ்வயர், மயிலாபுராதிபர். இவருக்குத்திருவாராதநம் - ஆழ்வார்கள் நைனார். ஆசார்யர்-ஸேனைமுதலியார். சிஷ்யர்-திருமழிசைப்பிரான். இவர் ப்ரபாவத்தைப்பார்த்து இவனை நந்தகாம்சமென்பர்கள். இவர் மங்களாசாஸநம் செய்த திவ்யதேசங்கள் - திருவல்லிக்கேணி, பெருமாள்கோயில், திருமலை, திருவெஃகா, வேளுக்கை, திருக்குடந்தை, பாடகம், திருப்பாற்கடல், பரமபதம், கடிகை, திருவிண்ணகர், ஸ்ரீரங்கம், திருக்கோட்டியூர், அஷ்டபுஜம், இவைகள். இப்ப்ரபந்தத்திற்கு வ்யாக்யாந மருளிச்செய்த பெரியவாச்சான்பிள்ளை, அவ் வ்யாக்யாநத்திற்கு அரும்பத மருளிச்செய்த அப்பிள்ளை, இவர்கள் ப்ரபாவம் முதல்திருவந்தாதி பீடிகையில் இச்சபையாரால் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்தப்பேயாழ்வாரும், பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார்களும் தங்கள் யோகமஹிமையினால் ( ௬௧௨௫ ) ஸம்வத்ஸரம் பூலோகத்தி லெழுந்தருளியிருந்து திருக்கோவலூரில் பரமபதத்துக்கெழுந்தருளினார்கள்.

வ்யா.— (சீராரும்மாடத் திருக்கோவலூரதனுள்) * சீரேறு மறையாளர் நிறைந்தசெல்வத்திருக்கோவலூ ராகையாலே ஸ்ரீமத்தாய், அவர்களுக்குப் பாங்காகவஸிக்கும்படியான மாடங்களையுடைத்தாய், அத்தாலே தத்தேகநிரூபணீயமாயிருக்கிற திருக்கோவலூரென்றபடி., கோவலன் வர்த்திக்கையாலே அதுவே நிரூபகமானதேசம். (ஊர்) * தானுகந்தவூர். பின்புள்ளார்க்கு மாஸ்ரயணீயனுகைக்காக க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களெல்லாம் தோற்ற "நீயும் திருமகளும் நின்றாயால்" இத்யாதிப்படியே வர்த்திக்கிறதேசம். (அதனுள்) இப்படி விலக்ஷணமானதேசத்துக்குள்ளே, விலக்ஷணராலே அன்றெரித்த * ஞானச்சுடர்விளக்குகளாலே புறவிருளும் இதயத்திருளும் போனவாறே. (காரார்கருமுகிலைக்காணப்புக்கு) * மழைமுகிலே போல்வானென வவனை * பொலிந்திருண்டகார் வானின்படியே கண்டநுபவிக்கப்புக்கு. புறமழைக்கு ஒதுங்கினவர்க்கு உள்ளும் மழைமுகிலாயிருக்கிறபடி. (காணப்புக்கு) அன்பு கூரும்படியானதாம் அநுபவிக்கப்புக்கு.

(அதனுள் காரார்கருமுகில்) * குறுங்குடியுள் முகில்போலே க்ருபாவர்ஷியான மேகமிறே.(காரார்கருமுகிலை) வர்ஷுகவலாஹகம் போலே மேககாந்தியாயிருக்கை. காளமேகமன்றிக்கே வர்ஷுக வலாஹகதர்சநத்தாலே ஒருநிவேசநத்திலே ஒதுங்கப்புக்கு மூவரையொழிய மற்றாரென்று ஆராயுமிடத்து என்னு மாம். ஏவம்விதனுன வவனை * நெஞ்சென்னு முட்கண்ணாலே காணப்புக்கு. (ஓரா) திருவுள்ளத்திலே அவ்வநுபவம் விசதமாம்படி ஓர்ந்து-அநுஸந்தித்து, மநநம்பண்ணி.

(திருக்கண்டேனென்றுரைத்த) அவ்வநுபவ ஜநித ப்ரீதியாலே தாம் ஸாக்ஷாத்கரித்த படியை "திருக்கண்டேன்" என்று தொடங்கி பின்புள்ளார்க்கும் ப்ரஸித்தமாக வருளிச்செய்த, (சீரான் கழலே) இப்படி ஸ்ரீமானை யநுபவித்த ஸ்ரீயையுடையரான ஸ்ரீமானுடைய ஸ்ரீபாதங்களே. "மாமலராள் தன்னெடுமாயனைக் கண்டமைகாட்டும் தமிழ்த்தலைவன்பொன்னடி" என்னக்கடவதிறே. (உரைக்

கண்டாய்நெஞ்சேயுகந்து) அவர் "திருக்கண்டேன்" என்றநுபவித்தாற்போலே நீயுமவர்திருவடிகளை வாக்காலே அநுஸந்திக்கப்பார். "யந்மநஸாத்யாயதி தத்வாசாவததி - யத்மநஸாத்யாயதிதத்வாசாவததி" யிறே.

(நெஞ்சேயுகந்து) இப்படி ததீயசேஷத்வத்துக்குத் தகுந்த நெஞ்சே! அநுஸந்திக்குமிடத்தில் ஹர்ஷத்துடனே அநுஸந்தித்து. "உகந்துபணிசெய்து" என்னுமாபோலே. "தனிமாத்தெய்வத்தடியவர்க்கு இனிநாமாளாகவே இசையுங்கொல்" என்றாரிறே. சீரானென்று - பகவத்ஸாக்ஷாத்கார ஹேதுவான ஜ்ஞாநபக்த்யாதி குணங்களையுடைய ரென்னவுமாம்.

இத்தால் - பகவத் ஸாக்ஷாத்காரமுடையராய், அத்தை ஸம்ஸாரிகளு மநுபவிக்கும்படி ஸ்வஸூக்திமுகேநப்ரகாசிப்பிக்கு மவர்களான ஸ்ரீமான்கள் திருவடிகள் நித்யாநுஸந்தேயமென்றதாயிற்று.

பிள்ளைலோகம்ஜீயர் திருவடிகளேசரணம்.





ஸ்ரீரஸ்து.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எம்பெருமானார் திருவடிகளேசரணம்.

## பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த

# மூன்றாந்திருவந்தாதி வ்யாக்யாநம்.

அவதாரிகை.—உபயவிபூதி யுக்தனென்றநுஸந்தித்தார் முதலாழ்வார். அதுக்கு வாசகசப்தம் நாராயணசப்தமென்றார் நடுவிலாழ்வார். அதுக்கு ஸ்ரீசப்தம் கூட்டிக்கொள்ளவேணுமென்கிறா ரிவ்வாழ்வார். ஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது வையந்தகளி. ஜ்ஞாநவிபாகையான பக்தியைச்சொல்லுகிறது அன்பேதகளி. பக்தியாலே ஸாக்ஷாத்கரித்தபடி சொல்லுகிறது இதில்.

அரும்பதவிளக்கம்.— ப்ரவேசே-ப்ரதிபாத்ய விசேஷத்தாலே ஒருஸங்கதியும் ப்ரபந்தகர்த்தாக்கள் ஸ்வபாவத்தாலே ஒருஸங்கதியும் ஆகவிரண்டு.

திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன், திகழும்
அருக்கனணிநிறமுங்கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழிகண்டேன் புரிசங்கங்கைக்கண்டேன்
என்னாழிவண்ணன்பா லின்று. க.

அ.— இன்று என் ஆழிவண்ணன்பால் திரு கண்டேன். (5) பொன் மேனி கண்டேன். திகழும் அருக்கன் அணி நிறமும் கண்டேன்.(13) செரு கிளரும் பொன் ஆழி கண்டேன். புரி சங்கம் கை கண்டேன். (22)

அ.— பகவந் நிர்ஹேதுககடாக்ஷம்பெற்ற வின்று (நான்) எனதுஸ்வாமியான கடல்வண்ணன்பக்கல் பெரியபிராட்டியை ஸேவித்தேன். (ரு) அழகிய திருமேனியை ஸாக்ஷாத்கரித்தேன். விளங்காநின்ற வாதித்யன்போ லுஜ்வலமான வடிவை யறிந்தேன். (கங) யுத்தத்தில் வ்ருத்தியடைகிற ஸ்ப்ருஹணீயமான திருவாழியை ஸேவித்தேன். விருப்பமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையில் ஸாக்ஷாத்கரித்தேன். (உஉ)

வ்யா.— முதற்பாட்டு.— ( திருக்கண்டேன் ) தர்மந்தனைக் கண்டேன். ( பொன்மேனிகண்டேன் ) அவளிருக்கு மாஸநங்கண்டேன். (திகழுமருக்கனணி நிறமுங்கண்டேன்)இருவரும்சேர்ந்தசேர்த்தியாலே இளவெய்யில் கலந்தாற்போலே யிருக்கிறபடி. (செருக்கிளரும் பொன்னாழிகண்டேன்) அஸ்தாநேபயசங்கை பண்ணி "வடிவாய்நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு,வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு" என்கிறபடியே திருவாழியைக் கண்டேன். (புரிசங்கங்கைக்கண்டேன்) "வ்யூஹஜலிம் வ்யூஹ்வாஸீநம் - ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்" என்கிறபடியே. (என்னாழிவண்ணன்பாலின்று) கடல்போலே ஸ்ரமஹரமானவடிவை யெனக்குக்காட்டினவன் பக்கலிலே. ( திருக்கண்டேன் - பொன்மேனிகண்டேன்) ப்ரபைபக்காஸ்ரயங்கண்டேன். ( திகழுமருக்கனணிநிறமுங்கண்டேன் ) இருவரும் கலந்தகலவியாலே பிறந்த ஸமுதாய சோபை. (என்னாழிவண்ணன்பால்) கடலிலேயிறே பிராட்டியும் மற்றுமுள்ள ரத்நங்களுமெல்லாம் பிறப்பது.(இன்று)அவன்காட்டக் கண்டவின்று. இவர்கள் புருஷகாரமாகக் கண்டவின்றென்னவுமாம்.

அரு.— முதற்பாட்டு.— (இளவெய்யில்) பாலாதித்யனுடைய அழகியதாய் ப்ரகாசிக்கிறநிறம்போன்ற புகரைக்கண்டேன். செருவிலே - யுத்தத்திலே, கிளருகிற. பெரியாழ்வாரைப்போலே தாமுங் கண்டோமென்கிறார். ( அஸ்த்தாநே இத்யாதி ). புரிசங்கம்-புரிகை-ஒடுங்குதல். ஆழிவண்ணன்-ஸ்வபாவபரம் இரண்டாந்தாத்பர்யம். க.

இன்றேகழல்கண்டே னேழ்பிறப்பும்யானறுத்தேன்
பொன்தோய்வரைமார்பில்பூந்துழாய்—அன்று
திருக்கண்டுகொண்ட திருமாலே,உன்னை
மருக்கண்டுகொண்டென் மனம். உ.

அ.— பொன் தோய் வரை மார்பில் பூ துழாய் ( 6 ) அன்று திரு கண்டு கொண்ட திருமாலே! ( 10 ) என் மனம் உன்னை மரு கண்டுகொண்டு. ( 15 ) இன்றே கழல் கண்டேன். ஏழ் பிறப்பும் யான் அறுத்தேன். (22)

அர்.— பிராட்டி யுறையக்கடவதாய் மலைபோன்ற திருமார்பிலழகிய திருத்துழாய்மாலையையுடையவனாய் ( சு ) அந்த ஸமுத்ர மதநகாலத்தில் பிராட்டி தேடிப்பிடித்த ஸ்ரியःபதியே! (௧௦) என்னுடைய மநஸ்ஸு உன்னை யாசைப்பட்டுக் கண்டுகொண்டது. (௧௫)

இப்போதே (உன்) திருவடியை ஸேவித்தேன். வ்ருத்தியடையும் ஜந்மங்களை நான் போக்கினேன். (௨௨) ௨.

வ்யா.— இரண்டாம்பாட்டு.— (இன்றே யித்யாதி) கைங்கர்ய மேயாத்ரையாம்படியாயிற்று. (ஏழ்பிறப்பும் யானறுத்தேன்) ப்ரதிபந்தகம்போயிற்றென்று தோற்றும்படியாயிற்று. (பொன்தோயித்யாதி) "பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்தலம்ஹரே:" - பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்தலம்ஹரே:" என்று பிராட்டிதானே ஆசைப்பட்டுவந்து ஏறும்படியானமார்பு படைத்த. ஸ்ரிய:பதியை. (உன்னையித்யாதி) ஒருப்ரயோஜநத்தைக்கொண்டு போகையன்றிக்கே உன்பக்கலிலே மருவிற்றென்மநஸ்ஸு. ௨.

அரு.—இரண்டாம்பாட்டு.— (பொன்தோய்வரைமார்பு) பொன்னென்று ஸ்த்ரீக்கும் பேராகையாலே பிராட்டி தோய்ந்த மார்பென்னுதல்; பொன்போன்ற வாபரணங்கள் தோய்ந்தமார்பென்னுதல். அன்று - அம்ருத மதநஸமயத்திலே. மருக்கண்டு - முழுச்சொல். மருவிற்றென்றபடி. ௨.

மனத்துள்ளான்மாகடல்நீருள்ளான், மலராள்
தனத்துள்ளான் தண்டுழாய் மார்பன்—சினத்துச்
செருநருகச்செற்றுகந்த தேங்கோதவண்ணன்
வருநரகம்தீர்க்கும் மருந்து. ௩.

அந்.— மா கடல் நீர் உள்ளான் மலராள் தனத்து உள்ளான் (7) தண் துழாய் மார்பன் செருநர் உக சினத்து செற்று உகந்த (15) தேங்கு ஓதம் வண்ணன் வரும் நரகம் தீர்க்கும் மருந்து மனத்து உள்ளான் (24)

அர்.— விசாலமான ஸமுத்ர ஜலத்தில் சயநித்தவனாய் கமலவாஸிநியானஸ்ரீதேவியின் ஸ்தநத்தில் வாஸம் செய்யுமவனாய் (எ) குளிர்ந்த திருத்துழாய் மாலையைத் திருமார்பிலுடையவனாய் பகைவர் வேராறும்படி (அவர்களைக்) கோபித்துக் கொன்று களித்தவனாய் (௧௫) நிறைந்த கடல்போன்ற வடிவையுடையவனாய் வரக்கடவ நரகத்தைப் போக்குகைக்கு ஔஷதம்போல்பவனான ஸர்வேஶ்வரன் (என்) மனதில் நித்யவாஸம் செய்கிறான். (௨௪) ௩.

வ்யா.— அவ.— மூன்றாம்பாட்டு.— (மனத்துள்ளான்) கீழ்விவருடைய மநஸ்ஸு அங்கேமருவினபடி சொல்லிற்று. அவனிவருடைய மநஸ்ஸை யல்லதறியாதபடி சொல்லுகிறதிதில்.

(மனத்துள்ளானித்யாதி) ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே கிடந்து அவ்வோபாதி பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்தையும் ஒருஸ்தானமாக வுடையனாய், தண்டுழாய்மார்பனாய், சினத்திலேசெருநரானவர்கள் மங்கும்படிசெற்று ஆஶ்ரிதவிரோதிகள்போகப்பெற்றோமென்றுகந்து அத்தாலே ஶ்ரமஹரமானவடிவையுடையனாய், அநுபவித்தல்லது விடாதநரகத்தைக் கடக்கைக்கு பேஷஜமானவன். (மனத்துள்ளான்) என்னுடைய மநஸ்ஸிலுள்ளான். ௩.

அரு.— மூன்றாம்பாட்டு.— செருநருக - சத்ருக்கள் மடிய. ௩.

மருந்தும்பொருளு மமுதமுந்தானே
திருந்தியசெங்கண்மாலாங்கே—பொருந்திய
நின்றுலகமுண்டுமிழ்ந்து நீரேற்றுமூவடியால்
அன்றுலகந்தாயோனடி. ௪.

அந்.— திருந்திய செம் கண் மால் அன்று உலகம் உண்டு உமிழ்ந்து (8) ஆங்கே பொருந்திய நின்று நீர் ஏற்று மூவடியால் உலகம் தாயோன் அடிதானே மருந்தும் பொருளும் அமுதமும்.(20)

அர்.— ருஜுவாய் சிவந்திருக்கிற திருக்கண்களையுடையனாய் ஸர்வாதிகனாய் அந்தப்ரளயகாலத்தில் லோகங்களை யமுதுசெய்து (பின்பு) வெளிப்படுத்தி (அ) அந்தமஹாபலியின்யாகத்தில் இணங்கி நின்று தானஜலத்தை வாங்கி மூவடியினா லவ்வுலகத்தை யளந்தவனுடைய திருவடிதானே ஔஷதமும்; தநமும்; அம்ருதமும். (௨௦) ௪.

வ்யா.— நாலாம்பாட்டு.— (மருந்துமித்யாதி) மருந்தென்று விரோதிநிரஸநமாத்ரத்தைக்கொண்டு பொருளென்று உபாயமாக்கி அமுதமென்று உபேயமென்கிறது.மருந்தென்று உபாயமாக்கி,பொருளு மமுதமுந்தானேயென்று உபாயத்திலிரண்டவஸ்தையைச்சொல்லுகிற தென்னுமாம். (திருந்திய செங்கண்மால்) இவனீஶ்வரனென்றறியலாம்படி திருந்திச்சிவந்த கண்ணையுடையனான ஸர்வேஶ்வரன். (திருந்திய) இவ்வாத்மாக்கள் திருந்தாவிட்டால் இவற்றைத்திருத்தப்பாராதே இவற்றுக் கீடாகத் தன்னைத்திருத்திக்கொண்டிருக்கும் ஸர்வேஶ்வரனென்னவுமாம். (ஆங்கேபொருந்திய) ஶ்ரியஃபதிவந்து நீரேற்கிறானென்று கூசவேண்டாதபடி இரப்பிலே பொருந்திநின்று,

லோகத்தைநீரேற்று,லோகத்தை வயிற்றிலேவைத்துக்காத்து,வெளி நாடுகாணவுமிழ்ந்து, நீரேற்றலோகத்தை மூவடியாலே அளந்தவனுடைய திருவடி மருந்தும் பொருளு மமுதமுந்தானே. ச.

அரு.— நாலாம்பாட்டு.— பொருளுபாய மானபோது, மருந்தென்று அநிஷ்ட நிவ்ருத்தி சொல்லுகையாலே இஷ்ட ப்ராப்திக்குபாயமென்றபடி. (திருந்திய) கண்ணுக்காதல், அவனுக்காதல் விசேஷணம். ச.

அடிவண்ணந்தாமரை யன்றுலகந்தாயோன்
படிவண்ணம் *பார்க்கடல் நீர்வண்ணம்—முடிவண்ணம்
ஓராழிவெய்யோ னொளியு மஃதன்றே
ஆராழிகொண்டாற் கழகு. ரு.

அ.— அன்று உலகம் தாயோன் அடிவண்ணம் தாமரை. (5) படி வண்ணம் பார் கடல்நீர் வணணம். (10) முடிவண்ணம் ஓர் ஆழி வெய்யோன். ஒளியும் அஃதன்றே. (16) ஆர் ஆழி கொண்டாற்கு அழகு. (20)

அர்.— மஹாபலிதாநம் கொடுத்தவக்காலத்தி லுலக மளந்தவனுடைய திருவடியின்ஸௌந்தர்யம் தாமரைப்பூப்போலிருந்தது.(5) திருமேனியின் வர்ணம் பூமியைச்சூழ்ந்த ஸமுத்ரஜலத்தின் நிறம் போலிருந்தது. (10) கிரீடகாந்தி ஒற்றைச் சக்கரமுடையதேரேறின ஸூர்யன்போலிருந்தது. தேஜஸ்ஸு மந்தஸூர்யன்போலவிருந்தது. (16) ஸௌந்தர்யபூர்ணமான திருவாழி யேந்தினவருடைய ஸௌந்தர்யம் இவ்விதமாயிருந்தது. (20) ரு.

வ்யா.—அவ.—ஐந்தாம்பாட்டு.—(அடிவண்ணம்) திருவுலகளந்தருளினபடி ப்ரஸ்துதமானவாறே அதுக்குத்தோற்று அவனழகை யநுபவிக்கிறார்.

(அடிவண்ணந்தாமரை) திருவடிகளுடைய நிறம்தாமரை.(அன்றித்யாதி) லோகத்தை யடங்கலு மளந்துகொண்டவனுடைய நிறம் பார் சூழ்ந்த கடலின் நிறம். வெளுப்புப்பேசுகிற விடமாகில் திருப்பாற்கடலினுடைய நிறமென்னவுமாம். (முடியித்யாதி) திருவபிஷேகத்தினுடைய நிறம் ஆதித்யன். (ஒளியுமஃதன்றேயித்யாதி) கையிலே திருவாழிபிடித்தால் வேறொரு ஆபரணம் சாத்தவேண்டாதிருக்கிறவனுடைய அழகு அடிவண்ணந்தாமரை. ரு.

* (பா) பாற்கடல்

அரு.— ஐந்தாம்பாட்டு.— (ஒளியுமஃதன்றே) ஆபரண சோபையால் வந்ததேஜஸ்ஸூமந்தவாதித்யனுடையதேஜஸ்ஸூபோலே அன்றோவென்றபடி. இதுக்ரியாபதம். ரு.

அழகன்றேயாழியாற் காழிநீர்வண்ணம்
அழகன்றேயண்டங்கடத்தல்—அழகன்றே
அங்கைநீரேற்றார்க் கலர்மேலோன்கால்கழுவக்
கங்கைநீர்கான்றகழல். ௬.

அந்.— ஆழியாற்கு ஆழிநீர்வண்ணம் அழகன்றே ? அண்டம் கடத்தல் அழகன்றே ? (6) அம் கைநீர் ஏற்றார்க்கு அலர்மேலோன் கால் கழுவ (12) கங்கைநீர் கான்ற கழல் அழகன்றே? (16).

அர்.—திருவாழியேந்திய ஸர்வேஸ்வரனுக்கு ஸமுத்ரஜலம்போன்றநிறம் அழகன்றோ? ப்ரஹ்மாண்டத்தை யாக்ரமித்த தழகன்றோ? (௬)அழகிய திருக்கையில் தாநஜலமேந்தியஸர்வேஸ்வரனுக்கு கமலாஸநனாகியப்ரஹ்மா திருவடி விளக்க (௧௨) (அப்போது) கங்காஜலத்தைப் பெருக்கின திருவடி அழகன்றோ? (௧௬). ௬.

வ்யா.—ஆறாம்பாட்டு.— (அழகு) (ஆழியித்யாதி) ஸர்வேஸ்வரனுக்குக் கடலினீரினுடைய நிறம் வெறுமனே நிறமாகுமதேயோ? அழகன்றோ ? இன்னிறமுடையவற்கு வேறொரு ஒப்பனைவேணுமோ ? (அண்டங்கடத்தலழகன்றே) செயலோவழகியதன்றிக்கேயிருக்கிறது. (அங்கையித்யாதி) திருவடிதான் கங்கைக்குக்காரணமென்று பாவநமாத்ரமாகுமதேயோ? அதுவுமவனுக்கழகன்றோ. ௬.

கழல்தொழுதும்வாநெஞ்சே கார்க்கடல்நீர்வேலை
பொழிலளந்த புள்ளூர்திச்செல்வன்—எழிலளந்து
மெண்ணற்கரியானையெப்பொருட்குச்சேயானை
நண்ணற்கரியானை நாம். எ.

அந்.— நெஞ்சே ! கார் கடல்நீர் வேலை பொழில் அளந்த புள் ஊர்தி செல்வன்(9)எழில் அளந்து எண்ணற்கும் அரியானை எப்பொருட்கும் சேயானை (15) நண்ணற்கு அரியானை நாம் கழல் தொழுதும். வா. (21)

அர்.— மனமே ! கரிய கடல்நீருக் கெல்லையாயிருக்கிற பூமியையளந்தவனாய் கருடனை வாஹநமாகவுடையவனாய் ஸ்ரீமானாய் (௯) அழகைப் பரிச்சேதித்து ( இவ்வளவென்று) நினைக்கைக்கும் துர்லப

ணாய் ஸமஸ்தவஸ்துக்களுக்கும் தூரஸ்தனாய்(கரு) (அநாஶ்ரிதர்க்குக்) கிட்ட வரியனாயிருக்கிறஸர்வேஶ்வரனை நாம் திருவடி தொழு வோம் வா. (உ௪). எ.

வ்யா.— அவ.— ஏழாம்பாட்டு.— (கழல) அழகிப்படி குறை வற்றபின்பு நாமுமிப்படி யநுபவிப்போமென்று திருவுள்ளத்தை யழைக்கிறார்.

(கார்க்கடலித்யாதி) கடல்சூழ்ந்தபூமியை யளந்து, புள்ளூர்தி, அத்தாலே ஶ்ரீமானாய். (எழிலித்யாதி) எழிலையளந்து மநோரதிக்க வொண்ணாதவனை. (எப்பொருட்கும் சேயானை) எல்லாப்பொருளுக் கும் தூரஸ்தனாயுள்ளவனை. (நண்ணற்கரியானை) ஸ்வயத்நத்தாலே காண்பார்க்குக் கிட்டவரியனானவனை. (நாம்கழல்தொழுதும்வாநெ ஞ்சே) அவன்காட்டக்காணவிருக்கிற நாம் திருவடிகளைத்தொழு வோம்போகு. எ.

அரு.— ஏழாம்பாட்டு.— கார்க்கடல்நீர் வேலைபொழில் - கருநீ ரையுடைய கடற்கரையாலே சூழப்பட்ட பூமி. பொழில்-பூமி.வேலை- கரை. அளந்து - அழகைப்பரிச்சேதித்து. எ.

**நாமம்பலசொல்லிநாராயணாவென்று**
**நாமங்கையால்தொழுதுநன்னெஞ்சே—வாமருவி**
**மண்ணுலகமுண்டுமிழ்ந்து வண்டறையுந்தண்டுழாய்**
**கண்ணனையே காண்கநங்கண். அ.**

அர்.— நல் நெஞ்சே ! பல நாமம் நாராயணாவென்று சொல்லி (6)நாம் அம் கையால் தொழுதும். மருவி வா.(12)மண் உலகம்உண்டு உமிழ்ந்து (16) வண்டு அறையும் தண் துழாய் கண்ணனையே நம் கண் காண்க. (24)

அர்.— அநுகூலமான மநஸ்ஸே! அநேக திருநாமங்களையும் நாராயணாவென்கிற திருநாமத்தையும் சொல்லி(௬)நா மழகிய கையினா லாஶ்ரயிப்போம். விருப்புற்று வா, (கஉ) பூலோகம்முதலிய லோக ங்களை யமுதுசெய்து(பின்பதை)வெளிப்படுத்தினவனாய் (க௬)வண்டு கள்சப்தியாநின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையனான க்ரு ஷ்ணனையே நம்முடைய நேத்ரங்கள் காணக்கடவதாக, (உ௪). அ.

வ்யா.— அவ.— எட்டாம்பாட்டு.— ( நாமம் ) எல்லாவிந்த்ரி யங்களாலு மவனையநுஸந்திக்க வேணுமென்கிறார்.

(நாமம்பலசொல்லி) கார்யபுத்யாசொல்லுகிறாரகில்லிறே யொன்றைச்சொல்லுவது. எல்லாத்திருநாமங்களையும் சொல்லி.(நாராயணா வென்று)அஸாதாரணமான நாமத்தைச்சொல்லி. (கையால்தொழுது நன்னெஞ்சே) எல்லாவிந்த்ரியங்களுக்கும்மடி நீயிறே. (மண்ணித்யாதி) ப்ரளயம் வருமென்றேற்கவேகோலி வயிற்றிலேவைத்து. வெளிநாடு காணவுமிழ்ந்து போக்யபூதனாய் ஸுலபனான க்ருஷ்ணனையே விரும்பிக்காணவேணுங்காண். அ.

கண்ணுங்கமலம் கமலமேகைத்தலமும்
மண்ணளந்தபாதமும்மற்றவையே—எண்ணில்
கருமாமுகில்வண்ணன் கார்க்கடல்நீர்வண்ணன்
திருமாமணிவண்ணன் தேசு. கூ.

அந்.— கரு மா முகில் வண்ணன் கார் கடல்நீர் வண்ணன் (7) திரு மா மணி வண்ணன் தேசு எண்ணில். (13) கண்ணும் கமலம் கைத்தலமும் கமலமே. (17) மற்று மண் அளந்த பாதமும் அவையே. (22)

அர்.— கறுத்த பெரிய மேகம்போன்ற வடிவையுடையவனாய் கருங் கடல்நீர் நிறத்தனாய் (எ) அழகிய ஶ்லாக்யமான மணி யுருவனான ஸர்வேஶ்வரன் தேஜஸ்ஸை யாராய்ந்து பார்க்கில் (கரு) திருக் கண்களும் தாமரஸ புஷ்பம்போன்றிருக்கும்.திருக்கைத்தலமும் தாமரஸபுஷ்பம்போலவே யிருக்கும்.(கஎ) இன்னமும் பூலோகத்தை யாக்ரமித்த திருவடியும் அப்புஷ்பம்போலவே யிருக்கும். (உஉ) கூ.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு.—(கண்ணும்)(கருமாமுகில்வண்ணன், கார்க்கடல் நீர்வண்ணன் திருமா மணிவண்ணன் தேசெண்ணில்) ப்ரமஹரமாய் கண்ணுக்கடங்காதேதிரண்டு குளிர்ந்திருந்தவனுடைய வழகையெண்ணில். (கண்ணுங்கமலம் கமலமேகைத்தலமும் மண்ணளந்தபாதமும் மற்றவையே) காடுமேடுமான பூமியையளந்ததுவும் பூவைக்கொண்டே. கூ.

தேசுந்திறலும் திருவுமுருவமும்
மாசில்குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில்
வலம்புரிந்தவான்சங்கங் கொண்டான்பேரோத
நலம்புரிந்துசென்றடைமின் நன்கு. கo.

அ்.— வலம்புரிந்த வால் சங்கம் கொண்டான் பேர் ஓத பேசில் (7) தேசும் திறனும் திருவும் உருவமும் மாசு இல் குடி பிறப்பும் (15) மற்றவையும் நன்கு நலம் புரிந்து சென்று அடையும். (21)

அர்.— தக்ஷிணாவர்த்தமான வெண் சங்கை (திருக்கையில்) ஏந்திய திருமாலுடைய திருநாமத்தைச் சொல்ல (அதின் பலத்தைப்) பேசினால் (எ) தேஜஸ்ஸும் ஸாமர்த்யமும் ஐஸ்வர்யமும் ஸௌந்தர்யமும் குற்றமற்ற குலத்தில் ஜந்மமும் (கரு) மற்றுமுண்டான நன்மையும் (தங்கள்) மேன்மையை விரும்பி (த்தானே) வந்து சேரும். (உக) கo.

வ்யா.— அவ.— பத்தாம்பாட்டு.— (தேசும்) அங்குள்ளவழகைப்பேசிப் போமித்தனையோ? நமக்கும் சிலபேறுகள் வேண்டாவோ வென்னில்; நாமவனுடைய திருநாமங்களைச் சொல்ல உபக்ரமிக்க எல்லாஸம்பத்துக்களும் தங்களுடைய ஸ்வரூபம் பெறுகைக்காகத் தானேவந்தடையுமென்கிறது.

(தேசும்) மதிப்பும். (திறனும்) பராபிபவநஸாமர்த்யமும் (திருவும்) ஐஸ்வர்யமும். (உருவமும்) வடிவழகும். (மாசில்குடிப் பிறப்பும்) குற்றமற்றபிறப்பும் (மற்றவையும்நன்கு) அநுக்தமானவையும் இவையெல்லாமானநன்கு. (பேசில்) திருநாமம்சொன்னதுக்கு பலம் பேசப்போகாது, ப்ரயோஜநத்திலே பேசில். (வலம புரிந்தவித்யாதி) ஸர்வேஸ்வரனுடைய திருநாமத்தைச் சொல்ல. (நலம்புரிந்து சென்றடையும்) இஸ்ஸம்பத்தெல்லாம் தன்பேறாகச் சென்றடையும். கo.

அரு.— பத்தாம்பாட்டு.— நன்கு-கீழ்ச்சொன்ன வெல்லா நன்மையும். வலம்புரிந்த-வலமாகப்புரிந்திருக்கை. கo.

நன்கோதும்நால்வேதத்துள்ளான், நறவிரியும்
பொங்கோதருவிப் புனல்வண்ணன்—சங்கோதப்
பாற்கடலான்பாம்பணையின்மேலான், பயின்றுரைப்பார்
நூற்கடலான் நுண்ணறிவினன். கக.

அ்.— நன்கு ஓதும் நால்வேதத்து உள்ளான் (4) நறவு இரியும் பொங்கு ஓதம் அருவி புனல் வண்ணன் (11) சங்கு ஓதம் பாற்கடலான் பாம்பணையின் மேலான் (16) பயின்று உரைப்பார் நூற்கடலான் நுண்ணறிவினன். (20)

அர்.— நன்றாய் (க்ரமத்துடன்) ஓதப்படுகிற நால்வகையான வேதங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டவனாய் (ச) தேன் தோற்கும்படியாயும் வ்ருத்தியடைகிற ஸமுத்ரம்போலவும் மலையருவியின் ஜலம்போலவு மிருக்கிற திருமேனியையுடையனாய் (கக) சங்கங்களோடு கூடிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளு மவனாய் ஆதிசேஷனாகிறபடுக்கைமேல் பள்ளிகொண்டவனாய் (கசு) விமர்சித்துச் சொல்லும்மந்வாதிகளுடைய சாஸ்த்ரஸாகரத்தில்ப்ரதிபாதிக்கப்பட்டவனாயிருக்கிறஸர்வேஸ்வரன் ஸூக்ஷ்ம புத்தியாலறியத்தக்கவனாயிருப்பன். (உ0) கக.

வ்யா.— அவ.— பதினோராம்பாட்டு.— (நன்கோதும்) அவன் திருநாமத்தைச்சொல்லத் தானே காட்டக் காணுமத்தனை. அல்லாதார்க்கு துர்ஜ்ஞேயனென்கிறது.

(நன்கோது மித்யாதி) ப்ரதிநியத விசேஷங்களோடேகூட ஸாங்காத்யயநம் பண்ணினவேதங்களாலே "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:- வேதைஶ்ச ஸர்வைரஹமேவவேத்ய:" என்கிறபடியே ப்ரதிபாதிக்கப்பட்டவன். (நறவித்யாதி) தேன் தோற்கும்படியாய்க் கிளர்ந்த கடல்போலேயும் அருவிப் புனல்போலேயு மிருந்துள்ள திருமேனியையுடையவன். (சங்கோதப்பாற்கடலான்) சங்குகளோடேகூடின திரையையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுமவன். (பாம்பணையின்மேலான்) அநந்தசாயி. (பயின்றுரைப்பார் நூற்கடலான்) ஸாதரமாகவுரைக்குமவர்களாலே இதிஹாஸபுராணங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவன் (நுண்ணறிவினான்) ஸ்வயத்நத்தாலே யறிவார்க்கு துர்ஜ்ஞேயன். கக.

அரு.— பதினோராம்பாட்டு.— சொல்ல-சொல்லுகைக்கு. ப்ரதிநியதவிசேஷங்களோடேகூட என்றபடி. (நறவிரியும்) நறவு-தேன், இரியும்-சிதறும்படி, தோற்கும்படியென்கை, நூற்கடல் - சாஸ்த்ரக்கடல். ௰க.

அறிவென்னுந்தாள்கொளுவி யைம்புலனுந்தம்மில்
செறிவென்னுந்திண்கதவம்செம்மி—மறையென்றும்
நன்கோதிநன்குணர்வார்காண்பரோ, நாடோறும்
பைங்கோதவண்ணன்படி. ௰உ.

அர்.— என்றும் மறை நன்கு ஓதி அறிவென்னும் தாள் கொளுவி (7) ஐம்புலனும் தம்மில் செறிவென்னும் திண் கதவம் செம்மி

நன்கு உணர்வார் (15) பைங்கோதவண்ணன்படி நாடோறும் காண்பர். (18)

அ்.— எப்போதும் வேதத்தைச் செவ்வையா யத்யயநம்செய்து ஞானமாகிற பூட்டைத்தொடுத்து (எ) ஐவகையான விந்த்ரியங்களைத் தமக்குள் ளடக்குகையாகிற வலிய கதவை யடைத்து நன்றாயறியவல்லவர்கள் (கடு) அழகியகடல்நிறத்தனான ஸர்வேஸ்வரன் வகையை ப்ரதிதிநமு மறிவார்கள். (கஅ) கஉ.

வ்யா.— அவ.— பன்னிரண்டாம்பாட்டு.— (அறிவென்னும்) ஒருத்தருக்கு மறியப்போகாதோவென்னில், இப்படி யறிவார்க்கறியலாமென்கிறது.

(அறிவித்யாதி) தண்ணிதான ஸ்ரவண ஜ்ஞாநத்தை மூட்டி. (ஐம்புலனுமித்யாதி) பாஹ்யேந்த்ரியங்கள் மநஸ்ஸோடேகூடி மநஸ்ஸு ஆத்மாவோடேகூடி யிருக்கிற விந்தச் செறிவாகிற திண்ணிய கதவை இந்த்ரியங்கள் பாஹ்யவிஷயங்களில் போகாதபடி செம்மி. (மறையென்றும் நன்கோதி) "யோமாஸ்தாஸ்யாயரோநேநஃ. யோகாத்ஸ்வாத்யாயமாமநேத்". யோகங் கைவந்தாலும் ப்ரமாணப்ரமேயங்களுடைய சேர்த்தி யநுஸந்திக்கவேணும். (நன்கித்யாதி) உபாஸநம், த்ருவாநுஸ்ம்ருதி, தர்சந ஸமாநாகார ப்ரத்யக்ஷதாபத்தி. இவ்வளவாகவுணர்ந்தவர்கள் நன்குணர்ந்தவராகிறார். ஸ்ரமஹரமான வடிவையுடையவனுடையபடி. இப்படி யுணர்ந்தவர்கள் நாள்தோறுங் காண்பர்கள். ௰உ.

அரு.— பன்னிரண்டாம்பாட்டு.— (தாள்கொளுவி) மேலே தகவு சொல்லுகையாலே ஜ்ஞாநமாகிற தாளையிட்டு என்கிறது. (யோகாதித்யாதி)யோகத்தினாலே அநதீத சாகைகளையு மறிகை.கஉ.

படிவட்டத்தாமரை பண்டுலகம் நீரேற்று
அடிவட்டத்தாலளப்ப நீண்ட—முடிவட்டம்
ஆகாயமூடறுத் தண்டம்போய்நீண்டதே
மாகாயமாய்நின்ற மாற்கு. கங.

அ்.— பண்டு உலகம், நீரேற்று படிவட்டத்தாமரை அடிவட்டத்தால் அளப்ப (6) மா காயமாய் நின்றமாற்கு நீண்ட முடிவட்டம் (12) ஆகாயம் ஊடறுத்து அண்டம்போய் நீண்டதே. (16).

அர்.— முற்காலத்தி லுலகத்தை தாகஜல மேற்றுவாங்கி தாமரைப்பூப்போன்ற பூமியைத் திருவடியினு லளக்கைக்காகப்(கூ)பெரிய திருமேனியுடையனாய் நின்ற ஸர்வேஸ்வரனுடைய நீண்ட கிரீடமானது (கஉ) ஆகாயத்தைப் பிளந்து அண்டபித்திவரையிலும் போய் வளர்ந்தது. (கரு) கங.

வ்யா.— பதின்மூன்றும்பாட்டு.—(படிவட்டத்தாமரை) பூவலயமாகிற தாமரைப்பூவை. (பண்டித்யாதி) அடிவலயத்தாலே அளப்ப. (நீண்டவித்யாதி) வடிவாலே பாரித்து வ்யாமோஹத்தை யுடையனானவனுக்குத் திருவபிஷேகமானது ஆகாசத்தையூடறுத்து அண்டபித்திக் கவ்வருகே நீண்டது. ௰ங.

அரு.— பதின்மூன்றும்பாட்டு.— படிவட்டத்தாமரை - வட்டமாயிருக்கிற பூமியாகிறதாமரை. மாகாயமாய்நின்ற - பெரியவடிவை யுடைய. மாற்கு - வ்யாமோஹத்தை யுடையவனுக்கு. கங.

**மாற்பால்மனம்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு**
**நூற்பால்மனம்வைக்க நொய்விதாம்—நாற்பால**
**வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும்**
**பாதத்தான்பாதம் பணிந்து.** கச.

அந்.—நால்பாலவேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் பாதத்தான் பாதம் பணிந்து (8) மால்பால் மனம் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு (14) நூல்பால் மனம் வைக்க நொய்விதாம். (18)

அர்.— சதுர்விதவேத ப்ரதிபாத்யனாய் திருமலையை வாஸஸ்தானமாக வுடையனாய் நித்யஸூரிகளின் கிரீட முறையும்படியான திருவடிகளை யுடையனான ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளை யாஸ்ரயித்து (அ) அந்தஸர்வேஸ்வரன் பக்கல் மனஸ்ஸை ப்ரவணமாக்கினால் பெண்களின் தோளை நிராசைபண்ணி (கச) வேதங்களி லுள்ளத்தைப் பொருத்த வெளிதாம். (கஅ) கச.

வ்யா.— அவ.— பதினாலாம்பாட்டு.— (மாற்பால்) "அறிவென்னுந்தாள்கொளுவி" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடி இந்த்ரிய ஜயம்பண்ணி யறிகை யரிதாயிருந்ததீ; அசக்த ரிழக்குமத்தனையோ வென்னில், இழக்கவேண்டாதவுபாயம்சொல்லுகிறது.

(நாற்பாலவேதத்தான்) நாலுவகையான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப் படுமவன். வேதைகஸமதிகம்யனாகில் கண்ணாலேகாண்

கிற சப்தாதிகளை யநுபவிப்பார்க்குக் காண வரிதிறேயென்னில்; (வேங்கடத்தான்) கண்ணாலே கண்டநுபவிக்கும்படி திருமலையிலே வந்து நின்றவனை. ஆகில் கண்ணாலே காணப்படுகிற சப்தாதிகளோடொக்குமோவென்னில், (விண்ணோர்முடிதோயும்பாதத்தான்) இப்படி திருமலையிலே நிற்கிறவன் நித்யஸூரிகளுக்கு ஸ்ப்ருஹணீயனானவன். அவன் திருவடிகளிலேபணிந்து. (மாற்பால்மனஞ்சுழிப்ப) வ்யாமுக்தனாயிருக்கிறவன் பக்கலிலே மநஸ்ஸு சுழிக்க. (மங்கையர்தோள்கைவிட்டு) நரகத்திலே மூட்டக்கடவதான ஸ்த்ரீகளுடைய தோளைக் கைவிட்டு. (நூற்பால்மனம்வைக்க நொய்விதாம்) ப்ரமாணங்களிலே அல்பம் மநஸ்ஸை வைக்கவெளிதாம். ௰௪.

பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள் மோதப்
பணிந்தபணமணிகளாலே—அணிந்து, அங்
கனந்தனணைக்கிடக்குமம்மான், அடியேன்
மனந்தனணைக்கிடக்கும்வந்து. ௧௫.

அ·— பௌவம் படு பணிந்து உயர்ந்த திரைகள் மோத (6) பணிந்த பணமணிகளாலே அணிந்து அனந்தன் அணை கிடக்கும் அம்மான் அங்குவந்து (13) அடியேன் மனந்தன் அணை கிடக்கும். (16)

அர்.— ஸமுத்ரத்தி லுண்டாய் மடிந்து கிளம்புகிற வலைகளடிக்க (௬) (அத்திவலை மேல்விழாதபடி) கவிந்த படங்களிலுள்ள மாணிக்கங்களினாலலங்கரிக்கப்பட்ட திருவநந்தாழ்வானாகிற படுக்கையின் மேற் பள்ளிகொண்ட ஸ்வாமி (௧௩) அப்படுக்கையைவிட்டுவந்து அடியேனுடைய மநஸ்ஸாகிற படுக்கையில் சயநித்தான். (௧௬) ௧௫.

வ்யா.— அவ.— பதினைந்தாம்பாட்டு.— (பணிந்து) அவனாலே ஸ்வயம்வரிக்கப் பட்டவனுக்கு துக்கமொன்றுமில்லையிறே என்கிறது.

(பணிந்தித்யாதி) தாழ்வதுகிளருவதானகடல் திரைகளைமோத. மோதவென்கிறது— குளிர்ந்தவலைபடிலும் திருமேனியிலே ஒருமலை விழுந்தாற்போலே யிருக்கை. (பணிந்தபணமணிகளாலே) அத்திவலைகள் திருமேனியில் படாதபடி கவிந்தபணத்தின்மணிகளாலே. (அணிந்தித்யாதி) அதினாலே யலங்க்ருதனான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே கிடக்கிற ஸர்வேஶ்வரன். (வந்து அடியேன் மனந்தனணைக்கிடக்கும்) அப்பெரிய படுக்கையிலே கிடக்குமவன் பரியவு மறியாதே அப்படுக்கையைவிட்டு [illegible] மநஸ

ஸ்ஸிலே தங்காநின்றான். எங்கேதங்குமவன் எங்கே தங்காநின்றான். கிடக்க வொருபடுக்கையில்லாதவன் படுக்கையுள்ள விடந்தேடிவருமாபோலே. திருவயோத்யையிலுள்ளார் அவனைச் சரணம்புக்குக்கிடக்க, "ஆவாஸஞ்ஹரிஷ்யாமி-ஆவாஸந்த்வஹம்ரிச்சாமி" என்றிருந்தாற்போலே. ௰ரு.

வந்துதைத்தவெண்டிரைகள் செம்பவளவெண்முத்தம்
அந்திவிளக்குமணிவிளக்காம்—எந்தை
ஒருவல்லித்தாமரையாளொன்றியசீர்மார்பன்
திருவல்லிக்கேணியான் சென்று. கசு.

அ.— ஒரு அல்லி தாமரையாள் சென்று ஒன்றிய சீர் மார்பன் (7) வெண் திரைகள் வந்து உதைத்த செம் பவளம் வெண் முத்தம் (15) அந்தி விளக்கும் அணிவிளக்காம் திருவல்லிக்கேணியான் எந்தை. (20)

அ.— மிக்கவழகிய விதழ்களையுடைய கமலப்பூவில் வஸியாநின்றபிராட்டி போயுறைந்த வழகிய திருமார்பையுடையனாய் (எ) வெண்மையான அலைகள் கொண்டுவந்து தள்ளாநின்ற சிவந்த பவளத்தையும் வெள்ளை முத்துக்களையும் (கரு) ஸந்த்யாகாலத்துக்கு ப்ரகாசகமான மங்களதீபமாகவுடைய திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருக்கிற பார்த்தஸாரதி யெனக்கு ஸ்வாமி. (20) கசு.

வ்யா.— அவ.— பதினாறும்பாட்டு.— (வந்து) இப்படி வந்து தங்குகைக்கடி பிராட்டியோடேயிருக்கை யென்கிறார்.

(வந்தித்யாதி) வந்துதையா நின்றுள்ள வெண்டிரைகளாலே யுண்டானசிவந்த பவளமும், ஒளியையுடைத்தானமுத்தும், அந்திக்கு ப்ரகாசகமாக நின்றமங்களதீபத்தை யுடைத்தான திருவல்லிக்கேணியிலே நின்றவன். (சென்று ஒருவல்லித்தாமரையாளொன்றிய சீர் மார்பன்) [பஶ்யதாம்ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்தலம்ஹரே: - பஶ்யதாம்ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்தலம்ஹரே:] "பஶ்யதாம்" என்று அநாதரேஷஷ்டீ. ப்ரஜைகள் பார்த்திருக்க பர்த்தாவின் படுக்கையைக் கணிசித்தேறுவாரைப்போலே தேவர்கள் பார்த்துக் கிடக்கத் திருமார்பிலே யேறினாள். [தயாவலோகிதாதேவா: - தயாவலோகிதா தேவா:] பின்னை ஸர்வேஶ்வரன் இவர்களுடைய அலமாப்பைப்பாராயென்று திருவுள்ளத்தாலே நினைத்தபடி தோற்றப் பின்னை யவளாலே பார்க்கப் பட்டவர்கள். [வ்ருத்தேஹிஸா ஹமே

ஹாரஃ - ப்ரதேஹிஸூபகேஹாரம்] அவன் நினைவுஞ் சொல்லுமறிந்திறே சிலரைக் கடாக்ஷிப்பதும், சிலரைக் கொண்டுகொடுப்பதும். பெரியபிராட்டியார் தானே சென்றடையும் திருமார்பை யுடையனாய் திருவல்லிக்கேணியானானவன். (எந்தை) எனக்குஸ்வாமி. கசா.

அரு.— பதினாறாம்பாட்டு.— பவளமும் முத்தும் ப்ரகாசகத்வேந விளக்காக ப்ரகாசியாநிற்கை. அவன் நினைவறிந்தே பார்க்குமோவென்ன, அருளிச்செய்கிறார் (ப்ரதேஹித்யாதி). கசா.

சென்றநாள் செல்லாதசெங்கண் மாலெங்கண்மால்
என்றநாளெந்நாளு நாளாகும்—என்றும்
இறவாத வெந்தை யிணையடிக்கே யாளாய்
மறவாது வாழ்த்துக வென்வாய். க௭.

அ.— செம் கண் மால் எங்கள் மால் என்றநாள் சென்றநாள் செல்லாதநாள் எந்நாளும் நாளாகும். (10) என்றும் இறவாத எந்தை இணை அடிக்கே ஆளாய் என்வாய் மறவாது வாழ்த்துக. (19)

அர்.— சிவந்த நேத்ரங்களையுடைய ஸர்வேஶ்வரனெங்களிடத்தில் வ்யாமோஹத்தையுள்ளவன் என்றறிந்தநாள் (அதற்குமுன்) கழிந்தநாள் (இனி) வரக்கடவ நாளாகிய வெல்லாநாளும் நன்றாளாம். (க௦) எப்போது மழிவில்லாத பிதாவான ஸர்வேஶ்வரனுடைய பொருந்திய திருவடிக்கு தாஸனாய் என்னுடைய வாக்கு விஸ்ம்ருதியின்றி மங்களாசாஸநம் செய்யக்கடவதாக. (க௯ க௭.

வ்யா.— அவ.— பதினேழாம்பாட்டு— (சென்றநாள்) அவளோடே கூடியிருக்கையாலே பலத்துக்குத்தட்டில்லை, இனி யென்னுடைய வாக்கானது அவனை விச்சேதமின்றிக்கே. அநுபவிப்பதாக.

(செங்கண்மா லெங்கண்மா லென்றநாள் சென்றநாள் செல்லாத எந்நாளும் நாளாகும்) ஸர்வேஶ்வரன் என்பக்கலிலே வ்யாமோஹத்தைப்பண்ணினனென்று அறிந்தநாள், கழிந்தநாள், வரக்கடவ நாளானவெல்லாநாளும் நல்விடிவாம். இந்நாள்வரும்படி கழிந்தநாளாகையாலேபோனநாளுமழகிது. மேல் விச்சேதமின்றிக்கே அநுபவிக்கப்பெறுகையாலே வரும்நாளு மழகிது. (என்றுமித்யாதி.) ஒருநாளுண்டாய் ஒருநாளின்றிக்கே பொழியுமுறவின்றிக்கே நித்யனான பிதாவினுடைய வாக்கானது விச்சேதமின்றிக்கே வாழ்த்துக. க௭.

வாய்மொழிந்து வாமனனாய் மாவலிபால், மூவடிமண்
நீயளந்துகொண்ட நெடுமாலே—தாவியநின்
எஞ்சாவிணையடிக்கே யேழ்பிறப்புமாளாகி
அஞ்சாதிருக்கவருள். கஅ.

அ்.—வாமனனாய் வாய்மொழிந்து மாவலிபால் மூவடி மண் அளந்துகொண்ட நெடுமாலே! (7) தாவிய எஞ்சா நின் இணை அடிக்கே ஏழ் பிறப்பும் ஆளாகி அஞ்சாதிருக்க நீ அருள். (18)

அர்.—வாமநாவதாரமெடுத்து (சிலவற்றைச்) சொல்லி மஹாபலிபக்கல் மூன்றடி பூமியை (வாங்கி அதைத்திருவடிகளாலே) யாக்ரமித்த ஸர்வாதிகனே! (எ) உலகமளந்த குறைவற்ற உன்னிரண்டு திருவடிகளுக்கே மேல்வரும் ஜந்மங்களெல்லாவற்றிலும் மாட்பட்டு பயப்படாதிருக்கும்படி நீ க்ருபைசெய்யவேண்டும். (கஅ) கஅ.

வ்யா.— அவ.— பதினெட்டாம்பாட்டு.— (வாய்மொழிந்து) உன்னுடைமையை யொன்றுஞ் சோரவிடாத நீயென்னைக்கைக்கொண்டருளவேணுமென்கிறார்.

(வாமனனாய் வாய்மொழிந்து) ஸ்ரீவாமநனாய், "மாவலி! மூவடி மண்தா" என்றருளிச்செய்து. (மாவலியித்யாதி) அவன் தரப்பின்னை யளந்து கொண்ட ஸர்வேச்வரனே! (தாவியவித்யாதி) திருவுலகளந்தருளினவனுடைய கல்யாணமான திருவடிகளிலே நிர்ப்பயனாய் காலமெல்லாமடிமை செய்திருக்கும்படி யருள். ஒளஷதத்தை ஸேவித்தானொருவன் தனக்குபயமின்றிக்கே ஸர்ப்பத்தின்வாயிலே கைகொடாநின்றானிறே. அவனுடையவருள் பெற்றவன்று ஸம்ஸாரத்திலே யிருந்து பயங்கெடவிருக்கத்தட்டில்லை யிறே, கஅ.

அரு.— பதினெட்டாம்பாட்டு.— (எஞ்சாவிணையடி) எஞ்சுதல்-சுருங்குதலாய், சுருக்கமின்றி என்கையாலே கல்யாணகுண பூர்ணமான திருவடிகளென்றபடி. ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தே அஞ்சாதே யிருக்கக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் (ஒளஷதத்தை யித்யாதி). கஅ.

அருளாதொழியுமேயாலிலைமேல், அன்று
தெருளாதபிள்ளையாய்ச்சேர்ந்தான்—இருளாத
சிந்தையராய்ச்சேவடிக்கேசெம்மலர்தூய்க்கைதொழுது
முந்தையராய்நிற்பார்க்குமுன். ககூ.

அங்.—இருளாத சிந்தையராய் சே அடிக்கே செம் மலர் தூய் கைதொழுது (8) முந்தையராய் நிற்பார்க்கு முன் அன்று ஆலிலை மேல் தெருளாத பிள்ளையாய் சேர்ந்தான் அருளாதொழியுமே? (17)

அர்.— அஜ்ஞாநாந்தகாரமில்லாத மநஸ்ஸையுடையராய்க்கொண்டு அழகிய திருவடிகளில் சிவந்த புஷ்பங்களை ஸமர்ப்பித்துக் கைகூப்பி(அ) முற்பாடராய் நிற்குமுபாஸகருக்கு முன்னமே அந்தப்ரளயகாலத்தில் வடதளத்தில் ஜ்ஞாநயோக்யதையில்லாத பிள்ளையுருவையுடையனாய்ப் பள்ளிகொண்ட ஸர்வேஶ்வரன்(நமக்கு)க்ருபைசெய்யாமற்போவனோ? (கஎ) கக.

வ்யா.— அவ.— பத்தொன்பதாம்பாட்டு.— (அருளாது) அருளென்னுங்காட்டில் அருளுமோவென்று திருவுள்ளம் விசாரிக்க நமக்கருளா தொழியுமோவென்கிறார்.

(ஆலிலையித்யாதி) ஆலிலையிலேசேர்ந்து வ்யாமுக்தனான பிள்ளை நமக்கருளாதொழியுமோ? (இருளாதவித்யாதி) இருளாதசிந்தைகளையுடையராய்த் திருவடிகளிலே புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு கைகளாலே தொழுது முற்பாடராயிருக்கிறவர்களுக்கு முன்னருளாதொழியுமோ? முன்னேயருளானோ. கக.

முன்னுலகமுண்டுமிழ்ந்தாய்க்கு அவ்வுலகமீரடியால்
பின்னளந்துகோடல்பெரிதொன்றே—என்னே
திருமாலேசெங்கணெடியானே, எங்கள்
பெருமானேநீயிதனைப்பேசு. உ௦.

அங்.—முன் உலகம் உண்டு உமிழ்ந்தாய்க்கு அவ்வுலகம் பின் ஈரடியால் அளந்துகோடல் பெரிதொன்றே? (9) திருமாலே! செங்கண் நெடியானே! எங்கள் பெருமானே! நீ இதனை பேசு. என்னே! (18)

அர்.— முற்காலத்தி லுலகத்தை யமுதுசெய்து (அநந்தரம்) வெளிப்படுத்தி அவ்வுலகத்தைப் பின்பொருகாலத்தி லிரண்டடியினாலளந்துகொண்டது ஒரு பெரிதோ? (கூ) பெரியபிராட்டியினிடத்தில் வ்யாமோஹமுடையவனே! சிவந்ததிருக்கண்களையுடைய ஸர்வாதிகனே! எமக்கு ஸ்வாமியே! நீயிதைச் சொல். என்ன ஆஶ்சர்யம். (கஅ) உ௦.

வ்யா.— இருபதாம்பாட்டு — (முன்னுலகமித்யாதி) உன்கையிலே பருத்திபட்ட பன்னிரண்டும்பட்ட விந்தலோகந்தன்னையே

பெறுதுபெற்றாயாக வளந்துகொள்ளுகை. இதுபெரியதொன்றே? (என்னே திருமாலே யித்யாதி) உன்னுடைய மேன்மைக்கும் இத்தாழ்ச்சிக்குமெங்கே சேர்த்தியுண்டு. நீ யித்தைச்சொல்லவேணுமென்று எத்திறமென்கிறார். உ௦.

அரு.— இருபதாம்பாட்டு.—அளந்துகோடல் - அளந்துகொள்ளுகை - பெரியதொன்றே - அன்றென்றபடி! உ௦.

பேசுவா ரெவ்வளவு வேசுவர், அவ்வளவே
வாசமலர்த்துழாய் மாலையான்— தேசுடைய
சக்கரத்தான் சங்கினன்சார்ங்கத்தான், பொங்கரவ
வக்கரனைக்கொன்றான் வடிவு. உக.

அ:— வாசம் மலர் துழாய் மாலையான் தேசு உடைய சக்கரத்தான் சங்கினன் (8, சார்ங்கத்தான் பொங்கு அரவம் வக்கரனை கொன்றான் வடிவு பேசுவார் எவவளவு பேசுவர், அவ்வளவே. (18)

அர்.—பரிமளம்மிக்க விகஸிதமாயுடைய திருத்துழாய் மாலையையுடையனாய் தேஜஸ்ஸை யுடைய திருவாழியையுடையனாய் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையுடையனாய் (எ) சார்ங்கமென்கிற வில்லையுடையனாய் பெரிய கூச்சலையுடைய தந்தவக்த்ரனை ஸம்ஹரித்தவனை ஸர்வேஶ்வரன் படியைப் பேசவல்லர்களெவ்வளவு பேசவார்களோ? அவ்வளவேபேசுவார்கள். (இவன்படியைப் பூர்ணமாகப்பேச ஒருவரும் சக்தராகார்கள்) (கஅ) உக.

வ்யா.— அவ.— இருபத்தோராம்பாட்டு.— (பேசுவார்) கீழ்திருவுலகளந்தருளின விடம் ப்ரஸ்துதமாகையாலே அப்படிவலையாதே பரிமாறும் க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிறார்.

(பேசுவாரித்யாதி) பேசுமவர்களுக்கு யாதோரளவுண்டு, அவ்வளவுபேசிப்போமத்தனை. விஷயத்தைப் பரிச்சேதித்துப் பேசப்போகாது. (வாசமித்யாதி) பரிச்சேதிக்கப்போகாமைக்கிவை தனித்தனியே ஹேதுக்கள். (பொங்கரவ வித்யாதி) விஸ்த்ருதமான சப்தத்தையுடையனை தந்தவக்த்ரனைக் கொன்றவனுடைய வடிவு பேசுவா ரெவ்வளவு பேசுவர்; அவ்வளவே. உக

அரு.— இருபத்தோராம்பாட்டு.— அரவம் - சப்தம். வடிவு - ஸ்வபாவம். உக.

வடிவார்முடிகோட்டி வானவர்கள், நாளும்
கடியார்மலர்தூவிக் காணும்—படியானை
செம்மையாலுள்ளுருகிச் செவ்வனேநெஞ்சமே
மெய்ம்மையே காணவிரும்பு. உஉ.

அந்.— வானவர்கள் வடிவு ஆர் முடி கோட்டி (5) கடி ஆர் மலர் நாளும் தூவி காணும் படியானை (11) நெஞ்சமே! செம்மையால் உள் உருகி செவ்வனே மெய்ம்மையே காண விரும்பு. (19)

அர்.— நித்யஸூரிகள் ஸௌந்தர்யம் மிக்க திருவபிஷேகங்களை வணக்கி பரிமளத்தினால் நிறைந்த புஷ்பங்களைத் தினந்தோறும் ஸமர்ப்பித்து ஸேவிக்கத்தக்கஸ்வபாவத்தையுடையஸர்வேஶ்வரனை (கக) மனமே! மெய்ப்பாட்டை யநுஸந்தித்து உள்ளங் கரைந்து ஸந்மார்க்கத்தினால் யதார்த்தமாகக் காண வாசைப்படு. (கக) உஉ.

வ்யா.— அவ.— இருபத்திரண்டாம்பாட்டு.— (வடிவார்) அவன்படி பரிச்சேதிக்கப் போகாதபின்பு அவன்தானே காட்டக் காணென்கிறார்.

(வடிவாரித்யாதி) தர்சநீயமாயிருந்துள்ள முடிகளைவணக்கித் தேவர்கள் நாள்தோறும் பரிமளமிக்கிருந்துள்ள புஷ்பத்தைக் கார்ய புத்தியின்றிக்கே திருவடிகளிலே பொகட்டுக்காணும் ஸ்வபாவத்தையுடையவனாயுள்ளவனை. (செம்மையாலுள்ளுருகி) "அவன் சேஷி-நான் சேஷபூதன்" என்னும்முறையாலே ஹ்ருதயம் சிதிலமாய். (செவ்வனே) அவன்காட்டும்வழியாலே. (நெஞ்சமே மெய்ம்மையே காணவிரும்பு) ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் காணவாசைப்படு. உஉ.

அரு.— இருபத்திரண்டாம்பாட்டு.— (முடிகோட்டி) கோடுதல்-வணங்குதல், செவ்வனே-செவ்வே. உஉ.

விரும்பிவிண்மண்ணளந்த வஞ்சிறையவண்டார்
சுரும்புதுளையிற்சென்றூத—அரும்பும்
புனந்துழாய்மாலையான் பொன்னங்கழற்கே
மனந்துழாய்மாலாய் வரும். உங.

அந்.— அம் சிறைய வண்டு ஆர் சுரும்பு சென்று துளையில் ஊத (8) அரும்பும் புனம் துழாய்மாலையான் விரும்பி விண் மண் அளந்த பொன் அம் கழற்கே (18) மனம் துழாய் மாலாய் வரும். (22)

அர்.—அழகிய இறகுகளையுடைய ஆண்வண்டோடு கூடிய பெண்வண்டுபோய் ரஸாதிலீனமாதும்போது (அ) அரும்பிடாநின்றும் தன்னிலத்திற்போல் செழித்துமிருக்கிற திருத்துழாய்மாலையையுடையவனுடைய, ஆசைப்பட்டு ஆகாசத்தையும் பூமியையுமளந்த பொன்போலழகிய திருவடிகளை (கஅ) யாராய்ந்துகொண்டு (என்) மநஸ்ஸானது வ்யாமோஹத்தையுடையதாய் வரும். (உஉ) உரு.

வ்யா.— அவ—. இருபத்துமூன்றும்பாட்டு —(விரும்பி) உபதேசம்பலித்தபடி சொல்லுகிறது.

(விரும்பி யித்யாதி) பொன்னங்கழற்கே விரும்பி என்னவுமாம. விருப்பததோடே விண்ணும்மண்ணுமளந்த, அழகிய சிறகையுடைத்தான வண்டார்க்கும் சுரும்பு நரம்பறிந்தூத அரும்பாநின்றுள்ள புனந்துழாய்மாலையானுடைய விலக்ஷணமான கழலிலே மநஸ்ஸானது வ்யாமோஹத்தைபபண்ணித் துழாவி வாராநின்றது. உரு.

அரு.— இருபத்து மூன்றும்பாட்டு.— விரும்பி - மநஸ்ஸு விரும்புதல்; அவன்விரும்புதல். வண்டார்சுரும்பு - வண்டுகளும் வண்டு விசேஷமான சுரும்புகளும், ஆர்-மிக்கு, திரண்டென்றபடி. நரம்பு-தேன் புறப்படுகிறவழி. உரு.

வருங்காலிருநிலனும் மால்விசும்புங்காற்றும்
நெருங்குதீநீருருவுமானான்—பொருந்தும்
சுடராழியொன்றுடையான் சூழ்கழலே, நாளும்
தொடராழிநெஞ்சே தொழுது. உச.

அந்.—ஆழி நெஞ்சே! இருநிலனும் மால் விசும்பும் காற்றும் நெருங்கு தீ நீருருவுமானான் (10) பொருந்தும் சுடர் ஒரு ஆழி உடையான் சூழ் கழலே வருங்கால் நாளும தொழுது தொடர். (21)

அர்.—கம்பீரமான மநஸ்ஸே! விசாலமானபூமியும் பெரிய ஆகாசமும் வாயுவும் அடர்ந்த நெருப்பும் ஜலமுமாகிய இவைகளைச் சரீரமாகவுடையவனும் (கம) அமர்ந்து உஜ்வலமாய் அத்விதீயமான திருவாழியை யுடையவனுமான ஸர்வேஸ்வரனுடைய (ஆஸ்ரிதரை) வ்யாபியாநின்ற திருவடிகளையே மேல்வரப்போகிறகாலமெல்லாம் தினந்தோறும் வணங்கி யாஸ்ரயி. (உக) (24)

வ்யா.— அவ.— இருபத்துநாலாம்பாட்டு.— (வருங்கால்). ஆசைபிறந்தபின் விச்சேதமின்றிக்கே அநுபவிக்கப்பார்.

(இருநிலனுமித்யாதி) காரணமான பூதபஞ்சகமும் லீலாவிபூதிக்குமுபலக்ஷணம். (பொருந்து மித்யாதி) நித்ய விபூதிக்கு முபலக்ஷணம், உபய விபூதியுக்தனுடைய சூழ்கழலே வருங்கால் நாளுமாழி நெஞ்சே! தொழுது தொடர். கீழ் விச்சேதித்து அநர்த்தப்பட்டது போரும். முறையாலே ஆஶ்ரயி. உச.

அரு.— இருபத்துநாலாம்பாட்டு.— வருங்கால் - தானேவரும்போது. சூழ்கழல்-ஆபரணங்களாலே சூழ்ந்திருக்கிற கழல். முறை-சேஷத்வமுறை. உச.

தொழுதால்பழுதுண்டே தூநீருலகம்
முழுதுண்டுமொய்குழலாளாய்ச்சி—விழுதுண்ட
வாயானைமால்விடையேழ்செற்றானை,வானவர்க்கும்
சேயானைநெஞ்சே சிறந்து. உரு.

அந்.—நெஞ்சே! தூ நீர் உலகம் முழுது உண்டு(6) மொய் குழலாள் ஆய்ச்சி விழுது உண்ட வாயானை (12) மால் ஏழ் விடை செற்றானை வானவர்க்கும் சேயானை சிறந்து தொழுதால் பழுதுண்டே? (21)

அர்.—மனமே! தெளிந்த நீர்சூழ்ந்த வுலக மனைத்தையு மமுதுசெய்து (சு) அழகிய மயிர்முடியையுடைய யசோதையினுடைய விழுதானநெய்யை யமுதுசெய்த திருப்பவளத்தையுடையனாய் (கஉ) பெரிய ஏழெருதுகளைக்கொன்றவனாய் தேவர்களுக்கும் கிட்டவரியனாயிருக்கிறஶ்ரியஃபதியைத் தகுந்தபடி யாஶ்ரயித்தால் தோஷமுண்டோ? (உக) (உரு)

வ்யா.— அவ.— இருபத்தைந்தாம்பாட்டு.— (தொழுதால்) நான்சொல்லுகிறது தப்புண்டோவென்கிறார்.

(தூநீருலகம்முழுதுண்டு) சூழ்ந்தகடல் அலையாதபடிக் கிடாக லோகத்தையெல்லாம் வயிற்றிலேவைத்து. (மொய்குழலித்யாதி) அநுகூலருடைய த்ரவ்யத்தாலல்லது தரியாதவனை. (மால்விடையேழ்செற்றானை) நப்பின்னைப்பிராட்டியுடைய ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதியானமதித்த ஏறேழையும் செற்றவனை. (வானவர்க்குஞ்சேயானை) ஸ்வயத்நத்தால் காண்பார்க்கு மநஸ்ஸுக்கும் வாக்குக்கும் தூரஸ்தனானவனை. (சிறந்து நெஞ்சே தொழுதால் பழுதுண்டே) ஆஶ்ரிதர்க்கு ஸுலபனானவனைக் கிட்டித்தொழுதால் பழுதுண்டோ!

அரு.—இருபத்தைந்தாம்பாட்டு.—தூநீர்-தெளிந்தநீர். சிறப்பு-தகுதி.

உரு.

சிறந்தவென்சிந்தையும் செங்கணரவும்
நிறைந்தசீர் நீள்கச்சியுள்ளும்—உறைந்ததுவும்
வேங்கடமும்வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே
தாங்கடவார் தண்டுழாயார். உசு.

அ்.—தண் துழாயார் நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும் வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியும் உறைந்ததுவும். (10) சிறந்த என் சிந்தையும் செம் கண் அரவும் தாம் கடவார். (18)

அர்.—குளிர்ந்த திருத்துழாயினுலலங்கரிக்கப்பட்ட ஶ்ரியஃபதி, பூர்ணமான ஸம்பத்தையுடைய விசாலமான பெருமாள்கோயிலிலும் திருமலையிலும் திருவெஃகாவிலும் வேளுக்கைப்பாடியிலும் வாஸம் செய்ததும். (கo) ஶ்லாக்யமான வென்னுடைய மநஸ்ஸையும் சிவந்த திருக்கண்களையுடைய திருவனந்தாழ்வானையும் தாம் அதிக்ரமியார் (விரும்பியிருப்பர்). (கஅ)

உசு.

வ்யா.— இருபத்தாறும்பாட்டு.— (சிறந்த வித்யாதி) என்னுடைய சிந்தையுள்ளும் திருவனந்தாழ்வான் மேலும் கச்சியுள்ளும் ஸாதரமாகவுறைந்தது. (வேங்கடமித்யாதி) திருமலையிலும் திருவெஃகாவிலும் வேளுக்கைப்பாடியிலுங் கடவரானமாத்ரம். கடவரானமாத்ரமென்று சொன்ன வுரமெத்தாலே யென்னில்; (தண்டுழாயார்). நிறைந்த சீர் நீள்கச்சியுள்ளும், வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமுறைந்ததுவும். சிறந்தவென்சிந்தையும் செங்கணரவும் தாங்கடவார். உகந்த படுக்கையான திருவனந்தாழ்வானே பாதி யென்னுடையநெஞ்சை அதிக்ரமியார். அன்றிக்கே, திருவனந்தாழ்வானையும் என்னுடைய நெஞ்சையும் தம்மதாக வபிமாநித்திருப்பது; அல்லாதவற்றிலுறைந்த மாத்ரமேயென்று மருளிச்செய்வர்.

உசு.

அரு.— இருபத்தாறும்பாட்டு.—(கடவரானமாத்ரம்) அங்கெல்லாம் நிர்வாஹகரான மாத்ரமின்றிக்கே, உறைந்ததென்னுதல், இங்கேஉறைகைக்கு ஹேது (தண்டுழாயார்).ஆஶ்ரித பவ்யராகையாலென்கிறது. அன்றிக்கே, திவ்யதேசங்களிலே உறைந்தது. கடவார் - நெஞ்சை யதிக்ரமியாரென்னுதல், அங்ஙனுமன்றிக்கே, கடவார் -

அபிமானமெல்லாமிங்கே, அங்கெல்லாமுறைந்தமாத்ரமென்னுதல். இத்தாலெல்லாயோஜனையாலும் ஆதிக்ய மிங்கே. மற்ற விடங்களி லுதித்தமாத்ர மென்கை. உசு.

ஆரே துயருழந்தார் துன்புற்றாராண்டையார்
காரேமலிந்தகருங்கடலை—நேரே
கடைந்தானைக் காரணனை நீரணைமேல், பள்ளி
அடைந்தானை நாளு மடைந்து. உஎ.

அந்.—கார் மலிந்த கருங்கடலை நேரே கடைந்தானை காரணனை நீரணைமேல் பள்ளியடைந்தானை அடைந்து (3) துயர் உழந்தார் ஆண்டையார் நாளும் துன்புற்றார் ஆரே! (15)

அர்.—மேகங்கள் நிறைந்தும் (அத்தால்) கறுத்துமிருக்கிற ஸமுத்ரத்தை நேர்நின்று கடைந்தவனும் ஜகத்காரணனும் ஜலமாகிற படுக்கையின்மேல் சயனித்தவனுமான ஶ்ரிய:பதியை யாஶ்ரயித்து, (௩) துக்கஹேதுவான பாபத்தை யிடைவிடாமற்செய்த வுலகத்தார் ஒருநாளாகிலும் துன்பமடைந்தவர் யார்? (கரு) உஎ.

வ்யா.— அவ.— இருபத்தேழாம்பாட்டு.— (ஆரே) அவன்படியிதுவானபின்பு அவனை யாஶ்ரயித்தும் தாங்கள் பண்ணின பாபத்தின் பலம் புஜிப்பாருண்டோ வென்கிறார்.

(காரேமலிந்தகருங்கடலை நேரேகடைந்தானை) மேலேபடிந்த மேகங்கள் சலியாதபடி அம்ருதம்படும்படிக்கீடாகக் கடலைக்கடைந்தானை. (காரணனை) ஜகத்காரணபூதனை. (நீரணைமேல்பள்ளியடைந்தானை) ஆஶ்ரிதர்கார்யஞ் செய்கைக்காகத் திருப்பாற்கடலிலே கிட்ட வந்து கிடந்தவனை. (நாளுமடைந்து ஆரேதுயருழந்தார் துன்புற்றாராண்டையார்) தாந்தாம் பண்ணின நிஷித்தகர்மத்தினுடைய பலமான துக்கத்தை யவனை யாஶ்ரயித்து அநுபவிப்பாருண்டோ? "ஆண்டையார்" என்றது-எங்குள்ளாரென்றபடி. "நாளும்" என்றது-எக்காலத்திலென்றபடி. எக்காலத்தில் எத்தேசத்தில் ஆரவனைப்பற்றி துஷ்கர்மபலத்தை யநுபவித்தார். உஎ.

அரு.—இருபத்தேழாம்பாட்டு.— "துயர், துன்பம்" என்கிறவிரண்டாலும் கர்மத்தையும் கர்மபலமான துக்கத்தையுஞ் சொல்லுகிறது-ஆண்டையார்-அண்டஸம்பந்திகளாகையாலே தேசபரம.உஎ,

அடைந்ததரவணைமேலைவர்க்காய், அன்று
மிடைந்ததுபாரதவெம்போர்—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால்மத்துக்கே யம்மனே வாளெயிற்றுப்
பேய்ச்சிபா லுண்டபிரான். உஅ.

அந்.—வாள் எயிற்று பேய்ச்சி பால் உண்ட பிரான் அரவு அணைமேல் அடைந்தது, (9) அன்று ஐவர்க்காய் பாரதம் வெம் போர் மிடைந்தது, (15) ஆய்ச்சிபால் மத்துக்கே உடைந்ததுவும், அம் மனே ! (19)

அர்.—வாள்போன்ற பற்களையுடைய பூதனையின் பாலை யமுது செய்த உபகாரகனானஸ்ரியঃபதி திருவனந்தாழ்வானாகிற படுக்கை யின்மேல் பள்ளிகொண்டது, (கூ) அக்காலத்தில் பஞ்சபாண்டவர் களுக்காக பாரதமென்கிற கொடிய யுத்தத்தி லடர்ந்துசென்றது, (கரு) யசோதாதேவிபக்கலுண்டான மத்துக்குப் பயந்தது, ஆகிய விவை என்ன ஆஶ்சர்யமோ ! (ககூ) உஅ.

வ்யா.— இருபத்தெட்டாம்பாட்டு.— (அடைந்ததரவணைமேல்) உகந்தார்க்குடம்புகொடுப்பது.(ஐவர்க்காயித்யாதி) ஆஶ்ரிதர்க்காகத்த ன்னுடம்பை யழியமாறி அம்பேற்பது. (உடைந்ததுவுமித்யாதி) பரி ஹாரமின்றிக்கே ஒழிந்ததுவும் யசோதைப்பிராட்டிக்குப்பயப்பட்டு. (வாளெயிற்று இத்யாதி) பருவம் நிரம்பாதேயிருக்கச்செய்தே வாள் போலே யிருந்துள்ள வெயிற்றையுடைய பூதனையை முடித்தவுபகார கன் அநுகூலையா யிருப்பாளொரு இடைச்சிக்குப் பயப்பட்டு, பரி ஹாரமின்றிக்கே யிருப்பதே! (அம்மனே) எத்திறம். உஅ.

அரு.—இருபத்தெட்டாம்பாட்டு.— (மிடைந்தது) மிடை-படு கையாய், அம்பேற்கை. பரிஹாரம்-ப்ரதிக்ரியை,இன்றிக்கே, உடைந் தது. அம்மனே - ஈடுபாடு. உஅ.

பேய்ச்சிபாலுண்டபெருமானைப்பேர்ந்தெடுத்து
ஆய்ச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே—வாய்த்த
இருளார்திருமேனியின்பவளச்செவ்வாய்
தெருளாமொழியானைச்சேர்ந்து. உகூ.

அந்.—பேய்ச்சி பால் உண்ட பெருமானை வாய்த்த இருளார் திருமேனி (7) இன் பவளம் செவ்வாய் தெருளாமொழியானை (11) ஆய்ச்சி பேர்ந்து சேர்ந்து அஞ்சாதே எடுத்து முலைகொடுத்தாள்.(17

அர்.—பூதனையின் பாலை யமுதுசெய்தஸ்வாமியாய் திரண்டவிருளோடொத்த திருமேனியையுடையனாய் (எ) அழகிய பவளம்போல் சிவந்ததிருப்பவளத்தையுடையனாய் நிறைவற்றசொற்களையுடையனானக்ருஷ்ணனை (கக) யசோதாதேவி போ யடைந்து பயப்படாம லெடுத்து முலைதந்தாள். (கஎ) உகூ.

வ்யா.— அவ.— இருபத்தொன்பதாம்பாட்டு.— (பேய்ச்சிபால்) அச்சத்துக்கிவனுக்கொப்பில்லாதாற்போலே ஸ்நேஹத்துக்கு யசோதைப்பிராட்டிக் கொப்பில்லையென்கிறது.

(பேய்ச்சிபா லுண்டபெருமானை) பூதனையை முடித்தவனை. (வாய்த்தவிருளார் திருமேனி இன்பவளச்செவ்வாய்) பூதனையுடைய மடியிலே ஸ்ரமஹரமானவடிவையுடையனாய், பவளம்போன்றிருந்துள்ள வதரத்தையுடையனாய். (தெருளாமொழியானைச்சேர்ந்து பேர்ந்தெடுத்தாய்ச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே) பூதனைமுகத்திலே முக்தஜல்பிதம் பண்ணுகிறவனைக்கிட்டி கால்நடைதந்தெடுத்துத்தாயானவள் அஞ்சாதேமுலையைக் கொடுத்தாள். ஸ்வரூபத்தை யழியமாறி முலையைக்கொடுத்தாள். ஸ்த்ரீத்வப்ராயுக்தமிறே அச்சம். உகூ.

அரு.—இருபத்தொன்பதாம்பாட்டு.— (அஞ்சாதே) பிணத்தின்மேலே யிருக்கச்செய்தேயும். பயப்படாமல் முலைகொடுத்தாளென்றபடி. உகூ.

சேர்ந்ததிருமால் கடல் குடந்தை வேங்கடம்
நேர்ந்தவென்சிந்தை நிறைவிசும்பும்—வாய்ந்த
மறைபாடகமனந்தன் வண்டுழாய்க்கண்ணி
இறைபாடியாயவிவை. ௩௦.

அந்.—கடல் குடந்தை வேங்கடம் நேர்ந்த என் சிந்தை நிறைவிசும்பு (8) வாய்ந்த மறை பாடகம் அனந்தன் ஆய இவை (14) வண்துழாய் கண்ணி திருமால் சேர்ந்த இறைபாடி. (20)

அர்.—திருப்பாற்கடல் திருக்குடந்தை திருமலை (ஸ்ரியஃபதிக்கு) உடன்பட்ட வென்னுடைய மநஸ்ஸு பரிபூர்ணமான பரமபதம் (அ) தகுதியான வேதம் திருப்பாடகம் திருவநந்தாழ்வா னாகிய விவைகள் (கச) போக்யமான திருத்துழாய் மாலையையுடைய ஸ்ரியஃபதி நித்யவாஸம்செய்யும் ராஜதானிகள். (உ௦) ௩௦.

வ்யா.— அவ.— முப்பதாம்பாட்டு.— (சேர்ந்த) அவன் ஸந்நிஹிதனாகையாலே ஸ்நேஹித்தாள்; இப்போது நமக்கு ஸந்நிஹிதனன்றேயென்னில்; அவன் ஸந்நிஹிதனான விடங்கள் சொல்லுகிறார்.

(கடலித்யாதி) ஸ்வாமிக்குப்படைவீடான விவை ஸ்ரியஃபதி சேர்ந்த பாடியாயவிவை. இறையாயதிருமால் சேர்ந்த வென்னவுமாம். "சிந்தை" யென்கையாலே இத்திருப்பதிகளிலேவந்திருக்கிறதெல்லாம் என் ஹ்ருதயத்துள்ளே புகுருகைக்கென்கிறது. "வாய்ந்த மறை" என்றத்தாலே ப்ரமாணமான வேதத்திலே நின்றத்தோடு கண்ணாலே காணப்படுகிற திருப்பதிகளோடு வாசியற விவர்க்கு ப்ரகாசமாயிருக்கிறபடி. ௩௦.

அரு.—முப்பதாம்பாட்டு.—நிறைவிசும்பு - பரமபதம் - துளஸீகாநநமயத - "துளஸீகாநநம் யத்ர" என்கிற ந்யாயத்தாலே வண்டுழாய்க் கண்ணியுமிருப்பிடம். ௩௦.

இவையவன்கோயிலிரணியனதாகம்
அவைசெய்தரியுருவமானான்—செவிதெரியா
நாகத்தான்நால்வேதத்துள்ளான், நறவேற்றான்
பாகத்தான்பாற்கடலுளான். ௩க.

அந்.—இரணியனது ஆகம் அவைசெய்து அரியுருவமானான் செவிதெரியான் நாகத்தான் (6) நால்வேதத்துள்ளான் நறவேற்றான் பாகத்தான் பாற்கடலுளான் அவன் இவை கோயில். (12)

அர்.— ஹிரண்யாஸுரனுடைய சரீரத்தைச் சிந்நபிந்நமாக்கி நரஸிம்ஹாவதாரமெடுத்தவனாய் காதுதெரியாத (இல்லாத) திருவநந்தாழ்வானைப்படுக்கையாகவுடையவனாய் (சு) நால்வகையானவேதங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டவனாய் தேன்போலினிமையான கங்கையையும் எருதையுமுடையனான ருத்ரனைத் தன் திருமேனியிலொருபக்கத்திலுடையவனாய்த் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டவனான அந்த ஸ்ரியஃபதிக்குக் கீழ்ச்சொன்ன திவ்யதேசங்கள் வாஸஸ்தாநங்களாயிருக்கும். (கஉ) ௩க.

வ்யா.— முப்பத்தோராம்பாட்டு.— (இரணியனித்யாதி) உபசாத்மகமான ஹிரண்யனுடைய சரீரத்தைப்பலவாகச்செய்துஸிம்ஹரூபியானான். (செவிதெரியாநாகத்தான்) ஒரு இந்த்ரியத்தாலே எல்லாவற்றையும் க்ரஹிக்குமவன், சக்ஷுஸ்ஸ்ரவாவிறே. (நால்வேதத்

துள்ளான்) நாலுவேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்பட்டவன். (நறவேற்றான்பாகத்தான்) நறவையேற்றவன். நறவையும் ஏற்றையுமுடையருத்ரனுக்குத் திருமேனியிலே யிடங்கொடுத்த சிலவான், (பாற்கடலுளான்) திருப்பாற்கடலிலேயுள்ளவன். (இவையவன்கோயில்) கீழ்ச்சொன்னவை. செஞ்சைவருந்தியநுவர்த்திக்தபடி. ௯௧.

அரு.—முப்பத்தோராம்பாட்டு.— ஆகமவைசெய்து-அவயவமாகப்பிரித்து-செவிதெரியான். செவிதெரியாதவன்; செவியில்லாதவன். கண்ணே செவியாகவுடையவனென்றபடி. ஆகத்தான்-இவனுகத்திலே யிருக்கிறவன்; படுக்கை யென்றபடி. நறவு-தேனாய், தேன்போலே போக்யமான கங்கையையுடையவன். திரியவுஞ் சொல்லுவானென்னென்ன, அருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்னவை இத்யாதி). ௯௧.

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூலதாமரைமேல்—பாற்பட்
டிருந்தார்மனமுமிடமாகக் கொண்டான்
குருந்தொசித்தகோபாலகன். ௯௨.

அந்.—குருந்து ஒசித்த கோபாலகன் பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனி விசும்பும் (8) நூல் கடலும் நுண் நூல தாமரைமேல் பால்பட்டிருந்தார் மனமும் இடமாக கொண்டான். (17)

அர்.—குறுக்கத்திமாத்தை முறித்துத்தள்ளின ஸ்ரீக்ருஷ்ணன், திருப்பாற்கடலையும் திருமலையையும் திருவநந்தாழ்வானையும் குளிர்ந்த பரமபதத்தையும் (அ) சாஸ்த்ரமாகிற ஸமுத்ரத்தையும் ஸூக்ஷ்மமாயும் சாஸ்த்ரங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற ஹ்ருதயகமலத்தின்மே வைக்கப்பட்டகரணங்களையுடையயோகிகளுடைய மநஸ்ஸையும் வாஸஸ்தாநமாக ஸ்வீகரித்தான். (௧௭) ௯௨.

வ்யா.— முப்பத்திரண்டாம்பாட்டு.— (பாற்கடலித்யாதி) (நூற்கடலும்) இதிஹாஸபுராணங்களாகிற கடலும். (நுண்ணூலித்யாதி) இதிஹாஸபுராணங்களிலே ஹ்ருதயகமலமென்று சொல்லப்படுகிறதின் மேலே வைக்கப்பட்ட இந்த்ரியங்களையுடையவர்களுடைய மநஸ்ஸைத் தனக்கிருப்பிடமாகக்கொண்டான். (குருந்தொசித்த கோபாலகன்) விரோதியைப்போக்கி ஸுலபனானவன். இவனுடைய உண்மை யெல்லாம் பரார்த்தமென்கிறது. ௯௨.

அரு.—முப்பத்திரண்டாம்பாட்டு.—பனிவிசும்பு-குளிர்ந்த பரமபதம். பால்பட்டு-அதினிடத்திலே வைக்கப்பட்டு - இந்த்ரியங்களை ப்ரத்யக்ஷாக்குகையாலே அந்தர்யாமி யிடத்திலே வைக்கப்பட்டு என்றபடி. ௩௨.

பாலகனா யாலிலைமேல்பைய, உலகெல்லாம்
மேலொருநா ளுண்டவனே மெய்ம்மையே—மாலவனே
மந்தரத்தால்மாநீர்க்கடல் கடைந்து, வானமுதம்
அந்தரத்தார்க்கீந்தாய் நீயன்று. ௩௩.

அ்.—மேலொருநாள் ஆலிலைமேல் பாலகனாய் உலகெல்லாம் மெய்ம்மையே பைய உண்டவனே! மாலவனே! (8) நீ அன்று மந்தரத்தால் மா நீர் கடல் கடைந்து வான் அமுதம் அந்தரத்தார்க்கு ஈந்தாய். (19)

அர்.—முன்பொருகாலத்தில் வடபத்ரத்தின்மேல் குழவியாயிருந்து லோகங்களை யெல்லாம் உண்மையாக மெள்ள வமுதுசெய்தவனே! ஸர்வாதிகனான ஸ்ரியঃபதியே! (அ) நீ யக்காலத்தில் மந்தர பர்வதத்தினால் மிக்க ஜலத்தையுடைய ஸமுத்ரத்தைக் கடைந்து ஸ்லாக்யமான வம்ருதத்தை (யெடுத்து) ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக் களித்தாய். (கக) ௩௩.

வ்யா.— முப்பத்துமூன்றாம்பாட்டு.— (பாலகனித்யாதி) ஒருபவனாயிருப்பதோராலிலையின் மேலே பருவம் நிரம்பாப் பிள்ளையாய். (மேலொருநாளுலகெல்லாம் பைய உண்டவனே) லோகங்களையெல்லாம் நோவுபடாமல் மெள்ளத்திருவயிற்றிலே வைத்தவன். (மெய்ம்மையே)ஐந்த்ரஜாலிகரைப்போலேயன்றிக்கே ஸத்யமே. (மாலவனே) ப்ராணனைக்கொடுக்கவல்ல மிடுக்கையுடைத்தான வம்ருதத்தை. (அந்தரத்தித்யாதி) ஆகாசத்தே நிற்கிறவர்களுக்குக் கொடுத்தாய் நீ அன்று. ௩௩.

அரு.—முப்பத்துமூன்றாம்பாட்டு.—வானமுதம்-மிடுக்கான அம்ருதம். மாலவன்—ஸர்வேஸ்வரன். ௩௩.

அன்றிவ்வுலகமளந்த வசைவேகொல்
நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்—அன்று
கிடந்தானைக் கேடில் சீரானை, முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமேகாண். ௩௪.

அந்.—நெஞ்சமே! அன்று நின்று இவ்வுலகம் அளந்த அசை வேகொல் அன்று வேளுக்கை இருந்து நீள் நகர்வாய் கிடந்தானை 12) கேடு இல் சீரானை முன் கஞ்சை கடந்தானை காண். (19)

அர்.— மனமே ! அந்தவாமநாவதாரகாலத்தில் (த்ரிவிக்ரமனாய்) நின்று இந்தலோகங்களை யாக்ரமித்த ஆயாஸத்தினாலேயோ? (௬) அப்போது வேளுக்கையி லெழுந்தருளியிருந்து பெருநகரான திரு வெஃகாவில் பள்ளிகொண்டவனாய் (௧௨) அழிவில்லாக் கல்யாண குணங்களையுடையனாய் முற்காலத்தில் கம்ஸனைக்கொன்றவனான புருஷோத்தமனை ஸேவி. (௧௯) ௩௪.

வ்யா.— அவ.— முப்பத்துநாலாம்பாட்டு.— (அன்றிவ்வுலகம்) அவனுடைய ஸ்த்தை பரார்த்தமான பின்பு அவனைக்காண வாசைப் படா யென்று தம்முடைய நெஞ்சைக்குறித்துச்சொல்லுகிறார்.

அன்றிவ்வுலக மளந்தவசைவேகொல் நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்க் கிடந்து. (கேடில் சீரானை) நித்யஸித்தமான கல்யாண குணங்களையுடையவனை. (முன்கஞ்சைக்கடந்தானை நெஞ்சமே) கம்ஸன் நினைத்தவஞ்சனையை அவன் தன்னோடுபோம்படி முடித்து உப காரகனானவனை. பூமியடங்கலும் நின்றளந்தவருத்தத்தாலேயோ திரு வெஃகாவில் கண்வளர்ந்தருளுகிறதும், திருவேளுக்கையி லிருக்கிற தும் என்று நெஞ்சே! அநுஸந்தி. ௩௪.

அரு.—முப்பத்துநாலாம்பாட்டு.—அன்றுநின்று இவ்வுலகமளந்த வசைவேகொல். ௩௪.

**காண்காணென விரும்புங்கண்கள், கதிரிலகு**
**பூண்டாரகலத்தான்பொன்மேனி— பாண்கண்**
**தொழில்பாடி வண்டறையுந்தொங்கலான், செம்பொற்**
**கழல்பாடி யாந்தொழுதுங்கை. ௩௫.**

அந்.— கதிர் இலகு பூண் தார் அகலத்தான் பொன் மேனி கண்கள் காண்காணென விரும்பும். (10) தொழில் பாண்கண் பாடி வண்டு அறையும் தொங்கலான் செம் பொன் கழல் பாடி யாம் கை தொழுதும். (22)

அர்.— ஒளி வீசுகிற திருவாபரணங்களையும் திருமாலையையும் திருமார்பிலணிந்தபுருஷோத்தமனுடைய அழகிய திருமேனியைக் கண்கள் ஸேவிக்கவேணும் ஸேவிக்கவேணுமென்றாசைப்படாநின்

றன. (௪0) (அவனுடைய) திவ்யசேஷ்டிதங்களைப் பாட்டிலே (வைத்துப்) பாடி வண்டுகள் சப்தியாநின்ற திருமாலையையுடைய ஸர்வேச்வரனுடைய சிவந்த வழகிய திருவடிகளை காநம்செய்து நாம் கைகளாலாச்ரயிப்போம். (உ உ) நரு.

வ்யா.— அவ.— முப்பத்தைந்தாம்பாட்டு.—(காண்காணெனெ நெஞ்சமே! காணென்றுபதேசித்தார் கீழ். இந்த்ரியங்கள் தான் முற்ப்பட்டிவரை மூட்டுமளவாயிற்றென்கிறது.

(கதிரிலகு பூண்டாரகலத்தான் பொன்மேனி காண்காணென விரும்புங் கண்கள்) ஒளிவிடாநின்ற ஹாரத்தையுந்தாரையுமுடைத்தான திருமார்பை யுடையவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருமேனியைக் கண்கள் காண்காணென விரும்பாநின்றது. (பாணித்யாதி)பாட்டிலேதொழிலுண்டாகப்பாடி ;பாண்தொழிலுண்டாகப்பாடியென்றுமாம். அவனுடைய தொழிலைப் பாட்டிலேவைத்துப் பாடியென்னவுமாம். (வண்டறையுந்தொங்கலான்) வண்டுகள் சப்தியாநின்றுள்ள மாலையையுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைக் கையாலே தொழுவோம். நரு.

அரு.—முப்பத்தைந்தாம்பாட்டு—பாண்கண்-பாட்டிடத்திலே. தொழிலுண்டாக - லக்ஷணமுண்டாக பாடியென்னுதல்; காநத்தை ஸ்வரத்தோடேபாடியென்னுதல் ; அவன் சரித்ரங்களைப்பாடி யென்னுதல். திருவடிகளைப்பாடித்தொழுவோம். நரு.

கையகனலாழி கார்க்கடல்வாய் வெண்சங்கம்
வெய்யகதைசார்ங்கம்வெஞ்சுடர்வாள்—செய்ய
படைபரவைபாழிபனிநீருலகம்
அடியளந்த மாயரவற்கு. நகூ.

அந்.— பனி நீர் உலகம் அடியளந்த மாயாவற்கு (5) கனல் ஆழி கார் கடல் வாய் வெண் சங்கம வெய்ய கதை சார்ங்கம் (15) வெம் சுடர் வாள் செய்ய படை கைய. பரவை பாழி. (23)

அர்.— தண்ணீர் சூழ்ந்த லோகத்தைத் திருவடிகளாலாக்ரமித்தஆஸ்சர்யபூதனான அந்தஸ்ரியঃபதிக்கு, (ரு) அனலுமிழ்கிற திருவாழி, கரிய ஸமுத்ரத்தி லுண்டான வெண்மையான ஸ்ரீபாஞ்சஜந்யம் க்ரூரமான கௌமோதகி யென்கிறகதை, சார்ங்கமென்கிறதநுஸ்ஸு, (கரு) உஷ்ணமான ஜ்வாலையையுடைய நந்தகமென்கிறசக்தி ஆகிய அழகிய இவ்வாயுதங்கள் திருக்கைகளில் (விளங்குகின்றன). திருப்பாற்கடல் படுக்கையாயிருக்கிறது. (உ௩) நகூ.

வ்யா.—முப்பத்தாறும்பாட்டு.—(கையகனலாழியித்யாதி) (செய்யபடைகைய) இவைகையிலே யுள்ளன. "செய்ய" என்று ஆபரணமானபோது புகரைச்சொல்லுகிறது; ஆயுதமானபோது விதேயமான ஆயுதங்களைச் சொல்லுகிறது. (பரவைபாழி) திருப்பாற்கடல்படுக்கை. (பனிநீருலகமடியளந்த மாயரவற்கு) கடல்சூழ்ந்த பூமியளந்த ஸர்வேஶ்வரனுக்கு. ௩௬.

அரு.— முப்பத்தாறும்பாட்டு.— "படை" என்றாயுதம் - ஆபரணகோடியும் ஆயுதகோடியும். ௩௬.

அவற்கடிமைபட்டேனகத்தான்புறத்தான்
உவர்க்குங்கருங்கடல்நீருள்ளான்—துவர்க்கும்
பவளவாய்ப்பூமகளும் பன்மணிப்பூணாரம்
திகழும்திருமார்பன்தான். ௩௭.

அந்.— உவர்க்கும் கரும் கடல்நீர் உள்ளான் (4) துவர்க்கும் பவளம் வாய் பூமகளும் பல் மணி பூண் ஆரம் (12) திகழும் திருமார்பன்தான் அகத்தான்; புறத்தான். அவற்கு அடிமைபட்டேன். (18)

அர்.— உப்புறைத்தும் கறுத்துமிருக்கிற ஸமுத்ர ஜலத்தில் பள்ளிகொண்டவனாய் (௪) சிவந்த பவளம்போன்ற திருவதரத்தையுடைய பிராட்டியையும் அநேகவித மணிகளிழைத்த திருவாபரணங்களையும் திருமாலையையுமுடையதாய் (௧௨) விளங்காநின்ற திருமார்பையுடையஸ்ரியஃபதி தான் உட்புறத்திலு முள்ளவன். வெளிப்புறத்திலுமுள்ளவன். அந்த ஸ்ரியஃபதிக்கு தாஸனானேன். (௧௮) ௩௭.

வ்யா.— அவ.—முப்பத்தேழாம்பாட்டு.—(அவற்கு) நான் அடிமையிலேஅந்வயிக்க ஸௌபரியைப்போலே அநேகம் வடிவுகொண்டு புஜிக்கவாசைப்படா நின்றேனென்கிறது.

(உவர்க்குங்கருங்கடல் நீருள்ளான்) திருப்பாற்கடலை வாஸஸ்தாநமாக உடையனாய். (துவர்க்கும்பவளவித்யாதி) பெரியபிராட்டியாரையும்அநேகம்மாணிக்கங்களை யுடைத்தாயிருந்துள்ள பூணாரத்தாலே திகழாநின்றுள்ள திருமார்பையுமுடையவன். அவனுக்கடிமைப்பட்டேன்.குறைவற்றமேன்மையையும் வடிவழகையுமுடைய ஸ்ரியஃபதியானவன் நானடிமையிலே அந்வயித்த மாத்ரத்திலே உள்ளும் புறம்பும்விட சக்தனாகிறிலன். ௩௭.

தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும்
தானே தவவுருவுந் தாரகையும்—தானே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும் அண்டத்
திருசுடருமாய இறை. ௩௮.

அந்.— எவ்வுருவும் தன்னுருவே தவவுருவும் தாரகையும் தானே (5) எரி சுடரும் மால் வரையும் எண்திசையும் (10) அண்டத்து இருசுடரும் தானேயாய இறை தனக்கு தானே உவமன், (17)

அர்.— ஸமஸ்தவஸ்துக்களையும் தனக்குச்சரீரமாகவுடையனாய் தபச்சரீரர்களானவஸிஷ்டாதிகளையும் நக்ஷத்ரங்களையும் தனக்குப் ப்ரகாரமாகவுடையனாய் (௫) உஜ்வலமான அக்நியையும் பெரியமலைகளையும் எட்டுத்திக்குக்களையும் (௧௦) அண்டத்துக்குள்ளிருக்கிற சந்த்ரஸூர்யர்களாகிற இரண்டுதேஜஸ்ஸுக்களையும் சரீரமாகவுடையனான ஸ்வாமி தனக்குத் தானே உபமானபூதன். (௧௭) ௩௮.

வ்யா.—முப்பத்தெட்டாம்பாட்டு.— (தனக்குவமன் தானே) தனக்குபமான ரஹிதன். உபமானராஹித்யத்துக்கடி-ஸகலபதார்த்தங்களு மவனுக்குப்ப்ரகாரமாய், தான்ப்ரகாரியாய், ப்ரகார்யந்தரமின்றிக்கே யிருக்கை. (தன்னுருவேயெவ்வுருவும்) எல்லாப்பதார்த்தங்களு மவனுக்குச் சரீரம். (தானே தவவுருவும்) தபஸ்ஸுபண்ணி, புண்யசரீரரான வதிகாரிகளும் அவனுக்குப் ப்ரகாரம். ௩௮.

அரு.— முப்பத்தெட்டாம்பாட்டு.— தானேஎரிசுடரென்றதைப்பற்ற அருளிச்செய்கிறார் (உபமாந ராஹித்யேத்யாதி). எரிசுடர் - அக்நி. இருசுடர்-சந்த்ராதித்யர்கள். எதாத்ருசமான இறையாகையாலே தானே தனக்குவமன், என்றுக்ரியை. ௩௮.

இறையாய் நிலனாகி யெண்டிசையுந் தானாய்
மறையாய் மறைப்பொருளாய் வானாய்—பிறைவாய்ந்த
வெள்ளத் தருவிவிளங்கொலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தி னுள்ளே யுளன். ௩௯.

அந்.— இறையாய் நிலனாகி எண்திசையும் தானாய் மறையாய் மறைப்பொருளாய் வானாய் (7) பிறை வாய்ந்த வெள்ளத்து அருவி விளங்கு ஒலி நீர் வேங்கடத்தான் (15) உள்ளத்தின் உள்ளே உளன். (18)

அர்.— (ஸர்வ) ஸ்வாமியாய் பூமிக்கந்தர்யாமியாய் எட்டுத்திக்குக்களையும் தனக்குச்சரீரமாகவுடையவனாய் வேதத்துக்குநிர்வாஹக

னாய் வேதப்ரதிபாத்யனாய் பரமபதத்தைப்ரகாரமாகவுடையனாய் (எ) சந்த்ரமண்டலத்தைக் கிட்டின ப்ரவாஹத்தையுடைய அருவிக ளின் தெளிந்தும் சப்தியாநின்றுமிருக்கிற ஜலத்தையுடைய திரும லையிலெழுந்தருளி யிருக்கிற திருவேங்கடமுடையான் (கரு) (என் னுடைய) ஹ்ருதயத்திற்குள்ளே வாஸம்செய்கிறான். (க௮) ௩௯.

வ்யா.— முப்பத்தொன்பதாம்பாட்டு.— (இறையாயித்யாதி) உபய விபூதியுக்தனாய் பூமியும் எட்டுத்திக்குகளும்வேதங்களும் தானி ட்டவழக்கு. (மறைப்பொருளாய்) வேதப்ரதிபாத்யனாய். (பிறையித் யாதி) சந்த்ரபதத்திலேகிட்டின வெள்ளத்தையுடைத்தாயிருந்துள்ள திருமலையிலே நின்று என்னுடைய ஹ்ருதயத்திலே புகுர அவஸரப்ர தீக்ஷனாயிருக்கிறான். ௩௯.

அரு.— முப்பத்தொன்பதாம்பாட்டு.— திருமலை சந்த்ரபதத்த ளவு மோங்கியிருக்கையாலே அருவிகள் சந்த்ரனைக்கிட்டியிருக்கை.

**உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமனென்றும்**
**உளன்கண்டாய், உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய்**
**விண்ணொடுங்கக்கோடுயரும் வீங்கருவிவேங்கடத்தான்**
**மண்ணொடுங்கத்தானளந்த மன். ௪௦.**

அ.— நல் நெஞ்சே! உத்தமன் உளன்கண்டாய். என்றும் உளன்கண்டாய். உள்ளுவார் உள்ளத்து உளன்கண்டாய். (௯)விண் ஒடுங்க கோடு உயரும் வீங்கு அருவி வேங்கடத்தான் மண் ஒடுங்க தான் அளந்த மன். (21)

அர்.— அநுகூலமான மநஸ்ஸே! புருஷோத்தம னிருக்கிறான் கிடாய். எப்போது மிருக்கிறான் கிடாய். த்யாநம்செய்யுமவர்களுடைய ஹ்ருதயத்தி லிருக்கிறான்கிடாய். (௯) ஆகாசம் (ஒருமூலையில்) அடங்கும்படி சிகரங்களின் உயராநின்றும் வ்ருத்தியடையாநின்ற அருவிகளையுடைத்தாயுமிருக்கிற திருமலையிலெழுந்தருளி யிருக்கிற வன் பூமியைத் (தன்திருவடியில்) அடங்கும்படி தானளந்துகொண்ட ஸ்வாமி. (உக) ௪௦.

வ்யா.— நாற்பதாம்பாட்டு.— (உளன்கண்டாய்) அவனுடைய ஜீவநம் நம்முடைய ஸத்தாஹேது. "உஹாதவஷவதவிஷவஷாயஃ ஸத்தா - இச்சாத ஏவதவவிஸ்வ பதார்த்தஸத்தா". (நன்னெஞ்சே) எம்பெருமான் நம்முடைய ஸத்தாஹேதுவென்று சொல்லுகைக்குப் பாங்கான நெஞ்சே! (உத்தமனென்று முளன்கண்டாய்) நம்முடைய

ஸத்தாஹேது அவனென்று நினைத்திராதவன்றும் என்றுமவனிருக்கும்படியிதுவே. (உள்ளுவாரித்யாதி) புகுரப்புக்கால் விலக்காதாருடைய ஹ்ருதயத்திலேயுளன். (விண்ணித்யாதி) "உத்தமனென்றுமுளன்கண்டாய்" என்கிறத்தை உபபாதிக்கிறது. உபரிதநலோகங்களும் சில வெல்லையுண்டென்றிராதே இவை வேண்டாவென்று கொண்டு உயராநின்ற-ஆகாசாதி லோகங்களெல்லாம் ஒடுங்கும்படிக்கிடாக உயராநின்ற சிகரத்தையுடைத்தாயிருந்துள்ள திருமலையிலே நின்றவன் பரப்பின திருவடிகளிலே பூமிதோற்றுதபடி யளந்து கொண்டமன்னன்-உடையவன். இந்த்ரனிழந்தது பெறுகையாலும் மஹாபலியைப்பறித்து வாங்கிக்கொடுக்கையாலும் இவனே உடையவனென்று தோற்றுநின்றது. சூ.

அரு.—நாற்பதாம்பாட்டு.—தோற்றுதபடி—திருவடிகளேயாய் மண் தோற்றுதபடி - வீங்கருவி -பெரியஅருவி. சக.

மன்னுமணிமுடிநீண்டண்டம்போயெண்டிசையும்
துன்னுபொழிலனைத்தும் சூழ்கழலே—மின்னை
உடையாகக்கொண்டன்றுலகளந்தான், குன்றம்
குடையாகவாகாத்தகோ. சுக.

அந்.— குன்றம் குடையாக ஆ காத்த கோ (5) மன்னு மணி முடி நீண்டு அண்டம் போய் (11) எண்டிசையும் துன்னு பொழில் அனைத்தும் கழல் சூழ் (17) மின்னை உடையாகக்கொண்டு அன்று உலகு அளந்தான். (22)

அர்.— கோவர்த்தநமலையைக் குடையாகச்செய்து பசுக்களைக் காத்த ஸ்வாமி (ரு) பொருந்தியும் ரத்நங்களிழைத்துமிருக்கிற கிரீடம் நீண்டு அண்ட பித்திவரையில் போம்படியாகவும் (கக) எட்டுத்திக்குக்களையும் நிறைந்த பூமி யனைத்தையும் திருவடி வ்யாபிக்கும்படியாகவும் (கஎ) மின்னலை வஸ்த்ரமாகக்கொண்டு (மேகத்தளவும்வளர்ந்த இடுப்பையுடையனாய்) அக்காலத்தில் உலகங்களை யாக்ரமித்தான். (உஉ) சுக.

வ்யா.— நாற்பத்தோராம்பாட்டு.—(மன்னுஇத்யாதி) (அண்டம்போ யெண்டிசையும் மன்னுமணிமுடி நீண்டு) அண்டத்தையுமெட்டுத்திக்குக்களையும் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம் வ்யாபிக்கவும். (துன்னித்யாதி) சேதநராலே செறியப்பட்ட பூமியடங்கலும் திருவடிகளேயாகவுமாம். (மின்னையித்யாதி) மேகபதத்துக்கவ்வருகே வளர்ந்தருளுகிறபோது மின்னைத்திருப்பீதாம்பரமாகக்கொண்டு உல

களந்தான். (குன்றமித்யாதி)த்ரைலோக்யத்தையுந்தன்னுடைய திரு மேனியிலே மறைத்தவன் ஒருமலையாலே தன்னுடைய திருமேனியை மறைத்துக்கொண்டான். ௪க.

கோவலனா யாநிரைகள் மேய்த்துக்குழலூதி
மாவலனாய்க்கீண்டமணிவண்ணன்—மேவி
* எரியுருவமாகி யிரணியனதாகம்
தெரியுகிரால்கீண்டான்சினம். ௪உ.

அ.— கோவலனாய் ஆ நிரைகள் மேய்த்து குழல் ஊதி (6) வலனாய் மா கீண்ட மணிவண்ணன் (10) மேவி எரியுருவமாகி இரணியனது ஆகம் உகிரால் கீண்டான் சினம் தெரி. (18)

அர்.— இடையனாய்க்கொண்டு பசுக் கூட்டங்களை மேய்த்து வேணு காநம்செய்து (௬) ஸமர்த்தனாய், குதிரையாகிற கேசியைப் பிளந்தவனாய் நீலரத்நம்போன்ற வடிவையுடையனாய் (௧0) அமர்ந்த அவயவங்களை யுடைய உஜ்வலமான நரஸிம்ஹாவதார மெடுத்து ஹிரண்யனுடையசரீரத்தை நகங்களினால் கிழித்தவனான புருஷோத்தமனுடைய கோபத்தை(மனமே!)அநுஸந்திக்கக்கடவாய். (௧அ)௪உ.

வ்யா.— நாற்பத்திரண்டாம்பாட்டு.— (கோவலனித்யாதி) ப்ராஹ்மணனாய் ஓத்துச்சொல்லப்பெறுமாபோலே இடைஜாதிக்குசிதமாகப்பசுக்களையும் மேய்த்துக் குழலையுமூதி. (மாவலனித்யாதி) அப்பருவம் நிரம்பாமையிலே கேசியினுடைய வாயைக்கிழிக்கவல்லனாய் விரோதியைப்போக்குகையாலே ஶ்ரமஹரமான வடிவையுடையவன் (மேவியித்யாதி) மேவி- நரத்வஸிம்ஹத்வமான விரண்டுவடிவுகொண்டால் பொருந்தாதே யிருக்குமோ வென்னில் ஒருவடிவுபோலே பொருந்தினபடி. அன்றிக்கே, மேவியென்று ஹிரண்யனுடைய வரத்தைக்கிட்டி என்றுமாம். (எரியுருவமாகி) ஒளியுண்டான ரூபத்தையுடையனாய்ச் சினத்தாலே இரணியனாகத்தைக் கீண்டான். அன்றிக்கே, அருளன்று நமக்குத்தேஶ்யம்; ஆஶ்ரிதவிரோதிகள் பக்கல் அவனுக்குண்டான சினமுத்தேஶ்யம். அச்சினத்தைத் தெரி--அநுஸந்தியென்றுமாம். ௪உ.

அரு.— நாற்பத்திரண்டாம்பாட்டு.— வரத்தைக்கிட்டுகை- வரத்தையறிந்து அதுக்கநுரூபமான வடிவைக்கொள்ளுகை. "எரியுரு" என்று பாடாந்தரம். சினத்தாலே தெரியுகிரால் - கூரியவுகிராலே,

* (பா) அரியுருவமாகி.

மூன்றுந்திருவந்தாதி, சங-பா, சினமா, சச-பா, உலகமும். சக

நிண்டானென்று க்ரியையாதல். அன்றியே, நிண்டான் சினம்தெரி-விசாரியென்று க்ரியையாதல். சஉ.

சினமாமதகளிற்றின் திண்மருப்பைச்சாய்த்துப்
புனமேயபூமியதனைத்—தனமாகப்
பேரகலத்துள்ளொடுக்கும் பேராரமார்பனார்
ஓரகலத்துள்ளதுலகு. சங.

அங்.— சினம் மதம் மா களிற்றின் திண் மருப்பை சாய்த்து (7) புனம் மேய பூமியதனை தனமாக (11) பேர் அகலத்து உள் ஒடுக்கும் பேர் ஆரம் மார்பனார் (18) ஓர் அகலத்து உலகு உள்ளது. (22)

அர்.— கோபத்தையும் மதத்தையமுடைய பெரிய குவலயாபீடமென்கிறயானையின் வலிய கொம்பை முறித்து (எ) சப்தாதிபோக்யபதார்த்தங்கள் நிறைந்த பூமியைத் தநமாகவங்கீகரித்து (கக) (அதை) விசாலமான ஹ்ருதயத்திற் குள் ளடக்கிய பெரிய ஹாரங்களையுடைய திருமார்புபடைத்த ஸர்வேஶ்வரனுடைய (கஅ) அத்விதீயமான ஸங்கல்பத்திலுலகம் ஸத்தைபெற்றிருக்கிறது. (உஉ) சங.

வ்யா.—அவ.—நாற்பத்துமூன்றும்பாட்டு.— (சினம்) அவன் ஸங்கல்பத்தாலேயன்றோ விந்தலோகங்கிடக்கிறதென்கிறார்.

(சினமித்யாதி) சினத்தையுடைத்தாய்ப் பெருத்து மதித்த குவலயாபீடத்தினுடைய விரண்டு மருப்புக்களையும் அநாயாஸேநபறித்து. (புனமித்யாதி)சேதநர்க்குபோக்யங்களை யுடைத்தான பூமியை. (தனமித்யாதி) தநம் போலே யிருக்கத் திருவயிற்றிலே வைத்துக் காக்கும். (பேராரமார்பனார்) தன்னுடைமையானது ரக்ஷிக்கப்பட்டதென்றத்தாலே யொருபடி ஆபரணம் பூண்டாற்போலே யிருக்கிறபடி. (ஓரகலத்துள்ளதுலகு) அம்சமான ஸங்கல்பத்துள்ளது லோகம். ஓரப்படுகிற ஸங்கல்பத்துள்ள தென்றுமாம். சங.

அரு.— நாற்பத்துமூன்றும்பாட்டு.— புனம் - புலமென்றாய் விஷயங்களைச் சொல்லுகிறது. அகலம்- ஹ்ருதயம். ஓரகலம்-ஸங்கல்பத்தினுடைய ஏகதேசமென்னுதல். சங.

உலகமுமூழியுமாழியும், ஒண்கேழ்
அலர்கதிருஞ்செந்தீயுமாவான்—பலகதிர்கள்
பாரித்தபைம்பொன்முடியா னடியிணைக்கே
பூரித்தென்னெஞ்சேபுரி. சச.

அ௩.— உலகமும் ஊழியும் ஆழியும் ஒண் கேழ் அலர் கதிரும் செம் தீயுமாவான் (9) பல கதிர்கள் பாரித்த பை பொன் முடியான் இணை அடிக்கே என் நெஞ்சே! பூரித்து புரி. (21)

அர்.—லோகங்களையும் ப்ரளயகாலத்தையும் ஸமுத்ரங்களையும் அழகிய நிறத்தையுடையதாய்ப் பரவாநின்ற கிரணங்களையுடைய ஸூர்யனையும் சிவந்த அக்நியையும் சரீரமாகவுடையனாய் (கூ) அநந்தமான கிரணங்களை விசிறாநின்ற ஸ்ப்ருஹணீயமான அழகிய கிரீடத்தையுடையஸர்வேஸ்வரனுடைய இணைந்த திருவடிகளையே என்னுடைய மநஸ்ஸே! ஸந்தோஷித்து ஆஸ்ரயி. (உக) சச.

வ்யா.— நாற்பத்துநாலாம்பாட்டு — (உலகமுமித்யாதி) லோகமும், எல்லாம் ஸம்ஹ்ருதமாய்க்காலமே சேஷித்தகாலமும், *கடலும் அழகியதாய் அலராநின்றுள்ள ஒளியையுடைத்தான ஆதித்யனும், அக்நியும் தனக்குப்ரகாரமாகவுடையவன். இத்தால் ஜகதாகாரத்தைச் சொல்லுகிறது. (பலகதிரித்யாதி) பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கும்படி. (பலகதிர்கள்) "திவிஸூர்யஸஹஸ்ரஸ்யபவேத்யுகபதுத்திதா - திவிஸூர்யஸஹஸ்ரஸ்யபவேத்யுகபதுத்திதா" என்னும்படியே நூறாயிரமாதித்யர்களை யோடவைத்த ஒளியையுடைத்தாய் ஸ்ப்ருஹணீயமான திருவபிஷேகத்தையுடையவனுடைய திருவடிகளிலே. (என்னெஞ்சே பூரித்துப்புரி) ஸ்நேஹித்தாஸ்ரயி. சச.

அரு.— நாற்பத்துநாலாம்பாட்டு.— ஆழி - வட்டமாய், அத்தாலே வளைய என்றாய், அடங்கலுமென்கிறது. சச.

புரிந்துமதவேழம்மாப்பிடி யோடூடித்
திரிந்துசினத்தால்பொருது— விரிந்தசீர் [நாள்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே, மேலொரு
மண்கோட்டுக்கொண்டான் மலை. சடு.

அ௩.—மதம் வேழம் மா பிடியோடு புரிந்து ஊடி (6) திரிந்து சினத்தால் பொருது விரிந்த சீர் வெண் கோடு முத்து உதிர்க்கும் வேங்கடமே(16) மேலொருநாள் மண் கோடு கொண்டான் மலை. (21)

அர்.— மதித்த யானையானது ஶ்லாக்யமான பெண்யானையோடு ஸம்ஶ்லேஷித்துப் (பின்பு) ப்ரணயகலஹம்செய்து(கூ) ஸஞ்சரித்துக் கோபத்தினால் (மணிச்சுவர்களில்) சண்டைசெய்து பரவாநின்ற வீரஶ்ரீயையுடைய வெண்மையான தந்தங்களில்நின்றும் முத்

* அடங்கலும் என்று அரும்பதத்தின் பாடம்.

துக்களை யுதிராநின்ற திருமலையே (கசுஊ) முன்பொருகாலத்தில் பூமியைத்தந்தத்தின்மேலெடுத்துக்கொண்டுவந்தஸர்வேச்வரன் வாஸம் செய்யும்மலை. (உக)                சடு.

வ்யா.— அவ.— நாற்பத்தைந்தாம்பாட்டு.—(புரிந்து) "பலகதிர்கள் பாரித்தபைம்பொன்முடியான்" என்று பரமபதத்தைக்கலவிருக்கையாக உடையவன் நமக்கு ஸுலபனுமோ வென்னில், நமக்காகவன்றோ திருமலையிலேவந்து ஸந்நிஹிதனாயிற்றென்கிறார்.

(மதவேழம்பிடியோடுபுரிந்து) மதித்திருந்துள்ள ஆனையானது பிடியோடே ஸம்ச்லேஷித்து. (ஊடி) ஸம்ச்லேஷாநந்தரமூடி. (திரிந்துசினத்தால்பொருது)ஊடலாலே பிறந்த சினத்தாலே உலாவி ரத்நபித்திகளிலேபொருது. (விரிந்தசிரித்யாதி) பொருகையாலே விரஸ்ரீயையுடைத்தான வெள்ளைக் கோட்டிலே யுண்டான முத்தையுதிராநின்ற திருமலை. (மேலித்யாதி) பண்டொருநாள் பூமியை ஸ்ரீவராஹரூபியாய் எயிற்றிலேகொண்டவனுடையமலை. திருமலையில் ஆனைகளுக்குச் சேருமிடமாக வராஹ ரூபமான வடிவு.                சடு.

மலைமுகடுமேல்வைத்து வாசுகியைச்சுற்றித்
தலைமுகடுதானொருகைபற்றி—அலைமுகட்                [ன்
டண்டம்போய்நீர்தெறிப்ப வன்றுகடல்கடைந்தா
பிண்டமாய் நின்றபிரான்.                சசு.

அ.— முகடு மலை மேல்வைத்து வாசுகியை சுற்றி (5) முகடு தலை தான் ஒரு கை பற்றி (11) அலை முகடு அண்டம் போய் நீர் தெறிப்ப அன்று கடல் கடைந்தான் பிண்டமாய் நின்ற பிரான். (23)

அர்.— சிகரத்தையுடைய மந்தரபர்வதத்தைத் (தன்முதுகின்) மேலேவைத்து வாஸுகியைக்(கயிறாகச்சுற்றி) (ரு) சிகரத்தின் மேல் பாகத்தைத் தானொரு கையாலே பிடித்து (கக) அலைகளி னுச்சி அண்டபித்திவரையில் சென்று ஜலம் தெறிக்கும்படி அக்காலத்தில் ஸமுத்ரத்தை மதநம்பண்ணினவன், (ஜகத்) காரணமாய் நின்ற ஸ்வாமி. (உங)                சசு.

வ்யா.— நாற்பத்தாறும்பாட்டு.— (மலைமுகடுமேல்வைத்து) ஓங்கியிருந்துள்ள மலையைத் தன்முதுகின்மேல் வைத்து. (வாசுகியைச்சுற்றி) அதிலேவாஸுகியைச்சுற்றி. (தலைமுகடுதானொருகைபற்றி) கீழ்கடைகிறது குலையாமல் ஆமையாய்த் தாங்கி மேலேவைத்த சிகர

மடிக்கிளர்ந்து போகாதபடி யொருகையாலேபற்றி. (அலைமுகட்டி த்யாதி) இத்திரண்ட திவலேபோய்த்தெறிப்ப. அலைமேல் நீர் அண்ட பித்தியில் போய்த்தெறிப்ப. (அன்றித்யாதி) இதுக்குபாதாநகாரண மானவன். "ஏகோ ஹவை நாராயண ஆஸீத்-ஏகோஹவைநாரா யண ஆஸீத்". சசு.

நின்றபெருமானே நீரேற்று, உலகெல்லாம்
சென்றபெருமானே செங்கண்ணா—அன்று
துரகவாய்கீண்ட துழாய்முடியாய், நங்கள்
நரகவாய்கீண்டாயும் நீ. சஎ.

அ்.— நீர் ஏற்று நின்ற பெருமானே! உலகெல்லாம் சென்ற பெருமானே! செம் கண்ணா! (9) அன்று துரகம் வாய் கீண்ட துழாய் முடியாய்! நங்கள் நரகம்வாய் கீண்டாயும் நீ. (18)

அர்.— தாநஜலத்தை வாங்கி (மஹாபலியஜ்ஞத்தில்) நின்ற ஸ்வாமி! லோகங்களையெல்லாம் போய் (அளந்த) ஸ்வாமி! சிவந்த நேத்ரங்களையுடையஸ்வாமி! (கூ) அக்காலத்தில் கேசியின் வாயை க்கிழித்தவனே! திருத்துழாய்மாலையைத்திருமுடியில் தரித்தவனே! எங்கள் நரகத்தைப் போக்கினவனும் நீதான். (கஅ) சஎ.

வ்யா.—நாற்பத்தேழாம்பாட்டு.—(நின்றபெருமானேநீரேற்று) மஹாபலிபக்கலிலேநீரேற்றுசேஷித்வம் தோற்றும்படி நின்றவனே! (உலகித்யாதி) லோகத்தை யெல்லாமளந்து உடையவனென்று தோற்றும்படி நின்றவனே! (செங்கண்ணா) ஸ்நேஹந்தோற்றும் படி நின்றவனே! (அன்றித்யாதி) வைத்தவளையம் வாடாமல் கேசி வாயைக்கிழித்தவனே! (நங்களித்யாதி) ஒருகேசிவாயைக்கிழித்தது ஆஶ்சர்யமோ? எங்கள் நரகத்தின் வாயைக்கிழித்தவனுக்கு. சஎ.

நீயன்றேநீரேற்றுலக மடியளந்தாய்
நீயன்றேநின்று நிரைமேய்த்தாய்—நீயன்றே
மாவாயுரம்பிளந்து மாமருதினூடுபோய்த்
தேவாசுரம்பொருதாய் செற்று. சஅ.

அ்.— நீர் ஏற்று உலகம் அடி அளந்தாய் நீயன்றே? (6) நின்று நிரை மேய்த்தாய் நீயன்றே? (10) மா உரம் வாய் பிளந்து மா மரு தின் ஊடு போய் (18) தேவாசுரம் செற்று பொருதாய் நீய ன்றே? (22)

அர்.— தாநஜலம் வாங்கி லோகங்களைத் திருவடியினால் அளந்தவன் நீயன்றோ? (ரு) (இடையனாய்) இருந்து பசுக்களை மேய்த்தவன் நீயன்றோ? (கo) கேசியினுடைய வலிய வாயைப் பிளந்தும் பெரிய மருதமரத்தின் நடுவே சென்றும் தேவாஸுரயுத்தத்தில் (அஸுரரைக்)கொன்று சண்டைசெய்தவனும் நீயேயன்றோ: (உஉ) சஅ.

வ்யா.—நாற்பத்தெட்டாம்பாட்டு.—(நீயன்றேயித்யாதி) உன்னுடைமைக்கு மஹாபலிபக்கலிலே நீரேற்று அத்தைத் திருவடிகளாலே அளந்தாய். (நீயன்றேயித்யாதி) க்ருஷ்ணனாயவதரித்துப் பசுமேய்த்தாய். (நீயன்றேயித்யாதி) கேசிவாயைப்பிளந்து பெரியமருதினிடையே போய். (தேவாசுரமித்யாதி) ஜ்ஞாநஹீநமான அசேதநங்களைப் போக்கினதுவேயோ. சேதநரான விரோதிகளையும் போக்கிற்றில்லையோ. சஅ.

அரு.— நாற்பத்தெட்டாம்பாட்டு:— தேவாசுரம்பொருதாய் - தேவாஸுரயுத்தத்தைப்பண்ணி தேவர்கள் விரோதியைப் போக்கினாயென்றபடி. சஅ.

செற்றதுவும்சேரா விரணியனைச், சென்றேற்றுப்
பெற்றதுவும்மாநிலம் பின்னைக்காய்—முற்றல்
முரியேற்றின்முன்னின்று மொய்ம்பொழித்தாய், மூரிச்
சுரியேறுசங்கினாய் சூழ்ந்து. சகூ.

அந்.— பின்னைக்காய் முற்றல் முரி ஏற்றின் முன் நின்று சூழ்ந்து மொய்ம்பு ஒழித்தாய்! (9) மூரி சுரி ஏறு சங்கினாய் செற்றதுவும்; சேரா இரணியனை (16) சென்று ஏற்று பெற்றதுவும் மா நிலம். (21)

அர்.— நப்பின்னைப்பிராட்டிக்காக வலியதாய்த் திரியாநின்ற எருதின் முன்னே யிருந்து ஆலோசித்து (அதின்) பலத்தைப் போக்கினவனே! (கூ) விசாலமாய் சுழிகளை யுடையதுமான ஸ்ரீபாஞ்சஜந்யமுடையவனே! (நீ) கொன்றதும் (தன்பக்தனோடு) பொருந்தாத ஹிரண்யனை; (கசு) மஹாபலியிடம்போய் தாநம் வாங்கிப் பெற்றதும் பெரிய பூமியை. (உக) சகூ.

வ்யா.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.— (செற்றதுவமித்யாதி) ஆஶ்ரிதரோடு சேராத ஹிரண்யனைக்கொன்றது அவனிழவுக்காகவென்றுமாம். (சென்றித்யாதி) மஹாபலிபக்கலிலே நீரேற்றுப்பெற்

றது பூமி. (பின்னைக்காயித்யாதி) நப்பின்னைப் பிராட்டிக்காகத் திண்ணியதாயுலாவாநின்ற ஏற்றினுடைய மிடுக்கையழித்தாய். (சூழ்ந்து) இடம்பார்த்துநின்று. (மூரிச்சுரி யித்யாதி) கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே! சகூ.

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு— சேரா - தன்னைச்சேராதே, ஆஸ்ரயியாதே; அவனிழக்கையாலே விரோதியான தேஹத்தைப் போக்கினனென்றபடி. முற்றல்-திண்ணியதாய், மூரி-ஸஞ்சாரியாய், மொய்ம்பு - மிடுக்கையுடைய ஏற்றின். மூரிச்சுரியென்று மிடுக்கையும் துளையையுமுடையசங்கு. சகூ.

சூழ்ந்ததுழாயலங்கல் சோதிமணிமுடிமால்
தாழ்ந்தவருவித்தடவரைவாய்—ஆழ்ந்த
மணிநீர்ச்சுனைவளர்ந்த மாமுதலைகொன்றான்
அணிநிலவண்ணத்தவன். ருo.

அந்.— சூழ்ந்த துழாய் அலங்கல் சோதி மணி முடி மால் அணி நீலவண்ணத்தவன் (9) தாழ்ந்த அருவி தடம் வரைவாய் ஆழ்ந்த மணி நீர் சுனை வளர்ந்த மா முதலை கொன்றான். (21)

அர்,—வளைத்துச்சாத்தின திருத்துழாய் மாலையையுடையனாய் உஜ்வலமான மணிகளிழைத்த கிரீடமுடையனாய் ஸர்வாதிகனாய் அழகிய நீலவர்ணத்தையுடையவனான ஸர்வேஸ்வரன், (கூ) பெருகாநின்ற அருவிகளையுடைய விசாலமான மலையிலுண்டாய் அழகாய் நிர்மலமான ஜலமுடையதான மடுவில் வ்ருத்தியடைந்த பெரிய முதலையைக் கொன்றான். (உக) ருo.

வ்யா.— ஐம்பதாம்பாட்டு.— (சூழ்ந்தவித்யாதி) ஆகமுதலியாக விட்ட திருத்துழாய்மாலையையும் ஆதிராஜ்யஸூசகமான மணிமுடியையுமுடையவன். (தாழ்ந்தவித்யாதி) தாழ்ந்த அருவிகளையுடைத்தாயிருந்துள்ளதடவரையிலே யாழ்ந்து, நிர்மலமானநீரையுடைத்தானசுனையிலேவளர்ந்த பெரியமுதலையை நீர்ப்புழுவென்றுபாராதே சினத்தோடே கொன்றான். (அணி நீலவண்ணத்தவன்) ஆஸ்ரித விரோதியான முதலை போயிற்றென்று ஸ்ரமஹரமான வடிவையுடையவன். ருo.

அரு.— ஐம்பதாம்பாட்டு.— "ஆகமுதலியாகவிட்ட" என்று வார்த்தைப்பாடு. ருo.

அவனேயருவரையா லாநிரைகள்காத்தான்
அவனேயணிமருதஞ் சாய்த்தான்—அவனே
கலங்காப்பெருநகரம் காட்டுவான்கண்டீர்
இலங்காபுரமெரித்தானெய்து. ருக.

அந்.—அரு வரையால் ஆ நிரைகள் காத்தான் அவனே.(6) அணி மருதம் சாய்த்தான் அவனே.எய்து இலங்காபுரம்எரித்தான் அவனே. (14) கலங்கா பெரு நகரம் காட்டுவான் அவனேகண்டீர். (19)

அர்.— அசைக்கவொண்ணாத மலையினால் பசுக் கூட்டங்களைக் காத்தவனுமவனே. (சு) இணைந்த மருதமரங்களை விழத்தள்ளினவனு மவனே. (பாணங்களினால்) அடித்து இலங்கையைக் கொளுத்தினவனும் (அழித்தவனும்) அவனே. (கச) குழப்பமற்ற விசாலமான ஸ்ரீவைகுண்டத்தை தர்சிப்பிக்கிறவனு மவனேகிடீர். (கக) ருக.

வ்யா.—ஐம்பத்தோராம்பாட்டு.— (அவனேயித்யாதி) வர்ஷத்தாலே நோவுபட்ட பசுக்கள் தன்னுடையரக்ஷணத்துக்குத் தான் ப்ரவர்த்தித்ததுண்டோ? அவனேயன்றோவென்று ஸஹகாரி நைரபேக்ஷ்யத்தைச்சொல்லுகிறது. (அவனேயணியித்யாதி) நிரபேக்ஷமாக மருதைச்சாய்த்தானுமவனே. (அவனே கலங்கா வித்யாதி) பரமபதம் அவனே காட்டக் காணுமத்தனை. ஸ்வயத்நத்தால் காண்பார்க்குக் காணப்போகாது. (கண்டீரித்யாதி) லங்கையை யழித்துப் பிராட்டியைப் பெறுகைக்கு யத்நம்பண்ணினானுந்தானே. ருக.

எய்தான்மராமரமேழுமிராமனாய்
எய்தானம்மான்மரியவேந்திழைக்காய்— எய்ததுவும்
தென்னிலங்கைக்கோன்வீழச்சென்றுகுறளுருவாய்
முன்னிலங்கைக்கொண்டான் முயன்று. ருஉ.

அந்.— இராமனாய் மராமரம் ஏழும் எய்தான். ஏந்திழைக்காய் அம்மான் மரிய எய்தான்.(8) எய்ததுவும். தென் இலங்கை கோன்வீழ முன் குறள் உருவாய் சென்று நிலம் முயன்று கைக்கொண்டான். (20)

அர்.— ஸ்ரீராமாவதாரமெடுத்து மராமரங்களேழையு மடித்தான். ஸீதாபிராட்டிக்காக அந்தமானைச் சாக வடித்தான். (அ) கீழே விழும்படி அடித்துத்தள்ளினது தென்திசையிலுள்ள இலங்கைக்

கரசனான இராவணனை. முற்காலத்தில் வாமந வேஷங்கொண்டு மஹாபலியிடம்சென்று பூமியை யத்நம்செய்து கைப்பற்றினன். (உ०)

வ்யா.— ஐம்பத்திரண்டாம்பாட்டு.— (எய்தானித்யாதி) ராமனாய் ஆஶ்ரிதருக்காக மராமர மேழையுமெய்தான். (எய்தானம்மானித்யாதி) மான்குட்டியென்று பாராதே பிராட்டிசொன்னாளென்று எய்தான். (எய்தலித்யாதி) எய்ததுவும் ராவணனைக்கொல்லுகைக்காக. (சென்றித்யாதி) குறளுருவாய்ச்சென்று மூன்றுலோகத்தையடங்கலும் கைக்கொண்டான். ருஉ.

முயன்றுதொழுநெஞ்செ மூரிநீர்வேலை
இயன்றமரத்தாலிலையின்மேலால்—பயின்றங்கோர்
மண்ணலங்கொள்வெள்ளத்து மாயக்குழவியாய்
தண்ணலங்கல்மாலையான் தாள். ருங.

அ்.— மூரி நீர் வேலை இயன்ற ஆலமரத்து இலையின்மேல் பயின்று (7) மண் நலம் கொள் வெள்ளத்து அங்கு ஓர் மாயக்குழவியாய் (14) அலங்கல் தண் மாலையான் தாள் நெஞ்சே ! முயன்று தொழு. (21)

அர்.—பரந்த ஜலத்தையுடைய ஸமுத்ரத்தில் பொருந்திமுளைத்திருக்கிற ஆலமரத்தி னிலைமேல் சயனித்திருந்தும், (எ) பூ ஸாரத்தை யபஹரித்த ப்ரவாஹத்திலிருந்த அவ்வாலிலையில் அத்விதீயமாய் ஆஶ்சர்யகரமானகுழந்தையாயிருந்தும், (கச) அசையாநின்ற குளிர்ந்த திருமாலையையுடையவனுமான ஶ்ரியःபதியினுடைய திருவடிகளை மனமே! ப்ரயத்நப்பட்டு ஆஶ்ரயி. (உக) ருங.

வ்யா.—அவ.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு—(முயன்று) துர்க்கடங்களைகடிப்பிக்க வல்லவன்; அவனை யாஶ்ரயியென்கிறார்.

(முயன்றுதொழுநெஞ்சே) யத்நம்பண்ணி யாஶ்ரயிக்கப்பார். (மூரிநீரித்யாதி)உலாவாநின்ற நீரையுடைத்தான கடலிலே யுண்டான மரத்தினுடைய * பல்லவமாயிருப்பதொரு ஆலிலையின்மேலே பயின்று சேதநர்க்குபோகோபகரண போகஸ்தாந போக்யமான பூமியை யழியாநின்ற வெள்ளத்திலே ஆஶ்சர்யமான பிள்ளையானவன். (தண்ணலங்கலித்யாதி) ஆலிலையின்மேலே கண்வளர்ந்தருளுகிறபோது பொகட்டமாலையுந்தானுமாய்க் கிடந்தபடி. அவனுடைய திருவடிகளை முயன்றுதொழுநெஞ்சே ருங.

* (பா) பவனான.

தாளால்சகடமுதைத்துப் பகடுந்தி
கீளாமருதிடைபோய்க்கேழலாய்—மீளாது
மண்ணகலங்கீண்டங்கோர் மாதுகந்தமார்பற்குப்
பெண்ணகலங்காதல்பெரிது. ருச.

அ்.— தாளால் சகடம் உதைத்து பகடு உந்தி கீளா மருது இடை போய் (9) கேழலாய் அங்கு மீளாது அகலம் மண் கீண்டு ஓர் மாது உகந்த மார்பற்கு அகலம் பெண் காதல் பெரிது. (23)

அர்.— திருவடிகளினால் சகடாஸுரனை யுதைத்துக் குவலயாபீடமென்கிறயானையைத் தள்ளி இணைபிரியாத மருதமரத்தின் நடுவே சென்று(அதைத்தள்ளி) (கூ)வராஹாவதாரமெடுத்து அவ்வண்டபித்தியில் கீழேவிழாமலொட்டிக்கொண்டிருந்த பரந்த பூமியைப்பிரித்தெடுத்து அத்விதீயையான பூமிப்பிராட்டியை யாசைப்பட்ட அழகியதிருமார்பையுடைய ஸர்வேஸ்வரனுக்கு அபரிச்சின்னமான குணங்களையுடைய பெரியபிராட்டியார்விஷயத்தில் ப்ரேம மதிகமாயிருக்கும். (உ௩) (ருச)

வ்யா.— ஐம்பத்துநாலாம்பாட்டு.— (தாளால் சகடமுதைத்து) திருவடிகளாலே சகடாஸுரநிரஸநம்பண்ணி. (பகடுந்தி) குவலயாபீடத்தைத்தள்ளி. (கீளாமருதிடைபோய்) இரண்டா யருகே நின்ற மருதூடேபோய். (கீளா) பிளவாமருதிடைபோயென்றுமாம். (கேழலாயித்யாதி) ஸ்ரீவராஹரூபியாய் மீளாதபடிக்கீடாக பூமியைக்கிண்டு ஸ்ரீபூமிப்பிராட்டியை யுகந்தமார்பற்கு. (பெண்ணகலங்காதல் பெரிது) பிராட்டிபக்கலிலே ஸ்நேஹம் பெரிது. ருச.

பெரியவரைமார்பில் பேராரம்பூண்டு
கரியமுகிலிடைமின்போலத்—* தெரியுங்கால்
பாணொடுங்கவண்டறையும்பங்கயமே, மற்றவன்தன்
நீணெடுங்கண்காட்டும்நிறம். ருரு.

அ்.—பெரிய வரை மார்பில் பேர் ஆரம் பூண்டு தெரியுங்கால் (7) கரிய முகில் இடை மின்போல. (11) மற்று பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயம் (17) அவன் தன் நீள் நெடும் கண் நிறம் காட்டும் (23)

அர்.— விசாலமாய் மலைபோன்ற திருமார்பில் பெரிய முத்துமாலையை யணிந்த (ஸர்வேஸ்வரனை) த்யாநித்தால் (எ) கரு மேகத்தி

* (பா) திரியுங்கால்.

னிடையில் மின்னாற்போலிருக்கும். (கக) இன்னும், (உலகத்திலுள்ள) பாட்டுக்களெல்லாம் தோற்கும் படி வண்டுகள் பாடாநின்ற தாமர ஸபுஷ்பமானது (கஎ) அந்தஸர்வேஶ்வரனுடைய நீண்டு விசாலமாயிருக்கிற திருக்கண்களினுடைய ஸௌந்தர்யத்தைக் காட்டாநிற்கும். (உ௩) ௫௫.

வ்யா.— ஐம்பத்தைந்தாம்பாட்டு — (பெரியவரைமார்பில்) ஆரத்தால் பரிச்சேதிக்கப் போகாதமார்பில். (பேராரம்பூண்டு) மடித்துப்பூணவேண்டும் பெரியஹாரத்தைப்பூண்டு. (கரியமுகிலிடைமின்போல) மார்புக்குமாரத்துக்கும் த்ருஷ்டாந்தம். மேகத்திலே மின்னாற்போலே ஶ்யாமமான திருமார்பிலே ஹாரங்கிடக்கபடி. (தெரியுங்கால்) அநுஸந்திக்கும்போது. "திரியுங்கால்" என்றுபாடமுமாம். (பாணொடுங்கவித்யாதி) பாண்சாதியாக ஒடுங்கும்படி பாடாநின்ற வண்டையுடைத்தான பங்கயமே. (மற்றவனித்யாதி.) அவனுடைய பரிச்சேதிக்கப்போகாத கண்ணினுடைய நிறத்தைக்காட்டா நின்றது. ௫௫.

நிறம்வெளிதுசெய்து பசிதுகரிதென்று
இறையுருவம்யாமறியோமெண்ணில்—*நிறைவுடைய
நாமங்கைதானும் நலமபுகழவல்லளே
பூமங்கைகேள்வன்பொலிவு. ௫௬.

அந்.—இறை உருவம் நிறம எண்ணில் (4) வெளிது செய்து பசிது கரிது என்று யாம் அறியோம். (11) நிறைவுடைய நாமங்கை தானும் பூமங்கை கேள்வன் பொலிவு நலம் புகழ வல்லளே? (19)

அர்.— எமபெருமானுடைய திருமேனியின் ஸௌந்தர்யத்தை யாராயில் (ச) வெளுத்திருக்குப; சிவந்திருக்கும்; பசுமையாயிருக்கும்; கறுத்திருக்கும; என்று நாம அறியமாட்டோம். (கக) (ஜ்ஞாந) பூர்த்தியையுடைய வாக்தேவியான ஸரஸ்வதிதான், பூமகளான பெரியபிராட்டியின் வல்லபனான ஸர்வேஶ்வரன் பெருமையை நன்றாய்ப் புகழ சக்தையாவளோ? (ஆகமாட்டாள்). (கக) ௫௬.

வ்யா.— அவ.— ஐம்பத்தாறாம்பாட்டு.—(நிறம்) என்னுடைய ஸ்வாமியினுடைய ரூபத்தை இன்னபடியிருக்குமென்று சொல்லப்போகாது. ப்ரயோஜகத்தைச் சொல்லுமித்தனையென்கிறார்.

* (பா) நிறமுடைய.

(நிறமித்யாதி) இறையினுடைய வடிவானது வெளுப்பு, சிவப்பு, பசுமை, கறுப்பு, என்றெண்ணில் நாமறியோம். (நிறையித்யாதி) நாமேமாட்டாமேதோமாகில்மதிப்புடையளானஸரஸ்வதிஅங்குத்தைக்குத்தரமாகப் புகழவல்லளோ. (பூமங்கைகேள்வன் பொலிவு) புகழப்போகாமை யென்னென்னில்; ஶ்ரிய:பதியுடைய ஸம்ருத்தியைச்சிலரால் பேசப்போமோ? ருசா

பொலிந்திருண்டகார்வானில் மின்னேபோல்தோன்றி
மலிந்துதிருவிருந்தமார்பன்—பொலிந்து
கருடன்மேற்கொண்ட கரியான்கழலே
தெருடன்மேற்கண்டாய்தெளி. ருஎ.

அ—பொலிந்து இருண்ட கார் வானில் மின்போல் தோன்றி (6) திரு மலிந்து இருந்த மார்பன் (10) பொலிந்து கருடன்மேல் கொண்ட கரியான் கழல் தெருள்தன் மேல் தெளிகண்டாய். (18)

அர்.—திரண்டும் இருண்டுமிருக்கிற மழைகாலத்து மேகத்தில் மின்ன மின்னலைப்போல் ப்ரகாசித்துக்கொண்டு (சு) பெரியபிராட்டியார் ஸமஸ்தகல்யாணகுணபூர்ணையாய் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்பையுடையவனாய் (கo) சிறப்பையுடைத்தாயிருக்கிற பெரிய திருவடியின்மேலே எழுந்தருளியிருக்கிற ஶ்யாமநிறத்தனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் பண்ணின பக்திதான் ஸர்வோத்க்ருஷ்டமென்றறி. (கஅ) ருஎ.

வ்யா.— அவ.— ஐம்பத்தேழாம்பாட்டு.— (பொலிந்து) கருடவாஹநனுடைய திருவடிகளையாஶ்ரயி யென்கிறது.

(பொலிந்தித்யாதி) ஸம்ருத்தமாயிருண்ட கார்காலத்திலே மேகத்தின் மின்போலே தோற்றித் தண்ணீர்தண்ணீரென்றுசைப்படாநின்ற பெரியபிராட்டியாருகந்த திருமார்பையுடையவன். (பொலிந்தித்யாதி) மஹாமேருவிலே யொரு அஞ்ஜநகிரியிருந்தாற்போலே ஸம்ருத்தனான பெரியதிருவடிமேலே யிருந்தவனுடைய திருவடிகளிலேயுண்டான. (தெருடனித்யாதி) ஜ்ஞாநவிபாகை யானபக்தியையெல்லாவற்றுக்கும் மேலாகக்கொண்டநுஸந்தி, ஓலக்கவார்த்தையென்றிராதேகொள். ருஎ.

அரு.— ஐம்பத்தேழாம்பாட்டு.—தெருடன்மேல் - தெருள் தன் மேலே. மேலான தெருள்-ஜ்ஞாநவிபாகையானபக்தி. தெருள்-ஜ்ஞாநமாய், ஜ்ஞாநவிசேஷமான பக்தியென்றபடி. கண்டாய் தெளி-திருவடிகளிலே யுண்டான பக்தியை மேலாகக்கொண்ட நுஸந்தியென்றபடி. ருஎ.

தெளிந்தசிலாதலத்தின் மேலிருந்தமந்தி
அளிந்தகடுவனையேநோக்கி—விளங்கிய
வெண்மதியந்தாவென்னும்வேங்கடமே,மேலொருநாள்
மண்மதியில்கொண்டுகந்தான் வாழ்வு. ருஅ.

அந்.—தெளிந்த சிலாதலத்தின்மேல் இருந்த மந்தி அளிந்த கடுவனை நோக்கி (7) வெண் விளங்கிய மதியம் தாஎன்னும் வேங்கடமே (12) மேலொருநாள் மண் மதியில் கொண்டு உகந்தான் வாழ்வு. (18)

அர்.—நிர்மலமான கற்பாறைமேலிருக்கிற பெண்குரங்கு (தன்னிடத்தில்) ஸ்நேஹித்திருக்கிற ஆண்குரங்கைப் பார்த்து (எ) வெண்மையாயொளிவீசுகிற சந்த்ரனைக்(கொண்டு)கொடுவென்றுசொல்லாநின்ற திருமலையே (கஉ) முற்காலத்தில் பூமியை (த்தன்) யுக்தியினால் ஸ்வீகரித்து ஸந்தோஷித்தஸர்வேஸ்வரன் சிறப்புடனே வர்த்திக்கும் தேசம். (கஅ) ருஅ.

வ்யா.— அவ.— ஐம்பத்தெட்டாம் பாட்டு.— (தெளிந்த) "ஊஷிநயாவஸா—அஸ்மிந்மயாஸார்த்தம்" என்று பிராட்டி செய்த செயலைத் திருமலையில் திர்யக்குக்களும் அநுவர்த்தியாநின்றதென்கிறார்.

(தெளிந்தவித்யாதி)ஸ்படிகப்பாறையிலேயிருந்த பெண்குரங்கு. (அளிந்தவித்யாதி) தன்பக்கலிலே ஸ்நேஹித்த ஆண்குரங்கை நோக்கி. (விளங்கியவித்யாதி) ஊடினால் ஒருகடகர் பொருந்தவிட வேண்டாதே தானே சந்த்ரனுடைய மேற்புறமாகையாலே களங்கமற்று உஜ்வலமாயிருந்துள்ள சந்த்ரமண்டலத்தைத் தாவென்றுநின்றது. இழிந்துவாங்கவேண்டுங்காணும் திருமலையினுடைய உயர்த்தி (மேலித்யாதி) பண்டொருநாள் பூமியை மதியாலேகொண்டு அலப்யலாபம்பெற்றுனு யுகந்தவனுடைய ஐஸ்வர்யம். (ருஅ)

வாழும்வகையறிந்தேன்மைபோல் நெடுவரைவாய்
தாழுமருவிபோல்தார்கிடப்ப—சூழும்
திருமாமணிவண்ணன் செங்கண்மால், எங்கள்
பெருமானடிசேரப்பெற்று. ௫௯.

அ௩.—மைபோல் நெடு வரைவாய் தாழும் அருவிபோல் தார் கிடப்ப (7) சூழும் திரு மா மணி வண்ணன் செம் கண் மால் (15) எங்கள் பெருமான் அடி சேரப்பெற்று வாழும்வகை அறிந்தேன்.(21)

அர்.—அஞ்ஜநம்போலிருண்ட பெரிய மலைப்புறத்தில் வழிகிற அருவியைப்போல் திருமாலை ப்ரகாசிக்க (௭) (அதைக்கண்டாசைப்பட்டு அங்கே) நித்யவாஸம்செய்கிறபெரியபிராட்டியாரையுடையனாய் ஶ்லாக்யமான நீலமணிபோன்ற திருமேனியையுடையனாய் சிவந்த திருக்கண்களையுடையனாய் ஸர்வாதிகனாய் (௧௫) எமக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளைப் பற்றி வாழ்க்கைக்கு உபாயத்தைத் தெரிந்துகொண்டேன். (௨௧) ௫௯.

வ்யா.— ஐம்பத்தொன்பதாம்பாட்டு.— (வாழும்வகையறிந்தேன்) ஸர்வேஶ்வரனைப்பற்றி ஆத்மாவுக்குவகுத்த ஸம்பத்தென்று வ்யுத்பத்திபண்ணினேன். (மைபோலித்யாதி) அஞ்ஜநகிரியிலே பாயாநின்ற அருவிபோல் திருமார்பிலே சாத்தினதோள்மாலை கிடப்ப. (சூழுந்திருமாமணிவண்ணன்) அதிலே ஆசைப்படாநின்ற பெரியபிராட்டியாரையுடையனாய் ஶ்ரமஹரமான வடிவையுடையவன். (செங்கண்மால்) ஈஶ்வரத்வத்தை ஸூசிப்பியாநின்ற கண்களையுடையவன். (எங்களித்யாதி) போக்யபூதனாய் என்னையுடையவனாய் வகுத்தவனுடைய திருவடிகளைக் கிட்டப்பெற்று. “பௌஸி நாஸாத்வ்ரண ஸ்ருதி - புத்திநாசாத்ப்ரணஶ்யதி” என்று சப்தாதிகளைப் பற்றாதே வாழும் ப்ரகாரமறிந்தேன். ௫௯.

பெற்றம்பிணைமருதம் பேய்முலைமாச்சகடம்
முற்றக்காத்தூடுபோ யுண்டுதைத்துக்—கற்றுக்
குணிலைவிளங்கனிக்குக்கொண்டெறிந்தான், வெற்றிப்
பணிலம்வாய்வைத் துகந்தான்பண்டு. ௬௰.

அ௩.—பெற்றம் முற்ற காத்து பிணை மருதம் ஊடு போய் (7) பேய் முலை உண்டு மா சகடம் உதைத்து (13) கன்று குணிலை

கொண்டு விளங்கனிக்கு எறிந்தான் பண்டு வெற்றி பணிலம் வாய் வைத்து உகந்தான். (23)

அர்.—பசுக்களை யெல்லாம் ரக்ஷித்து இணைந்த மருதமரத்தின் நடுவே சென்று (எ) பூதனையின் ஸ்தநத்தைப் பாநம்செய்து பெரிய சகடாஸுரனை யுதைத்து (௧௩) வத்ஸாஸுரனாகிய குறுந்தடியை எடுத்துக் கபித்தாஸுரன்மேல் எறிந்த ஸர்வேச்வரன் முன்பு ஜயப்ரதமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்தில்வைத்துஸந்தோஷித்தான். (உ௩) ௯௦.

வ்யா.— அவ.— அநுபநாம்பாட்டு.— (பெற்றம்) ப்ரதிபந்தகங்கள்போனாலன்றோ வாழும்படி யாவதென்னில்; அவன்தானே ப்ரதிபந்தகங்களைப் போக்குமென்கிறது.

(பெற்றமித்யாதி) இது நிரல்நிறை. கன்றாகிய எறிகருவியைக் கொண்டு விளங்கனிக்குக் கொண்டெறிந்தவன். வெற்றியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாயிலேவைத் துகந்தவன், பண்டுண்டான ப்ரதிபந்தகங்களை யெல்லாம்போக்கும். ௯௦.

பண்டெல்லாம்வேங்கடம் பாற்கடல்வைகுந்தம்
கொண்டங்குறைவார்க்குக் கோயில்போல்—வண்டு
வளங்கிளரும்நீள்சோலைவண்பூங்கடிகை
இளங்குமரன்தன் விண்ணகர். ௯௧.

அந்.—பண்டெல்லாம் வைகுந்தம் கொண்டு அங்கு உறைவார்க்கு (5) வேங்கடம் பாற்கடல் வண்டு வளம் கிளரும் நீள் சோலை வண் பூ கடிகை (15) இளங்குமரன்தன் விண்ணகர் கோயில் போல். (18)

அர்.—முன்பெல்லாம் ஸ்ரீவைகுண்டத்தைக் கோயிலாகக்கொண்டு அங்கு நித்யவாஸம் செய்கிற ஸர்வேச்வரனுக்கு, (௫) (இப்போது) திருமலை திருப்பாற்கடல் வண்டுகள் கும்பல்கும்பலாய்க் கிளம்புகிற விசாலமான தோபபுங்களையும அழகிய புஷ்பங்களையுமுடைய திருக்கடிகை (௧௫) நித்யயௌவநமுடையஸ்ரியஃபதிக்கிருப்பிடமான திருவிண்ணகர் (ஆகிய இவைகள் கோயில்போலே யிருக்கின்றன. (௧௮) ௯௧.

வ்யா.— அவ — அநுபத்தோராம்பாட்டு.—(பண்டெல்லாமித்யாதி) ப்ரதிபந்தகங்களைப்போக்குமளவேயோ? பரமபதத்தைக்கல

விருக்கையாகவுடையவன் ஸம்ஸாரத்திலே உகந்தருளின திருப்பதிகளைத் தனக்கிருப்பிடமாகக்கொள்ளுகிறது ஆஸ்ரிதார்த்தமாகவன்றோ வென்கிறார்.

(வேங்கடம்பாற்கடல் வைகுந்தம் கொண்டங்குறைவார்க்கு) "திருமால்வைகுந்தமே தண்திருவேங்கடமே" என்று பரமபதத்தோபாதியாகத் திருமலையைச்சொல்லுகிறது. வைகுந்தங்கோயிலாகக்கொண்டு அங்குறைவார்க்கு, வேங்கடம், பாற்கடல், வண்டுவளங்கிளரும் நீள்சோலைவண்பூங்கடிகை, விண்ணகரானவிவை இளங்குமரனை தனக்கு இப்போது கோயில்போல். சுக.

அரு.— அறுபத்தோராம்பாட்டு.— வேங்கடம்பாற்கடல் வைகுந்தம் கோயில் பண்டெல்லாம்; இப்போதிந்த திருப்பதிகள் கோயிலென்றபடி. வைகுந்தத்தோடு வேங்கடத்தைக் கூட்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (திருமாலித்யாதி). இது கீழும்மேலுங் கூடும். சுக

விண்ணகரம்வெஃகாவிரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகரம்மாமாடவேளுக்கை—மண்ணகத்த
தென்குடந்தைதேனார்திருவரங்கம் தென்கோட்டி
தன்குடங்கைநீரேற்றான் தாழ்வு. சுஉ.

அந்.—விண்ணகரம் வெஃகா விரி திரை நீர் வேங்கடம் (6) மண் நகரம் மா மாடம் வேளுக்கை (11) மண் அகத்த தென் குடந்தை தேன் ஆர் திருவரங்கம் (18) தென் கோட்டி தன் குடங்கை நீர் ஏற்றான் தாழ்வு. (25)

அர்.—திருவிண்ணகர் திருவெஃகா பரந்து அலைமோதுகிற ஜலத்தையுடைய திருமலை (சு) பூலோகத்தில் ஸ்ரீவைகுண்டம்போல்விளங்குகிற பெரிய மண்டபங்களையுடைய வேளுக்கை (கக) பூலோகத்திலிருக்கிற ஸ்ப்ருஹணீயமான திருக்குடந்தைதேனினால் பூர்ணமான சோலைகளையுடைய திருவரங்கம் (கஅ) தென்திசையிலுள்ள திருக்கோட்டியூர் (இவைகள்) தன் சிறங்கையில் தாநஜலத்தை வாங்கின ஸ்ரியஃபதிசௌலப்யத்துடனெழுந்தருளியிருக்கும் தேசங்கள். (உரு)

வ்யா.— அவ.— அறுபத்திரண்டாம்பாட்டு.— (விண்ணகரம்) கேவலம் ஸம்ஸாரத்திலே நின்றயாத்ரமோ? பரமபதத்திலிருப்புமனிச்சுக்காய்தாழ்வோடே கூடவிருப்பது உகந்தருளின தேசத்திலே யன்றோவென்கிறார்.

(விண்ணகரமித்யாதி) விண்ணகரம், வெஃகா, விரிதிரைநீர் வேங்கடம். திருமலையென்றுலொரு விசேஷணரஹிதமாகச் சொல்லமாட்டார். (மண்ணகரமித்யாதி) போக்யதைகுறைவற்றகோயில். (தன்குடங்கையித்யாதி) மஹாபலிபக்கலிலே தன்னுடைமைபெறுகைக்கு அர்த்தித்வம் தோற்றும்படி அர்த்தியாய் நின்றாற்போலே உகந்தருளின தேசங்களிலே தாழ்வுதோற்றும்படி நின்றான். ௬௨.

அரு.—அறுபத்திரண்டாம்பாட்டு.— மனிச்சுக்கு—ஹர்ஷத்துக்கு; ஸௌஜந்யத்துக்காக வென்றபடி. மண்ணுக்கு நகரமென்கையாலே மண்ணிலுண்டான போக்யதையால் குறைவில்லை யென்றபடி. ௬௨.

தாழ்சடையும்நீண்முடியு மொண்மழுவும்சக்கரமும்
சூழரவும்பொன்னாணுந்தோன்றுமால்—சூழும்
திரண்டருவிபாயுந்திருமலை மேலெந்தைக்கு
இரண்டுருவு மொன்றாயிசைந்து. ௬௩.

அந்.— சூழும் திரண்டு அருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு (6) தாழ் சடையும் நீள் முடியும் ஒண் மழுவும் சக்கரமும் (13) சூழ் அரவும் பொன் நாணும் இரண்டு உருவும் இசைந்து ஒன்றாய் தோன்றும். ஆல். (23)

அர் — நாற்புறத்திலும்சுற்றிக்கொண்டிருக்கிற திரண்ட அருவிகள் பாயாநின்ற திருமலைமேலெழுந்தருளியிருக்கிற என்னுடைய ஸ்வாமிக்கு (௬) தொங்குகிற சடையும் நீண்ட திருவபிஷேகமும் அழகிய மழுவென்கிற ஆயுதமும் திருவாழியும் (௧௩) (இடுப்பில்) சுற்றியிருக்கிற பாம்பும் ஸுவர்ணமயமான கடிஸூத்ரமும் ஆகியஇவ்விரண்டு ஹரஹரிரூபமும் அமர்ந்து ஒருபடியாய்த் தோற்றுகின்றது. ஆஸ்சர்யம். (௨௩) ௬௩.

வ்யா — அவ.— அறுபத்துமூன்றாம்பாட்டு.—(தாழ்சடையும்) ஸித்தமானவேஷத்தையும் ஸாதகமான வேஷத்தையும் ஒக்கதரிப்பதே! இதொருசீலவத்தையே! என்கிறார்.

(தாழ்சடையித்யாதி) சூழத்திரண்டருவி பாயாநின்றதிருமலைமேலே நிற்கிற என்னுடைய ஸ்வாமிக்கு. (இரண்டுருவு மொன்றாயிசைந்து) ஒன்று ஸாதகமாய் ஒன்று ஸித்தமானால் சேராச்சேர்த்தியாயிருக்குமோவென்னில்; இரண்டுருவுமிசைந்தொன்றாயிருக்கும். பொருந்தியிருக்கும். ௬௩.

இசைந்தவரவமும் வெற்புங்கடலும்
பசைந்தங்கமுது * படுப்ப—அசைந்து
கடைந்தவருத்தமோ கச்சிவெஃகாவில்
கிடந்திருந்துநின்றதுவுமங்கு. கூசு.

அங்.—கச்சி வெஃகாவில் கிடந்து அங்கு இருந்து நின்றதுவும், (5) இசைந்த அரவமும் வெற்பும் கடலும் அங்கு அமுது படுப்ப (12) பசைந்து அசைந்து கடைந்த வருத்தமோ? (16)

அர்.—காஞ்சிநகரத்திலுள்ள திருவெஃகாவில் பள்ளிகொண்டு அக்கச்சியில் (ஹஸ்திகிரியில்) எழுந்தருளியிருந்து (திருப்பாடகத்தில்) நின்றதும், (ரு) (ஸமுத்ரமதநத்தில் ஒருப்பட்ட வாஸுகியையும் மந்தரபர்வதத்தையும் திருப்பாற்கடலையும (சேர்த்து) அந்தஸமுத்ரத்தில் அம்ருதத்தை யுண்டாக்கைக்காக (கஉ) விருப்புற்று ஆடியாடிக் கடைந்த ஸ்ரமத்தினாலேயோ! (கசு) கூச.

வ்யா.— அறுபத்துநாலாம்பாட்டு.— (இசைந்தவித்யாதி) கடலிலே ஒருமலையை நட்டு ஒருபாம்பைச்சுற்றிக் கடையாநின்றால் சேராச்சேர்த்தியாயிருக்குமோவென்றால்; (இசைந்த) தன்னில் பொருந்தியிருந்தபடி. (பசைந்தங்கமுதுபடுப்ப) அநிலேயம்ருதம்படும்படிக் கிடாகப்பசைகொடுத்து. (அசைந்தித்யாதி) உலாவிக்கடைந்த வருத்தமோ? (கச்சியித்யாதி) திருக்கச்சியிலும் திருவெஃகாவிலும் கிடப்பது இருப்பது நிற்பதாகிறது தனியே கடலைக்கடைந்தத்தாலே திருமேனியிலே பிறந்த ஆயாஸமோ? கூச.

அரு.— அறுபத்துநாலாம்பாட்டு.— பசைகொடுத்து – பக்வம் பண்ணி. அம்ருதமுண்டாம்படி அதுக்குவேண்டும் ஸாதநங்களையெல்லாமுண்டாக்கி யென்றபடி. கூச.

= அங்கற்கிடரின்றியந்திப்பொழுதத்து
மங்கவிரணியனதாகத்தைப்—பொங்கி
அரியுருவமாய்ப்பிளந்தவம்மானவனே
கரியுருவங்கொம்பொசித்தான்காய்ந்து. கூரு.

அங்.—அங்கற்கு இடர் இன்றி அந்திப்பொழுதத்து அரியுருவமாய் பொங்கி (6) இரணியனது ஆகத்தை மங்க பிளந்த அம்மான் அவனே கரியுருவம் கொம்பு காய்ந்து ஒசித்தான். (16)

* (பா) படைப்ப. = (பா) அங்கக்கிடரின்றி.

அர்.—பிள்ளையாகிய ப்ரஹ்லாதனுடைய ஆபத்தைப் போக்குகைக்காக ஸந்த்யாகாலத்தில் நரஸிம்ஹனாய் வ்ருத்தியடைந்து (ரூ) ஹிரண்யாஸுரனுடைய சரீரத்தை யழியும்படி கிழித்துப்போகட்ட ஸ்வாமியான அந்தஸ்ரியஃபதியே குவலயா பீடத்தின் தந்தத்தைக் கோபித்து முறித்தவன். (கரூ) சாரு,

வ்யா.— அறுபத்தைந்தாம்பாட்டு.—(அங்கற்கிடரின்றியித்யாதி) பிள்ளையுடைய விடாய்தீர "அங்கக்கிடரின்றி" என்று பாடமாகில், அவ்விடத்தில்விடாய்தீர.(அந்திப்பொழுதத்து)அஸுரர்க்குபலம்வர்த்திக்கும் காலத்திலே.(மங்கவிரணியனதாகத்தை) ஹிரண்யனுடைய ஹ்ருதயமானது மங்கிப்போம்படிக்கீடாக.(பொங்கியித்யாதி)"பிறையெயிற்றன்றடலரியாய்ப் பெருகினானை" என்னும்படி. (அவனேயித்யாதி) அவனேகுவலயாபீடத்தினுடைய கொம்பை யொசித்தான். (காய்ந்து) சீற்றமில்லாதவன்சீறி. சாரு.

அரு.— அறுபத்தைந்தாம்பாட்டு,—அங்கர்-அங்கத்தையுடைய பிள்ளை. அங்கு அக்கிடர்-அவ்விடத்திலந்தவிடாய்தீரவென்று பாடாந்தரம். சாரு.

காய்ந்திருளைமாற்றிக்கதிரிலகுமாமணிகள்
ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப--வாய்ந்த
மதுகைடபரும்வயிறுருகிமாண்டார்
அதுகேடவர்க்கிறுதியாங்கு. சாசு.

அந்.—இருளை காய்ந்து மாற்றி கதிர் இலகு மா மணிகள் ஏய்ந்த பணம் கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப (11) வாய்ந்த மதுகைடபரும் வயிறு உருகி மாண்டார். ஆங்கு அது அவர்க்கு கேடு இறுதி. (21)

அர்.—இருளைக் கோபித்துப் போக்கி ஒளி வீசுகிற ஶ்லாக்யமான மாணிக்கங்கள் சேர்ந்த படத்தினுடைய கிரணங்களின்மேலே (ஸர்வேஶ்வரன்) பெருமூச்சு விட (கக) (அப்போது) அங்குவந்த மதுகைடபர்களென்கிறஇரண்டரக்கர்களும் உடல் கரைந்து செத்தார்கள். அவ்விடத்தில் வந்தது அவர்களுக்கு (உண்டான) வாழ்வுக்கும் கெடுதி. (பிழைப்புக்கும) கெடுதி. (உக) சாசு.

வ்யா.— அவ.— அறுபத்தாறாம்பாட்டு.— (காய்ந்து) உணர்த்தியுண்டானபோது விரோதிநிரஸநம்பண்ணினதோரேற்றமோ! அவதாநமின்றிக்கேயிருக்கச்செய்தே விரோதிகளை முடிக்கவல்லவனுக் கென்கிறார்.

(காய்ந்திருளைமாற்றி) சிறியிருளைப்போக்கி. (கதிரிலகித்யாதி) ஒளிவிடாநின்றுள்ள மணிகள்சேர்ந்த பணத்தினுண்டான தேஜஸ்ஸின்மேலே நெடுமூச்சுவிட.(வாய்ந்தவித்யாதி)கிட்டினமதுகைடபர்கள் வயிறுருகிமுடிந்தார்கள். (அதுகேடித்யாதி) "என்றுமென்பிள்ளைக்குத்தீமைகள் செய்வார்களங்ஙனமாவர்களே". சாசா.

அரு.— அறுபத்தாறாமபாட்டு.— கண்வளர்ந்தருளுகிறபோது ஸ்வாஸத்தாலே முடிக்கையாலே அவதாரமின்றியென்கிறது. திருவநந்தாழ்வானுடைய ஸ்வாஸத்தாலே என்றுஞ்சொல்லுவர்கள். இவ்விடத்துக்குப் பெருமாளுடைய ஸ்வாஸமேயாகக்கடவது. ஆங்கு- அந்தஅவஸ்தையிலே. இறுதியானகேடு-முடிவானகேடு.இதெப்படியென்ன, இவ்விடம்போலே என்கிறார் (என்றுமென்பிள்ளைக்கித்யாதி). சாசா.

> ஆங்குமலரும் குவியுமாலுந்திவாய்
> ஓங்குகமலத்தினொண்போது--- ஆங்கைத்
> திகிரிசுடரென்றும்வெண்சங்கம், வானில்
> பகருமதியென்றும்பார்த்து. சஎ.

அந்.—மால் உந்தி வாய் ஓங்கு கமலத்தின் ஒண்போது(7) ஆம் கை திகிரி சுடர் என்றும் (12) வெண் சங்கம் வானில் பகரும் மதி என்றும் பார்த்து ஆங்கு மலரும்; குவியும. (22.

அர்.—ஸர்வேஸ்வரனுடைய திருநாபியில் முளைத்து உயர்ந்து வளராநின்ற தாமரையினழகிய பூவானது, (எ) அழகியதிருக்கையிலிருக்கிற திருவாழியை ஸூர்யனென்றும் (கஉ) வெண்மையான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஆகாசத்தில் விளங்குகிற சந்த்ரனென்றும் பார்த்து அப்போது விகஸிக்கும்; மூடிக்கொள்ளும். (உஉ) சஎ.

வ்யா.—அவ.—அறுபத்தேழாமபாட்டு.—(ஆங்கு)ஹிரண்யனும் மதுகைடபர்களும முடிந்தபின்பு கண்வளரும் போதையழகையநுபவிக்கிறார்-

(உந்திவாயித்யாதி) திருநாபிகமலத்திலே ஓங்கியிருந்துள்ள அழகியதான தாமரைப்பூ.(ஆங்கையித்யாதி)கையில்திருவாழியை ஆதித்யனென்றும. (வெண்சங்கமித்யாதி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஆகாசத்திலே விளங்காநின்றுள்ள சந்த்ரனென்றும்பார்த்து - அநுஸந்தித்து. (ஆங்குமலருங்குவியுமால்) இரண்டுகாலத்திலே பிறக்கக்கடவ அவ்விரண்டவஸ்தையானது யுகபத் உண்டாகாநின்றது. சஎ.

அரு.— அறுபத்தேழாம்பாட்டு.— ஆங்கை-அங்கை என்றாய், அழகியகை-திகிரி. திருவாழி-ஆங்கு - அந்த அவஸ்த்தையிலே. ஆல்-ஆச்சர்யம். ௬௭.

பார்த்தகடுவன்சுனைநீர்நிழற்கண்டு
பேர்த்தோர்கடுவனெனப்பேர்ந்து—கார்த்த
களங்கனிக்குக்கைநீட்டும்வேங்கடமே, மேனாள்
விளங்கனிக்குக்கன்றெறிந்தான்வெற்பு. ௬௮.

அந்.—சுனை நீர் பார்த்த கடுவன் நிழல் கண்டு (6) பேர்த்தோர் கடுவன் என பேர்ந்து கார்த்த களங்கனிக்கு கைநீட்டும் வேங்கடமே (14) மேல்நாள் விளங்கனிக்கு கன்று எறிந்தான் வெற்பு. (19)

அர்.— மலையூற்றின் ஜலத்தைப்பார்த்த குரங்கு (அதில்தன்) நிழலைப்பார்த்து (௯) தனக்கெதிரியாகிய குரங்கென்று நினைத்து (இதற்குள்) கறுத்த களாப்பழத்துக்காகக் கைநீட்டாநிற்கிற திருமலையே (௧௪) முற்காலத்தில் விளாம்பழத்துக்காகக் கன்றை வீசிப்போகட்ட க்ருஷ்ணன் நித்யவாஸம்செய்யும்மலை. (௧௯) ௬௮.

வ்யா.—அறுபத்தெட்டாம்பாட்டு.—(பார்த்தவித்யாதி) சுனைநீரிலேகடுவனானது தன்னுடைய நிழலைக்கண்டு. (பேர்த்தோரித்யாதி) வேறே தனக்கெதிரியான கடுவனென்று பெயர்ந்து, (கார்த்தவித்யாதி) பின்னையும் தன்னுடைய சாபலத்தாலே அருகில்களாப்பழத்தையறுத்துத்தாவென்று கைநீட்டாநிற்கும் திருமலை. (மேனாளித்யாதி) பண்டுகன்றைக்கொண்டு விளங்கனிக்கெறிந்தவனுடையமலை.

அரு.—அறுபத்தெட்டாம்பாட்டு.—கடுவன்-ஆண்குரங்கு. பேர்ந்து-பயத்தாலே அப்புறத்தே பேர்ந்து. கார்த்த-கறுத்த. "அறுத்துத்தா" என்று அந்தநிழலிலேகண்ட தன்னையே நீட்டிக்கிடக்குமென்றபடி. களங்கனியும் அதினண்டையிலே நிழலிலேதோற்றும். ௬௮.

வெற்பென்றுவேங்கடம்பாடும், வியன்துழாய்
கற்பென்றுசூடுங்கருங்குழல்மேல் — மற்பொன்ற
நீண்டதோள்மால்கிடந்தநீள்கடல்நீராடுவான்
பூண்டநாளெல்லாம்புகும். ௬௯.

அந்.—வெற்பு என்று வேங்கடம் பாடும் (4) வியன் துழாய் கற்பு என்று கரும் குழல் மேல் சூடும். (11) மல் பொன்ற நீண்ட தோள் மால் கிடந்த நீள் கடல் நீராடுவான் பூண்ட நாளெல்லாம் புகும். (23)

அர்.—“மலை” என்றுசொல்லப்புகில் திருவேங்கடத்தைப் பாடுங்கோள். (௪) ஆஸ்சர்யகரமான திருத்துழாய் வகுத்தது என்றுநினைத்து கறுத்த மயிர்முடிமேல் சூடுங்கோள். (௯௯) மல்லரைக் கொன்ற நீண்ட புஜங்களையுடைய ஸர்வேஸ்வரன் பள்ளிகொண்ட விசாலமான திருப்பாற்கடலில் நீராடுகைக்காக விடிந்த தினமெல்லா மாசைப்படுங்கோள். (௨௩) ௬௯.

வ்யா.—அவ.—அறுபத்தொன்பதாம்பாட்டு.— (வெற்பென்று) ஆழ்வாரானவவஸ்த்தைபோய் ஒருபிராட்டியவஸ்த்தையை பஜித்து அவளுடைய தசையைத்தாயார் சொல்லுகிறாள்.

(வெற்பித்யாதி) லோகயாத்ரையுமிவளுக்கு பகவத்விஷயத்திலே, திருமலையொழிய வேறொருமலையுமறியாள். (கருங்குழல்மேல் வியன்றுழாய்கற்பென்றுசூடும்) நாட்டுப்பூச்சூடாள். “தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்” என்கிறபடியே, விஸ்மயமானதிருத்துழாயல்லது குழலில்வையாள். “கற்பு” என்றுபாதிவ்ரத்யம். (மற்பொன்றவித்யாதி) விரோதிநிரஸநத்துக்காக வளர்ந்ததோளையுடையனாய் வ்யாமுக்தனானவன் கிடந்த நீள்கடலிலே விடிந்தநாளெல்லாம் புகாநின்றாள். திருப்பாற்கடலொழிய வேறொன்றில் குளித்தால் விடாய்கெடாதென்றிரா நின்றாள். இப்ப்ரகரணத்தில் கீழும்மேலும்அந்யாபதேசமின்றிக்கேயிருக்க இப்பாட்டொன்று மிப்படிகொள்ளுகிறதென்னென்று நிர்வஹிப்பர்கள். அம்மலை இம்மலையென்று ஒன்றைச்சொல்லக்கடவிகோளிறே; ஆனபின்பு, திருமலையைப்பாடுங்கோள். (வியன்துழாயித்யாதி) ஒருபூவைச் சூடக்கடவிகோளிறே; ஆனபின்பு வகுத்தவனுசக்கும திருத்துழாயைச் சூடுங்கோள். (மற்பொன்றவித்யாதி) ப்ராதஸ்ஸ்நாநம் பண்ணக்கடவிகோளிறே. ஆனபின்பு விரோதிநிரஸநசீலனானவன்கிடந்த திருப்பாற்கடலிலேமுழுகுங்கோள். ௬௯.

அரு.— அறுபத்தொன்பதாம்பாட்டு.— பாதிவ்ரத்யம் - அவன் ஸ்பர்சித்த பூவொழிய வேறொன்று சூடாமை. பூண்ட-விடிந்த. கற்பென்று ப்ராப்தமென்று. இது இரண்டாவதுக்கு. ௬௯.

புகுமதத்தால்வாய்பூசிக்கீழ்தாழ்ந்து, அருவி
உகுமதத்தால்கால்கழுவிக்கையால் – மிகுமதத்தேன்
விண்டமலர்கொண்டுவிறல்வேங்கடவனையே
கண்டுவணங்கும்களிறு, ௭௦

அ்.—புகு மதத்தால் வாய்பூசி கீழ் தாழ்ந்து (5) அருவி உகு மதத்தால் கால் கழுவி (10) மிகு மதம் தேன் விண்ட மலர் கையால் கொண்டு (17) விறல் வேங்கடவனையே களிறு கண்டு வணங்கும். (உஉ)

அர்.—(பெருகிவந்து வாயில்) புகுகிற மதஜலத்தினால் வாயைக்கொப்பளித்து, கீழே வந்து (ரு) அருவிகள்போல் விழாநின்ற மதஜலத்தினால கால்களை யலம்பி (கo) மிக்க மதகரமான தேனையுடைத்தாய் மலர்ந்திருக்கிற புஷ்பங்களைத் தும்பிக்கையினாலெடுத்து (ஸமர்ப்பித்து) (கஎ) பலிஷ்டனான திருவேங்கடமுடையானையே யானை யானது கண்டு ஆஶ்ரயிக்கும். (உஉ) எo.

வ்யா.— அவ.— எழுபதாமபாட்டு.—(புகுமதத்தால்) அநுகூலருடைய தேஹயாத்ரையெல்லாம் தன் ஸமாஶ்ரயணத்துக்குடலாகக் கொள்ளுமவனுடைய திருமலையென்கிறது.

(புகுமதத்தாலித்யாதி) வாயிலே புகுகிறமதஜலத்தாலேகால்கழுவி. (கீழித்யாதி) கீழேதாழ்ந்த வருவிபோல வுகாநின்ற மதஜலத்தாலே கால்கழுவி. (கையித்யாதி) கையாலே மிக்கமதுவையுடைத்தாய் அலராநின்ற பூவைக்கொண்டு களிறானது விறல்வேங்கடவனையே கண்டு வணங்கும். விறல்வேங்கடவனென்று-திருமலையில் திர்யக்குக்களும் தன்னை வணங்கும்படி ஜ்ஞாநத்தைக்கொடுக்கவல்லசக்தியையுடையவனென்கிறது-ஜ்ஞாநகார்யமான ஸமாஶ்ரயணத்தைதேசவாஸத்தாலே பண்ணிவைக்கும். எo,

அரு.—எழுபதாம்பாட்டு.—கீழ்தாழ்ந்தவருவி—மேட்ரஜலம்.

களிறுமுகில்குத்தக்கையெடுத்தோடி
ஒளிறுமருப்பொசிகையாளி—பிளிறி
விழ,கொன்றுநின்றதிருமவேங்கடமே, மேனாள்
குழக்கன்றுகொண்டெறிந்தான்குன்று. எக.

அ்.—களிறு கை எடுத்து ஓடி முகில் குத்த (6) ஒளிறு மருப்பு ஒசி கை யாளி பிளிறி விழ கொன்று (14) நின்று அதிரும வேங்கடமே மேல்நாள் குழக்கன்று கொண்டு எறிந்தான் குன்று. (22)

அர்.—யானையானது தனதுதும்பிக்கையைத் தூக்கிக்கொண்டோடி மேகத்தைக் குத்த, (கூ) (அப்போது) ஒளிவிடாநின்ற (அவ் யானையின்) தந்தங்களை முறியாநின்ற கைகளையுடைய யாளியானது

(அவ்யானையைக்) கூய்ச்சலிட்டுக்கொண்டு விழும்படி கொன்று (கச) அருகேநின்று கர்ஜநம்செய்யாநின்ற திருமலையே முற்காலத்தில் சிறியகன்றாய்வந்த வத்ஸாஸுரனைப் பிடித்து வீசிப்போகட்டக்ருஷ்ணன் நித்யவாஸம்செய்யும்பர்வதம். (உஉ) எக.

வ்யா,— எழுபத்தோராம்பாட்டு.— (களிறித்யாதி) கையையெடுத்துக்கொண்டோடிக்களிறானது முகிலைக்குத்த (ஒளிறித்யாதி) ஆனையினுடைய வெண்மருப்பை முறியாநின்றயாளி. கையெடுத்தோடியென்று யாளிக்காகச் சொல்லவுமாம். (பிளிறியித்யாதி)ஆனையானது பிளிறிக்கொண்டு விழும்படிக்கீடாகக்கொன்று சினத்தாலே நின்றதிராநின்ற திருமலை. (மேனாளித்யாதி) ஸஹஜசத்ருக்களை முடித்து விரோதிபோகப்பெற்றதென்று உகந்துநிற்குமவனுடைய திருமலையிறே. திருமலையில் பின்னையொன்றுக்கொன்று பாதகமாகுமோ வென்னில். அக்நீஷோமீய ஹிம்ஸையோபாதியிறே அவற்றுக்கும். எஉ

அரு.—எழுபத்தோராம்பாட்டு.—ஒளிறு-ஒளியையுடைய கொம்பு-இவற்றுக்கு பாதகங்கூடுமோவென்ன; அவனைப்போலே அவனாரிலுள்ளது மென்கிறார் (ஸஹஜசத்ருக்களையித்யாதி). ஆனாலும் திவ்யதேசத்திலே பாதகமாமோ வென்றபிப்ராயமாக (அக்நீஷோமீயமித்யாதி). எக.

குன்றொன்றினாயகுறமகளிர்கோல்வளைக்கை
சென்றுவிளையாடுந்திங்கழைபோய்—வென்று
விளங்குமதிகோள்விடுக்கும்வேங்கடமே, மேலை
இளங்குமரர்கோமானிடம். எஉ.

அந்.—குன்று ஒன்றின்ய குறமகளிர் சென்று (4) கோல் வளைக்கை விளையாடும் தீ கழை போய் (10) வென்று விளங்கும் மதி கோள் விடுக்கும் வேங்கடமே (16) மேலை இளங்குமரர் கோமான் இடம். (20)

அர்.—திருமலை யொன்றையேப்ராப்யமாகவுடைய குறப்பெண்கள் போய் (ச) அழகிய வளைகளையுடைய கைகளாலே (பிடித்து) விளையாடாநின்ற அழகிய மூங்கில்கள் மேற்புறம்வளர்ந்து (ராஹுவை) ஜயித்து (அதினால்) ப்ரகாசியாநின்ற சந்த்ரனுடைய ஆபத்தைப் போக்காநின்ற திருமலையே (கசா அண்டத்துக்கும்மேலுள்ளபரமபத

த்தில்வாஸம்செய்கிற ஔளவநாரம்பத்தையுடைய நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியான ஸர்வேஸ்வரனெழுந்தருளியிருக்கும்தேசம்.(௨௦,௭௧.

வ்யா.— எழுபத்திரண்டாமபாட்டு.— (குன்றித்யாதி) திருமலைக்குக்கீழ்ப்பியில்குடிப்பழியாங்குறவருடையபெணகள். (கோல்வளைக்கையித்யாதி)குறவருடையபெண்கள் கோல்வளையையுடைத்தானகையாலே சென்றுவிளையாடுகிற கழையானதுபோய் உஜ்வலமான சந்த்ரனை ராஹுவானது க்ரஹிக்க வொண்ணாதென்றுவென்று சந்த்ரனுக்கு அந்தவ்யஸநத்தைப்போக்கும திருமலை. பரமபதத்தில் தன்னோடொக்க த்வாதசவார்ஷிகரான நித்யஸூரிகளுக்கு சேஷியானவனிடம். "திங்களை" என்று இவர்கள் ஊஞ்சலாடுகைக்குப் பிடித்து விளையாடும் மூங்கிலாகவுமாம், ௭௨.

அரு.—எழுபத்திரண்டாம்பாட்டு.— "திங்களை" என்றுபாடமாய்.வளைக்கையாலே எறிந்து விளையாடுகிற களையென்னுதல். திங்களை-மூங்கிலென்னுதல் பிழை. ௭௨.

இடம்வலமேழ்பூண்டவிரவித்தேரோட்டி
வடமுகவேங்கடத்துமன்னும்—குடநயந்த
கூத்தனாய்நின்றான்குரைகழலேகூறுவதே
நாத்தன்னாலுள்ளநலம். ௭௩.

அந்.—இடம் வலம் ஏழ் பூண்ட இரவி தேர் ஓட்டி (7) வடமுகம் வேங்கடத்து மன்னும் நயந்த குடம் கூத்தனாய் நின்றான் (14) குரை கழல் கூறுவதே நாதன்னால் உள்ள நலம். (20)

அர்.—இடதுபக்கத்திலும் வலதுபக்கத்திலுமாக ஏழுகுதிரைகள் கட்டியிருக்கிற ஸூர்யனுடைய தேரை (அந்தர்யாமியாயிருந்து) நடத்துமவனாய், (எ) வடதிசையிலுள்ள திருமலையிலே பொருந்தியெழுந்தருளியிருக்குமவனாய் விருப்பத்துடனே குடமெடுத்துக் கூத்தாடினவனாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரிய:பதியினுடைய (௧௪) ஆபரணத்வநிகளையுடைய திருவடிகளைச் சொல்வதே நாவினால் பெறத்தக்க பயன். (௨௦) ௭௩.

வ்யா.—எழுபத்துமூன்றாம்பாட்டு.—(இடமித்யாதி)இடத்திலும் வலத்திலுமாக ஏழுகுதிரைபூண்ட ஆதித்யனுடைய தேரையோட்டி. ஏழ்பூண்ட ஆதித்ய ரதத்தை மஹாமேருவுக்கு வலமே இடமாக-மார்க்கமாக ஓட்டி என்றுமாம். இரவியினுடையதேரைபாரதஸமரத்திலே

நடத்தியென்றுமாம். (வடமுகவித்யாதி) வடக்கில்திக்கிலே யுண்டான திருமலையிலே நித்யவாஸம்பண்ணுகிற. (குடநயந்தவித்யாதி) குடமாடிநின்றவனுடைய ஆபரணவொலியையுடைத்தான திருவடிகளைக்கூறுகை நாவால்படைக்கும் ஸம்பத்து. குடக்கூத்தாடினை இளைப்பாறத் திருமலையிலே வந்து நின்றான்போலே. எ௩.

அரு.—எழுபத்துமூன்றாம்பாட்டு.—வலமே இடமாக-மஹாமேருவைவலமாகவருகையே வழியாக. இடம்-வழி. பாரதத்திலும் ஆதித்யன் தேரைநடத்தின. குடநயந்த—குடக்கூத்தை விரும்பின. எ௩.

நலமேவலிதுகொல் நஞ்சூட்டுவன்பேய்
நிலமேபுரண்டுபோய்வீழச்—சலமேதான்
வெங்கொங்கையுண்டானைமீட்டாய்ச்சியூட்டுவான்
தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து. எச.

அ.—சலமேதான் நஞ்சு ஊட்டு வன் பேய் நிலமே புரண்டு போய் வீழ (8) வெம் கொங்கை உண்டானை ஆய்ச்சி சார்ந்து மீட்டு ஊட்டுவான் (15) தன் கொங்கை வாய் வைத்தாள். நலமே வலிது கொல். (21)

அர்.— கபடத்தினால் ( தாய்வேஷங்கொண்டு ) விஷத்தைப் பானம்செய்விக்கைக்காகவந்த கொடியபூதனை பூமியில் புரண்டு விழும்படி(அ)(அவளுடைய) விஷயுக்தமான முலைப்பாலை யமுதுசெய்தக்ருஷ்ணனை யசோதாதேவி கிட்டவந் தெடுத்துப் பால்கொடுக்கைக்காகத் (கடு) தன்னுடைய ஸ்தநத்தைத் திருப்பவளத்தி லமர்த்தினாள். (இதுக்குக்காரணம்)ப்ரேமமே பெரிதாயிருந்தது. (உக) எச.

வ்யா.—எழுபத்துநாலாம்பாட்டு.—(நலமேவலிதுகொல்) ஸ்த்ரீத்வப்ரயுக்தமான அச்சத்திற்காட்டில் ஸ்நேஹமேவலிதாகாதே. (சலமேதான்நஞ்சூட்டுவன்பேய்) தாய்வேஷத்தைக்கொண்டு நஞ்சூட்டுவதாக வந்தவலியபேயானது. (நிலமேபுரண்டுபோய்வீழ) நிலத்திலேபுரண்டு விழும்படிக்கீடாக. (வெங்கொங்கையித்யாதி) விஷமுலையுண்டதுக்குப் பரிஹாரமாக அமுருதத்தையுடைத்தான தன்கொங்கையைக் கால்நடைதந்து சென்று அவன்வாயிலேவைத்தாள். (நலமேவலிதுகொல்) அச்சமும் ஸ்நேஹமுங்கூடினால் ஸ்நேஹமேவலிதாகாதே. எச.

அரு. — எழுபத்துநாலாம்பாட்டு. — சலம்-ச(ஜ)லமாய், கபடமென்றபடி. சார்ந்து-கிட்டி. கால்நடை தந்து-சென்றுகிட்டி என்றபடி. எச.

சார்ந்தகடுதேய்ப்பத்தடாவியகோட்டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும்வெண்மதியினொண்முயலைச்—சேர்ந்து
சினவேங்கைபார்க்குந்திருமலையே, ஆயன்
புனவேங்கைநாறும்பொருப்பு. எடு.

அ்.—தடாவிய கோடு உச்சிவாய் அகடு தேய்ப்ப சார்ந்து ஊர்ந்து இயங்கும் (8) வெண் மதியின ஒண் முயலை வேங்கை சேர்ந்து சினம் பார்க்கும் திருமலையே (17) வேங்கை நாறும் ஆயன் புனம் பொருப்பு. (22)

அர்.—பரந்த சிகரத்தின் நுனியில் வயிறு தேயும்படி கிட்டி மெள்ளப் போகாநின்ற (அ) வெண்மையான சந்த்ரனிடத்திலிருக்கிற அழகிய முசலை வேங்கைப்புலி கிட்டி கோபித்துப் பார்க்கும் திருவேங்கடமே (கஎ) வேங்கைப்பூவின் பரிமளம்வீசுகிற க்ருஷ்ணனுடைய வாஸஸ்தாநமான திருமலை. (உஉ) எடு.

வ்யா.—எழுபத்தைந்தாம்பாட்டு.—(சார்ந்தகடு) (தடாவியகோட்டுச்சிவாய் சார்ந்தகடுதேய்ப்ப) பரந்தகொடுமுடியிலே கிட்டிக்கீழ் வயிறுதேய்ப்ப. (ஊர்ந்தியங்கும்வெண்மதியினொண்முயலை) போக்யதையாலே மெள்ள ஸஞ்சரியாநின்ற சிகரத்திலே தேய்கையாலே ஒளியையுடைத்தான சந்த்ரன்பக்கல் முயலை.(சேர்ந்தித்யாதி) கிட்டிச் சினத்தாலே புலிபடப்பார்க்குந்திருமலை. (ஆயனித்யாதி) இடையர்க்குக்காட்டில் மரங்களுடைய நாற்றம சாலப்ரியமிறே. எடு.

பொருப்பிடையேநின்றும்புனல்குளித்தும், ஐந்து
நெருப்பிடையேநிற்கவும்நீர்வேண்டா-விருப்புடையல்
வெஃகாவேசேர்ந்தானைமெய்ம்மலர் தூய்க்கைதொழுதா
அஃகாவேதீவினைகளாய்ந்து. எசு.

அ்.—நீர் பொருப்பு இடையே நின்றும் புனல் குளித்தும் (6) ஐந்து நெருப்பு இடையே நிற்கவும் வேண்டா. (11) விருப்புடைய வெஃகாவே சேர்ந்தானை மெய் மலர் தூய் கைதொழுதால் தீவினைகள் ஆய்ந்து அஃகாவே. (21)

அர்.—(ஜநங்களே!) நீங்கள் (தவம்செய்கைக்காக) மலை யிடையில் நிற்கவும் பொய்கைகளில் முழுகவும் (க). பஞ் சாக்நி மத்தியில் நிற்கவும் வேண்டாம். (கக) ப்ரேமத்துடனே திருவெஃகாவில் பள்ளி கொண்டயதோக்தகாரிக்கு அநந்யப்ரயோஜநமாகப் புஷ்பங்களை ஸமர்ப்பித்து அஞ்சலிபண்ணினால் பாபங்கள் (இவ்விடம்தனக்கிருக்கத் தகாதென்று) ஆலோசித்து(த்தாங்களே) விட்டுப்போகாவோ? (உக)

வ்யா.—அவ.—எழுபத்தாறும்பாட்டு.— (பொருப்பிடை) ஸர்வேஸ்வரன் ஸம்ஸாரத்திலே புகுந்து தன்னுடம்பைப்பேணுதே நங் கார்யம் செய்யாநின்றான். நீங்களுடம்பையொறுக்க வேண்டாவென்கிறார்.

(பொருப்பித்யாதி) பனிநாள்மலைகளில், பொய்கைகளிலே புக்குக்குளித்து. (ஐந்தித்யாதி) கோடைநாள்பஞ்சாக்நி மத்யஸ்தனாய் நிற்கவும் வேண்டா. (விருப்பித்யாதி) விரும்பப்படுவதான திருவெஃகாவிலே சேர்ந்தவனை. (மெய்ம்மலரித்யாதி) அநந்யப்ரயோஜநனாய் புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு ஆய்ந்து-அநுஸந்தித்துக் கைதொழுதால் அசேதநமான கொடியபாபங்கள் தான் தன்னையாஸ்ரயிக்க நிற்கவற்றோ? தீவினைகள்தானே ஆராய்ந்து நமக்கு நிலமன்றென்று போகாவோவென்றுமாம். "வ்ருஷ்டிப்ரதீக்ஷாஸ்ஸாலய: - வ்ருஷ்டிப்ரதீக்ஷாஸ்ஸாலய:" என்னும் ந்யாயத்தாலே "சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே" என்கிறபடியே. எசு.

அரு.—எழுபத்தாறும்பாட்டு.— சாலய: - ஸஸ்யங்களானவைகள் வர்ஷத்தைப்பார்க்குமாப்போலே பாபங்களு மிவனைவிட்டுப் போகைக்கு பகவத்ஸமாஸ்ரயணத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும். அஃகாவே-கிட்டாவே. ஆய்ந்து-இரண்டிடத்திலுமந்வயம். எசு.

**ஆய்ந்தவருமறையோன்நான்முகத்தோன்நன்குறங்கில்**
**வாய்ந்தகுழவியாய் வாளரக்கன்—ஏய்ந்த**
**முடிப்போதுமூன்றேழென்றெண்ணினான், ஆர்ந்த**
**அடிப்போதுநங்கட்கரண். எஎ.**

அந்.—ஆய்ந்த அரு மறையோன் நான்முகத்தோன் நல் குறங்கில் வாய்ந்த குழவியாய் (8) வாள் அரக்கன் ஏய்ந்த போது முடி மூன்றுஏழென்று எண்ணினான் (15) ஆர்ந்த அடிப்போது நங்கட்கு அரண். (19)

அர்.—அர்த்தவிசாரபுரஸ்ஸரமாகஓதப்பட்டும் பெறுதற்கரியதுமான வேதங்களையுடைய சதுர்முகப்ரஹ்மாவினுடைய அழகிய மடியில் அமைந்துபள்ளிகொண்ட சிறுகுழந்தையாய்க்கொண்டு (அ) வாளாயுதத்தையுடைய ராவணாஸுரனுடைய (அறுக்கைக்குத்) தகுதியான புஷ்பம்போன்ற தலைகளை "மூன்றுஏழு" என்று எண்ணினஸர்வேஸ்வரனுடைய (கரு) கல்யாணகுணபூர்ணமான திருவடித்தாமரையே நமக்கு ரக்ஷகம். (கக) எஎ.

வ்யா.—அவ.— எழுபத்தேழாம்பாட்டு.— (ஆய்ந்தவருமறையோன்) கீழ்ஸர்வேஸ்வரனை ஆஸ்ரயிக்கவே உங்கள் பாபங்களெல்லாம் போமென்றது. இதில் அளவுடையரான ப்ரஹ்மாதிகளுக்கு வழிகேடாகப்புக்கால் பரிஹரிப்பானவனென்கிறது.

(ஆய்ந்தவித்யாதி) ஸர்வேஸ்வரனாலே ஓதுவிக்கப்பட்டு வேதார்த்தநிரூபணம் பண்ணவல்ல ப்ரஹ்மாவினுடைய குறங்கிலே, ஸ்வாபாவிகமான சேஷித்வமில்லாமையாலே புதுக்கும்பிடைக்கண்டிருமாந்து தங்களநர்த்தமறியாதே ராவணனுக்குத் தெடுத்தெல்லாம் கொடுக்கப்புக இவனாலே நோவுபட்டாலும் நமமுடைய பாடேயிறே இவர்கள் வந்து விழுவதென்றுபார்த்து. (வாய்ந்தகுழவியாய்) அழகியபிள்ளையாய். (வாளரக்கன்) ஸாயுதனான ராக்ஷஸனுடைய. (ஏய்ந்தவித்யாதி) ராக்ஷஸனுடைய தலைகளை மௌக்த்யத்தாலே மூன்றேழென்றெண்ணினவனுடையஅபேக்ஷிதத்தைச் செய்யவற்றாய் போக்யமான திருவடிகள் நமக்குரக்ஷை. எஎ.

அரு.—எழுபத்தேழாம்பாட்டு.— வழிகேடாக- துர்மார்க்கராகப்புக்கால், தப்புவரப்புக்காலென்றபடி. தெடுத்தெல்லாம் - அவனபேக்ஷித்ததெல்லாம். (ஆர்ந்தவடி) ஆருகை-பூர்ணமாய், அவரவரபேக்ஷிதத்தைக் கொடுக்கவற்றாகை. எஎ.

அரணாநமக்கென்று மாழிவலவன்
முரனாள்வலம்சுழிந்தமொய்ம்பன்—சரணாமேல்
ஏதுகதியேதுநிலையேது பிறப்பென்னாதே
ஓதுகதிமாயனையே யோர்த்து. எஅ.

அந்.—ஆழி வலவன் முரன் நாள் வலம் சுழிந்த மொய்ம்பன் சரணாமேல் (8) கதி ஏது, நிலை ஏது, பிறப்பு ஏது, என்னாதே நமக்கு என்றும் அரணாம். (18 கதி மாயனையே ஓர்த்து ஓது. (22)

அர்.— திருவாழியை வலதுதிருக்கையிலேந்தினவனாய் முரா ஸுரனுடைய வயஸ்ஸினால் (சிரஜீவித்வத்தால்) வந்த பலத்தைப் போக்கின பலிஷ்டனுனைஸ்ரியஃபதி ரக்ஷகனுமிடத்தில் (அ) ஜ்ஞாந மெது, அநுஷ்டான மெது, ஜந்ம மெது, என்றுலோசியாதே நமக் கெப்போதும் ரக்ஷகனாகும். (கஅ) (ஆகையால்) (மனமே!) சரண்ய னாய் ஆஸ்சர்யபூதனானவனையே த்யாநித்துச் சொல்லு. (உஉ) எஅ.

வ்யா.—அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு.— (அரணும்) அவன் ஸர்வரக்ஷகனாகிலும் நம்முடைய ஜ்ஞாநவ்ருத்த ஜந்மங்களினுடைய கொற்றைபார்க்கவேண்டாவோவென்ன; வேண்டாவென்கிறது.

(அரணுமித்யாதி) ஸர்வசக்தி நமக்குரக்ஷையாம். வலவருகே திருவாழிபிடிக்குமவன் போலேகாணும் ரக்ஷகனாவான். தன்னைப்புர ஸ்கரித்திறே, "மாசுச:" என்றது. இவனுடைய அஹம் புத்தி சோகநிமித்தம்; அவனுடைய அஹம்புத்தி சோகநிவர்த்தகம். (முரனுள்வலஞ்சுழிந்த மொய்ம்பன்) விரோதியைப்போக்கி ரக்ஷிக்க வல்லனென்னு மிடத்தையுபபாதிக்கிறது. முரனுடைய ஆயுஸ்ஸா கிற மிடுக்கை முடிக்கவல்ல மிடுக்கன். (சரணமேவித்யாதி) அவன் ரக்ஷகனுமிடத்தில் ஜ்ஞாநமேது, வ்ருத்தமேது, ஜந்மமேது; என்று ராயாதே. (ஆழிவலவனரணும்) ஆஸ்ரயணீயனும் "ஸமோஹம் ஸர்வபூதேஷு நமேத்வேஷ்யோஸ்தி நப்ரிய:" ஸமோஹம்ஸர்வ பூதேஷு நமேத்வேஷ்யோஸ்தி நப்ரிய:" "யேவிஸ்..." யோநய:-யேபிஸ்யு:பாபயோநய:" எத்தனை நலந்தானிலாத சண் டாள சண்டாளர்களாகிலும்". (ஓதுகதிமாயனையே யோர்த்து) சர ண்யனாய் ஆஸ்சர்யபூதனானவனை அநுஸந்தித்து அவன் திருநாமங்க ளைச் சொல்லு. எஅ.

அரு.— எழுபத்தெட்டாம்பாட்டு.— சக்தியைக் காட்டியே ரக்ஷிப்பதோவென்ன, அருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி). ஈஸ்வர னிவனுடைய ஜ்ஞாநவ்ருத்தங்கள் ஆராயாதேரக்ஷகனென்னு மதுக்குப்ப்ரமாண மருளிச்செய்கிறார் (ஸமோஹமித்யாதி). கதி - சரண்யன். எஅ.

ஓர்த்தமனத்தரா யைந்தடக்கியாராய்ந்து
பேர்த்தால்பிறப்பேழும்பேர்க்கலாம்—கார்த்த
விரையார்நறுந்துழாய் வீங்கோதமேனி
நிரையாரமார்பனையே நின்று. எகூ)

அந்.—கார்த்த விரை ஆர் நறு துழாய் வீங்கு ஓதம் மேனி (8) நிரை ஆரம் மார்பனையே நின்று ஓர்த்த மனத்தராய் (14) ஐந்து அடக்கி ஆராய்ந்து பேர்த்தால் ஏழ் பிறப்பும் பேர்க்கலாம். (21)

அர்.—பசுமையாய் ஸௌந்தர்ய பூர்ணமாய் பரிமளயுக்தமான திருத்துழாயையுடையனாய் பொங்குகிற கடல்போன்ற திருமேனியுடையனாய் (அ) ஒழுங்கான ஹாரத்தையுடைய திருமார்பையுடையனை ஸர்வேஸ்வரனையே ஸ்திரமாயிருந்து த்யாநித்த மனமுடையவர்களாய்க்கொண்டு (கச) பஞ்சேந்த்ரியங்களை நிக்ரஹித்து (விஷயங்களின்தோஷத்தை) ஆலோசித்து (அதில்நின்றும்மநஸ்ஸைத்) திருப்பினால் மேல்வரப்போகிற ஜந்மங்களையெல்லாம் போக்கலாம். (உக) எகூ.

வ்யா.—அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு.— (ஓர்த்தமனத்தராய்) அநாதிகாலம்பண்ணின பாபத்தைப்போக்கும் போது அநந்தகாலம் வேண்டாவோ வென்னில்; அவனையநுஸந்தித்து சப்தாதிகளிலே அநாதரம்பிறக்கச் சடக்கெனப்போக்கலாமென்கிறது.

(கார்த்தவித்யாதி) அழகியதிருத்துழாய் மாலையையுடையவனுமாய், தேங்கினகடல் போலே யிருக்கும் திருமேனியை யுடையவனுமாய், சப்தாதிகளை நாக்குவளைக்கலாம்படி ஆபரணவழகையுடையவனை. (நின்று ஓர்த்தமனத்தராயித்யாதி) நின்று அநுஸந்தித்த மநஸ்ஸையுடையராய் இந்த்ரியங்களை விஷயங்களில் போகாதபடியடக்கி, அவைபொல்லாதென் றாராய்ந்து ஸம்ஸாரத்தைப் போக்கப்புக்கால் போக்கலாம். ஏழ்பிறப்பென்றது உபலக்ஷணம்; ஜந்மமடங்கப் போக்கலாமென்றபடி. எகூ.

நின்றெதிராயநிரைமணித் தேர்வாணன்தோள்
ஒன்றியவீரைஞ்ஞூறுடன்துணிய—வென்றிலங்கும்
ஆர்படுவான்நேமியரவணையான் சேவடிக்கே
நேர்படுவான்தான்முயலும் நெஞ்சு. அ௦.

அந் —நின்று நிரை மணி தேர் எதிராய (5) வாணன் தோள் ஒன்றிய ஈரைஞ்ஞூறு உடன் துணிய வென்று (12) இலங்கும் ஆர்படுவான் நேமி அரவணையான் சே அடிக்கே நேர்படுவான் நெஞ்சு தான் முயலும். (22)

அர்.—(ஸர்வேஸ்வரனென்றறியாமல்) இருந்து அழகிய மணிகளிழைத்த தேரின்மேலேறி எதிராகவந்த (ரு) பாணாஸுரனுடைய

தோளில் சேர்ந்திருக்கிற ஆயிரம்கைகளை உடனே அறும்படி (வெட்டி) ஜயித்து (கஉ) ப்ரகாசியாநின்ற கூர்மையான திருவாழியையுடையனாய் திருவநந்தாழ்வானைப்படுக்கையாகவுடையவனான ஸர்வேஶ்வரனுடைய சிவந்த திருவடியை யடைகைக்காக மநஸ்ஸு தானே ப்ரயத்நம்செய்யும். (உஉ) அ0.

வ்யா.—அவ.— எண்பதாம்பாட்டு.— (நின்றெதிராய) நம்மால் இந்த்ரியஜயம்பண்ணி அவனை யநுஸந்தித்து ஸம்ஸாரஸம்பந்த மறுக்கப்போகாது; அவன் ப்ரதிபந்தகத்தைப்போக்க அவனை யநுஸந்திக்க வாசைப்படாநின்றது நெஞ்சென்கிறார்.

(நின்றெதிராயவித்யாதி) தாமஸதேவதையை ஆஶ்ரயிக்கையாலே ஸர்வேஶ்வரனென்றறியாதே எதிரிட்டுத் தேவையுடையனான பாணனுடையதோளோடே தோளொன்றியவல்லாத ஆயிரந்தோளுந் துணியும்படிக் கீடாகவென்று. ஒளியையுங் கூர்மையையு முடைய திருவாழியையுடைய அநந்தசாயியுடைய திருவடிகளிலே யணைய நெஞ்சானது தானே ப்ரவர்த்தியாநின்றது. அ0.

அரு.—எண்பதாம்பாட்டு.— ஆர்படுகை - கூர்மையுண்டாகை. ஆர்-கூரிசு. வான் பெருமை. நேர்படுவான்-நேர்படுகைக்காக; அணையவென்றபடி. அ0.

நெஞ்சால்நினைப்பரியனேலும், நிலைப்பெற்றென்
நெஞ்சமேபேசாய், நினைக்குங்கால்—நெஞ்சத்துப்
பேராதுநிற்கும்பெருமானை யென்கொலோ
ஓராதுநிற்பதுணர்வு. அக.

அந்.—நெஞ்சால் நினைப்பரியனேலும் என் நெஞ்சமே! நிலைபெற்று பேசாய். (6) நினைக்குங்கால் நெஞ்சத்து பேராது நிற்கும் பெருமானை உணர்வு ஓராது நிற்பது என்கொலோ? (15)

அர்.—மநஸ்ஸினால் நினைக்கதுர்லபனாகிலும் எனது மனமே! ஸ்திரமாயிருந்து (அவனைச்) சொல்லப்பாராய். (சு) (ஒருகால்) நினைக்கில மனதை விட்டுப்போகாமல் ஸ்திரமாய்வாஸம்செய்யும் ஸர்வேஶ்வரனை அறிவு நினையா திருப்பது எந்தக்காரணத்தினாலிருக்கலாம்? (கரு) அக.

வ்யா.—அவ.—எண்பத்தோராம்பாட்டு.—(நெஞ்சால்) கீழ்ஸம்ஸாரிகளுக்கில்லாதது நமக்குண்டானவாறே நெஞ்சு பகவத்விஷயத்

திலே மண்டிற்றென்று கொண்டாடினர். விஷயத்தைப்பார்த்த வாறே அடியிட்டிலராயிருந்தாரென்கிறது.

(நெஞ்சாலித்யாதி) நெஞ்சமே உன்னால் நினைக்கப்போகாதாகிலும். (நிலைப்பெற்றென்னெஞ்சமேபேசாய்) ஐஸ்வர்யங்கண்டு பிற்காலியாதே அநுபவியாய். (நினைக்குங்காலித்யாதி) ஒருகால் நினைக்கில் நாக்குண்டாநாவெழாவென்று நெஞ்சுவிட்டுப் போகவறியாத ஸர்வேஸ்வரனை. "கண்ணுள்ளேநிற்குங்காதன்மையாற்றொழில்" என்கிறபடியே. (என்கொலோவித்யாதி) அவனை நினையாதே மணலைமுக்கப்பார்க்கிறதோ? அவனை நினையாதே தானுண்டாம்படி எங்ஙனே. "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு". அக.

அரு.—எண்பத்தோராம்பாட்டு.— உணர்வானது ஓராதுநிற்பதென்கொலோ-ஸத்தையுண்டாம்படிநிற்பது; எங்ஙனேயென்றபடி.

உணரிலுணர்வரியனுள்ளம்புகுந்து
புணரிலுங்காண்பரியனுண்மை—இணரணைய
கொங்கணைந்துவண்டறையுந் தண்டுழாய்க்கோமானை
எங்கணைந்துகாண்டுமினி. அஉ.

அந்.—உணரில் உணர்வரியன். உள்ளம் புகுந்து புணரிலும் உண்மை காண்பரியன். (7) இனி இணர் அணைய வண்டு கொங்கு அணைந்து அறையும் தண் துழாய் கோமானை (17) எங்கு அணைந்து காண்டும். (20)

அர்.— (தானே) அறியப்பார்க்கில் அறிகைக்கஸாத்யன். ஹ்ருதயத்தில் ப்ரவேசித்துச் சேர்ந்திருந்தாலும் உள்ளபடியாகக் காண்கைக் கஸாத்யன். (எ) இப்போது, பூங்கொத்துத் தாழும்படி வண்டுகள் தேனில் சேர்ந்து பாடாநின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய ஸ்வாமியை (கஎ) எங்கே போய்க் காண்போம்.(உ0)அஉ.

வ்யா.— எண்பத்திரண்டாம்பாட்டு — (உணரிலுணர்வரியன்) தன்னாலுமறியப்போகாது; இவனாலுமறியப்போகாது. "தனக்குந்தன் தன்மையறிவரியானை" ஸ்வயத்நத்தால் காண்பார்க்குக் காணப்போகாது. (உள்ளமித்யாதி) தானேவந்து ஹ்ருதயத்திலே புணர்ந்தானேயாகிலும் அவனுடைய உண்மையறியப்போகாது. (இணரணையவித்யாதி ) காணவரியனென்று கைவாங்கப்போகாதென்கிறது. பூங்கொத்துக்கள் தாழும்படிக்கீடாக மதுவைப்பாநம்பண்ணின

வண்டுகள் சப்தியாநின்ற திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேஸ்வரனையெங்கேகிட்டிக்காண்போமினி. அஉ.

அரு.—எண்பத்திரண்டாம்பாட்டு.—புணரிலுமென்னும்பாடம்; உள்ளத்தேபுகுந்தபின்பும், உணரிலுமென்னும்பாடம். இணர்-பூங்கொத்து. கொங்கு-தேன். அணைய-தாழ. அஉ.

இனியவன்மாயனெனவுரைப்பரேலும்
இனியவன்காண்பரியனேலும்—இனியவன்
கள்ளத்தால் மண்கொண்டுவிண்கடந்தபைங்கழலான்
உள்ளத்தினுள்ளே யுளன். அங.

அ.—இனி அவன் மாயன் என உரைப்பரேலும் இனி அவன் காண்பரியனேலும் (8) கள்ளத்தால் மண் கொண்டு விண் கடந்த பை கழலான் இனியவன் உள்ளத்தின் உள்ளே உளன். (19)

அ.—இப்போது அந்தஸர்வேஸ்வரன் (காணவரிய) மாயாவி என்று சொன்னார்களேயாகிலும் இப்போது அந்த ப்ரியஃபதி ஸாக்ஷாத்கரிக்கதுர்லபனாகிலும் (அ) வஞ்சனையினால் பூமியை ஸ்வாதீநப்படுத்திக்கொண்டு ஆகாசத்தையு மளந்த அழகிய திருவடியையுடைய போக்ய பூதனான அந்த ஸர்வேஸ்வரன் ஹ்ருதயத்திற் குள்ளே வாஸம்செய்கிறான். (கக) அங.

வ்யா.— எண்பத்து மூன்றாம்பாட்டு.—(இனியவனித்யாதி) வர்த்தமான தசையில் ப்ரக்ருதியிலே ஸம்பந்தித்து "தைவீஹ்யேஷா குணமயீ மமமாயாதுரத்யயா" என்னும்படி காணவரியனானாலும், (இனியித்யாதி) நெஞ்சுக்கினியனுமாய்த் தன்னுடைமையை மஹாபலிபக்கலிலே வஞ்சித்தானாய்க் கொண்டளந்தவன் ஹ்ருதயத்திலே நின்று மறக்கவொட்டான். அங.

அரு — எண்பத்துமூன்றாம்பாட்டு.— (இனிஇத்யாதி) மாயன்-சேதநரைப் ப்ரக்ருதியிலே யிடு மவனென்றாலும், ஒருவர்க்குங்காணப்போகாதவனென்றாலும் மாவலிக்குக்காட்டினாற்போலேதானே காட்டக்கண்டவனுக்கு ஸுலபனென்றபடி. அங.

உளனாயநான்மறையினுட்பொருளை, உள்ளத்
துளனாகத்தேர்ந்துணர்வரேலும்—உளனாய
வண்டாமரைநெடுங்கண் மாயவனையாவரே
கண்டாருகப்பர்கவி. அச.

அ்.—நால் மறையின் உள் பொருள் உளனாயனே (5) உள்ளத்து உளனாகதேர்ந்து உணர்வரேலும் (9) வண் தாமரை நெடும் கண் மாயவன் உளனாயனே கவி உகப்பர் கண்டார் யாவர். (19)

அர்—நால்வகையான வேதங்களி லுட்பொருளாக உள்ளவனை (ரு) ஹ்ருதயத்தி லிருக்கிறவனாக ஆராய்ந்து அறிந்தார்களேயாகிலும் (கூ) அழகிய தாமரைபோல் நீண்ட திருக்கண்களையுடையனாய் ஆஸ்சர்யபூதனா யுள்ளவவனைக் கவிபாடுகைக் காசைப்படுவாரல்லது ஸாக்ஷாத்கரிப்பவர் எவர். (ககூ) அச.

வ்யா.—எண்பத்துநாலாம்பாட்டு.—(உளனித்யாதி) நிர்த்தோஷ ப்ரமாணஸித்தனாகையாலே தானுளனாய் வேதத்தாலே ப்ரதிபாதிக்கப் பட்டவனை. (உள்ளத்தித்யாதி) கர்மயோகத்தாலே ஜ்ஞாநயோகம் கைவந்து ஜ்ஞாநயோகத்தாலே காணவாசைப்பட்டாரேயாகிலும். (உளனாயவித்யாதி) "யஸ்யாகபாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ-யதா கப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" என்று ஸ்ருதிப்ரஸித்தமான கண்ணழகையுடைய ஸர்வேஸ்வரனை ஆர்காணவல்லார். (உகப்பர்கவி) பின்னைக்காணும்படி எங்ஙனேயென்னில் அவனுடைய ஸ்தோத்ரத்தையுகக்குமத்தனை. அச.

கவியினார்கைபுனைந்துகண்ணார்கழல்போய்ச்
செவியினார்கேள்வியராய்ச்சேர்ந்தார்—புவியினார்
போற்றியுரைக்கப்பொலியுமேபின்னைக்காய்
ஏற்றுயிரையட்டானெழில். அரு.

அ்.—கவியினார் கை புனைந்து கண் ஆர் கழல் போய் (7) செவியின் ஆர் கேள்வியராய் சேர்ந்தார் புவியினார் (12) பின்னைக் காய் எற்று உயிரை அட்டான் எழில் போற்றி உரைக்க பொலியுமே? (20)

அர்.— ஸ்தோத்ரம்செய்கிறவர்களாய்க்கொண்டு கைகளைக் கூப்பிக் கண்களை யழகிய திருவடிகளிலே போம்படிசெய்து (எ) காதில் நிறைந்த (ததீயகுண) ஸ்ரவணத்தையுடையரா யடைந்த பூலோகத்தார் (கஉ) நப்பின்னைப்பிராட்டிக்காக எருதி னுயிரைப் போக்கின ஸர்வேஸ்வரனுடைய ஸௌந்தர்யத்தை ஸ்துதித்துச் சொல்லில் ஸம்ருத்தமாகுமோ? (அதைப்பூர்ணமாகச் சொல்லப்போமோ)? உ0.அரு

வ்யா.— அவ.— எண்பத்லைந்தாம்பாட்டு.— (கவியினுர்) ஒரு த்தராலறியப்போகாதாகில் "வாழ்த்துவார்பலராக" என்னும்படியே பூமியிலுள்ளாரெல்லாருங் கூடினுலும் அறியவும் ஏத்தவும் போமோ வென்னில், ஒண்ணுதென்கிறது.

(கவியினுர்கைபுனைந்து) ஸ்தோத்ரத்தாலே அபிமாந சூந்யராய்த்தொழுது. (கண்ணுர்கழல்போய்) கண்விலக்ஷணமான திருவடிகளையடைந்து. (செவியினுரித்யாதி) செவிநிறைந்த கேள்வியையுடையராய்ச்சேர்ந்தாரான பூமியிலுள்ளாரெல்லாம். (போற்றியுரைக்கப்பொலியுமே) எல்லாருங்கூடப்போற்றியுரையாநின்றால் அங்குத்தைக்கேதேனும் அதிசயத்தைப்பண்ணப்போமோ? (பின்னைக்காயித்யாதி) நப்பின்னைப் பிராட்டி கலவிக்கு ப்ரதிபந்தகமான வ்ருஷபங்களையடர்த்த வொருசெயலையும் வடிவழகையும் முடியச்சொல்லப்போமோ. அ௫.

அரு.— எண்பத்தைந்தாம்பாட்டு.— பொலியுமே - இவர்களாலே ஏத்தி அதிசயத்தை யுண்டாக்கப்போமோ? ஏத்தி முடியாதென்றபடி.     அ௫.

எழில்கொண்டுமின்னுக்கொடியெடுத்து, வேகத்
தொழில்கொண்டுதான்முழங்கித்தோன்றும் — எழில்
நீர்மேகமன்னநெடுமால்நிறம்போலக்     [கொண்ட
கார்வானங்காட்டுங்கலந்து.     அசுஅ.

அந்.— எழில்கொண்டு மின் கொடி எடுத்து வேகம் தொழில் கொண்டு (6) தான் முழங்கி தோன்றும் கார் வானம் (11) எழில் கொண்ட நீர் மேகமன்ன நெடுமால் நிறம்போல கலந்து காட்டும். (18)

அர்.— அழகை யுடையதாய் மின்னலை த்வஜமாக வெடுத்து அதிவேகமான கமநவ்யாபாரத்தை யுடைத்தாய்க்கொண்டு. (சு) தானே கர்ஜநம்செய்துகொண்டுவிளங்காநின்ற மழைக்காலத்து மேகமானது (கக) அழகுபடைத்த ஜலபாநம்செய்திருக்கிற மேகம்போன்ற ஸர்வேஸ்வரனுடைய ஸௌந்தர்யத்தைப்போல் ஒத்துக் காட்டாநிற்கும். (கஅ)     அசு.

வ்யா.— அவ.—எண்பத்தாறும்பாட்டு.— (எழில் ஸ்வரூபரூபங்கள் பரிச்சேதிக்கப்போகாது; உபமாநத்திலே சிறிதுசொல்லலாமித்தனையென்கிறது.

(எழிலித்யாதி) எழிலையுடைத்தான மின்னைக்கொடியாகவெடுத்து. (வேகத்தொழிலித்யாதி) வேகத்தையுடைத்தான தொழிலைக் கொண்டுதானே முழங்கித் தோன்றாநின்றகார்வானம்.(எழிலித்யாதி) ஆகளமாக நீரைப்பாநம்பண்ணின காளமேகம்போலே யிருந்துள்ள ஸர்வேஸ்வரனுடைய நிறம்போலே. (காரித்யாதி)கார்காலத்திலே மேகமானது கலந்து காட்டும். அசு.

அரு.— எண்பத்தாறாம்பாட்டு,— ஆகளம் - ஆகண்டம்-கழுத்து மட்டாக வென்றபடி. கலந்துகாட்டும் — ஒத்துக்காட்டு மென்றபடி.

**கலந்துமணியிமைக்குங்கண்ணா, நின்மேனி**
**மலர்ந்துமரதகமேகாட்டும்—நலந்திகழும்**
**கொந்தின்வாய்வண்டறையும் தண்டுழாய்க்கோமானை**
**அந்திவான்காட்டுமது. அஎ.**

அந்.—கண்ணா! மணி கலந்து இமைக்கும் நின் மேனி மரதகம் மலர்ந்து காட்டும்.(9)நலம் திகழும் கொந்தின்வாய் வண்டு அறையும் தண் துழாய் கோமானை அது அந்தி வான் காட்டும். (21)

அர்.—கண்ணனே! கௌஸ்துபமணியோடு சேர்ந்து ப்ரகாசியாநின்றுள்ள உன்னுடைய திருமேனியை மரதகமணி சுற்றும் பரவாநின்றகாந்தியையுடையதாய்க்கொண்டு தர்சிப்பிக்கும். (க) ஸௌந்தர்யத்தினால் விளங்காநின்ற பூங்கொத்தி லிருந்து வண்டுகள் சப்தியாநின்ற குளிர்ந்த திருத்துழாய்மாலையையுடைய ஸ்வாமியை அந்த ஸந்த்யாகாலத்திலுண்டானமேகமானது தர்சிப்பியாநிற்கும்.(உக)அஎ

வ்பா,— அவ.—எண்பத்தேழாம்பாட்டு.—(கலந்து) பின்னையு முபமாநத்திலே பார்க்கிறார்.

(கலந்தித்யாதி) ஸ்ரீகௌஸ்துபத்தோடேகலந்து ப்ரகாசியாநின்ற உன்னுடைய திருமேனியை, ப்ரகாசியாநின்ற ஸ்ரமஹரமான மரதகமே காட்டாநின்றது. (நலந்திகழுமித்யாதி)அழகுதிகழாநின்ற கொத்திலே வண்டடையாநின்ற திருத்துழாயையுடைய ஸர்வேஸ்வரனை ஸந்த்யாராகத்தாலே சிவந்தமேகங்காட்டாநின்றது. அஎ.

அரு.— எண்பத்தேழாம்பாட்டு — கண்ணா - கண்ணனே; கலந்து மணியிமைக்கும-மணியோடேகலந்து,மணியோடே கூட. இமைக்கும்-ப்ரகாசிக்கும. அஎ.

அதுநன்றிதுதீதென்றையப்படாதே
மதுநின்றதண்டுழாய்மார்பன்—பொதுநின்ற
பொன்னங்கழலேதொழுமின், முழுவினைகள்
முன்னங்கழலும் முடிந்து. அஅ.

அந.—அது நன்று இது தீது என்று ஐயப்படாதே(6)மது நின்ற தண் துழாய்மார்பன் (11) பொது நின்ற பொன் அம் கழல் தொழுமின் (17) முழுவினைகள் முன்னம் முடிந்து கழலும். (21)

அர்.—அந்தபகவத்விஷயம் நல்லது, இந்தஸம்ஸாரம் தீயது, என்று (என்ற அம்சத்தில்) ஸம்சயியாமல்(சு)தேன் நிறைந்த குளிர்ந்த திருத்துழாய்மாலையைத்திருமார்பிலுடைய ஸ்ரியஃபதியினுடைய (கக) (ஸமஸ்த ஜநங்களுக்கும் (ஆஸ்ரயிக்க) ஸாதாரணமாயிருக்கிற பொன்போலழகிய திருவடியை யாஸ்ரயியுங்கோள். (கஎ) ஸமஸ்தபாபங்களும் ஆஸ்ரயிப்பதற்கு முன்னமே (ஆஸ்ரயிக்கவொருப்பட்டபோதே) நசித்து (உங்களைவிட்டு) நீங்கும். (உக) அஅ.

வ்யா.—அவ.—எண்பத்தெட்டாம்பாட்டு.— (அதுநன்று) அது நன்றிதுதீதென்று ஸம்சயியாதே ஸர்வேஸ்வரனையாஸ்ரயியுங்கோள்; உங்களுடைய ப்ரதிபந்தகங்கள் வேறொருவ்யக்திக்காகாதபடி போமென்கிறார்.

(அதுநன்றித்யாதி) பகவத் ப்ராவண்யம் நன்று, விஷயப்ராவண்யம் பொல்லாதென்று ஸம்சயப்படாதே. (மதுநின்றவித்யாதி) ஸம்சயிக்கவொண்ணாதபடி ஆதிராஜ்யஸூசகமான திருத்துழாயையுடையவனுடைய திருவடிகளை ஆஸ்ரயியுங்கோள். (முழுவினையித்யாதி) நீங்கள் பண்ணின பாபம் வ்யக்த்யந்தரத்துக்குஆகாதபடி நசிக்கும். அஅ.

அரு.— எண்பத்தெட்டாம்பாட்டு.— ஸம்சயப்படாதே - பொல்லாதது பொல்லாததே நல்லது நல்லதே; இதில்சம்சயமில்லை என்றபடி. முடிந்துகழலும். அஅ.

முடிந்தபொழுதில்குறவாணர், ஏனம்
படிந்துழுசால்பைந்தினைகள்வித்தத்—தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய்விண்திறக்கும்வேங்கடமே, மேலொருநாள்
தீங்குழல்வாய்வைத்தான்சிலம்பு. அகூ.

அ்.—முடிந்தபொழுதில் குறவாணர் ஏனம் படிந்து உழு சால் பை தினைகள் வித்த (9) தடிந்து எழுந்த வேய் கழை போய் விண் திறக்கும் வேங்கடமே ( 17 ) மேலொருநாள் தீ குழல் வாய்வைத் தான் சிலம்பு. (உஉ)

அர்.— கிழத்தனத்திலுள்ள குறவர்கள், பன்றி யூன்றி யுழுத சாலிலே ஶ்லாக்யமான தினைகளை விரைக்க, (அ) (அச்சாலில்) வெட்டுண்டு (பின்னும்) முளைத்த மூங்கிலின் நுனி உயர்ந்து ஆகாசத்தைப் பிளவாநின்ற திருமலையே (கஎ) பூர்வகாலத்தில் ஸுந்தரமான வேணுவைத் திருப்பவளத்திலமைத்த க்ருஷ்ணனுடைய பர்வதம். (உஉ) அகூ.

வ்யா.— அவ.— எண்பத்தொன்பதாம்பாட்டு.— (முடிந்த) திருமலையில் குறவரோடு திருவேங்கடமுடையானோடு வாசியற எல்லா முத்தேஶ்யமாயிருக்கிறபடி.

(முடிந்தவித்யாதி) சரமாவஸ்த்தையிலே வர்த்திக்கிற குறவர்க்கு நிர்வாஹகர். (ஏனமித்யாதி) தங்களுக்கு பலமின்றிக்கே பன்றியுழுத சாலிலே அழகியதினைகளைவித்த. (தடிந்தித்யாதி) தினைவிரைக்கைக்காக வெட்டியெழுந்த வேய்ங்கழைபோய் விண்ணைத்திறக்கும் திருமலை. (மேலித்யாதி) பண்டொருநாள் இனியகுழலை வாயிலேவைத்துத் திருவாய்ப்பாடியிலுள்ளாரை வசீகரித்தாற்போலே யொரு மலையிலேநின்று ஸம்ஸாரிகளை வசீகரிக்க நிற்குமவன் சிலம்பு. அகூ.

அரு — எண்பத்தொன்பதாம்பாட்டு.— முடிந்தகாலம் - வ்ருத்தாப்யமாய், அத்தால் சரமாவஸ்த்தை யென்கிறது. மூங்கில் - அலர்ந்து வெட்டிப்போகட்டது நிலப்பண்பாலே கிழங்கு குருத்திட்டு கழைநுனி ஆகாசத்தைக்கிட்டக்கிளருமென்றபடி. சிலம்பு - மலைக்கும்பேர். அகூ.

**சிலம்பும் செறிகழலும் சென்றிசைப்ப. விண்ணு**
**றலம்பியசேவடிபோய், அண்டம்—புலம்பியதோள்**
**எண்டிசையும்சூழ விடம் போதாதென்கொலோ**
**வண்டுழாய் மாலளந்தமண்.** கூ௦.

அ்.— சிலம்பும் செறி கழலும் விண் ஆறு அலம்பிய சே அடி போய் (9) அண்டம் சென்று இசைப்ப அண்டம் புலம்பிய தோள்

(15) எண்திசையும் சூழ வண் துழாய் மால் அளந்த மண் இடம்போ தாது. என்கொலோ? (24)

அர்.— கால் சலங்கையையும் பொருந்தச் சாத்தின வீரத்தண்டையையுமுடையதாய் ஆகாசகங்கையினால் விளக்கப்பட்ட அழகிய திருவடி வளர்ந்து (கூ) அண்டபித்திவரையில் சென்று சப்திக்க, (அப்போது) அண்டத்திலுள்ள தேவர்கள் ஸ்தோத்ரஞ் செய்யாநின்ற திருத்தோள் (கடு) எட்டுத்திக்குகளையும் வ்யாபிக்க, ஸுந்தரமான திருத்துழாய்மாலையை யுடைய ஸர்வேஶ்வர னளந்த பூமியானது (அளக்கைக்கு) இடம்போராமலிருந்தது. (உச) கூ0.

வ்யா.— அவ.— தொண்ணூறாம்பாட்டு.— (சிலம்பும்) திருமலையில் மூங்கில்களகப்பட உத்தேஶ்யமானவிடத்தில் அதில் நின்றவன் உத்தேஶ்யமாகச் சொல்லவேண்டாவிறே என்கிறார்.

(சிலம்பித்யாதி) சிலம்பையும் செறிகழலையுமுடைத்தாய் கங்கையிலே விளக்கின திருவடிபோய் அண்டம் சென்றிசைப்ப. (புலம்பியதோள்) “ஸஹஸ்ரஶோ ஜஹ்ருஷு-ஸங்கைஸ்ஸுராணாம்” என்று தேவர்களாலே திரள் திரளாகநின் றேத்தப்பட்டதோள். எட்டுத்திக்கும்சூழ விடம்போராது. (என்கொலோவித்யாதி) அளக்குமவன் அளக்கப்படுமத்தை உண்டாக்கிக்கொண்டன்றோ அளப்பது. கூ0.

அரு.—தொண்ணூறாம்பாட்டு.— “திருவடி அண்டம் சென்றிசைப்ப” என்றுகிழும் “அண்டம்புலம்பியதோள்” என்றுமேலும் அண்டசப்தம்கூட்டுவது; அப்போது அண்டத்திலுள்ளார் ஸ்தோத்ரம் பண்ணப்பட்டதோளென்றபடி. (அளப்பது)இடம்போராதத்தை எப்படி அளந்தானென்றபடி. கூ0.

மண்ணுண்டு பேய்ச்சிமுலையுண்டும், ஆற்றாதாய்
வெண்ணெய்விழுங்கவெகுண்டு, ஆய்ச்சி—கண்ணிக்
கயிற்றினல்கட்டத்தான் கட்டுண்டிருந்தான்
வயிற்றினோடாற்றாமகன். கூக.

அந்.— வயிற்றினோடு ஆற்றா மகன் மண் உண்டும் பேய்ச்சி முலை உண்டும் (8) ஆற்றாதாய் வெண்ணெய் விழுங்க ஆய்ச்சி வெகுண்டு கண்ணி கயிற்றினல் கட்ட தான் கட்டுண்டு இருந்தான் (19)

அர்.—வயிற்றைக்கொண்டு ஆறியிருக்கமாட்டாத பிள்ளையாகிய க்ருஷ்ணன் மண்ணை யமுதுசெய்தும் பூதனையின் முலைப்பாலைய

முதுசெய்தும் (கூ) த்ருப்தியில்லாதவனாய்க்கொண்டு வெண்ணெயை யமுதுசெய்ய அதற்கு யசோதாதேவி கோபித்து முடிகளையுடைய கயிற்றினால்கட்டினபோது தான் பந்தப்பட்டிருந்தான்.(கக). கூக.

வ்யா.—அவ.— தொண்ணூற்றோராம்பாட்டு.— (மண்ணுண்டு) ஸாமாந்யேந ஜகத்தை உண்டும் ப்ரதிகூலருடைய ப்ராணனையும் அநுகூலர் ஸ்பர்சித்த த்ரவ்யத்தையுண்டும் பர்யாப்தமாயிற்றில்லை யென்கிறது.

(மண்ணுண்டு பேய்ச்சிமுலையுண்டு மாற்றாதாய்) ஜகத்தை வயிற்றிலேவைத்தும், பூதனையுடைய ப்ராணனையுண்டும், இரண்டாலும் அபர்யாப்தனாய். (வெண்ணெய்விழுங்க வெகுண்டாய்ச்சி)இவனுக்கு வெண்ணெய் களவுகாண்கையிலுள்ள ஸ்நேஹம் போருமிறே அவளுக்கு ரக்ஷிக்கையிலும். வெண்ணெய் களவுபோயிற்றென்ற மாத்ரத்திலே இவன்முகத்தில் பையாப்பைக்கண்டு தாயார்சீறி. (கண்ணிக் கயிறித்யாதி) பலபிணையுடைத்தான கயிற்றிலேயவள் கட்டுவதற்குப் பரிஹாரமின்றிக்கே கட்டுண்டிருந்தான். "தாயெடுத்த சிறுகோலுக்குளைந்து" "நையுண்வார்த்தையுளன்னை கோல்கொள்ள நீயுந் தாமரைக்கண்கள் நீர்மல்கப் பையவேநிலையும்" "முழுதும்வெண்ணெயளைந்துதொட்டுண்ணும் முகிழிளஞ் சிறுத் தாமரைக்கையும்" (வயிற்றினோடாற்றாமகன்) இதுக்குப் பிள்ளை யுறங்காவில்லிதாஸர் வயிற்றை வண்ணானுக்கிட்டாலோவென்று பணித்தார். கூக.

அரு.—தொண்ணூற்றோராம்பாட்டு.— அவதாரிகை (ஸாமாந்யேந இத்யாதி). வெகுளவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவனுக்கித்யாதி). பயப்பட்டிருக்குமோவென்ன அருளிசெய்கிறார் (தாயெடுத்த இத்யாதி). ரஸோக்தி யருளிச்செய்கிறார்(இதுக்குப் பிள்ளையித்யாதி). கூக.

மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்
மகனாமவன்மகன்தன்காதல்—மகனைச்
சிறைசெய்தவாணன்தோள் செற்றான்கழலே
நிறைசெய்தென்னெஞ்சே நினை. கூஉ.

அந்.—ஒருவர்க்கு மகன் அல்லாத மா மேனி மாயன் (6)மகனும் அவன் மகன்தன் காதல் மகனை சிறைசெய்த (12) வாணன் தோள் செற்றான் கழல் என் நெஞ்சே! நிறைசெய்து நினை. (20)

அர்.—(நித்யஸித்தனாகையாலே ஒருவர்க்கும் பிள்ளையாக ஆகாதவனாய் ஶ்லாக்யமான்திருமேனியையுடையனாய் ஆஶ்சர்யகரமானகுணசேஷ்டிதங்களையுடையனாய், (கூ) தேவகீவஸுதேவர்களுக்குப் பிள்ளையாகிய அந்தக் க்ருஷ்ணனாகிய தனக்குப் பிள்ளையாகிய ப்ரத்யும்நனுக்கு ப்ரேமாஸ்பதமான பிள்ளையாகிய அநிருத்தனைச் சிறையில்வைத்த (கஉ)பாணாஸுரனுடைய தோள்களைத் துணித்தவனான க்ருஷ்ணனுடைய திருவடிகளை என்னுடைய மநஸ்ஸே! பூர்ணமாகத்யாநம்செய். (20) கூஉ.

வ்யா.— தொண்ணூற்றிரண்டாம் பாட்டு.— (மகனித்யாதி) "பிதாபுத்ரேணபித்ருமான்" என்னும்படி யில்லாமையாலே ஸர்வேஶ்வரனுக்கு அலப்ய லாபமிறே புத்ரலாபம். தனக்கில்லாத தொன்றிலேயிறே ஸ்நேஹம் ஜநிப்பது, புத்ரனிற்காட்டில் பௌத்ரன்பக்கல் ஸ்நேஹமுண்டிறே. ஸ்நிக்தனுமாய் பௌத்ரனுமான அநிருத்தாழ்வானைச் சிறைசெய்த சீற்றத்தாலே பாணனுடைய தோளைக்கழித்தவனுடைய திருவடிகளை, நெஞ்சே! அவன் ப்ரதிபந்தகத்தைப் போக்க ஸ்நேஹித்தநுபவி. கூஉ.

அரு.—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.—ஒருவர்க்கும் மகனல்லாத ஸர்வேஶ்வரனுக்கு மகனாமென்கைக்கு அதிசயமேதென்ன, அருளிச்செய்கிறார் (பிதாபுத்ரேணேத்யாதி) பிதா-லோகபிதாவானஸர்வேஶ்வரன், புத்ரேண-புத்ரபூதரான சேதநராலே, பித்ருமாந்-பித்ருமானே. இவர்கள் வயிற்றிலேபிறந்து அந்தப்பிறப்பைத்தனக்கதிசயமாக நினைத்திருக்குமென்று ஶ்ருதிக்கர்த்தம். புத்ரலாபம்-புத்ரனாகை. புத்ரனாகை அலப்யலாபமோவென்ன அருளிச்செய்கிறார் (தனக்கில்லாதஇத்யாதி) கூஉ.

நினைத்துலகிலார்தெளிவார் நீண்டதிருமால் [துலவு
அனைத்துலகுமுள்ளொடுக்கி யால்மேல் —கனைத்
வெள்ளத்தோர்பிள்ளையாய் மெள்ளத்துயின்றானை
உள்ளத்தேவைநெஞ்சேயுய்த்து. கூங.

அர்.— நெஞ்சே! நீண்ட திருமால் உலகில் நினைத்து தெளிவார் ஆர். கனைத்து உலவு வெள்ளத்து ஆல்மேல் ஓர் பிள்ளையாய் (13) அனைத்து உலகும் உள் ஒடுக்கி மெள்ள துயின்றானை உய்த்து உள்ளத்தே வை, (22)

அர்.— மனமே! (த்ரிவிக்ரமனாய்) வளர்ந்த ஸர்வேஸ்வரனை லோகத்தில் த்யாநஞ்செய்து அறியுமவர் யார்! (ஒருவருமில்லை). (ஆயினும்)(ப்ரளயகாலத்தில்)சர்ஜித்துத் திரியாநின்ற ப்ரவாஹத்தில் ஆலிலையின்மேலே அத்விதீயனான பிள்ளையாயிருந்து (கக) ஸமஸ்த லோகங்களையும் வயிற்றிலே யடக்கிக்கொண்டு மெள்ளக் கண்வளர்ந்த அந்த ஸர்வேஸ்வரனை யாராய்ந்து ஹ்ருதயத்தி லிருத்து. (உஉ)கூங.

வ்யா.— தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.— (நினைத்துலகிலார் தெளிவார்) அவனையநுபவித்துத் தந்தாமுக் குரியராக வல்லாருண்டோ? (நீண்டவித்யாதி) லோகத்தையெல்லா மளக்கைக்காகவளர்ந்து அளந்தலோகத்தை ஒருவயிற்றிலேவைத்து ஒருபவனாயிருப்பதொரு ஆலிலையிலே, (கனைத்துலவித்யாதி) சப்தித்துப்பரந்து வளராநின்றுள்ள வெள்ளத்திலே யுளனான பிள்ளையாய், (மெள்ள வித்யாதி) வயிற்றிலேபுக்க லோகம்தளராதபடிக் கீடாக மெள்ளக் கண்வளர்ந்தவனை. (நெஞ்சே யுய்த்துள்ளத்தேவை) கொடுவருகையாவது-அவன் புகுரப்புக்கால் விலக்காதொழிகை. கூங.

அரு.— தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.—(உய்த்து) உய்கை-நடத்துகையாய் அவனைக்கொண்டு வருகை. கூங.

உய்த்துணர்வென்னு மொளிகொள்விளக்கேற்றி
வைத்தவனைநாடி வலைப்படுத்தேன்—மெத்தெனவே
நின்றானிருந்தான் கிடந்தானென்னெஞ்சத்துப்
பொன்றாமைமாயன் புகுந்து. கூச.

அந்.—உணர்வு என்னும் ஒளிகொள் விளக்கு ஏற்றி வைத்து அவனை உய்த்து நாடி வலைப்படுத்தேன். (10) மாயன் என் நெஞ்சத்து பொன்றாமை புகுந்து மெத்தெனவே நின்றான், இருந்தான், கிடந்தான். (19)

அர்.—ஜ்ஞாந மென்கிற ப்ரகாசத்தையுடைய திருவிளக்கை(ஹ்ருதயத்தில்) ஏற்றி வைத்து அந்த ஸர்வேஸ்வரனை யாராய்ந்து கிட்டி வலையிலகப்படுத்தினேன். (எனக்குவசமாக்கிக்கொண்டேன்). (கo) ஆஸ்சர்யபூதனான அவனும் என்னுடைய ஹ்ருதயத்திலே விட்டுப் பிரியாமல் ப்ரவேசித்து மெள்ள எழுந்தருளி நின்றான்; வீற்றிருந்தான்; பள்ளிகொண்டான். (கக) கூச.

வ்யா.— தொண்ணூற்றுநாலாம்பாட்டு:— (உணர்வென்னுமொளிகொள்விளக்கேற்றி) உணர்வாகிற தைலவர்த்திகளா லுண்டான

அழுக்கின்றிக்கே திணுங்கினதேஜஸ்ஸை ஒளிவிளக்கேற்றி உய்த்து வைத்து. (அவனை நாடி வலைப்படுத்தேன்) கொடுவந்துவைத்து அநுஸந்தித்து ஆநுகூல்யமாகிற வலையிலே யகப்படுத்தினேன். (மெத்தெனவேயித்யாதி) அவனுமிவ்வலையிலே யகப்பட்டு விச்சேதமின்றிக்கே என்னுடைய நெஞ்சிலே நிற்பதிருப்பது கிடப்பதானான். "பொன்றுமை" என்றது - நான் நசியாமலென்னவுமாம்; ஹ்ருதயத்திலே ஸ்திதயாதிகளுக்கு விச்சேதமின்றிக்கே யென்னவுமாம். கூசு.

புகுந்திலங்குமந்திப்பொழுதத்து, அரியாய்
இகழ்ந்தவிரணியனதாகம்—சுகிர்ந்தெங்கும்
சிந்தப்பிளந்ததிருமால் திருவடியே
வந்தித்தென் னெஞ்சமேவாழ்த்து. கூ௭.

அ.—புகுந்து இலங்கும் அந்திப்பொழுதத்து அரியாய் இகழ்ந்த இரணியனது ஆகம் சுகிர்ந்து (8) எங்கும் சிந்த பிளந்த திருமால் திருவடியே என் நெஞ்சமே! வந்தித்து வாழ்த்து. (17)

அர்.— ப்ரவேசித்து விளங்காநின்ற ஸந்த்யாகாலத்தில் நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு, (தன்னை) நிந்தித்த ஹிரண்யனுடைய சரீரத்தைப் பிளந்து (அ) எங்கும் சிதறும்படியாகத் துண்டித்த ஸ்ரீயஃபதியினுடைய திருவடிகளையே என்னுடைய மனமே! தண்டன் ஸமர்ப்பித்து மங்களாசாஸநம் பண்ணு, (கஎ) கூ௭.

வ்யா.— அவ.— தொண்ணூற்றேழாம்பாட்டு.— (புகுந்து) தம்முடைய பக்க லவன் ஸாலபநுனபடியைக்கண்டு ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானுக்கு ஸாலபநுனபடியைச்சொல்லுகிறார்.

(புகுந்தித்யாதி) ஹிரண்யன் வரங்கொள்ளாத ஸந்த்யையிலே. "புகுந்திலங்கும்" என்றது - ஸந்த்யையினுடைய ப்ரவேசத்தைச் சொல்லுகிறது. (அரியாயித்யாதி) ஆஸ்ரித விரோதி யாகையாலே கொன்றதென்ற மாத்ரமின்றிக்கே சீற்றத்தினுடைய உரமிருந்தபடி. (திருமால்திருவடியே) ஆஸ்ரிதர்பக்கல் ஓத்துக்கடி பிராட்டியருகே யிருக்கை யென்கிறது. (வந்தித்தென்னெஞ்சமேவாழ்த்து) வந்திக்கைக்கும் விஷயமவளோடே கூடினவன்போலே கூ௭.

அரு.—தொண்ணூற்றேழாம்பாட்டு.— சுகிர்ந்து எங்கும்சிந்தப்பிளந்த - அவயவத்தை வகிர்ந்து எங்கும்சிந்தும்படிபிளந்த. இப்

படி விசேஷிப்பானென், கொன்றென்ன வமையாதோவென்ன அருளிச்செய்கிறார் (ஆஸ்ரிதரித்யாதி). கரு.

வாழ்த்தியவாயராய்வானோர்மணிமகுடம்
தாழ்த்திவணங்கத்தழும்பாமே—கேழ்த்த
அடித்தாமரைமலர்மேல்மங்கைமணாளன்
அடித்தாமரையாமலர். கசு.

அந்.— கேழ்த்த அடி தாமரை மலர்மேல் மங்கை மணாளன் அலராம் அடித்தாமரை (8) வானோர் வாழ்த்திய வாயராய் மணி மகுடம் தாழ்த்தி வணங்க தழும்பாமே. (16)

அர்.—அழகிய தாளையுடைய தாமரைப் பூமேல்நித்யவாஸம்செய்கிற பிராட்டிக்கு வல்லபனான ஸ்ரியஃபதியினுடைய மலர்ந்த தாமரைப்பூப்போன்ற திருவடியை (அ) நித்யஸூரிகள் மங்களாசாஸநம் செய்த திருப்பவளத்தையுடையராய்க்கொண்டு ரத்நங்களிழைத்த கிரீடங்களை வணக்கி நமஸ்கரிக்கில் (அதினாலத்திருவடியில்) தழும்புண்டாகாதோ? (கசு) கசு.

வ்யா.— அவ.— தொண்ணூற்றாறும்பாட்டு.— (வாழ்த்திய) நித்யஸூரிகளுடையபரிமாற்றம் பொறாதஸௌகுமார்யத்தையுடையவனென்கிறது.

(கேழ்த்தவித்யாதி) நிறத்தையுடைத்தான தாமரைமேலேயிருக்கும் பெரியபிராட்டியாருடைய திருக்கைகளாலே வருடும்போதும் கூசிப்பரிமாறவேண்டும் ஸ்ரியஃபதியுடைய திருவடிகளை நித்யஸூரிகள் ஸ்தோத்ரம் பண்ணப்பட்டவாயையுடையராய் முடிகளைத்தாழ்த்தி வணங்க அது பொறாமேதழும்பாம். கசு.

அரு.—தொண்ணூற்றாறும்பாட்டு.—கேழ்-நிறம். அடித்தாமரை அடிக்கொண்டிருக்கிற தாமரை. கசு.

அலரெடுத்தஉந்தியானங்கெழிலாய
மலரெடுத்தமாமேனிமாயன்—அலரெடுத்த
வண்ணத்தான்மாமலரான்வார்சடையான், என்றிவர்கட்
கெண்ணத்தானாமோவிமை. கஎ.

அந்.— அலர் எடுத்த உந்தியான் எழிலாய மலர் எடுத்த மா மேனி மாயன் ஆங்கு(10) அலர் எடுத்த வண்ணத்தான் மா மலரான் வார் சடையான் என்று இவர்கட்கு இமை எண்ணத்தானாமோ? (21)

அர்.— தாமரைப்பூவைத் தூக்கி தர்சிப்பிக்கிற திருநாபியையுடையனாய் அழகிய புஷ்பத்தைக் காண்பியாநின்ற ஶ்லாக்யமான திருமேனியையுடையனாய் ஆஶ்சர்யகுணசேஷ்டிதனான ஸர்வேஶ்வரன் செய்த வ்யாபாரங்களில் (கo) புஷ்பத்தை ப்ரகாசிப்பிக்கிற ஸௌந்தர்யத்தையுடைய இந்த்ரன், ஶ்லாக்யமான கமலப்பூமேல் வஸிக்கிற ப்ரஹ்மா, தொங்குகிற சடையையுடைய ருத்ரன் என்கிற இவர்களுக்கும் கொஞ்சமாகிலும் நினைக்கத்தான்போமோ (உக) கூஎ.

வ்யா.— தொண்ணூற்றேழாம்பாட்டு — (அலரெடுத்த வுந்தியான்) அலரைக்காட்டாநின்ற திருநாபியையுடையனாய். (ஆங்கித்யாதி) எழிலையுடைத்தாயிருந்துள்ள மலர்காட்டாநின்றதிருமேனியையுடைய ஆஶ்சர்யபூதன். (அலரித்யாதி) இந்த்ராதிகளுக்கும் அவனை மநோரதிக்கத்தான்போமோ ? (இமை) விசாரி; சற்றுப்போதென்றுமாம். கூஎ.

அரு.— தொண்ணூற்றேழாம்பாட்டு.— அலரெடுத்தவண்ணத்தான்-தாமரைமலர்போலே நிறத்தையுடைய இந்த்ரன். எடுக்கை-உயர்த்துகையாகையாலே காட்ட என்கிறது. கூஎ.

இமம்சூழ்மலையு மிருவிசும்புங்காற்றும்
அமஞ்சூழ்ந்தறவிளங்கித்தோன்றும்—நமன்சூழ்
நரகத்துநம்மைநணுகாமற்காப்பான்
துரகத்தைவாய்பிளந்தான்தொட்டு. கூஅ.

அந்.—இமம் சூழ் மலையும் இரு விசும்பும் காற்றும் (6) அமம் சூழ்ந்து அற விளங்கி தோன்றும் துரகத்தை தொட்டு (13) வாய் பிளந்தான் நமன் சூழ் நரகத்து நணுகாமல் நம்மை காப்பான். (21)

அர்.— பனியினால் வ்யாப்தமான ஹிமவத்பர்வதத்தையும் பெரிய ஆகாசத்தையும் காற்றையும்(கூ) இவையெல்லாவற்றையும் வ்யாபித்து (கீழ்ப்படுத்தி) மிகவும் திகழ்ந்து தோற்றுகின்ற கேசியாகிய குதிரையைப் பிடித்து (கங) (அதின்) வாயைக் கிழித்தவன், யமனால் ஆளப்பட்ட நரகத்தில் கிட்டாதபடி நம்மை ரக்ஷித்தருளுவன். (உக)

வ்யா.— தொண்ணூற்றெட்டாம்பாட்டு.— (இமஞ்சூழித்யாதி) ஹிமவானிலும்வாயுவின்பக்கலிலும் அமைத்துப் பாந்து அறப்ராகாசித்துத் தோன்றுகிற துரகத்தைத்தொட்டு வாய்பிளந்தான். (நமன்சூழ் நரகத்து நம்மை நணுகாமல்காப்பான்) கேசியை ஆஶ்ரிதவிரோதி

யென்றுகைதொட்டுப் பிளந்தவன் நமனாலே சூழ்க்கப்பட்டுள்ள நரகத்தில் நம்மைக்கிட்டாமல் காக்குமவன். கூஅ.

அரு.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு.—ஹிமவான், ஆகாசம், வாயு, இவைகள் தேசியுடைய பருமனுக்கும் உயர்த்திக்கும் பலத்துக்கு மொப்பாகாமையாலே இவற்றையமைத்து-தாழவிசாரித்து, அறவிளங்கி-இவற்றுக்கு மேலாக ப்ரகாசித்து. சூழ்க்கை - விசாரிக்கை. கூஅ.

தொட்டபடையெட்டும்தோலாதவென்றியான்
அட்டபுயகரத்தானந்நான்று—குட்டத்துக்
கோள்முதலைதுஞ்சக்குறித்தெறிந்தசக்கரத்தான்
தாள்முதலேநங்கட்டுச்சார்வு. கூகூ

அ.— தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான் அட்டபுயகரத்தான் அந்நான்று (7) குட்டத்து கோள் முதலை துஞ்ச குறித்து எறிந்த சக்கரத்தான் தாள்முதலே நங்கட்கு சார்வு. (17)

அர் — (திருக்கையில்) எடுத்த ஆயுதங்களெட்டினாலும் தோராமல் ஜயசீலனாய் அட்டபுயகரமென்கிற திவ்யதேசத்திலெழுந்தருளியிருக்குமவனாய் பூர்வகாலத்தில்(எ)மடுவிலுள்ள மிடுக்கையுடைய முதலை சாகும்படியாகக் குறிவைத்துப் பொகட்ட திருவாழியையுடையனான ஸ்ரிய:பதியினுடைய பாதமூலமே நமக்கு ப்ராப்யம். (கள)

வ்யா.— தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.— (தொட்டவித்யாதி) ஏதேனுமொரு ஆயுதத்தைத்தொட்டால் அவ்வாயுதத்தாலே எதிரிகளுக்குத்தோராதேவெற்றியையுடையனாய் திருவட்டபுயகரத்திலே நின்றவன். (குட்டத்தித்யாதி) "ஸ்வ தாஹ ஸௌஹம் ஸாணம் வ்ரஜே த்வத்பாதமூலம்சரணம்ப்ரபத்யே" என்னும்படியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குதவினவனுடைய திருவடிகளே நமக்கபாஸ்ரயம். கூகூ.

அரு.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.—தோலாத—தோராத. ரலயோரபேத:. கூகூ.

சார்வுநமக்கென்றும்சக்கரத்தான், தண்டுழாய்த்
தார்வாழ்வரைமார்பன்தான்முயங்கும்—காரார்ந்த
வானவருமின்னிமைக்கும்வண்டாமரைநெடுங்கண்
தேனமரும்பூமேல்திரு. க00

அ்.—சக்கரத்தான் தண் துழாய் தார் வாழ் வரை மார்பன் தான் முயங்கும் (9) கார் ஆர்ந்த வான் அமரும் மின் இமைக்கும் வண் தாமரை நெடும் கண் (19) தேன் அமரும் பூமேல் திரு நமக்கு என்னும் சார்வு. (26)

அர்.—திருவாழியையுடையனாய் குளிர்ந்த திருத்துழாய் மாலை விளங்காநின்ற மலைபோன்ற திருமார்பையுடையனான ஸர்வேஶ்வரன் தானே ஸம்ஶ்லேஷிக்குமவளாய் (௯) மேகம் நிறைந்த ஆகாசத்தில் பொருந்தியிருக்கிற மின்னலைப்போல் ப்ரகாசிக்குமவளாய் அழகியதாமரஸ புஷ்பம்போல் விசாலமான திருக்கண்களையுடையளாய் (௧௯) தேன் நிறைந்த தாமரைப்பூமேல் வஸிக்கிறவளான ஶ்ரீமஹாலக்ஷ்மி நமக்கு எப்போதும் பரமப்ராப்யை. (உ௬)                கoo.

மூன்றந்திருவந்தாதி முற்றிற்று,

பேயாழ்வார் திருவடிகளே சரணம்.

வ்யா.—நூறும்பாட்டு.—(சார்வுநமக்கென்னும்) ஆபத்துக்குஸர்வேஶ்வரன்; ஆபத்துள்ளபோதும் எற்றைக்கும் நமக்கபாஶ்ரயம் பெரியபிராட்டியார். (சக்கரத்தானித்யாதி) ரக்ஷணத்துக்குபகரணமான திருவாழியைக்கையிலே உடையவனுமாய், போகோபகரணமான திருத்துழாயையுடையவன் தானே ஸம்ஶ்லேஷியாநின்றுள்ளவளான. இதுக்குபமாநம் மேல். (காரார்ந்தவித்யாதி) மேகங்கள் செறிந்துள்ள ஆகாசத்திலே அமர்ந்தமின்னைக்காட்டாநின்றுள்ளாளுமாய், ஆஶ்ரிதரக்ஷணத்திலே குளிரநோக்காநின்ற கண்ணையுடையாளாய், தேன் செறிந்தபூவின்மேலே யிருக்கிற திரு. (சார்வுநமக்கென்னும்) பெரியபிராட்டியார் நமக்கெல்லாக்காலத்துக்கு மபாஶ்ரயம்.    கoo,

மூன்றந்திருவந்தாதி வ்யாக்யாநம்.

முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—நூறும்பாட்டு.—கீழே "குறித்தெறிந்த சக்கரத்தான்" என்கையாலே ஆபத்துக்குஸர்வேஶ்வரனென்கிறது. மின்னிமைக்கும்-மின்னைப்ரகாசிப்பிக்கை, மின்னைக்காட்டுகை; மின்போலேயிருக்கிறாளென்றபடி.                கoo.

மூன்றந்திருவந்தாதி வ்யாக்யாந அரும்பதம்,

முற்றிற்று.

அப்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

இயற்பா.

திருமழிசையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# நான்முகன் திருவந்தாதி.

இந்த க்ரந்தம்

அபாரகருணாஸாகரரான பெரியவாச்சான்பிள்ளை

திருவாய்மலர்ந்தருளிய

**மணிப்ரவாள வ்யாக்யாநஸஹிதம்**

இச்சபாபண்டிதரான

சிங்கப்பெருமாள்கோயில்

**தர்க்கதீர்த்தர்-ராமாநுஜாசார்யரால்**

எழுதப்பட்ட ப்ரதிபதஸஹிதம்

அநேக தேசாந்த்ர ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

லேககப்ரமாதாதி ஜநிததோஷங்களில்லாமல்

மேற்படி

**ராமாநுஜாசார்யராலும்**

**ஸி. முத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்**

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்) யாரால்

சென்னப்பட்டணம்,

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷரசாலையில்

ஸ்ரீ பராங்குசதிருவவதாராதி - ௫௦௦௨.

சுபக்ருத் ஸம்வத்ஸரத்தில்

பதிப்பித்துப் ப்ரசுரம் செய்யப்பட்டது.

௧௯௦௨,

விஜயதேதராம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

1882-ஸூ இந்திய ஆறுவது ஆக்ட்ப்ரகாரம் ரிஜிஸ்டர் செய்து ஸ்தாபிக்கப்பட்டது.



ப்ரதிமாதம் 5 - பாரங்களுக்குக் குறையாமல் சாஸ்வதமாய் அச்சிட்டு மூன்றுதலைமுறைகளுக்கு பேட்ரன்களுக்கு 12-காபிகளும், பாகஸ்தர்களுக்கு 5 - காபிகளும் போஷகர்களுக்கு 1 - காபியும் ப்ரதிமாதம் கொடுக்கப்படும்.

பேட்ரன் சந்தா ரூபாய் - 200, பாகஸ்தர்களுக்கு சந்தா ரூபாய் 100, போஷகர்களுக்கு சந்தா ரூபாய் 20, மொத்தமாயாவது ப்ரதி இங்லீஷ்மீ 15உக்குள் 10 - ல் ஒருபாகமாயாவது கட்டவேண்டும். இவர்களுக்குப் ப்ரவேசவர்த்தநீ க்ரமமாக ரூபாய், 2-0-0, ரூபாய், 1-0-0, ரூபாய், 0-4-0.

மற்ற விவரங்களெல்லாம் சட்டபுஸ்தகத்தில் பார்த்துக்கொள்ளவேண்டும், இதின் விலை அணா 2.

## இந்த ஸபையாரால் இதுவரையில் அச்சிட்டு ப்ரசுரம்செய்யப்பட்ட க்ரந்தங்கள்.

| | | | |
|---|---|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | மேலான காகிதம் தமிழ்லிபி | | 3—4—0 |
| பாரதாதி தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | டிடோ | | 0—5—0 |
| ராமசரமஸ்லோகம் ஸவ்யாக்யாநம் | டிடோ | | 0—3—0 |
| இயற்பா முதல்திருவந்தாதி ஸவ்யாக்யாநம் ப்ரதிபதடீகா அரும்பதஸஹிதம் | டிடோ | | 1—2—0 |
| டிடோ இரண்டாந்திருவந்தாதி | டிடோ | டிடோ | 0--12—0 |
| டிடோ மூன்றாந்திருவந்தாதி | டிடோ | டிடோ | 0--11—0 |
| டிடோ நான்முகந்திருவந்தாதி | டிடோ | டிடோ | 0--14—0 |
| தாத்பர்யஸஹித பராசர விசிஷ்ட பரம தர்மசாஸ்த்ரம் | | | 0--14—0 |

இப்படிக்கு,

கராலபாடி - ஆழ்வாரய்ய,

கார்யதர்சி - தனாதிகாரி.

நெ. 36, வெங்கடாசலமுதலிதெருவு, சென்னை.



திருமழிசையாழ்வார்திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்)

# இயற்பா

# நான்முகன் திருவந்தாதி.

இந்த க்ரந்தம் திவ்யப்ரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமான இயற்பாவில் நான்காவது ப்ரபந்தம். இதில் பாசுரங்கள்-௯௬. இதை அருளிச்செய்தவர்-பகவந் நிர்ஹேதுக ஜாயமான கடாக்ஷலப்த திவ்யஜ்ஞாநமுடைய திருமழிசையாழ்வார். இவர் தொண்டமண்டலத்தில் திருமழிசையென்னும் மஹீஸாரக்ஷேத்ரத்தில் த்வாபரயுகாதி, ௮௫ ௭௯௮௯-வது ஸம்வத்ஸரமான விபவஸம்வத்ஸரம் தைமாஸம் க்ருஷ்ணபக்ஷ ஸப்தமி குருவாரம் மகா நக்ஷத்ரம் துலாலக்நத்தி லவதரித்தவர். இவர் தகப்பனார்-பார்க்கவ மஹர்ஷி. இவர் தாயார்-கநகாங்கியென்னும் அப்ஸரஸ்த்ரீ. இவரை வளர்த்தவர்-ஹரிதாஸர். இவர் திருமழிசையிலவதரித்தவராகையால் இவருக்குத் திருமழிசையாழ்வாரென்று திருநாமமாயிற்று. இவர் ஸுதர்சநாம்சஸம்பூதர். இவருடைய நாமாந்தரங்கள் - ஸ்ரீபக்திஸாரர், மஹீஸாரபுராதீசர், பார்க்கவாத்மஜர், திருமழிசையையர், மழிசைப்பிரான் என்பவை. இவருக்கு வித்யை - அஷ்டாங்கயோகம். இவர் திருவாராதநம்- சொன்னவண்ணம்செய்தபெருமாள். ஆசார்யர்-பேயாழ்வார். சிஷ்யர்-கணிகண்

ணன், த்ருடவ்ரதர் என்பவர்கள். இவர் செய்தருளின க்ரந்தாந்தரம்-கஉ0-பாசுரங்களுள்ள திருச்சந்தவிருத்தம், இவர் மங்களாசாஸநம் செய்த திவ்யதேசங்கள் - கோயில், திருமலை, பெருமாள்கோவில், யதோக்தகாரிஸந்நிதி, திருக்குடந்தை, திருப்பேர், அன்பில், கபிஸ்தலம், திருவூரகம், திருப்பாடகம், திருக்குறுங்குடி, திருவல்லிக்கேணி, திருக்கோட்டியூர், திருஎவ்வுளூர், திருத்துவாரகை, திருக்கூடல், திருப்பார்கடல், ஸ்ரீவைகுண்டம். இவர் யோகாப்யாஸத்தினால், ௭000-ஸம்வத்ஸர மெழுந்தருளியிருந்து இதரமதங்களை நிரஸித்து விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தை ஸ்தாபித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார்.

## இவருடைய ப்ரபாவ ஸங்க்ரஹம்.

முன்பொருகாலத்தில் ஸமஸ்தருஷிகளும்சேர்ந்து இந்த பூலோகத்தில் ஸர்வோத்க்ருஷ்டமான க்ஷேத்ரமெதுவென்றாலோசித்துவிஸ்வகர்மாவைக்கொண்டு ப்ரஹ்மா ப்ரபஞ்சத்திலுள்ளஸகல க்ஷேத்ரங்களொருபுறமும், திருமழிசை யொருபுறமுமாகவைத்து நிறையிட, அப்பொழுது திருமழிசையிருந்தபக்கம் கனத்துத்தாழ்ந்திருப்பதைக் கண்டு திருமழிசைக்கு மஹீஸாரக்ஷேத்ரமென்று திருநாமம் சாத்தினார்கள். பின்பொருகால் இந்தக்ஷேத்ரத்தில் பார்க்கவர்ஷிதபோநிஷ்டரா யெழுந்தருளியிருந்ததைக்கண்டு, இந்த்ராதிகள் அந்த தபஸ்ஸை பங்கம்செய்யநினைத்து, கநகாங்கியென்னுமொரு அப்ஸரஸ்த்ரீயை அவரிடமனுப்ப, பார்க்கவர்ஷி அவளைக்கண்டு மோஹித்து யோகாப்யாஸத்தைவிட்டு அவளுடன் க்ரீடித்துக்கொண் டிருக்கையில் அவ்விருவருக்கும் திருமழிசையாழ்வார் பிண்டாகாரமா யவதரித்தார். பின்பு கநகாங்கியென்பவள், ஸூர்யனைப்போல் தேதீப்யமானமான ப்ரஹ்ம தேஜஸ்ஸையுடைய தன்பிள்ளையாகிய இவ்வாழ்வாரை ஓர் பிரப்பம்புதரில்வைத்துவிட்டு, தனக்கிருப்பிடமான ஸ்வர்க்கமடைந்தாள். ருஷியும் தபோநிஷ்டராயிருந்துவிட்டார். பிறகுஅந்தப் பிண்டத்துக்குக் கைகால்கள்முதலிய அவயவங்க ளேற்பட்டுக் குழந்தையாய், பசியினாலழத்தொடங்க, அவ்வூரிலெழுந்தருளியிருக்கிற ஸ்ரீஜகந்நாதன் அங்கு லக்ஷ்மீஸமேதனாயெழுந்தருளி பக்தசிரோமணியான இவ்வாழ்வாருக்கு ஸேவைஸாதித்து இவர்பசியைப்போக்கினார். பின்பொருகால் குறவஜாதியரான ஹரிதாஸரென்றொருவர் பிரம்பறுக்க அப்புதரண்டையில்வந்து அங்கிருந்த இவ்வாழ்வாரைப்பார்த்து ப்ரேமாந்தரா யெடுத்துக்கொண்டுபோய், தன் பார்யையான பத்மவல்லியிடத்திற்கொடுத்தார். அவள் தனக்கு ஸந்தானமில்லாததினால் அதிக

ப்ரீதியுடன் இவரையெடுத்து வளர்த்துக்கொண்டிருந்தாள். ஆயினும் ஆழ்வார் அவளகத்துப்பாலுங்கூட அமுதுசெய்யவில்லை. இவ்வாஸ்சர்யத்தைக்கேட்டு மகிழ்ந்து அவ்வூரில் ப்ராஜ்ஞனென்றொரு ஸத்சூத்ரர் வந்துபார்த்து அடியேனகத்துப்பா லமுதுசெய்தருள வேணுமென்று அநேகவிதமாக ப்ரார்த்திக்க, அதை யங்கீகரித்துத் தாம் அமுதுசெய்து மிகுந்தபாலை நீர் ஸ்வீகரியுமென்று ப்ராஜ்ஞனுக்கு ஆழ்வார் ப்ரஸாதித்தருள, அவரும் அவர் பார்யையுமாக அப்பாலை ஸ்வீகரித்துக் கிழத்தனத்தைவிட்டு நவயௌவநமுடையவர்களாய்க் கணிகண்ணனென்றொரு பாகவதோத்தமரைப் பெற்றார்கள்.

இவ்வாழ்வார் ஏழுதிருநக்ஷத்ரம்வரையில் அந்நபாநாதிகளைவிட்டு, கேவல பகவத்கடாக்ஷத்தினால் அந்த ஹரிதாஸரகத்தில் வளர்ந்துகொண்டு கூடைமுடைதல் முதலான தஜ்ஜாத்யுசிதமான வ்யாபாரங்களைச் செய்துகொண்டிருக்கையில், அப்போது ஸர்வேஸ்வரன் இவர்க் கந்நபாநாதிகளில் ருசியை விளைப்பிக்க, அது முதல் ஆழ்வார் ஹரிதாஸ ரகத்தைவிட்டு தீர்த்தயாத்ரை செய்துகொண்டு சிறிது கால மெழுந்தருளி யிருந்தார். பின்பு யோகாப்யாஸத்தி லிழிந்து, ஜகத்காரண வஸ்துவை த்யாநிக்கக் கருதி, அது இன்னதென்றாராயக் கோலி, சாக்யோலூக்யாதி வேத பாஹ்யமதங்களையும், வேதத்துக் கபார்த்தம் சொல்லும் பாட்ட ப்ராபாகர மாயாவாதாதி குத்ருஷ்டி ஸித்தாந்தங்களையும் ஆயிரம்வருஷம் பரிசீலநம்பண்ணி அவற்றை அஸாரங்களாக நினைத்துக்கைவிட்டு கடைசியில் சைவ ஸித்தாந்தமே மேலென்று அதில் ப்ரவேசித்து சிவபக்தாக்ரேஸரராய்ப் பஸ்மருத்ராக்ஷங்களை யணிந்து அம்மதத்துக் கநுகுணமாக அநேக க்ரந்தங்களையும் செய்து அம்மதத்தை ப்ரவசநம்செய்து ஸ்தாபித்துக்கொண்டிருந்து கடைசியாய் மௌந வ்ரதத்தை யவலம்பித்தார்.

இந்த வ்ருத்தாந்தத்தைப் பேயாழ்வார் கேட்டருளி இவரைச் சீர்திருத்தினால் இவர் தர்சந ப்ரவர்த்தகராவரென்று திருவுள்ளம் பற்றி, தம்முடைய நிர்ஹேதுக க்ருபையினால் இவரிருக்குமிடத்துக் கெழுந்தருளி இவருடைய மௌந வ்ரதத்தைக்கண்டு இவரை வார்த்தைசொல்விக்க உபாயமேதென்றாலோசித்து, இவரிருக்கும் தோட்டத்துக்கு ஸமீபத்திலொரு தோட்டமிட்டு, அதில் செடிகளைத் தலைகீழாக நாட்டி நீர் நில்லாத ஓர் ஓட்டைப் பானையினால் அம்மரங்களுக்கு நீர் வார்த்துக்கொண்டிருக்க, இதைக்கண்ட திருமழிசையாழ்வார் அட்டஹாஸம் செய்து இதென்ன உந்மத்த க்ருத்

யம் செய்கிறீரென்று கேட்டார். அதற்குப் பேயாழ்வார், நானு உங் மத்தன் ; நீரல்லவா என்று கேட்டு, ஸகல ஜகத்காரணனுனவன் ஶ்ரியஃபதியாயிருக்க, அவனுக்குப்பௌத்ரனுய், மண்டையோடும் கையுமாய்ப் பிச்சையெடுத்துத் திரியுமவனும், ஒரு பூர்த்தியின்றிக்கே ஜடையைத்தரித்துத் தவம் செய்யுமவனுய், ஶ்ரியஃபதியினுடைய ஸ்ரீ பாததீர்த்தமான கங்கையை சிரஸாவஹித்துப் பவித்ரனுனவனுமாயிருக்கிற ருத்ரனை நீர் ஜகத்காரணமென்று உபாஸிப்பது சேரும்விதமென்னென்று பேயாழ்வா ரருளிச்செய்தார். அப்போது இருவருக்கும் ப்ரசண்ட வாதம்நடந்தது. அதில் பேயாழ்வார், ஶ்ருதி ஸ்ம்ருத்யாதிகளினுலும் ஸத்யுக்திகளினுலும் சைவ ஸித்தாந்தத்தைக் காட்டிலும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தமே பரமோத்க்ருஷ்டமென்று உபந்யஸிக்க, அதற்குத் திருமழிசை யாழ்வார் பதில் சொல்லமாட்டாமல் தோற்று, அப்படி ஸர்வோத்க்ருஷ்டமான ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தில் என்னைப் ப்ரவேசிப்பித்து ஸ்ரீவைஷ்ணவனுக்கி விசேஷார்த்தங்களையுபதேசித்து க்ருதார்த்தனுக்கியருளவேணுமென்று ப்ரார்த்திக்க, பேயாழ்வர் அதை ஓமென் றங்கீகரித்து, சைவராயிருந்த திருமழிசையாழ்வாருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து மந்த்ர மந்த்ரார்த்தங்களையுபதேசித்துப் ப்ரபந்நாக்ரேஸராக்கிக் கடாக்ஷித்தருளினுர்.

அநந்தரம் திருமழிசைப்பிரான் கைரவிணீ தீரத்துக் கெழுந்தருளி ஶ்ரியஃபதி விஷயமாய், தைலதாராவதவிச்சிந்ந ப்ரீதிரூபாபந்ந ஸ்ம்ருதிஸந்தானரூபமானபரமபக்தியை யநுஷ்டித்துத்தினந்தோறும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை வர்த்திப்பித்துக்கொண்டு ஆதித்யனுதித்தாற்போல் பெரிய தீப்தியுடையராய்ப் ப்ரகாசித்துக் கொண்டெழுந்தருளியிருந்தார். அப்போதொரு ஸமயத்தில் ருத்ரன் பார்வதீ ஸமேதனுய் வ்ருஷபவாஹநத்தின் மேலேறி ஆகாசமார்க்கமாகத் திரிந்து வரும்போது ஆழ்வார் அவனுடைய நிழல் தம்மேல் விழாமல் ஒரு பக்கமொதுங்க, அதைக்கண்ட பார்வதி, இம்மஹாநுபாவர் ஆரென்று தன் ப்ராணநாதனைக் கேட்க, அவனும்இவருடைய ப்ரபாவத்தைவர்ணிக்க, அதைக்கேட்டு அவரைப் பார்ப்போம் வாவென்று நிர்ப்பந்தம் செய்து அழைக்க, ருத்ரனும் பார்வதீஸமேதனுய் ஆகாசத்தி லிருந்திறங்கிஆழ்வார் முன்னே போய்நின்றுன். ஆழ்வர்இவர்களைக் கண்ணெடுத்துப் பாராமல் தன் கிழிந்த வஸ்த்ரத்தைத் தைத்துக்கொண்டிருந்தார். ருத்ரன் பாகவத வைபவ மறியாத அபிமாநியாகையால் ஆழ்வாரைப் பார்த்து ஓய்! உமக்கு வேண்டும் வரம் கேளும், நாம் தரு

கிறேமென்று சொல்ல, அதற்குஆழ்வார், தர்மார்த்த காமமோக்ஷங்களென்கிற சதுர்வித புருஷார்த்தங்களில் முதல் மூன்றும் நமக்கு வேண்டா;நமக்குவேண்டியமோக்ஷம் இவனுக்கும்இவனைப்படைத்த ப்ரஹ்மாவுக்கும் கொடுக்கச்சக்தியில்லை ; ஆகையால் இவனிடத்தில் நாம் பெறவேண்டுவதொன்றுமில்லை யென்றெண்ணி, நமக்குன் பக்கலில் பெறவேண்டியதொன்றுமில்லையென் றருளிச்செய்தும் ருத்ரன் வெகுவாய் நிர்ப்பந்திக்க,அவன் நிர்ப்பந்தத்துக்காக ஏதோ ஒன்றைக்கேட்போமென்று நினைத்து, இந்த ஊசியின்வழி நூல் போகும்படிவரங்கொடுக்கவேணுமென்று கேட்டார், அந்தப்பரிஹாஸச்சொல்லைகேட்டு தாமஸ ப்ராக்ருதிகனான ருத்ரன் அதி குபிதனாய், ஓய்! நீர் என்னைப்பரிஹாஸம் செய்தீரல்லவா, உம்மை நானிப்போ தென்செய்துவிடுகிறேன்பாரும், மன்மதனைக்கொளுத்தினாற்போல் உம்மை இப்போதே பஸ்மமாக்கிவிடுகிறேன் என்று பருஷோக்திகளைச் சொல்லித் தன்னுடைய நெற்றிக்கண்ணைத்திறந்தான். அப்போது அக்கண்ணில் நின்றும் காலாக்நி புறப்பட்டு பூம்யந்தரிக்ஷங்களையும் ஸமஸ்த திக்குக்களையும் வ்யாபித்து தஹித்துக்கொண்டு ஆழ்வார்மேல் திரும்பிற்று. ஆழ்வாரும் தம்முடைய பாதாங்குஷ்டத்தி லிருந்த நேத்ரத்தைத்திறக்க, அதில் நின்று புறப்பட்ட, அக்நி மேற்கிளம்பி ரௌத்ராக்நியைப் பகலில் மின்மினியைப்போ லாக்கிவிட்டு ருத்ரன்மேல்பாய, அதையவன் ஸஹிக்கமாட்டாமல் தனக்கு ஸஹாயமாகக் காளமேகங்களைக்கூப்பிட அம்மேகங்களும்வந்து தங்கள் சக்தியுள்ளவளவும் வர்ஷிக்க, ஆழ்வாருடைய பாதாங்குஷ்டாக்நி அதற்குச் சலியாமல் படபாக்நி ஸமுத்ரஜலத்தைப் பானஞ்செய்வதுபோல் அந்தஜலங்களையெல்லாம் வற்றடித்தது. அதைக்கண்டு ருத்ரன், இனி நமக்கு வேறுபாயமில்லையென்று நிஸ்சயித்து ஆழ்வார் திருவடிகளில் சரணம்புகுந்து, ஓபாகவதோத்தமரே! தேவரீருடைய ப்ரபாவமொருவராலும் வர்ணித்துச் சொல்லமுடியாது, என்னுடைய பா(ஸா)லாக்நியும் உம்முடைய பாதாக்நிக்கொவ்வாது. பூர்வகாலத்தில் அம்பரீஷனென்றொருபாகவதனால் துர்வாஸர் அவமானப்பட்டாற்போல்நான் இப்போதுதேவரீரால் பரிபவமடைந்தேன். இவ்வளவுப்ரபாவமும் தேவரீருக்கு பகவத்பக்தியினாலுண்டாயிருந்ததாகையால் இதுமுதல் தேவரீருக்கு பக்திஸாரரென்று திருநாமமாகக்கடவதென்று ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் தம் பாதாங்குஷ்டாக்நியையும் ஸம்ஹரிக்க ருத்ரன் பார்வதீஸமேதனாய் சிரஃகம்பநம் செய்துகொண்டு கைலாஸத்தையடைந்தான்.

பின்பொருகால், சுக்திஹாரனென்கிற ஒரு ஸித்தன் தன் தபோ மஹிமையினால் புலியை வாஹநமாகக்கொண்டு ஆகாசசாரியாய்த் தடையின்றி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் ஆழ்வாருக்கு மேற்புறமாக வரும்போது தன் வாஹநமான புலி, முன்னே போகமாட்டாமல் ஸ்தப்தமாய் நிற்க, இதற்கென்ன காரணமென்று ஸித்தன் யோசித்து நாற்புறங்களிலும்பார்த்து ஒன்றையுங்காணமல் கீழ்நோக்கிப் பார்க்கும்போது அங்கெழுந்தருளியிருக்கிற ஆழ்வாரைப்பார்த்து இதுஇவருடையமஹிமைதானென்று நிஸ்சயித்து அங்கிருந்து கீழிறங்கிவந்து ஆழ்வாரை ஸேவித்து, ஓஸ்வாமீ! நான் தேவரீருக்கு வஸ்த்ரகவசங்கள் கொடுக்கிறேன். இவைத யணிந்திருந்தாலொருபாதையும் வாராது; ஸகல கார்யங்களும் ஸித்திக்கும் அங்கீகரித்தருளீரென்று வஸ்த்ரகவசங்களைக்கொடுக்க, ஆழ்வார், ஓ ஸித்தேஸ்வரனே! நான் உனக்கொரு ரத்நகவசமும் வஸ்த்ரமும் கொடுக்கிறேன்; இதையணிந்து பாருமென்று அந்தக்ஷணத்திலேயே தம் ப்ரபாவத்தினல் ஸ்ருஷ்டித்துக்கொடுத்தார். பின்பு ஸித்தன் தன் கழுத்திலிருக்கும் நவரத்நமாலையைக்கழற்றி, இதை ஜபமாலிகையாகச் செய்துகொள்ளுமென்றுகொடுக்க, ஆழ்வார் தாம் சாத்தியிருந்த துளஸீ நளிநாக்ஷமாலைகளைக்கழற்றி இதைப்பாரென்று காண்பிக்க, ஸித்தன், நவரத்நங்களிழைத்துக் கண்தெறிக்கும்படி கோடிஸூர்ய ப்ரகாசமாயிருக்கிற அம்மாலையை வாங்கிப்பார்த்து ஆஸ்சர்யப்பட்டு, ஓ ஸ்வாமீ! நான் தேவரீருக்குத் தோற்றேன், இப்படிப்பட்ட பாகவதோத்தமரைஸேவித்ததினல் எனக்கின்றையதினம் ஸபலமாயிற்று; தேவரீருடைய ப்ரபாவத்தை ஸரஸ்வதி ப்ருஹஸ்பத்யாதிகளும் வர்ணிக்கச் சக்தரல்லர், இனி எனக்கு நியமநம் ஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்து நியமநம் பெற்றுக்கொண்டு ஸ்வஸ்தாநத்தையடைந்தான்.

அநந்தரம் சிலகாலங்கழித்து ரஸவாதத்தில் ஸமர்த்தனை கொங்கண ஸித்தனென்ருவன், ஆழ்வார் ப்ரபாவத்தைக்கேட்டு இவரை ஸேவிக்கவேணுமென்று வந்து, ஓ ஸ்வாமீ! இந்த ரஸகுளிகையைத் திருவுள்ளம்பற்றி ஜாக்ரதையாய் வைத்துக்கொண்டருளவேணும்; இதனால் இருப்பு பொன்னுக்குமென்று சொல்லி ஒரு ரஸகுளிகையைக்கொடுக்க, ஆழ்வார், ஓ ஸித்தனே! அதப்படியிருக்கட்டும்; இந்த குளிகையை நீ வாங்கிப்பார்; இதனல் கல் தங்கமாகிறது என்றுசொல்லி தம் திருமேனியிலிருந்த அழுக்கைத்திரட்டி

உருண்டையாக்கிக்கொடுக்க, ஸித்தன் அதைவாங்கிக்கொண்டுபோய் ஒருமலைமேல் தட்ட அம்மலை அப்போது பொன்மலையாய் மேருபர்வதம்போல விளங்கிநிற்பதைக்கண்டு ஆஶ்சர்யப்பட்டு ஆழ்வாரைக்கொண்டாடி க்ருதார்த்தனாய்த் தன் தேசத்திற்குச்சென்றான்.

பின்பு சிலகாலம் ஆழ்வார் யோகாப்யாஸ நிஷ்டராய் ஒரு குஹையிலெழுந்தருளியிருக்கும்போது ஒருநாள் பொய்கைபூதம் பேயாழ்வார்கள் அவ்வழியாயெழுந்தருளி திருமழிசைப்பிரானுடைய தேதீப்யமானமான திவ்யதேஜஸ்ஸைக்கண்டு அந்த குஹைக்குள்ளெழுந்தருள, திருமழிசைப்பிரான் எதிர்கொண்டுவந்து தண்டம் ஸமர்ப்பித்து அர்க்யபாத்யாத்பாஸநாந்தமான உபசாரங்களை ஸமர்ப்பித்து குசலப்ரஶ்நம்பண்ணினார். அப்போது முதலாழ்வார்களு மிவரும் பரஸ்பரம் பாகவதஸமாவேசத்தினால் ஸந்துஷ்டராய், பகவத்குணாநுபவம் பண்ணிக்கொண்டு ஸுகமேயெழுந்தருளியிருந்தார்கள். சிறிதுகாலங்கழித்து முதலாழ்வார்கள் இவரிடத்தில் நியமநம் பெற்றுக்கொண்டு லோகஸஞ்சாரார்த்தமாக எழுந்தருளினார்கள்.

பின்பு திருமழிசைப்பிரான் தம்முடைய அவதாரஸ்தலமான திருமழிசைக்கெழுந்தருளினார். அங்கு அநுஷ்டாநத்துக்குத்திருமண் காப்பகப்படாமல் சிந்தாக்ராந்தரா யெழுந்தருளியிருக்கையில், திருவேங்கடமுடையானெழுந்தருளி திருமண் பெருமாள் கோயிலிலிருக்கிறது, அதைப் பரிக்ரஹியுமென்று ஸாதிக்க, பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி திருமண்காப்பை யெடுத்துக்கொண்டுவந்து அநுஷ்டாநம் செய்துகொண்டெழுந்தருளியிருந்தார்.

அநந்தரம் சிலகாலம்கழித்துப் பெருமாள்கோயிலில் யதோக்தகாரியை ஸேவித்துக்கொண்டு பொய்கைப்புஷ்கரிணிக்கரையில் யோகாப்யாஸம் செய்துகொண்டு அங்கு எழுநூறு ஸம்வத்ஸரமெழுந்தருளியிருந்தார். அப்போது கணிகண்ணன் ஆழ்வாரையாஶ்ரயித்துப் பரமபாகவதரா யெழுந்தருளியிருந்தார். அங்கொருகிழவி ஆழ்வார் யோகாப்யாஸம்செய்யும் தேசத்தை ப்ரதிதிநம் ஸ்தல சுத்திசெய்துகொண்டிருக்க, அவளிடத்தில் ஆழ்வார் ப்ரஸந்நராய், உனக்கு வேண்டும்வரம் கேட்டுக்கொள்ளென் றருளிச்செய்ய, அந்தக்கிழவி, எனக்கு யௌவநம் வேணுமென்று ப்ரார்த்திக்க, அப்படியே நீ யுவதியாகக்கடவாயென்று ஆழ்வார் அநுக்ரஹித்தார். அவள் அப்போதே யுவதியாய் அப்ஸரஸ்த்ரீபோல் அதிஸுந்தரியாயிருந்தாள். ஒருநாள் அத்தேசாதிபதியான பல்லவராயனென்பவன் அவ்வழியாய்ப் போம்

போது இவளைப்பார்த்து மோஹித்து இவளை காந்தர்வவிவாஹம்செய்துகொண்டு தனக்குப் பட்டமஹிஷியாக்கித் தன்னுடையஸகலைஸ்வர்யங்களையும் அவளதீநமாக்கி ஸுகமநுபவித்துக்கொண்டிருந்தான்.

பின்பு பல்லவராயன் நாள்தோறும்தனக்குண்டானகிழத்தனத்தையும் தன் பட்டமஹிஷிக்குண்டான நவயௌவநத்தையும்பார்த்து இதுக்கென்னகாரணமென்று தன் மஹிஷியைக்கேட்க, அவள், திருமழிசைப்பிரான் ப்ரஸாதத்தினுல் எனக்கு யௌவநம் நித்யமாய் வ்ருத்தியடைகிறதென்றுசொல்ல,அதைக்கேட்டு,ஆனுல் ஆழ்வாரையழைத்துக்கொண்டுவந்து என்னையு மப்படியே கடாக்ஷிக்கும்படி நீ செய்யவேணுமென்று பல்லவராயன்சொல்ல, அவர் இங்கெழுந்தருளமாட்டார்; அவர் ப்ரியசிஷ்யரான கணிகண்ணனை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருகிறேனென்றுசொல்லிக் கணிகண்ணனையழைத்துக்கொண்டுவந்தாள். ராஜா அவரைப்பார்த்து, உம்முடைய ஆசார்யரான ஆழ்வாரை இங்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரவேணுமென்று ப்ரார்த்திக்க, அதுக்கு, ஆழ்வார்,இங்கெழுந்தருளமாட்டாரென்று கணிகண்ணன் ஸாதித்ததைக்கேட்டுக் கலக்கமுற்றிருந்தான். அங்குள்ளார், இந்தக் கணிகண்ணர் உன்விஷயமாக ஒரு கவிபாடினுல் அதுஸபலமாகுமாகையால்உன் அபீஷ்டத்தைஇவரைக்கொண்டு பாடுவித்துக்கொள்ளென்றுசொல்ல, ராஜாவும் கணிகண்ணனைத் தன்விஷயமாக ஒரு கவிசொல்லவேணுமென்று பகுவிதமாக ப்ரார்த்தித்தாலும், நான் மநுஷ்யனைக் கவிபாடமாட்டேனென்று ஒரேபிடியாய்க் கணிகண்ணன் சொன்னதைக்கேட்டு, ஆனுல் ராஜபக்தியில்லாத நீர் என்தேசத்தி லிருக்கவேண்டாமென்று சொன்ஞன். கணிகண்ணன்இந்த வ்ருத்தாந்தத்தை ஆழ்வாருடன் விண்ணப்பம்செய்ய, ஆழ்வாரும், நீர் போனபின் நமக்கிங்கென்ன ப்ரயோஜநம்? நான் உம்முடனே வருகிறேனென்றுசொல்லி எழுந்திருந்து இதுகளைப் பெருமாளிடம் விண்ணப்பஞ்செய்து தேவரீரும் என்னுடனே எழுந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய,உம்மைப்பிரிந்த நமக்கும்இங்கொருகாரியமுமில்லை; நான்உம்முடனேகூட வருகிறேனென்று திருவநந்தாழ்வாஞகிற தன் படுக்கையைச் சுற்றிக்கொண்டு பெருமான்புறப்பட, அதைக்கண்டு மற்ற எம்பெருமான்களும். இதரமான தேவதாந்தரங்களும், அவரவர்கள் பக்தஜநங்களும் புறப்பட்டு காஞ்சிநகரத்திற் கொருக்ரோசம் வெளியில்போய்விட்டார்கள். அப்போது நகரம் அழகழிந்து இருள்மூடிப்போக, பல்லவராயன்

அப்பொழுது மந்த்ரிகளைத் திரட்டி இந்த அநிஷ்டத்துக்கென்ன ஹேதுவென்று விசாரித்து, பெருமாளிடத்தி லபசாரப்பட்டோமெ ன்று நிஸ்சயித்து பஸ்சாத்தாபத்துடன்போய், யதோக்தகாரியைத் தன் பட்டணத்துக் கெழுந்தருளவேணுமென்று ப்ரார்த்திக்க, அவர், ஆழ்வாரெழுந்தருளினல் வருகிறேனென்ன, ஆழ்வாரைப் ப்ரார்த் திக்க, ஆழ்வாரும், நம் கணிகண்ணன் வந்தால் வருகிறேனென்ன, பல்லவராயன் கணிகண்ணன் திருவடிகளில் விழுந்து அபராதக்ஷாப ணம்பண்ணிக்கொண்டு பட்டணத்துக் கெழுந்தருள வேணுமென்று ப்ரார்த்திக்க, கணிகண்ணனு மவனிடத்தில் ப்ரஸந்நராய் பட்டணத் துக்கெழுந்தருள அவருடன்கூட ஆழ்வாரும். யதோக்தகாரியும் மற்ற எம்பெருமான்களும் தேவதாந்தரங்களும் அவரவர்கள் பக்த ஜநங்களுமாகக் காஞ்சீநகரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அந்நகர மும் இருள்நீங்கி முன்போலவே சோபாயமாநமா யிருந்தது. பல் லவராயனும் பாகவத ப்ரபாவத்தைக் கண்டு ஆஸ்சர்யப்பட்டு ஆழ்வா ரை யாஸ்ரயித்து ஜந்மத்தைக் க்ருதார்த்தமாக்கினன். ஆழ்வார் எம்பெருமானிடத்திற் கெழுந்தருளி, தேவரீர் பக்தபராதீநராய் அடி யேன் விண்ணப்பம் செய்தபடி செய்தருளிற்ருகையால் இதுமுதல் தேவரீர் யதோக்தகாரி, சொன்னவண்ணம் செய்த பெருமாளென்று திருநாமம் சாத்தியருளவேணுமென்று ப்ரார்த்திக்க ஸ்ரீயஃபதியும் அதுமுதல் அத்திருநாமத்தைத் திருவுள்ளம் பற்றினன்.

சிலகாலமங்கே யெழுந்தருளியிருந்து பின்பு திருக்குடந்தைக் கெழுந்தருள வேணுமென்று திருவுள்ளம்பற்றி யெழுந்தருளும் போது நடுவழியிலொருநாள் மஹாவ்யாக்ரபுரத்திற் கெழுந்தருளி ஞர். அங்கு வேதாத்யயநம் செய்துகொண்டிருந்த சிலப்ராஹ்மண ர்கள் ஆழ்வாரைக்கண்டு சூத்ரர் ஸமீபத்தில் வேதாத்யயநம் செய்யக் கூடாதென்று நிறுத்திவிட்டார்கள். ஆழ்வார் இவர்களத்யயநத்திற்கு விரோதம் வேண்டாமென்று தாமப்புறமெழுந்தருளினர். அந்த பாக வதாபசாரத்தின லவர்களுக்குமேல் அத்யயநம் செய்யவேண்டிய வா க்யம் மறந்துபோய்த் தடுமாறிக்கொண் டிருக்கையில், பரமதயாளு வான ஆழ்வார் மேல்வாக்யத்தி னர்த்தத்தை யவர்களறியும்படி ஒரு கறுப்புநெல்லை நகத்தினல் பிளந்து போகட்டார். அப்போது (க) "க்ருஷ்ணாநாம வ்ரீஹீணாம் நகநிர்பிந்நம் க்ருஷ்ணாகலோடாதகுதி

(க) யஜுர்வேதம், க-காண்டம் கூ-அநுவாகம்.

ணா-க்ருஷ்ணநாம் வ்ரீஹீணும் நகநிர்பிண்ணம் க்ருஷ்ணகூடாதக்ஷி ணு'' என்கிற வாக்யம் ப்ராஹ்மணர்களுக்கு ஜ்ஞாபகம் வந்தது, அவர்கள் ஆழ்வாருடைய ஜ்ஞாநவைபவத்தைக்கண்டு ஆஸ்சர்யப்பட்டு ஆழ்வாரை பகுவிதமாகவாராதித்தார்கள். இதனல், சூத்ரரெவ்வளவு பாகவதர்களானுலும் வேதார்த்த மறியலாமத்தனையொழிய வேத வாக்யத்தை யுச்சரிக்கக்கூடாதென்றும், அக்ரவர்ணஸ்தர்கள் அந்த பாகவதர்களை நிந்திக்கக்கூடாதென்றும் ஆழ்வார் தம்மநுஷ்டாநத்தி னுல் ப்ரகாசிப்பித்தருளினர்.

பின்பு ஆழ்வார் அந்தக்ராமத்தில் உஞ்சவ்ருத்திசெய்துகொண்டு வீதிகள்தோறு மெழுந்தருளிக்கொண்டிருக்கும்போது அவ்வூர் கோயிலிலெழுந்தருளியிருக்கிற பெருமாள் ஆழ்வாரெழுந்தருளுமவ்வவ வீதிகளுக்கெதிர்முகமாகத் திரும்பிக்கொண்டிருந்தார். இதை அர்ச்சகர் கண்டுசிலருடன் சொல்ல, அவர்கள் வந்து யஜ்ஞவாடத்தில்ப்ராஹ்மண ஸமூஹத்தில்சொல்ல, எல்லாருமெழுந்து போய்ப்பார்த்து யதார்த்தமென்று நம்பினர்கள். அவ்வளவில் யஜ்ஞத்துக்கு யஜமாநன் ஆழ்வார் ஸந்நிதிக்குப்போய்த்தன் யஞ்ஜவாடத்துக் கெழுந்தருளவேணுமென்று ப்ரார்த்தித் தெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து ப்ராஹ்மணோத்தமர் நிறைந்திருக்கும் ஸபாமண்டபத்தி லக்ராஸநத்திலெழுந்தருளப்பண்ணி அக்ரபூஜை பண்ணினன். யாகம் செய்விக்கும் ருத்விக்குக்களு மத்வர்யுக்களு மதைப்பொறுமல் கோபித்துக்கொண்டு, ப்ராஹ்மணோத்தமான எங்களை யநாதரித்து முதலில் சூத்ரனைப் பூஜித்த உனக்கு யாகம் நஷ்டமாய் விட்டதே. ப்ராஹ்மணுவமாநம் செய்த இந்த அந்யாயமெங்காவது நடக்குமா? என்று அவர்கள் வாய்க்கு வந்தபடி பருஷோக்திகளைச் சொல்லி யஜமாநனைக் கலங்கப்பண்ணினர்கள். யஜமாநன் பாகவத வைபவமறிந்த மஹாநுபாவனுகையால் ஆழ்வார் ஸந்நிதிக்குவந்து விநீதனுய்நின்று, ஓஸ்வாமீ! இந்த மூர்க்கர்களுடைய பருஷோக்தி கர்ணகடோரமா யிருக்கிறது; ஸஹிக்கக்கூடவில்லை; தேவரீர் ப்ரபாவத்தை மறைத்துக்கொண்டெழுந்தருளி யிருக்க இது ஸமயமன்று; தேவரீர் ப்ரபாவத்தைக் கொஞ்சம் வெளியிடவேணுமென்று ப்ரார்த்திக்க ஆழ்வாரவனிடத்தி லநுக்ரஹம்பண்ணி ஸ்ரீயபதியை த்யாநித்தார். ஸ்ரீயபதியுமப்போது ஆழ்வார் திருமுடியில் சேஷசாயியாய், சங்கசக்ரதரனுய், பூர்ணசந்த்ரநிபாநநனுய், நீலமேக ஸ்யாமனுய், பீதாம்பரதரனுய் வந்தெழுந்தருளி நிற்க, ஆழ்வார் திருவடிகளி லபசாரப்பட்டவர்களெல்லா

ரும்பார்த்து ஆஸ்சர்யமடைந்து பயப்பட்டு ஆழ்வாருடைய ஸ்ரீபாதத்தையாஸ்ரயித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு பருமுகமாக ஸ்தோத்ரம்பண்ண ஆழ்வார் அவர்களுக்கு விசேஷார்த்தங்களை யுபதேசித்து க்ருதார்த்தராக்கினார்.

பின்பு ஆழ்வார் அங்கிருந்து திருக்குடந்தைக் கெழுந்தருளி பள்ளிகொண்டிருந்த ஆராவமுதாழ்வாரை ஸேவித்து அவர் விஷயமாக (க)"நடந்தகால்கள் நொந்தவோ" என்கிற பாசுரத்தை விண்ணப்பம் செய்ய ஆராவமுதனும் அந்த பரமபோக்யமான பாசுரத்தைத் திருச்செவிசாத்தி எழுந்திருக்க(உ)"வாழிகேசனே"என்று எழுந்திருக்கவேண்டா, அப்படியேயெழுந்தருளியிருக்க வேணுமென்று ஆழ்வார் விண்ணப்பம் செய்ய, அதுமுதல்திருப்பள்ளியிலிருந்தெழுந்திருப்பதுபோலவே இப்போதும் ஸேவை ஸாதித்துக்கொண்டிருக்கிறார். அதுமுதல் ஆராவமுதனுக்கு உத்தானசயனனென்று திருநாமமாயிற்று. ஸமஸ்தபாபஹரமான திருக்குடந்தையில்இரண்டாயிரத்து முந்நூறு ஸம்வத்ஸரம் ஆராவமுதனை ஸேவித்துக்கொண்டு தர்சநப்ரவர்த்தநம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்து அந்த திவ்யதேசத்திலேயே திருநாட்டுக்கெழுந்தருளினார்.

திருமழிசைப்பிரானுடைய பரமபாவநமான இந்த சித்ரசரித்ரத்தை பக்தியுக்தராய்க்கேட்கும் மஹாநுபாவரும் வாசிக்கும் பாகவதர்களும் எழுதும் மஹான்களும் ஐஹிகத்தில் ஆயுராரோக்ய ஐஸ்வர்ய ஸத்ஸந்தாநாதி பலங்களை யடைந்து, சரீரபாதாநந்தரம் ஸ்ரீவைகுண்டத்தை யடைந்து நித்யஸூரிகளோடு கலந்து நித்யகைங்கர்ய நிரதராய் அபரிச்சின்னாநந்த யுக்தராயிருப்பார்கள். இந்த ப்ரபாவம் யதாமதி ஸங்க்ரஹமாக எழுதப்பட்டதாகையால் பக்திஸாரபதாம்போஜ பக்தராஜஹம்ஸர் இதில் நீரைவிட்டுப் பாலையே கொள்வார்களென்று ப்ரார்த்திக்கிறேன்.



(க) திருச்சந்தவிருத்தம்-௬௧. (உ) திருச்சந்தவிருத்தம்-௬௧.

## இவர் திருநக்ஷத்ரதனியன்.

𑌮𑌕𑌰𑌾𑌯𑌾𑌂𑌮𑌕𑌰𑍇𑌮𑌾𑌸𑌿 𑌶𑌕𑍍𑌰𑌾𑌂𑌶𑌂𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌮𑌹𑍀𑌸𑌾𑌰𑌪𑍁𑌰𑌾𑌧𑍀𑌶𑌂𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌮𑌹𑌂𑌭𑌜𑍇 ॥

மகாயாம்மகரேமாஸி சக்ராம்சம்பார்க்கவோத்பவம்
மஹீஸாரபுராதீசம் பக்திஸாரமஹம்பஜே

## இவர் தனியன்.

---

𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑌞𑍍𑌚𑌮𑌯𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌹𑌾𑌰𑌜𑌿𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌹𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌾𑌯𑌕𑌮𑍁𑌰𑌾𑌰𑌿𑌪𑌾𑌦𑌯𑍋𑌃 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌮𑍁𑌨𑌯𑍇𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 ॥

சக்திபஞ்சமயவிக்ரஹாத்மநே சுக்திஹாரஜிதசித்தஹாரிணே
முத்திதாயகமுராரிபாதயோர் பக்திஸாரமுநயேநமோநம:

## வாழி திருநாமம்.

அன்புடனந்தாதி தொண்ணூற்றாறுரைத்தான் வாழியே
அழகாருந் திருமழிசையமர்ந்த செல்வன் வாழியே
இன்பமிகு தையின்மகத் திங்குதித்தான் வாழியே
எழிற்சந்த விருத்தம்நூற் றிருபதீந்தான் வாழியே
முன்புகத்தில் வந்துதித்த முனிவனார் வாழியே
முழுப்பெருக்கில் பொன்னியெதிர் மிதந்தசொல்லோன் வாழியே
நன்புவியில் நாலாயிரத்து முந்நூற்றான் வாழியே
நங்கள்பக்தி சாரரிரு நற்பதங்கள் வாழியே.

---

திருமழிசையாழ்வார் திருவடிகளே சரணம்.

இப்படிக்கு,
**ஸபாபண்டிதர் தர்க்கதீர்த்தர் ராமாநுஜாசாரியார்.**





ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# இயற்பா



## பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி,

## தனியன் வ்யாக்யாநம்.



அவதாரிகை.— (நாராயணன் படைத்தா னித்யாதி) ஸர்வேஶ்வரனுடைய ஸர்வஸ்மாத் பரத்வத்தை ஸாதித்த பக்திஸாரருடைய ஸ்ரீஸூக்தியான திவ்ய ப்ரபந்தத்தை யநுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படி மநஸ்ஸே! பக்திஸார க்ஷேத்ராதிபதியானவர் ஸ்ரீபாதங்களையே ஸ்தோத்ரம் பண்ணென்கிறது.

### ஸ்ரீராமப்பிள்ளை யருளிச்செய்த தனியன்.



நாராயணன்படைத்தான் நான்முகனை, நான்முகனுக்கு
ஏரார்சிவன்பிறந்தானென் னும்சொல்— சீரார்
மொழிசெப்பிவாழலாம் நெஞ்சமே, மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து.

அந்வயம்.— நாராயணன் நான்முகனை படைத்தான், நான்முகனுக்கு ஏர் (5) ஆர் சிவன் பிறந்தான் என்னும் சொல் (15) சீர் ஆர் மொழி செப்பி வாழலாம் (15) நெஞ்சமே! மொய் பூ மழிசைப் பரன் அடியே (25) வாழ்த்து. (21)

அர்த்தம்.— ஸ்ரீமந்நாராயணன் நான்குமுகங்களையுடையப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான். ப்ரஹ்மாவுக்கு ஸாதநாநுஷ்டாநத்தினால் (ரு) பூர்ணனான ருத்ரன் பிறந்தான்; என்கிற வர்த்தத்தை ப்ரதிபாதிக்குமதாய் (கo) கல்யாணகுணங்களினால் நிறைந்த ப்ரபந்தத்தை யநுஸந்தித்து உஜ்ஜீவிக்கலாம். (கரு) நெஞ்சே! அழகிய பூக்களையுடைய திருமழிசைப்பிரானுடைய திருவடிகளையே (உo) மங்களாசாஸநம்பண்ணு. (உக)

வ்யாக்யாநம் —(நாராயணன்படைத்தான்நான்முகனை)(க)“ஏகோஹவை நாராயண ஆஸீந்நப்ரஹ்மா நேசாந:-ஏகோஹ வை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசாந:” என்றும்,(உ)“நாராயண பரோஜ்யோதி:-நாராயண பரோஜ்யோதி:” என்றும்,(ங)“ நாராயணே ப்ரலீயந்தே-நாராயணேப்ரலீயந்தே” என்றும்,(ச)“ஏகஸ்திஷ்டதி விஶ்வாத்மா ஸ நாராயண: ப்ரபு:-ஏகஸ்திஷ்டதி விஶ்வாத்மாஸ சநாராயண:ப்ரபு:” என்றும்(ரு) “ஸ்ருஷ்டிஸ்தித்யந்த காரணீம்-ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகாரணீம்” என்று தொடங்கி,(சு)ஏக ஏவ ஜநார்த்தந:-ஏக ஏவ ஜநார்த்தந:” என்றும்,(எ)“ஏக ஏவ ஜகத்ஸ்வாமீ ஶக்திமாநவ்யய: ப்ரபு:-ஏகஏவஜகத்ஸ்வாமீ சக்திமாநவ்யய:ப்ரபு:” என்றும் அவரவர்கள் ஸர்வேஶ்வரனாலே ஸம்ஹார்யரென்றும்,(அ)“யந்நாபிபத்மாதபவந்மஹாத்மா ப்ரஜாபதி:-யந்நாபிபத்மாதபவந்மஹாத்மா ப்ரஜாபதி:”(கூ)“நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்ரோ ஜாயதே-நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே। நாராயணாத்ருத்ரோ ஜாயதே” (க0) “விரூபாக்ஷாய ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய-விரூபாக்ஷாய ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய” என்றும்”(கக)“ப்ரஹ்மணஶ்சாபி ஸம்பூதஶ்ஶிவ இத்யவதார்யதாம்-ப்ரஹ்மணஶ்சாபிஸம் பூதச்சிவ இத்யவதார்யதாம்” என்றும் அவரவர்கள் எம்பெருமானாலே ஸ்ருஜ்யரென்றும் சொல்லப்படுகிற வேதார்த்தங்களை ஸர்வாதிகாரமாம்படி “நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத்தான்படைத்தான், யான்முகமா யந்தாதி மேலிட்டறிவித்தே னாழ்பொருளைச் சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து” என்று உபக்ரமித்து “இனியறிந்தேன்” என்று தலைக்கட்டிலும் “நற்கிரிசை நாரணன் நீ” என்றிறே அருளிச்செய்தது. அத்தையாயிற்று “நாராயணன் படைத்தான் நான்முகனை நான்முகனுக்கோரார் சிவன்பிறந்தானென்னும் சொல்” என்கிறது. என்னும் என்று வேதாந்த ப்ரஸித்தி தோற்றச்சொல்லுகிறது.

---

(க) மஹோபநிஷத். (உ) தைத்திரீயம்-நாராயணஸூக்தம்.
(ங) ருக்வேதம், நாராயணோபநிஷத். (ச) பாரதம், அநுஸ்ம்ருதி.
(ரு) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-க-உ-சுசு. (சு) ஸ்ரீவிஷ்ணுபுராணம், க-உ-சுசு.
(எ) (அ) (கூ) ருக்வேதம், நாராயணோபநிஷத்.
(க0) ஸாமவேதம்-சாந்தோக்யம். (கக)

சொல் சீரார் மொழியாவது-தமிழுக்கவயவமாகச் சொல்லுகிற சொற் சீர்களாலே ஆர்ந்த மொழியென்னுதல். என்னும் சொல்லென்று சொல்லப்படுவதுமாய் சீரார்மொழி யென்று (க) "சீர்கலந்த சொல்" என்கிறபடியே கல்யாண குணப்ரசுரமான மொழியென்னுதல். (மொழிசெப்பி) ஏவம்விதமான நான்முகன் திருவந்தாதி ப்ரபந்தத்தை யநுஸந்தித்து. (வாழலாம்) உஜ்ஜீவிக்கலாம். (நெஞ்சே) மநஸ்ஸே ! நீ ஸஹகரிக்கவேணும்.

அதாவது.—(மொய்பூ மழிசைப்பானடியே வாழ்த்து) ப்ரபந்த வக்தாவான திருமழிசை யாழ்வார் திருவடிகளையே ஸ்தோத்ரம் பண்ணு. (உ) "இடம்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன் இணையடிப்போது" என்னும்படி நிரதிசய போக்யமா யிருக்கிற இத்தையே விரும்பிப்போரு. மொய் பூ என்று செறிந்த பூவென்னுதல், அழகிய பூவென்னுதல். அன்றிக்கே, பூ என்று அழகாகவுமாம். அப்போது மிக்கவழகு என்றபடி.

மொய் பூ என்று-மழிசைக்கு விசேஷணமாதல், திருவடிகளுக்கு விசேஷணமாதல்.*படிக்கு விசேஷணமாதல், அடிக்கு விசேஷணமாதல். இப்படி வைலக்ஷண்யத்தையுடைய திருமழிசை யாழ்வார் திருவடிகளையே மங்களாசாஸநம் பண்ணு, என்கிறது. அவர் (௩) "வாழிகேசனே" என்றும், (௪) "மாலை வாழ்த்திவாழ்மினோ" என்னும்பகவத்விஷயமங்களா சாஸந ப்ரசம்ஸை பண்ணினாலும், நீ ஆழ்வாரடி விடாமல் மங்களாசாஸநம் பண்ணென்கிறது.

நான்முகன் திருவந்தாதி தனியன் வ்யாக்யானம் முற்றிற்று.

---

பிள்ளைலோகம் ஜீயர்திருவடிகளேசரணம்,



---

(க) பெரியதிருவந்தாதி-௮௬.
(உ) இராமாநுசநூற்றந்தாதி-௧௨.
(௩) திருச்சந்த விருத்தம், ௬௧.
* படிக்கு-தேசத்துக்கு.
(௪) திருச்சந்த விருத்தம்-௬௮.



ஸ்ரீரஸ்து.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எம்பெருமானார் திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி வ்யாக்யாநம்.

அவதாரிகை.—முதலாழ்வார்கள் அநுபாவ்யவஸ்துவை நிஷ்கர்ஷிக்க அதுக்குக் களைபிடுங்குகிறார். க்ஷேத்ரஜ்ஞர்பக்கலிலே ஈஸ்வரத்வ புத்தியைப்பண்ணி அநர்த்தப்படுகிற ஸம்ஸாரிகளுக்கு ஈஸ்வரனுடைய பரத்வத்தை உபபாதித்து அவர்கள் அநீஸ்வரரென்கிறார்.

**நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும்**
**தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்-யான்முக [மாய்**
**அந்தாதிமேலிட் டறிவித்தே னாழ்பொருளைச்**
**சிந்தாமற் கொள்மினீர் தேர்ந்து. க.**

அ்.— நாராயணன் நான்முகனை படைத்தான். நான் முகனும் தான் (5) முகமாய் சங்கரனை படைத்தான். யான் முகமாய் (10) ஆழ் பொருளை அந்தாதிமேலிட்டு அறிவித்தேன். நீர் தேர்ந்து (15) சிந்தாமல் கொண்மினீர். (17)

அர்.—ஸ்ரீமந்நாராயணன் சதுர்முக ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான். ப்ரஹ்மாவும் தானே (ரு) ப்ரதாநனாய்க்கொண்டு ருத்ரனை ஸ்ருஷ்டித்தான். நான ப்ரதாநனாய்க்கொண்டு (௧௦) (இந்த) கம்பீரமான வர்த்தத்தைத் திருவந்தாதியென்கிறப்ரபந்தத்தில்வைத்து உபதேசித்தேன், நீங்களாராய்ந்து (௧ரு) (இவ்வர்த்தத்தை) நழுவாமல் (மனதில்) வையுங்கோள். (௧எ)

வ்யா.— அவ.— முதற்பாட்டு.— ப்ரஹ்மாதிகள் ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பிக்க ப்ரதாநரானாற்போலே தந்நிவ்ருத்திக்கு ப்ரதாநனானேன் நானென்கிறார்.

(நான்முகனை நாராயணன்படைத்தான்) ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டிக் குபகரணமாக நாலுமுகத்தையுடைய ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான். (நான்முகனுந் தான்முகமாய்) பின்பு ப்ரஹ்மாவுந் தானே ப்ரதாநனாய் ருத்ரனை ஸ்ருஷ்டித்தான். (யான்முகமாயித்யாதி) இப்படி துரவகாஹமானபொருளை நானே யநுபவித்துப் போகில் ஸம்ஸாரிக ளநர்த்தப்படுவரேயென்று செம்பிலும் கல்லிலும் வெட்டுமாபோலே ப்ரபந்தத்திலே யிட்டிதுக்கு ப்ரதாநனாயறிவித்தேன். ஆழ்பொருளையென்று நசிக்கிறபொருளை யென்றுமாம். (நீர் தேர்ந்து சிந்தாமற்கொள்மின்)ஸம்ஸாரத்தினுடைய தண்மையையும் நான்சொன்ன வர்த்தத்தினுடைய வருமையையுமுணர்ந்து இவ்வர்த்தம் மங்காமல் புத்திபண்ணுங்கோள். க.

அரும்பதவிளக்கம்.— முதற்பாட்டு.— ஸம்ஸாரத்தையுண்டாக்கித்ததநுகுணமானப்ரயோஜநங்களையுங் கொடுத்து ஸம்ஸாரத்தைப் ப்ரவர்த்திப்பிக்கையாலே ப்ரதாநரென்கிறது. பரத்வநிர்ணயம்பண்ணி மோக்ஷோபாயத்தை யுபதேசிக்கையாலே நிவ்ருத்திப்ரதாந ரென்கிறது. ப்ரஹ்மாதிகளைப் பரத்வசங்கைபண்ணிப் பற்றுகை நசிக்கிற பொருள். க.

தேருங்கால் தேவ னொருவனே யென்றுரைப்பர்,
ஆரு மறியா ரவன்பெருமை,—ஓரும்
பொருள்முடிவு மித்தனையே யெத்தவம்செய் தார்க்கும்,
அருள்முடிவ தாழியான் பால். உ.

அ௩.—தேருங்கால் தேவன் ஒருவனேயென்று உரைப்பர். அவன்பெருமை (5) ஆரும் அறியார். ஓரும் பொருள் முடிவும் (10) இத்தனையே. எத்தவம் செய்தார்க்கும் ஆழியான்பால் அருள்முடிவது. (15)

அர்.— விசாரித்தால் தேவனென்பவன் (ஸ்ரீமந்நாராயணன்) ஒருவனேயென்று (வ்யாஸாதிகள்) சொல்லுவர்கள். அந்தநாராயணனுடையமஹிமையை (ரு) யொருவரு மறியார்கள். (ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளில்) ப்ரதிபாதிக்கப்பட்ட பாதத்வவஸ்துவின் பர்யவஸாநமும் (க0) மிவ்வளவே. எவ்விதமானதபஸ்ஸை யநுஷ்ட்டித்தவர்களுக்கும் சக்ரதரன்பக்கலுண்டான (க்ருபையினால்தான்) அந்ததபஸ்ஸின்பலம் (பெறும்படி) முடியும். (கரு)

வ்யா.—இரண்டாம்பாட்டு.—(தேருங்காலித்யாதி) (க)"தத்வம்ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ்ஸர்வதோமுகை꞉। தத்வமேகோ மஹாயோகீ ஹரிர்நாராயண꞉ ஸ்ம்ருத꞉ - தத்வம்ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ்ஸர்வதோமுகை꞉। தத்வமேகோ மஹாயோகீ ஹரிர்நாராயண ஸ்ம்ருத꞉" என்னும்படியே விசாரிக்கும்போது ஸர்வேஸ்வரனொருத்தனேயென்று சொல்லுவர்கள். (ஆருமறியாவன்பெருமை) ஒருத்தருமவனுடைய பெருமையைப் பரிச்சேதிக்கவறியார்கள். (ஓரும்பொருள் முடிவுமித்தனையே) ஶ்ருதிஸ்ம்ருதிகளெங்குமாராயுமர்த்தத்தினுடைய நிர்ணயமிவ்வளவே. (எத்தவமித்யாதி) எல்லாஸாதாநாநுஷ்டாநம் பண்ணினவர்களுக்கும் அவற்றுக்கும் பலம் ஸர்வேஸ்வரன் பக்கலில் நின்றுமென்கை. உ.

அரு.— இரண்டாம்பாட்டு.— பலத்தைக்கொடுக்கை யருளின் கார்யமாகையாலே அருள்முடி வென்று பலத்தைச்சொல்லுகிறது.

பாலில்கிடந்ததுவும் பண்டரங்க மெய்ததுவும்,
ஆலில் துயின்றதுவு மாரறிவார்,–ஞாலத்
தொருபொருளை வானவர்தம் மெய்ப்பொருளை, அப்பில்
அருபொருளை யானறிந்தவாறு. ௩.

அந்.— ஞாலத்து ஒரு பொருளை வானவர்தம் மெய் (5) பொருளை அப்பில் அரு பொருளை, பண்டு (10) பாலில் கிடந்ததுவும் அரங்கம் எய்ததுவும் ஆலில் (15) துயின்றதுவும் யான் அறிந்தவாறு ஆர் அறிவார். (20)

அர்.— லீலாவிபூதிக் கத்விதீயமான காரணவஸ்துவும் நித்யஸூரிகளுக்கு யதார்த்தமாக (ப்ரத்யக்ஷமாக) (ரு) அநுபவிக்கத்தகுந்தவஸ்துவும், ப்ரளயார்ணவத்தில்சயனித்திருந்த நிருபமான மானவஸ்துவுமான ஸர்வேஸ்வரனையும், (அவன்) முன்பு (க0) திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருந்ததையும், ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டதையும், ஆலந்தளிரில் (கரு) கண்வளர்ந்ததையும் நா னறிந்தவிதமாக வேறாரறிவார்கள்? (20)

வ்யா.—அவ.— மூன்றாம்பாட்டு.—(பாலில்) வேறொருவரறிவாரில்லை, நானேயென்றது - நானவன் காட்டக்கண்டேனுகையாலே யென்கிறார்.

---

(க)

(பாலில்கிடந்ததுவும்)அவதாரத்துக்குறுப்பாகத்திருப்பாற்கடலிலே கண்வளர்ந்ததுவும். (பண்டரங்கமெய்ததுவும்) அபேக்ஷிப்பாரின் றிக்கேயிருக்கக்கோயிலிலே வந்துகண்வளர்ந்தருளிற்றும். (ஆலில் துயின்றதுவுமாரறிவார்).(ஞாலத்தொருபொருளை)*கார்யாகாரமெல்லாமழிந்து (க)"ஸதேவ-ஸதேவ" என்று நிற்கிறவனை. (வானவர்தம் மெய்ப்பொருளை) நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யனு யுள்ளவனை. (அப்பிலருபொருளை) (உ) "அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்று ஜலஸ்ருஷ்டியைப்பண்ணி யதிலே கணவளர்ந்தருளுகிறவனை. (யானறிந்தவாறு) அவன் காட்டக்கண்ட நானறிந்தபடி ஸ்வயத்நத்தால் காண்பார்க்கறியப்போகாது. ரு.

ஆறு சடைக்கரந்தா னண்டர்கோன் றன்னோடும், [ருவர்
கூறுடையனென்பதுவுங் கொள்கைத்தே,—வேறொ
இல்லாமை நின்றானை யெம்மானை, எப்பொருட்கும்
சொல்லானைச் சொன்னேன் தொகுத்து. சு,

அந்.— ஆறு சடை கரந்தான் அண்டர்கோன்தன்னோடும் கூறுடையன் (5) என்பதுவும் கொள்கைத்தே? வேறொருவர் இல்லாமை நின்றானை (10) எப்பொருட்கும் சொல்லானை எம்மானை தொகுத்து சொன்னேன். (15)

அர்.— கங்காநதியைத் தன்சடையில் மறையச்செய்தருத்ரனும் அண்டாதிபதியானஸர்வேஸ்வரனோடும் பாகமுடையவன் (ஸமானமான ஐஸ்வர்யமுடையன்) (ரு) என்னும்சொல்லை நம்பலாமா? வேறொருத்தர் (தனக்கொப்பு) இல்லாமல் எழுந்தருளி யிருக்கிறவனுவாய் (க0) ஸமஸ்தவஸ்துக்களுக்கும் வாசகங்களானஸகலசப்தங்களுக்கு மர்த்தமாகப்ரதிபாதிக்கப்பட்டவனுமான என்ஸ்வாமியை ஸங்க்ரஹமாகச் சொன்னேன். (கரு)

வ்யா.— அவ —நாலாம்பாட்டு.— (ஆறு) தாமறிந்தபடியையுபபாதிக்கிறார்.

(ஆறித்யாதி) ஜடையிலே கங்கையைத்தரித்து ஸாதகனானருத்ரன் ஸர்வசேஷியானவனோடொக்க சேஷித்வத்திலே கூறுடையனென்று இதுவும சேதநர்க்கு புத்திபண்ணப்படுமோ? (வேறித்யாதி) (க)"[illegible]

* கார்யகாரண மெல்லாம. (க) சாந்தோக்யம். சு-உ.
(உ) மநுஸ்ம்ருதி. க-அ கூ கீதை. எ-எ.

ந்யச்கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய- அஹம்ஸர்வஸ்யஜகதஃ ப்ரபவஃப்ரளயஸ்த தா-மத்தஃ பரதரம்நாந்யத்கிஞ்சிதஸ்த்திதநஞ்ஜய'' என்னும்படி நின்ற வனே. (எம்மானை) எனக்கு ஸ்வாமியானவனே. (எப்பொருட்கும் சொல்லானை) ஸர்வசப்த வாச்யனானவனே. எல்லாப்பொருளுக்கும் சொல்லவேண்டும்படி நின்றவனே யென்றுமாம்.(தொகுத்துச்சொன் னேன்). ச.

அரு.— நாலாம்பாட்டு.— கொள்கைத்து-கொள்கை யுடைத்து. எப்பொருட்டும் சொல்லானை எல்லாப்பதார்த்தங்களுக்கும் தன்னைச் சொல்லும்படி. தொகுத்து - சுருக்கி. ச.

தொகுத்தவரத்தனாய்த் தோலாதான்மார்வம்,
வகிர்த்த வளையுகிர்த்தோள்மாலே,—உகத்தில்
ஒருநான்றுநீயுயர்த்தி யுள்வாங்கிநீயே,
அருநான்குமானாயறி. ரு.

அந்.— தொகுத்த வரத்தனாய் தோலாதான் மார்வம் வகிர்த்த (5) வளை உகிர் தோள் மாலே! உகத்தில் (10) ஒருநான்று உள் வாங்கி நீயே உயர்த்தி நான்கும் (15) அரு ஆனாய் நீயே அறி (19)

அர்.— (தபஸ்ஸு-பண்ணி) ஸம்பாதித்த வரத்தையுடையனாய் தோலாமலிருக்கிற ஹிரண்யகசிபுவினுடைய மார்பைப் பிளந்தும் (ரு) வளைந்துமிருக்கிற நகங்களையும் புஜங்களையுமுடையவனாய் (ப்ர ஹ்லாதனிடத்தில்) வ்யாமோஹத்தைப்பண்ணினவனே! ஸ்ருஷ்டி காலத்தில் (௰) ஒருநாள் ஸம்ஹரித்த நீயே ஸ்ருஷ்டித்து தேவ திர்யங் மனுஷ்ய ஸ்தாவரரூபமான நாலுக்கும் (கரு) அந்தர்யாமியா யானவனே (இதை) நீயே யறிந்தருளவேணும். (கக)

வ்யா.— ஐந்தாம்பாட்டு.— (தொகுத்தவித்யாதி) திரட்டினவர த்தை யுடையவனாகையாலே வரங்கொடுத்தவர்களுக்கும் தோலாத ஹிரண்யனுடைய மார்பைப்பிளந்து வளைந்த வுகிரையும் தோளையு முடையையாய், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே வ்யாமுக்தனான வனே!(உள்வாங்கி நீயேயுகத்தி லொருநான்று நீயுயர்த்தி)ஜகத்தடை ய ஸம்ஹரித்த நீயே ஸ்ருஷ்டிகாலத்திலே (க) "ஆதவமதழ்-ஆத யகதம்'' என்னும்படி நிற்கிற. உயர்த்தியென்று-அவதரித்தியென்னவு மாம். (அருள் நான்குமானாய்)தேவதிர்யங் மநுஷ்ய ஸ்த்தாவராதிகளி

(க)

லே அந்தராத்மதயா ப்ரகாசித்துநின்ற. (நீயே அறி) இவ்வர்த்தம் வேறொருவ ரறிவாரில்லை, தேவரே அறிந்தருளவேணுமென்கை. ரு.

அரு.— ஐந்தாம்பாட்டு.— (உகத்தில்) உகக்கை - ஸ்ருஷ்டியாய், ஸ்ருஷ்டிகாலத்திலே உயர்த்தி (ஆதபகதம்) வெய்யிலானது எங்குமொக்க வ்யாபிக்குமாபோலே அந்தராத்மாவாக எங்கும்வ்யாபித்தாயென்றபடி. நான்கிலு மருவாய்நின்றாய். ரு.

அறியார்சமண ரயர்த்தார் பவுத்தர்,
சிறியார்சிவப்பட்டார் செப்பில்,—வெறியாய
மாயவனைமாலவனை மாதவனையேத்தாதார்,
ஈனவரே யாதலாலின்று. சு.

அந்.— சமணர் அறியார். பவுத்தர் அயர்த்தார். சிவப்பட்டார் (5) சிறியார். செப்பில், வெறியாய மாயவனை மாலவனை (10.) மாதவனை ஏத்தாதார். ஆதலால் இன்று ஈனவரே. (15)

அர்.— ஜைநர் (உண்மையை) அறியவில்லை. பௌத்தர் (யதார்த்தமறியாமல்) ப்ரமித்தார்கள். சைவர் (ரு) (அறியத்தக்கவஸ்துவையறியாமல்) அற்பரானார்கள். (இவைகளை) சொல்லில், ஸர்வகந்தனாய் ஆஶ்சர்யசேஷ்டிதனாய் ஆஶ்ரிதவ்யாமுக்தனாயிருக்கிற (க0) ஶ்ரியஃபதியை (இவர்கள்) ஸ்தோத்ரம்செய்யார்கள். ஆகையால் (இவர்கள்) இப்போது ஹீநர்களே. (கரு)

வ்யா.— அவ.— ஆறாம்பாட்டு.— (அறியார்)வேறொருத்தரறிவாரில்லையோ வென்ன, பாஹ்யகுத்ருஷ்டிகளால் அறியப்போமோ வென்கிறார்.

(அறியார்சமணர்)(க) "ஸ்யாதஸ்தி ஸ்யாந்நாஸ்தி-ஸ்யாதஸ்திஸ்யாந்நாஸ்தி" என்று அநேகாந்தமாகக் கொள்கையாலே ஆர்ஹதர் தத்வமுள்ளபடி யறியார். (அயர்த்தார் பவுத்தர்) ப்ரதிஸந்தாநம் பண்ணுகைக்கு ஓரநுபவிதாவைக் கொள்ளாமையாலும்,ஜ்ஞாநத்தை க்ஷணிகமாகக் கொள்ளுகையாலும் பௌத்தரும்தத்வஜ்ஞாநத்தில் அறிவுகெட்டிருப்பார்கள். (சிவப்பட்டார் சிறியார்) ப்ரமாணத்தை யொருபடிகொண்டு ப்ரமேயத்தை யுள்ளபடி கொள்ளாமையாலே

(க) ஸ்ரீபாஷ்யம் உ - உ - சு - பூர்வபக்ஷோபந்யாஸத்தில்.

ருத்ர ஸம்பந்திகளானவர்களுமெளியார்.(செப்பில்)இவர்களைப் பேசில்.(வெறியித்யாதி)நிரதிசய போக்யனுய ஆஸ்சர்யபூதனுய் வ்யாமுக்தனுய் ஸ்ரியஃபதியான ஸர்வேஸ்வரனை.(எத்தாதாரீனவரே) அவர்களைத்தாமையாலே தண்ணியரே. ஹீநரென்றும் அஹீநரென்றும் நான் ப்ரதிபாதிக்க வேணுமோவென்கிறுர். சு.

அரு.— ஆறும்பாட்டு.— ப்ரதிஸந்தாநம் - ப்ரத்யபிஜ்ஞை. க்ஷணிகமாகையாலே ப்ரத்யபிஜ்ஞை பண்ணப்போகா தென்றபடி- பிழை. சு.

இன்றாக நாளையே யாக,இனிச்சிறிதும்
நின்றாகநின்னருளென்பாலதே,—நன்றாக
நானுன்னையன்றியிலேன் கண்டாய்,நாரணனே
நீயென்னையன்றியிலை. எ.

அந்.— இன்று ஆக, நாளையே ஆக இனி சிறிது நின்று ஆக, (5) நின் அருள் என்பாலதே. நாரணனே நன்றாக (10) நான் உன்னையன்றி இலேன். நீ என்னையன்றி (15) இலை கண்டாய். (17).

அர்.— இன்றாகவுமாம், நாளையாகவுமாம், இன்னம் சிறிதுகாலம் கழித்தாகவுமாம். (ரு) உன் க்ருபை யென்னிடத்தில் பூர்ணமாயிராநின்றது. ஸ்ரீமந்நாராயணு! அழகியதாக (கo) நான் உன்னை விட்டு வேறொருரக்ஷகரையுடையேனல்லேன். நீ யென்னைத் தவிர்த்துப் (கரு) பரிபூர்ணனாகமாட்டாய். இதைப்பார்த்தருள வேணும். (கஎ).

வ்யா.— ஏழாம்பாட்டு.— (இன்றாகவித்யாதி) இன்றாகவுமாம், நாளையாகவுமாம், சிறிதுகாலம் கழித்தாகவுமாம்; காலவிளம்பமே உன்னுடைய ப்ரஸாதமென் பக்கலிலே.(நன்றாகவித்யாதி)காலவிளம்பமென்றுமென்பக்கலிலென்றுஞ் சொல்லிற்றெத்தாலே யென்னில், அகிஞ்சநனுக ஸம்ப்ரதிபந்நனனவெனக்குன்னை யொழிய வேறொரு அபாஸ்ரய மில்லாமையாலே. (நாரணனே நீயென்னையன்றியிலை.) பூர்ணனன உனக்கு அபூர்ணனன வென்னையொழிய அபாஸ்ரயமில்லை. உன்னுடைய சேஷித்வ ஸ்வரூபத்தாலும் என்னுடைய சேஷத்வ ஸ்வரூபத்தாலும் விடப்போகாது. எ.

இலைதுணைமற்றென்னெஞ்சே யீசனைவென்ற,
சிலைகொண்ட செங்கண்மால்சேரா,—கொலைகொண்ட
ஈரைந்தலையா னிலங்கையையீடழித்த,
கூரம்பனல்லால்குறை. அ.

அந்.— என்நெஞ்சே! ஈசனை வென்ற சிலை கொண்ட (5) செம் கண் மால் சேரா கொலைகொண்ட (10) ஈரைந்தலையான் இலங்கையையீடழித்த கூர் அம்பனல்லால் (15 குறை துணை மற்று இல்லை. (19).

அர் —- என்ஹ்ருதயமே! ருத்ரனை ஜயித்த தநுஸ்ஸைப் பிடித்த (ரு) சிவந்த திருக்கண்களையுடைய ஸர்வேஸ்வரனோடு பொருந்தாமல் மரணமடைந்த (கo) தசக்ரீவனுடைய இலங்கையை யழியச்செய்த கூர்மையான வில்லையுடைய சக்ரவர்த்திதிருமகனை விட (க்ரு) குறையைத்தீர்க்கும்படியான ஸஹாயம் வேறொன்றில்லை (கக)

வ்யா.— அவ.—(இலைதுணை)புகையிலுண்டபனென்று கொண்டு சொல்லி யுன்னை யொழிய வேறொன்றறியேனென்கிற தென்னெனில், வேறுள்ளது கழுத்துக்கட்டி யாகையாலே யென்கிறார்.

(இலைதுணைமற்று) ஸர்வேஸ்வரன் துணையென்கை யன்று ஸாத்யம்; மற்றுள்ளார் துணையன்றென்கை. (என்னெஞ்சே) இவ்வர்த்தம் சொல்லுகைக்குப் பாங்கான நெஞ்சே! ஈசனையித்யாதி) வேறொருத்தர் துணையல்லவென்றது - வேறொரு பூர்ணரில்லாமையாலென்கிறது. ருத்ரனைவென்ற தநுஸ்ஸைப்பிடித்த புண்டரீகாக்ஷனை ஸர்வேஸ்வரன் வந்தவதரித்தவிடத்திலும் (க) "நநுவேயத்ந நமேயம்" என்று (உ) "கொத்துத்தலைவன்" என்னும்படி பத்துத் தலையையுடைய ராவணனுடைய லங்கையை மூலையடியே வழிபோக்கினவம்பின் கூர்மையையுடைய சக்ரவர்த்தித்திருமகனை யொழியத் தம்முடைய குறையில் வேறொருவர் துணையில்லை. எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை யாஸ்ரயித்தவர்கள் அசேதநமான க்ரியாகலாபத்தினுடைய கூர்மையை விஸ்வஸித்திருப்பர்கள், இவர்கள் சக்ரவர்த்தித் திருமகன் அம்பின் கூர்மையைத் தஞ்சமாக நினைத்திருப்பர்கள். அ.

(க) ஸ்ரீராமாயணம். யுத்தகாண்டம் ௬௬ - கக.
(உ) பெரியாழ்வார் திருமொழி. க - கo - ௬.

அரு.— எட்டாம்பாட்டு.— (புகையில்) தெரியாது. ஆனாலும், புகையிலுண்பன் - நீ இத்தனை பொகட்டாலுண்பன்; இல்லாவிட்டால் பட்டினியேயென்னுமாபோலே. நீயொழிய வேறில்லை யென்கிறது-வேறு ரக்ஷகரில்லாமையாலே யென்றபடி. ஈசனை வெல்லுகை-தேவர்களெல்லாருங்கூடி பரதத்வ நிர்ணயம் பண்ணுகைக்காக விஸ்வகர்மாவாலே இரண்டுவில்லையுண்டாக்கி இருவர்கையிலுங் கொடுக்க விஷ்ணு வில்லெடுத்தெய்ய உத்யோகித்த வுடனே ருத்ரன் வில்லுங் கையுமாக நடுங்கி விழுகையாலே வென்றதென்கிறது. அ.

குறைகொண்டுநான்முகன் குண்டிகைநீர்பெய்து,
மறைகொண்டமந்திரத்தால்வாழ்த்தி,—கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான்,
அண்டத்தான்சேவடியை யாங்கு. கூ.

அந்.— நான்முகன் குறைகொண்டு குண்டிகைநீர் பெய்து மறை (5) கொண்ட மந்திரத்தால் வாழ்த்தி ஆங்கு அண்டத்தான் (10) சே அடியை கறைகொண்டகண்டத்தான் சென்னிமேல் ஏற (15) கழுவினான். (16)

அர்.— ப்ரஹ்மாவானவன் தன்னைச்யத்தைமுன்னிட்டுக் கொண்டு கமண்டலதீர்த்தத்தை வார்த்து வேதங்களில் (ரு) ஸாரமாகச்சொல்லப்பட்ட புருஷஸூக்தாதிமந்த்ரங்களினால் மங்களாசாஸநம்பண்ணி அந்தத்ரிவிக்ரமாவதாரகாலத்தில் அண்டாதிபதியானஸர்வேஸ்வரனுடைய (கo) அழகிய திருவடிகளை நீலகண்டன் சிரஸ்ஸில் விழும்படி (கரு) திருமஞ்சனம்செய்தான். (கசு.)

வ்யா.—அவ.— ஒன்பதாம்பாட்டு.— (குறை) வேறொருத்தர் துணையில்லை யென்றது - பூர்ணராக ஸம்ப்ரதிபந்நானவர்களும் தந்தாம் குறையை இவனுக்கறிவித்துத் தங்க ளபேக்ஷிதம் பெறுகையாலேயென்கிறார்.

(குறைகொண்டித்யாதி) சதுர்முகனான தான் குண்டிகையிலே தர்மத்தை ஜலமாகஉண்டாக்கி. (மறையித்யாதி) ஸ்ரீ புருஷஸூக்த்தாதிகளாலே மங்களாசாஸநம்பண்ணி. (அண்டத்தான் சேவடியைக்கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான்) திருவுலகளந்தருளின ஸர்வேஸ்வரன் திருவடிகளை அக்காலத்திலே நீல

கண்டனுடைய சிரஸ்ஸிலே படும்படியாகக்கழுவினன். ஸாஹஸிகரான ப்ரஜைகள் வழியேபோய் வழியே வரவேணுமென்று தீர்த்தத்தை மேலே தெளிப்பாரைப்போலே. ௯.

அரு.—ஒன்பதாம்பாட்டு.—(குறைகொண்டு) ஆகிஞ்சிந்யாநுஸந்தாநத்தை முன்னிட்டு. குண்டிகை-கமண்டலம். பெய்கை-உண்டாக்குகை.

ஆங்காரவாரமது கேட்டு, அழலுமிழும்
பூங்காரரவணையான் பொன்மேனி,—யாங்காண
வல்லமேயல்லமே மாமலரான்வார்சடையான்,
வல்லரேயல்லரேவாழ்த்து. ௧௦.

அ.—ஆங்கு ஆரவாரமது கேட்டு அழல் உமிழும் (5) பூ கரர் அரவு அணையான் பொன் (10) மேனி யாம் காண வல்லமேயல்லமே? மா (15) மலரான் வார் சடையான் வாழ்த்து வல்லரே யல்லரே. (௨0)

அர்.—அக்காலத்திலுண்டான மங்களாசாஸநத்வநியைக் கேட்டு (சத்ருக்கள் கோஷிக்கிறார்களென்று) நெருப்பைக் கக்காநின்ற (௫) அழகிய சீற்றத்தையுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஸ்வரனுடைய அழகிய (௧0) திருமேனியை நாம் ஸேவிக்க ஸமர்த்தரல்லோமோ! அழகிய (௧௫) திருநாபிகமலத்திற்பிறந்த ப்ரஹ்மாவும் தொங்குகிற சடையையுடைய ருத்ரனும் (அவனை) ஸ்தோத்ரம் செய்கைக்குத்தக்க சக்தியையுடையவர்களாக வாகார்களே. (20)

வ்யா.—பத்தாம்பாட்டு.—(ஆங்காரவாரமதுகேட்டு) (௧) "திசைவாழியெழ" என்னும்படி திருவுலகளந்தருளினபோதுண்டான வார்த்தைகேட்டு. (அழலுமிழும்) (௨) "விடங்காலுந்தீவாயரவணை" என்னும்படியே. (பூங்காரரவணையான்) அழகிய சீற்றத்தையுடைய திருவனந்தாழ்வானைப்படுக்கையாக வுடையவனுடைய. சேஷிபக்கல் பரிவாலேவந்த சீற்றமாகையாலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியிருக்கிறபடி. (பொன்மேனி யாங்காணவல்லமே யல்லமே) அவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருமேனி ஸ்வரூபத்துக்கு மேலொன்றில்லையென்றிருக்கிற நமக்குக்காணக்குறையுண்டோ? (மாமலரானித்யாதி) திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்தேனென்றும், ஜடை தரையிலேதாழும்படி ஸாதநாநுஷ்டாநம் பண்ணினேனெ

(௧) திருவாய்மொழி. எ-௪-௧. (௨) இரண்டாந்திருவந்தாதி. ௭௪.

ன்றும் ஸ்வசக்தியில் குறைய நினையாதப்ரஹ்மருத்ராதிகள் வாழ்த்த மாட்டாரே. ௧௦.

அரு.— பத்தாம்பாட்டு.— (பூங்கார்) கார்-கறுப்பாய், சீற்றம்· வல்லமே யல்லமே-அல்லவல்லோமே· மாட்டுவோமென்றபடி. ஸ்வரூபம்-விக்ரஹம்.வலரேயல்லலே-வல்லாரல்லரே,மாட்டாரென்றபடி.

வாழ்த்துகவாய் காண்ககண்கேட்கசெவி, மகுடம்
தாழ்த்திவணங்குமின்கள் தண்மலரால்,—சூழ்த்த
துழாய்மன்னுநீண்முடி யென்தொல்லைமால்தன்னை,
வழாவண்கைகூப்பி மதித்து. ௧௧.

அந்.— சூழ்த்த துழாய் மன்னு நீள் முடி (5) என் தொல்லை மால்தன்னை வழா வண் (10) கை கூப்பி மதித்து மகுடம் தாழ்த்தி (15) தண் மலரால் வணங்குமின்கள். வாய் வாழ்த்துக. (20) கண் காண்க. செவி கேட்க. (24)

அர்.— சுற்றப்பட்ட திருத்துழாய்மாலை பொருந்தியிருக்கிற நீண்ட திருவபிஷேகத்தை யுடையனாய், (ரு) என்னிடத்தி லநாதியாக வ்யாமோஹத்தையுடையனான ஸர்வேஶ்வரனை (க்ஷணமாத்ரமும்) விடாம லழகிய (௧0) கைகளைக் கூப்பி த்யாநம்பண்ணித் தலைகளை வணக்கி (௧ரு) சீதலமான புஷ்பங்களைக்கொண் டாஶ்ரயியுங்கோள். (உங்கள்) வாய் (அவனை) மங்களாசாஸநம் செய்யட்டும், (20) கண் ஸேவிக்கட்டும். காது (அவன்குணங்களைக்) கேட்கக்கடவதாக. (உ௪)

வ்யா.— பதினோராம்பாட்டு.— (வாழ்த்துகவாயித்யாதி) ஸர்வேஶ்வரனை வாழ்த்தக்கண்டவாயும், காணக்கண்டகண்ணும், அவனுடைய குணங்களைக் கேட்கக்கண்ட செவியும், தந்தாமுக்குவகுத்த தொழிலைச்செய்கை. (மகுடந்தாழ்த்தி வணங்குமின்கள் தண்மலரால்) அவன் திருவடிகளிலே வணங்கக்கண்ட தலையை யங்கே தாழ்த்தி புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அவன் திருவடிகளிலே உங்கள் தலையைத் தாழ்த்தி வணங்குங்கோள். (சூழ்ததவித்யாதி) வணங்குவித்துக்கொள்ளுகைக்கு லக்ஷணமசொல்லுகிறது, சூழப்பட்ட திருத்துழாய் வர்த்தியாநின்று ஆதிராஜ்ய ஸூசகமான முடியையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை மாறாமல்நினைத்து உதாரமானகையைக்கூப்பி.(மகுடம்தாழ்த்தி வணங்குமின்கள் தண்

மலரால்) புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அவன் திருவடிகளிலே உங்கள்தலையைத் தாழ்த்தி வணங்குங்கோள். கக.

அரு.— பதினோராம்பாட்டு.— வழா-வழுவுதலின்றி, மாறாமல். திருநாமமத்யாஹார்யம். மதித்து - நினைத்து. கக.

மதித்தாய்போய்நான்கின் மதியார்போய்வீழ,
மதித்தாய்மதிகோள்விடுத்தாய்,—மதித்தாய்
மடுக்கிடந்த மாமுதலைகோள் விடுப்பான்,ஆழி
விடற்கிரண்டும்போ யிரண்டின்வீடு. கஉ.

அந்.— மதியார் நான்கில் போய் வீழ மதித்தாய். (5) மதிகோள் விடுத்தாய். மடு கிடந்த (16) மா முதலை கோள் விடுப்பான் போய் (15) ஆழி விடற்கு மதித்தாய். இரண்டும் போய் (20) இரண்டின் வீடு மதித்தாய். (23)

அர்.— (உன்னை) ஆஶ்ரயியாதவர்கள் தேவதிர்யங் மனுஷ்ய ஸ்தாவரங்களாகிற நான்கு யோநிகளிலும் போய் விழும்படி ஸங்கல்பித்தாய் (ரு) சந்த்ரனுடைய வ்யஸநத்தைப் போக்கினாய். மடுவி லிருந்த (க0) பெரிய முதலையின் பலத்தை யழிக்கைக்காக அங்கெழுந்தருளி (கரு) திருவாழியை ப்ரயோகிக்க ஸங்கல்பித்தாய். ஆனையும் முதலையும் போய் (20) இரண்டினுடைய ஸ்தாநத்தை (முதலை கந்தர்வபதவியையும் யானை தன் திருவடிகளையும்) அடையும்படி ஸங்கல்பித்தாய். (உங)

வ்யா.— பன்னிரண்டாம்பாட்டு.— (மதித்தாயித்யாதி) (நான்கின்மதியார் போய்வீழமதித்தாய்) வேதத்தாலு மெங்கும் புக்குன்னை யுணராதவர்கள் அதஃபதிக்கும்படியாக மதித்தாய். (மதியார் நான்கில் போய்வீழ மதித்தாய்) உன்னைமதியாதவர்களை (க) "க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு - க்ஷிபாம்யஜஸ்ரமசுபாநாஸுரீஷ்வேவயோநிஷு" என்னும் படியே சதுர்வித யோநிகளிலும் போய் விழும்படிக் கீடாக நினைத்தாய். (மதிகோள்விடுத்தாய்) சந்த்ரனுக்கு வ்யஸநத்தைப் போக்கினவனே! (மடுவித்யாதி) பொய்கையிலே கிடந்தபயாவஹமானமுதலைஸ்ரீகஜேந்த்ராழ்வானைப்பற்றின பற்றுவிடும்படிக்கீடாக

(க) கீதை, கசு-கக.

ஸங்கல்பமின்றிக்கே திருவாழியை விடுகைக்கு நினைத்தாய் ( இரண்டும்போ யிரண்டின்வீடு மதித்தாய்) பூர்வாகாரங்களைவிட்டு முதலைகந்தர்வனாய் ஆனை திருவடிகளைப் பெறும்படிக் கீடாகவும் நினைத்தாய். கஉ.

அரு.— பன்னிரண்டாம்பாட்டு.— நான்கில்-நாலுவேதமாதல், நாலுயோநிபாதல். தேவாதிசதுர்விதம். மதித்தாய்போய் - மிகவும் நினைத்தாய். இரண்டும்போய் - முதலையாகாரமும் ஆனையாகாரமும் போய். இரண்டின்வீடு - முதலைக்கு சாபமோக்ஷமும் ஆனைக்கு முக்த்தியுமென்றபடி. (கஉ)

வீடாக்கும் பெற்றி யறியாது, மெய்வருத்திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர்,—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான்வேதமுதற்பொருள்தான்,விண்ண
வர்க்கும் நற்பொருள்தான் நாராயணன். கங

அந.— வீடு ஆக்கும் பெற்றி அறியாது மெய் (5) வருத்தி கூடாக்கி நின்று உண்டுகொண்டு உழல்விர். (10) வீடு ஆக்கும் மெய்ப்பொருள்தான் வேதம் முதல் பொருள்தான் (15) விண்ணவர்க்கு நல் பொருள்தான் நாராயணன். (19)

அர்.— மோக்ஷத்தை யுண்டாக்கும் ஸாதநத்தை யறியாமல் சரீரத்தை (ஙி) (உபவாஸாதிகளினால்) வருந்தப்பண்ணிக் குழையாக (அஸாரமாக) ச்செய்து (பட்டிணியாய்) இருந்து (இதன் பலத்தை) புஜிப்போமென்றத்யவஸித்துத் திரிகிறவர்களே! (க0) மோக்ஷத்தைத்தரும் பரமோபாயமும், வேதத்தில் ப்ரதாநமாகச் சொல்லப்பட்ட வஸ்துவும். (கரு) நித்யஸூரிகளுக்கு விலக்ஷணமான புருஷார்த்தமும் ஸ்ரீமந்நாராயணனே யாயிருக்கும். (கக)

வ்பா.—பதின்மூன்றாம்பாட்டு.—(வீடாக்கும் பெற்றியறியாது) மோக்ஷத்தைத்தருவிக்கும் ப்ரகாரமறியாது. (மெய்வருத்தி) சிரகாலமுண்ணாதே நின்று பின்பு ஜீவித்து இப்படி அநுஷ்டிப்போமென்று நெஞ்சிலே கொண்டுழல்வீர்! "கொன்றுழல்வீர்" என்னில், உங்களை ஹிம்ஸித்துழல்வீரென்றுமாம். ( வீடாக்கும் மெய்ப்பொருள் தான்) மோக்ஷத்தை யுண்டாக்கும் அவ்யவஹித ஸாதநம். (வேதமுதல் பொருள் தான்)மோக்ஷப்ரதனென்று வேதத்திலே ப்ரதிபாதிக்கப்

படுமவன். (விண்ணவர்க்கும் நல்பொருள்தான்.) நித்யஸூரிகளுக்குப் ப்ராப்யனானவன். (நாராயணன்) ஸர்வேஸ்வரன். கந.

அரு.— பதின்மூன்றும்பாட்டு.— உபாஸகரைக்குறித்து உங்களுபாஸநத்திலே ப்ரயோஜநமில்லை, அவனே உபாயமென்கிறார். (வீடாக்கு மித்யாதி) கூடாக்கி - சரீரத்தை வற்றப்பண்ணி. கந.

நாராயணனென்னை யாளி, நரகத்துச்
சேராமல் காக்குந் திருமால், தன்—பேரான
பேசப் பெறாத பிணச்சமயர் பேசக்கேட்டு,
ஆசைப்பட் டாழ்வார் பலர். கச.

அ.— நாராயணன் என்னை ஆளி நரகத்து சேராமல் (5,) காக்கும் திருமால் தன்பேரான பேச பெறாத (10) பிணம் சமயர் பேச கேட்டு ஆசைப்பட்டு (15) பலர் ஆழ்வார். (17)

அர்.— ஸர்வசேஷியாய் என்னைப் பரிபாலநம்செய்யுமவனாய் நரகத்திற் சேராதபடி (ரு) ரக்ஷிக்குமவனான ஶ்ரிய:பதி, தன் திருநாமங்களானவற்றை யநுஸந்திக்க பாக்யமில்லாத (க0) பிணம்போன்ற மதத்தையுடையவர்கள் சொல்லும் விபரீதார்த்தங்களைக் கேட்டு (அதை) ஆசைப்பட்டு (கரு) அநேகர் முழுகிப்போவர்கள். (கஎ).

வ்யா.—பதினாலாம்பாட்டு.--(நாராயணனென்னையாளி) (க)அகில ஜகத்ஸ்வாமிநஸ்மத்ஸ்வாமிநு - அகிலஜகத்ஸ்வாமிநஸ்மத்ஸ்வாமிந். (நரகத்தித்யாதி)பிராட்டிக்குப் ப்ரியமாக ஆஶ்ரிதரை ஸம்ஸாரத்தில் ப்ரவேசியாமல் காக்குமவன், இப்படி ஸர்வரக்ஷகனானவனுடைய திருநாமங்களைப் பேசப்பெறாதே ஜீவியாகிற்கச்செய்தே ம்ருதப்ராயராயிருக்கும் பாஹ்யகுத்ருஷ்டிகள் வேறேயோரர்த்தமுண்டென்று சொல்லக்கேட்டு அநர்த்தப்படுவார் சிலருண்டென்றும் பரமப்ராப்யன் நாராயணனென்று முபபாதிக்கிறார். கச.

அரு.— பதினாலாம்பாட்டு.— ஆசைப்பட்டு - அவர்கள்சொன்னத்தைக்கேட்டு - அவர்களுபாஸிக்கிற விஷயத்தை யாசைப்பட்டு, ஆழ்வார் - அத:பதிப்பரென்றபடி. கச.

(க) சரணாகதி கத்யம்.

பலதேவ ரேத்தப் படிகடந்தான் பாதம்,
மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்த—வலராகில்,
மார்க்கண்டன் கண்ட வகையே வருங் கண்டீர்,
நீர்க்கண்டன் கண்ட நிலை. கரு.

அ்.— பல தேவர் ஏத்த படி கடந்தான் (5) பாதம் மலர் ஏற இட்டு இறைஞ்சி (10) வாழ்த்தவலராகில் நீர்க்கண்டன் கண்ட நிலை மார்க்கண்டன் (15) கண்டவகையே வருமகண்டீர். (17)

அர்.— அநேகமான தேவர்க ளேத்தும்படி பூமியை யளந்தவனுடைய (ரு) திருவடிகளில் பூக்களை விழும்படி ஸமர்ப்பித்து வணக்கத்துடன் (கo) மங்களாசாஸநம் செய்தார்களாகில் விஷஜலத்தைக்கண்டத்திலேயுடையருத்ரன் கண்டாஸ்ரயித்துநின்ற விருப்பு மார்க்கண்டேயன் (கரு) கண்டவிதத்தில் வந்துகிட்டும். (கஎ)

வ்யா.—பதினைந்தாம்பாட்டு.-(பலதேவரித்யாதி)வேறுஸ்ரயணீயரில்லையென்று தோற்றுகின்றவன் திருவடிகளிலே வேறோராஸ்ரயணீயராக நினைத்தவர்கள் செய்கிறதொழிலை அவ்யவஹிதமாகத் தாங்கள் செய்யவல்லார் சிலரென்கிறார்.

(பலவித்யாதி) பலதேவ ரேத்தப்படி கடந்தான்பாத மென்கையாலே ஆஸ்ரயணீயவஸ்து இவனென்று அறுதியிட்டு,(மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்த வலராகில்) என்கையாலே தாங்களாஸ்ரயணீயராக நினைத்தவர்கள் செய்கிற செயலைத் தாங்களும்செய்ய வல்லராகில். (மார்க்கண்டனித்யாதி) மார்க்கண்டேயன் தேவனை மோக்ஷார்த்தமாகச் சென்று ஆஸ்ரயிக்க, மோக்ஷப்ரதனீஸ்வரனே யென்று காட்டுமிதுவே யுள்ளதென்று ருத்ரன் காட்டக்கண்டு இதுவே யிவனுக்குள்ளதென்று மார்க்கண்டேயன் கண்டவகையேயநுஸந்திக்கும் அவ்யவஹிதமாக ஸர்வேஸ்வரன் திருவடிகளை ஆஸ்ரயிக்க வல்லவராகில் மாக்கண்டேயன் கண்டவகையே ஸித்திக்கும். கரு.

அரு.— பதினைந்தாம்பாட்டு.— மோக்ஷப்ரதத்வம் ஸர்வேஸ்வரனுக்கொழிய இதாருக்கில்லை யென்னுமத்தை இப்பாட்டில் ஸூசிப்பிக்கிறார் (பலதேவரித்யாதி). பலதேவரேத்தவென்றுப்ராஹ்மருத்

ராதிகள்மலரிட்டேத்துமாபோலே தாங்களுமேத்தவல்லராகிலென்ற படி. வேறோ ராஶ்ரயணீயர்-ஈஶ்வரனையொழியத் தங்களுக்காஶ்ரய ணீயராக நினைத்த ப்ரஹ்மருத்ராதிகள். கீழ்வாக்யத்தை விவரிக்கி றார் (பலதேவரித்யாதி). இதுவே - இவனுக்குக் காட்டுகையே,இவ னுக்குள்ளதென்று மார்க்கண்டேயன்கண்டது ருத்ரன் மோக்ஷப்ரத னன்று, ஸர்வேஶ்வரன் மோக்ஷப்ரதனென்று கண்டவகை. இத்தால் அவனே பரதேவதை, இதரரன்றென்றபடி. நீர்க்கண்டன கண்டநிலை மார்க்கண்டன் கண்டவகையே வருமென்றந்வயம். கரு.

நிலைமன்னுமென்னெஞ்ச மந்நான்று, தேவர்
தலைமன்னர் தாமே மாற்றாக,—பலமன்னர்
போர்மாள வெங்கதிரோன் மாயப் பொழில்மறைய,
தேராழி யால்மறைத்தா ரால். கசு.

அந்.— அந்நான்று தேவர் தலை மன்னர் தாமே (5) மாற் றாக பல மன்னர் போர் மாள (10) வெங்கதிரோன் மாய பொ ழில் மறைய தேராழியால் (15) மறைத்தாரால் என் னெஞ்சம் நிலைமன்னும். (18)

அர்.— அந்தபாரதயுத்தகாலத்தில் தேவர்களுக்குத தலைவரா ன ராஜாவாகிய தாமே (ரு) சத்ருவாய்க்கொண்டு அநேகம் ரா ஜாக்கள் யுத்தத்தில் முடிந்துபோம்படியாகவும், (கO) உஷ்ணகிர ணனான ஸூர்யன் மறையும்படியாகவும், பூமி காணாமலிருள்மூ டும்படியாகவும் தேர்ச்சக்கரத்தினால் (கரு) (ஸூர்யனை) மறை த்தவரா லென்னெஞ்சம் தரித்து நிற்கப்பெற்றது. (கஅ)

வ்யா.— பதினாறும்பாட்டு.— (நிலைமன்னுமென்னெஞ்சம்) ஸர் வேஶ்வரனை ஆஶ்ரிதார்த்தமாகக்கண்டதென்றறிந்தபடியாலேபறக்கி றதொன்றிலேபாரம்வைத்தாற்போலே(க)"சஞ்சலம் ஹிமந:-சஞ்சலம் ஹிமந:"என்றுசொல்லப்படுகிறநெஞ்சம்நிலைபெற்றது ப்ராப்திதஶை யில்பிறக்குமதிங்கேயிருக்கப்பிறந்தது. (அந்நான்று) பாரதஸமரத்தி லே. (தேவர்) (உ) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்-ராஜாதிராஜஸ்ஸர்வே ஷாம்" என்றுஞ்சொல்லப்படுகிற*அயர்வறுமமரர்களதிபதி. (தாமே மாற்றாகவித்யாதி) (ங) "த்விஷதந்நம்-த்விஷதந்நம்" இத்யாதிப்படியே

(க) கீதை. சு-நச. (உ)
(ங) பாரதம் உத்யோக க).

பாண்டவசத்ருக்கள் தனக்குசத்ருக்களாகவும், பலமன்னர்கள்முடியும் படியாகவும் (க) "பீஷோதேதி வாத:-பீஷோதேதி ஸூர்ய:" என்று தன்னாஜ்ஞையாலே ஒரு முஹூர்த்தந்தப்பாமலுதிப்ப தஸ்த்தமிப்பதாகிற ஆதித்யன் மறையவும், எதிரிகளுக்கிவ்விடத்தில் அஸ்த்தமித்ததில்லை யென்று குறைசொல்லப்போகாதபடி பூமியடைய மறையவும், ஆதித்யனை ப்ரகாசகமான திருவாழியாலே மறைத்தாரான்வராலே யென்னெஞ்சம் ஸ்திதித்தது, நித்யஸூரிகளுக் கவ்வாறு காய்(உ) "ஸத்ரகாஶேஸத்ரஸஹஸ்ர:-ஸத்யகாம ஸ்ஸத்யஸங்கல்ப:" என்றோதப்படுகிற தாமேதமக்குத் தகாதபடியான பொய்யைச் செய்கையாலே என்னெசுஸ்திதித்தது. ஈஸ்வரன் அஸத்யப்ரதிஜ்ஞனாய் ரக்ஷிப்பானை பின்பு நம்முடைய ஸத்ய தபச்சமாதிகளைக்கொண்டென்னென்கை (௩) "ந்யாஸோ நாமைஹமவதி-ந்யாஸோநாமபகவதி" இஸ்லோகத்தில் நினைத்த உரமிப்பாட்டால் சொல்லுகிறது.

அரு.— பதினாரும்பாட்டு.— பொழில்-பூமி. பூமியடைய ஆதித்யகிரணம் மறையவுமென்றபடி. கசு.

ஆல நிழல்கீ ழறநெறியை நால்வர்க்கு,
மேலை யுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞாலம்
அளந்தானை யாழிக் கிடந்தானை, ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு. கஎ.

அந்.— மெய் தவத்தோன் ஞாலம் அளந்தானை ஆழி (5) கிடந்தானை ஆல்மேல் வளர்ந்தானை தான் வணங்குமாறு (10) அறநெறியை மேலையுகந்து ஆலநில்கீழ் நால்வர்க்கு உரைத்தான். (15)

அர்.— ஸத்யமான தபஸ்ஸையுடையருத்ரன். பூமியை யளந்தவனாய். திருப்பாற்கடலில் (ரு) பள்ளிகொண்டவனாய், ஆலந்தளிரில் திருக்கண்வளர்ந்தவனை ஸர்வேஸ்வரனைத் தானாஸ்ரயித்தவிதமான (கo) தர்மமார்க்கத்தை முன்யுகத்தில் வடவ்ருக்ஷத்தின்சாயையில் அகஸ்த்யபுலஸ்த்ய தக்ஷமார்க்கண்டேயர்களான நால்வர்க் குபதேசித்தான். (கரு)

(க) தைத்திரீயம். ஆநந்தவல்லி-எ. (உ) சாந்தோக்யம். அ-க.
(௩)

வ்யா.—அவ.—பதினேழாம்பாட்டு.— (ஆலநிழல்கீழ்) ஜ்ஞாநாதிகனான ருத்ரனும் தன்னையாஶ்ரயித்தவர்களுக்கு இவ்வர்த்தத்தையிறே சொல்லிற்றென்கிறார்.

(ஆலநிழற்கீழித்யாதி) பகவத் பஜநத்தில் அநுஷ்டிதமான அநுஷ்டாநத்தையுடைய ருத்ரன் ஆலநிழலிலே அகஸ்த்யாதிகளுக்கு தர்ம மார்க்கத்தைப்பண்டு சொன்னான். (ஞாலமித்யாதி) சொன்னபடி எங்ஙனேயென்னில், அவதாரத்துக் கடியாக திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்து சிறியார் பெரியாரென்று வாசி வையாதே எல்லார்தலைகளிலுமொக்கத் திருவடிகளை வரையாதே வைத்து வரையாதே எல்லாரையும் தன்வயிற்றிலேவைத்து பவனாயிருப்பதொரு ஆலிலையிலே கண்வளர்ந்து ரக்ஷிக்குமவனைத் தான்வணங்கும் ப்ரகாரத்தைச்சொன்னான். கஎ.

மாறாயதானவனை வள்ளுகிரால், மார்பிரண்டு
கூறாகக்கீறியகோளரியை,—வேறாக
வேத்தியிருப்பாரை வெல்லுமே,மற்றவரைச்
சாத்தியிருப்பார்தவம். கஅ.

அ.— மாறாய தானவனை மார்பு வள் உகிரால் (5) இரண்டு கூறாக கீறிய கோள் அரியை வேறாக (10) ஏத்தியிருப்பாரை, மற்று அவரை சாத்தியிருப்பார் தவம் (15) வெல்லும். (16)

அர்.— சத்ருவான ஹிரண்யாஸுரனுடைய மார்பைக் கூரிய நகங்களினால் (௫) இரண்டுபிளவாகப் பிளந்த பலத்தையுடைய நரஸிம்ஹனை விலக்ஷணமாக (௰) ஸ்தோத்ரம்பண்ணியிருப்பவர்களை, அப்படி ஸ்தோத்ரம்பண்ணுகிறவிலக்ஷணரான ஸ்ரீவைஷ்ணவர்களை ஸ்தோத்ரம் பண்ணுகிறஸ்ரீவைஷ்ணவர்களின் தபஸ்ஸு (௧௫) ஜயிக்கும். (௧௬)

வ்யா.— அவ.— பதினெட்டாம்பாட்டு.— (மாறாயவித்யாதி) குறிகொண்டு பகவானையே பஜிக்குமதிலும் ததீயரைப் புருஷகாரமாகக் கொண்டு பற்றுகை சீரியதென்கிறார்.

(மாறாயவித்யாதி)ஈஶ்வரனென்றுபாராதே தனக்கெதிரியான ஹிரண்யனைக்கூரிய வுகிராலேமார்விரண்டு பிளவாகக்கீண்ட நரஸிம்ஹத்தை. (வேறாக வித்யாதி)வேறாக வேத்தியிருப்பாராகிறார்(க)''அந்திய

(க) திருப்பல்லாண்டு. ௫.

ம்போதிலரியுருவாகி அரியை யழித்தவனைப் பல்லாண்டு" என்று ரக்ஷகனுக்குத் தீங்குவருகிறதென்று திருப்பல்லாண்டுபாடும் பெரியாழ்வார்போல்வார். (முற்றித்யாதி ) சாத்தியிருப்பாராகிறார்,(௧) "வல்லபரிசுவரி விப்பரேல்" என்று பெரியாழ்வார் பக்கலிலே ந்யஸ்த்த பரராயிருக்கு மாண்டாள்போல்வார். தவம்-ஸுக்ருதம். ௧௮.

தவம்செய்து நான்முகனால் பெற்றவரத்தை,
அவம்செய்த வாழியானன்றே,—உவந்தெம்மைக்
காப்பாய் நீ காப்பதனை யாவாய்நீ,வைகுந்த
மீப்பாயுமெவ்வுயிர்க்கும் நீ. ௧௯

அ.— தவம்செய்து நான்முகனால் பெற்ற வரத்தை அவம் செய்த (5) ஆழியானன்றே. உவந்து எம்மை காப்பாய் நீ; (10) காப்பதனை ஆவாய் நீ; எவ்வுயிர்க்கும் வைகுந்தம் (15) ஈப்பாயும் நீ. (17)

அர்.— (ஹிரண்யன்) தபஸ்ஸுபண்ணி ப்ரஹ்மாவினிடத்திலிருந்து ஸம்பாதித்த வரத்தை யழியச்செய்த(ரு)திருவாழியையுடையவனன்றோ.ஸந்தோஷத்துடனே யெங்களை ரக்ஷிக்கிறவனும் நீயே;(௧0) ரக்ஷிக்கவேணுமென்கிறஸங்கல்பத்தை யுடையவனும் நீயே; ஸகல ப்ராணிகளுக்கும் பரமபத (௧ரு) மளிப்பவனும் நீயே. (௧0).

வ்யா.— அவ.— பத்தொன்பதாம்பாட்டு.— ( தவஞ்செய்து ) ப்ரதானரானவர்களு மறிவுகெடுமிடத்தில் ரக்ஷிக்கும் நீயே யெனக்கு எல்லாவபிமத ஸித்தியும் செய்வாயென்கிறார்.

( தவமித்யாதி ) தபஸ்ஸைப்பண்ணி ப்ரஹ்மாவின் பக்கலிலே ஹிரண்யாதிகள் பெற்றவரத்தை யழித்து வரங்கொடுத்தவர்களுக்கும் குடியிருப்புக்கொடுத்த நீயே. (உவந்தித்யாதி) உன்பேறாக ரக்ஷிப்பாய் நீ; ரக்ஷணந்தான் நீ; புநராவ்ர்த்தியில்லாத மோக்ஷத்தை (எவ்வுயிர்க்கு மீப்பாய் நீ). ௧௯.

நீயேயுலகெல்லாம் நின்னருளே நிற்பனவும்,
நீயேதவத்தேவதேவனும்,—நீயே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும்,அண்டத்
திருசுடரு மாயவிவை. ௨0.

(௧) நாச்சியார் திருமொழி. ௧. ௯.

அந்.— உலகெல்லாம் நீயே. நிற்பனவும் நின்அருளே. தவம் (5) தேவர் தேவனும் நீயே. எரி சுடரும் (10) மால் வரையும் எண் திசையும அண்டத்து (15) இரு சுடருமாய இவை நீயே- (19)

அர்.— லோகங்களுக்கெல்லாம்காரணமானவன் நீயே. அவ்வஸ்துக்களிருப்பதும் உன்னுடையக்ருபையினாலேயே. தபஸ்ஸை பண்ணி (௫) தேவர்களானப்ரஹ்மாதிகளுக்கும் தேவன் நீயே. ஜ்வலிக்கிற அக்நியும், (௧௦) பெரிய பர்வதங்களும், எட்டுத் திக்குகளும, அண்டத்துக்குள்ளிருக்கிற (௧௫) இரண்டு தேஜஸ்ஸுக்களான சந்த்ரஸூர்யர்களுமாகிய இவையெல்லாவற்றுக்குமந்தர்யாமியானவன் நீயே, (௧௯)

வ்யா.— இருபதாமபாட்டு.— (நீயே யுலகெல்லாம்) உன்னையொழிய ஜகத்துக்கு ப்ருதக்ஸ்திதியும் ப்ருதகு பலம்பமு மில்லை- (நின்னருளேநிற்பனவும்) உன்ப்ரஸாதமடியாகப் பெறும பேறுநிலைநிற்பது. (நீயேதவத்தேவதேவனும்.) ஸாதநாநுஷ்டாநமபண்ணி. அதிகாரம்பெற்றவர்களுக்கும். உன்னையொழிய ஸ்திதியில்லை. (நீயேயெரிசுடருமித்யாதி) பிரித்துச்சொல்லுகிறதென், அக்நியும குலபர்வதங்களு மெட்டுத்திக்கும் அண்டாந்தர் வர்த்திகளான சந்த்ராதித்யர்களுமான இப்பதார்த்தங்களுமெல்லாம் உன்னதீநம். உ0.

இவையாபிலவாய் திறந்தெரிகான்ற,
இவையாவெரிவட்டக்கண்கள்,—இவையா
வெரிபொங்கிக்காட்டு மிமையோர்பெருமான்,
அரிபொங்கிக்காட்டு மழகு. உக.

அந்.— பிலம் வாய் திறந்து கான்ற இவைஎரி (5) ஆ. எரி வட்டம் இவைகண்கள் ஆ. எரி (10) பொங்கி காட்டும் இமையோர் பெருமான் அரி (15) பொங்கி காட்டும் இவைஅழகு ஆ. (19)

அர்.—பிலம்போன்ற திருப்பவளத்தைத் திறந்து (அதிலே) எரிகிற இந்தஅக்நிகள் (௫) ஆஶ்சர்யங்களாகக்காண்கின்றன. கொள்ளிவட்டம் போன்ற இந்ததிருக்கண்கள் ஆஶ்சர்யமாகக்காண்கின்றன. அக்நிபோல்(௧௦)கிளர்ந்து தோன்றுமவனுய் நித்யஸூரிகளுக் கதிபதியானவன் நரஸிம்ஹமாய் (௧௫) க்கிளர்ந்து தோற்று மிவ்வழகுகள் ஆஶ்சர்யங்கள். (௧௯)

வ்யா.— அவ.— இருபத்தோராம்பாட்டு.— (இவையா) இப்படி பூர்ணஞானவனுககு ஆஶ்ரிதார்த்தமாக வரும் சிற்றத்தைச் சொ

ல்லுகிறது. நரஸிம்ஹத்தைத் தத்காலத்திலே அநுஸந்தித்தாற்போலே பேசுகிறார்.

(இவையித்யாதி)(க) "ஜ்வாலா நாஸாஃ - அவாக்யநாதரஃ" என்று தத்வமிருக்கிறபடி. பிலம்போலே யிருக்கிற வாயைத்திறந்து அக்நியை யுமிழாநின்ற யிவை; அக்நியை யுமிழாநின்று பிலம்போலேயிருக்கிறவா யிவை. (இவையா வெரிவட்டக்கண்கள்) "உயிர்க்கெல்லாம் தாயா யளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" என்கிற கண்கள் (உ)கொள்ளிவட்டம்போலே யிருக்கிற கண்கள். (இவையா வித்யாதி) அக்நிபோலே ஜாஜ்வல்யமான திருமேனியையுடையனாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன். அன்றிக்கே, அக்நிகொடுக்கும் ஹவிஸ்ஸையுடைய இந்த்ராதிகளுக்கு நிர்வாஹகன். (அரியித்யாதி) நித்யஸூரிகள் பரியவிருக்குமவன் ஆஸ்ரிதார்த்தமாக நரஸிம்ஹமாய்ச் சீறிக்காட்டினவழகு. ௨௧

அழகியான்தானே யரியுருவன்தானே,
பழகியான்தாளே பணிமின்,—குழவியாய்த்
தானேழுலகுக்கும் தன்மைக்கும்தன்மையனே,
மீனாயுயிரளிக்கும் வித்து. ௨௨.

அ.— தான் குழவியாய் எழுலகுக்கும் வித்து தன்மைக்கும்(5) தன்மையன் மீனாய் உயிர் அளிக்கும் அரியுருவன் (9) தானே அழகியான் தானே பழகியான் தாளே (15) பணிமின். (16)

அர்.— தான் (ப்ரளயகாலத்தில்) முக்தசிசுவாயிருந்து எழுலகங்களுக்கும் காரணமாய் அவ்வுலகங்களிலுள்ளவைகளுக்கும் (ரு) காரணமாய் மத்ஸ்யாவதாரமெடுத்து ப்ராணிகளை ரக்ஷிக்குமவனாய் நரஸிம்ஹரூபியாய்க்கொண்டு (கூ) தானே ஸுந்தரனாய் தானே (சிரகாலஸஹவாஸத்தினால்) பழகியிருக்கிறவனான ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளை (கரு) ஆஸ்ரயியுங்கோள். (கசு)

வ்யா.— அவ.— இருபத்திரண்டாம்பாட்டு.— (அழகியானித்யாதி) நரஸிம்ஹ வ்ருத்தம் ப்ரஸ்துதமானது பின்னாட்டுகிறது.

(அழகியான்) ஆபத்ஸகனானவனே அழகியான். (பழகியான்தானேபணிமின்) த்யஜிக்கிற சரீரத்திலும் வர்த்திக்கிற சரீரத்திலும் புதியகோளாயிருந்துள்ள நீங்கள், உங்கள் கையிலுங்களைக் காட்

(க) சாந்தோக்யம். ௩-௪. (உ) திருமொழி. ௭-௧-௯.

டிக்கொடாதே காலத்ரயத்திலும் சரீரங்களில் ப்ரவேசிக்கைக்கு நிதாநத்தையும் அதுக்குப்பரிஹாரத்தையும்அறியுமவனை ஆஶ்ரயிக்கப்பாருங்கோள். ப்ரக்ருதிவாசியறிந்து பழையனைப் பரிஹரிக்கும் வைத்யனை வ்யாதிக்ரஸ்தர்பற்றுமாப்போலே. (குழவியித்யாதி) கார்யாகாரமான ஜகத்துக்கும் தந்மாத்ரையான ஜகத்துக்கும். (தானேழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே) எல்லா சேதநாசேதநங்களுக்கும் இவற்றின் குணத்துக்கும் குணி. (தன்மைக்கும்) தன் பக்கலிலே வைக்கும். (க) "ஸதேவ-ஸதேவ" என்று சொல்லப்படுகிறவனே தன்னை யழியமாறி சேதநரைரக்ஷிக்கும த்ரிவிதகாரணமும். உஉ.

அரு.—இருபத்திரண்டாம்பாட்டு.—கார்யாகாரமானதொடங்கி பிழை. ஆனாலும் குழவியா யென்றதுக்குச் சேர தன்மைக்கு மென்றுபாடாந்தரமாய், இவற்றையெல்லாம தன்வயிற்றிலே வைக்கும் ஸ்வபாவத்தையுடையவ னென்றபடி. உஉ.

வித்துமிட வேண்டுங் கொலோ, விடையடர்த்த
பத்தியுழவன்பழம் புனத்து,—மொய்த்தெழுந்த
கார்மேக மன்ன கரு மால்திரு மேனி,
நீர்வானங் காட்டும் நிகழ்ந்து.

அ.—விடை அடர்த்த பத்தி உழவன் பழம் (5) புனத்து வித்தும் இடவேண்டுங்கொலோ. மொய்த்து எழுந்த (10) கார் மேகமன்ன கருமால் திருமேனி நீர்வானம் நிகழ்ந்து (15) காட்டும். (16)

அர்.— (ஏழு) வ்ருஷபங்களைக் கொன்றவனைப் பக்திக்குக் க்ருஷிபண்ணினவனான ஸர்வேஶ்வரனுடைய அநாதியான (ரு) ஸம்ஸாரமாகிறபூமியில் ஸுக்ருதமாகிற விரையும் விரைக்கவேணுமா, திரண்டு கிளர்ந்த (கഠ) கருமேகம்போன்ற நீலவர்ணனான ஸர்வேஶ்வரனுடைய திருமேனியை நீர்கொண்டமேகம் எதிரேநின்று (கரு) காட்டாநின்றது. (கசு)

வ்யா.— அவ.— இருபத்துமூன்றும்பாட்டு.— (வித்தும்) அறிந்த தசையிலு மறியாத தசையிலும் ஸர்வேஶ்வரனே ரக்ஷகனை அறிதியிட்டபின்பு தன் அபிமதஸித்திக்கு இவன் செய்யவேண்டும் ஸு

(க) சாந்தோக்யம். சு - உ.

க்ருதமுண்டோ? ஸத்தாப்ரயுக்தயான இச்சை இவனுக்குண்டாகில் மேலுள்ள தூக்கயன்கடவனாகில் இவன்செய்புமம்சமென்னென்கிறூர்.

(வித்துமிடவேண்டுங்கொலோ) வித்தென்று சொல்லுகிறது ஸங்க்ருதக்ஷதை. (விடையடர்த்தபத்திபுழுவன்) நப்பின்னைப்பிராட்டிக்குதவிற்றென்று வ்யாஜமாய் ஆஸ்ரிதருடைய பக்திக்குக் கர்ஷகனானவனுடைய. (பழம்புனத்து) பழம்புனங்களில விதைக்கவேண்டாதே யுதறிமுளைக்குமாபோலேயாத்ருச்சிகஸங்க்ருதங்கள் தன்னடையே பிறக்கும்படியாகவிறே ஈஸ்வரன் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுவது. (மொய்த்தெழுந்தவித்யாதி) ருசிபிறந்தபின்பு ப்ராப்தியளவும் நாம் தரிக்கைக்கு அவன் திருமேனிக்குப்போலி யுண்டென்கை. செறிந்தெழுந்த கார்காலத்தில் மேகம்போலே ஸ்யாமமான திருமேனியையுடைய ஸர்வேஸ்வரனுடைய நிறத்தை நீர்கொண்டெழுந்த காளமேகம்காட்டும். உ௩:

அரு.—இருபத்துமூன்றும்பாட்டு.—நிகழ்ந்து - வர்த்தியா நின்றுகொண்டு. காட்டும் - ப்ரகாசித்துக் காட்டவுமாம். உ௩.

**நிகழ்ந்தாய்பால்பொன்பசுப்புக்கார்வண்ணம்நான்கும்,**
**இகழ்ந்தா யிருவரையும் வீயப்—புகழ்ந்தாய்,**
**சினப்போர்ச் சுவேதனைச் சேனா பதியாய்,**
**மனப்போர் முடிக்கும் வகை.** உச.

அந்.—பால் பொன் பசுப்பு கார் நான்கு (5) வண்ணம் நிகழ்ந்தாய் இருவரையு வீய இகழ்ந்தாய் (19) சேனாபதியாய் மனம் போர் முடிக்குமவகை சினம் (15) போர் சுவேதனை புகழ்ந்தாய். (18)

அர்.—வெண்மை சிவப்பு பச்சை கறுப்பு (ஆகிற) நான்கு (ரு) வர்ணங்களையுடையனாய் (நாலுயுகங்களிலும்) அவதரித்தாய். பாண்டவகௌரவர்களிருவருடையஸைனிகர்களையும் நசிக்கும்படி உபேக்ஷித்தாய். (கo) ஸேனாபதியாய்க்கொண்டு (தான்) ஸங்கல்பித்த யுத்தத்தைத் தலைக்கட்டும்படி சீறிக்கொண்டு (கரு) யுத்தத்தில் அர்ஜுனனைக் கொண்டாடினாய். (கஅ)

வ்யா.—இருபத்துநாலாம்பாட்டு.—(நிகழ்ந்தாயித்யாதி) அவ்வோ யுகங்களில்சேதனர்க்கு ப்ரியமானவெண்மைதொடக்கமானநிறங்களை

யுகந்தாய். (இகழ்ந்தாயிருவரையும்வீய)மதுசைடபர்கள்முடிய அன்றிக்கே,(க) "எல்லாச்சேனையுமிருநிலத்தவித்த" என்னுமாபோலேப க்ஷத்வயத்தையும் முடித்தவென்றுமாம். (புகழ்ந்தாயித்யாதி) சினத்த போரையுடைய ஸ்வேதவாஹனனான அர்ஜுநன் ஸேனைக்கு நிர்வாஹகனாய், தர்மபுத்ரன் முடிசூடவும், த்ரௌபதி குழல்முடிக்கவும், துர்யோதநாதிகள் முடியும்படியும் நினைத்தபோரை முடிக்க வல்லனாகப்புகழ்ந்தாய். உச.

அரு.— இருபத்துநாலாம்பாட்டு.— நிகழ்ந்தாய் - ப்ரகாசித்தாய். ப்ரகாசமுகப்பின் கார்யமாகையாலே உகந்தா யென்கிறது. புகழ்ந்தாய் - அர்ஜுநனைக் கொண்டாடினாய். உச.

வகையால் மதியாது மண்கொண்டாய், மற்றும்
வகையால் வருவதொன் றுண்டே,—வகையால்
வயிரங் குழைத்துண்ணும் மாவலிதா னென்னும்,
வயிரவழக் கொழித்தாய் மற்று. உடு.

அ்க.— மதியாது வகையால் மண் கொண்டாய் மற்று (5) வகையால் வயிரம் குழைத்து உண்ணும் தானென்னும் (10) மாவலி வயிரவழக்கு ஒழித்தாய். வகையால் வருவது (15) மற்றும் ஒன்றுஉண்டே. (17.)

அர்.— (மஹாபலியை) லக்ஷ்யம்செய்யாமல் உபாயத்தினால் பூமியை வாங்கிக்கொண்டாய். அதற்குமேல் (ரு) உபாயத்தினால் வச்சிரத்தை யுரைத்து புஜித்து தாபிமாநியான (ய) மஹாபலியோடு சாத்ரவமுறையைப் போக்கினாய். இவ்வுபாயங்களினால் (உனக்கு) வருவது (கரு) (ஆஶ்ரிதரக்ஷண மொழிய) வேறொரு ப்ரயோஜந முண்டோ? (கஎ) உடு.

வ்யா.— அவ,— இருபத்தைந்தாம்பாட்டு.— (வகையால்)ஆஶ்ரிதார்த்தமான செயலொழிய தனக்கென்ன வொருசெய லில்லையென்கிறார்.

(வகையாலித்யாதி) மஹாபலியுகக்கும் ப்ரகாரத்தாலே பூமியை அநாயாஸேநகொண்டாய். (மற்றித்யாதி.)ஒரு உபாயத்தாலே வைரத்தைபுஜித்துஅத்தாலேமிடுக்கனாக அபிமாநித்திருக்கிறமஹாபலியையுடைய சாத்ரவமுறையைத்தவிர்த்து மஹாபலி பக்கல்நின்றும் ராஜ்

(க) திருவாய்மொழி. ௩-௨-௩.

யம் மீட்டுக்கொடுத் துபகரித்தாய். (மற்றும் வகையால் வருவதொன் றுண்டே) இவற்றாலுனக்கு ப்ரயோஜநமாவதொன்றுண்டோ.

அரு.— இருபத்தைந்தாம்பாட்டு.— வயிரங்குழைத்துண்ணும் மாவலி - இந்த்ரனோடே வைரத்தையுண்டாக்கி லோகத்தை புஜிக்கிற மஹாபலி. தானென்னுமென்கையாலே அபிமாநம் தோற்றுகிறது. உரு.

மற்றுத் தொழுவா ரொருவரையும் யானின்மை,
கற்றைச் சடையான் கரிக்கண்டாய்;—எற்றைக்கும்
கண்டுகொள் கண்டாய் கடல்வண்ணா; யானுன்னைக்
கண்டுகொள் கிற்கு மாறு. உசு.

அந்.— யான் மற்றுஒருவரையும் தொழுவார் இன்மை. கற்றை (5) சடையான் கரிக்கண்டாய். கடல்வண்ணா! யான் உன்னை (10) எற்றைக்கும் கண்டுகொள்கிற்குமாறு கண்டுகொள் கண்டாய் (13)

அர்.— நான் (உன்னை யொழிய) வேறொருவரையு மாஶ்ரயணீயராக உடையே னல்லேன். (இதற்கு) நெருங்கின (ரு) ஜடையையுடையருத்ரன் ஸாக்ஷி. ஸமுத்ரம்போன்றதிருமேனியையுடையவனே! நா னுன்னை (ம) யெப்போதும் ஸேவிக்கும்படி கடாக்ஷித் தருளாய். (கந) உசு.

வ்யா.— இருபத்தாறும்பாட்டு.— (மற்றுத்தொழுவாரித்யாதி) நான் தேவதாந்தரஸமாஶ்ரயணம் பண்ணேனென்னுமிடத்துக்கு ஆள்பிடித்துத் தொழுவித்துக்கொள்ளுமருத்ரன் ஸாக்ஷி. (எற்றைக்குமித்யாதி) ஶ்ரமஹரமான வடிவையுடைய நீயே மேலுமிந்த நன்மைநிலைநிற்கும்படியாகப் பார்த்தருளவேணும். உசு.

மாறன் புகுந்த மடநெஞ்சம், மற்றதுவும்
பேறாகக் கொள்வனோ பேதைகாள்;—நீறாடி
தான்காண மாட்டாத தாரகல சேவடியை,
யான்காண வல்லேற் கிது. உஎ.

அந்.— பேதைகாள்! நீறாடிதான் காணமாட்டாத தார் அகலம் (5) சே அது அடியை காணவல்லேற்கு மால் (10) தான்

புகுந்த மடம் இது நெஞ்சம் (15) யான் மற்று பேறாக கொள்வனோ? (19)

அர்.— ஓ புத்தி சூர்யர்களே! பஸ்மோத்தூளிதனான ருத்ரனுக்கும் காணவரிதாய் மாலையினாலலங்கரிக்கப் பட்டதாய் (போக்யதையினால்) அபரிச்சிந்நமாய் (ரு) சிவந்திருக்கிற அந்தத் திருவடிகளை ஸேவிக்கத்தக்கபாக்யமுடைய எனக்கு ஸர்வேஶ்வரன் (கo) தானேவந்து ப்ரவேசித்த விதேயமான இந்த மனஸ்ஸை யுடையேனான (கரு) நான் (அத் திருவடி யொழிய) வேறொன்றைப் புருஷார்த்தமாகக் கொள்வனோ? (கசு) உஎ.

வ்யா.— அவ.— இருபத்தேழாம்பாட்டு.— (மாறன்) பார்த்தருளவேணுமென் றபேக்ஷித்தபடியே அவன் பார்க்கப்பெற்ற படியைப் பேசுகிறார்.

(மாறன் புகுந்தமடநெஞ்சம்)ஈஶ்வரன் வ்யாமுக்தனாய்ப் புகுரும்படி ருசியுடைய நெஞ்சு! (நீறித்யாதி) ருத்ரன் காணமாட்டாத தாரையுமகலத்தையு முடைத்தான திருவடிகளைக்காண வல்லேனான வெனக்கு இதொழிய வேறே யொன்றைப் பேறாகக்கொள்வனோ? வேறொன்றைப் பேறாக நினைத்திருக்கு மறிவுகேடர்காள்! உஎ.

அரு.— இருபத்தேழாம்பாட்டு.—மாறன்-மால்தான். நெஞ்சம். நெஞ்சையுடையனான, பிழை. உஎ.

**இது விலங்கை யீடழியக் கட்டியசேது,**
**இது விலங்கு வாலியை வீழ்த்ததுவும்,— இதுவிலங்கை**
**தானொடுங்க வில்நுடங்கத் தண்டா ரிராவணனை,**
**ஊனொடுங்க வெய்தா னுகப்பு. உஅ.**

அந்.— இலங்கை ஈடழிய கட்டிய இது சேது; (5) விலங்கு வாலியை வீழ்த்த இதுவும், இது (10) இலங்கைதான் ஒடுங்க வில் நுடங்க தண் (15) தார் இராவணனை ஊன் ஒடுங்க எய்தான் (20) உகப்பு. (21)

அர்.— லங்காபுரியை யழிக்கைக்காகக் கட்டின இந்த ஸேதுவும், (ரு) ம்ருகமான வாலியை விழச்செய்த இதுவும், இந்த (ய) லங்காபுரி நசிக்கும்படியாகவும் சார்ங்கம் வளையும படியாகவும் குளிர்ந்த (கரு) மாலையையுடைய ராவணனுடைய ப்ராணன் நசிக்கும்படியாகவும் அடித்தவனுடைய (உo) ஸந்தோஷ வ்யாபாரங்கள். (உக) (உஅ)

வ்யா.—இருபத்தெட்டாம்பாட்டு.—(இதுவித்யாதி) லங்கைக்கு முலையடியே வழிபோம்படியாகக் கட்டின திருவணையிது. கடலடைபட்ட போதே லங்கையழிந்ததென்று நினைக்கும்படியாக. (இது விலங்கு வாலியை வீழ்த்ததுவும்) திர்யக்கான வாலியைமுடித்ததுவும். (இது வித்யாதி) லங்கை நெருக்குண்ணவும் ஸ்ரீசார்ங்கம் வளையவும் மதிப்பனான ராவணன் முதுகு கூனவும் எய்தான். (இது அவனுகப்பு) அவன் லீலை. வாலியைக்கொன்ற ஜயமும், ராவண வதமும் ப்ரஸித்தமான படியாலே யிதுவென்கிறார். ஒரு முஷ்டியிலே நின்றெய்ய நெஞ்சழியும்படியாயிறே இருப்பது. உஅ.

அரு.—இருபத்தெட்டாம்பாட்டு.—கட்டிய சேது - கட்டின ஸேது. தண்டார்-மாலையுடையவனுகையாலே மதிப்பனென்கிறது. இது என்று ப்ரத்யக்ஷமாதல், ஈடுபாடாதல். அப்படி ஈடுபடுத்தமோ வென்ன அருளிச்செய்கிறார் (ஒரு முஷ்டீத்யாதி) முஷ்டி — விற்பிடித்தபிடி. உஅ.

உகப்புருவம் தானே யொளியுருவம் தானே,
மகப்புருவம் தானே மதிக்கில்,— மிகப்புருவம்
ஒன்றுக்கொன் றோசனையான் வீழ, ஒருகணையால்
அன்றிக்கொண் டெய்தா னவன். உகூ.

அ.— மிக புருவம் ஒன்றுக்கொன்று ஓசனையான் வீழ அன்றிக்கொண்டு (5) ஒருகணையால் எய்தானவன் மதிக்கில் தானே உகப்பு (10) உருவம். தானே ஒளி உருவம் தானே. (15) மகப்பு உருவம் (17)

அர்.— மிகவும் ஒருபுருவத்துக்கொருபுருவம் யோசனை நீளமுடையகும்பகர்ணன் விழும்படி சீறிக்கொண்டு (ரு) ஒருபாணத்தினு லடித்தசக்ரவர்த்தித்திருமகனை த்யானித்தால் அவனே மநோஹரமான (கo) திருமேனியையுடையனுயிருப்பன். அவனே உஜ்ஜ்வலமான திருமேனியை யுடையனு யிருப்பன். அவனே (கரு) ஆஸ்சர்யகரமான திருமேனியையுடையனுயிருப்பன். (கஎ) (உகூ)

வ்யா.—இருபத்தொன்பதாம் பாட்டு.—(உகப்புருவமித்யாதி) (க)" ஐஹ்ஹ்ஹீ தாவிச - இச்சாக்ருஹீ தாபிமத" - என்னும்படி

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-கூ-ரு அச.

ஸ்வவ்யதிரிக்தர்க்கும் ப்ராப்யமாய்த்தனக்குமபிமதமாய் ரஜஸ்தமோ மிஸ்ரமின்றிக்கே நிஷ்க்ருஷ்ட ஸத்வமாகையாலே நிரவதிகதேஜோ ரூபமாய் (உ) "ஈவஹாஹ்வுஸஸ - ரூபமங்யத்தரோர்மஹத்" என்னும்படியான ஆஸ்சர்யமான வடிவையுடையவனுமான சக்ர வர்த்தித் திருமகன்தானே ஒருபுருவத்துக் கொருபுருவம் யோசனை நீளமுடைய கும்பகர்ணன் பட்டுவிழும்படி ஸங்கல்பத்தாலன்றிக்கே திருச்சரத்தாலே தேவகார்யஞ் செய்தாருகை யன்றிக்கே தனக்கே வந்ததாகச் சீற்றத்தை யேறிட்டுக்கொண் டெய்தான். மதிக்கில் இவனுடைய திருமேனியை யொன்றால் பரிச்சேதிக்கப் போகா தென்கை. உகூ

அரு.—இருபத்தொன்பதாம் பாட்டு, — மகப்புருவம் - பெரிய வடிவு. அன்றி-சீறி, மதிக்கில் - பரிச்சேதிக்கப் பார்க்கில். ஏதாத்ருச மாகையாலே பரிச்சேதிக்கப் போகாதென்றபடி. உகூ.

அவனென்னை யாளி யரங்கத் தரங்கில்,
அவனென்னை யெய்தாமற் காப்பான்,—அவனென்ன
துள்ளத்து நின்று னிருந்தான் கிடக்குமே,
வெள்ளத் தரவணையின் மேல். ஙo.

அ்.— அரங்கத்தவன் என்னை ஆளி. அவன் என்னை (5) அரங்கில் எய்தாமல் காப்பான், என்னது உள்ளத்து (10) நின்றான் இருந்தான் அவன் வெள்ளத்து அரவணையின்மேல் (15) கிடக்குமே! (16)

அர்.—கோயிலில்கண்வளர்ந்தருளுகிறவன் என்னை ரக்ஷிக் கிறவன். அவ னென்னை(ரு) ஸம்ஸாரமாகிறநாடகசாலையில் ப்ரவே சியாதபடி ரக்ஷிப்பன். என் ஹ்ருதயத்தில் (கo) நின்றவனும் வீற்றிருந்தவனுமான அவன் க்ஷீராப்தியில் சேஷ சயனத்தில் (கரு) கண்வளருமோ! (கசா) ஙo.

வ்யா.—முப்பதாம்பாட்டு.—(அவனித்யாதி) அரங்கத்தவனென் னையாளி.(அரங்கித்யாதி)(ங)"பிறவிமா மாயக்கூத்து" என்றுஸம்ஸா ரமாகிற நாடகசாலையி லென்னை ப்ரவேசியாமல் காப்பாரார்? பெரு மாளே.(அவனித்யாதி)என்ஹ்ருதயத்திலேபுகுருகைக்கு அவஸரப்ர

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-சு-ரு-எo. (ங) திருவாய்மொழி-அ-ச-கக.
(உ) ஸ்ரீவிஷ்ணுபுராணம்-சு-எ-எo.

தீக்ஷணுய்க்கோயிலிலே கண்வளர்ந்தருளி அவகாசம்பெற்று என்ஹ்ரு தயத்திலே நிற்ப திருப்பதாகிறவனுக்குத் திருப்பாற்கடலிலே படுக்கையில் கண்ணுறங்குமோ? ௩ய.

மேல் நான்முக னரனையிட்ட விடுசாபம்,
தான் நாரண னொழித்தான் தாரகையுள்,—வானோர்
பெருமானை யேத்தாத பேய்காள், பிறக்கும்
கருமாயம் பேசில் கதை. ௩க.

அந்.— மேல் நான்முகன் அரனை இட்டவிடு சாபம் (5) நாரணன் தான் தாரகையுள் ஒழித்தான். வானோர் (10) பெருமானை எத்தாத பேய்காள்! பிறக்கும் கரு (15) மாயம் பேசில் கதை. (ஈ1)

அர்.— முற்காலத்தில் சதுர்முகன் ருத்ரனுக்குக் கொடுத்த விடக்கூடியசாபத்தை(டு) நாராயணன் தானே பூலோகத்தில் போக்கினுன். நித்ய ஸூரிகளுக்கு (கo) நிர்வாஹகனை (அந்த ஸ்ரீமந் நாராயணனை) ஸ்தோத்ரம்செய்யாத பிசாசங்களே! பிறக்கும்போது கர்ப்பத்தில்படுகிற (கரு) ஆஸ்சர்யமான துக்கத்தைச் சொல்லப்புகில் கதையாயிருக்கும். (கஅ) (௩க)

வ்யா.— அவ.— முப்பத்தோராம் பாட்டு.—(மேல் நான்முகன்) நீங்க ளாஶ்ரயணீயராக நினைத்தவர்களுக்கு மிடர்வந்த விடத்திலே அவ்விடரைப் பரிஹரிக்குமவனையன்றோ பற்றவடுப்ப தென்கிறுர்.

(மேலித்யாதி)பண்டு சதுர்முகன் ருத்ரனை(க)"ஸ்வாமீ ஸ்வம் ஹவிஷ்)வஸி-கபாலீத்வம்பவிஷ்யஸி" என்று சபித்த சாபத்தைத்தரணியிலே யெல்லாருமறிய ஸர்வேஸ்வரன் போக்கினுன்.(வானோரித்யாதி) ஒருத்தன் தலையையறுத்துப் பாதகியாக, ஒருத்தன்சோச்யனுக, இருவருடைய வ்யஸநத்தையும் போக்குவதுஞ் செய்து நித்யஸூரிகளுக்கு ப்ராப்யனானவனை எத்தாத அறிவுகேடர்காள்! (பிறக்குமித்யாதி) இவ்வறிவுகேடு கிடக்கப் பிறவிக் கடியான கர்ப்பஸ்தாநத்திலுள்ள ஆஸ்சர்யம் சொல்லப்புகில் மஹாபாரதம். ௩க

அரு.— முப்பத்தோராம்பாட்டு.— தாரகை என்று தரணியென்றபடி.

(க)

கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றி னுள்ள,
உதைப்பளவுபோதுபோக்கின்றி,—வதைப்பொருள்தா
வாய்ந்த குணத்துப் படாத தடைமினோ, [ன்
ஆய்ந்த குணத்தா னடி. ௩௨.

அந்.— கதைப் பொருள்தான் கண்ணன் திருவயிற்றில் உள்ள உதைப்பளவு (5) போதுபோக்கின்றி வாய்ந்தகுணத்து படாதது வதைப்பொருள்தான், ஆய்ந்த (10) குணத்தான் அடி அடைமினோ. (13)

அர்.— இதிஹாஸபுராணாதிகள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸங்கல்பத்தினால் நிலைபெற்றன. ஒருக்ஷணமும் (௫) வ்யர்த்தமாகப்போக்காமல் திருக்கல்யாணகுணங்களில் லக்ஷயியாதது ரஸிக்கிற வஸ்துவே. (ஆகையால்), ஹேயப்ரத்யநீகமான (௧௦) கல்யாணகுணங்களையுடையவனுடைய திருவடிகளைப் பற்றுங்கோள். (௧௩) (௩௨)

வ்யா.—முப்பத்திரண்டாம் பாட்டு.— (கதையித்யாதி) ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள் ஸர்வேஶ்வரனுடைய ஸங்கல்பத்திலுள்ளன. (உதைப்பித்யாதி) ஒருநொடி மாத்ரம் போதுபோக்கின்றி. (வாய்ந்த குணத்தில் படாதது வதைப் பொருள்தான்) ஆஶ்சர்ய குணத்திலகப்படாதது பரஹிம்ஸை. (ஆய்ந்த குணத்தா னடியடைமினோ) ஹேய ப்ரத்யநீகமான குணத்தை யுடையவன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள். ௩௨.

அரு.—முப்பத்திரண்டாம்பாட்டு,—போக்கின்றி-போக்காமல். சீக்ரமாக. (அகப்படாதது)-ஸத்குணத்திலே. பரஹிம்ஸை கூடாது, ஆகையாலே; அத்தைவிட்டு அவனை யாஶ்ரயியுங்கோ ளென்றபடி பரஹிம்ஸை-ஆத்மாபஹாரமாகவுமாம். ௩௨.

அடிச்சகடம் சாடி யரவாட்டி,ஆனை
பிடித்தொசித்துப் பேய்முலை நஞ்சுண்டு,—வடிப்பவள
வாய்ப்பின்னைத் தோளிக்கா வல்லேற்றெருத்திறுத்து,
கோட்பின்னு மானான் குறிப்பு. ௩௩.

அந்.— அடி சகடம் சாடி அரவு ஆட்டி (5) ஆனை பிடித்து ஒசித்து பேய் முலை (10) நஞ்சு உண்டு வடி

பவளம் வாய் (15) தோளி பின்னைக்கா வல் ஏறு எருத்து (20) இறுத்து பின்னும் குறிப்பு கோவானன். (24)

அர்.—திருவடிகளினால் சகடாஸுரனை யுதைத்துக் காளியனை (வாலைப்பிடித்து) ஆட்டி (ரு) குவலயாபீடத்தைப் பிடித்து (அதின் கொம்மை) முறித்துப் பூதனையின் முலையில் (௧௦) விஷத்தை யமுதுசெய்து அழகிய பவளம்போன்ற வதரத்தையும் (௧௫) தோள்களையுமுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக பலிஷ்டங்களான வ்ருஷபங்களின் முசிப்பை (௨௦) முறித்துப் பின்னும் ரக்ஷிப்பதினால் ஸர்வஸ்வாமியானன். (௨௪) ௩௩.

வ்யா.—அவ.—முப்பத்து மூன்றும் பாட்டு.—(அடிச்சகடம்) அஸாதாரணையானநப்பின்னைப்பிராட்டிக்கும்அல்லாதார்க்குமோக்ஷ விரோதியைப் போக்குமவன் என்கிறார்.

(அடியித்யாதி) திருவடிகளாலே சகடையழித்து, காளியனைத் துறத்தி, குவலயாபீடத்தைப்பிடித்து அதின்கொம்பையநாயாஸே நமுறித்து, பூதனையைமுடித்து, அழகிய பவளம்போன் றிருக்கிற அதரத்தையும் அழகிய தோளையுமுடைய நப்பின்னைப் பிராட்டிக்காகத் தன்னையொக்கி வலிய வ்ருஷபங்களினுடைய கருத்தைப்போக்கி, ஸ்வாபாவிகமான சேஷித்வத்தைப் பின்னையு முதறிப் படுத்தான் திருவுள்ளத்தாலே. ௩௩.

குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானை யேத்த,
குறிப்பெனக்கு நன்மை பயக்க,—வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை மெய்வினை நோயெய்தாமல்,
தாங்கடத்தும் தன்மையான் தாள். ௩௪.

அந்.— கோட்டியூர் மேயானை வேங்கடத்து மேயானை ஏத்த (5) எனக்கு குறிப்பு. நன்மை பயக்க எனக்கு (10) குறிப்பு. மெய் வினை நோய் எய்தாமல் (15) தான் கடத்தும் தன்மையான் தாள் வெறுப்பனோ! (20)

அர்.— திருக்கோட்டியூரில் நித்யவாஸம்பண்ணுமவனையும் திருமலையி லெழுந்தருளியிருக்குமவனையும் ஸ்தோத்ரம்பண்ண (ரு) எனக் கபிப்ராயம், நல்லகார்யங்களை வ்ருத்திபண்ண எனக் (௧௦) கபிப்ராயம், சரீரஸம்பந்திகளான கர்மங்களையும் வ்யாதிகளையும் அடையாமற்படி (௧௫) தானே கடத்திவைக்கும்

ஸ்வபாவத்தையுடையஸர்வேஸ்வரனுடைய திருவடிகளை உபேக்ஷிப்பனோ? (௨௦) ௩௪

வ்யா.—அவ.—முப்பத்து நாலாம்பாட்டு.—(குறிப்பெனக்கு) உகந்தருளின தேசங்களிலேஎனக்காகஅவன்வர்த்திக்க "வரில்பொகடேன் கெடில் தேடேன்" என்றிருக்கவோ வென்றுகிர்.

(குறிப்பித்யாதி) திருக்கோட்டியூரிலே யெனக்காக ஸந்நிஹிதனானவனை யேத்தக்கருத்து. (குறிப்பித்யாதி) ஸம்ஸ்லேஷத்தால் வந்த உத்கர்ஷம் பிறக்கக்கருத்து. (வெறுப்பித்யாதி)வந்த ஸம்பத்தை வேண்டா வென்று தள்ளுவனோ? (மெய்யித்யாதி) சரீரமடியாக வந்த வ்யாதியும், வ்யாதிக்கு ஹேதுவான கர்மமும் கிட்டாமல் மாற்றுமவன் திருவடிகளை மறப்பனோ? ௩௪.

அரு.—முப்பத்துநாலாம்பாட்டு.—மறப்பனோ-அத்யாஹார்யம்.

தாளா லுலக மளந்த வசைவே கொல்,
வாளாகிடந்தருளும் வாய்திறவான்,—நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான்,
ஐந்தலைவாய் நாகத் தணை. ௩௫.

அ.—நீள் ஓதம் வந்து அலைக்கும் மா (5) மயிலை மா அல்லிக்கேணியான் ஐந்தலை வாய் (10) நாகம் அணை வாளா கிடந்தருளும்! வாய்திறவான் (15) தாளால் உலகம் அளந்த அசைவே கொல். (19)

அர்.— பெரிய அலைகள் வந் தடிக்கிற ஸ்லாக்யமான (௫) மயிலாபூருக்கடுத்த ஸ்லாக்யமான திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருக்கிறவன் ஐந்துசிரஸ்ஸுக்களையும் முகங்களையுமுடைய (ய) திருவநந்தாழ்வானாகிற படுக்கைமேல் சலியாமல் கண்வளர்ந்தருளுகிறுன். ஒருவார்த்தையும்சொல்லான். (கடு) (இது) திருவடிகளினால். லோகங்களை யளந்த ஆயாஸத்தினாலேயாயிருக்கலாமோ? (கக) ௩௫.

வ்யா.— அவ.— முப்பத் தைந்தாம்பாட்டு — (தாளால்) லௌகிகர் படியைக் கண்டு வெறுப்பனோ வென்கிறுர்.

(தாளாவித்யாதி) (௧)"வடிவிணையில்லாமலர்மகள்மற்றை நிலமகள் பிடிக்கும்மெல்லடி" என்றுபிராட்டிக்குங் கூசித்தொடவேண்டும் திருவடிகளைக் கொண்டு காடுமேடையு மளந்து திருமேனி அலற்றதோ? இல்லாதத்தை யுண்டாக்கும் ஸங்கல்பம் போராதோ? உண்டானத்தை உஜ்ஜீவிப்பிக்க. (வாளாவித்யாதி) ஏகரூபமாகக் கிடப்பதும் செய்து வார்த்தையும் பேசுகிறிலன். (நீளோதமித்யாதி) நீர்க்கரையைப்பற்றிக் கண்வளருகிறதும் ஶ்ரமத்தின் மிகுதியென்றிருக்கிறார். ௩௫,

அரு.—முப்பத்தைந்தாம் பாட்டு. — பரியுமத்தனை யன்றோ வென்கிறாரிதிலென்றபடி. அசைவு-தளர்த்தி. வாளா-வெறுமனே ஒருபடியாய்-ஏகரூபமாயென்றபடி. ௩௫.

> நாகத் தணைக்குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்,
> நாகத்தணையரங்கம் பேரன்பில்,— நாகத்
> தணைப்பாற் கடல்கிடக்கு மாதி நெடுமால்,
> அணைப்பார் கருத்தனா வான். ௩௬.

அந்.— ஆதி நெடுமால் அணைப்பார் கருத்தன் ஆவான் (5) நாகத்தணை குடந்தை வெஃகா திருவெவ்வுள் நாகத்தணை (10) அரங்கம் பேர் அன்பில் நாகத்தணை பாற்கடல் (15) கிடக்கும். (16)

அர்.— ஜகத்காரணனான ஸர்வேஶ்வரன் பக்தஜநங்களுடைய ஹ்ருதயத்தில் ப்ரவேசிக்கைக்காக (௫) திருவநந்தாழ்வானாகிறபடுக்கையின்மேல் திருக்குடந்தையிலும் திருவெஃகாவிலும் திருவள்ளூரிலும் திருவநந்தாழ்வானாகிறபடுக்கையின்மேல் (௧௦) கோயிலிலும் திருப்பேரிலும்திருவன்பிலிலும் திருவநந்தாழ்வானாகிறபடுக்கையின்மேல் திருப்பாற்கடலிலும் (௧௫) சயனித்துக்கொண்டிருக்கிறான். (௧௬) ௩௬.

வ்யா.— அவ.— முப்பத் தாறும் பாட்டு.— (நாகத்தணை) பலவிடத்தில் கண்வளர்ந்தருளுகிறதும் ஆயாஸத்தாலேயென்றிருக்கிறார்.

(நாகத்தணையித்யாதி) திருக்குடந்தையிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந் தருளுகிறதும், கோயில்தொடக்கமான எல்

---

(௧) திருவாய்மொழி-௯-௨-௰.

லாத் திருப்பதிகளிலும் திருப்பாற் கடலிலும் ஜகத்காரண பூதனான ஸர்வேஸ்வரன் தோள்தீண்டியாகக் கண்வளர்ந் தருளுகிறதும், தான் புகுரப்புக்கால் ஆணையிடாதார் ஹ்ருதயத்திலே புகுருகைக்காக இப்படி அவஸர ப்ரதீக்ஷனாக வேண்டுவா னென்னென்னில் தாயாரகையாலே.

௩௬.

அரு.—முப்பத்தாறும் பாட்டு.—கீழ்ப்பாட்டுக் கநுகுணமாக அவதாரிகையிலர்த்தம். அவஸரப்ரதீக்ஷனை - பாட்டுக்குத்தாத் பர்யம்.

௩௬.

வானுலவு தீவளி மாகடல் மாபொருப்பு,
தானுலவு வெங்கதிருந் தண்மதியும்,— மேனிலவு
கொண்டல் பெயரும் திசையெட்டும் சூழ்ச்சியும்,
அண்டம் திருமா லகைப்பு. ௩எ.

அந்.—வான் உலவு தீ வளி மா (5) கடல் மா பொருப்பு தான்உலவு வெம் (10) கதிரும் தண் மதியும் மேல் நிலவு (15) கொண்டல் பெயரும் திசைஎட்டும் சூழ்ச்சியும் அண்டம் (20) திருமால் அகைப்பு. (22).

அர்.—ஆகாசமும் சலிக்கிற அக்நியும் காற்றும் பெரிய (௫) ஸமுத்ரமும் பெரிய மலைகளும் ஸஞ்சரிக்கிற உஷ்ண (௧0) கிரணங்களையுடைய ஸூர்யனும் சீதகிரணங்களையுடைய சந்த்ரனும் மேலே ஸஞ்சரிக்கிற (௧௫) மேகங்களும் சேதநர்களும் எட்டுத்திக்குக்களும் ஆவரணமும் ப்ரஹ்மாண்டமும் (௨0) ஶ்ரிய:பதியினுடைய ஸங்கல்பத்தினாலுண்டானவை. (௨௨)

வ்யா.—அவ.—முப்பத் தேழாம்பாட்டு.—(வானுலவு) ஆதிசொ டுமொழி விவரிக்கிறது.

(வானுலவு) சூழ்ச்சியும்-ஆவரணமும். இவையெல்லாம் திருமாலகைப்பு-எழுச்சி; ஶ்ரிய:பதியினுடைய ப்ரயத்நத்தாலே யென்கை.

அரு.—முப்பத்தேழாம்பாட்டு.— வளி-காற்று. பொருப்புத் தான். கொண்டல்-மேகம். பெயரும்-சேதநரை உபலக்ஷிக்கிறது; சேதநருமென்றபடி.

௩எ.

அகைப்பில் மனிசரை யாறு சமயம் [ல்
புகைத்தான், பொருகடல் நீர்வண்ணன்,—உகைக்குமே
எத்தேவர் வாலாட்டு மெவ்வாறு செய்கையும்,
அப்போ தொழியு மழைப்பு. ௩அ.

அந்.—அகைப்புஇல் மனிசரை ஆறு சமயம் புகைத்தான் (5) பொரு கடல் நீர் வண்ணன் உகைக்குமேல் (10) எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அழைப்பும் (15) அப்போது ஒழியும், (17).

அர்.—மதிப்பில்லாத மனுஷ்யர்களை ஆறுவிதமான (நாஸ்திக) மதங்களில் ப்ரவேசிப்பித்தவனும் (ரு) அலையடிக்கிற ஸமுத்ரத்தின் ஜலம்போன்ற காந்தியையுடையவனுமான ஸர்வேஸ்வரன் உபேக்ஷித்தால் (௧௦) ஸமஸ்ததேவதைகள் வாலாட்டுகிறதும் ஸகலவிதமான யாகாதிக்ரியைகளும் அத்தேவதைகளினுஹ்வாநமும் (௧௫) அப்போது நடக்கமாட்டாது. (௧எ)

வ்யா.—முப்பத் தெட்டாம்பாட்டு.—(அகைப்பில் மனிசரை) எழுச்சியில்லாத மனிசரை; அளவில்லாதவர்களை யென்கை. (ஆறு சமயமித்யாதி) க்ஷுத்ரபதார்த்தங்களை யகப்படுத்தப் புகைக்குமாபோலே பாஹ்யஸமயங்களைக் காட்டி யகப்படுத்தினான் ஸர்வேஸ்வரன். (உகைக்குமேலித்யாதி) நெகிழுகிற்குமாகில் தேவதாந்தரங்கள் (க)"ஸோஹம்...ஸோஹம்" என்று க்ஷுத்ரஜந்துக்கள் வாலாட்டுமாபோலேபண்ணு மபிமாநமும் அத்தேவதைகளையாஸ்ரயிக்கைக்காகப்பண்ணும்வ்யாபாரமாகிறகாட்டழைப்பும்அவன் நெகிழ்ந்தபோது ஒழியும்-முடியும். ௩அ.

அரு.—முப்பத்தெட்டாம்பாட்டு.—அழைப்பு - காட்டழைப்பு. முகங்காட்டுகைக்காக ஆஹ்வாநம்பண்ணி அழைக்கிற மந்த்ரங்களென்றபடி. ௩அ.

அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண,
இழைப்பன் திருக்கூடல் கூட,—மழைப்பேர்
அருவி மணிவரண்டி வந்திழிய, ஆனை
வெருவியரவொடுங்கும் வெற்பு. ௩௬.

(க) கீதை. ௧௬ - ௧௭.

அந். — திருவேங்கடத்தானை காண அழைப்பன். பேர் மழை (5) அருவி மணி வரண்டி வந்து இழிய (10) ஆனை வெருவி அரவு ஒடுங்கும் வெற்பு (15) கூட திருக்கூடல் இழைப்பன். (18).

அர்.—திருவேங்கடமுடையானை ஸேவிக்கக் கூப்பிடாநின்றேன். அதிக மழையினால் (ப்ரவஹிக்கிற) (௫) மலையருவிகள் ரத்நங்களைத் திரட்டிக்கொண்டு வந்து (கீழே) விழும்போது (௧௦) ஆனை பயந்து பெரும்பாம்பின்வாயிலே விழுகிற திருமலையை (௧௫) யடையவேணுமென்று திருக்கூடல் இழையாநின்றேன் (மணற்களில் சக்ராகாரமாக எழுதிப்பாராநின்றேன். (௧௮)

வ்யா.—முப்பத் தொன்பதாம்பாட்டு.—(அழைப்பன்) போக மோக்ஷத்துக்கோவென்னில்(காண).(இழைப்பனித்யாதி)மழையிலே பெரிய அருவிகள் ரத்நங்களைக் கொண்டுவந்திழிய ரத்ந தீப்தியை ஆனை அக்நியென்றும் ஸர்ப்பம் மின்னென்றும்பயப்பட்டு ஒதுங்குந் திருமலை, அன்றிக்கே, நெருப்புக்கு பயப்பட்டு ஆனை மலைப்பாம்பின் வாயிலே புக்கொடுங்கு மென்றுமாம். இப்படிக்கொத்த திருமலையைக் கூட இழைப்பன் திருக்கூடலென்றந்வயம். ௩௯.

அரு.—முப்பத்தொன்பதாம் பாட்டு.—அருவியை மின்னென்றும்.கூட.-கூடுகைக்குத் திருக்கூடலிழைப்பன். ௩௯.

வெற்பென்று வேங்கடம் பாடினேன், வீடாக்கி
நிற்கின்றே னின்று நினைக்கின்றேன்,—கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்,
கால்வலையில் பட்டிருந்தேன் காண். ௪௰

அந்.—வெற்புஎன்று வேங்கடம் பாடினேன். வீடுஆக்கி நிற்கின்றேன். (5) நின்று நினைக்கின்றேன். கற்கின்ற நூல் வலையில் பட்டிருந்த (10) நூலாட்டி கேள்வனார் கால்வலையில் பட்டிருந்தேன் காண். (15).

அர்.—மலையென்று சொல்லும்போது திருமலையைப் பாடாநின்றேன். (அதினால்) மோக்ஷத்தை யுண்டாக்கிக்கொண் டிராநின்றேன். (௫) ஸ்திரமாகவிருந்து (பலம்பெற்றபடியை) த்யாநியாநின்றேன். அத்யயநம்செய்யப்பட்ட சாஸ்த்ரமாகிறவலையில்

அகப்பட்ட (ப்ரதிபாதிக்கப்பட்ட) (கo) ஸ்ரீதேவியின் வல்லபனை ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளாகிறவலையி லகப்பட்டுக் கொண்டேன். பாருங்கள். (கரு). (சo)

வ்யா.—நாற்பதாம்பாட்டு.—(வெற்பித்யாதி)விசேஷித்துஒன்று செய்ததில்லை; அல்லாத மலைகளைச் சொல்லுகிறவோபாதியித்தைச் சொல்லத் திருமலையாயிற்று. (வீடாக்கி நிற்கின்றேன்) அநேக யத்நத்தாலே பெறும் மோக்ஷத்தை இச்சொல்லாலே உண்டாக்கிக்கொண்டு நின்றொழிந்தேன். (நின்று நினைக்கின்றேன்) எது சொல்லிற்று எது பற்றிற்றென்று விசாரியாநின்றேன். (கற்கின்ற வித்யாதி) ஓதப்படுகிற வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகிற பெரிய பிராட்டியார்க்கு வல்லபனனவன் திருவடிகளாகிற வலையி லகப்பட்டிருந்தேன். சo.

காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர,
ஓண விழவி லொலியதிர,—பேணி
வருவேங்கடவா வென்னுள்ளம் புகுந்தாய்,
திருவேங்கடமதனைச் சென்று. சக.

அந்.—கல் அருவி முத்து உதிர ஓணவிழவில் (5) ஒலி அதிர பேணி வரும் வேங்கடவா! (10) என் உள்ளம் புகுந்தாய் திருவேங்கடமதனை சென்று (15) காணல் உறுகின்றேன். (17)

அர்.—இரைச்சலையுடைய மலையருவி முத்துக்களை யுதிர்க்க, திருவோணநக்ஷத்ரமாகிற மஹோத்ஸவத்தில் (ரு) மங்களாசாஸநத்வநி யதிரும்படி யாதரித்து வந்தாஸ்ரயிக்கிற திருமலையிலெழுந்தருளியிருக்கிறவனே! (கo) (நீ) என் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்தாய். (நான்) திருமலைக்குப் போய் (கரு) (உன்னை) ஸேவிக்க ஆசைப்படாநின்றேன். (கஎ)

வ்யா.—நாற்பத்தோராம்பாட்டு:—(கல்லருவியித்யாதி) ஒலியையுடைய அருவிகளாலே முத்துதிர, திருவோணநக்ஷத்ரமாகிற மஹா திவஸத்திலே அநுகூலருடைய மங்களாசாஸநத்தாலே வந்தத்வநி மிக ப்ராப்யதயாவந்து ஆஸ்ரயிக்கப்படும் திருமலையையுடைய நீ என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்தாய். நான் திருமலையை யடைந்து காணலுறுகின்றேன். சக.

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை,
நின்று வினைகெடுக்கும் நீர்மையால்,—என்றும்
கடிக்கமல நான்முகனும் கண் மூன்றத்தானும்,
அடிக்கமல மிட்டேத்துமங்கு. சஉ.

அந்.—கடி கமலம் நான்முகனும் கண்மூன்றத்தானும் அடி (5) கமலம் இட்டு என்றும் ஏத்தும் அங்கு (10) சென்று நின்று நீர்மையால் வினை கெடுக்கும் (15) சேணுயர் வேங்கடத்தை வணங்குமினோ. (18)

அர்.—பரிமளம்கமழ்கிற திருநாபிகமலத்திற்பிறந்த ப்ரஹ்மாவும் முக்கண்ணனும் திருவடிகளில் (௫) தாமரைப்பூவை ஸமர்ப்பித்து எப்போதும் ஸ்தோத்ரம்செய்கிற அத்திருமலைக்குப் (க0) போய் நிலையாய்நின்று, ஸ்வபாவத்தினால் பாபங்களைப் போக்குகிற (கரு) மிகவுயர்ந்த திருமலையை யாஸ்ரயியுங்கோள். (கஅ) சஉ.

வ்யா.—நாற்பத்திரண்டாம்பாட்டு.—(சென்றித்யாதி)(க)"சென்னியோங்கு தண்திருவேங்கடம்'' என்னும்படியே புறப்பட்டவாறே கண்டு க்லேசந்தீரும்படியாக ஆகாசாவகாசமடங்க விழுங்கும்படி உயர்ந்த சிகரங்களையுடைய திருமலையைச் சென்று வணங்குங்கோள். (நீர்மையால் நின்று வினைகெடுக்கும்)விரோதியான பாபத்தைத் திருமலை தன் ஸ்வபாவத்தாலே நசிப்பிக்கும். (கடிக்கமலமித்யாதி) ப்ரயோஜநாந்தரபாரும் தங்கள் அதிகாரம்பெறுவது இத்திருமலையிலே அவனை யாஸ்ரயித்து. திருநாபிகமலத்திலே அவ்வவதாரநே பிறந்த சதுர்முகனும் லலாடநேத்ரனும் அவன் திருவடிகளைப் புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டாஸ்ரயித்து. சஉ.

மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்தானை,
கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்,—திங்கள்
சடையேற வைத்தானும் தாமரைமேலானும்,
குடையேறத் தாங்குவித்துக்கொண்டு. சங.

அந்.—திங்கள் சடை ஏறவைத்தானும் தாமரைமேலானும் தாம் (5) குடையேற குவித்துக்கொண்டு, மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்தானை (10) காப்பணிவான் கங்குல் புகுந்தார்கள். (13)

(க) பெரியாழ்வார் திருமொழி, ௫-௪-க.

அர்.—சந்த்ரனை ஜடையில் தரித்தருத்ரனும் கமலப்பூமேல் வஸிக்கிறப்ரஹ்மாவும் தாங்கள் (ரு) குடைமுதலியவைகளைப் பூர்ணமாகஸம்பாதித்துக்கொண்டு, மேகமண்டலத்தையடைந்திருக்கிற சிகரங்களையுடைய திருமலையிலெழுந்தருளியிருக்கிறவனுக்குத் (கo) திருவந்திக்காப்பு ஸமர்ப்பிக்கைக்காக ஸந்த்யாகாலத்தில் ப்ரவேசித்தார்கள். (கரு) சரு.

வ்யா.—நாற்பத்துமூன்றும் பாட்டு.—(மங்குல்) சதுர்முகனும் லலாடநேத்ரனும் திருமலையிலே யொருகாலாஶ்ரயித்துப் போமளவன்று; ஸமாராதநகாலங்கள்தோறும் ஸமாராதநோபகரணங்களைக் கொண்டு வந்தாஶ்ரயிப்பரென்கிறது.

(மங்குலித்யாதி) மேகபதத்திலே செல்ல உயர்ந்த சிகரங்களையுடைய திருமலையையுடையவனை. (காப்பணிவான் கங்குல் புகுந்தார்கள்) திருவந்திக் காப்பெடுப்பான் ஸமாராதநகாலந்தோறும் புகுந்தார்கள். (திங்களித்யாதி) சந்த்ரனை ஜடையிலே தரித்த ருத்ரனும் தாமரைப்பூவை ஜந்மமாகவுடைய ப்ரஹ்மாவும் திருமுத்துக்குடை முதலானவற்றைத் தரித்துக்கொண்டு கங்குல் புகுந்தார்கள். சரு.

அரு.—நாற்பத்து மூன்றும்பாட்டு.—குடையேற - குடை முதலான ஆராதநோபகரணங்களை. முடித்துக்கோண்டு - குறைவற ஸம்பாதித்துக்கொண்டு. சரு.

கொண்டு குடங்கால் மேல் வைத்த குழவியாய்,
தண்ட வரக்கன் தலைதாளால்—பண்டெண்ணி,
போங்குமரன் நிற்கும் பொழில்வேங்கடமலைக்கே,
போங்குமரருள்ளீர் புரிந்து. சச.

அந்.—கொண்டு குடங்கால்மேல்வைத்த குழவியாய் தண்டம் அரக்கன் (8) தலை பண்டு தாளால் எண்ணி போம் (10) குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே குமருள்ளீர் (15) புரிந்து போம். (17)

அர்.—(ப்ரஹ்மாவினால்) எடுத்துக்கொண்டு மடியில்வைத்துக்கொள்ளப்பட்ட சிறுபிள்ளையாய், தண்டயனை ராவணஸுரனுடைய (ரு) தலைகளை முன்பு திருவடிகளினு லெண்ணி அந்தர்

தாகமான (சo) நித்யயுவாவான ஸர்வேஸ்வரன் எழுந்தருளியிருக்கிற தோப்புக்களையுடைய திருமலையை, நல்லவயஸ்ஸையுடையவர்களே! (கரு) ஆஸ்ரயித்துப் போருங்கோள். (கஎ) சச.

வ்யா.—அவ—நாற்பத்துநாலாம்பாட்டு.—(கொண்டு) அறிவுடையாரும் அறிவுகெடும் தசையில் ஹிதைஷியாய் ரக்ஷிக்குமவன்நிற்கிற திருமலையிலே படுகரணரானபோதே சென்றாஸ்ரயியுங்கோளென்கிறார்.

(கொண்டித்யாதி) எடுத்து மடியிலேவைக்கும் பிள்ளையாய் தண்டயனான ராக்ஷஸன் தலை பத்து மறுக்கப்படுமென்று திருவடிகளாலே கீறிக்காட்டி அந்தர்த்தாநம் பண்ணின முக்தன் நிற்குந் திருமலைக்கே கால்நடை யாடும்போதே யாஸ்ரயித்துப்போருங்கள். சச.

அரு.—நாற்பத்து நாலாம்பாட்டு.—போம் - அந்தர்த்தாநம்பண்ணும். குமரன் - சிறுபிள்ளை. குமரருள்ளீர் - பாலராகையாலே கால் நடை தருமே. புரிந்து-ஆஸ்ரயித்து. சச.

புரிந்து மலரிட்டுப் புண்டரீ கப்பாதம்,
பரிந்து படுகாடு நிற்ப,—தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே,
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. சரு.

அந்.—புரிந்து புண்டரீகப்பாதம் மலர் இட்டு பரிந்து (5) படுகாடுநிற்ப எங்கும் தெரிந்து தான் ஓங்கி (10) நிற்கின்றான் தண் அருவி வேங்கடமே வானோர்க்கும் (15) மண்ணோர்க்கும் வைப்பு. (17)

அர்.—ஆஸ்ரயணோந்முகர்களாய் ஸ்ரீபாதபத்மத்தில் புஷ்பங்களை ஸமர்ப்பித்து ஆசையுடன் (ரு) அங்கேநித்யவாஸம்பண்ணும்படி, ஸர்வதேசத்திலும் ப்ரகாசித்துத் தான் ஸர்வாதிகனாய் (4) எழுந்தருளியிருக்கிறஸர்வேஸ்வரனுடைய குளிர்ந்த அருவிகள்பெருகுகிற திருமலையே தேவர்களுக்கும் (கரு) மனுஷ்யர்களுக்கும் நிதியாயிருக்கும். (கஎ) சரு.

வ்யா.—அவ.— நாற்பத்தாறும் பாட்டு.—(புரிந்து) வெறும் ஸம்ஸாரிகளுக்கே யன்று; நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யம் திருமலையென்கிறார்.

(புரிந்தித்யாதி) நிரதிசய போக்யமான திருவடிகளிலே ஆதரித்து புஷ்பாதிகளையிட்டு ஸ்நேஹித்துப் படுகாடு கிடக்கும்படியாக விசததமமாக எங்கும் குறைவற்றவனுடைய ஸ்ரமஹரமான திருமலையே உபயவிபூதிக்கும் ப்ராப்யம். சரு.

வைப்பன் மணிவிளக்காம் மாமதியை மாலுக்கென்று,
எப்பொழுதும் கைநீட்டும் யானையை—எப்பாடும்
வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே,
நாடுவளைத் தாடுதுமேல் நன்று சசு

அந்.—மா மதியை மாலுக்கு மணிவிளக்காம் வைப்பன்என்று (5) எப்பொழுதும் கை நீட்டும் யானையை வேடு (10) எப்பாடும் வளைக்க குறவர் வில்எடுக்கும் வேங்கடமே (15) நாடு வளைத்து ஆடுதுமேல் நன்று. (19)

அ.—ஶ்லாக்யமான சந்த்ரனை ஸர்வேஶ்வரனுக்கு மங்களதீபமாக வைப்பேனென்று (ரு) எப்போதும் தும்பிச்கையை நீட்டிக்கொண்டிருக்கிற யானையை வேடர் (க0) எங்கும்போகவொட்டாமல் சுற்றிக்கொள்ள, (அதைக்கண்டு) குறவர் வில்லையெடுக்கிற திருமலையையே (கரு) நாட்டாரெல்லாம் ப்ரதக்ஷிணம்பண்ணிக் கூத்தாடினால் நலமாயிருக்கும். (கக) சசு.

வ்யா.—நாற்பத்தாறும்பாட்டு.—(வைப்பனித்யாதி) சந்த்ரன் அணியனாயிருக்கையாலே ஸர்வேஶ்வரனுக்குத் திருநந்தாவிளக்காக வைப்பனென்றொருகால்நீட்டிக் கிடையாதொழிந்தால் மீளவறியாதே எப்போதும் கை நீட்டினபடியே அந்யபரமாய் நிற்கிறயானையைப்புறம்புள்ள வேடர்சூழ, திருமலையிலே வர்த்திக்குங் குறவர் வில்லெடுத்தபடி யெதிர்க்கும் திருமலையே அறிவில்லாதாரோடு அறிவுடையாரோடு வாசியற எல்லாருமாஶ்ரயிக்கப் பெறில் நன்று. சசு.

அரு.—நாற்பத்தாறும் பாட்டு.—வேடு - வேடர், குறவர் இவர்கள் ஆனை பிடிக்கைக்காக வேடரானவர்களெல்லாம் பார்ஶ்வத்திலும் சூழ அங்கே வந்திருக்கிற குறவரத்தைக்கண்டு வில்லுக்களையெடுக்க என்றபடி. சசு.

நன்மணி வண்ணனூ ராளியும் கோளரியும்,
பொன்மணியும் முத்தமும் பூமரமும்,—பன்மணிநீர்
ஓடு பொருதுருளும் கானமும் வானரமும்,
வேடு முடை வேங்கடம். சஎ.

அந்.—ஆளியும் கோள் அரியும் பொன் மணி (5) முத்தமும் பூமரமும் பல் மணி நீரோடு (10) பொருது உருளும் கானமும் வானரமும் வேடும்உடை (15) வேங்கடம் நல் மணி வண்ணன் ஊர். (20)

அர்.—யாளிகளையும், பலமுடைய ஸிம்ஹங்களையும், ஸ்வர்ணங்களும் ரத்நங்களும் (ரு) முத்துக்களும் பூமரங்களும் அனேக மணிகளும் ப்ரவாஹத்தோடுகூட (கo) புரண்டு விழுகிற காடுகளையும் வானரங்களையும் வேடர்களையுமுடைய (கரு) திருமலை நீலமாணிக்கம்போன்ற ஶ்லாக்யமான திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனுடைய திவ்யதேசம். (உo) சஎ.

வ்யா.—நாற்பத்தேழாம்பாட்டு.—(நன்மணி) ஶ்ரமஹரமானவடிவை யுடையவனுக்கு ரக்ஷணத்துக்குறுப்பாகையாலே திருமலையை யூரென்கிறது. ரக்ஷணத்துக்குறுப்பாகையாலே திருவயோத்யையிலும் காட்டை விரும்பினாரிறே பெருமாள். அவர் விரும்பின காட்டை விரும்பிப்போகிற இளையபெருமாளை அக்காட்டோபாதி இப்படைவீட்டையும் நினையுங்கிடீரென்றாரிறே திருத்தாயார்.(க) [ராமம் தசரதம் வித்தி - ராமம் தசரதம்வித்தி] "வயஶ்‌தாம்வயஶ்‌தாம்-வத்யதாம் பத்யதாம்" என்று அருவராதே உங்கள் தமயனை ரோபாதியாக உங்களையரையும் நினையுங்கிடீர். [மாம்வித்தி ஜநகாத்மஜாம்-மாம்வித்தி ஜநகாத்மஜாம்] உங்கள்தமயனுகந்த பிராட்டியோபாதி என்னையும் நினையுங் கிடீரென்கிறார். (ஆளியுமித்யாதி) திருமலையில் வர்த்திக்கும் நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. சஎ.

அரு.—நாற்பத்தேழாம் பாட்டு.—ரக்ஷணத்துக் குறுப்பானவிடத்தை ஊராக விரும்புமோவென்ன அருளிச்செய்கிறார் (ரக்ஷணத்துக்கித்யாதி). விரும்பினபென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன ஸுமித்ரையாருடைய வசநத்தைக்காட்டுகிறார் (அவர் விரும்பின இத்யாதி). இவ்விடத்துக்கு பதமர்வயியாதே இருந்தபடியே இஶ்ஶ்லோகத்துக் கிதுவுமொரு அர்த்தம். கானம் - காடு. சஎ.

வேங்கடமேவிண்ணோர்தொழுவதுவும், மெய்ம்மையால்
வேங்கடமேமெய்வினைநோய்தீர்ப்பதுவும்,-வேங்கடமே
தானவரை வீழத்தன் னாழிப் படைதொட்டு,
வானவரைக் காப்பான் மலை. சஅ.

---

(க) ஸ்ரீராமா-அயோத்யா. சo-அ.

அ்.—விண்ணோர் மெய்ம்மையால் தொழுவதுவும் வேங்கடமே. மெய் ( 5 ) வினை நோய் தீர்ப்பதுவும் வேங்கடமே. தானவரை ( 10 ) வீழ தன் ஆழிப்படை தொட்டு வானவரை ( 15 ) காப்பான் மலை வேங்கடமே. ( 18 )

அர்.—நித்யஸூரிகள் ப்ராப்யமாக ஆஶ்ரயிக்கிறதும் திருமலையே. சரீரமடியாகவந்த ( ௫ )பாபங்களையும் வ்யாதிகளையும் போக்குவதும் திருமலையே. ராக்ஷஸர்கள் ( ௧௦ ) படும்படி தன்னுடைய திருவாழியாகிற ஆயுதத்தைத் தரித்துத் தேவர்களை ( ௧௫ ) ரக்ஷித்தவன் வஸிக்கிற மலையும் திருமலையே. ( ௧அ ) ௪அ.

வ்யா.—நாற்பத்தெட்டாம் பாட்டு.—(வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்) திருமலை ப்ராபகமாக வேறொன்று ப்ராப்யமாகையன்றிக்கே இதுதானே ப்ராப்யமாக ஆஶ்ரயிப்பர்கள் நித்யஸூரிகள். (வேங்கடமித்யாதி) (௧) "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற பாபத்தைப் போக்குமதுவும் திருமலை. (வேங்கடமித்யாதி)அஸுரஜாதி தனைப்படும்படிக்கீடாகத் திருவாழியைப்பிடித்து தேவஜாதிக்குக் குடியிருப்புக் கொடுத்தவனுக்கு ஊரும் திருமலையே. ௪அ.

மலையாமை மேல்வைத்து வாசுகியைச் சுற்றி,
தலையாமை தானொருகை பற்றி,—அலையாமல்
பிறக் கடைந்த பெருமான் திருநாமம்,
கூறுவதே யாவர்க்கும் கூற்று. ௪௯.

அ்.—மலை ஆமைமேல் வைத்து வாசுகியை சுற்றி ( 5 )ஆமைதான் தலை ஒருகை பற்றி அலையாமல் (௧௦) பீற கடைந்த பெருமான் திருநாமம் கூறுவதே ( 15 ) யாவர்க்கும் கூற்று. ( 17 )

அர்.—மந்தரபர்வதத்தைக் கூர்மத்தின்மேல் வைத்து வாஸுகியென்கிறபாம்பை (க்கயிறாகச்) சுற்றி ( ௫ ) ஆமையானதான் மலையினுச்சியை ஒருகையாலே பிடித்தமுக்கி நீர்வெளியில்புராமல் ( ௧௦ ) அம்ருதம் பிறக்கும்படி கடைந்த ஸர்வேஶ்வரனுடைய திருநாமங்களை யநுஸந்திப்பதே ( ௧௫ ) எல்லாருக்கும் உசிதமானது. ( ௧௭ ) ௪௯.

வ்யா.—நாற்பத்தொன்பதாம்பாட்டு.—(மலையாமையித்யாதி)கூர்மரூபியான தன்மேலே மலையைவைத்து வாசுகியைச் சுற்றி, (தலை

யித்யாதி) ஆமையானதான் மேலே கொந்தளியாதபடிக்கீடாக மலையினுச்சியை ஒருகையாலே யமுக்கி. (அலையாமலித்யாதி) நிரம்பின நீர் புறம்பொசியாமலும் அம்ருதம்படும்படி யுள்ளுடையவும் கடைந்த ஸர்வேஸ்வரனுடைய திருநாமத்தைச் சொல்லுவதே எல்லார்க்கு மடுப்பது. சகூ.

கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா, தீ
மாற்றமும் சாரா வகையறிந்தேன்,—ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும், மாயன்
உரைக்கிடக்கு முள்ளத் தெனக்கு. ருo.

அந்.—கடல் கிடக்கும் மாயன் ஆற்றங்கரை கிடக்கும் (5) கண்ணன் உரை எனக்கு உள்ளத்து கிடக்கும். (10) கூற்றமும் சாரா, கொடுவினையும் சாரா, தீமாற்றமும் (15) சாரா வகை அறிந்தேன். (18)

அர்.—திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட ஆஸ்சர்யபூதனாய் திருக்காவேரிக்கரையில் சயநித்தவனான (ரு) கண்ணனுடைய ஸ்ரீஸூக்தியானசரமஸ்லோகம் என்னுடைய ஹ்ருதயத்திலேயேயிருக்கிறது. (கo) ம்ருத்யு கிட்டாமைக்கும் க்ரூரபாபங்கள் நெருங்காமைக்கும் கெட்டவிஷயங்களொன்றும் (கரு) சேராமைக்கும் உபாய மறிந்தேன். (கஅ) ருo.

வ்யா.—ஐம்பதாம்பாட்டு.—(கூற்றமுமித்யாதி) ம்ருத்யு அணையாமைக்கும், ம்ருத்யு அணைகைக்கு ஹேதுவான மஹாபாபம் அணையாமைக்கும், அபவாதம் சேராமைக்கும் உபாயமறிந்தேன். (ஆற்றங்கரையித்யாதி) திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து ஆஸ்சர்ய பூதனாய், அநந்தரம் திருக்கபிஸ்தலத்திலே கண்வளர்ந்தருளுகிற க்ருஷ்ணன் "உன்னுடைய ரக்ஷணத்துக்கு நானே கடவேன், நீ சோகிக்கவேண்டா" என்றருளிச்செய்த வார்த்தை என்னெஞ்சிலே கிடக்கும். (கூற்றம்) வர்ணாஸ்ரம தர்மநிஷ்டரில் வ்யாவ்ருத்தி. (கொடுவினை) த்ருஷ்டாத்ருஷ்ட காம்யபரில் வ்யாவ்ருத்தி. (ஆயனித்யாதி) அவனுடைய திருநாமங்கள் ஹ்ருதயத்திலே கிடக்குமெனக்கு. அதாவது - தத்விஷயஜ்ஞாநம். (க) "மா-அஹம். மாம் - அஹம்." ருo.

அரு.—ஐம்பதாம் பாட்டு.—வர்ணாஸ்ரம தர்மிகளுக்கு யமதர்சந பூர்வகமாக ஸ்வர்க்க ப்ராப்தியாகையாலே அவர்களில் வ்யாவ்ரு

(க) கீதை. கஅ-கூகூ.

த்தி - காம்யபரவசராகிறது. பாபகார்ய மாகையாலே காம்யபரரில் வ்யாவ்ருத்தி; இவையிரண்டும் ப்ரபந்நனுக்கில்லையென்றபடி. மாயனுடைய வார்த்தையான ஶ்லோகமென்னுதல். அவன் விஷயமான திருநாமமென்னுதல், அஹமென்றது முந்தின வர்த்தஸூசகம். ரு0.

எனக்காவா ராரொருவ ரே,எம் பெருமான்
தனக்காவான் தானேமற் றல்லால்,—புனக்காயா
வண்ணனே யுன்னைப் பிறரறியார், என்மதிக்கு
விண்ணெல்லா முண்டோ விலை. ருக

அ்.—எனக்கு ஆவார் ஒருவர் ஆர்? மற்று (5) எம்பெருமான் தான் தனக்கே ஆவானல்லால் என்மதிக்கு (10) விண்ணெல்லாம் விலைஉண்டோ? புனம் காயா வண்ணனே! (15) உன்னை பிறர் அறியார். (18)

அர்.—எனக்கு ஒப்பாவார் ஒருவர் ஆருண்டு? மேலும், (ரு) ஸர்வேஶ்வரனும் தான் தனக்கே யொப்பாமொழிய (எனக்கொப்பாகான்). என்புத்திக்கு (க0) பரமபதமெல்லாம்கூட விலையாகுமோ? தன்னிலத்தில்நின்ற காயாம்பூப்போன்ற திருமேனியையுடையவனே! (கரு) உன்னை வேறொருவர் அறியார். (கஅ)

வ்யா.—ஐம்பத்தோராம்பாட்டு.—(எனக்கித்யாதி) எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கிற எனக்கொருத்தர் எதிருண்டோ? (எம்பெருமானித்யாதி) ஈஶ்வரன் தனக்கொருவன் ரக்ஷகனுண்டென்றிராமையாலே அவனுமெனக் கொப்பன்று. (புனக்காயாவித்யாதி) ஶ்ரமஹரமான வடிவையுடைய நீ ரக்ஷக னல்லையாகிலும் விரும்பப்படுமென்னையசலாரறியார்.(என்மதிக்கித்யாதி) ஸம்ஸாரத்திலே எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கிற எனக்கு விரோதியில்லாத தேசத்திலேயிருக்கிறவர்கள் என்னோடொப்பரோ? ருக.

விலைக்காட் படுவர் விசாதியேற் றுண்பர்,
தலைக்காட் பலிதிரிவர் தக்கோர்,—முலைக்கால்
விடமுண்ட வேந்தனையே வேறாக வேத்தாதார்,
கடமுண்டார் கல்லா தவர். ருஉ.

அ்.—தக்கோர் விலைக்கு ஆள்படுவர். ஏற்று விசாதி (5) உண்பர். தலைக்கு ஆள்பலி திரிவர். கல்லாதவர் (10) முலைக்கால்

விடம் உண்ட வேந்தனையே வேறாக (15) ஏத்தாதார் கடமுண்டார். (17)

அர்.—புத்திமான்களாக அபிமாநித்ததுராபிமாநிகள் க்ரயத்துக்கு அடிமைப்பட்டிருப்பர்கள். (காலதானாதிகளை) வாங்கி வ்யாதிகளை (ரு) யநுபவிப்பர்கள். ஒருவன் தலைக்காக (த்தலையறுக்கிறேனென்று) நரபலியாகத் திரிவர்கள். வித்யாத்யயநம்பண்ணாத மூடர்கள், (கo) ஸ்தநத்திலிருந்த விஷத்தை யமுதுசெய்த ராஜாவாகிய ஸ்ரீக்ருஷ்ணனை விலக்ஷணமாக (கரு) ஸ்தோத்ரம்செய்யாதவர்களாய் பாபபலத்தையேயனுபவிப்பர்கள். (கஎ) ருஉ.

வ்யா.—அவ.—ஐம்பத்திரண்டாம்பாட்டு.—(விலை) என்றேடொப்பாருண்டோவென்று சொல்லுவானென்னெனில், இதுவன்றோ நாடு அநர்த்தப்படுகிறபடி என்கிறார்.

(விலையித்யாதி) ஈஸ்வர சேஷமாய் அநந்யார்ஹமான வஸ்துவை வேறு சிலர்க்கு சேஷமாக்கியும் ஜீவநத்துக்காகப் பிறருடைய வ்யாதிகளை நீர்வார்ப்பித்துக்கொண்டும், ஒருத்தன்பிழைத்தால் தலையரிகிறேனென்று ப்ரார்த்தித்து, பலித்ரவ்யமாய்த்திரிந்துமன்றோ படுகிறது. "தக்கோர்" என்று க்ஷேபோக்தி. (முலையித்யாதி) இவர்கள் குறித்துச்செய்வது ஸ்வவிரோதியைப் போக்குமவனை யேத்தாமை. (கடமித்யாதி) அறிவுகேடர் (க) தேஹவம்ஹஜ்தேவாவா:_ தேத்வகம்புஞ்ஜதேபாபா:" என்னும்படியே பாபத்தைபுஜிக்கிறார்கள். அன்றிக்கே, கொடுக்க உடலின்றிக்கேயிருக்கத் தனிசுவாங்கி ஜீவிக்குமவர்களென்னவுமாம். ருஉ.

அரு.—ஐம்பத்திரண்டாம் பாட்டு.—தலைக்கு - ஒருத்தன் தலைக்காக; ஆட்பலி - தங்கள் தலையையறுத்து நரபலியிடுவர்கள். விசாதியேற்கை - காலதாநாதிகளைக் கொள்ளுகை. (கடமுண்டார்) கடன்-பாபமாய் அத்தை யநுபவித்தல் - தாரித்ர்யத்தை யநுபவித்தல். இத்தால் பாபபலமான நரகாநுபவத்தைப் பண்ணியும் கெட்ட தரித்ரராயும் போவர்களென்றபடி. ருஉ.

கல்லாதவ ரிலங்கை கட்டழித்த, காகுத்த
னல்லா லொருதெய்வம் யானிலேன்,—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத்
தேவரைத் தேறேல்மின் தேவு. ருங.

அ.—கல்லாதவர் இலங்கை கட்டழித்த காகுத்தனல்லால் யான் (5) ஒருதெய்வம் இலேன். பொல்லாத தேவரை தேவரல்லாரை (10) திருவில்லா தேவரை தேவு தேறேல்மின். (14)

அர்.—அஜ்ஞாநிகளானராக்ஷஸர்களுடைய லங்கையை வாம்பழித்த சக்ரவர்த்தித்திருமகனையொழிய நான் (ரு)வேறொருதேவதையை யுடையேனல்லேன். க்ரூரர்களாய்த் தபஸ்ஸினால் தேவதைகளாயினும் ஸ்வதஸ்ஸித்தமானதேவத்வமில்லாதவர்களாய் (கo) லக்ஷ்மீஸம்பந்தமில்லாதவர்களான ருத்ராதிகளைப் ப்ராப்ய தேவதையாக நினைக்கவேண்டாம். (கச) ருங.

வ்யா.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு.— (கல்லாதவரித்யாதி) கற்றொருத்தனுளனாக அவனைப் புறப்படவிட்ட ஜ்ஞாநஹீநருடைய தான லங்கையை அரணழித்த சக்ரவர்த்தித்திருமகனையொழிய வேறொன்று ஸமாஸ்ரயணீயமாக நினைத்திரேன்.(க)"ஹாவோ நாநந்து ஹுதி-பாவோநாந்யத்ரகச்சதி" என்கிற திருவடியைப்போலே இவரும். (பொல்லாததேவரை) சுபாஸ்ரயமாக விரூபாக்ஷன் தொடக்கமானாரை ஆஸ்ரயிக்கப்போமோ? (தேவரல்லாரை) அத்தைப்பொறுத்தாஸ்ரயித்தாலும் கட்டக்குடியன் ; அப்ராப்தஸ்தலம். (திருவில்லாத்தேவரை) மோக்ஷப்ரதனானவன் ஸ்ரிய:பதியன்றோ? (தேறேல்மின் தேவு) ப்ராப்தஸ்தலமல்லாமையேயன்று; ஆஸ்ரயித்தால் ப்ரயோஜநமில்லை யென்கை. (தேறேல்மின்தேவு) முகப்பிலே புத்ரபஸ்வாதிகளைத் தருமத்தைக்கண்டு ஆஸ்ரயணீயராக புத்திபண்ணாதே கொள்ளுங்கோள். ருங.

அரு.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு.—அத்தைப்பொறுத்து-விரூபாக்ஷதையைப்பொறுத்து. கட்டக்குடியன்-ஆபாததயாகுடிபோலே தோற்றி வரியிறுக்கமாட்டாதவன், கட்டம் - கஷ்டமாய் தரித்ரனென்றபடி. குடிபோலேயிருக்கையாலே எடுக்கவுமாம், தரித்ரனாகையாலே கழிக்கவுமாயிருக்குமங்கு; இங்கு அப்ராப்தமாகையாலே எடுத்துக்கழிக்கவும் யோக்யதையில்லை யென்றபடி, "தேவு" என்கையாலே அல்பபலப்ரதரென்கிறது. ருங.

தேவராய் நிற்குமத் தேவும், அத் தேவரில்
மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும்,—யாவராய்
நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென் றோராதார்
கற்கின்ற தெல்லாம் கடை. ருச.

அ்.—தேவராய்நிற்கும் அத்தேவும் அத்தேவரில் மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும் (5) யாவராய் நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்று ஓராதார் கற்கின்றதெல்லாம் கடை. (10)

அர்.—இந்த்ராதிதேவர்கள்நடுவேநிற்கும் அம்மேன்மையையும், அந்ததேவர்களில் ப்ரதாநரான ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரரென்ற மூவரில் நடுவேநின்ற ப்ரதமாவதாரமான விஷ்ணுஸ்திதியையும், (ரு) ஸமஸ்தவஸ்துக்களுக்கும்நிர்வாஹகனாயிருக்கும் தன்மையெல்லாவற்றையும் ஸர்வேஸ்வரனென்றறியாதவர்கள் அப்யஸிக்கிறவித்யைகளெல்லாம் வ்யர்த்தம். (கo)

ருச.

வ்யா.—ஐம்பத்துநாலாம்பாட்டு,—(தேவரித்யாதி.) ஆதித்யேந்த்ராதிகளுக்கு நடுவே நிற்குந்நிலையும், ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நடுவே (க) "ஜ்யேஷ்ட்யவிஷ்ணுமிஸம்பவஸ்தவஸ்ய அவதாரஃ-மத்யேவிரிஞ்சகிரிசம் ப்ரதமாவதாரஃ" என்கிற ப்ரதமாவதாரத்தையும், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களிலும் சேதநத்வாரா ப்ரவேசித்து அவற்றுக்கு வஸ்துத்வ நாமபாக்த்வமுண்டாம்படி நிற்கிறநிலையும், ஸர்வாதிகனான ஈஸ்வரனென்றறியாதவர்கள் பாக்கக்கற்கிறதெல்லாம் ஸம்ஸார ப்ரவர்த்தகாரகைக்கு.

ருச.

கடைநின் றமரர் கழல்தொழுது, நாளும்
இடைநின்ற வின்பத்த ராவர்,—புடைநின்ற
நீரோத மேனி நெடுமாலே, நின்னடியை
யாரோத வல்லா ரவர். ருரு.

அந்—அமரர் கடை நின்று நாளும் கழல் (5) தொழுது இடைநின்ற இன்பத்தராவர் புடைநின்ற நீர் (10) ஓதம் மேனி நெடுமாலே! நின் அடியை அறிந்து (15) ஓத வல்லாரவர் யார். (17)

அர்.—தேவதாந்தரங்களின் வாசலிலே நின்று ப்ரதிதினமும் அவர்கள்பாதங்களை (ரு) யாஸ்ரயித்து மோக்ஷத்துக்கும் ஸம்ஸாரத்துக்கும்நடுவிலுள்ள ஸ்வர்க்காதிஸுகமுடையராவர்கள். (பூமியைச்) சுற்றிக்கொண்டிருக்கிற ஜலத்தையுடைய (கo) ஸமுத்ரம் போன்ற திருமேனியையுடைய ஸர்வாதிகனே! உன்திருவடிகளையறிந்து(கரு) ஸ்தோத்ரம்பண்ணத்தகுந்தவர்கள் யார்? (கஎ)

வ்யா.—ஐம்பத்தைந்தாம்பாட்டு.—(கடை—) தேவதாந்தரங்கள் வாசலிலேநின்று ஸர்வேஸ்வரன் பக்கல்பண்ணும் ப்ரணாமாதிகளை

யவர்கள் பக்கலிலேபண்ணி ஸம்ஸாரஸுகமுமின்றிக்கே நிரதிசய மான மோக்ஷஸுகமு மின்றிக்கேயிருக்கிற ஸ்வர்க்கஸுகத்தையு டையரானவர். (புடையித்யாதி) ஒரு ப்ரயோஜநம் பெறுவிடினும ஸ்தோத்ரம் பண்ணவேண்டும்படி ஶ்ரமஹரமான வடிவையுடைய வன் திருவடிகளை யேத்தவல்லாரார். ௫௫.

அரு.—ஐம்பத்தைந்தாம்பாட்டு.—இதரப்ரயோஜநங்களைக்கொ ள்ளுகையொழிய நின்னடியை ஏத்தவல்லா ரொருவருமில்லை யெ ன்றபடி. ௫௫.

அவரிவரென் றில்லை யனங்கவேள் தாதைக்கு,
எவரு மெதிரில்லை கண்டீர்;—உவரிக்
கடல்நஞ்ச முண்டான் கடனென்று, வாணற்
குடனின்று தோற்றா னொருங்கு. ௫௬.

அ.—அவர்இவர்என்று இல்லை வேள் அனங்கன் தாதை க்கு (5) எவரும் எதிரில்லைகண்டீர். உவரிக்கடல் நஞ்சம் உண்டான் (10) வாணற்கு கடனென்று உடன்நின்று ஒரு ங்கு தோற்றான். (15)

அ.—அவர்இவர்என்கிற பேதமில்லை. ஸுந்தரனான மன் மதனுக்குத் தகப்பனான ஸ்ரீக்ருஷ்ணனுக்கு (௫) ஒருவரும் ஸமானமில்லை. ஸமுத்ரத்திற்பிறந்த விஷத்தை விழுங்கினருத்ரனும் (௧௦) பாணாஸுரனுக்கு ரக்ஷகனுவேனென்றுப்ரதிஜ்ஞைபண்ணிக் கூடவேயிருந்து பாணாஸுரனைப்போலவே தோற்றான்.(௧௫) ௫௬.

வ்யா.— ஐம்பத்தாறும்பாட்டு.— (அவரித்யாதி.) காமனுக் குத் பாதகனுக்கு ஒருத்தரு முபமாநமில்லாமைக்கு விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடுவாசியில்லாமை கண்டிகோளே. (உவரியித்யாதி) ஒருத்தருமில்லை யென்கிறதென், ஒருதேவர் இல்லையோவென்னில் ; அவரும் செய்தபடி இதுவன்றோ வென்கிறார். அம்ருத மதநகாலத்தி லே யுண்டான விஷத்தைக் கண்டத்திலே தரித்தானான ருத்ரனும் தன்னை யாஶ்ரயித்த வாணனுக்கு ஒலக்கத்திலே ரக்ஷிக்கிறேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி அவன்தானே ஸாக்ஷியாகத் தோற்றான்.(ஒருங்கு) ஒருபடிப்பட வாணனோடு தன்னோடு வாசியற. ௫௬.

அரு.—ஐம்பத்தெட்டாம்பாட்டு.— கடனென்று கடவன் நிர் வாஹகனென்று. ௫௬.

ஒருங்கிருந்த நல்வினையும் தீவினையு மாவான்,
பெருங்குருந்தம் சாய்த்தவனே பேசில்,—மருங்கிருந்த
வானவர்தாம்தானவர்தாம்தாரகைதான், என்னெஞ்சம்
ஆனவர்தா மல்லாத தென். ருஎ.

அ்.— பெரும் குருந்தம் சாய்த்தவனே ஒருங்குஇருந்த நல்வினையும் (5) தீவினையும் ஆவான் பேசில் மருங்குஇருந்த வானவர்தாம் (10) தானவர்தாம் தாரகைதான் என்நெஞ்சம் ஆனவர்தாம் அல்லாதது (15) என்? (16)

அர்.—பெரிய குருக்கத்திமரத்தை விழத்தள்ளினவனே உடனின்ற புண்யத்துக்கும் (ரு) பாபத்துக்கும் நிர்வாஹகன். வர்ணிக்கப்புகில், அருகிருக்கிற தேவர்களும் (கo) அஸுரர்களும் பூமியும் என்மனஸ்ஸும் தானேயாயிருக்கும். அவனுகாதவஸ்து (கரு) எது?. (கசு) ருஎ

வ்யா.—ஐம்பத்தேழாம்பாட்டு.—(ஒருங்கித்யாதி) (க) "ஐவஶ்ய மநுபோக்தவ்யம் - அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற புண்ய பாபங்களுக்கு நிர்வாஹகனானவனே, குருந்தை யநாயாஸேந ஒசித்தாற்போலே நம்முடைய வலிய ப்ரதிபந்தகங்களைப்போக்குவான். (மருங்கித்யாதி) ஆஸந்நரானதேவர்கள் அஸுரர்கள் தாரகைதான் இதடங்கலுக்கும் அவனையொழிய ஸ்திதியில்லை. ருஎ.

என்னெஞ்ச மேயா னிருள்நீக்கி யெம்பிரான், [ஞ்ச
மன்னஞ்சமுன்னொருநாள்மண்ணளந்தான்,—என்னெ
மேயானை யில்லா விடையேற்றான், வெவ்வினைதீர்த்
தாயானுக் காக்கினே னன்பு. ருஅ.

அ்.—என்னெஞ்சம் மேயான் இருள்நீக்கி எம்பிரான் மன் (5) அஞ்ச முன்னொருநாள் மண் அளந்தான் என்னெஞ்சம் (10) மேயானை இல்லா விடையேற்றான் வெம்வினை தீர்த்து (15) ஆயானுக்கு அன்பு ஆக்கினேன். (18)

அர்.—என்மனஸ்ஸில் நித்யவாஸம்பண்ணுகிறவனும் அஜ்ஞானத்தைப்போக்கி எனக்குஸ்வாமியானவனும் பலிசக்ரவர்த்தி (ரு) பயப்படும்படி முன்பொருகாலத்தில் பூமியை யளந்தவனும் என் ஹ்ருதயத்தில் (கo) மிகவிருப்பத்தைப்பண்ணுமவனுமான ஸர்

வேஶ்வரன் ஹ்ருதயத்திலில்லாத வ்ருஷபவாஹநனுடைய மஹா பாபத்தைப் போக்கி (கடு) ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் ப்ரீதியை யுண்டாக்கினேன். (கஅ) ௫அ.

வ்யா.— ஐம்பத்தெட்டாம்பாட்டு.— (என்னெஞ்சமித்யாதி) என்னுடைய ஹ்ருதயத்தை யிருப்பிடமாகக்கொண்டு அஜ்ஞாநாந்த காரங்களைப் போக்கி அத்தாலே யெனக்கு உபகாரகனாய், க்ஷத்ரிய ஜாதி யெல்லா மஞ்சும்படிக்கீடாகப் பண்டு பூமியையடையத் தன் காற்கீழேயிட்டுக்கொள்வதும் செய்து பின்னையு மென்பக்கலிலே அபிநிவிஷ்டனா யிருக்கிறவனைத் தன்னெஞ்சில் கொள்ளாத ருஷப வாஹநனுடைய மஹாபாபத்தைப்போக்கி அத்தாலே தானுளனான வனுக்கு ஸ்நேஹத்தை யுண்டாக்கினேன். ௫அ.

அரு.— ஐம்பத்தெட்டாம்பாட்டு.— இல்லா- ஸர்வேஶ்வரனை நெஞ்சிலே இல்லா; நெஞ்சிலே கொள்ளாதருத்ரன். ஏறு - வாஹநம்.

அன்பாவா யாரமுத மாவாய், அடியேனுக்
கின்பாவா யெல்லாமும் நீ யாவாய்,—பொன்பாவை
கேள்வா கிளரொளியெங் கேசவனே, கேடின்றி
ஆள்வாய்க் கடியேனா னாள். ௫௯.

அந்.—அன்பாவாய் ஆர்அமுதமாவாய் அடியேனுக்கு இன் பாவாய் எல்லாமும்நீயாவாய் (5) பொன் பாவை கேள்வா கிளர் ஒளி (10) எம்கேசவனே கேடுஇன்றி ஆள்வாய்க்கு அடியேன் நான் (15) ஆள். (16)

அர்.— என்னிடத்தில் ப்ரீதியையுடையனாய் பரிபூர்ணம்ருதம் போல்போக்யபூதனாய் அடியேனுக்கு உன்னனுபவஸுகத்தைக்கொடுத்தவனாய் மற்றஸுகங்களையும் கொடுக்குமவனாய் (௫) ஸ்வர்ணவர்ணையான ஸ்ரீதேவிக்கு வல்லபனாய் வ்ருத்தியடைகிற தேஜஸ்ஸையுடையனான் (கo) என்கேசவனே! அழிவில்லா வடிமைகொண்ட உனக்கு அடியேனான நான் (கடு) சேஷபூதனானேன். (கசு) ௫௯.

வ்யா.— ஐம்பத்தொன்பதாம்பாட்டு.— (அன்பித்யாதி) என்பக்கல் ப்ரேமத்தைபுண்டாக்கி நிரதிசய போக்யனுமாய். எனக்கு ஸ்வாநுபவத்தையும்தந்து அநுகூலமான போக்யங்களையும்தந்து, இவை யெல்லாம் செய்கைக்கடியான பிராட்டிக்குவல்லபனாய், இவளோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே நிரதிசயௌஜ்ஜ்வல்யனாய், ப்ரசஸ்தகேசனாய்,

கைங்கர்யாநுபவத்துக்கு விச்சேதமின்றிக்கே என்னை யடிமைகொள்ளுகிற வுனக்கு நானடிமை. ஸர்வஜ்ஞனவனுக்கு நானுனக்காளென்று சொல்லவேண்டாதிருக்க ஆளென்று சொல்லிற்று-அவன் தாழப் பரிமாறுகிற படியைக்கண்டு முறையறிந்து பரிமாறவேணுமென்று; முறையுணர்த்த வேண்டுகிறது-அவன் விரும்பினபடியைக் கொண்டு. ௫௯.

அரு.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு.—அடியேனுள்-அடியேனான நான் ஆள். ௫௯.

**ஆட்பார்த் துழிதருவாய் கண்டுகோ ளென்றும்,நின்**
**தாட்பார்த் துழிதருவேன் தன்மையை,—கேட்பார்க்**
**கரும்பொருளாய் நின்ற வரங்கனே, உன்னை**
**விரும்புவதே விள்ளேன் மனம்.** ௬0.

அந்.— கேட்பார்க்கு அரும்பொருளாய்நின்ற அரங்கனே! ஆள்பார்த்து உழிதருவாய் ( 5 ) நின்தாள் பார்த்து உழிதருவேன் தன்மையை என்றும் ( 10 ) கண்டுகொள். உன்னை விரும்புவதே மனம் விள்ளேல்; ( 15 )

அர்.— (ஸ்வயத்நத்தால்) கேட்கயத்நித்தவர்களுக்கு துர்லபனான ரங்கநாதனே! நமக்குதாஸ்பூதராராவது உண்டாவென்று தேடித்திரிகிறவனே! ( ரு ) உன்திருவடியை ஸேவிக்கவேண்டுமென்று திரிகிற என்னுடைய ஸ்வபாவத்தை எப்போதும் ( ௧0 ) (நடக்கும்படி) கடாக்ஷித்தருளவேணும். உன்னை யாசைப்படுவதே ஸ்வபாவமான மனஸ்ஸை விடமாட்டேன். ( ௧ரு ) ௬0.

வ்யா.—அறுபதாம்பாட்டு.—(ஆட்பார்த்தித்யாதி) தேவர் திருவடிகளைக் காண்கையே ஸ்வபாவமான என்னை, ஆரோ நமக்ககப்படுவாரென்று பார்க்குமதுவே ஸ்வபாவமாயிருக்கிற நீ காலமெல்லாமிப்படியேயாகப் பார்த்தருளவேணும். (கேட்பார்க்கித்யாதி) (௧) "நாயமாத்மா ப்ரவசநேந லப்யः நமேதயா ந பஹுநா ஸ்ருதேந - நாயமாத்மா ப்ரவசநேநலப்யः நமேதயாந பஹுநாஶ்ருதேந," என்னும்படியே உன் ப்ரஸாதமொழிய ஸ்வயத்நத்தாலே ஶ்ரவணாதிகள் பண்ணுவார்க்கரியையாய்,நீயே காட்டக் காண்பார்க்கு எளியை யாகைக்காகக் கோயிலிலே கண்வளருகிறவனே! (உன்னை

(௧) கடவல்லி. ௩-௨௩.

மித்யாதி) என்னுடைய மநஸ்ஸானது உன்னை விரும்புகையை விடுகிறதில்லை. விரும்புகையை விடாதொழிகையைப் பார்த்தருளவேணுமென்றுமாம். சுo.

அரு.—அறுபதாம்பாட்டு.—விள்ளேல் - என்மநஸ்ஸு விடுகிறதில்லை என்னுதல்; நீவிள்ளாதபடி பண்ணவேணுமென்னுதல். சுo.

மனக்கேதம் சாரா மதுசூதன் றன்னை,
தனக்கேதான் தஞ்சமாக் கொள்ளில்,—எனக்கேதான்
நின்றொன்றி நின்றுலகை யேழாணை யோட்டினான்,
சென்றொன்றி நின்ற திரு. சுக

அந்.—மதுசூதன்தன்னை தனக்கே தஞ்சமா தான் கொள்ளில் (5) மனக்கேதம் சாரா ஒன்றிநின்று ஏழ்உலகை ஆணை (10) ஓட்டினான் சென்று ஒன்றிநின்ற திரு இன்று (15) எனக்கேதான் (16)

அர்.—மதுஸூதநனைத் தனக்கே ரக்ஷகனென்று தான் ஸ்வீகரித்தால் (ரு) மனோவ்யாதிகள் நெருங்கா. ஒருப்பட்டிருந்து ஸப்தலோகங்களிலும் தன்னுஜ்ஞையை (கo) நடப்பித்தஸர்வேஶ்வரன் வந்து ஆதரமாகஸேவைஸாதித்த ஸம்பத்து இப்போது (கரு) எனக்கேயுள்ளது. (கசு) சுக.

வ்யா.—அறுபத்தோராம்பாட்டு.— (மனக்கேதம்சாரா) மனஸ்ஸுக்கேதம்சாராவென்றுமாம். (மதுசூதனித்யாதி) தஞ்சமான செயலைச்செய்யு மவனைத் தனக்கேதான் தஞ்சமாகக்கொள்ளில். (எனக்கித்யாதி) ஸமஸ்த லோகத்தையும் விடாதே நின்று தன்னுஜ்ஞை செல்லும்படி நடத்தினவன் தானேவந்து அபிநிவிஷ்டனான ஸம்பத்து எனக்கே யுள்ளது; அது தானுமின்று. சுக.

அரு.—அறுபத்தோராம்பாட்டு.—(மனக்கேதம்) கேதம் - கேத (வேத) மாய் துக்கமாதல், ஏதமென்று பொல்லாங்காதல். தஞ்சமாக்கொள்ளில் மனக்கேதஞ்சாரா; ஏழுலகை யொன்றிநின்று ஆணையோட்டினான் தான் சென்றொன்றி நின்றதிரு எனக்கின்று என்றநுபவித்து அருளிச்செய்கிறார். (ஸமஸ்த லோகேத்யாதி.) சுக.

திருநின்ற பக்கம் திறவிதென் றோரார்,
கருநின்ற கல்லார்க் குரைப்பார்;—திருவிருந்த

மார்பில் சிரீதரன்தன் வண்டுலவு தண்டுழாய்,
தார்தன்னைச் சூடித் தரித்து. ௬௨

அந்.— மார்பில் திருஇருந்த சிரீதரன்தன் வண்டு உலவு (5) தண் துழாய்தார்தன்னை சூடி தரித்து திருநின்ற (10) பக்கம் திறவிதுஎன்று ஓரார் கருநின்ற கல்லார்க்கு (15) உரைப்பர். (16)

அர்.— திருமார்பில் ஸ்ரீதேவிவாஸம்பண்ணுகிற ஸ்ரீதரனுடைய வண்டுகள் மோதுகிற (௫) குளிர்ந்த திருத்துழாய்மாலையைச் சுற்றிக்கொண்டு தரித்து, ஸ்ரீதேவிவாஸம்செய்கிற (௧௦) (வலது) பக்கத்தையுடையநாராயணனே அப்ராகம்ப்யமானபரதத்வமென் றறியாதவர்கள் கர்ப்பவாஸம்பண்ணுகிறக்ஷுத்ரதேவதைகளை (பரதேவதையென்று) வித்யையையதிகரியாதமூடர்களுக் (௧௫) குபதேசிப்பர்கள். (௧௬) ௬௨.

வ்யா.—அறுபத்திரண்டாம்பாட்டு.— (திருநின்றபக்கம்) (௧) “ஸ்வாஜ்ஞாஹ்ரியாம்ஹோயஷுவஸி - அபாங்காபூயாம்ஹோ யதுபரி” என்னும்படியே இன்னவஸ்துவென்ன வேண்டா; ஏதேனுமொரு வஸ்துவிலே அவளுடைய கடாக்ஷமுண்டாகில் அது ஸர்வேஸ்வரதத்வமாகிறது. (திறவிதென்று) திறவிதாவது ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தமும்தன்னதீநமாய் வேறொன்று லறியாதது. ஒருசேதநராகில் அறியலாமென்கை.(கருநின்ற கல்லாரித்யாதி) தங்களோடொக்க கர்ப்பவஸ்யராய் கர்ப்பவாஸம் பண்ணுகிறவர்களை யாஸ்ரயணீயராகத் தங்களோடொத்த அறிவுகேடர்க்கு உபதேசிப்பார்கள். (திருவித்யாதி) மாம்பழம் உண்ணிந்யாயத்தாலே ஸ்ரீஸம்பந்தமில்லாதாரை ஸ்ரீயாங்களாகச் சொல்லும்படி யன்றிக்கே பெரியபிராட்டியார் திருமார்விலே யெழுந்தருளியிருக்கையாலே ஸ்ரீதரனென்று திருநாமத்தையுடையனானவனுடைய மதுவெள்ளத்தாலே வண்டுகள் திரியாநின்றுள்ள செவ்வியையுடைய திருத்துழாயை (௨) “சூடிக்களைந்தனசூடும்”என்னும்படியே தலையாலே தரித்துத் திருநின்றபக்கம் திறவிதென்றோரார். ௬௨.

அரு.—அறுபத்திரண்டாம்பாட்டு.— ஓரார்-அறியார். இப்படியறிகையே ஜ்ஞாநமென்னுமத்தைத் தாத்பர்யமாகஅருளிச்செய்கிறார் (ஒருசேதநராகி லித்யாதி). ஜ்ஞாநத்துக்கு விஷயம் ஸ்ரிய:பதி என்றபடி. கல்லார்-கல்லாதவர்களாய் அறிவுகேடரென்றபடி. ௬௨.

---

(௧) ஸ்ரீகுணரத்நகோசம். ௬௦. (௨) திருப்பல்லாண்டு. ௯.

தரித்திருந்தே னாகவே தாரா கணப்போர்,
விரித்துரைத்த வென்னாகத் துன்னை;—தெரித்தெழுதி
வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும்,
பூசித்தும் போக்கினேன் போது. சுஙு.

அந்.—தாராகணம் போர் விரித்து உரைத்த வெம் (5) நாகத்து உன்னை தெரித்து எழுதி வாசித்தும் (10) கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போதுபோக்கினேனாகவே (15) தரித்திருந்தேன். (16)

அர்.—நக்ஷத்ரமண்டலங்களுடைய ஸஞ்சாரத்தை விசதமாகச் சொன்ன (சத்ருக்களுக்கு) பயங்கரமான (ரு) திருவனந்தாழ்வானைத்திருமேனியாகவுடைய உன்னை அநுஸந்தித்தும் எழுதியும் வாசித்தும் (கO) கேட்டும் வணங்கியும் அதுவேயாத்ரையாயிருந்தும் அர்ச்சித்தும் போதுபோக்கினவனாகவே (கரு) தரித்திருந்தேன். (கசு) சுஙு.

வ்யா.—அவ.—அறுபத்துமூன்றாம்பாட்டு.—(தரித்திருந்தேன்) கீழ்ப்பாட்டில் இப்படி செய்திலரென்று வெறுத்தார் லோகத்தை; இதில் தமக்குள்ள ஏற்றம் சொல்லுகிறது.

(தாராகணப்போரித்யாதி) நக்ஷத்ரகணங்களுடைய ஸஞ்சாரத்தை விஸ்த்ருதமாகச்சொன்ன திருவனந்தாழ்வானுக்கு ஆத்மவாயிருந்துள்ள உன்னை அநுஸந்தித்தும், லிகித்தும், வாசித்தும், ஶ்ரவணம்பண்ணியும், நிர்மமனாய்வணங்கி அது தானே யாத்ரையாய் ஆராதித்தும் காலம்போக்கினேன். (ஆகவே தரித்திருந்தேன்) ஆக தரித்திருந்தேன். (தரித்திருந்தேனாகவே) தரித்திருந்தேனாகைக்காகப் பூசித்துக் காலத்தைப்போக்கினே னென்றுமாம். சுஙு.

அரு.— அறுபத்துமூன்றாம்பாட்டு.— நக்ஷத்ரகதியாயிருக்கிற ஜ்யோதிஶ்ஶாஸ்த்ரத்தைச்சொன்ன சேஷனாயிருக்கிற உன்னை யென்று ஸாமாநாதி கரண்யமாகையாலே ஆத்மாவாயிருந்துள்ள வென்றது. ஆக - கீழ்ச்சொன்ன எல்லாத்தாலுமாக, தரித்திருந்தேனென்று க்ரியையாதல்; ஸத்தை யுண்டாகைக்காகவே இப்படி காலத்தைப் போக்கினேனென்று க்ரியையாதல். முந்தினபக்ஷத்துக்கு ஏவகாரமவ்யயம். சுஙு.

போதான விட்டிறைஞ்சி யேத்துமினோ, பொன்மகரக்
காதானை யாதிப் பெருமானை,— நாதானை
நல்லானை நாரணனை நம்மேழ் பிறப்பறுக்கும்
சொல்லானை, சொல்லுவதே சூது. கூசு.

அ.—பொன் மகரம் காதானை ஆதி பெருமானை (5) நாதானை நல்லானை நாரணனை நம் ஏழ்பிறப்பு (10) அறுக்கும் சொல்லானை சொல்லுவதே சூது. போதான (15) இட்டு இறைஞ்சி ஏத்துமினோ. (18)

அர்.—ஸ்வர்ணமயமான மகரகுண்டலங்களையணிந்த திருச்செவிகளையுடையனாய், ஜகத்காரணனாய், ஸர்வாதிகனாய், (ரு) ஸர்வசேஷியாய், நல்லவனாய், ஸர்வாந்தர்யாமியாய், நமக்கு மேல் வரும்ஜந்மங்களைப் (கo) போக்கும் திருநாமங்களையுடையனான ஸர்வேஸ்வரனை அநுஸந்திப்பதே நல்லஉபாயம். (ஆகையால்) புஷ்பமென்றவைகளை (கரு) ஸமர்ப்பித்து வணங்கி ஸ்தோத்ரம்பண்ணுங்கோள். (கஅ) கூசு.

வ்யா.—அறுபத்துநாலாம்படி.— (போதானவித்யாதி) இன்னபுஷ்பமென்று நியதியில்லை; பூவானதை யெல்லாவற்றையுங்கொண்டு திருவடிகளிலே ஸமர்ப்பித்து வணங்கி ஸ்தோத்ரம் பண்ணுங்கோள். (பொன்மகரக்காதானை)கைக்கூலிகொடுத்தும் ஸ்தோத்ரம்பண்ணவேண்டும்படி ஸ்ப்ருஹணீயனானவனை. (ஆதியித்யாதி) அழகியதென்று அப்ராப்தமன்றிக்கே நமக்குத்பாதகனானவன்; ஸ்வாமியாய், வத்ஸலனாகையாலே நாராயண சப்தவாச்யனாய், நம்முடைய ஸம்ஸாரஸம்பந்தத்தையறுக்கும் திருநாமத்தையுடையவனைச் சொல்லுவதே இவ்வாத்மாவுக்குறுவது. கூசு.

சூதாவ தென்னெஞ்சத் தெண்ணினேன், சொன்மாலை
மாதாய மாலவனை மாதவனை,—யாதானும்
வல்லவா சிந்தித் திருப்பேற்கு, வைகுந்தத்
தில்லையோ சொல்லீரிடம். கூரு.

அ.—மாதாய மாலவனை மாதவனை சொல்மாலை யாதானும் (5) வல்லவா சிந்தித்து இருப்பேற்கு வைகுந்தத்து

இடம் (10) இல்லையோ? சொல்லீர். சூதாவது என்னெஞ்சத்து எண்ணினேன். (15)

அர்.—ஸாந்தானாய் ஆஸ்ரிதவ்யாமுக்தனான ஸ்ரிய:பதியைப் ப்ரதிபாதிக்கிறப்ரபந்தங்களொருதயாகிலும் (௫) வந்தபடி யநுஸந்தித்துக்கொண்டிருக்கிறஎனக்கு ஸ்ரீவைகுண்டத்தில் இட (௧௦) மில்லையா? சொல்லுங்கொள். (இதுவே) நல்லஉபாயமென்று என்மநஸ்ஸி லெண்ணினேன (௧௫) ௬௫.

வ்யா.—அறுபத்தைந்தாம்பாட்டு.— (சூதித்யாதி) உறுவதாவ தென்னெஞ்சிலே மநோரதித்தேன், (சொன்மாலையித்யாதி) அழகு தான் வடிவுகொண்டாற் போலேயாய், வ்யாமுக்தனாயிருந்துள்ள ஸ்ரிய:பதியைச் சொல்லப்பட்ட ப்ரபந்தத்தை ஏதேனுமொருபடி யநுஸந்தித்திருக்கிற வெனக்குப் பரமபதத்தி லிடமில்லையோ? ஸ்ம்ருதிமாத்ரமுடையாருக்கும் பரமபதம் ஸித்தியாதோவென்கை. (க) "ஸ்ரூதோயஷுதிரோஹநு - ஸ்ம்ருதோயச்சதிசோபநம்" என்கிறபடியே பரமபத ப்ராப்திக்கு ஸ்மர்த்தவ்யனுடைய நீர்மையாலே ஸ்மரணமாத்ரத்துக்கு அவ்வருகு வேண்டாவென்று தாத்பர்யம். ௬௫

அரு.—அறுபத்தைந்தாம்பாட்டு.—மாதாய - அழகாய - மாது - அழகு. ௬௫.

இடமாவ தென்னெஞ்ச மின்றெல்லாம், பண்டு
படநா கணைநெடிய மாற்கு,—திடமாக
வையேன் மதிசூடி தன்னோடு, அயனைநான்
வையேனாட் செய்யேன் வலம். ௬௬.

அந்.—பண்டு படம் நாகம் அணை நெடியமாற்கு (5) இன்றெல்லாம் இடம் என்னெஞ்சமாவது. மதி சூடிதன்னோடு (10) அயனை வையேன் நான் திடமாக வையேன். (15) வலம் ஆள்செய்யேன். (17)

அர்.—முற்காலத்தில் (விரிந்த) படங்களையுடைய திருவனந்தாழ்வான்மேல் கண்வளர்ந்தருளின ஸர்வேஸ்வரனுக்கு (௫) இப்போதெல்லாம் வாஸஸ்தானம் என்னுடையஹ்ருதயமாயிருக்கும். சந்த்ரனைத் தரித்தருத்ரனோடுகூட (௧0) ப்ரஹ்மாவை தத்வயாதாத்ம்யஜ்ஞாநமுடைய நான் ப்ராப்யமாக நினையேன்; (௧௫) (அவர்களை) ப்ரதக்ஷிணமும் செய்யமாட்டேன். (௧௭) ௬௬.

---

(க)

வ்யா.—அறுபத்தாறும்பாட்டு—(இடமித்யாதி) ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்தானம் என்னோடு ஸம்ஶ்லேஷிப்பதுக்கு முன்பெல்லாம் தன்னோடே ஸம்ஶ்லேஷத்தாலே விஸ்த்ருதமான பணத்தையுடைய திருவனந்தாழ்வான்; இப்போதெல்லாம் என்னுடைய ஹ்ருதயம். (திடமித்யாதி) சந்த்ரனைத் தரித்தானாயிருக்கிற ருத்ரனையும், திருநாபீகமலத்திலே உத்பந்நனாகையாலே அஜனென்றிருக்கிற ப்ரஹ்மாவையும் த்ருடபதார்த்தங்களாக நினையேன். (வையேனாட்செய்யேன்) அதுக்கடி கூரியேனாய் ஸாராஸாரவிவேகஜ்ஞனாகை. (க)"வ்யு.கிவ-ஊா நவேஸவஞே-ப்ரதிபுத்தாநஸேவந்தே" என்று கூரியரானவர்கள் தேவதாந்தர பஜநம் பண்ணார்களிறே என்கை. (வலம்) இதுக்கெல்லாவற்றுக்கு மடி பகவத் பரிக்ரஹமான பலம்.

அரு.—அறுபத்தாறும்பாட்டு—வையேன்-மநஸ்ஸிலே வையேனென்றாய், நினையேனென்று முந்தினது; நான் வையேன் - வையேனான நானென்றாய், கூரியனான நானென்று இரண்டாவது.வை - கூர்மை - ஜ்ஞானக்கூர்மை. ௬௬.

வலமாக மாட்டாமை தானாக, வைகல்
குலமாகக் குற்றந்தானாக,—நலமாக
நாரணனை நாபதியை ஞானப் பெருமானைச்
சீரணனை யேத்தும் திறம். ௬எ.

அந்.—நாரணனை நாபதியை ஞானப்பெருமானை சீரணனை ஏத்தும் (5) திறம் வலமாக; மாட்டாமைதானாக; குலமாக; குற்றம்தானாக (10) வைகல் நலமாக. (12)

அர்.—ஸர்வசேஷியாய், எனக்குஸ்வாமியாய், ஜ்ஞாநாதிகனாய், மற்றகல்யாணகுணங்களையுமுடையனான ஸர்வேஶ்வரனை ஸ்தோத்ரம்செய்கிற (௫) விதம் (ஜ்ஞாநசக்த்யாதி) பலத்தைக்கொடுக்கிலும் நலமே; கொடுக்காவிடினும் நலமே. ஸத்குலத்தைக் கொடுக்கிலும் நலமே, அதில்தோஷத்தைவிளைக்கிலும் நலமே; (௧௦) எப்போதும் (அவனைஸ்தோத்ரம்செய்வதே எனக்கு) உத்தேஶ்யம் (௧௨) ௬எ.

வ்யா.—அறுபத்தேழாம்பாட்டு—(வலம்) (நலமாகவித்யாதி) நன்றாக ஸர்வஸ்வாமியாய்,என்னுடைக்கு நிர்வாஹகனாய், ஜ்ஞாந குணங்களுக்கெல்லா மாஶ்ரயமாயிருக்கிறவனை நன்றாக வேத்தும்ப்ரகா

(க) பாரதம்.

ரம்; (வலமாக) பலமாகவுமாம்; ஆபிஜாத்யத்தை யுண்டாக்கவுமாம். அதிலே தோஷத்தை யுண்டாக்கவுமாம்; இவையன்றுத்தேஶ்யம்; அவனையேத்துகையே உத்தேஶ்யமென்கை. கூஎ.

அரு.—அறுபத்தேழாம்பாட்டு.—சீரணன்-குணங்களை யுடையவனென்றாய், ஜ்ஞாநப் பெருமானென்கிறஇவை இரண்டாலும் ஜ்ஞாந குணங்க ளெல்லாவற்றுக்கு மாஶ்ரயமென்கிறது. வலம்-பாடுகைக்கு ஜ்ஞாநசக்த்யாதிக ளுண்டாகவுமாம், இல்லையாகவுமாம். குலம்-விலக்ஷணமான ஆபிஜாத்ய முண்டாகவுமாம், லக்ஷணமின்றிக்கே தோஷயுக்த மாகவுமாம். வைகல் - எப்போதும், ஏத்துகையே உத்தேஶ்யம். கூஎ.

திறம்பேல்மின் கண்டீர் திருவடி தன் நாமம்,
மறந்தும் புறந்தொழா மாந்தரை,—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்களென்றான்,நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு. கூஅ.

அந்.—நமனும் தன் தூதுவரை கூவி செவிக்கு, திருவடி தன் (5) நாமம் மறந்தும் புறம் தொழா மாந்தரை (10) இறைஞ்சியும் சாதுவராய் போதுமின்கள்; திறம்பேல்மின் கண்டீர் என்றான். (15)

அர்.—யமன் தன் தூதர்களை யழைத்து (அவர்கள்) காதில், ஸர்வேஶ்வரனுடைய (ரு) திருநாமத்தை மறந்திருந்தாலும் தேவதாந்தரங்களை ஆஶ்ரயியாத மனுஷ்யர்களை (௧௦) வணங்கி அநுகூலர்களாகப் போவீர்கள். (இதைத்) தவிரவேண்டாம் என்றான். (௧ரு) கூஅ.

வ்யா.—அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு.— (திறம்பேல்மினித்யாதி) பகவத் பரிக்ரஹமேபலமென்னுமித்தை (௧) "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய - ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய" என்கிற ஶ்லோகத்தின்படியாலே விவரிக்கிறார்.

(திறம்பேல்மின் கண்டீர்) திறம்பாதே கொள்ளுங்கோளென்னும்போது நாலுபத்தோலே மறுக்கவுமாம். (திருவடி யித்யாதி) "பரிஹரமதுஸூதநப்ரபந்நான்" என்கிறபடியே ஸ்வாமியினுடைய திருநாமத்தை மறக்கவுமாம், தேவ

(௧) ஸ்ரீ விஷ்ணுபுராணம். ௩. எ. ௧௪.

தாந்தரபஜநம் பண்ணுதொழிகை இவன் ப்ரபந்நனுகையாவது. பர்த்தாவின்பக்கல் ஆநுகூல்யம் க்ரமத்தாலே பிறக்கவுமாம், பர்த்ராந்தர பரிக்ரஹமிறே அவனுக்காகாமைக்கடி. (மாந்தரை) மநுஷ்யரை. (இறைஞ்சியு மித்யாதி) அவர்களை நலிந்திலோமென்றிருக்க வொண்ணுது; "பாசஹஸ்தம்" என்கிறக்ரூரவேஷத்தைத் தவிர்ந்து, விநீதவேஷராய் அஞ்சலி ப்ரணாமாதிகளைப் பண்ணிப்போருங்கோளென்கிறுர். (நமனும்) (க)"ஸமவர்த்தி-ஸமஇதி" என்றுசொல்லப்படுகிறவனும். (தன் தூதுவரை) "ஸ்வபுருஷம்" என்றபடி. (செவிக்கு) "கர்ணமூலே" என்றபடி. அந்தரங்கர்க்கு வார்த்தை சொல்லாநிற்கச் செய்தே, ப்ரகாசிக்கிலென்னுகிறதோ வென்று நெஞ்சு பறைகொட்டுகிறபடி. சுஅ.

அரு.—அறுபத்தெட்டாம்பாட்டு.—திறம்புதல்-சலிக்கையாய், அத்தால் அவன்வார்த்தையை மறுக்கையைச் சொல்லுகிறது, (ஸம இதி) ப்ரஹ்மாதிகளோடே ஸமமாகச் சொல்லப்படுகிறவனு மென்றபடி. செவியிலே சொல்ல வேண்டுவானென்னென்ன. அருளிச்செய்கிறுர் (அந்தரங்க ரித்யாதி). பறைகொட்டுகை-திடுக்கு திடுக்கு என்கை. சுஅ.

செவிக்கின்ப மாவதுவும் செங்கண்மால் நாமம்,
புவிக்கும் புவியதுவே கண்டீர்,—கவிக்கும்
நிறைபொருளாய் நின்றுனை நேர்பட்டேன்,பார்க்கில்
மறைப்பொருளு மத்தனையே தான். சுகூ.

அ.—செவிக்கு இன்பமாவதுவும் செம்கண் மால் நாமம் (5) புவிக்கும் புவி அதுவேகண்டீர். கவிக்கு நிறை பொருளாய் (10) நின்றுனை நேர்பட்டேன். பார்க்கில் மறைப்பொருளும் அத்தனையேதான். (15)

அர்.—செவிக்கும் ப்ரியமாயிருப்பதும் சிவந்தகண்களையுடைய ஸர்வேஸ்வரனுடைய திருநாமமே. (ரு) லோகத்தார்க்கும் ஸாதகமானஸ்தாநம் அந்தத்திருநாமமே. கவிபாடுகைக்கும் பூர்ணவிஷயமா (கo) யிருக்கிற ஸ்ரியஃபதியை யடைந்தேன். விசாரித்துப்பார்த்தவிடத்தில் வேதார்த்தமு மதுவே. (கரு) சுகூ.

வ்யா.—அறுபத்தொன்பதாம்பாட்டு.—(செவிக்கித்யாதி) யமவஸ்யதையைத் தவிர்க்குமளவன்று; செவிக்கினியதுவும் புண்டரீகா

(க) ஸ்ரீ விஷ்ணுபுராணம்.

கூதனுடைய திருநாமம். (புவிக்கும் புவியதுவேகண்டீர்) எனக்கொருத்தனுக்குமேயோ? பூமியினுள்ளார்க்கெல்லாம் ஸ்தாநம் திருநாமம். (கவியித்யாதி) ஸ்துத்யனுக்கொரு பூர்த்தியின்றிக்கே ஸ்தோதா நிரப்பவேண்டும்படியன்றிக்கே கவிபாடுகைக்கு ஸ்வரூபரூபகுணங்களால் குறைவற்றுநின்றவனை யாத்ருச்சிகமாக லபித்தேன். (பார்க்கிலித்யாதி) யாத்ருச்சிகமாக வன்றிக்கே ஆராய்ந்துபார்க்கில் வேதாந்த ரஹஸ்யமு மத்தனையே. ௬௯.

தானொருவ னாகித் தரணி யிடந்தெடுத்து,
ஏனொருவ னாயெயிற்றில் தாங்கியதும்,—யானொருவன்
இன்று வறிகின்றே னல்லேன், இருநிலத்தைச்
சென்றுங் கடிப்படுத்தசேய். ௭௦.

அந்.—சேய்தான் ஒருவனாகி சென்று இரு நிலத்தை (5) ஆங்கு அடிப்படுத்த ஏனொருவனாய் தரணி இடந்தெடுத்து (10) எயிற்றில் தாங்கியதும் யானொருவன் இன்று அறிகின்றே னல்லேன். (15)

அர்.—வாமநனான தான் தனியே சென்று பரந்த பூமியைப் (௫) பரிக்ரஹித்தகாலத்தில் திருவடிகளின் கீழாகப்படுத்தினதையும், அத்விதீயவராஹமாய் பூமியைக் குத்தியெடுத்துக் (௰) கோரைப்பல்மேல் தரித்ததையும் நானொருவனுமே இப்போதாக அறியாதிருக்கிறேனன்று. (௧௫) ௭௦.

வ்யா.—அவ.—எழுபதாம்பாட்டு.—(தானொருவன்) வேதாந்த ரஹஸ்ய மிதுவென்றிருந்தபடி எங்ஙனேயென்னில், நானொருத்தனுமின்றாக வறிந்ததோ; ப்ரஸித்தமன்றோவென்கிறார்.

(தானொருவனாகி.) வாமநனாய். (இருநிலத்தித்யாதி.) வாமநனாய், பரப்பான பூமியை வ்யாபித்துத் தன்திருவடிக்குள்ளே யடங்கும்படி இட்டுக்கொண்டு, அச்செயலாலே அத்விதீயனாய், ப்ரளயங்கொண்ட பூமியை அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடும்படி யிடந்தெடுத்து மஹாவராஹ ரூபியாய்ப் பெரியபூமியைத் திருவெயிற்றி லேகதேசத்திலே தரித்ததும் நானொருத்தனு மின்றாகவறிந்ததோ? ௭௦.

அரு.— எழுபதாம்பாட்டு.— (யானொருவனின்று வறிகின்றேனல்லேன்) அறிகின்றேனல்லே னென்று முழுச்சொல்லாய், அறியாதிருக்கிறவ னின்றாக நானொருவனுமே யன்று; என்று மெல்லாருமறியார்களென்று அர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் (ப்ரளயங்கொண்ட இத்யாதி). ௭௦.

சேய னணியன் சிறியன் மிகப்பெரியன்,
ஆயன் துவரைக்கோ னாய்நின்ற—மாயன், அன்
றோதிய வாக்கதனைக் கல்லா ருலகத்தில்,
ஏதிலராய் மெய்ஞ்ஞான மில். எக

அ்.—சேயன் அணியன் மிகப்பெரியன் சிறியன் மாயன் (5) துவரைக்கோனாய்நின்ற ஆயன் அன்று ஓதிய வாக்க தனை (10) உலகத்தில் மெய் ஞானம் இல் (15) ஏதிலரா ய் கல்லார். (16)

அர்.— தூரஸ்தனும் ஸமீபஸ்தனும் மிக்கமேன்மையை யுடையனும் அத்யந்தஸுலபனும் ஆஶ்சர்யசேஷ்டிதனும் (ரு) த்வாரகாநாதனுமெழுந்தருளியிருக்கிற கோபாலன் பாரதயுத்தத் தில் அருளிச்செய்த சரமஶ்லோகத்தை (கo) லோகத்தில் யதார் த்த ஜ்ஞான மில்லாதவர்களாய் (கரு) சத்ருக்களாய் அப்யஸியாத வர்க ளாவார்கள். (கசு) எக.

வ்யா.— அவ.— எழுபத்தோராம்பாட்டு.— (சேயன்) ப்ரளயங் கொண்டபூமியை யெடுத்துரக்ஷித்தது அறியாதிருந்தவளவேயோ. ஸம்ஸாரப்ரளயத்தில் நின்றும் எடுக்க அவனருளிச்செய்த வார்த் தையைத் தானறியப்பெற்றோமோ வென்கிறார்.

(சேயன் மிகப்பெரியன்.) (க) “யதோவாசோநிவர்த்தந்தே - யதோவாசோநிவர்த்தந்தே” என்று வாங்மனஸ்ஸுக்களுக்கு நிலமி ல்லாதபடியாலே ப்ரஹ்மாதிகளுக்கும் தூரஸ்தனாயிருக்கும். (சிறிய னணியன்) ஸம்ஸாரிகளுக்கு மிவ்வருகாய்ப் பிறந்து அநுகூலர்க்கு அண்ணியனாயிருக்கும். (ஆயனித்யாதி) அண்ணியனானமைக்கு உதா ஹரணம், இடையனாய், ஶ்ரீமத்த்வாரகைக்கு நிர்வாஹகனாய், ஒரு க்ஷத்ரனுக்குத் தோற்கவல்ல ஆஶ்சர்ய குணத்தையுடையவன் தேர்த்தட்டிலேநின்று“உன்னுடைய ஸகலதுருக்கும் நானேகடவே ன்; நீசோகிக்கவேண்டா” என்றருளிச்செய்தவார்த்தையைத் தஞ்ச மாக நினைத்திருக்கைக் கடியான தத்வஜ்ஞான மின்றிக்கே ஈஶ்வரன் (உ)“தாநஹம்த்விஷத: க்ரூராந் - தாநஹம்த்விஷத:க்ரூராந்” என்று நினைக்கும்படிசத்ருக்களாய்,தாங்களும் க்ருஷ்ணனெங்களுக்கு சத்ரு வென்று மிருப்பார்கள். எக.

(க) தைத்திரீயம் ஆநந்தவல்லி. (உ) கீதை - கசு. கக.

அரு.—எழுபத்தோராம்பாட்டு.—க்ஷுத்ரன்-ஜராஸந்தன், உலகத்து மெய்ஞ்ஞாநமில் ஏதிலராய்க் கல்லா ரென்றபடி. எக.

இல்லற மில்லேல் துறவறமில் லென்னும்
சொல்லற மல்லனவும் சொல்லல்ல,—நல்லறம்
ஆவனவும் நால்வேத மாத்தவமும், நாரணனே
ஆவதீதன் றென்பாரார். எஉ.

அந்.—இல் என்னும் இல்லறம் இல்லேல் துறவறம் (5) சொல் அல்லன அறமும் சொல்லல்ல. நல்லறமாவனவும் (10) நால்வேதம் மா தவமும் நாரணனேயாவது ஈதன்று (15) என்பார் ஆர்? (19)

அர்.—(வேதத்தில்) உபாயங்களாகச் சொல்லப்பட்ட க்ருஹஸ்ததர்மமும் அல்லாத நிவ்ருத்திதர்மமும் (ரு) (இதிஹாஸ புராணங்களில்) ப்ரதிபாதிக்கப்பட்ட அல்லாத தர்மமும் ஒருசொல்லன்று (உபாயங்களாகமாட்டா). விலக்ஷணங்களான கர்மஜ்ஞாநாதிகளும் (கo) நாலுவேதங்களில் ப்ரதிபாதிக்கப்பட்ட ஶ்லாக்யமான தபஸ்ஸும் நாராயணனுடையப்ரஸாதத்தாலே பலப்ரதங்களாகும். இப்படியன்று (கரு) என்று சொல்லுவா ரார்? (ஒருவரும் சொல்லார்கள்). (கஎ) எஉ.

வ்யா.—அவ.—எழுபத்திரண்டாம்பாட்டு.—(இல்லறம்) நீரோதி னீராகில் இதுக்குப்பொருள் சொல்லுமென்னச் சொல்லுகிறார்.

(இல்லறமில்லேல்) கர்மயோகமன்றாகில்; ப்ரவ்ருத்தி தர்மமன்றாகி லென்றுமாம். (துறவறமில்லென்னும் சொல்) நிவ்ருத்தி தர்மம் ஸ்தாநமென்னுமது ப்ரமாணம். ஜ்ஞாநயோகமென்றுமாம். (அறமல்லனவும் சொல்லல்ல) அல்லாத தர்மங்களை விதிக்கிறவை ப்ரமாணங்களுமன்று. அல்லாத தர்மங்களென்கிறதும், கர்த்ருத்வ பலாபிஸந்தி ரஹிதமாக அநுஷ்டிக்கும் கர்மங்க ளன்றிக்கே இதிஹாஸ புராணங்களிற் சொல்லுகிற நாமஸங்கீர்த்த நாதிகளாகவுமாம். "சொல்லறமல்லன" என்று பதச்சேத மானபோது ப்ரமேயபரம். "இல்லென்னுஞ்சொல்" என்றபோது ப்ரமாணபரம். (நல்லறமாவனவும்) பலாபிஸந்திரஹிதமான கர்மங்கள். இதிஹாஸ புராணங்களிற் சொல்லுகிற நாமஸங்கீர்த்தனங்கள். (நால்வேத மாத்தவமும்) பூர்வ பாகத்தில்சொன்ன கர்மயோகம், இவையெல்லாம் நாராயண ப்ரஸா

தமடியாக. இதர தர்மங்களைச் சொல்லுகிறது ப்ரமாணங்க ளன்றென்று நீர்சொல்லுகிற தெத்தாலே யென்னில், அவை பலப்ரதங்களாம்போது, பகவத் ப்ரஸாதம் வேணும். பகவான் உபாயமாமிடத்தில் அவை ஸஹகரிக்க வேண்டாவென்னும் ப்ரமாண பலத்தாலே சொல்லுகிறேன். (ஈதன் றென்பாரார்) அல்லாதவை போலன்றிக்கே உபாயமாகவற்றான இத்தை அன்றென்ன வல்லாருண்டோ.

அரு.— எழுபத்திரண்டாம்பாட்டு.— இல்லறம்-க்ருஹஸ்தன் பண்ணுகிறதர்மம்; கர்மாதிகளென்றபடி. மேல்தெரியாது. ஆனாலும் மோக்ஷோபாயமான கர்மாதிகளைப் ப்ரதிபாதிக்கிற ப்ரமாணங்களும் தத்ப்ரமேயமான கார்ஹஸ்த்யாதி தர்மங்களுமான இவை ப்ரமாணங்களுமன்று; ப்ரமேயங்களுமன்று; இனிப்ரமாணம் சரமஶ்லோகமே. தத்ப்ரமேயமும் ஸித்தோபாயமான ஈஶ்வரனே என்று பாட்டுக்குத் தாத்பர்யம். பதந்தோறும் தெரிந்தால் கண்டுகொள்வது. எஉ,

ஆரே யறிவா ரனைத்துலகு முண்டுமிழ்ந்த,
பேராழி யான்றன் பெருமையைக்,—கார்செறிந்த
கண்டத்தா னெண்கண்ணான் காணான், அவன்வைத்த,
பண்டைத்தா னத்தின் பதி. எங.

அ.— அனைத்து உலகம் உண்டு உமிழ்ந்த பேர் (5) ஆழியான்தன் பெருமையை அறிவார் ஆர். அவன் (10) வைத்த பண்டை தானத்தின் பதி செறிந்த (15) கார் கண்டத்தான் எண்கண்ணான் காணான். (19)

அர்.—ஸகல லோகங்களையும் அமுதுசெய்து வெளிப்புறப்படவிட்டவனாய், பெரிய (ரு) திருச்சக்கரத்தை யுடையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையை யறியத்தக்கவர் யார்? (ஒருவருமறியார்). அந்த ஸ்ரீக்ருஷ்ணன் (கo) ஸாதித்துவைத்த அநாதியாய் பரமபதத்துக் குபாயமான சரமஶ்லோகத்தை நிபிடமான (கரு) கறுப்பைக் கண்டத்திலுடையநீலகண்டனும் (அறியான்). எட்டு நேத்ரங்களையுடைய ப்ரஹ்மாவு மறியான். (கக) எங.

வ்யா.—எழுபத்து மூன்றாம்பாட்டு.—(ஆரேயறிவார்) இப்பாட்டையும் பட்ட ரருளிச்செய்தார். (ஆரேயித்யாதி) ஸகலலோகத்தையும் வயிற்றிலே வைத்து வெளிநாடுகாண உமிழ்ந்த பெரியவனுடைய நைரபேக்ஷ்யத்தை யாரறிவார்? இவனுடைய பெருமையைப் பரிச்சேதிக்க வல்லாரா ரென்றுமாம், (அவனித்யாதி) அவ

னென்று முண்டாக்கிவைத்த பரமபதத்தை நீலகண்டன், அஷ்ட நேத்ரனான ப்ரஹ்மா என்கிறவர்களால் காணப்போகாது. (க) "க்ரு ஷ்ணம்தர்மம் ஸநாதநம்" என்கிறவன் உபாயபாவ மிவர்களா லறியப்போகா தென்றுமாம். எ௩.

அரு.—எழுபத்துமூன்றும்பாட்டு.—(பண்டைத்தானத்தின்பதி) என்று முண்டா யிருக்கிறபரமபத மாதல், பதி-பதி(வழி)யாய், பந்தாவென்றாய், வழி உபாயமாகையாலே ஸநாதந உபாயமென்னுதல்.

பதிப்பகைஞர்க் காற்றாது பாய்திரைநீர்ப் பாழி,
மதித்தடைந்த வாளரவந் தன்னை,—மதித்தவன்றன்
வல்லாகத் தேற்றிய மாமேனி மாயவனை,
அல்லாதொன் றேத்தாதென் னா. எச.

அந்—பதிப்பகைஞர்க்கு ஆற்றாது பாய் திரை நீர் (5) பாழி மதித்து அடைந்த வாள் அரவம்தன்னை (10) மதித்து அவன்தன் வல் ஆகத்து ஏற்றிய (15) மா மேனி மாயவனை யல்லாது ஒன்று என்நா (20) ஏத்தாது. (21)

அர்.—ஸஹஜசத்ருவானபெரியதிருவடிக் கெதிர்நிற்கையை யும் ஸஹியாமல் பரந்த அலைகளையுடைய நீர்நிறைந்த (ரு) ஸமுத்ரம்போல் குளிர்ந்ததனதுபடுக்கையை ரக்ஷகமாகநினைத்து ஆஸ்ரயித்த தேஜஸ்ஸையுடைய ஸுமுகனென்கிறஸர்ப்பத்தை (க௦) யாதரித்து அப்பெரியதிருவடியினுடைய பலிஷ்டமான திருமேனியிலேயிட்டு (ரக்ஷித்தவனாய்) (கரு) பெரிய திருமேனியையுடையனாய் ஆஸ்சர்யபூதனான ஸர்வேஸ்வரனையல்லது வேறொருதேவதையை என்நாக்கு (உ௦) ஸ்தோத்ரம்செய்யாது. (உக) எச.

வ்யா.—அவ.—எழுபத்து நாலாம்பாட்டு.—(பதி) (உ)"நக்ஷமேயம் கதாசந" (௩) "நத்யஜேயம் கதஞ்சந" ஆஸ்ரிதர்பக்கல் அபகாரம்பண்ணினாரை ஒருகாலும் பொறேனென்ற வார்த்தைக்கும், மித்ரபாவமுடையாரை மஹாராஜர் தொடக்கமானார் விடவரிலும்விடேனென்ற வார்த்தைக்கும் அவிருத்தமாகச் செய்தருளினபடி-ஸுமுகனென்கிற ஸர்ப்பத்தைஆமிஷமாகத்திருவடி பாதாளத்திலே தேடிச்செல்லுகிற படியை யறிந்து,அது

(க) பாரதம். ஸபாபர்வம். ௩அ. உ௩. (உ)
(௩) ஸ்ரீ ராமாயணம் - யுத்த. கஙு - ௩.

வும், கண்வளர்ந்தருளுகிற திருப்பள்ளிக் கட்டிலைக் கட்டிக்கொண்டு கிடக்க, திருவடியும் ஸ்ரீபாதந்தாங்குவார் சொல்லும் வார்த்தைகளைச் சொல்ல, இஸ்ஸர்ப்பத்தைத் திருவடி கையிலே காட்டிக்கொடுத்துத் திருவடியை யிட்டுப் பொறுப்பித்தது. இவனை யவன் கைக்கொள்ளப் பெறுகையாலே இரண்டர்த்தமும் ஜீவித்தது.

(பதிப்பகைஞர்க் காற்றாது) ஸஹஜ சத்ருவான திருவடிக்கஞ்சி அவர்பலம்பொறுக்கமாட்டாது.(பாய்திரைநீர்ப்பாழி) பரந்ததிரையையுடைத்தான கடல்போலே திருப்பள்ளிக்கட்டில். ஓரோயுகத்திலே ஓரோவிடங்களிலே எல்லாம் பிறக்கக் கூடுகையாலே திருப்பாற்கடல் தன்னிலே யாகவுமாம். (மதித்தடைந்த) சரணாகத ரொருதலையானால் பிராட்டி திருவடி திருவநந்தாழ்வானை அஸாதாரண பரிகரத்தை விட்டும் ரக்ஷிப்பானொருவனென்றும் நிஸ்சயித்தடைந்த. (வாளரவம்) சரண்யன் அங்கீகரிப்பதுக்கு முன்னே அவனுடைய சிலவத்ஸதையாலே தன் கார்யம் தலைக்கட்டிற்றென்று பிறந்த ஒளி. (க) "கஹஸிக்ஷமதஸ்ஸ்ரீமாநு - அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமான்" என்னும்படியே. (மதித்து) நெஞ்சில் கொண்டென்னும்படியே சரணாகதனாக நினைத்து. (அவனித்யாதி) திருவடிதானே ப்ரஸந்நனாய்த் தன் தோளிலே தரிக்கும்படி பண்ணி அத்தாலே நிறம்பெற்று க்ருதக்ருத்யனாய் ஆஸ்சர்யயுக்தனான ஈஸ்வரனை யொழிய வேறொன்றை யேத்தாதென் நா. வேறொன்றென்றது - தேவதாந்தரங்கள் பக்கல் அநாதரம். எசு.

அரு.— எழுபத்துநாலாம்பாட்டு.— பதிப்பகை - வழிவழியாக வருகிற சாத்ரவம். பரபலம் போலே திருவடிக்கு விஹிதமான ஹிம்ஸை. எசு.

நாக்கொண்டு மானிடம் பாடேன், நலமாகத்
தீக்கொண்ட செஞ்சடையான் பின்சென்று,என்றும் – பூக்கொண்டு
வல்லவா றேத்த மகிழாத, வைகுந்தச்
செல்வனார் சேவடிமேல் பாட்டு. எரு.

அந்.—தீக்கொண்ட செம் சடையான் வலமாக பூ (5) கொண்டு சென்று என்றும் வல்லவாறு ஏத்த (10) மகிழாத வைகுந்தச்செல்வனார் சே அடிமேல் பாட்டு (15) நாக்கொண்டு மானிடம் பாடேன். (18).

(க) ஸ்ரீ ராமாயணம் யுத்த. கள.

அர்.—நெருப்புப்போல் சிவந்த ஜடையையுடையருத்ரன் தன் யோக்யதாநுகுணமாகப் புஷ்பங்களை (௫) ஸம்பாதித்துக்கொண்டு போய் எப்போதும் தன் சக்திக்குத்தக்கபடி ஸ்தோத்ரம்செய்ய (௧௦) (அதைத்தனக்கொரு அதிசயமாகநினைத்து) ஸந்தோஷியாத ஸ்ரீவைகுண்டநாதனுடைய அழகிய திருவடிகள்மேல் பாசுரங்களைச்சொல்லத்தக்க (௧௫) நாவினால் மநுஷ்யனைப் பாடமாட்டேன். (௧௮) ௭௫

வ்யா.—எழுபத்தைந்தாம்பாட்டு.—(நாக்கொண்டு மானிடம்பாடேன்) அவனைப்பாடக்கடவ நாவைக்கொண்டு க்ஷுத்ரமநுஷ்யரைப்பாடேன், (தீக்கொண்ட செஞ்சடையான்) அக்நிபோலே சிவந்த ஜடையையுடையவன் அன்றிக்கே (க)"அனற்கங்கையேற்றான்" என்கிறபடியே அக்நியையும் தரித்துச் சிவந்த ஜடையையுமுடையனென்றுமாம். (சென்றித்யாதி) தானே சென்று புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு காலமெல்லாம் ஸத்ருசமாகத்தன் சக்தியுள்ளவளவும் ஸ்துதிக்க. (மகிழாதவித்யாதி) பரமபதத்தி லைஶ்வர்யத்தையுடையனாகையாலே க்ஷுத்ரரான இவர்களைத்த அவிக்ருதனாயிருக்கிறவனுடைய திருவடிகளில் பாட்டைக்கொண்டுமநுஷ்யரைப்பாடேன். ௭௫.

பாட்டு முறையும் படுகதையும் பல்பொருளும்,
ஈட்டிய தீயு மிருவிசும்பும்,—கேட்ட
மனுவும் சுருதி மறைநான்கும், மாயன்
தனமாயை யிற்பட்ட தற்பு. ௭௬.

அந்.—பாட்டும் முறையும் படுகதையும் பல் பொருளும் (5) ஈட்டிய தீயும் இரு விசும்பும் கேட்ட (10) மனுவும் சுருதி மறைநான்கும் மாயன் தனமாயையில் (15) பட்ட தற்பு. (17)

அர்.—பாசுரங்களும் ஸ்ரீராமாயணமும் முன்நடந்த இதிஹாஸங்களைப் ப்ரதிபாதிக்கிற மஹாபாரதமும் (அவற்றில் சொல்லப்பட்ட) அனேக அர்த்தங்களும் (௫) செறிந்த அக்நியும் விசாலமான ஆகாசமும் (ஆப்ததமமென்று) கேட்கப்பட்ட (௧௦) மனுஸ்ம்ருதியும் (எழுதாமலே குருமுகமாகக்) கேட்கப்பட்ட நான்குவேதங்களும் ஆஶ்சர்யபூதனான ஸர்வேஶ்வரனுடைய ஸங்கல்பத்தினா (௧௫) லுண்டான தத்வங்கள். (௧௭) ௭௯.

---

(க) முதல் திருவந்தாதி. ௯௭.

வ்யா.— அவ.— எழுபத்தாறும்பாட்டு.— இப்படி புராணங்களில் பரக்கச்சொல்லப்பட்ட அர்த்தங்கள், காரணமான அக்நி, வ்யாபகமான ஆகாசம் (க) "யெ௦வெஇகிஜு௨நஂ௱வஃதஜேஷஜழ·யக்வை கிஞ்சமநுராவதத்தத்பேஷஜம்" என்று ஸ்ருத்யாதிகளி லாப்ததமனாகக்கேட்டமநுவும், என்று மோதுவித்துப் போருகிற நாலுவேதமும் இவையெல்லா மாஸ்சர்யபூதன் ஸங்கல்பத்திலே யுண்டான உண்மையுடைய.

எசு.

அரு.—எழுபத்தாறும்பாட்டு.—பாட்டும் - அருளிச்செயலும்; முறையும்-ஸ்ரீமத்ராமாயணமும்; படுகதையும்-மஹாபாரதாதி புராணங்களும்; பல்பொருளும்—இவற்றால் ப்ரதிபாதிக்கிற அர்த்தவிசேஷங்களும்; "தற்பு" என்று ஸத்தையாய் உண்மையை யுடைத்தென்றபடி.

எசு.

**தற்பென்னைத் தா னறியா னேலும், தடங்கடலைக்**
**கற்கொண்டு தூர்த்த கடல் வண்ணன்,—எற்கொண்ட**
**வெவ்வினையும் நீங்க விலங்கா மனம் வைத்தான்,**
**எவ்வினையு மாயுமால் கண்டு.**

எஎ

அந்.—தடம் கடலை கல்கொண்டு தூர்த்த கடல் (5) வண்ணன் தான் என்னை தற்பு அறியானேலும் (10) என்கொண்ட எவ்வினையும் நீங்க கண்டு (15) விலங்கா மனம் வைத்தான் ஆல் எவ்வினையும் (20) மாயும். (21)

அர்.—விசாலமான ஸமுத்ரத்தைக் கற்களினா லடைத்த ஸமுத்ரம்போன்ற (ரு) திருமேனியையுடைய (ஸர்வேஸ்வரனை) தான் என்னை யதார்த்தமாக அறியானாகிலும் (க0) என்னை (க்ரஹித்துக்கொண்ட ஸகலபாபங்களும் தொலையும்படி கடாக்ஷித்து (கரு) (என்மனஸ்ஸை விஷயாந்தரங்களில் செல்லாதபடி செய்து) (என்னிடத்தில்) திருவுள்ளத்தை வைத்தான். ஆகையால் ஸகலபாபங்களும் (உ0) நசிக்கும். (உக)

எஎ.

வ்யா.—எழுபத்தேழாம்பாட்டு.— (தற்பித்யாதி) என்னையுள்ளபடி யறியானாகிலும். (தடங்கடலைஇத்யாதி) அரியது செய்யுமவன். ஆழக்கடவ கல்லைக்கொண்டு நீரிலே அணைகட்டினவன். (எற்கொண்டவித்யாதி) நானுருமாயும்படி என்னை க்ரஸித்த மஹாபாபமும் நசிக்

(க) யஜுர்வேதம். உ-உ.

கும்படி வேறொருவிடத்திலும் போகாதபடி திருவுள்ளத்தாலே கொண்டு என்பக்கலிலே மநஸ்ஸை வைத்தான். ஆதலால் பாபமென்று சொல்லப்படுகிறவை யடையமாயும். எஎ.

அரு.—எழுபத்தேழாம்பாட்டு.—தற்பு-உண்மை. என்னை-ஆபிமுக்யாதிகளு மின்றிக்கே தோஷபூயிஷ்டனான வென்னை. அறியானேலும்-அறியாதே இப்படி ஸர்வஜ்ஞரா யிருக்கச்செய்தேயும் தோஷம்பாராமல் விஷயீகரிப்பதே! இதென்ன அகடிதகடநா ஸாமர்த்யமென்கிறார், (தடங்கடலைப்பித்யாதி) என்கொண்ட-என்னை க்ரஸித்துக் கொண்ட; எவ்வினையும் நீங்கக்கண்டு விலங்கா மநம்வைத்தான். ஆல்-ஆகையால், எவ்வினையும் மாயுமென்றபடி. எஎ.

**கண்டு வணங்கினார்க் கென்னாங்கொல், காமனுடல்**
**கொண்ட தவத்தாற் குமையுணர்த்த - வண்டலம்பும் [ங்**
**தாரலங்கல்நீண்முடியான் றன்பெயரேகேட்டிருந்து,அ**
**காரலங்க லானமையா லாய்ந்து. எஅ.**

அந்.—காமன் உடல் கொண்ட தவத்தாற்கு உமை (5) உணர்த்த வண்டு அலம்பும் தார் அலங்கல் (10) நீள் முடியான்தன் பெயர் கேட்டு இருந்து (15) அங்கு ஆர் அலங்கலானமையால் ஆய்ந்து கண்டு (20) வணங்கினார்க்கு என்னாங்கொல். (22)

அர்.—மந்மதனுடைய உடலை நீறாக்கின தபஸ்ஸையுடைய ருத்ரனுக்குப் பார்வதி (ரு) உபதேசிக்க (ஜ்ஞாபகம்பண்ண) வண்டுகள் ஸஞ்சரிக்கிற திருத்துழாய்க் கதிர்களினால்கட்டப்பட்ட மாலையினா லலங்க்ருதமான (௧௦) நீண்ட திருவபிஷேகத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருநாமங்களைக் கேட்டு (அதில்) மக்நனாயிருந்து (கரு) அப்போதுவாடின மாலைபோல் பரவசனானவனாகையால் விசாரித்து (ஸர்வேஶ்வரனை) ஸேவித்து (உ௦) ஆஶ்ரயித்தவர்களுக்கு என்னவாகும். (உஉ) எஅ.

வ்யா.—எழுபத்தெட்டாம்பாட்டு.—(கண்டு) அபிமதவிஷயத்திலே ப்ராவண்யத்தை விளைத்தவனை அநங்கனாக்கினவன் நெஞ்சுங்கூட ஶ்ரவணமாத்ரத்திலே பரவசமானபடி கண்டால் இவ்வஸ்துவை ஸாக்ஷாத்கரித்து ப்ரணாமாதிகளைப் பண்ணினார்க்கு எத்தனைநன்மை பிறவாதென்கிறார்.

(தவத்தாற்கு) தபஸ்ஸுக்கு பலம் ஒருத்தனுடைய ஹிம்ஸையாம்படி நெஞ்சுதிண்ணியனானவனுக்கு. (உமையுணர்த்த) ப்ராஸங்கிகமாக பகவத்குணங்களைக்கேட்டு சிஷ்யாசார்ய க்ரமம்மாறாடி அவள் வாயாலேதான் கேட்டு. (வண்டித்யாதி) மது வெள்ளத்திலே வண்டுகளலையாநின்ற திருத்துழாய் மாலையையும், ஆதிராஜ்ய ஸூசகமான முடியையுமுடைய ஸர்வேஸ்வரன் திருநாமங்களையே கேட்டு நெஞ்சாலே யநுஸந்தித்துக் கொண்டிருந்து. (ஆரலங்கலானமையால்) அலங்கலென்று அசைவாய் பாரவஸ்யத்தைச் சொன்னபடி. எஅ)

அரு.— எழுபத்தெட்டாம்பாட்டு.— அவதாரிகையிலே முதல் பதத்துக்குஅர்த்தமாக்கி அருளிச்செய்கிறார்(அபிமதவிஷயேத்யாதி). ஹிமவத்பார்ஸ்வத்திலே ருத்ரன் தபஸ்ஸுபண்ண, பார்வதி பரிசர்யை பண்ணுகிற வளவிலே மந்மதன்வந்து இருவருக்கும் ஸங்கத்தைப்பிறப்பிக்க, அவ்வளவிலே தபஸ்ஸு குலைகையாலே நெற்றியில் கண்ணைத்திறந்து தஹிக்க, அப்போது அநங்கனானனென்றபடி. (உணர்த்த) ருத்ரன் த்யாநபரனாயிருக்க, அப்போது பார்வதி "நீரெல்லாருக்கு முபாஸ்யராயிருக்க உமக்குத்யாநத்துக்கு விஷயமுண்டோ" என்று கேட்க, அவன் பகவத்குணங்களை அவளுக்குச் சொல்லி "நமக்கு முண்டுகாண்" என் றீடுபட்டான். அவன் சொன்னானாகிலு மிவளுணர்த்தக்கேட்டு. நீண்முடியான்தன் பெயரே ஆய்ந்திருந்து அங்காரலங்க லானமையால் கண்டுவணங்கினார்க் கென்னாங்கொ லென்றந்வயம். எஅ.

ஆய்ந்துகொண் டாதிப் பெருமானை, அன்பினால்
வாய்ந்த மனத்திருத்த வல்லார்கள்,— ஏய்ந்ததம்
மெய்குந்த மாக விரும்புவரே, தாமுந்தம்
வைகுந்தம் காண்பார் விரைந்து. எசு.

அந்.— ஆதி பெருமானை அன்பினால் ஆய்ந்துகொண்டு வாய்ந்த (5) மனத்து இருத்தவல்லார்கள் தாமும் தம்வைகுந்தம் விரைந்து (10) காண்பார். தம் ஏய்ந்த மெய் குந்தமாக (15) விரும்புவர். (16)

அர்.— ஜகத்காரணனான ஸர்வேஸ்வரனை ப்ரீதியுடனநுஸந்தித்துக்கொண்டு தகுந்த (௫) மனஸ்ஸில் ஸ்தாபிக்கவல்லவர்களான தாங்கள் தங்கள் ஸ்ரீவைகுண்டத்தை த்வரையாக (௧௦)

ஸேவிப்பார்கள். தம்முடன் சேர்ந்திருக்கிற சரீரத்தை வ்யாதி போல் (பரிஹரிக்கத்தக்கதாக) (கூ) ஆசைப்படுவார்கள். (கக)

வ்யா.—அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—(ஆய்ந்து) பகவத்விஷயத்திலே ருசியுடையவர்கள் அவனை ஏகாந்தமாய் அநுபவிக்கலாம் தேசம் பரமபதமென்றுசைப்பட்டு அதுக்குக் காற்கட்டாயிற்றென்று சொல்லலாம்படி அபிமாநித்தசரீரத்தை (க) "ஶரீரம்வ்ரண வஜ்ஜவஸே)ஜ-சரீரம்வ்ரணவத்பச்யேத்" என்னும்படியே நோயாக விரும்புவர்களென்கிறுர்.

(ஆய்ந்தித்யாதி ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரனை ப்ரேமத்தாலே யநுஸந்தித்துக்கொண்டு இருத்துகைக்கு யோக்யமான நெஞ்சிலே வைக்கவல்லவர்கள், ஏய்ந்த தம்மெய்) "ஶூலமோஹம் க்ரோஹம்-ஸ்தூலோஹம் க்ருஶோஹம்" என்று தானைச்சொல்லலாம்படியான சரீரத்தை, குந்தமாக-நோயாக. எகூ

அரு.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—(ஏய்ந்த) ஏய்கை-பொருந்துகையாய், பிரித்துக்காணப்போகாதே தானேஎன்னலாம்படி பொருந்தி யிருக்கை. மனத்திருத்த வல்லார்கள்தாம் தம் வைகுந்தம்-தமக்கு ஏகாந்தபோக யோக்யமான பரமபதத்தை, விரைந்து காண்பாராக, மெய் குந்தமாக விரும்புவ ரென்றந்வயம். எகூ.

**விரைந்தடைமின் மேலொருநாள் வெள்ளம் பரக்க,**
**கரந்துலகங் காத்தளித்த கண்ணன்,—பரந்துலகம்**
**பாடின வாடின கேட்டு, படுநரகம்**
**வீடின வாசற் கதவு.** அய.

அந்.—பரந்து உலகம் ஆடின பாடின கேட்டு (5) படு நரகம் வாசல் கதவு வீடின (10) மேலொருநாள் வெள்ளம் பரக்க உலகம் கரந்து (15) காத்து அளித்த கண்ணன் விரைந்து அடைமின். (20)

அர்.—ஸஞ்சரித்து உத்க்ருஷ்டராய் (ஸந்தோஷத்தினுல்) ந்ருத்யம்செய்தவர்கள் கானம்பண்ணின திருநாமங்களைக் கேட்டு (ரு) (ஸகலரு முஜ்ஜீவித்தார்களாகையால்) பாழான நரகத்தின் வாசலில் கதவு பிடுங்கிப்பொகடப்பட்டது. (கo) முற்காலத்தில் ப்ரளயார்ணவம் வ்யாபிக்க லோகங்களைத் தன்கர்ப்பத்தில்மறைத்

(க)

துவைத்து ( கரு ) வ்யஸநங்களைப்போக்கி ரக்ஷித்த ஸ்ரீக்ருஷ்ண ளை சீக்ரமாக ஆஸ்ரயியுங்கோள். ( உ0 )
அ௯.

வ்யா.—எண்பதாம்பாட்டு.—(விரைந்தடைமினித்யாதி) முன்பு ப்ரளயம்வருகிறதென்று லோகத்தை வயிற்றிலேவைத்து ப்ரளயந்தேடிவந்தாலு மத்தனைபோதும் தெரியாதபடி மறைத்துக் காத்து ரக்ஷித்த க்ருஷ்ணனை விரைந்தடையுங்கோள். (உலகமென்று) உத்க்ருஷ்டரைச் சொல்லுகிறது. (பாந்தித்யாதி) பாந்து உத்க்ருஷ்டராய் ஆடினவர்கள் பாடின திருநாமங்களைக் கேட்ட நரகத்துவாசல்களில் கதவுவாங்கிப் பொகட்டன. அன்றிக்கே, நரகத்துவாசல்களில் பிடுங்கிப் பொகட்டகதவுகளை நாட்டி(க)''முனியாது மூரித்தாள்கோமின்'' என்னும்படியே விரைந்தடையுங் கோளென்றுமாம். கண்ணனென்றது-கண்ணனை யென்றபடி.
அ0.

அரு.—எண்பதாம்பாட்டு.—'' கண்ணை விரைந்தடைமின்'' படு நரக வாசற்கதவுவீடின என்று பிந்நக்ரியையாதல், ''கண்ணனைப்பாடின ஆடின கேட்டு நரகவாசலில் வீடினகதவுகளை விரைந்தடைமின்'' என்று ஏகக்ரியை யாதல்; இத்தால்நரகம் பாழ்த்ததென்னுதல்; போக்குவரத் தில்லாதபடி வாசலை யடையுங்கோ ளென்னுதல்; இரண்டு தாத்பர்யம்.
அ௯.

**கதவு மனமென்றுங் காணலா மென்றும்,**
**குதையும் வினையாவி தீர்ந்தேன்,—விதையாக**
**நற்றமிழை வித்தியென் னுள்ளத்தை நீவிளைத்தாய்,**
**கற்ற மொழியாகிக் கலந்து.**
அக.

அந்.—மனம் கதவென்றும் காணலாமென்றும் குதையும் வினையாவி (5) தீர்ந்தேன். நீ கற்ற மொழியாகி கலந்து (10) நல் தமிழை விதையாக வித்தி என் (15) உள்ளத்தை விளைத்தாய். (17)

அர்.—மனஸ்ஸு (பகவத்ஸாக்ஷாத்கார) ப்ரதிபந்தகமென்றும் ஸாக்ஷாத்காரஹேதுவென்றும், (அறிந்து) அலையப்பண்ணுகிற துஷ்கர்மங்களைத் (ரு) தவிர்த்தேன். நீ, (நான்) அப்யஸித்த கவிக்குவாச்யனாயிருந்து (என்னுள்ளத்தில்) கலந்து க0 ) ஸ்லாக்யமான தமிழை விதையாக விதைத்து என்னுடைய ( கரு ) மனஸ்ஸைப் பலிக்கச்செய்தாய். ( கஎ )
அக.

(க) முதல்திருவந்தாதி. அஎ.

வ்யா.—எண்பத்தோராம்பாட்டு.—(கதவித்யாதி) (க) "மநஏவ மநுஷ்யாணாம் காரணம்பந்தமோக்ஷயோ:-மநஏவமநுஷ்யாணும் காரணம்பந்தமோக்ஷயோ:" என்னும்படியே பகவத்விஷயத்தைக் கிட்டாமைக்கு கதவு மனஸ்ஸென்றுமாம்-காண்கைக்கும் பரிகரம மனஸ்ஸென்றுமாம். (குதையித்யாதி) தடுமாற்றமான தொழில் தவிர்ந்தேன். (விதையித்யாதி) தடுமாற்றம் தீருகைக்குச் சொல்லுகிறது.

அரு.—எண்பத்தோராம்பாட்டு.— மனஸ்ஸு பந்த மோக்ஷங்களுக்குப் பொதுவென்றறிந்து ஆத்மாவினுடைய தடுமாற்றத்தைப் பண்ணக்கடவதான கர்மத்தைத் தவிர்ந்தேன், குதை-அசைவாய்,தடுமாறப்பண்ணுகிறவினையென்றபடி.'கற்றமொழியாகிக் கலந்து' விதையாக நல்தமிழை வித்தி என்னுள்ளத்தை நீவிளைத்தாய், இதுபாபம் போகைக்குஹேது,நீதானே கவிரூபமாய் நெஞ்சிலேகலந்து தமிழை விரைத்து உள்ளத்தை ஸபலமாக்கினை யென்றபடி. அக.

கலந்தானென் னுள்ளத்துக் காமவேள் தாதை,
நலந்தானு மீதொப்ப துண்டே,—அலர்ந்தலர்கள்
இட்டேத்து மீசனும் நான்முகனும், என்றிவர்கள்
விட்டேத்த மாட்டாத வேந்து. அஉ.

அந்.— வேள் காமன் தாதை அலர்ந்து அலர்கள் (5) இட்டு ஏத்தும் ஈசனும் நான்முகனும் என்று (10) இவர்கள் விட்டு ஏத்தமாட்டாத வேந்து என்னுள்ளத்து (15) கலந்தான். ஈதொப்பது நலந்தானும் உண்டே. (19)

அர்.—ஸுந்தரனை மன்மதனுக்குப் பிதாவாய் விகஸித்த புஷ்பங்களை (ரு) ஸமர்ப்பித்து ஸ்தோத்ரம்பண்ணுகிற ருத்ரன் ப்ரஹ்மா என்றுப்ரஸித்தர்களான (க0) இவர்கள் வாய்விட்டு ஸ்தோத்ரம் செய்யக்கூடாத (மஹிமையுடைய) ஸர்வேஸ்வரனை ஸ்ரீமந்நாராயணன் என்ஹ்ருதயத்தில் (கரு) ப்ரவேசித்தான். இதுக்கு ஸமானமான நன்மை (வேறொன்று) உண்டா? (கிடையாது.) (ககூ) அஉ.

வ்யா.—எண்பத்திரண்டாம்பாட்டு.—(கலந்தானித்யாதி) எல்லாரும் தன்னையாசைப்பட விருக்கு மவனென்னை யாசைப்பட்டு ஹ்ருதயத்திலே கலந்தான். அழகாலே எல்லாரையும் அகப்படுத்துங் காமனுக்கு முத்பாதகனானவன். (ஈதொப்பது நலந்தானுமுண்டே)

(க) ஸ்ரீவிஷ்ணுபுராணம். சு-எ.

யாஜீமாம் நமஸ்குரு" என்ன, அர்ஜுநனுக்கு ஶோகவிஷயமாயிற் றிறே. நீயுன் கார்யத்தைச் செய்யென்பது விட நினைத்தாரையிறே. (க) "ఏషపన్థా విదర్భాణామేష యాతిహి కోసలాన్, ஏஷபந்தா விதர்ப்பாணுமேஷயாதிஹிகோஸலாந்" என்று தன்னுடனேகிடந்த தமயந்தியையுடுத்த புடைவையிலே யொருதலையையறுத்து "வழி யிது, இங்ஙனேபோ" என்று விட்டாற்போலேயிறே தன்பக்கலிலே ந்யஸ்தபரனானவனை "உன்ஹிதத்துக்கு நீயேகடவை" என்கை. (நின் பால் கருமாமுறிமேனி காட்டுதியோ) என்றுமாம் (உ) "వివృణుతే, விவ்ருணுதே" என்னுமாபோலே. (கருமாமுறிமேனி) அஞ்சநத்திற் புழுதிபடைத்த புறவாயைநீக்கி முறித்தமுறிபோலே திருமேனி நெய்த்திருக்கிறபடி. (மாமுறி) - மாந்தளிரென்று ஸௌகுமார்யத் தைச்சொல்லி, அதிலே கறுப்பையுங்கூட்டி ஶ்யாமமாய்ஸுகுமார மான திருமேனியை நீயேகாட்டியநுபவிப்புதியோ? (மேனாள்கரு மாமுறிமேனிகாட்டுதியோ) என்றுமாம். (மேனாளறியோமேயென் செய்வானெண்ணினாய்) என்றுமாம். (மேனாளித்யாதி) பழையதாக அறியாதேபோருகிறவென்னை. ஒருத்தனுக்கு திங்மோஹம்பிறந் தால், வழியறியுமவன் "நீயேயோ" என்னக்கடவதோ? வழிகாட்டி விடக்கடவனே? (ங) "పదస్ఖలితమ్ - பதஸ்க்கலிதம்" என்னும்படி யிறே என்னுடையவவஸ்த்தை. (என்செய்வானெண்ணினாய்) (ச) "మన్మనాభవ-மந்மநாபவ" என்னப்பார்த்தாயோ? (ரு) "మామేకం శరణం వ్రజ - மாமேகம்சரணம்வ்ரஜ" என்னப்பார்த்தாயோ? (கண் ணனேயீதுரையாய்) † (ரு) "మాశుచః மாசுச:" என்றுசொல்லு கைபரமிறே. (என்செய்தாலென்படோம்யாம்) எல்லாவுயர்த்தியை யுஞ்செய்து பரமபதத்திலேகொடுபோய்வைத்தால் நீ ஆவிர்த்தப்ரா திகூல்யத்திலேபோய் நில்லேனே என்னை என்கையிலேகாட்டித்தந் தால். சு.

அரு.—ஆறும்பாட்டு. — உபாயாந்தரம்நீங்குகைக்குடலோஎன்ன அரு ளிச்செய்கிறார் (மத்யாஜீமாம்) இத்யாதி. "நின்பால்" என்றத்தைக்கீழே

(க) பாரதம் - ஆரண்ய.

(உ) கடவ - க - உ.

(ங) ஸ்தோத்ரரத்நம்.

(ச) கீதை - கஅ - சுரு.

(ரு) கீதை - கஅ - சுசு.

கூட்டுதல்: "மாமுறி"-ஶ்லாக்யமான நீலரத்நமுறி என்னுதல்; மாமரத்தின் தளிரென்னுதல். "மேல்நாள்"-பழையதாய், அஸாதாரணமானதிருமேனி. "மாசுசஃ" என்ற உனக்குச்சொல்லுகைபரமன்றே என்றபடி. "உளையாய்" என்பானென், * மயர்வறமதிநலம் முதலான நன்மைகளைப்பண்ணினேமே என்ன அருளிச்செய்கிறார் (என்செய்தாலென்படோம்யாம்) என்று. நீ எல்லாநன்மைகளையுஞ்செய்து பரமபதத்திலேவைத்தாலும் என்னை என்கையிலேகாட்டித்தந்தால் அந்தப்பரமபதத்தையும்விட்டுப் பழைய ப்ரக்ருதியிலே வந்துநிற்பனென்று தாத்பர்யம் § மேல்வாக்யம்பிழை. சு.

யாமே யருவினையோம் சேயோம், என்னெஞ்சினார்
தாமே யணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்,—பூமேய
செம்மாதை நின்மார்பில் சேர்வித்துப், பாரிடந்த
அம்மாநின் பாதத் தருகு. ௭.

அந்.—பூ, மேய, செம், மாதை, நின், (ரு) மார்பில், சேர்வித்து, பார், இடந்த, அம்மா, (க0) நின், பாதத்து, அருகு, என், நெஞ்சினார், (கரு) தாமே, அணுக்கராய், சார்ந்தொழிந்தார். அரு, வினையோம், (௨0) யாமே, சேயோம். (௨௨)

அர்.—பூவிலே, பொருந்தி, சிவந்தநிறத்தையுடைய, பெரியபிராட்டியை, உன்னுடைய (ரு) திருமார்பிலே, சேரப்பண்ணி, (ப்ரளயத்தில்) பூமியைக், குத்தியெடுத்த, ஸ்வாமீ! (க0) உன்னுடைய, திருவடிகளின், ஸமீபத்தை, என்னுடைய, மநஸ்ஸானவர், (கரு) என்னநுமதியின்றிக்கே ஸ்வதந்த்ரராயே, அந்தரங்கராய்க், கிட்டிவிட்டார். க்ரூரமான, பாபத்தையுடைய, (௨0) நாமே, தூரஸ்த்தரானோம். (௨௨) ௭.

வ்யா.—அவ.—ஏழாம்பாட்டில், (யாமே) அயோக்யனென்றகன்ற தம்மைச்சேரவிட்டானென்று நின்றதுகீழ்; சேரவிட்டாலும் பர்வதபரமாணுக்களுடைய சேர்த்திபோலேயிறே.

(யாமேயித்யாதி) மஹாபாபியாயிருந்த நாம் தூ(ஜூ)ரியோம்.

† ஸம்ஸாரிக்கு பகவல்லாபமென்கிறதோ † ரர்த்தமோ? (என்னெஞ்சினாரித்யாதி) என்னுடையநெஞ்சினார்பண்ணின உபகாரமிறே. † தன் ஸ்வரூபமறியாதே மேல்விழுந்து செய்ததொன்றிறே. (பூமேய வித்யாதி) அயோக்யரென்று பிற்காலிக்கைக்கும் மேல்விழுகைக்கும் ஹேதுசொல்லுகிறது. (பூமேயசெம்மாதைநின்மார்பில்சேர்வித்து)

§ இந்த அரும்பதத்துக்கு வ்யாக்யாநத்தில் இன்னும்சில வாக்யங்களுண்டு.

என்ற லக்ஷ்மீபதித்வமும், (பாரிடந்த) என்ற அதிமாநுஷசேஷ்டிதத்வமும்,(அம்மா) என்ற ஸர்வேஸ்வரத்வமும் பிற்காலிக்கைக்கும்ஹேது. பெரியபிராட்டியார் திருமார்பிலேயிருக்க நமக்கிழக்கவேணுமோ? வென்றும், "பாரிடந்த" என்றத்தால் தளர்ந்தார்தாவளமென்றும், "அம்மா" என்று வகுத்தவனென்றும் மேல்விழுகைக்கும் இவைதானேஹேதுக்கள். [அம்மாநின்பாதத்தருகு-என்னெஞ்சினுர் தாமேயணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார்.] எ.

அரு.—ஏழாம்பாட்டு. இதுக்கு, "பெற்றதாய்" என்றபாட்டோடேஸங்கதி. இவனுக்கு பகவத்விஷயந்தூரமோ வென்ன அருளிச்செய்கிருர் (ஸம்ஸாரிக்கு) இத்யாதி. (அர்த்தமோ) - பொருளோ. அதுகிடைக்குமோவென்றபடி. தாம் தூரஸ்த்தராஞல் நெஞ்சுகிட்டக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிருர் (தன்ஸ்வரூபம்) இத்யாதி. எ.

அருகும் சுவடும் தெரிவுணரோம், அன்பே
பெருகு மிகவிதுவென் பேசீர்,—பருகலாம்
பண்புடையீர் பாரளந்தீர் பாவியெம்கண் காண்பரிய,
நுண்புடையீர் நும்மை நுமக்கு. அ.

அந்.—பருகலாம், பண்பு, உடையீர், பார், அளந்தீர், (ரு) பாவியெம், கண், காண்பு, அரிய, நுண்பு, (க0) உடையீர், நும்மை, அருகும், சுவடும், தெரிவு, (கரு) உணரோம், நுமக்கு, அன்பு, மிக, பெருகும், (உ0) இது, என், பேசீர். (உங)

அர்.—பாநம்பண்ணும்படியான, குணங்களை, யுடையீராய், பூமியை, அளந்தவராய், (ரு) பாபத்தையுடைய எங்களுடைய, கண்களாலே, பார்க்கைக்கு, துர்லபராம்படி, ஸௌக்ஷ்மயத்தை, (க0) உடையீரான, உம்மைக், கிட்டும்வழியையும், (அதற்கு) உபாயத்தையும், விமர்சித்து, (கரு) அறியச் சக்தரல்லோம். உமக்குப், ப்ரீதி, மிகவும், (என்னிடத்தில்) வளராநின்றது. (உ0) இதற்குக் காரணம், எது? சொல்லீர். (உங) அ.

வ்யா.—அவ.—எட்டாம்பாட்டில், (அருகும்) நீர்கைக்கெட்டாதேயிருக்கச்செய்தே கைபுகுந்தாற்போலேயிராநின்றன, இதுக்கடி சொல்லீரென்கிருர்.

(அருகும்சுவடும்தெரிவுணரோம்) பன்னீராண்டு கலந்தபிராட்டியைப்போலே உம்மோடேகலந்து உம்முடையசுவடறிகிறிலோம். நீர்வருகைக்குச்சுவடறிகிறிலோமென்றுமாம். (அன்பித்யாதி) ஆகி

னுமக்கு அன்புமிகாநின்றது, இதுக்கடிசொல்லீர். (பருகலாம்பண் புடையீர்) "பருகலாம்" என்று ஒரு த்ரவத்ரவ்யத்தைச்சொல்லுமா போலே சொன்னபடியென்! பருகலாம் நீர்மையையுடையீர்! (பார ளந்தீர்) சொன்ன நீர்மைக்குதாஹரணம். (பாவியெம்கண்ணித்யாதி) பாவியோமாயிருந்த எங்கள் கண்ணுற்காணப்போகாத வைலக்ஷண் யத்தையுடையீர்! (நும்மை - நுமக்கு). [நும்மை - அருகும்சுவடும் தெரிவுணரோம் - நுமக்கு அன்பேபெருகும்மிகஇதுவென்பேசீர்]. இது ஜீயர் பிள்ளைதிருநறையூரரையர்பக்கற்கேட்டதாகப் பிள்ளை யருளிச்செய்தார். அ.

அரு.—எட்டாம் பாட்டு. "அடையாளமுமறியோம்" என்கையாலே கைக்கெட்டாமையும், "அன்பேபெருகும்" என்கையாலேகைபுகுந்தமையுந் தோற்றுகிறது. அருகுஞ்சுவடும்கலந்து. அத்தால் வருமடையாளமறியோமெ ன்னுதல், கிட்டுகைக்கடையாளமறியோமென்னுதல். "நுண்பு" நுண்மை யாய் அத்தால்வைலக்ஷண்யம். § இவையறிவனென்ற வாக்யந்தெரியாது. பிழையும். அ.

நுமக்கடியோ மென்றென்று நொந்துரைத்தென், மாலார்
தமக்கவர்தாம் சார்வரிய ரானால்,—எமக்கினி
யாதானு மாகிடுகாண் நெஞ்சே, அவர்திறத்தே
யாதானும் சிந்தித் திரு. கூ.

அந்.—நுமக்கு, அடியோம், என்றுஎன்று, நொந்து, மாலார்தமக்கு, (இ) உரைத்து, என், அவர்தாம், சார்வு, அரியரானால், (கo) நெஞ்சே, எமக்கு, இனி, யாதானும், ஆகிடுகாண், (கரு) அவர் திறத்து, யாதானும், சிந்தித்து, இரு. (கசூ)

அர்.—தேவரீருக்கு, தாஸபூதரானோம். என்றுபலகாலும், வருந்தி, மிகப் பெரியரானவர்க்குச், (இ) சொல்லி, என்னஉபயோகம். அவர்தாம், (நமக்குக்) கிட்டுகைக்கும், துர்லபரானால், (கo) ஓமநஸ்ஸே! நமக்கு, இனிமேல், (லாபா லாபங்களில்) எதுவாகிலும், உண்டாகட்டும். (கரு) அவரிடத்தில், (நம்விஷய மாக உண்டான ஆபிமுக்யவைமுக்யங்களில்) ஏதாகிலுமொன்றை, நினைத்து, ஜீவித்திரு. (கசூ) கூ.

வ்யா.—அவ.—ஒன்பதாம் பாட்டில், (நுமக்கித்யாதி) † பல் பன்னிரண்டுங்காட்டினாலும் ப்ரயோஜநமில்லையென்கிறது.

---

§ இந்த அரும்பதத்திலெடுத்த வாக்யம் வ்யாக்யாந ஸ்ரீகோசங்களில் காணவில்லை.

நுமக்கடியோமென்கிறதே போரு மவனிரங்குகைக்கு ; (என்றென்று) அதுக்குமேலே அத்தைப்பலகால் சொல்லுகையும் திருவுள்ளத்தைப் புண்படுத்துகைக்குடல். (நொந்துரைத்தென்) (க) “ఆర్తోవాయదివాదృప్తః పరేషాంశరణాగతః- ஆர்த்தோவாயதிவாத்ருப்த: பரேஷாம்சரணாகத:” என்றதுவும் பொய்போலே. (மாலார் தமக்கு) † பண்டிவையெல்லாஞ்செய்து வர்த்தித்தவருக்கு. (அவர் தாம் சார்வரியரானல்) கையாளாய் வர்த்தித்தவர்தாம் கிட்டவரியரானல். அவர் “செய்வோம்” என்று நினைத்தவன்று போலே காணுமிங்குச் சொன்னவையெல்லாம் பலிப்பது. (எமக்கித்யாதி) இனி நமக்குப் பேறிழவுமிரண்டு மொக்கும். † பசித்தபோது கிடையாதசோறென்செய்ய ? விஶ்லேஷத்தி லுஜ்ஜீவிப்போமாகிலன்றோ ஆறியிருக்கலாவது. † (உ) “[ఈర్ష్యారోషౌ- ஈர்ஷ்யாரோஷௌ] இத்யாதி. “அதிலே துஷ்டஸத்வங்களும் ராக்ஷஸருமுண்டு ; ஸுகுமாரையாயிருக்கிற வுன்னைக்கொடுபோக வொண்ணுது” என்று பெருமாளருளிச்செய்ய, ப்ரணயரோஷத்தாலே பிராட்டி விண்ணப்பஞ்செய்கிறுள். உம்முடைய பின்னே போந்தேனென்று எனக்கொரு உயர்த்தியுண்டாங்காட்டி உமக்கு இத்தனை பொறுமையும் சீற்றமும் வேணுமோ ? “பிதாவினுடைய வசநத்தை யநுவர்த்தித்துக் காடேறப்போனர்” என்று உமக்கொரு உயர்த்தி தேடுகிறவோபாதி உம்முடையபின் போந்தேனென்று எனக்கொரு உயர்த்தியுண்டானலாகாதோ? அநுவர்த்தநீயரை அநுவர்த்திக்கலாவதுமக்கேயோ? அல்லாதார்க்காகாதோ? [ఈర్ష్యారోషౌ బహిష్కృత్య, భుక్తశేషమివోదకమ్- ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தசேஷமிவோதகம்] வஸிஷ்ட்ட சிஷ்யராய் ஜ்ஞாநவான்களானல் த்யஜிக்கப்படுமவை த்யஜிக்கவேணுங்காணும். [నయమామ్ - நயமாம்] அஸூயையுங் கோபமும்போனல் பரஸம்ருத்தியேபிரேயுள்ளது, ஆனபின்பு என்னைக்கொடுபோகீர். [వీర - வீர] பரஸம்ருத்தியுண்டானல் கொடுபோகா தொழிகைக்கடி வீர்யத்தில் கொத்தையிறே, அதில்லையிறே யுமக்கு. [విస్రబ్ధః-விஸ்ரப்த:] உம்மைநீரறியீர், † என்னைவிஶ்வஸித்

(க) ஸ்ரீராமா - யுத்த - ௧அ - ௨அ. (௨) ஸ்ரீராமா - அயோ - ௨௭ - அ.

துக் கொடுபோம். [పాపంమయినవిద్యతే - பாபம் மயிநவித்யதே] உம்மைப் பிரிந்து ஜீவிக்கைக்கடியான பாபமெனக்கில்லைகாணும். பாபமாவது க்லேச ஹேதுவிறே; உம்மைப் பிரிந்து க்லேசப்படுமதில்லைகாணுமெனக்கு. (அவர்திறத்தேயாதானும் சிந்தித்திரு) பேறு மிழவு மிரண்டு மொக்குமென்றிருக்கலாமோ? நம்முடைய ஸத்தைக்கு அவன் வேணுமேயென்ன, †ஸத்தைக்கிதெல்லாம்வேண்டாகாண்; அவர் நம்மை வேண்டாவென்றத்தை நினைத்திருக்கவமையும். †நம்முடைய ஸத்தைக்கு அவர் ஸத்தையிறே காரணம். கூ.

அரு.—ஒன்பதாம்பாட்டு. "என்றென்று" என்கிறமீமிசையால் (பல்பன்னிரண்டு) என்கிறது. (பண்டிவையெல்லாம்) நம்மிடத்திலே, முன்பு அடியோமென்பது, நொந்துரைப்பது, பல்காட்டுவதாய்ச்செய்து வர்த்தித்தவற்கென்றபடி. இரண்டுமொக்குமென்பானென், இழவுக்குநோவுபடவேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (பசித்தபோது) இத்யாதி. அங்கீகரியாமல்வெறுத்த பேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஈர்ஷ்யாரோஷௌ) இத்யாதி. (என்னைவிஸ்வஸித்து) - நான்சொன்னவார்த்தையை விஸ்வஸித்து. (ஸத்தைக்கிதெல்லாம்) நமஸ்காராதிகளெல்லாம். வேண்டா என்றத்தைநினைக்கப்போருமோவென்ன அருளிச்செய்கிறார் (நம்முடையஸத்தைக்கு) இத்யாதி. [நெஞ்சே! அவர்தாம் சார்வரியராகில் மாலார்தமக்குநுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென் - இனியெமக்குயாதானுமாகிடுகாண் - அவர்திறத்தேயாதானுஞ்சிந்தித்திரு.] என்றந்வயம். கூ.

இருநால்வ ரீரைந்தின் மேலொருவர், எட்டோ
டொருநால்வ ரோரிருவ ரல்லால்,—திருமாற்கு
யாமார் வணக்கமா ரேபாவம் நன்னெஞ்சே
நாமா மிகவுடையோம் நாழ். க0.

அந்.—இருநால்வர், ஈரைந்தின்மேலொருவர், எட்டோடு ஒருநால்வர், ஓர்இருவர், அல்லால், (கு) திருமாற்கு, யாம், ஆர், வணக்கம், ஆர், (க0) ஏபாவம், நல்நெஞ்சே, நாமா, மிக, நாழ், (கு) உடையோம். (கரு).

அர். — (ஆஸ்ரயணயோக்யரான) அஷ்டவஸுக்கள், ஏகாதசருத்ரர், த்வாதசாதித்யர், இரண்டு அஸ்விநிதேவர்கள், இவர்களையொழிய, (கு) ஸ்ரியஃபதி(யை ஆஸ்ரயிக்கை)க்கு, நாம், எவ்வகையிற்சேர்ந்தவர்? (அயோக்யரான நாம்செய்யும்) ஆஸ்ரயணம், எவ்வகைப்பட்டது? (க0) (நாமாசைப்பட்டபோது கிடையாமையாலே நம்முடைய) பாபமிருந்தபடி ஆஸ்சர்யமாயிருக்கிறது. நலமுடைய ஓமநஸ்ஸே! (ஆயினும் அவனை மேல்விழுந்தாஸ்ரயிக்கிற) நாமோ, மிக்க, ஸாமர்த்யத்தை, (கு) உடையரானோம். (கரு) க0.

வ்யா.—அவ.—பத்தாம்பாட்டில், - (இருநால்வர்) இதுக்கு † மூன்றுபடி யருளிச்செய்வர். விலக்ஷணுதிகாரங்காண்; மதிப்பர்க்கே கிடைக்குமத்தனையல்லது எளியர்க்குக் கிடையாதுகாண்; தன்னையே ப்ரயோஜநமென்றிருப்பார்க்குக் கிடையாதுகாண்; உபாயாந்தரபரிக்ரஹம் பண்ணினார்க்கு மத்தனைகாண், தன்னையே உபாயமாகப் பற்றினார்க்குக் கிடையாதுகாண் என்றுமாம்.

(இருநால்வரித்யாதி) அஷ்டவஸுக்கள், ஏகாதசருத்ரர்கள், த்வாதசாதித்யர்கள், அஸ்விநிகளல்லால் - இம்மதிப்பர்களையொழிய. (திருமாற்குயாமார் வணக்கமார்) ஸ்ரியஃபதிக்குநாமார்? அங்குப்பரிமாறுவாரார்? நம்முடைய செயலெது? (ஏபாவம்) அவனருகேயிருக்க இழக்கவேண்டினது நம்முடைய பாபம். (நன்னெஞ்சே) லாபாலாபமிரண்டுக்கும் கூட்டான நெஞ்சே! (நாமாஇத்யாதி) நாம்நறுவட்டாணித்தனத்தை மிகவுடையோம். † ஸ்ரியஃபதியென்றால் நம்ஸ்வரூபத்தைப்பார்த்து அகலவிறேயடுப்பது; ஸ்வரூபத்தைப்பாராதே கிட்டிற்று நம்மளவில்லாமையிறே. க௦.

அரு.—பத்தாம்பாட்டு. (மூன்றுபடி) இரண்டு அயோக்யதாநுஸந்தாநம், மூன்றாவது வெறுப்பு. "நாழ்" - நறுவட்டாணித்தனமாய், நிரர்த்தமான வாக்ஸாமர்த்யம். பலிதத்தையருளிச்செய்கிறார் (ஸ்ரியஃபதி) இத்யாதி. [நாமாகில் நாழ்மிகவுடையோம்; ஆகையாலே யாமார்வணக்கமார்] என்றந்வயம். க௦.

நாழா லமர்முயன்ற வல்லரக்க னின்னுயிரை,
வாழாவகை வலிதல் நின்வலியே,—ஆழாத
பாருநீ வானுநீ காலுநீ தீயுநீ,
நீரும்நீ யாய் நின்ற நீ. கக.

அந்.—ஆழாத, பாரும்நீ, வானும்நீ, காலும்நீ, தீயும்நீ, (ரு) நீரும்நீயாய், நின்ற, நீ, நாழால், அமர், (க௦) முயன்ற, வல், அரக்கன், இன், உயிரை, (கரு) வாழாவகை, வலிதல், நின்வலியே. (கஅ)

அர்.—(நீரிலே) அழுந்தாத (மிதக்கிற) பூமியும்நீயாய், ஆகாசமும்நீயாய், காற்றும்நீயாய், அக்நியும்நீயாய், (ரு) ஜலமும்நீயாய், (இவற்றைச் சரீரமாகக்கொண்டு தான் சரீரியாய்) (இவற்றுக்குக்காரணமாய்) இருக்கிற, நீ, கர்வத்தினால், யுத்தத்திலே, (க௦) யத்நம்செய்த, வலிய, ராக்ஷஸனான ராவணனுடைய, இனிமையான (பேணிக்கொண்டுபோந்த), ப்ராணனை, (கரு) ஜீவியாதபடி, வருத்துதல், (விமுகனானஎனக்கு ஆபிமுக்யத்தைப்பிறப்பித்தஉனக்கு), ஒரு ஸாமர்த்யமோ? கக.

வ்யா.—அவ.—பதினோராம்பாட்டில், "அயோக்யன்" என்றகன்றதம்மைவென்று சேரவிட்டுக்கொள்ள, "என்னைவென்றுசேரவிட்ட உனக்கு ராவணனைவென்றதுவு மொருபணியோ ?" என்கிறார்.

(நாழாலித்யாதி) ராக்ஷஸ ராஜனென்கிற அபிமாநத்தாலே பெருமாளோ டெதிரிடுவோமல்லோமென்னாதே யுத்தத்திலே யத்நம்பண்ணி மிடுக்கனான ராவணன்பேணினவுயிரை வாழாவகை நினைக்கை உனக்கொரு மிடுக்கோ ? அயோக்யனென் றகலுமவர்கள் பிராட்டியைப் பிரித்த ராவணனோடொப்பர்கள். (ஆழாதவித்யாதி) † விருத்தமான விபூதிகளைச் சேரவிட்டு அநுபவிக்கிற உனக்கு என்னைச்சேரவிடுகையொருபணியோ ? விபூதி ஸாமாந்யங்களுக்கு நிர்வாஹகனாய் அவற்றைச் சொல்லுகிற சப்தம் உன்னளவும் வரும்படி நிற்கிறவுனக்கு, உனக்கே அஸாதாரணமாய் உன்னாலல்லது செல்லாதவர்களைச்சேரவிடுகை பணியோ ? வென்றுமாம். கக.

அந.—பதினோராம்பாட்டு. (விருத்தமான) அக்நிக்கும் ஜலத்துக்கும் சேராதாற்போலே பரஸ்பரவிருத்தமான பஞ்சபூதங்களையுங்கொண்டு காரியங்கொள்ளுகிறவுனக்கு என்றபடி. கக.

நீயன்றே யாழ்துயரில் வீழ்விப்பான் நின்றுழன்றாய்,
போயொன்று சொல்லியென் போநெஞ்சே,—நீயென்றும்
காழ்த்துபதேசந்தரினுங் கைக்கொள்ளாய், கண்ணன்தாள்
வாழ்த்துவதே கண்டாய் வழக்கு. கஉ.

அந்.—நெஞ்சே, ஆழ், துயரில், வீழ்விப்பான், நின்று, (ரு) உழன்றாய், நீயன்றே, போய், ஒன்றுசொல்லி, என், (க0) போ, உபதேசம்தரினும், நீ, காழ்த்து, ஒன்றும், (கரு) கைக்கொள்ளாய், கண்ணன், தாள், வாழ்த்துவதே, வழக்குகண்டாய். (உ0)

அர்.—ஓமநஸ்ஸே! (என்னை) அகாதமான, துக்கத்தில், தள்ளுகைக்காக, நிரந்தரமாயிருந்து, (ரு) யத்நம்பண்ணினாய், நீயன்றோ? மேல்மேல், ஒன்றைச்சொல்லி, என்னஉபயோகம் ? (க0) இதைவிடு. (நன்மையை உனக்கு நான்) உபதேசித்தாலும், நீ, (என்மேல்) சீறி, ஒன்றையும், (கரு) அங்கீகரிக்கமாட்டாய். கண்ணனுடைய, திருவடிகளை, மங்களாசாஸநம்பண்ணுவதே, ஸ்வரூபாநுரூபம்கிடாய். கஉ.

வ்யா.—அவ.—பன்னிரண்டாம் பாட்டில், (நீயன்றே) கிட்டினவர்றே போன நாளைக்குக் கரைகிறார்.

(நீயன்றே யித்யாதி) ஆழ்துய ரென்றது - அயோக்யரென்றக ன்றக்லேசமாகவுமாம்; விஷயப்ராவண்யமாகவுமாம். (போயித்யாதி) நெஞ்சு "நீரன்றோ ஆழ்துயரிலேவிழும்படிபண்ணினீர்" என்றுசொ ல்ல, "நீ யொன்றைச் சொல்ல நானொன்றைச் சொல்லுகிறதென், அத்தைப்பொகடென்கிறார். (நீயித்யாதி) ஸர்வேஶ்வரனுக்கு ஐஶ்வர் யமேயன்றுகாண் விஞ்சியிருப்பது; நீர்மையும் விஞ்சியிருக்குங்கா ணென்று நான் சொன்னாலும் அழன்று அத்தைக்கொள்ளாய். (கண் ணனித்யாதி) "ஆகிலினிச்செய்வதென்" என்று நெஞ்சு கேட்க, அவனுபிமுக்யம்பண்ணிநிற்க நாம்வைமுக்யம் பண்ணலாகாதுகாண்; அவன் திருவடிகளுக்கு மங்களாசாஸநம் பண்ணுகை ந்யாயம். கஉ.

அரு.—பன்னிரண்டாம்பாட்டு. "போய்" - மிகவும். "ஒன்றுசொல்லி யென், - போ" பொகடு, சொல்லவேண்டா வென்றபடி. உபதேசம்தரினும் என்றும் காழ்த்துகைக்கொள்ளாய். (அழன்று) சீறி.

வழக்கொடு மாறுகொ ளன்றடியார் வேண்ட,
இழக்கவுங் காண்டு மிறைவ—இழப்புண்டே,
எம்மாட்கொண் டாகிலும் யான்வேண்ட வென்கண்கள்,
தம்மாற்காட் டுன்மேனிச் சாய். கந.

அந்.—வழக்கொடு, மாறுகொள், அன்று, அடியார், வேண்ட, (௫) இழக் கவும்காண்டும், இறைவ, இழப்புஉண்டே, ஆகிலும், யான், (௧௦) வேண்ட, எம், ஆள்கொண்டு, என்கண்கள்தம்மால், உன், (௧௫) மேனி, சாய், காட்டு. (௧அ)

அர்.—(உனக்கு ஸம்ஸாரிகளெதிர்நிற்கை) ந்யாயமுமன்று. (அவர்க ளிடத்தில்நின்றும்) ப்ரத்யுபகாரம்கொள்ளுகையும், ந்யாயமன்று. தாஸ பூதர், ப்ரார்த்திக்க, (௫) (அவர்களுக்காகஉன்னை) இழக்கவுங்காண்கிறோம். ஓ ஸ்வாமீ! (நீயிருக்க எங்களுக்கு) இழக்கக்கூடுமோ? (எங்களிடத்தில் கிஞ் சித்காரம் ஸ்வீகரிக்கவேண்டுமே) ஆகிலும், நான், (௧௦) ப்ரார்த்திக்க, என் னுடைய உக்தியைக், கைங்கர்யமாகக்கொண்டு, என்கண்களாலே, (ஸேவிக் கும்படி) உன்னுடைய, (௧௫) திருமேனியின், அழகைக், காட்டு. (௧அ) (௧௯)

வ்யா.—அவ.—பதின்மூன்றாம்பாட்டில், (வழக்கொடு) "அகல வொட்டாயாகில் கிட்டி யநுபவிக்கும்படி பண்" என்கிறார்.

(வழக்கொடித்யாதி) † ஸம்ஸாரியினுடைய முன்னே நிற்கையும் வழக்கன்று, ஸாதநாநுஷ்டாநம் பண்ணினாரைப்போலே உபகாரத்

துக்குப்ப்ரத்யுபகாரம் கொள்ளுகையும் வழக்கன்று; †ஆகில் நீர் சொல்லுகிறதென்னென்னில், (அடியாரித்யாதி) †அடியாரானவர்கள்வேண்ட ஸ்வாமிஇழக்கக்கண்டோம். (இறைவ) நீரடியாராகவேணுமேயென்ன, என்பக்கலுள்ளதழிந்ததாகிலும், உன்பக்கலுள்ள தழியாதிறே; உன்ஸ்வாமித்வமுண்டாக என் சேஷத்வம்தன்னிடையே கிடவாதோ ? (இழப்புண்டே) †நாட்டடியார்க் கிழப்புண்டாகிலும்உன்னடியார்க் கிழப்புண்டோ ? (எம்மாட்கொண்டித்யாதி) இழப்பின்றிக்கே யொழியும்போது உமக்கடிமையிலே சிறிது அந்வயம் வேணுமேயென்ன, என்னுடைய உக்திமாத்ரத்தையே பரிபூர்ண கைங்கர்யமாகக்கொண்டு செய்யவேணும். (என்கண்கள் தம்மாற்காட்டுன் மேனிச்சாய்) செய்யவேண்டுவதென்னென்ன, ஒருத்தன் பட்டினிவிட ஒருத்தனுண்டால் பசிகெடாதிறே. (க) “[illegible] காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை:” என்னும்படியே தேஹாந்தரே தேஶாந்தரேகாணவொண்ணாது, விடாய்த்த கண்களாலேகாணவேணும்.

அரு.—பதின்மூன்ரும்பாட்டு - ஈஶ்வரனைப்பார்த்துச் சொல்லுகிருர் (அகலவொட்டாயாகில்) இத்யாதி. *ஒடுவழக்கன்று மாறுகொள்வழக்கன்று என்றுகூட்டி அருளிச்செய்கிருர் [ஸம்ஸாரி) இத்யாதிவாக்யத்வயத்தாலே. ஒன்றுமறியாத ஸம்ஸாரிகள்முன்னே அவதரித்துநிற்கையும் “நீ ஒன்றைச் செய் நான் ஒன்றைத்தருகிறேன்” என்கையும் உனக்குவழக்கன்று; ப்ரயோஜநமில்லை என்றபடி. வழக்கேதென்று சங்காபிப்ராயம். அடியார்க்கபேக்ஷாமாத்ரத்தாலே கார்யஞ்செய்கை வழக்கென்று உத்தரம். அதுகாணும். (அடியாரானவர்கள்) இத்யாதி. (நாட்டடியார்) - இதரசேஷபூதர். உன்மேனிச்சாயை - நிறத்தை, யான்வேண்ட, என்கண்கள் தம்மால்காட்டு - கண்கள் தனக்குக்காட்டு என்றபடி. கங.

சாயால் கரியானை யுள் ளறியாராய் நெஞ்சே,
பேயார் முலைகொடுத்தார் பேயராய்,—நீயார்போய்த்
தேம்பூண் சுவைத்தூ னறிந்தறிந்தும், தீவினையாம்
பாம்பார்வாய் கை நீட்டல் பார்த்தி. கச.

அந்.—நெஞ்சே, சாயால், கரியானை, உள்அறியாராய், பேயார், (ரு) பேயராய், முலைகொடுத்தார், போய், தேம்பு, ஊண், (௧௦) சுவைத்து, ஊன்,

(க) ஸ்ரீராமா - ஸுந்தர - ௩௦ - ரு.

* ஒடு என்று - ஸம்பந்தமாய், ஸம்ஸாரிகள் என்றத்யாஹரித்துக் கொண்டு ஸம்ஸாரிகள் முன்நிற்கை என்று பலித்த தாத்பர்யம்.

அறிந்துஅறிந்தும், தீவினையாம், பாம்பார், (கரு) வாய், கைநீட்டல், பார்த்தி, நீ, யார். (உ0)

அர்.—ஓ மநஸ்ஸே! நிறத்தால், கரியனானவனை, உள்புக (அநுபவிக்க) அறியாதவளாய்க்கொண்டு, பேய்ச்சியானபூதனை, (ரு) ஜ்ஞாநஹீனையாய், (க்ருஷ்ணனுக்கு) முலைகொடுத்தாள். மிகவும், அவத்யமுண்டாம்படி, அநுபாவ்யமான சப்தாதி விஷயங்களை, (க0) அநுபவித்து, (அதனால்வரும்) அவத்யத்தைச், செவ்வையாயறிந்தும், கொடியசெயலையுடைய, பாம்பினுடைய, (கரு) வாயிலே, கைநீட்டுகையைப், பார்த்தாய். நீ, (பூதனைக்கு) யாராக வேணும். (உ0) கச.

வ்யா.—அவ.—பதினாலாம்பாட்டில், (சாயால்) காட்டவேணுமென்றார் கீழ்; ஆரை யென்கண்களாலே காண்கிறதென்றகன்றும், திரியட்டும் தம்முடைய அயோக்யதையைச் சொல்லுகிறார். பூதனை கிட்டினவோபாதியிறே நான் கிட்டுகை யென்கிறார்.

(சாயால்கரியானை) நிறத்தால் கரியனாயுள்ளவனை. (உள்ளறியாராய்) †ஆழவநுபவிக்கவறியாராய்; ஸர்வேஶ்வரனென்று உள்ளபடியறியாராயென்றுமாம். (நெஞ்சேயித்யாதி) பூதனைமனிச்சியாய் வஞ்சித்தாளன்றே, பேயாகையாலே வஞ்சித்தாளத்தனையிறே; உன்னைப் பார்த்தால் பூதனை நித்யஸூரிகளோடொக்குமிறே. (தேம்பூண்சுவைத்தித்யாதி) ஆத்மா தேயும்படிக்கீடாக சப்தாதிகளை புஜித்து அதினுடைய விபாகத்தை யறிந்தறிந்து, அநர்த்தத்தைப் §பலிக்கக்கடவதாயிருக்கிற ப்ாம்பின் வாயிலே கை நீட்டுவாரைப்போலே யிருக்கிற நீ பூதனைக்கார்? உனக்கண்ணியளோ? பூதனை. அயோக்யனென்றகலுகிற பக்ஷத்தில் - ஈஶ்வரனுக்கு அவத்யம் பிறக்கைக் கீடாக வணைந்து "உன்னணைவு பொல்லாது" என்னுமிடத்தை யறிந்தறிந்தும் கிட்டுகிறாயன்றோ? வென்றுமாம். கச.

அரு.—பதினாலாம்பாட்டு, (ஆழ அநுபவிக்க) - பிள்ளைத் தனத்தைக் கண்டுபடாமல் வஞ்சித்தாளென்னுதல். *சாஸ்த்ரவஶ்யமான உன்னைப்பார்த்தால், அறிவுகெட்டு ஈஶ்வரனையழித்தாளவள், நீ சாஸ்த்ரவஶ்யமாயிருக்கச் செய்தேயும் விஷயங்களிலே யாத்மாவைமூட்டி நசிப்பிக்கையாலே உனக்கு ஸமளன்றென்றபடி. அன்றியே - "தேம்பூண்" - ஈஶ்வரனுக்கு அவத்யம்

§ பலிப்பிக்க என்றாவது அநர்த்தபதம் ப்ரதமாந்தமாயாவது பாடமிருக்கலாம்.

* இங்கு மற்றொரு பக்ஷத்துக்கும் உபபாதகமான பங்க்தி இருக்கவேண்டும்.

வரும்படி. "சுவைத்து" - அவனையணைந்தென்று ஈஸ்வரபரமாகவுமாம். அப்போது, தீவினையாமென்றறிந்தறிந்து - பொல்லாதென்றறிந்திருக்கச்செய்தேயும், பாம்பின்வாயிலே கைநீட்டுமாபோலே, நாமவனைக்கிட்டுகையவத்யமென்றறிந்திருக்கச்செய்தேயும் கிட்டுகிற உனக்குப் பூதனைஸமளோ? என்றபடி. [நெஞ்சேபோய் என்றுதொடங்கி. நீட்டல்பார்த்தி, அவளுக்கு நீயார்] என்றந்வயம். கச.

பார்த்தோ ரெதிரிதா நெஞ்சே, படுதுயரம்,
பேர்த்தோதப் பீடழிவாம் பேச்சில்லை,—ஆர்த்தோதம்
தம்மேனித் தாள்தடவத் தாங்கிடந்து, தம்முடைய
செம்மேனிக் கண்வளர்வார் சீர். கரு.

அந்.—ஓதம், ஆர்த்து, தம், மேனி, தாள், (ரு) தடவ, தாம், கிடந்து, தம்முடைய, செம், (க0) மேனி, கண்வளர்வார், சீர், படு, துயரம், (கரு) பேர்த்து, ஓத, பீடு, அழிவாம்பேச்சு, இல்லை. (உ0) நெஞ்சே, எதிரிதா, பார்த்து, ஓர். (உச)

அர்.—ஸமுத்ரமானது, கோஷித்துக்கொண்டு, தம்முடைய, திருமேனியையும், திருவடிகளையும், (ரு) ஸ்ப்ருசிக்கும்படி, தாம், சயநித்துத், தம்முடைய, சிவந்த, (க0) நிறத்தையுடைய, திருக்கண்களைமூடிக்கொண்டு நித்ரைசெய்கிறவருடைய, கல்யாணகுணங்களை, அநுபவிக்கத்தக்க, துஃகங்களை, (கரு) விட்டு, அநுஸந்திக்க, (அக்குணங்களுக்குப்) பெருமை, நசிக்குமென்கிறவார்த்தை, இல்லை. (உ0) ஓமநஸ்ஸே! (இதை) முன்னம், விசாரித்து, அநுஸந்தி. (உச) கரு.

வ்யா.—அவ.—பதினைந்தாம் பாட்டில், (பார்த்தோர்) உன்னுடைய பூர்வ வ்ருத்தத்தை நினைத்தா லகலவேணும், அவனுடைய பூர்வ வ்ருத்தத்தை ஸ்மரித்தால் கிட்டலாமென்கிறது.

(பார்த்தித்யாதி) அணுகியெதிரிதாப்பார்த்து ஓர் - முன்னிட்டுப்பார்த்து விசாரி. (ஆர்த்தோதமித்யாதி) கடலானது ஆர்த்துக்கொண்டு தம்முடைய சிவந்த திருவடிகளை வருட அவஸரப்ரதீக்ஷையக்கண்வளருகிறவருடையகுணங்களை, (படுதுயரமித்யாதி) தான் படுகிற துயரத்தைப் பொகட்டு அக்குணங்களை ஓத, அவனுடைய பெருமைக்கு அழிவென்னும் பேச்சில்லை. இத்தை முன்னிட்டறிந்து விசாரி. கரு.

அரு.—பதினைந்தாம்பாட்டு. [ஓதமார்த்துத்தம்மேனியையும் தம்முடையசெம்மேனித்தாளையும் தடவத்தாங்கிடந்துகண்வளருகிறவருடைய சீரை - படுதுயரம்பேர்த்தோதப் பீடழிவாம்பேச்சில்லை, நெஞ்சே எதிரிதாப்பார்த்தோர்] என்றந்வயம். கரு

சீரால் பிறந்து சிறப்பால் வளராது,
பேர்வாம ளுகாக்கால் பேராளா,—மார்பாரப்
புல்கி நீ யுண்டுமிழந்த பூமி நீரேற்பரிதே,
சொல்லுநீ யாமறியச் சூழ்ந்து. கசு.

அந்.—சீரால், பிறந்து, சிறப்பால், வளராது, பேர், (ரு) வாமனுகாக்கால், நீ, மார்பு, ஆர, புல்கி, (க0) உண்டு, உமிழ்ந்த, பூமி, நீர், ஏற்பு, (கரு) அரிதே, பேராளா, நீ, சூழ்ந்து, யாம், (உ0) அறிய, சொல்லு. (உஉ)

அர்.—செவ்வையாய்ப், பிறந்து, செவ்வையாய், வளராதே, பேரும், (ரு) வாமன (குள்ள) னென்பதையுடையையாகாவிடில், (ராமக்ருஷ்ணுதிகளைப்போல்பிறந்துவளர்ந்து அவ்விததிருநாமத்தையும் தரித்தியாகில்), நீ, மார்பு, நிறையும்படி, (வராஹாவதாரத்தில்) அணைந்து, (க0) (ப்ரளயகாலத்தில்) விழுங்கி, (ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தின, பூமி, (இரந்து) தாநஜலத்தை, ஏற்று, (ப்பெறுகைக்குக்), (கரு) கிடையாதோ? ஜகத்ரக்ஷணத்தில் வ்யாமோஹத்தையுடையவனே! நீ, ஆராய்ந்து, நாங்கள், (உ0) அறியும்படி, சொல்லாய். (உஉ) கசு.

வ்யா.—அவ.—பதினுரும்பாட்டில், (சீரால்பிறந்து) அவஸரப்ரதீக்ஷனுயிருக்கிறவளவேயோ? இத்தைப் பெறுகைக்கர்த்தியாயன்றே நிற்கிறதென்கிறுர்.

(சீரால்பிறந்து) (க)"మహాతాతపసారామ మహాతాచాపికర్మణా-மஹாதாதபஸாராம மஹாதாசாபிகர்மணு" சக்ரவர்த்தி தான் தேடினவர்த்தமும் பண்ணின தபஸ்ஸுமழிய மாறிப் பெற்ருற்போலேயாதல்,ஸ்ரீவஸுதேவர் †அநந்தவ்ரத மநுஷ்ட்டித்துப்பெற்ருற்போலேயாதல் பிறந்தாலாகாதோ? (சிறப்பால் வளராது) ஸ்ரீஸுமித்ரையாரும் வஸிஷ்ட்டாதிகளும் பேணி வளர்க்க வளர்ந்தாற்போலேயாதல், அநுகூலர்தேடின வெண்ணெயும் ப்ரதிகூலருடைய உயிரும் மாள வளர்ந்தாற்போலேயாதல் வளர்ந்தாலாகாதோ? (பேர்வாமனுகாக்கால்)நாட்டில் வாமநர்களெல்லாம் வளர்ந்தருளினவோபர்தியாக வாமநனுகவேணுமோ? ஶ்ரிய:பதியென்ருெரு பேரானுலாகாதோ? ஒருருஷிபத்நிபக்கலிலேபிறந்து பேணுவாரின்றிக்கே வளர்ந்து பேரும் வாமநனுகாவிட்டால்,உன்கையிலே பருத்திபட்டபன்னிரண்டும்பட்டு அணைவது உண்பது உமிழ்வதான இந்த பூமி நீரேற்பரிதாய்ப்

(க) ஸ்ரீராமா - ஆரண்ய. சுசு - கரு.

பட்டாயோ? (பேராளா) கார்யஞ் சொல்லுவதுக்கு முன்னே "எத்திறம்" என்கிறார். உன்னுடைமையிலுனக்குக் கிடக்கிற ‡ஓரத்துக்கெல்லை காண்கிறிலோமீ! (மார்பித்யாதி) நீ இப்படி எளியையாய வதரிக்கைக்கடி சூழ்ந்துசொல்லு-புத்திபண்ணி யருளிச்செய்யவேணும். †ஸர்வேஶ்வரன்தானும் தன்னுடைய அவதாரத்தைப்பேசப் புக்கால், (க) "జన్మకర్మ చమేదివ్యమ్-ஜந்மகர்மசமேதிவ்யம்" என்னுமத்தனை. வேதமும் பேசப்புக்கால் (உ) "తస్యధీరాః పరిజానన్తి యోనిమ్-தஸ்யதீராః பரிஜாநந்தியோநிம்." கசு.

அரு.—பதினாறாம்பாட்டு - (அநந்தவ்ரதம்) - சாடு. "சூழ்ந்து" - விசாரித்து. ஸர்வஜ்ஞனைச்சூழ்ந்துசொல்லு என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரன்) இத்யாதி. கசு.

சூழ்ந்தடியார் வேண்டினக்கால் தோன்றாது விட்டாலும்,
வாழ்ந்திடுவர் பின்னும்தம் வாய்திறவார்,—சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள் போலரக்கன் வன்தலைகள்தாமிடியத்,
தாள்வரைவில் லேந்தினார்தாம். கஎ.

அந்.—எங்கும், சூழ்ந்து, அரக்கன், வாள், வரைகள்போல், (ரு) வன், தலைகள்தாம், இடிய, தாள், வரை, (கo) வில், ஏந்தினார்தாம், சூழ்ந்து, அடியார், வேண்டினக்கால், (கரு) தோன்றாதுவிட்டாலும், வாழ்ந்திடுவர், பின்னும், தம்வாய்திறவார். (கக)

அா.—நாற்புறங்களிலும், சுற்றிக்கொண்டு, ராவணனுடைய, ஒளியையுடைய, மலைகள்போன்ற, (ரு) திண்ணிய, தலைகள், அழியும்படி, காலுரத்தையுடைத்தாய், மலைபோன்ற, (கo) வில்லைத், தரித்த (ஸமர்த்தரான) வர்தாமே, வளைத்துக்கொண்டு, (எனக்குநீங்கள்) தாஸராகவேணும்என்று, அபேக்ஷிக்கும்போது, (கரு) (சேதநர்) இசையாவிடினும், (தம்மபேக்ஷை ஸித்தித்ததில்லையென்று வெறுக்காமல், அவர்களபேக்ஷிதம் ஸித்தித்ததென்று) உகந்திருப்பர். அதற்குமேல், (இதைப்பிராட்டியோடும்) தம்முடையவாயைத்திறந்து சொல்லார். (கக). கஎ.

வ்யா.—அவ.—பதினேழாம்பாட்டில், (சூழ்ந்து) அவன்கிட்டப்புக்கால் இவர்கள்பண்ணும் வைமுக்ய மவன் நெஞ்சிற்படாதென்கிறது.

---

‡ ஓரம் - பக்ஷபாதம். (உ) கீதை. ச - கூ.
(ரூ) புருஷஸூ.

(சூழ்ந்தடியாரித்யாதி) (க) "எதிர்சூழல்புக்கு" என்னும்படியே இவர்களைச் சூழ்ந்து "அடியார்வேணும்" என்றபேக்ஷித்தால் இவர்கள் தோன்றாவிட்டாலும் "இவர்களுக் குறுப்பாகப் பெற்றோமிறே" என்று வாழ்ந்திருப்பதுஞ் செய்வர். "வைமுக்யம் பண்ணினார்" என்று தனியிருப்பிலே பிராட்டிக்கு வாய்திறவார். ப்ரஜைகள் குற்றஞ்செய்யத்,தாய்க்கிறே சொல்லுவது; அவளுக்குச் சொல்லார். (சூழ்ந்தெங்குமித்யாதி) "பார்த்தவிடமெல்லாம் ராமசரம்" என்னும்படி சூழ்ந்து ஒளியையுடைய மலைபோலேயிருந்துள்ள ராக்ஷஸனுடைய தலைகளிடியும்படி திண்ணியவில்லை யேந்திய ஸர்வரக்ஷகன் சக்தராயிருக்கச்செய்தே அசக்தரைப்போலே யிருப்பர். "இவர்களுபேக்ஷித்தார்" என்று பிராட்டிக்கும் வாய்திறவார்.

† அடியாரானவர்களுபாஸித்தாலும் தோன்றிற்றிலராகில் சேஷபூதன் சேஷிசெய்தபடிகண்டிருக்குமத்தனையன்றோ? வென்றுவெறார்கள். (பின்னும் தம்வாய்திறவார்) பகவத்குணஹாநி சொல்லுமவர்களுக்கும் வாய்திறவார். (சூழ்ந்தெங்குமித்யாதி) † தோன்றுமவர் நமக்குத் தோன்றிற்றிலரென்று வெறார்கள். கஎ.

அரு.—பதினேழாம்பாட்டு, தோன்றாவிடுகை - ஆபிமுக்யம்பண்ணவிடுகை. "தாள்வரைவில் - வளைந்து மலைபோலேயிருக்கிறவில். ஈஶ்வரன்வெறானென்றதுகீழ்;" "தோன்றாதுவிட்டாலும்" - ஈஶ்வரன் முகங்காட்டாவிட்டாலும், அடியார்வெறாரென்று அடியார்பரமாக்கி யருளிச்செய்கிறார் (அடியாரானவர்கள்) இத்யாதி. "அடியார்சூழ்ந்து வேண்டினக்கால்" - புத்திபண்ணி உபாஸித்தால். (தோன்றுமவர்) - ராமாவதாரமாய்த்தோன்றுமவர். கஎ.

தாம்பா லாப்புண்டாலு மத்தழும்பு தானிளகப்,
பாம்பா லாப்புண்டு பாடுற்றாலும்,—சோம்பாதிப்
பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா, உன்
தொல்லுருவை யாரறிவார் சொல்லு. கஅ.

அந்.—தாம்பால், ஆப்புஉண்டாலும், அத்தழும்புதான், இளக, பாம்பால், (ரு) ஆப்புண்டு, பாடு, உற்றாலும், சோம்பாது, இ, (க௦) பல், உருவை யெல்லாம், படர்வித்த, வித்தா, உன், (கரு) தொல், உருவை, யார், அறிவார், சொல்லு. (உ௦)

அர்.—(யசோதைப்பிராட்டியினால்) கயிற்றினால், கட்டுண்டாலும், அக்கட்டினாலுண்டான அடையாளமும், இல்லாதபடி, காளியனால், (ரு) கட்டுண்டு, வருத்தத்தை, அடைந்தாலும், (இந்த பாதைகளைநினைத்துப்) பின்

(க) திருவாய் - உ - எ - சு.

வாங்காமல், இந்த, (க0) அநேகவிதமான, (தேவமநுஷ்யாதி) ஸ்வரூபங்களை யெல்லாம், விஸ்த்ருதமாக்கின (ஸ்ருஷ்டித்த), காரணபூதனே! உன்னுடைய, (கரு) அநாதியான, (அவிக்ருத) ஸ்வபாவத்தை, யார்தான், அறியத்தக்கவர்? சொல்லு. (உ0) கஅ.

வ்யா.—அவ.—பதினெட்டாம்பாட்டில், (தாம்பால்) உகந்து முகவாதும் ஸம்ஸாரிகள்பண்ணும் பரிபவத்தைக்கண்டு தன் ரக்ஷணத்திலே நெகிழுகில்லானென்கிறது.

(தாம்பித்யாதி) "என்மகனிறே, நானிவனுக்கு நல்லள்" என்று யசோதைப்பிராட்டிதாம்பாலேகட்டினாலும். அவர்கள்கட்டினகட்டு அபிமதவிஷயத்தில் ஸம்ஶ்லேஷசிஹ்நம்போலேயிறே. அத்தழும்பு ஏதுமில்லாதபடி காளியனாலே படாதது பட்டாலும். (சோம்பாதித்யாதி) "இப்படி ஸம்ஸாரிகள் வைமுக்யம்பண்ணினார்கள்" என்று சோம்பாதே "நங்கார்யஞ்செய்கைநமக்கு எளிவரவோ?" என்று, காளியனிற்காட்டில் தோலாதாராயிருக்கிற ப்ரஜைகளையெல்லாம் விஸ்த்ருதமாக்கினகாரணத்வப்ரயுக்தமான * குடற்றுடக்கையுடையவனே! பழையதான உன்னுடைய † வடிவைவேறுசிலரறியப்போமோ? நீயேசொல்லு. பரிபவம்பண்ணினபோதோடு பண்ணாதபோதோடு வாசியற ஏகரூபமான உன்னுடைய ஸ்வரூபத்தை வேறுசிலரறியப்போமோ? நீயேசொல்லு. கஅ.

அரு.—பதினெட்டாம்பாட்டு. "தானிளக" - தழும்புதானில்லாதபடி. (வடிவை) - ஸ்வரூபத்தை. கஅ.

சொல்லில் குறையில்லை சூதறியா நெஞ்சமே,
எல்லிப் பகலென்னா தெப்போதும்,—தொல்லைக்கண்
மாத்தானைக் கெல்லா மோரைவரையே மாறாகக்,
காத்தானைக் காண்டுநீ காண். ககூ

அந்.—சூது, அறியா, நெஞ்சமே, சொல்லில், குறையில்லை. (ரு) தொல்லை, கண், மா, தானைக்குஎல்லாம், ஓர், (க0) ஐவரையே, மாறாக, எல்லி, பகல், என்னாது, (கரு) எப்போதும், காத்தானை, காண்டும், நீ, காண். (உ0)

அர்.—உபாயத்தை, அறியாத, ஓமநஸ்ஸே! சொல்லப்புகில், (அவன் குணங்களுக்கு) பரிச்சேதமில்லை. (ரு) பழையதான, பூமியிலுள்ள, பெரிய, ஸேனைகளுக்கெல்லாம், ஸஹாயமின்றியிருக்கிற, (க0) பாண்டவர்களைந்து பேரையுமே, எதிரிகளாக, (ச்செய்து), இரவு, பகல், என்றுநினையாமல், (கரு)

* குடல்துடக்கு - சரீரஸம்பந்தம்.

ஸர்வகாலத்திலும், (சத்ருநிரஸநோபாயத்தைச்சிந்தித்தும், சண்டை செய்தும் அவர்களை) ரக்ஷித்தவனைக், காண்போம், நீ, பார். (உ0) கசூ.

வ்யா.—அவ.—பத்தொன்பதாம்பாட்டில், (சொல்லில்) கீழ்பருவம்நிரம்புவதற்கு முன்பு செய்தபடிசொல்லிற்று; வளர்ந்தபின்பு செய்தபடிசொல்லுகிறது.

(சொல்லில் குறையில்லை) பகவத்விஷயத்தைப் பேசப்புக்கால் † பேச்சில் குறையில்லை. (சூதறியா நெஞ்சமே) "பகவத் விஷயம் நன்று" என்றும், "விஷயப்ராவண்யமநர்த்தம்" என்றும், விடவும் பற்றவுமறியாத நெஞ்சே! (தொல்லையித்யாதி) பழையதான பூமிநெளியும்படியான மஹாஸேனைக்கெல்லாம், ‡தானே காத்தானென்னில் தங்களுக்குத்தோல்வி என்று அவர்களிசையாரென்று பாண்டவர்களைந்துபேரும் எதிராக (காத்தானைக்காண்டுநீகாண்) காண்போமென்று காணப்புக்கால்†. அவர்கள் பகல் யுத்தம்பண்ணி இரவுறங்கினாலும் இரவும் பகலு முறங்காதே அர்ஜுநன் தோள்பிடிப்பது வெல்லும்படி மநோரதிப்பதுஞ் செய்துகொடு நின்று காத்தவனை. (காண்டுநீகாண்) காண்போமென்று காணப்புக்கா லுள்ளபடியே காணலாங்காண். கசூ.

அரு.—பத்தொன்பதாம்பாட்டு. (பேச்சில்குறையில்லை)-பேசிமுடியாது; எத்தனைபேசினாலும் விஷயத்தைப் பரிச்சேதிக்கப்போகாதென்றபடி. "சூது" விரகு. "கண்" என்று - இடமாய், பூமி. "தானை"- ஸேநை. (காண்போம் என்றுகாணப்புக்கால்.) காணலாங்காணென்று பூரிப்பது. [சூதறியாநெஞ்சமே சொல்லில் குறையில்லை - தொல்லைதொடங்கி. மாருக எல்லிப்பகலென்னாதெப்போதும் - காத்தானைக்காண்டும். நீகாண்] என்றந்வயம். கசூ.

காணப்புகி லறிவு கைக்கொண்ட நன்னெஞ்சம்,
நாணப்படு மன்றே நாம்பேசில்,—மாணி
யுருவாகிக் கொண்டுலகம் நீரேற்ற சீரான்,
திருவாகம் தீண்டிற்றுச் சென்று. உ0.

அந்.—மாணிஉருவாகிக்கொண்டு, உலகம், நீர் ஏற்ற, சீரான், திருஆகம், (கு) சென்று, தீண்டிற்று, நாம், காணப்புகில், பேசில், (க0) அறிவு, கைக்கொண்ட, நல், நெஞ்சம், நாணப்படுமன்றே. (கரு)

அர்.—ப்ரஹ்மசாரிவேஷத்தையுடையனாய்க்கொண்டு, லோகத்தை, தாரைஜலம்பிடித்து வாங்கிக்கொண்ட, அழகையுடையவனுடைய, திருமேனியைக், (கு) கிட்டி, (லோகம்) ஸ்ப்ருசித்ததத்தை, நாம், விசாரிக்கப்புகிலும்,

‡ இது "ஓர்" என்பதின் தாத்பர்யம். இவ்வாக்யம் ஸங்கிக்தம்.

சொல்லப்புகிலும், (க0) விவேகத்தை, உடைய, விலக்ஷணமான, மநஸ்ஸு, வெட்கப்படவேண்டாவோ? (கரு) (அவ்வளவு பெரியனைத்தொடுகைக்கும் நமக்கு யோக்யதையில்லை). உ0.

வ்யா.—அவ.—இருபதாம்பாட்டில், (காணப்புகில்) நான் "[கா ண்" என்று சொன்னால் தன்னை யறிந்து கிட்டவேண்டாவோ? வென்கிறார்.

(காணப்புகிலித்யாதி)நாமறியாதே காணப்புகுதல்,அர்த்ததத்வ மிருந்தபடியே பேசப்புகுதல் செய்தால் அறிவுக்கு வாய்த்தலையான நெஞ்சுக்கு நாண வேண்டாவோ? (மாணியித்யாதி) †இத்தைத்தீண் டுகைக்கு அவன் ப்ரவர்த்தித்தபடி. (திருவாகமித்யாதி) தன்னையறிந் தால் விலக்ஷணமான வடிவைச் சென்று தீண்டக்கடவதோ? உ0.

அநு.—இருபதாம்பாட்டு. "தீண்டிற்று" "நாணப்படுமென்றே"? - நாண வேண்டாவோ? என்று அவதாரிகைக்குத் தாத்பர்யம். (இத்தைத்தீண்டுகை)- இது தீண்டுகைக்கு. ஸர்வவிஷயமாக அவன்தீண்டுகையாலே இதுவும் லஜ்ஜி யாமல் தீண்டிற்றென்றபடி. இத்தைத்தீண்டுகைக்காக. அவன்செய்த வ்யா பாரமாகையாலே இதுவுங்கூசாமல் தீண்டிற்றென்னவுமாம். [காணப்புகில்- நாம்பேசில் - அறிவுகைக்கொண்ட நன்னெஞ்சம் - மாணியுருவாகி - நீரேற்று உலகங்கொண்ட - சீரான். திருவாகம்சென்றுதீண்டிற்று - நாணப்படும்] என் றந்வயம். உ0.

சென்றங்கு வெந்நரகில் சேராமல் காப்பதற்கு,
இன்றிங் கென்னெஞ்சா லிடுக்குண்ட,—அன்றங்குப்
பாருருவும் பார்வளைத்த நீருருவும் கண்புதையக்,
காருருவன் தான் நிமிர்த்தகால். உக.

அந்.—அன்று, அங்கு, பார்உருவும், பார், வளைத்த, (ரு) நீர்உருவும், கண் புதைய, கார், உருவன், தான் நிமிர்த்த, (க0) கால், அங்கு, சென்று, வெம், நரகில், (கரு) சேராமல், காப்பதற்கு, இன்று, இங்கு, என்நெஞ்சால், (உ0) இடுக்கு உண்ட. (உக)

அர்.—மஹாபலியஜ்ஞம்செய்த அக்காலத்தில், அந்த தானம்பண்ணின விடத்தில், பூமியாகிறவஸ்துவும், பூமியைச், சுற்றியிருக்கிற, (ரு) ஜலமாகிற வஸ்துவும், மறையும்படி, மேகம்போன்ற, வடிவையுடையவன், தான்வளர்த் தின, (க0) திருவடிகள், (நான்) அந்தலோகாந்தரம், போய், க்ரூரமான, நரகத்தில், (கரு) அடையாமற்படி, ரக்ஷிக்கைக்காக, இப்போது, இந்தஸம் ஸாரத்தில், என்னுடைய மநஸ்ஸினால், (உ0) நெருக்கப்பட்டது. (உச) உச.

வ்யா.—அவ.—இருபத்தோராம் பாட்டில், (சென்றங்கு)† ஓரிடத்திற் போகாதபடி நிஶ்ஶேஷமாக க்ரஹிக்கப்பார்த்தால் அவகாசம் பெற்றன்றோ க்ரஹிப்பதென்கிறது.

(சென்றித்யாதி) வெந்நரகென்று-அகலுகைக்குப்பேர், ஸம்ஸாரத்துக்கும் பேர். அறிவார்க்கு நரகமாவது-ஸம்ஸாரமிறே. (இன்றித்யாதி) நினைவின்றிக்கே என்னுடைய நெஞ்சிலே நெருக்குண்டது. (அன்றித்யாதி) இன்றிங்கென்னெஞ்சாலிடுக்குண்டது - பூமியும் பூமியடையச் சூழ்ந்த ஜலங்களும் மறையும்படி பரம்பினமேகம்போலே ஶ்யாமமான வடிவையுடையவனுடைய திருவடிகளென்னெஞ்சிலே இடுக்குண்டது. உக

அந.—இருபத்தோராம்பாட்டு. "இடுக்குண்ட" என்றத்தைப்பற்ற அவதாரிகையருளிச்செய்கிறார் (ஓரிடத்தில்) இத்யாதி. என்னெஞ்சிலே அகப்படுகையாலே புறம்பேபோகத்திருவடிகளுக்கவகாசமில்லாமையாலே ஸம்ஸாரிகள் ஓரிடத்திற்போகாதபடி நிஶ்ஶேஷமாகத் திருவடிகளை உள்ளே க்ரஹிக்கிறோமென்றாலும் இனிப்போகாதென்றபடி. [அன்றங்குப்பாருருவும் பார்வளைத்த நீருருவும் கண்புதைய-தான்நிமிர்த்தகாருருவன் கால்அங்கு சென்றுவெம்நரகில் சேராமல்காப்பதற்கு இன்றிங்குஎன்னெஞ்சாலிடுக்குண்ட] என்றந்வயம். உக.

காலே பொதத் திரிந்து கற்றுவரா மினநாள்,
மாலார் குடிபுகுந்தா ரென்மனத்தே,—மேலால்
தருக்குமிடம் பாட்டினொடும் வல்வினையார் தாம், வீற்
றிருக்குமிடம் காணா திளைத்து. உஉ.

அந்.—மாலார், என்மனத்தே, குடிபுகுந்தார், மேலால், தருக்கும், (ரு) இடம்பாட்டினொடும், வல், வினையார், தாம், வீற்றிருக்கும், (சo) இடம், காணாது, இளைத்து, கால், பொத, (சரு) திரிந்து, இனநாள், கற்றுவராம். (கரு)

அர்.—ஸர்வாதிகரானவர், என்னுடையஹ்ருதயத்தை, வாஸஸ்தாநமாகப்ரவேசித்தார். முற்காலத்தில், நலிந்த, (ரு) செல்வத்துடன், அதிக்ரூரமான, பாபமானது, தான், ஸுகமாகவஸிக்கைக்கு, (சo) இடம், அறியாமல், துர்பலமாய், கால், வெடிக்கும்படி, (சரு) திரிந்து, இக்காலத்தில், கூப்பிடாநின்றது. (சரு) உஉ.

வ்யா.—அவ.—இருபத்திரண்டாம்பாட்டில், (காலே) நம்முடையப்ராப்திப்ரதிபந்தகமான கர்மங்கள் கால் †பொதும்படி தடுமாறிக்கூப்பிட்டுத்திரியுமத்தனையிறே இனநாளென்கிறார்.

(மாலாரித்யாதி) (க) "அரவத்தமளியினோடும்" இத்யாதிப் படியே ஸர்வேஸ்வரன் என்மநஸ்ஸிலே புகுந்தான். (மேலாலித்யாதி) பண்டு நம்மை ஹிம்ஸித்துப்போந்தவளவுடைமையோடேகூட வல் வினையார் விஸ்த்ருதமாக இருக்குமிடங்காணுதே இளைத்துக்கால் தேயும்படி தடுமாறிக் கூப்பிட்டுக் கொடுதிரியுமத்தனையிறே இனநாள்.

அந.—இருபத்திரண்டாம்பாட்டு. (பொதும்படி) - வெடிக்கும்படி. முள்ளுத்தைக்கையுமாம். தருக்குகை-நெருக்குகையாய், ஹிம்ஸிக்கை. [என்மனத்தேமாலார்குடிபுகுந்தார் - வல்வினையார்தாம்மேலால் தருக்குமிடம்பாட்டினோடும்வீற்றிருக்குமிடங்காணுதிளைத்துகால்பொதத்திரிந்து இனநாள்சற்றுவராம்] என்றந்வயம். உஉ.

இளைப்பா யிளையாப்பாய் நெஞ்சமே சொன்னேன்,
இளைக்க நமன்தமர்கள்பற்றி—இளைப்பெய்த,
நாய்தந்து மோதாமல் நல்குவான் நல்காப்பான்,
தாய்தந்தை யெவ்வுயிர்க்கும் தான். உங.

அந்.—இளைக்க, நமன்தமர்கள், பற்றி, இளைப்புஎய்த, நாய், (ரு) தந்து, மோதாமல், நல்குவான், நல்காப்பான், எவ்வுயிர்க்கும், (கo) தான், தாய், தந்தை, நெஞ்சமே, இளைப்பாய், (கரு) இளையாப்பாய், சொன்னேன். (கஎ)

அர்.—(பிடிக்கும்போதே) துர்ப்பலராகும்படியாக, யமபடர்கள், பிடித்து, (இன்னும்) துர்ப்பலராம்படி, (ப்ராணிகள்மேல்) நாய்களை, (ரு) ஏவி, உபத்ரவியாமல், ரக்ஷிக்கிறுனாகிலும்சரி, ரக்ஷியாதொழிவானாகிலும்சரி. ஸகல ப்ராணிகளுக்கும், (கo) தானே, தாயும், தந்தையுமாவான். ஓமநஸ்ஸே! (அவனைக்கிட்டாமல்) தளரில்தளரு; (கரு) (கிட்டி) தளராதொழிகையாவது செய். (இப்பரமார்த்தத்தை உனக்கு) உபதேசித்தேன். உங.

வ்யா.—அவ.—இருபத்துமூன்றும் பாட்டில், (இளைப்பாயித்யாதி) பற்றுவாய், பற்றுதொழிவாய். அவனைப்பற்றிலும் பற்று, விஷயத்தைப்பற்றிலும் பற்று. (நெஞ்சமே சொன்னேன்) "ஈஸ்வரனே ஸர்வவிதபந்து" என்னுமிட மொருத்தருக்குஞ் சொல்லுமதன்று. அத்தையுனக்குச் சொன்னேன். (இளைக்கவித்யாதி) பற்றும்போதே இளைக்கும்படிக் கீடாகப்பற்றி. (இளைப்பித்யாதி) இளைக்கும்படிக்கீடாக நாய்களைவிட்டு மோதாதபடி. (நல்குவான் நல்காப்பான்) ரக்ஷிக்கிலும் ரக்ஷிக்கிறுன், ரக்ஷியாதொழியிலு மொழிகிறுன். (தாய்

(க) பெரியாழ்வார் திரு - ரு - உ - ௰.

தந்தைஎவ்வுயிர்க்கும்தான்) ஸர்வரக்ஷகனவன் †"ரக்ஷகன் ரக்ஷணத்திலே நெகிழுகின்ருன்" என்று அரக்ஷகரைப் பற்றவொண்ணுதே. (௧) "களைவாய்துன்பம் களையாதொழிவாய்" என்னும்படியே.

அரு.—இருபத்துமூன்ரும்பாட்டு. அவனைப்பற்றி இளையாமையும், விஷயங்களைப்பற்றி இளைக்கையும். நல்காவிட்டால் தாய்தந்தையானபடி எப்படியென்ன அருளிச்செய்கிருர் (ரக்ஷகன்) இத்யாதி. ௨௩.

தானேதனித் தோன்றல் தன்னளப் பொன்றில்லாதான்,
தானே பிறர்கட்கும் தற்ருேன்றல்,—தானே
இளைக்கிற்பார் கீழ்மேலாம் மீண்டமைப்பானுனல்,
அளக்கிற்பார் பாரின்மேலார். ௨௪.

அந்.—தனி, தோன்றல், தானே, தன், அளப்பு, (௫) ஒன்று, இல்லாதான், தானே, பிறர்கட்கும், தற்ருேன்றல், (௧0) தானே, தானே, இளைக்கில், பார், கீழ்மேலாம், (௧௫) மீண்டு, அமைப்பானுனல், அளக்கிற்பார், பாரின் மேல், ஆர்.|(௨0)

அர்.—அநந்யாதீநமான, அவதாரத்தை, உடையன், தானேயாகிருன். தனக்கு, உபமாநமாகிய, (௫) (வேறு) ஒருவஸ்து, இல்லாதவனும், தானேயாகிருன். அயலாருக்கும், ப்ரஸித்தமாக அந்தர்யாமியாமவனும், (௧0) தானேயாகிருன், (இப்படி ஸகலகாரணபூதனுன) தானே, (ரக்ஷணத்தில்) பின்வாங்கினுல், பூமி, கீழது மேலதாம் (வ்யவஸ்த்தையற்றிருக்கும்). (௧௫) மறுபடியும், ரக்ஷிப்பானுகில், (அதை) அளவிட்டுச்சொல்லவல்லார், பூலோகத்தில், யாருண்டு? (ஒருவராலுமவனைப்பரிச்சேதிக்கவொண்ணுது). ௨௪.

வ்யா.—அவ.—இருபத்துநாலாம்பாட்டில், (தானே) † அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் அவனே ரக்ஷகனென்கிறது.

(தானே தனித்தோன்றல்) ஒரு † ஹேத்வந்தரத்தாலே தோற்றுமவனல்லன். (தன்னளப்பொன்றில்லாதான்) உபமாநரஹிதன். (தானே பிறர்கட்கும் தற்ருேன்றல்) அல்லாதார்க்கும் ஸத்தை அவன். (தானேயித்யாதி) அவன் ரக்ஷணத்திலே நெகிழ நிற்கில் பூமி அதரோத்தரையாம். (மீண்டமைப்பானுனல்) அவன்ருனே திரியட்டும் ரக்ஷிப்பானுனல், (அளக்கிற்பார்பாரின்மேலார்) பூமியிலவனைப் பரிச்சேதிக்க வல்லாருண்டோ? ௨௪.

அரு.—இருபத்துநாலாம்பாட்டு. "இளைக்கில்" என்றது - வ்யதிரேகம். மீண்டமைக்கை - அந்வயம். ஹேத்வந்தரம் - கர்மம். அதடியாகப்பிறக்கு

(௧) திருவாய் - ௫ - எ - அ.

மவன்றென்றபடி. "தற்சேரான்றல்" - தத்சப்தம் (௧) "ம ந்தர்யாம்யம்ருதஃ - அந்தர்யாம்யம்ருதஃ" என்றப்ரஸித்தியைப்பற்ற. உச.

ஆரானு மாதானும்செய்ய, அகலிடத்தை,
ஆராய்ந் தது திருத்தலாவதே,—சீரார்
மனத்தலைவன் துன்பத்தை மாற்றினேன், வானோர்
இனத்தலைவன் கண்ணனால் யான். உரு.

அந்.—ஆரானும், ஆதானும், செய்ய, அகல், இடத்தை, (ரு) ஆராய்ந்து, அது, திருத்தலாவதே, யான், வானோர், இனம், (௧0) தலைவன், கண்ணனால், சீரார், மனத்தலை, (௧ரு) வன், துன்பத்தை, மாற்றினேன். (௧அ)

அர்.—யாராகிலும், (ஸாம்ஸாரிகப்ரவ்ருத்திகளில்) எதாகிலும், செய்யட்டும். விசாலமான, பூமியை (த்திருத்தும் விரகுகளை), விமர்சித்து, அவர்கள் ப்ரவ்ருத்திகளை, (நம்மால்) சீர்படுத்தப்போமோ? (அயோக்யனான) நான், நித்யஸூரிகளுடைய,(௧0) ஸமூஹத்துக்கு, நிர்வாஹகனாய், (இருந்து), (நீர்மையாலேவந்தவதரித்த) க்ருஷ்ணனாலே, (அவனுடையநீர்மையைக்கண்டு), (பகவத்விஷயத்திலாபிமுக்யமாகிற) நன்மையையுடைய, மநஸ்ஸிலுண்டான, (௧ரு) கொடிய, (விஶ்லேஷ) துஃகத்தைப், போக்கினேன். (௧அ) உரு.

வ்யா.—அவ.—இருபத்தைந்தாம் பாட்டில், (ஆரானும்) "பூமியிலுள்ளாரை யெல்லாம் நம்மாலே திருத்தப்போமோ? நாம் முன்னம் பகவத்விஷயத்தில் அவகாஹிக்கப்பெற்றோமிறே" என்று ஹ்ருஷ்டராகிறார். வழிபறிக்குமிடத்தே தப்பிப்போனவன் கிழிச்சிரையயவிழ்த்துப் பார்த்து "இது தப்பப்பெற்றோமே" என்று உகப்பானைப்போலே.

(ஆரானுமித்யாதி) எல்லாருமேதேனுஞ்செய்க; பூமிப்பரப்பையெல்லாம் நம்மாலே யாராய்ந்து திருத்தப்போமோ? (வானோரித்யாதி) நித்யஸூரிகளுக்குத் தலைவனாய்வைத்துத் தன்னை இதர ஸஜாதீயனாக்கி ஸுலபனான க்ருஷ்ணனாலே பகவத்ஸம்பந்தமாகிற ஐஶ்வர்யத்தை யுடைத்தான மநஸ்ஸின் தலையிலே கிடக்கிற ஸம்ஸார துஃகத்தை மாற்றினேன்; எல்லாரையுந் தம்மாலே திருத்தப்போமோ? வென்கிறார். உரு.

அரு. — இருபத்தைந்தாம்பாட்டு. [வானோரினத்தலைவன் கண்ணனால் யான் சீரார்மனத்தலை வன் துன்பத்தைமாற்றினேன் - ஆரானுமாதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்ததுதிருத்தலாவதே] என்றந்வயம். உரு.

(௧) ப்ருஹதாரண்யம். ரு - எ.

யானு மென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம், வல்வினையைக்
கானும் மலையும் புகக்கடிவான்,—தானோர்
இருளன்ன மாமேனி யெம் மிறையார்தந்த,
அருளென்னும் தண்டா லடித்து. உசு.

அந்.—ஓர் இருள்தான், அன்ன, மா, மேனி, எம், (ரு) இறையார், தந்த, அருள்என்னும், தண்டால், அடித்து, (௧௦) வல், வினையை, கானும், மலையும், புக, (௧ரு) கடிவான், யானும், என், நெஞ்சும், இசைந்தொழிந்தோம். (உ௦)

அர்.—இருள்தானே, ஒருவடிவுகொண்டாற்போலிருக்கிற, ஶ்லாக்ய மான, வடிவையுடையரான, நம்முடைய, (ரு) ஸ்வாமியானவர், கொடுத்த, க்ருபையாகிற, தண்டத்தாலே, புடைத்து, (௧௦) க்ரூரமான, (நம்முடைய) பாபத்தைக், காட்டிலும், மலையிலும், ப்ரவேசிக்கும்படி, (௧ரு) ஓட்டுகைக்காக, நானும், என்னுடைய, மநஸ்ஸும், ஸம்மதித்தோம். (உ௦) உசு.

வ்யா.—அவ.—இருபத்தாறும் பாட்டில், (யானும்) "மாற்றினேன்" என்று கர்த்ருத்வந் தோற்றச்சொன்னார், அந்த கர்த்ருத்வமாவது - அவன்மேல்விழ என்னுடைய விலக்காமையென்கிறார்.

(யானுமித்யாதி) இத்தலையில்குறைவற்றது. பொருந்தாததலையும் பொருந்திற்று, பொருந்துமவன் பொருந்தச்சொல்லவேண்டாவிறே. (தானோரிருளித்யாதி) † மற்றொன்றுகாணமல் ஶ்ரமஹரமான வடிவையுடைய வென்ஸ்வாமியுடைய ப்ரஸாதமாகிற தண்டாலேஹிம்ஸித்து. (வல்வினையித்யாதி) அவன்பிரிவாகிற மஹாபாபத்தைக் காட்டிலும் மலையிலும் புகும்படியோட்டும்படிக்கீடாக யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம். உசு.

அரு.—இருபத்தாறும்பாட்டு. (மற்றொன்றுகாணமல்) - வினையைப் போக்குகைக்கு வேறொருஉபாயங்காணமல். அவனருளாலேபோக்கினனென்றபடி. உசு.

அடியால் படிகடந்த முத்தோ, அதன்றேல்
முடியால் விசும்பளந்த முத்தோ,—நெடியாய்
செறிகழல்கள் தாள்நிமிர்த்துச் சென்றுலக மெல்லாம்,
அறிகிலமால் நீயளந்த வன்று. உஎ.

அந்.—நெடியாய், நீ, செறி, கழல்கள், தாள், (ரு) நிமிர்த்து, உலகமெல்லாம், சென்று, அளந்த, அன்று, (௧௦) அடியால், படி, கடந்த, முத்தோ, அதன்றேன், (௧ரு) முடியால், விசும்பு, அளந்த, முத்தோ, அறிகிலம் ஆல். (உ௦)

அர்.—ஸர்வாதிகனே! நீ, நெருங்கச்சாத்தின, தண்டைச்சிலம்புகளு டைய, திருவடிகளை, (௫) வளர்த்தி, லோகத்தையெல்லாம், போய், ஆக்ர மித்த, அக்காலத்தில், (௧௦) திருவடியினால், பூமியை, அளந்த, ஸந்தோஷமோ? அதல்லவாகில், (௧௫) திருவபிஷேகத்தினால், ஆகாசத்தை, ஆக்ரமித்த, ஸந்தோஷமோ? (இப்போதுனக்குண்டானது). (இன்னதென்று) அறிகிறி லோம். இதோராஸ்சர்யமே. (௨௦) உஎ.

வ்யா.—அவ.—இருபத்தேழாம்பாட்டில், (அடியால்) "இசைந் தொழிந்தோம்" என்கிறவித்தாலே தந்தலையில்குறையற்றது. "அரு ளென்னும்தண்டால்" என்கையாலேபெறுவது மவன்ப்ரஸாதத்தா லே யென்னுமிடம்சொல்லிற்று. இனியவர்க்கநுபவத்திலே யிறே யந்வயம், ஆகையாலே அநுபவிக்கிறார்.

(அடியித்யாதி) முத்தென்று - மௌக்த்யமாய், அத்தாலே லக்ஷ ணையாலே அழகாய், அடியாலே பூமியையளந்தவழகோ? திருமுடி யாலே ஆகாசத்தையளந்தவழகோ? என்னவுமாம். "செறிகழல்" என்கையாலே - திருவடிகளிலே முத்துண்டாகையாலும்; (க) "நீண் முடிவெண்முத்தவாசிகைத்தாய்" என்கையாலே, திருமுடியிலேமுத் துண்டாகையாலும். அடியாலே படியையளந்தன முத்துக்களோ? முடியாலே விசும்மையளந்தன முத்துக்களோ? (உ) "சிலம்புஞ்செ றிகழலும்" என்று இதுக்குள்ளிடான முத்துப்ரகாசமாதல், சாத் தினமுத்தாதல். (அறிகிலமால்) அறிகிறிலோம். இப்போதுனக்கோடு கிற ஹர்ஷம் - திருவடிகளின்கீழே பூமியையிட்டுக்கொண்ட ஹர்ஷ மோ? திருமுடியாலே யாகாசாவகாசத்தையெல்லாம் வ்யாபித்த ஹர்ஷமோ? வென்றுமாம். [நெடியாய்செறிகழல்கள் தாள்நிமிர்த் துச்சென்றுலகமெல்லாம் நீயளந்தவன்று - அடியால் படிகடந்தமுத் தோ-அன்றேல் முடியால்விசும்பளந்த முத்தோ-அறிகிலமால்].உஎ.

அரு.—இருபத்தேழாம்பாட்டு. அடியாலும்முடியாலுமோ என்னுதல். அவற்றிலுண்டான முத்தாலேயோவென்னுதல். முத்தென்றது - அழகாதல், முத்துத்தானுதல், ஹர்ஷமாதல். அறிகிலம். ஆல் - ஆஸ்சர்யம். உஎ

அன்றே நங் கண் காணு மாழியான் காருருவம்,
இன்றேநாம் காணு திருப்பதுவும்,—என்றேனும்
கட்கண்ணால் காணுத வவ்வுருவை, நெஞ்சென்னும்
உட்கண்ணேல் காணு முணர்ந்து. உ௮.

(க) திருவிருத்தம். ௫௦. (உ) மூன்றாம் திருவந்தாதி. ௯௦.

அந்.—கண், கண்ணால், என்றேனும், காணாத, அவ்வுருவை, (ரு) நெஞ்சு என்னும், உள்கண், உணர்ந்து, காணுமேல், அன்றே, (கo) ஆழியான், கார், உருவம், நம்கண், காணும், (கரு) நாம், காணாதிருப்பதுவும், இன்றே. (கஅ)

அர்.—கண்ணென்றுபேரையுடைய (காணஅஸமர்த்தமானபுறக்) கண்ணாலே, காணவொண்ணாத, அத்திருமேனியை, (ரு) நெஞ்சாகிற, ஆந்தரத்ருஷ்டியானது, ஆராய்ந்து, ஸாக்ஷாத்கரிக்குமாகில், அப்போதே, (கo) திருவாழியையுடையவனுடைய, மேகம்போன்ற, திருமேனியை, நம்முடையகண், ஸாக்ஷாத்கரிக்கும். (கரு) நாம், ப்ரத்யக்ஷமாக அநுபவியாதிருப்பதும், (அதில்லாத) இப்போதே. (கஅ) உஅ.

வ்யா.—அவ.—இருபத்தெட்டாம்பாட்டில், (அன்றே) திருவுலகளந்தருளின வடிவையநுஸந்திக்கையாலே அவனைக்காணவாசைப்பட்டு அதுகிடையாமையாலே † வெறுத்தவர், † அவன்பக்கல்குறையுண்டோ? நம்முடையகுறையிறேயென்று த்ருப்தராகிறார்.

(அன்றேயித்யாதி) ஸர்வேஶ்வரன்கறுத்ததிருமேனியை நம்முடையகண் அன்றேகாணும். (என்றேனும் இத்யாதி) ஒருநாளும் பகவத்விஷயத்தைக்காணாமையாலே "பீலிக்கண்" என்றவோபாதி † கண்ணென்றுபேரானகண்ணால்காணப்போகாத அவனுடையதிருமேனியை நெஞ்சாகிற உட்கண்ணுணர்ந்துகாணுமாகில்அன்றே நங்கண்காணுமாழியான்காருருவம். (இன்றேநாங்காணாதிருப்பதுவும்) நெஞ்சாகிறஉட்கண்ணுணர்ந்து காணாதவின்றே நாம்காணாதிருப்பது. உணர்ந்துகாணுமன்று நங்கண்காணும். "யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம்" என்றுசொன்னாராகில், உட்கண் காணாதொழிகையாவதென்னென்னில்; பரமபக்திபிறந்து அவ்வவஸ்துவையொழியச்செல்லாமை யாதொருபோதுபிறக்கும், அப்போதுகாணும் நங்கண்; அவ்வவஸ்துவையொழியச்செல்லு மின்று காணப்போகாதென்கிறது. கட்கண்ணென்றது - பீலிபோலேயானபுறக்கண். உஅ.

அரு. — இருபத்தெட்டாம்பாட்டு. த்ருப்திசொல்லுகையாலேவெறுப்பு அர்த்தாத்வந்தது. நெஞ்சென்னுமுட்கண்ணாலே உணர்ந்தால் இன்றுங்காணலாம், அதில்லாமையாலே காணப்போகாது, ஆகையாலே அவன்பக்கல் குறையுண்டோ நம்மதன்றோகுறை யென்றுத்ருப்தராகிறாரென்றபடி. "கட்கண்"- மீமிசையாலே கண்ணென்றுபேராயிருக்கிற கண்ணென்றபடி. ஜ்ஞாநமுண்டாகில் காணலாம். இல்லாதபோது காணப்போகாதென்றபடி. [நெஞ்சென்னுமுட்கண்ணேல் காணஉணர்ந்தவன்று நங்கண்காணும். உணராத இன்றேநாங்காணாதிருப்பதுவும்] என்றந்வயம். உஅ.

உணர வொருவர்க் கெளியனே செவ்வே,
இணரும் துழாயலங்க லெந்தை,—உணரத்
தனக்கெளிய ரெவ்வளவ ரவ்வளவ ரானல்,
எனக்கெளிய னெம்பெருமா னிங்கு. உகூ.

அந்.—இணரும், துழாய், அலங்கல், எந்தை, ஒருவர்க்கு, (ரு) செவ்வே, உணர, எளியனே, தனக்கு, எளியர், (கய) எவ்வளவர், அவ்வளவர், ஆனல், எனக்கு, இங்கு, (கரு) எம்பெருமான், உணர, எளியன். (கஅ)

அர்.—தழைத்த, திருத்துழாயின், மாலையையுடைய, என்ஸ்வாமி, (ஸ்வயத்நபரரான) ஒருவர்க்கு, (ரு) நன்ருக, அறிய, ஸுலபனே? (அன்று). தன் விஷயத்தில், ஸ்நேஹமுள்ளவர்கள், (கய) எவ்வளவுஸ்நேஹமுள்ளவராவர், (தானுமவர்களில்) அவ்வளவுஸ்நேஹமுள்ளவனுவன். ஆகையாலே, எனக்கு, இந்தலோகத்திலே, (கரு) என்னுடையஸ்வாமி, அறிந்துகாணும்படி, ஸுலபனுவான். (கஅ) உகூ.

வ்யா.—அவ.—இருபத்தொன்பதாம்பாட்டில், (உணர) எல்லார்க்குமிவ்வவஸ்த்தைபிறக்கை யரிது, † எனக்கிவ்வவஸ்த்தைபிறந்ததென்கிறுர்.

(உணரவித்யாதி) ஒருத்தருக்கும் † ஈத்ருக்தயா † இயத்தயா உணரப்போகான் (க) "యస్యామతం తస్యమతమ్ - అవిజ్ఞాతంవిజానతామ్-யஸ்யாமதம் தஸ்யமதம் அவிஜ்ஞாதம்விஜாநதாம்." (இணருந்துழாயலங்கலெந்தை) அபரிச்சிந்நவஸ்துவினுடைய லக்ஷணம் தோளில் திருத்துழாய்மாலையையுடையவனுகை. (இணரும்) தன்னிலத்திலும் இவன்தோளில் விகஸியாநிற்கும். தேவர்கள்தோளில் மாலைவாடாது, ஸர்வாதிகனுகையாலே இவன்தோளிலிட்டது அரும்பியாநிற்கும். (உணரவித்யாதி) தனக்கு நல்லவர்களுணர எவ்வளவர்,அவ்வளவனுய்நிற்கும்.(உ) "ప్రియోహిజ్ఞానినో௨త్యర్థమ్-ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்" (ரூ) "தம்மையுகப்பாரைத் தாமுகப்பர்" என்னும்படியே. (ஆனலெனக்கெளியனெம்பெருமானிங்கு) தனக்கு நல்லவர்கள் நினைத்தவளவிலேயமைக்குமாகையாலே என்ஸ்வாமி யெனக்கெளியன். உகூ.

---

(க) கேநோபநிஷத். உ - ரூ.  (உ) கீதை. ௭ - கஅ.
(ரூ) நாய்ச்சியார் திரு. கக - கo.

அரு. — இருபத்தொன்பதாம்பாட்டு. "எனக்கெளியன்" என்கையாலே (எனக்கிவ்வவஸ்த்தை) என்கிறது. (ஈத்ருக்தயா)-த்ருஷ்டாந்ததயா. (இயத்தயா) - இவ்வளவென்றுபரிச்சேதித்து. எளியர் - ஸ்நேஹிகள். உகூ.

இங்கில்லை பண்டுபோல் வீற்றிருத்தல், என்னுடைய
செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்,—அங்கே
மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம், மீண்
டடியெடுப்ப தன்றோ வழகு. ௩௦.

அந்.—இங்கு, பண்டுபோல், வீற்றிருத்தல், இல்லை, என்னுடைய, (ரு) செம், கண், மால், சீர்க்கும், உள்ளம், (௧௦) சிறிது, வல், வினையார், தாம், அங்கே, (௧௫) மடி, அடக்கி, நிற்பதனில், மீண்டு, அடியெடுப்பதன்றோ, (உ௦) அழகு. (உ௧).

அர்.—(என்னுடைய) இந்நெஞ்சத்தில், முன்போல், (வல்வினைக்குப்) பரம்பியிருக்க, (இனி அவகாசம்) இல்லை, என்னுடைய, (ஸ்வாமியாய்) (ரு) சிவந்த, கண்களையுடைய, வ்யாமுக்த்தனுடைய, குணங்களுக்கும், (இடமற்று) ஹ்ருதயம், (௧௦) சிறுத்தது. க்ரூரமான, பாபமானது, தான், (முன்கிடந்த) அவ்விடத்திலேயே, (௧௫) புடைவையைச், கடுக்கிக்கொண்டு, நிற்பதிற்காட்டிலும், மீளக், கால்வாங்குகையன்றோ, ? (உ௦) அழகு. (உ௧) ௩௦.

வ்யா.—அவ.—முப்பதாம்பாட்டில், (இங்கில்லை) அவனருமையும்பெருமையுங்கிடக்கிடீர், † நம்மைநலிந்துபோந்த பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமான கர்மங்களுக்கு நம்முடையபக்க லிருப்பிடமில்லையென்கிறார்.

(இங்கித்யாதி) பண்டுபோலிங்கு விஸ்த்ருதமாக இருக்கவொண்ணாது - வீற்றிருக்கவொண்ணாது. (என்னுடையவித்யாதி) வகுத்த விஷயத்துக்குமிடம்போராது. ஐஶ்வர்யவாத்ஸல்யஸூசகமானகண்களையுடைய ஸர்வேஶ்வரனுடையகுணங்களுக்கு என்னுள்ளஞ்சிறிது. (அங்கேமடியித்யாதி) அங்கேயொருமூலையிலேயொதுங்கித்திரிந்தாலோவென்னில்; முதன்மைசெய்தவூரிலே புடைவையை ஒதுக்கிக்கொடு திரிவதில் அங்குநின்றும் சடக்கெனக் கால்வாங்குகையன்றோ? அழகு. ௩௦.

அரு.—முப்பதாம்பாட்டு - "சீர்க்கும்" - குணங்களிருக்கஇடமொழிய பாபத்துக்கிடமில்லையென்றபடி. குணஸ்மரணத்தாலே பாபம்போமென்று தாத்பர்யம். மடி - முன்றானை. (௩௦)

அழகு மறிவோமாய் § வல்வினையைத் தீர்ப்பான்,
நிழலு மடிதாறு மானோம்,—சுழலக்
குடங்கடலை மீதெடுத்துக் கொண்டாடி, அன்றத்
தடங்கடலை மேயார் தமக்கு. ௬௧.

அந்.—வல், வினையை, தீர்ப்பான், அழகும், அறிவோமாய், (௫) குடங்கள், தலைமீது, எடுத்துக்கொண்டு, சுழல, ஆடி, (௧௦) அன்று, அ, தடம், கடலை, மேயார்தமக்கு, (௧௫) நிழலும், அடிதாறும், ஆனோம். (௧அ)

அர்.—க்ரூரமான, பாபத்தைப், போக்குகைக்காக, அழகியதாக (உபாயத்தை) அறிந்தவர்களானோமாய், (௫) குடங்களைத், தலைமேலே, எறிட்டுக்கொண்டு, (அவை ஆகாசத்தில்) சுழன்றுவரும்படி, நர்த்தநம்பண்ணி, (௧௦) அப்போது, (அந்தஶ்ரமமாறுகைக்காக) அந்த, விசாலமான, திருப்பாற்கடலைப், பொருந்தி கண்வளர்ந்தருளுகிறவருக்கு, (௧௫) நிழல்போலவும், திருவடிக்களவானபாதுகைபோலவும், ஆனோம். (௧அ) ௬௧.

வ்யா.—அவ.—முப்பத்தோராம்பாட்டில், (அழகும்) ஸர்வேஶ்வரனைக்கொண்டே விரோதியையும்போக்கி அங்குத்தைக்குக் கைங்கர்யம்பண்ணும்படியுமானோமென்கிறார்.

(வல்வினையித்யாதி) புதுப்புடைவை யழுக்குக் கழற்றுமாபோலே, ‡ எலியெலும்பரானநாம் கர்மத்தாலே நம்முடையபாபத்தைப் போக்குகையன்றிக்கே † ஸர்வேஶ்வரனைக்கொண்டு நம்பாபத்தைப் போக்கு மழகையுடையோமாய், ஸர்வேஶ்வரனுக்குச் சாயைபோலவும், பாதுகை, பாதரேகைபோலவுமானோம். † அடிதாறு-அடிக்களவாயிருக்குமது. (சுழல இத்யாதி) ஆகாசத்திலேசுழலும்படிக்கிடாகக்குடங்களையெடுத்தாடி, தன்னை § மன்றிலே ஸர்வஸ்வதாநம்பண்ணிக் குடமாடின † வேர்ப்புப்போகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற விவனுக்குச்சாயைபோலவுமானோம். இளையபெருமாள் படைவீட்டிலும் காட்டிலுமொக்க வடிமைசெய்தாற்போலே க்ருஷ்ணாவதாரத்திலும் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிறவிடத்திலு மொக்க வடிமைசெய்யும்படியானோம். ௬௧.

அநு.—முப்பத்தோராம்பாட்டு - [வல்வினையைத் தீர்க்கைக்காக அழகறிந்தோம்.] அவனைக்கொண்டே பாபத்தைப்போக்கிக்கொள்ளவேணுமென்கிற

§ வல்வினையும் என்றும் பாடம் காண்கிறது.

‡ எலியெலும்பர் - அல்ப சக்திகர். § மன்றிலே - ஸபையிலே.

ஜ்ஞாநத்தையுடையோமென்றபடி. "அடிதாறு" - பாதுகையாதல், பாத ரேகையாதல். பாதுகையானதெப்படியென்ன அருளிச்செய்கிறார் (அடி தாறுவது) இத்யாதி. "குடங்கடலை" - குடங்கள்தலை. ஆடினவன்றென் கையாலே (வேர்ப்புப்போக) என்கிறது. ருக.

தமக்கடிமை வேண்டுவார் தாமோதரனார்,
தமக்கடிமை செய்யென்றால் செய்யாது,—¶ எமக்கென்று
தாம்செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர் நெஞ்சினார்,
யான்செய்வ திவ்விடத்திங் கியாது. ருஉ.

அந்.—அடிமை, தமக்கு, வேண்டுவார், தாமோதரனார்தமக்கு, அடிமை, (ரு) செய், என்றால், செய்யாது, தாம், எமக்கு, (கo) என்று, செய்யும், தீ, வினைக்கே, நெஞ்சினார், (கரு) தாழ்வுறுவர், இவ்விடத்து, இங்கு, யான், செய்வது, (உo) யாது. (உக)

அர்.—(ஒருவர்க்கு) அடிமைப்படுகையைத், தமக்கு, விரும்புகிறவராய், (அதற்காக யசோதையினால்கட்டுண்டு அத்தழும்பைத் திருவுதரத்திலே யுடைய) தாமோதரனாருக்குக், கைங்கர்யம், (ரு) பண்ணு, என்றால், பண்ணாமல், தாம், (ஸ்வதந்த்ரமாய்) எமக்கு, (கo) என்று (ஒருஅபிநிவேசம்கொண்டு) செய்கிற, கொடிய, (அயோக்யதாநுஸந்தாநரூபமான) செயலிலேயே, மநஸ்ஸானவர், (கரு) (ஊன்றிப்) பின்வாங்குவர். இந்தலோகத்தில், இப்போது, நான், செய்யவேண்டுவது, (உo) எது ? (உக) ருஉ.

வ்யா.—அவ.—முப்பத்திரண்டாம் பாட்டில், (தமக்கு) தாமடிமைசெய்ய நிஶ்சயிக்க நெஞ்சுப்ரக்ருதிஸம்பந்தத்தை யுணர்ந்துபிற்காலியா நின்றதென்கிறார்.

(தமக்கடிமைவேண்டுவார்) "கைத்ததுகப்பார், புளித்ததுகப்பார்" என்னுமாபோலே தமக்கடிமையை யுகக்குமவர். அதெங்கே கண்டோமென்றால், (தாமோதரனார்) அநுகூலையானதாயார்க்கடியுண்பது கட்டுண்பதான விடத்திலேகண்டோம். (எமக்கித்யாதி) †எம்மைவிட்டுத் தமக்கென்னவே யொருநினைவுடையராய்.(தாம்செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர்நெஞ்சினார்) முதலியார். (யான்செய்வதிவ்விடத்திங்கு யாது) நம்முடைமையான நெஞ்சுக்காவோமோ? நம்மையுடையவர்க்காவோமோ ? ருஉ.

அரு.—முப்பத்திரண்டாம்பாட்டு - "தமக்கு அடிமைவேண்டுவார்" - தாம் ஆஶ்ரிதர்க்கடிமைசெய்கையைவேண்டியிருப்பாரென்றபடி - கீழ்மூலத்

¶ எமக்கென்றும் என்று உரையில் பாடம்.

திலே அர்த்தமாக்கி. "எமக்கென்று" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (எம்மைவிட்டு) இத்யாதி. தமக்கு ஆஸ்ரிதரை அடிமைகொள்ளவேண்டியிருப்பரென்று அர்த்தமாக்கி "தமக்கடிமைசெய்யென்றாற்செய்யாது" என்கிறது. ௩௨.

யாதானுமொன்றறியில் தன்னுகக்கி லென்கொலோ,
யாதானும் நேர்ந்தணுகாவா றுதான்,—யாதானும்
தேறுமாசெய்யா வசுரர்களை, நேமியால்
பாறுபாறாக்கினான் பால். ௩௩.

அந்.—யாதானும், ஒன்று, அறியில், தன், உகக்கில், (௫) யாதானும், தேறுமா, செய்யா, அசுரர்களை, நேமியால், (௧௦) பாறுபாறு, ஆக்கினான்பால், யாதானும், நேர்ந்து, அணுகா, ஆறுதான், (௧௫) என்கொலோ. (௧௬)

அர்.—ஏதேனும், ஒருவஸ்துவை, அறியும்போது, (அவ்வறிவில் ஸர்வாந்தர்யாமியான தான் விஷயமாம்படி ஸர்வசரீரியாய்), (உகக்கிறவன்) ஸ்வஸ்வரூபத்தை, உகக்கில், (அவ்வுகப்புக்கும் தான் விஷயமானவனாய்), எவ்விதத்திலும், விஸ்வஸிக்கும்படியானசெயலைச், செய்யாத, அஸுரரைத், திருவாழியினால், (௧௦) துண்டுதுண்டாக, ஆக்கினவனான ஸர்வேஸ்வரன்பக்கல், (தன்னதல்லாததையாவது) ஏதேனுமொன்றைக், கொடுத்துக், கிட்டாதப்ரகாரம், (௧௫) ஏதோ? (௧௬) ௩௩.

வ்யா.—அவ.—முப்பத்துமூன்றாம்பாட்டில், (யாதானும்) அறிவுடைத்தாகி லவனைப்பற்ற வேண்டாவோ? வென்கிறது.

(யாதானுமொன்றறியில்) ஏதேனுமொருபதார்த்தத்தையறியில். (௧) †"ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்னும்படியே, ஏதேனுமொன்றினுடைய ஜ்ஞாநத்துக்குமவனை முன்னிட்டறிய வேண்டுகையாலே அவனையறிந்ததாய்விடும். (தன்னுகக்கில்) ஒன்றையறியாவிட்டாலும் தன்னையுகக்கவேணுமே; தன்னை யுகக்கையாவது - அவனை யுகந்ததாய்விடும்; † அவனுகப்பொழியத் தனக்கொரு நன்மையில்லாமையாலே. (என்கொலோவித்யாதி) அவனதையவனுக்குக் கொடுத்தேயாகிலும் அவனைக்கிட்ட வேண்டாவோ? †"நேர்ந்து" என்பானென்னென்னில்; ப்ராந்திதசையிலேகண்டதெல்லாம் "எனக்கு" என்னுமத்தனை, ஸ்வதந்த்ரனாகவுமிறே நினைத்திருப்பதும், இத்தையெல்லா மழிக்கிறானாகையாலே "நேர்ந்து" என்னலாமிறே. (௨) † "தோள்களையார" என்று தொட

(௧) முதல் திருவந்தாதி - ௬௭. (௨) திருவாய். அ - ௧ - ௧௦.

ங்கி (க) "கண்களாயிரத்தாய்" என்று உபகாரஸ்ம்ருதியாலே இவரவனுடைமையை "தம்மது" என்றுகொடுக்க, அவனும் தன்னதல்லாதது பெற்றாற்போலே விஸ்த்ருதனானிறே, ஆகையாலத்தலைக்கு †அவத்யத்தை விளைத்தேயாகிலும் கிட்டவேண்டாவோ? (யாதானுமித்யாதி) தன்விரோதியைத் தான்போக்கிக்கொள்ளத்தானுங் கையிலே திருவாழியைப்பிடித்தானே? (யாதானுமித்யாதி) அஸுர வர்க்கத்திலே ஒருத்தன் அநுகூலிக்குமாகிலும் † அவ்வர்க்கமாக நோக்கும். இவனுக்கொருபடியும் விஶ்வஸிக்கப்போகாதபடி செய்த அஸுரர்களைத்திருவாழியாலே துணித்தாற்போலே தன்விரோதியைப்போக்கினவன்பக்கலி லெல்லாம் நேர்ந்தாகிலும் கிட்டவேண்டாவோ? அசக்தனுக்கு ஸர்வசக்தியைப் பற்றவேணும், ஆகையாலவனையே பற்றவேணும். ௩௩.

அ௩.—முப்பத்துமூன்றாம்பாட்டு - "யாதானுமொன்றறியில்" - "இதம்" என்று புரோநிட்ட பதார்த்தங்களிலே ஒன்றையறியும்போதும் ஸர்வசப்தவாச்யனவனாகையாலே இத்தையறிகிற ஜ்ஞாநம் அவனளவும்போமென்றபடி. இவற்றையறிகிறஜ்ஞாநம் அவனளவும்போகிறபடி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (ஒண்டாமரையாள்) இத்யாதி. தன்னையுகந்தால் அவனையுகந்ததாம்படி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (அவனுகப்பொழிய) இத்யாதி. நேர்கை - கொடுக்கை. அவனதை அவனுக்காக்கினால் நேர்ந்தென்று சனக்கச்சொல்லுவானென்னென்ன என்று சங்காபிப்ராயம். அவனதைத் தன்னதாக்கிக்கொடுத்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (தோள்களை) இத்யாதி. (அவத்யம்) - அவன்தன்னாத்மாவைத் தன்னதாக்கிக்கொடுக்கை. ப்ராந்திதசையிலே அவத்யத்தைவிளைத்துக் கொடுக்கவேணுமென்றபடி. [ஒன்றையறியவே தன்னையறியப்படுமவனாய்,ஒன்றையுகக்கவே தன்னையுகக்கப்படுமவனாய், விரோதிநிரஸநத்தைப்பண்ணுவானுமாயிருக்கிறவன்பக்கலிலே யாதானும் நேர்ந்தனுகாவாறு என்சொலோ] என்றந்வயம். ௩௩.

பாலாழி நீ கிடக்கும் பண்பை, யாம்கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்,—நீலாழிச்
சோதியா யாதியாய் தொல்வினையெம்பால் கடியும்,
நீதியாய் நிற்சார்ந்து நின்று. ௩௪.

அ௪.—நீல், ஆழி, சோதியாய், ஆதியாய், எம்பால், (ரு) தொல், வினை, கடியும், நீதியாய், நின், (௧௦) சார்ந்துநின்று, பால்ஆழி, நீ, கிடக்கும், பண்பை, (௧ரு) யாம், கேட்டேயும், கால், ஆழும், நெஞ்சு, (௨௦) அழியும், கண், சுழலும். (௨௩)

(க) திருவாய்மொழி - அ - க - க௦.

அர்.—கறுத்த, கடல்போன்ற, தேஜஸ்ஸையுடையவனே! (ஜகத்) காரணபூதனே! எம்மிடத்தில், (௫) அநாதியாயுள்ள, பாபத்தைப், போக்குகையை, ஸ்வபாவமாக உடையவனே! உன்னைப், (௧௦) பற்றிநின்று, திருப்பாற்கடலில், நீ, சயநித்த, அழகை, (௧௫) நாம், கேட்கும்போதே, கால், (மேலெழாமல்) அழுந்தும்; நெஞ்சு, (௨௦) சிதிலமாகும், கண், ப்ரமிக்கும். (௨௩) ௩௪.

வ்யா.—அவ.—முப்பத்துநாலாம்பாட்டில், (பாலாழி) ஏதேனும் நேர்ந்தாகிலும் அவனையே பற்றவேணுமென்றார்; †ஆகிலவனைக் கிட்டவொண்ணா தென்கிறார்.

(நீலாழிச்சோதியாய் பாலாழிநீகிடக்கும்) ஒருவெள்ளைக்கடலிலே யொரு கருங்கடல் சாய்ந்தாற்போலே யிருக்கிறபடி. (நீ கிடக்கும்) (௧) "கிடந்ததோர் கிடக்கை" என்னும்படியே. (பண்பையாம் கேட்டேயும்) அழகைக் கேட்டும். ஶ்ரவணமாத்ரத்திலே இப்படி அழிகிறவர், ஸாக்ஷாத்கரித்தாலென்படுகிறாரோ? (காலாழுமித்யாதி) †வடிவழகேயாய் ப்ராப்தியின்றிக்கே யிருக்கிறதோ? இதுக்குக் காரணமானவனே! (தொல்வினை யித்யாதி) †உபகாரகனுமானவனே! என்னுடைய விரோதியை என் பக்கலில் நின்றும் போக்குகையே ஸ்வபாவமாக வுடையவனே! (நிற்சார்ந்து நின்று) உன்னைப்பற்றி நின்று, பாலாழிநீ கிடக்கும்பண்பை யாங் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும். ௩௪.

அந.—முப்பத்துநாலாம்பாட்டு. (ஆகில்) கிட்டவேணுமாகில். மூலத்திலே அர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் (வடிவழகேயாய்) இத்யாதி. விரோதியைப்போக்குகை - உபகாரம். ௩௪.

நின்று மிருந்தும் கிடந்தும் திரிதந்தும்,
ஒன்று மோவாற்றா னென் னெஞ்சகலான்,—அன்றங்கை
வன்புடையால் பொன்பெயரோன் வாய்தகர்த்து மார்விடந்தான்,
அன்புடைய னன்றே யவன். ௩௫.

அந்.—நின்றும், இருந்தும், கிடந்தும், திரிதந்தும், ஒன்றும், (௫) ஆற்றான், என், நெஞ்சு, அகலான், அன்று, (௧௦) அம், கை, வன், புடையால், பொன்பெயரோன், வாய், (௧௫) தகர்த்து, மார்வு, இடந்தான், அவனன்றே, அன்புடையன். (௨௦) ஓ - (௨௧)

அர்.—(அவதாரங்களில் ஆஶ்ரிதர்க்காக) (எழுந்து) நின்றும், வீற்றிருந்தும், சயநித்தும், உலாவியும், (இவ்வளவுசெய்தும் ஒன்றும் செய்யாதவனைப்

போல்), ஒருபடியாலும், (ரு) தரிக்கமாட்டுகிறிலன். என்னுடைய, நெஞ்சை (விட்டுப்) பிரியான். ப்ரஹ்லாதனர்த்தித்தகாலத்தில், (கo) அழகிய, கையினுல், உரத்த, அடியினுல், ஹிரண்யனுடைய, (நிந்தித்த) வாயை, (கரு) நெரித்து, மார்பைப், பிளந்தான். அவனன்றோ? (நம்மக்கல்) ஸ்நேஹமுள்ளவன். (உo) ஆஸ்சர்யம். (உக) ௩ரு,

வ்யா.—அவ —முப்பத்தைந்தாம் பாட்டில், (நின்றும்) இவன் செவிதாழ்த்தால் அவன் படும்படி சொல்லுகிறது.

(நின்று மித்யாதி) உகந்தருளினதேசங்களிலே நிற்கிறது மிருக்கிறதும் கண்வளர்ந்தருளுகிறது முலாவுகிறது மெல்லாம் என்னைப் பெறுகைக்காக. (ஒன்றுமோவாற்றுன்) எல்லாஞ் செய்துமொன்றும் செய்யாதானுயிருக்கும். "ஓ" என்று ஆஸ்சர்யத்திலே அசைச்சொல்லாய் கிடக்கவுமாம். (என்னெஞ்சகலான்) என்னெஞ்சுக்குப் புறம்பு காட்டுத் தீயோடொக்கும். (அன்றித்யாதி) பிராட்டி பக்கல் பரிமாறும்போது கூசிப் பரிமாறவேண்டும்படியான கையைக்கொண்டு, முரட்டு ஹிரண்யனுடைய, பண்ணின ப்ரதிஜ்ஞையை "இல்லை" என்றவாயை நெரித்து அவன் மார்பைக் கீண்டவனன்புடையனன்றோ? பிதா பகையாக அவனிலண்ணிய உறவாய் வந்து தவினவன் அவனே? அன்புடையான்; அயோக்யனென்றகலுகிறநாமோ? அன்புடையோம். ௩ரு.

அரு.—முப்பத்தைந்தாம்பாட்டு. "அங்கைவன்புடையால்" - புடையென்று - வழியாய், வலியஸாதநமான் அழகியகையாலே என்றபடி. ௩ரு.

அவனு மிவனு முவனும், மற்றும்ப
ரவனு மவனென்றிராதே,—அவனும்
அவனேயெனத் தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்,
அவனே யெவனேலுமாம். ௩௬.

**அந்.**—அவன், அவன்ஆம், இவன்ஆம், உவன்ஆம், மற்று, (ரு) உம்பரவனும், என்று இராதே, அவனே, அவனும், என, (சo) தெளிந்து, கண்ணனுக்கே, தீர்ந்தால், அவனே, எவனேலும் (கரு) ஆம். (உசு)

**அர்.**—அந்த ஸர்வேஸ்வரன், துர்லபனுவான்; ஸுலபனுவான்; மத்யஸ்த்தனுவான்; அதற்குமேல், (ரு) பரமபதநாதனுவான்; என்று ஸம்சயியாமல், அவனே, ஆஸ்ரிதஸுலபனுவான், என்று, (கo) நிஸ்சயித்து, கண்ணனுக்கே, பரதந்த்ரனுனல், அந்த கண்ணனே, (ஆஸ்ரிதன்) எவனுகிலும், (கரு) (அவனுக்கு) ரக்ஷகனுவான். (கசு ௩௬.

வ்யா.—அவ.—முப்பத்தாறும் பாட்டில், (அவனும்) அவனிப் படியிருக்க அவன் பக்கலிலே ஸம்சயத்தைப் ப்ரவேசிப்பித்துக் கைவாங்குகை கார்யமன்றென்கிறது.

(அவனித்யாதி) † துர்லபனுயிருக்கும், † ஸுலபனு யிருக்கும் ;— † அப்படியே யிருக்கும், இப்படியே யிருக்கும், அதுக்கு மேலாயிருக்கும் என்று ஸம்சயித்துக் கைவிடப்பாராதே. (அவனித் யாதி) (க) "ఆత్మానంనాతివర్తేథాః-ஆத்மாநம்நாதிவர்த்தேதாঃ" என்னும்படியே † பாரதந்த்ர்யமே அவனுக்கு ஸ்வரூபமென்று தெளிந்து ஸுலபனுன க்ருஷ்ணனுக்கேயற்ருல். (அவனே யவனேனுமாம்) (உ) "యస్యమన్త్రీచగోప్తాచ సుహృచ్చైవజనార్దనః-யஸ்யமந்த்ரீச கோப்தாசஸுஹ்ருச்சைவ ஜநார்தநঃ" என்னும்படியே இவனுக்கெ ல்லாப்படியும் ரக்ஷகனும். ௩௬.

அரு.—முப்பத்தாறும் பாட்டு. (துர்லபன்) - திருப்பாற்கடல் நாயகன். (ஸுலபன்) - அர்ச்சாவதாரம். இவற்றைவிவரிக்கிருர். (அப்படியேயிருக்கும்) இத்யாதி. "உம்பர்" - மேலாய், பரமபதநாதன். "அவனுமவனே" - அவனே அவனுமென்ருய், அவனுக்காஸ்ரிதபாரதந்த்ர்யமேவடிவு என்றபடி. ௩௬.

ஆமாறறிவுடையா ராவதரிதன்றே,
நாமேயதுவுடையோம் நன்னெஞ்சே,—பூமேய்
மதுகரமே தண்டுழாய் மாலாரை, வாழ்த்தா
மதுகரமே யன்பாலமை. ௩எ.

அந்.— நல், நெஞ்சே, ஆறுஆம், அறிவு உடையாராவது, அரிதன்றே, (ரு) நாமே, அது, உடையோம், பூ, மேய், (௧௦) மதுகரம், மே, தண், துழாய், மாலாரை, (௧ரு) அன்பால், வாழ்த்துஆம், அது, கரம், அமை. (௨௦)

அர்.—அநுகூலமான, மநஸ்ஸே! வழியான (யுக்தமான), புத்தியை யுடையராவது, வருத்தமன்ருே? (ரு) நாமே, அந்த புத்தியை, உடையரானேம். பூவிலே, சேர்ந்த, (௧௦) வண்டுகள், பொருந்திய, குளிர்ந்த, திருத்துழாயின், மாலையையுடைய ஸர்வேஶ்வரனை, (௧ரு) ப்ரீதியினுல், மங்களாசாஸநம்பண்ணுகையாகிற, அதிலே, த்ருடமாகப், பொருந்து. (௨௦) ௩எ.

வ்யா.—அவ.—முப்பத்தேழாம் பாட்டில், இப்படி யிருக்கை புறம்புள்ளார்க்கரிது, தமக்குண்டாயிற் றென்கிருர்.

(க) (உ) பாரதம் - ஆரண்ய - ௪௯ - ௨௦.

(ஆமாறித்யாதி) † வழியான வறிவுடையாராவதரிதன்றே? யுக்தமான வறிவுடையாராகை கிடையாது. (நாமே யதுவுடையோம்) நாம் நல்லவறிவுடையோம். (நல்நெஞ்சே) எல்லாத்துக்குமொரு மிடறாகையிறே இது ஸித்தித்தது. (க) "மந ஏவ – மநஏவ" இத்யாதியாலேபந்தமோக்ஷங்களிரண்டுக்குமடி இதிறே. (பூமேயித்யாதி) பூவிலே பொருந்தும் வண்டுமேவின திருத்துழாய்மாலையை யுடைய ஸர்வேஸ்வரனை அன்பாலே வாழ்த்தாகிறவத்தை † த்ருடமாக அமை.

அரு.—முப்பத்தேழாம்பாட்டு. "ஆமாறு"-ஆறு வழியாய், (வழியான வறிவு). (ஒருமிடறு)-சாடு. "மே"-மேவி. வாழ்த்தாமது "கரம்" - (ஷ்ட) கரமாய், (த்ருடமாக). "அமை" - சமைவாய், பொருந்தென்றபடி. ௩எ.

அமைக்கும் பொழுதுண்டே யாராயில் நெஞ்சே,
இமைக்கும் பொழுது மிடைச்சி—குமைத்திறங்கள்,
ஏசியே யாயினு மீன்துழாய் மாயனையே,
பேசியே போக்காய் பிழை. (௩அ)

அந்.—நெஞ்சே, ஆராயில், இமைக்கும்பொழுதும், அமைக்கும்பொழுது, (ரு) உண்டே, இடைச்சி, குமை, திறங்கள், ஏசியேயாயினும், (கO) ஈன், துழாய், மாயனையே, பேசி, பிழை, (கரு) போக்காய். (கரு)

அர்.—ஓமநஸ்ஸே! விசாரிக்கப்புகில், நொடிப்பொழுதாகிலும், ஆறியிருக்கைக்கவகாசம், (ரு) உண்டோ? இடைச்சியான யசோதை, நலிந்த, ப்ரகாரங்களை(ச்சொல்லி)ப், பழித்தாகிலும், (கO) போக்யமான, திருத்துழாயையுடைய, ஆஸ்சர்யபூதனையே, அநுஸந்தித்து, தோஷத்தைப், (கரு) போக்கிக்கொள்ளாய். (கரு) ௩அ.

வ்யா.—அவ.—முப்பத்தெட்டாம்பாட்டில், (அமைக்கும்) தாம் வாழ்த்தச் சொல்ல நெஞ்சிருய்க்க, அத்தைத் "தப்பச்செய்தோம்" என்கிறார்.

(அமைக்குமித்யாதி) நெஞ்சே! ஒரு ஆபாதப்ரதீதியன்றிக்கே உள்ளே யாராயப்புக்கால். (இமைக்கும்பொழுதும்) ஒரு க்ஷணமாத்ரமு மாறியிருக்கப்போதுண்டோ? (இடைச்சி இத்யாதி) பரமபதத்திலே சென்று ஸாக்ஷாத்கரித்தார்க்கன்றோ? விச்சேதமின்றிக்கே யநுபவிக்கலாவதென்னில், அதுவேண்டா, தன்னை இதரஸஜாதீயனாக்கி ஸுலபனாக்க "என் மகன்" என்று எடுத்ததேகுடி

(க) ஸ்ரீவிஷ்ணுபுரா. சு - எ - உஅ.

யாக, தாயார் குழைக்கும் திறங்களை, ஏசியேயாயினும் பேசிப் போக்குகிறிலே. (பிழை) தப்பு. ஈன்துழாய் மாயனையே பேசிப் பிழையைப் போக்கா யென்னவுமாம். ஸ்நேஹித்துச் செய்தவற்றை ஸ்நேஹமில்லாத நாம்பேசினல் அவனுக்கேச்சாகாதோவென்னில், ஏச்சாகிலும் அவனைப்பேசாதே யிருக்கிறவிடம் தப்பு. ௩அ.

அரு.—முப்பத்தெட்டாம்பாட்டு. [நெஞ்சேஆராயில் இமைக்கும்பொழுதும் அமைக்கும்பொழுதுண்டே] ஏசுகை-ஸ்நேஹமின்றிக்கே சொல்லுகை.

பிழைக்க முயன்றோமோ நெஞ்சமே பேசாய்,
தழைக்குந்துழாய் மார்வன் றன்னை,—அழைத்தொருகால்
போயுபகாரம் பொலியக்கொள்ளாது, அவன் புகழே
வாயுபகாரங் கொண்டவாய்ப்பு. ௩௯.

அ.—தழைக்கும், துழாய், மார்வன் தன்னை, அழைத்து, ஒருகால், (ரு) போய், பொலிய, உபகாரம், கொள்ளாது, அவன்புகழே, (௰) வாய், உபகாரம்கொண்ட, வாய்ப்பு, நெஞ்சமே, பிழைக்க, (கரு) முயன்றோமோ, பேசாய். (கஎ)

அ.—தளிர்விடுகிற, திருத்துழாயைத், திருமார்பிலேயுடையவனைக், கூப்பிட்டு (அநுஸந்தித்து), ஒருகாலத்தில், (ரு) (பரமபதத்திற்குப்) போய், மிக்க, உபகாரத்தை, ஸ்வீகரியாமல் (அநுபவத்தையாசைப்படாமல்), அவனுடைய குணங்களையே, (௰) வாய்க்கு, நன்மையாக அங்கீகரித்த, நேர்பாடு, ஓமநஸ்ஸே! தப்பாகச், (கரு) செய்தோமோ? சொல். (கஎ) ௩௯.

வ்யா.—அவ.—முப்பத்தொன்பதாம்பாட்டில், (பிழைக்க) பேசவென்று புக்கவாறே போக்யமுமாய் நெஞ்சுக்குப் பொருந்தினவாறே "நாம் பார்த்தவிடம் † தப்பச் செய்தோமோ? நெஞ்சே!" என்கிறார்.

(தழைக்குமித்யாதி) ஒரு வாடல்மாலையையிட்டாலும் தழைக்கும் துழாய் மார்வையுடையவனை யழைத்து, அவன் கிட்டக் கொண்டு, பரமபதத்திலே † வந்து, "அஸங்குசிதமான போகத்தை † புஜிப்பிக்கிறேன்" என்னுதே, வாய்க்குபகாரமாகக்கொண்ட விந்த வாய்ப்புத் தப்பமுயன்றோமோ? சொல்லா யென்கிறார். † ஜ்ஞாநமுண்டாயிருக்க சரீரஸமநந்தரத்திலேயிறே கைங்கர்யம்பண்ணுகையாவது - பகவத்விஷயத்தில் ருசியில்லாமையிறே. ௩௯.

அரு.—முப்பத்தொன்பதாம்பாட்டு. (தப்பச்செய்தோமோ) - தப்பச் செய்யவில்லையே, நன்றாகச்செய்தோம் நெஞ்சே என்கிறார். (வந்து) - பரம

பதத்திலே போயென்றபடி. நெஞ்சே உன்னை (புஜிப்பிக்கிறேனென்னுதே). பரமபதத்துக் கைங்கர்யமிங்கேகூடுமோவென்ன அருளிச்செய்கிறார்(ஜ்ஞாநமுண்டாயிருக்க) இத்யாதி. ௩௯.

வாய்ப்போ விதுவொப்ப மற்றில்லை வாநெஞ்சே,
போய்ப்போய் வெந்நரகில் பூவியேல்,—தீப்பால
பேய்த்தா யுயிர்களாய்ப் பாலுண்டு, அவளுயிரை
மாய்த்தானை வாழ்த்தே வலி. ௪௦.

அந்.—வா நெஞ்சே, இதுஒப்ப, வாய்ப்பு, மற்று, இல்லை, (௫) போய்ப்போய், வெம், நரகில், பூவியேல், தீப்பால, (௧௦) தாய், பேய், உயிர், பால், களாய், (௧௫) உண்டு, அவள், உயிரை, மாய்த்தானை, வாழ்த்தே, (௨௦) வலி, (௨௧)

அர்.—வாராய்! ஓமநஸ்ஸே! இத்தோடொத்த, நன்மை, வேறு, கிடையாது. (௫) மிகவுமகன்று, க்ரூரமான, விஶ்லேஷதுஃகத்தில், (என்னை) ப்ரவேசிப்பியாதேகொள். கொடிய ஸ்வபாவத்தையுடையளாய், (௧௦) தாய்வேஷங்கொண்ட, பேயானபூதனையின், ப்ராணனைப், பாலோடே, கலந்து, (௧௫) உண்டு, அவளுடைய, ப்ராணனை, முடித்தவனை, மங்களாசாஸநம்செய்கையிலே, (௨௦) துணி. ௪௦.

வ்யா.—அவ.—நாற்பதாம்பாட்டில், (வாய்ப்பித்யாதி) இத்தோடொக்கும் நேர்பாடு மற்றில்லை நெஞ்சே! (போயித்யாதி) "அயோக்யன்" என்று அகலுகையாகிற கொடிய நரகத்திற் புகுவியாதேகொள். (௧) † "நிரயோயஸ்த்வயாவிநா - நிரயோயஸ்த்வயாவிநா" (பேய்த்தாய் இத்யாதி) பெற்றதாய்வேஷத்தைக்கொண்டுவந்தபேயினுடைய உயிரைப் பாலோடே கலசியுண்டு அவளுயிரை முடித்தவனை வாழ்த்துகை நமக்குமிடுக்கு. வாழ்த்துகையிலே துணியென்றுமாம். ௪௦.

அரு.—நாற்பதாம்பாட்டு. அகலுகை நரகமோவென்ன அருளிச்செய்கிறார். (நிரயோயஸ்த்வயாவிநா) என்று. "தீப்பால பேய்த்தாய்" பொல்லாதஸ்வபாவத்தையுடைய பேய்ச்சி. உயிர் - களாய் - கலசி. ௪௦.

வலியமென நினைந்து வந்தெதிர்ந்த மல்லர்,
வலிய முடியிடிய வாங்கி,—வலிய நின்
பொன்னாழிக் கையால் புடைத்திடுதி கீளாதே,
பன்னாளும் நிற்கு மிப்பார். ௪௧.

அந்.—வலியம், எனநினைந்து, வந்து, எதிர்ந்த, மல்லர், (௫) வலியமுடி, இடிய, வாங்கி, பொன், ஆழி, (௧௦) நின், வலிய, கையால், கீளாதே, புடைத்திடுதி, (௧௫) பல்நாளும், இ, பார், நிற்கும். (௧௯)

(௧) ஸ்ரீராமா - அயோ - ௩௦ - ௧௮.

அர்.—(நாம்) பலமுடையோம், என்றெண்ணி, (யுத்தத்திலே) வந்து, மேலிட்ட, மல்லருடைய, (ரு) வலிவையுடைய தலையை, இடிந்து விழும்படி, பறித்து, அழகிய, திருவாழியையுடைத்தான், (கO) உன்னுடைய, வலியையுடைய, திருக்கையினால், கிழித்துப் பொகடாமல், அடித்துவிட்டாய். (கரு) (ஆகையினால்தான்) அநேக காலம், இந்த, பூமி, நிலைபெற்றது. (கக). சக.

வ்யா.—அவ.—நாற்பத்தோராம்பாட்டில், (வலியமென) பூதநா ப்ரஸங்கத்தாலே மல்லரை நிரஸித்தபடி சொல்லுகிறது.

(வலியமித்யாதி) வெல்வோமென்றுநினைத்து வந்தெதிர்த்த மல்லருடைய திண்ணியதான முடியை வாங்கி, மிடுக்கை யுடைத்தான திருவாழியைப் பிடித்தகையாலே கேசியைப்போலே வாயைக்கிழியாதே மல்லுக் கிடாகப் புடைத்திடுதி. (பல்நாளும் நிற்குமிப்பார்) தனியே முறட்டு மல்லரை வென்ற வெற்றிக்கு என்றும் ஸாக்ஷி பூமியிறே. அம்மல்லரை ஜயித்த ஜயத்தாலேயிறே பூமி நிலை நின்றதென்றுமாம். (கிளாதே பல்நாளும் நிற்குமிப்பார்) ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு முரட்டு மல்லரோடே பொருகிறபடி கண்டால் இப்பூமியில் சேதநர் முடியவேண்டாவோ? அதுகண்டு ஸஹித்திருந்த இவர்களுக்கு நூறேபிராயம். (க) "ந ஸம்யுத்³த⁴மித்யாஹ:-நஸமம்யுத்தமித்யாஹு:" என்றமாத்ரமும் சொல்லாத இவர்களுக்கு ஒருநாளு மழிவில்லை யென்றுமாம். சக.

அரு.—நாற்பத்தோராம்பாட்டு. "முடியிடிய"-முடியிடியும்படி, புடைத்திடுதி. "இப்பார்" - பாரிலுள்ளார். "நிற்கும்" - ஸாக்ஷிநிற்குமென்னுதல், ஸத்தைநிற்குமென்னுதல், ஈடுபட்டழியாதேநிற்குமென்னுதல். சக.

பாருண்டான் பாருமிழ்ந்தான் பாரிடந்தான் பாரளந்தான்,
பாரிடமுன் படைத்தானென்பரால்,—பாரிட
மாவானும்தானானா லாரிடமே, மற்றொருவர்க்
காவான் புகாவா லவை. சஉ.

அந்.—பார், உண்டான், பார், உமிழ்ந்தான், பார், (ரு) இடந்தான், பார், அளந்தான், பார், இடம், (கO) முன், படைத்தான், என்பர், பார்இடம், ஆவானும், (கரு) தான், ஆனால், இடம், ஆர், அவை, (உO) மற்றுஒருவர்க்கு, ஆவான் புகா. (உஉ)

அர்.—(ஸர்வேஶ்வரன்) பூமியை, விழுங்கினான், பூமியை, வெளிப்படுத்தினான், பூமியைக், (ரு) குத்தியெடுத்தான்; பூமியை, அளந்தான், பூமியோடு

---

(க) ஸ்ரீராமா - யுத்த - கOரு - சு.

கூடிய, ஜகத்தை, (கo) ஆதியில், ஸ்ருஷ்டித்தான், என்று (ப்ராமாணிகர்) சொல்லுவர்கள்.(ஜகத்ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹாரகாரகனுகையால்)பூமியோடு கூடிய, ஜகத்தாகச், சொல்லப்படுகிறவனும், (கரு) தானேயாகிருன். இப்படியாகில்,(அவற்றுக்கு) ஆதாரபூதர், (வேறு) யாராவார். அவை (உo) வேரொருவர்க்கும், சேஷமாக ஆகமாட்டா. (உஉ) சஉ.

வ்யா.—அவ. — நாற்பத்திரண்டாம்பாட்டில், (பாருண்டான்) "ஸர்வேஶ்வரனே ஆஶ்ரயமாகவேண்டாவோ? என்கிறது.

(பாருண்டானித்யாதி) ப்ரளயம்வருகிறதென்று தன்வயிற்றிலேவைத்து ரக்ஷித்தும், வெளிநாடுகாண உமிழ்ந்தும், அண்டபித்தியில்நின்றும் பூமியை வராஹரூபியாய் ஒட்டுவிடுவித்தும், மஹாபலியபஹரிக்க எல்லைநடந்தும், கரணகளேபரவிதுரமாய் போகமோக்ஷசூந்யமான இவற்றை ஸ்ருஷ்டித்தும், இப்படி யானைத்தொழில்கள் செய்வானென்று நிர்த்தோஷப்ரமாணமும், ப்ரமாணத்தை அங்கீகரித்த ருஷிகளும் சொல்லுகையாலே - ஜகத்தாகிருன் ஈஶ்வரன். †ரக்ஷ்யரக்ஷகபாவாதிஸம்பந்தங்களாலே ஐக்யம்; ஸ்வரூபதः அன்று. (க) "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம - ஸர்வம் கல்விதம்ப்ரஹ்ம" என்று ப்ரபஞ்சத்துக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஐக்யத்தைச்சொல்லி (க) "தஜ்ஜலாநிதி - தஜ்ஜலாநிதி" என்று ஹேதுசொன்னற்போலே. (ஆனலாரிடமே) இப்படியான இஜ்ஜகத்துக்கு ஆஶ்ரயமாவாரார்? (மற்றொருவர்க்காவான்புகாவாலவை) ஜகத்திலிச்சேதநர் வேரொருவனுக்கு சேஷமாவான் புகா. உண்டுமிழ்ந்தென்கிறதொழில்கள் வேரொரு வ்யக்திக்காகாவென்றுமாம். சஉ.

அரு.—நாற்பத்திரண்டாம்பாட்டு. "பாரிடமாவான்" என்று ஸ்வரூபைக்யஞ்சொல்லுகிறதோவென்ன அருளிச்செய்கிருர் (ரக்ஷ்யரக்ஷகபாவ) இத்யாதி. "அவை" - சேதநராதல், கீழ்ச்சொன்ன வ்யாபாரமாதல். ஆவான் புகா. ஆல் - அசை. சஉ.

அவயமென நினைந்து வந்த சுரர் பாலே,
நவையை நளிர்விப்பான்றன்னைக்,—கவையில்
மனத்துயர வைத்திருந்து வாழ்த்தாதார்க் குண்டோ,
மனத்துயரை மாய்க்கும் வகை. சங.

(க) சாந்தோக்யம் - ங - கச.

அந்.—அவயம், என, நினைந்து, வந்த, சுரர்பால், (ரு) நவையை, நளிர் விப்பான்தன்னை, கவை, இல், மனத்து, (கο) உயரவைத்து, இருந்து, வாழ்த் தாதார்க்கு, மனத்துயரை, மாய்க்கும்வகை, (கரு) உண்டோ. (கக)

அர்.—அபயப்ரதாநம்பண்ணவேணும், என்று, மநோரதித்து, வந்த, தேவதைகள்பக்கலுள்ள, (ரு) துஃகத்தை, நடுங்கப்பண்ணினவனை, ஸம்சயம், அற்றிருக்கிற, மநஸ்ஸில், (கο) உத்துங்கமாகஸ்த்தாபித்து, ஸ்த்திரமாயிருந்து, மங்களாசாஸநம்பண்ணுதவர்களுக்கு, மநோதுஃகத்தைப், போக்கும்வழி, (கரு) உண்டோ? (கக.)

வ்யா.—அவ.—நாற்பத்துமூன்றாம்பாட்டில், (அவயம்) ப்ரபல ப்ரதிபந்தகங்களைப் போக்குமவனைப் பற்றுதார்க்கு வரும் மநோ துஃகங்களைப் போக்கவொண்ணுது.

(அவயமித்யாதி) (க) "ప్రావరేశంశరణమ్ - பராவரேசம்சர ணம்" என்னும்படி "அபயம்" என்று நினைத்துவந்த தேவதை களை அந்த துஃகத்தை நடுங்கப்பண்ணிப்போக்குமவன் தன்னை. நவை யென்று துஃகஹேதுவான குற்றமாகவுமாம். (கவையித்யாதி) இவ் விஷயங்களைப்பற்றுவோமோ? ஈஸ்வரனைப்பற்றுவோமோ? அயோ க்யரென்றகலுவோமோ? அகலாதொழிவோமோ? என்று இரண்டு மின்றிக்கேயிருக்கிற மநஸ்ஸிலே இவனை உயரவைத்து மங்களாசாஸ நம்பண்ணுதார்க்குமுண்டோ மனத்துயர்மாய்க்கும்ப்ரகாரம். சங.

அந.—நாற்பத்துமூன்றாம்பாட்டு. "நவை" - துஃகமாதல், பாபமாதல்.

வகைசேர்ந்த நன்னெஞ்சும் நாவுடைய வாயும்,
மிக வாய்ந்து வீழா வெனினும்,—மிகவாய்ந்து
மாலைத்தாம் வாழ்த்தா திருப்ப ரிதுவன்றே,
மேலைத்தாம் செய்யும் வினை. சச.

அந்.—வகை, சேர்ந்த, நல், நெஞ்சும், நாஉடைய, (ரு) வாயும், மிக, வாய்ந்து, வீழாவெனிலும், மிக, (கο) வாய்ந்து, மாலை, தாம், வாழ்த்தாதிருப் பர், இதுவன்றே, (கரு) மேலை, தாம், செய்யும், வினை. (கக)

அர்.—(ஜ்ஞாநோதயத்துக்கு) உபாயமாகச்,சேர்ந்த, விதேயமான, மநஸ் ஸும், நாக்கையுடைய, (ரு) வாயும், மிகவும், ப்ரவணமாய், (இவன்பக்கல்) அடையாவிடினும், மிகவருந்தி, (கο) கிட்டி, (இந்த்ரியங்களை அவனிடத்தில் வைத்து) ஸர்வேஸ்வரனைத், தாங்கள், மங்களாசாஸநம்பண்ணுதிருப்பர்கள். இதுவன்றே! (கரு) மேலுள்ளகாலமெல்லாம்,தாங்கள், செய்யும், பாபம்.(கக)

(க)

வ்யா.—நாற்பத்துநாலாம்பாட்டில், (வகை) இதுக்கு, பட்டரொருபடியும் பிள்ளை திருநறையூரரைய ரொருபடியு மருளிச்செய்வர். (வகைசேர்ந்தநல்நெஞ்சும்) சரீரபரிக்ரஹம்பண்ணின ஆத்மாவுக்கு ஜ்ஞாநப்ரஸரத்துக்காகச்சேர்ந்தநெஞ்சும். (நாவுடையவாயும்) ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்கக்கண்டவாயும். (மிகவாய்ந்துவீழாவெனிலும்) குணத்ரயவஶ்யராகையாலே ரஜஸ்தமஸ்ஸுக்கள் வர்த்தித்தபோது இவன்பக்கல் வந்தனவில்லையாகிலும். (மிகவித்யாதி) (க) “ஸத்த்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம் - ஸத்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்” என்று ஸத்வகார்யமானஜ்ஞாநத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்களைத்தள்ளி ஸர்வேஶ்வரனைவாழ்த்தாதேயிருப்பர்கள். (இதுவித்யாதி) இதுவன்றோ † ஸம்ஸாரம் நித்யமாக இவர்கள் பண்ணினபாபம்.

† ஈஶ்வரனுடையகுணங்களிலேசேர்ந்தநெஞ்சும், குணமொன்றையுமே ஏத்தும்வாயும் † அல்லாதகுணங்களிலு முள்புக்கதில்லையாகிலும் எல்லாகுணங்களிலு முள்புகும்படி யாராய்ந்து ஸர்வேஶ்வரனை யேத்தாதிருப்பர்கள், இதுவன்றோ பண்ணினபாபத்தினுடைய பலம் என்று பிள்ளை திருநறையூரரையர்நிர்வாஹம். சச.

அரு.—நாற்பத்துநாலாம்பாட்டு. “மேலை”-மேலைக்கு; (ஸம்ஸாரம் நித்யமாக). அரையர்நிர்வாஹம் (ஈஶ்வரனுடைய) இத்யாதி. மேலை - பண்டு. “வினை” - பாபமாதல், பாபபலமாதல். சச.

வினையார் தரமுயலும் வெம்மையை யஞ்சித்,
தினையாம் சிறிதளவும் செல்ல—நினையாது,
வாசகத்தா லேத்தினேன் வானோர் தொழுதிறைஞ்சும்,
நாயகத்தான் பொன்னடிக்கள் நான். சரு.

அந்.—வினையார், தர, முயலும், வெம்மையை, அஞ்சி, (ரு) தினையாம் சிறிது அளவும், செல்ல, நினையாது, நான், வானோர், (கo) தொழுது, இறைஞ்சும், நாயகத்தான், பொன், அடிக்கள், (கரு) வாசகத்தால், ஏத்தினேன். (கஎ)

அர்.—விஶ்லேஷமானது, தருகைக்கு, உத்ஸாஹிக்கிற, துஃகக்ரௌர்யத்தை (நினைத்து), பயப்பட்டு, (ரு) அத்யல்பகாலமும், (பிரிந்து) செல்லுவதாக நினையாமல், நான், நித்யஸூரிகள், (கo) (மநஸ்ஸினாலும் வாக்கினாலும்) ஆஶ்ரயித்து, (சிரத்தினால்) வணங்குகிற, பரமசேஷியினுடைய, ஸ்ப்ருஹணீயமான, திருவடிகளை, (கரு) வாக்கினால், புகழ்ந்தேன். (கஎ) சரு.

வ்யா.—அவ.—நாற்பத்தைந்தாம்பாட்டில், (வினை) நீரிதில் செய்ததென்னென்னில், பிரிந்தால்வரு மநர்த்தத்தைநினைத்து அவன் திருவடிகளை யேத்தினேனென்கிறார்.

(க) கீதை - கச - கஎ.

(வினையாரித்யாதி) † பிரிவாலேபிறக்கும் வெம்மையையஞ்சி க்ஷணமாத்ரமும் அவனையொழியக் காலம்செல்லப்பாராதே வாகிந்த்ரியத்தைக்கொண்டு ஏத்தினேன். (வானோரித்யாதி) நித்யஸூரிகள் மநோவாக்காயங்களாலே அடிமைசெய்யும் ஸர்வேஶ்வரனுடைய விலக்ஷணமான திருவடிகளைப்பெற்று அதைப் பிழைக்கவொண்ணாதென்று ஏத்தினேன். சரு.

அந.—நாற்பத்தைந்தாம்பாட்டு. "வினையார்" வினையென்று - பாபகார்யமானவிஶ்லேஷம். "தரமுயலும்" - கொடுக்க உத்யோகிக்கிற. இத்தால் (பிரிவாலேபிறக்கும்) என்றபடி. சரு.

நான்கூறும் கூற்ருவ தித்தனையே, நாணாளும்
தேங்கோத நீருருவன் செங்கண்மால்,—நீங்காத
மாகதியாம் வெந்நரகில் சேராமல் காப்பதற்கு,
நீகதியா நெஞ்சே நினை. சசூ.

அந்.—தேங்கு, ஓதம், நீர், உருவன், செம், (ரு) கண், மால், நீங்காத, மா, கதியாம், (க0) வெம், நரகில், சேராமல், காப்பதற்கு, கதியாம், (கரு) நெஞ்சே, நீ, நினை, நாள்நாளும், நான், (உ0) கூறும், கூற்ருவது, இத்தனையே. (உரு)

அர்.—தேங்கின, கடலின், நீர்போன்ற, வடிவையுடையனாய், சிவந்த, (ரு) திருக்கண்களையுடையனான, ஸர்வேஶ்வரன், பிரியத்தகாத (நித்யாநுபவயோக்யமான), பரமமான, ப்ராப்யனாகும்; (க0) க்ரூரமான, ஸம்ஸாரத்தில், கிட்டாதபடி, ரக்ஷிக்கைக்கு, உபாயமாகும்; (கரு) ஓமநஸ்ஸே! நீ, அநுஸந்தி. ப்ரதிதிநமும், நான், (உ0) (உனக்குச்) சொல்லுகிறவார்த்தையாவது, இவ்வளவே. (உரு) சசூ.

வ்யா.—அவ.—நாற்பத்தாரும்பாட்டில், (நான்கூறும்) கீழே தேஹயாத்ரைசெல்லும்படிசொல்லிற்று, இதில் "ப்ராப்யப்ராபகங்கள் அவனேயென்று நினைத்திரு" என்கிருர்.

(நான்கூறும் கூற்ருவதித்தனையே). ஒருநாளேயோ இப்படி சொல்லுவதென்னில், (நாணாளும்) என்று மித்தனையே. (தேங்கோதமித்யாதி) தேங்கினகடல்போலேயிருந்த திருமேனியையும், ஐஶ்வர்யஸூசகமான கண்களையுமுடைய ஸர்வேஶ்வரனை, மீட்சியில்லாத ப்ராப்யமாகவுமாம், ஸம்ஸாரத்திலேசேராதபடிக்கீடான ப்ராபகமாகவுமாம், நெஞ்சே! நினை. இத்தால் ப்ராப்யப்ராபகங்களுமவனேயென்னுமிடமும் ப்ராப்தாவுக்கு ப்ரதிபத்திமாத்ரமேயென்னுமிடமும்

ப்ரபந்நனுக்கு இருகால்மட்டொன்றும் சொல்லவேண்டுவதில்லை யென்னுமிடமும் சொல்லுகிறது. ௪௬.

அ௩.—நாற்பத்தாறும்பாட்டு. "நினை" என்கையாலே. ப்ரதிபத்தியும், அதுதான் ஒருகால் என்னுமிடமும் தோற்றுகிறது. ௪௬.

நினைத்திறைஞ்சி மானிடவ ரொன்றிரப்ப ரென்றே,
நினைத்திடவும் வேண்டாநீ நேரே,—நினைத்திறைஞ்ச
எவ்வளவ ரெவ்விடத்தோர் மாலே, அதுதானும்
எவ்வளவு முண்டோ வெமக்கு. ௪௭.

அந்.—மானிடவர், நினைத்து, இறைஞ்சி, ஒன்று, இரப்பர், (ரு) என்று, நீ, நினைத்திடவும், வேண்டா, நேரே, நினைத்து, (௧௦) இறைஞ்ச, எவ்வளவர், எவ்விடத்தோர், மாலே, அதுதானும், (௧௫) எமக்கு,எவ்வளவும்உண்டோ.(௧௭)

அர்.—மநுஷ்யர், (நம்மை) அநுஸந்தித்து, வணங்கி, ஒரு (அல்ப) விஷயத்தை, யாசிப்பர்கள், (ரு) என்று, நீ, நினைக்கவும்வேண்டா. (விஷயாந்தரங்களைவிட்டு) ஸாக்ஷாத்தாக, (உன்னையே ப்ரயோஜநமாக) எண்ணி, (௧௦) வணங்குகைக்கு (ஸம்ஸாரிகள்) எவ்வளவு ஜ்ஞாநவான்கள்? எத்தேசத்திலுள்ளார்? (எங்கும் ஒருவரும்கிடையாது). ஸர்வாதிகனே! அந்த ப்ரயோஜநாந்தரபரதைதான், (௧௫) (உன் கடாக்ஷம்பெற்ற) எங்களுக்கு, எவ்வளவாகிலும் (அணுவாகிலும்) உண்டோ? (௧௭) ௪௭.

வ்யா.—அவ.—நாற்பத்தேழாம்பாட்டில், (நினைத்து) "நீர்நம்மை ப்ராப்யப்ராபகமாகவும், நம்மையேத்துகையே தேஹயாத்ரையாகவுமாக இராநின்றீர், இதுக்கு விபரீதமாயிருப்பானேன் ஸம்ஸாரம்" என்ன, உன்கடாக்ஷமில்லாதபடியிருக்கை குற்றமோ? வென்கிறார்.

(நினைத்தித்யாதி) நம்மைநினைத்து நம்காலிலேவிழுந்து உம்மைப்போலே நம்மையே ப்ரயோஜநமாகப்பற்றுதே ப்ரயோஜநாந்தரத்துக்கும் அடியொப்பரென்று நினைக்கவேண்டா. (நேரே இத்யாதி) நீயேப்ராப்யமும் ப்ராபகமும் என்று நினைத்திறைஞ்ச எங்குள்ளார்க்குப்போம்? †எவ்வளவிலுள்ளார்க்குப்போம்?(மாலே)உன்னைச்சிலவராலே பரிச்சேதிக்கப்போமோ? (அதுதானுமெவ்வளவுமுண்டோவெமக்கு) உன்கடாக்ஷம்பெற்றவர்களுக்கு ப்ரயோஜநாந்தரத்திலே முதலடியிடவேண்டா; உன்கடாக்ஷமில்லாதார் இப்படிசெய்தாரென்று உனக்கு வெறுக்கவொண்ணுமோ? ௪௭.

அரு.—நாற்பத்தேழாம்பாட்டு. "எவ்வளவர்" - எவ்வளவிலுள்ளார். எப்படிப்பட்ட ஜ்ஞாநத்தையுடையார்? அதுதானும் அந்தப்ரயோஜநத்தைக் கொள்ளுகை. சஎ.

எமக்கியாம் விண்ணாட்டுக் குச்சமதாம் வீட்டை,
அமைத்திருந்தோ மஃதன்றே யாமாறு,—அமைப்பொலிந்த
மென்தோளி காரணமா வெங்கோட்டே றேழுடனே,
கொன்றானையே மனத்துக் கொண்டு. சஅ.

அந்.—அமை, பொலிந்த, மெல், தோளிகாரணமா, வெம், (ரு) கோடு, ஏறு எழு, உடனே, கொன்றானையே, மனத்து, (க௦) கொண்டு, யாம், விண்நாட்டுக்கு, உச்சமதாம், வீட்டை, (கரு) எமக்கு, அமைத்திருந்தோம், அஃதன்றே, ஆம் ஆறு. (கக)

அர்.—(பசுமை சுற்றுடைமைமுதலிய குணங்களால்) மூங்கிலைக்காட்டிலும், சிறந்திருக்கிற, ம்ருதுவான, புஜங்களையுடைய நப்பின்னைப் பிராட்டி நிமித்தமாக, கொடிய, (ரு) கொம்புகளையுடைய, எருதுகளேழையும். ஒரு காலத்திலேயே, கொன்ற க்ருஷ்ணனை, ஹ்ருதயத்திலே, (க௦) (உபாயமாக) ஸ்வீகரித்து, நாங்கள், ப்ரஹ்மாதிலோகங்களுக்கும், மேலான, பரமபதத்தை, (கரு) எங்களுக்கு, உண்டாக்கப்பாரித்தோம்; அதுவன்றோ, யுக்தமானப்ரகாரம். (கக) (சஅ)

வ்யா.—அவ.—நாற்பத்தெட்டாம் பாட்டில், எமக்கு ப்ரபல ப்ரதிபந்தகம் போக்குமவனையுபாயமாக நெஞ்சிலேகொண்டு அவனால் பெறுவதும் பரமபதமென்று நினைத்திருந்தோம், இதன்றோவிருக்கும்படி யென்கிறார்.

நமக்கு நாம் ப்ரஹ்மாதிகளுடைய †மேலான பரமபதத்தைப் †பாரித்திருந்தோம். இதுவன்றே செய்யும்வழி. ப்ரஹ்மாதிகளுடைய லோகத்துக்குமேலாய், பரமபதத்துக்குப் புறம்பாயிருக்கும் கைவல்யமோக்ஷத்தை (அமைத்திருந்தோம்)-†வேண்டாவென்றிருந்தோமென்றுமாம். †பெருமாள் குணங்களிலேபழகின உடம்பொழிய பரமபதம்வேண்டாவென்றிருந்தாற்போலே, அஸாதாரணையாய் வேய்போலேவிளங்கி ம்ருதுவான தோளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக வெவ்வியகோட்டையுடைய எருதுகளேழையுமுடனே செற்றவனையே நெஞ்சிலேகொண்டு இவ்வநுபவத்திற் காட்டில் பரமபதம் வேண்டாமென்றிருந்தோமென்றுமாம். சஅ.

அரு.—நாற்பத்தெட்டாம்பாட்டு - "உச்சமதாம்" - மேலானவீட்டை, "அமைத்திருந்தோம்" அமைவு - சமைவாய், பாரித்திருந்தோமென்னுதல்;

அமைவு - அமையுமென்ருய், வேண்டாவென்னுதல் ; பரமபதந்தன்னையும் வேண்டாவென்னுதல். இந்தவர்த்தத்தைத் திருவடியை த்ருஷ்டார்தமாக்கி அருளிச்செய்கிருர் (பெருமாள்) இத்யாதி. "கோடு" கொம்பு. சஅ.

கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்தான்,
வண்டருப் பூவைதான் மற்றுத்தான்,—கண்டநாள்
காருருவங் காண்டோறு நெஞ்சோடும், கண்ணனூர்
பேருருவென் றெம்மைப் பிரிந்து. சகூ.

அந்.—கொண்டல்தான், மால், வரைதான், மா, கடல்தான், (ரு) கூர், இருள்தான், வண்டு, அரு, பூவைதான், (கO) மற்று, கார், உருவம் தான், கண்டநாள், காண்தோறு, (கரு) நெஞ்சு, கண்ணனூர், பேர், உருவு என்று, எம்மை, (உO) பிரிந்து, ஓடும். (உஉ)

அர்.—மேகங்களையும், பெரிய, மலைகளையும், பரந்த, கடலையும், (ரு) செறிந்த, இருளையும், வண்டுகள், மாருத, பூவைப்பூவையும், (கO) மற்றும், கறுத்த, ரூபங்களையுடைய வஸ்துக்களையும், பார்க்குங்காலத்தில், பார்த்த போதெல்லாம், (கரு) (என்) மநஸ்ஸு, (இது) கண்ணபிரானுடைய, பெரிய (அழகையுடைய), திருமேனியென்று நினைத்து, எம்மை, (உO) விட்டு, (அங்கே) ஓடாநின்றது. (உஉ) சகூ.

வ்யா.—அவ. — நாற்பத்தொன்பதாம்பாட்டில், (கொண்டல்) "அவனேப்ராபகன்" என்றறுதியிட்டார்க்கு சரீராவஸாநத்தளவு மிருக்கும்படி சொல்லுகிறது.

(கொண்டல்தானித்யாதி) உபமாநங்களைக்கண்டால் உபமேய மென்று நம்மைவிட்டு நெஞ்சு ஓடாநின்றது. மேகத்தை, கறுத்த மலையை, கடலை, கூரியவிருளை, வண்டுமாருத பூவை என்கிற வ்ருக்ஷத்தைக்கண்டபோது, (காருருவங்காண்டோறும்) †அநுக்த மான கறுத்த பூங்குவளை நீலம் காயாஇத்யாதி, † காணுந்தோறும் †என்றுமாம். †வடிவென்றுகண்டால்,இதுக்கு, "அவனன்றுகாண்" என்று கேட்டறிந்தாலும் பின்னையுங்கண்டபோதெல்லாம், (கண்ண னூர்பேருருவென்று) இதின் நெடுவாசியறிகிறதில்லை, பேருருவென் ருேடாநின்றது. சகூ.

அரு.—நாற்பத்தொன்பதாம்பாட்டு "மற்றுக்காருருவம்" என்றுகூட்டி யருளிச்செய்கிருர் (அநுக்தமான) இத்யாதி. (என்றுமாம்) என்றது - அர்த் தாந்தரமன்று,உண்டானாலும் ப்ரதிகோடிகண்டுகொள்வது.வர்த்தமாநத்தைப் பற்ற அருளிச்செய்கிருர் (வடிவென்று) இத்யாதி. [நெஞ்சானதெம்மைப் பிரிந்து பேருருவென்றே ஓடாநின்றது] என்றபடி. சகூ.

பிரிந்தொன்று நோக்காது தம்முடைய பின்னே,
திரிந்துழலும் சிந்தனையார் தம்மைப்,—புரிந்தொருகால்
ஆவா வெனவிரங்கா ரந்தோ வலிதேகொல்,
மாவாய் பிளந்தார் மனம். ருஙு.

அந்.—பிரிந்து, ஒன்று, நோக்காது, தம்முடையபின்னே, திரிந்து, (ரு) உழலும், சிந்தனையார்தம்மை, ஒருகால், புரிந்து, ஆவாவென, (கo) இரங்கார், அந்தோ, மா, வாய், பிளந்தார், (கரு) மனம், வலிதேகொல். (கஎ)

அர்.—(தம்மை) விட்டு, வேறொன்றைப், பாராதே, தம்முடைய பின்னே, அலைந்து, (ரு) தடுமாறுகிற, மநஸ்ஸினரை, ஒருகாலாகிலும், ஸ்நேஹித்து, ஐயோ! என்று, (கo) தயைபண்ணுகிறிலர். ஐயோ! (என்பாபமா). கேசியின், வாயைக், கிழித்த கண்ணபிரானுடைய, (கரு) மநஸ்ஸு, திண்ணிதாய்விட்டதோ? (கஎ) ருo.

வ்யா.—அவ.—ஐம்பதாம்பாட்டில், (பிரிந்தொன்று) “உபமாநங்களைக்கண்டு உபமேயமென்றிருக்கும்படியான † எம்மை இவர் நோக்காதொழிவதே!” என்று வெறுக்கிறார். (க) † “எதிர்சூழல்புக்கெனைத்தோர் பிறப்பும்” என்னும்படியை எண்ணுகிறிலர். அவன் கொடுத்த சரீரங்கொண்டு ருசிபிறந்தபின்பு இவனைத்தாழ்த்ததும் குற்றமாய்த் தோற்றுகின்றது. தான்பரிக்ரஹித்த சரீரந்தோறும் அவஸரப்ரதீக்ஷணைய்த் தம்பக்கல் முகம்பெறாதே திரிந்தது தோற்றுகிறதில்லை. இத்தலையில் அபேக்ஷைபிறந்தால் அவனுக்கு வாராதேயிருக்கை முறையன்றுபோலேகாணும். † ப்ரஜை எல்லாத் தீம்புஞ்செய்தாரேயாகிலும் பசித்தபோது சோறிட்டிலளாகில் தாய்க்குக் குற்றமாகக்கடவதிறே.

(பிரிந்தித்யாதி) வேறொன்றை அநுஸந்தியாதே தம்மையேபற்றித்திரிகிற (சிந்தனையார்தம்மை) “தம்மையொழிய வேறொருத்தரில்லை” என்று புரிந்துபார்த்து “ஐயோ” என்றிரங்குகிறிலர். (மாவாய் பிளந்தாரித்யாதி) ஆஶ்ரிதர்க்காக விரோதிநிரஸநம்பண்ணிப்போந்தவருடைய மநஸ்ஸு இப்போது திண்ணிதானபடியென்! மாவாய் பிளந்தாருடைய மனம் அந்தோ! வலிதேகொல். ருஙு.

அரு. ஐம்பதாம்பாட்டு - (எம்மை) எங்களை. தம்மைப்பெறுகைக்கு யத்நம்பண்ணினவனை வெறுப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (எதிர்சூழல்)

(ச) திருவாய்மொழி - உ - எ - சு.

இத்யாதி. தம்முடைய குற்றங்கிடக்க அவன் அல்பந்தாழ்த்ததைக் குற்றமாகக் கொள்ளலாமோவென்ன அருளிச்செய்கிறார் (ப்ரஜை எல்லா) இத்யாதி. ருߐ.

மனமாளு மோரைவர் வன்குறும்பர் தம்மைச்,
சினமாள்வித் தோரிடத்தே சேர்த்துப்,—புனமேய
தண்டுழாயானடியே தாங்காணுமஃதன்றே,
வண்டுழாம் சீரார்க்கு மாண்பு. ருக.

அந்.—மனம், ஆளும், ஓர், ஐவர், வன், (ரு) குறும்பர்தம்மை, சினம், மாள்வித்து, ஓரிடத்தே, சேர்த்து, (கo) புனம், மேய, தண், துழாயான், அடியேதான், (கரு) காணும், அஃதன்றே, வண், துழாம், சீரார்க்கு, (உo) மாண்பு. (உக)

அர்.—மநஸ்ஸைத், தங்கள்வசமாக்கிக்கொள்ளுகிற, (நலிகையில்) அத்விதீயராய், ஐந்துவகைப்பட்ட, ப்ரபலராய், (ரு) ஸ்வதந்த்ரரான இந்த்ரியங்களை, கோபத்தை, நசிப்பித்து, ஸர்வேஸ்வரனிடத்தில், ப்ரவணமாம்படி பண்ணி, (கo) தன்நிலத்தில், பொருந்தியிருந்தாற்போல் செவ்விபெற்று, குளிர்ந்த, திருத்துழாயையுடையவனுடைய, திருவடிகளையே, (கரு) ஸேவிக்கையாகிற, அதுவன்றே, உதாரமாய்ப், பரந்த, குணங்களையுடைய ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு, (உo) அழகு. (உக) ருக.

வ்யா.—அவ.—ஐம்பத்தோராம்பாட்டில், (மனமாளும்) † சேஷபூதன் சேஷிசெய்தபடி கண்டிருக்கு மத்தனையல்லது வெறுத்துத் தப்பச்செய்தோமென்கிறார்.

பள்ளிகள்கலஹம்போலே, ஈஸ்வரனுக்கு ஆத்மாசேஷமாய், ஆத்மாவுக்கு மநஸ்ஸுசேஷமாய், மநஸ்ஸுபோனவழியே போகக்கடவானஇந்த்ரியங்களிருக்கும் முறையன்றிக்கே, மநஸ்ஸை இந்த்ரியங்களாளும்படி யிருக்கை. (வன்குறும்பர்) மநஸ்ஸைத் தாங்கள் போனவழியே கொடுபோகவல்லராயிருக்கை. † "இன்னதனைத்ரவ்யத்துக்கு † அரசுசெய்வாரைக் கிடைக்கும்" என்னும் வன்னியரைப்போலே. (ஓரைவர் வன்குறும்பர்தம்மைச் சினமாள்வித்து) கர்மபலமான க்ரோதத்தைமுடித்து (க) "காமாத் க்ரோதோபிஜாயதே" காமாத் க்ரோதோபிஜாயதே" பகவத்வ்யதிரிக்தவிஷயங்களெல்லாம் இந்த்ரியங்களுக்கிரைபோராதிறே. எல்லா இந்த்ரியங்

(க) கீதை - உ - சுஉ.

களும் அநுபவிக்கப்புக்கால் அநுபாவ்யாம்சம் பெருத்திருப்பது பகவத்விஷயமிறே. (க) † "இன்னங்கெடுப்பாயோ" என்றும் (உ) "பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ" என்றும் (உ) "சிற்றின்பம்" என்றுமிறே இதரவிஷயங்கள். எல்லா இந்த்ரியங்களும் புஜித்தாலும் போக்யதை அளவிறந்திருக்குமென்னுமிடத்தைச் சொல்லுகிறது (புனமேயதண்டுழாயானடி) என்று. (வண்துழாம் சீரார்க்குமாண்பு - மனமாளுமோரைவர்வன்குறும்பர்தம்மைச் சினமாள்வித்தோரிடத்தேசேர்த்துப் புனமேயதண் துழாயானடியேதான் காணுமஃதன்றே). ஆத்மகுணோபேதர்க்கு - வண்மைதுழாவினசீரையுடையவர்களுக்கு அழகாவது - இந்த்ரியங்களைஜயித்து அவ்விந்த்ரியங்களெல்லாவற்றையும் பகவத்விஷயத்திலே சேர்த்து, செவ்வித்திருத் துழாய்மாலையையுடையனுயிருந்துள்ள ஸர்வேஸ்வரன்திருவடிகளைக் காண்கையன்றோ? முறை; "அந்தோவவிதேகொல்" என்று வெறுக்கக்கடவதோ? ருக.

அரு.—ஐம்பத்தோராம்பாட்டு - "வண்டுழாஞ்சீரார்" என்கையாலே சேஷிசெய்தபடி கண்டிருக்கையொழிய வெறுக்கக்கூடாதென்கிறது. "தம்மை" என்றத்தை யருளிச்செய்கிறார் (இன்னதனைத்ரவ்ய) இத்யாதி. (அரசுசெய்வார்) கைக்காயிரத்துக்குச் சேவிப்பார். "சினமாள்வித்து"—சினத்தை முடித்து; அத்தால் வந்தக்ரோதத்தைப்போக்க என்றபடி. இதரவிஷயங்கள் அநர்த்தகரமுமாய் அல்பமுமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (இன்னங்கெடுப்பாயோ) இத்யாதி. "மாண்பு" - அழகு - முறையென்றாய், ப்ராப்தமென்றபடி. ருக.

மாண்பாவித் தஞ்ஞான்று மண்ணிரந்தான், மாயவள்நஞ்
சூண்பாவித் துண்டான தோருருவம்,—காண்பான்நங்
கண்ணவா மற்றொன்று காணுறு, சீர்பரவா
துண்ண வாய்தானுறுமோ வொன்று. ருஉ.

அந்.—அஞ்ஞான்று, மாண், பாவித்து, மண், இரந்தான், (ரு) மாயவள், நஞ்சு, ஊண், பாவித்து, உண்டானது, (கo) ஓர், உருவம், காண்பான், நம் கண், அவா, (கரு) மற்று ஒன்று, காண்உறு, வாய்தாய், சீர், பரவாது, (உo) ஒன்று, உண்ண, உறுமோ. (உரு)

அர்.—இந்த்ரன் அர்த்தித்தவன்று, ப்ரஹ்மசாரிவேஷத்தைப், பாவனை செய்துகொண்டு, பூமியை, யாசித்தவனாய், (ரு) வஞ்சகியான பூதனையின், விஷத்தை, தாரகமாக, விரும்பி, அமுதுசெய்தவனானவனுடைய, (கo)

(உ) திருவாய் - சு - கூ - அ. (ரூ) திருவாய் - சு - கூ - கூ.

அத்விதீயமான (அழகையுடைய), திருமேனியை, ஸேவிக்கைக்காக, நம்முடைய கண்களுக்கு, ஆசை. (௧௫) வேறொன்றைக், காண ஆசைப்படாது. வாகிந்த்ரியந்தான், (அவனுடைய) கல்யாணகுணங்களை, ஸ்துதியாமல், (௨௦) ஒன்றை, புஜிக்க, ஆசைப்படுமோ? ௫௨.

வ்யா.—அவ.—ஐம்பத்திரண்டாம்பாட்டில், (மாண்பாவித்து) பொதுவிலேசொன்னேன், அதுதானெனக் குண்டாயிற்றென்கிறார்.

(மாணித்யாதி) மாண்பாவிக்கையாவது - மஹாபலி "நான்தருவேனுல் இன்னுமகல இரக்கமாட்டாயோ?" என்ன; "இரந்ததுக்குமேலேவேண்டா" என்றிருக்கிற பால்யம் பாவித்து. அத்தைப் பொய்யென்கிறதன்று; அத்தையும் மெய்யாக்குகை.

(மாயவளித்யாதி)தாய்வேஷத்தைக்கொண்டு "இவனுக்குமுலை கொடாவிடில் தரியேன்" என்று அவள் முலைகொடுத்தாற்போலே இவனும் "உண்ணுவிடில் தரியேன்" என்று தாரகமாகவுண்டான், (க) "பேய்முலை நஞ்சூணுகவுண்டான்" என்னும்படியே. (காண்பான் நங்கண்ணவா) கண்ணுக்கவா ஊண்பாவித்துண்டானதோருருவங் காண்பான். (மற்றொன்றுகாணுறு) † அதொன்றுங்காண்கை செய்யென்று காண்கை. நாணி வேறொன்று காணுமையேமுடியும். நயநேந்த்ரியத்துக்கன்று, இந்தவர்த்தம் வாகிந்த்ரியத்துக்குமொக்கும். (சீர்பரவாதுண்ணவாய்தானுறுமோவொன்று) அவனுடைய கல்யாணகுணங்களைச்சொல்லாதே வாக்கு வேறொன்றை உண்ணஉறாது.

அரு.—ஐம்பத்திரண்டாம்பாட்டு — (அதொன்றும்) என்ற வாக்யம் பிழை. (௫௨)

ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்
கென்செய்வ னென்றே யிருத்திநீ,—நின்புகழில்
வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ, நீயவர்க்கு
வைகுந்த மென்றருளும்வான். ௫௩.

அந்.—செம், கண், மால், யான், உரைப்பது, (௫) ஒன்று, உண்டு, நீ, உன், அடியார்க்கு, (௧௦) என்செய்வன், என்று, இருத்தி, நின், புகழில், (௧௫) வைகும், தம்சிந்தையிலும், மற்று, அவர்க்கு, நீ, (௨௦) அருளும், வைகுந்தம்என்று, வான், இனிதோ. (௨௪)

அர்.—சிவந்த, திருக்கண்களையுடைய, ஸர்வேஸ்வரனே! நான், (உனக்குச்) சொல்லுவது, (௫) ஒருவார்த்தை, உண்டு; நீ, உன்னுடைய, தாஸபூ

(க) முதல் திருவந்தாதி - ௧௧.

தர்க்கு, எந்தஉபகாரத்தைச்செய்வேன், என்று (சிந்தாக்ராந்தனாய்), இருக்கிறாய். உன்னுடைய, கல்யாணகுணங்களில், (கரு) தங்குகிற, தங்களுடைய சிந்தையி (அத்யவஸாயத்தி)லும் காட்டில், அதற்குமேல், அவர்களுக்கு, நீ, (உ0) க்ருபைபண்ணுகிற, ஸ்ரீவைகுண்டமென்று ப்ரஸித்தமான, பரமாகாசம், போக்யமாகுமோ? (உச) ருங.

வ்யா.—அவ.—ஐம்பத்துமூன்றாம்பாட்டில்,(ஒன்றுண்டு) "என்னுடைய இந்த்ரியங்களுமுன்னை யநுபவிக்கும்படியாயிற்று" என்ன; "அவ்வளவேயோ? இன்னும்சிலவுண்டுகாணுமுமக்குச் செய்யக்கடவது" என்ன; "எனக்குச் செய்யாததுண்டோ?" என்கிறார்.

(ஒன்றித்யாதி) † ஆரேனுமாகத் தெளிந்தார் கலங்கினார்க்குச் சொல்லக்கடவதிறே. (உன்னடியார்க்கித்யாதி) நிரபேக்ஷர்க்கு "என் செய்வன்" என்றிருக்கிற தர்மந்தான் எப்போதுமொருபடிப்பட்டிருக்கும். (க) "ருணம்ப்ரவ்ருத்தமிவமே" பாண்டவர்கள் முடிசூடினவன்றும் த்ரௌபதி குழல்முடித்தபின்பும், பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க அவர்களை "ரக்ஷகர்" என்று நினையாதே தன்பேர் சொன்னவளுக்குத் திருவுள்ளத்திலே † தனிசுபட்டிருக்குமாபோலே, அந்த ஆநுகூல்யமுடையார்க்கு என்றும் "என் செய்வேன்" என்றிருத்தி. (நின்புகழித்யாதி) உன்புகழிலேதங்குகிற சிந்தையிற்காட்டிலினிதோ? நீபோரப்பொலியச் சொல்லிக்கொடுக்கிற பரமபதம். ஸித்தத்துக்கிடைநிற்குமோ? ஸாத்யம். இதுக்கது § உக்திஸாரமே காரணம். ருங.

அரு.—ஐம்பத்துமூன்றாம் பாட்டு.—சேஷியைக்குறித்து "சொல்லுகிறேன்" என்னலாமோ வென்ன அருளிச்செய்கிறார் (ஆரேனுமாக) இத்யாதி. (தனிசு)-ருணம். பரமபதம் ஶ்லாக்யமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (இதுக்கது உக்திஸாரம்) இத்யாதி. ருங.

வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ,
கானோ வொருங்கிற்றும் கண்டிலமால்,—ஆனீன்ற
கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம்,
வன்துயரை யாவா மருங்கு. ருச.

---

(க) பாரதம் - உத்யோக - ருக - உஉ.

§ குணாநுபவயோக்யமான இந்த ஜந்மத்திற்காட்டில் பரமபதம் ஶ்லாக்யமென்கைக்குக் காரணம் பரமபதம் உக்திஸாரமாயிருப்பதே என்று யதாஶ்ருதபங்க்தி தாத்பர்யம்.

அந்.—ஆன், ஈன்ற, கன்று, தாம், உயர, (ரு) எறிந்து, காய், உதிர்த்தார், தாள், பணிந்தோம், (கo) வன், துயரை, மருங்கு, கண்டிலம், ஆல், (கரு) வானோ, மறி, கடலோ, மாருதமோ, தீயகமோ, (உo) கானோ, ஒருங்கிற்று, ஆவா. (உ௬)

அர்.—பசு, பெற்ற, வத்ஸாஸுரனைத், தாம், உயர, (ரு) எறிந்து, விளங்கனியை, விழவிட்டவனுடைய, திருவடிகளை, ஆஸ்ரயித்தோம் ; (கo) வலிய, பாபத்தை, (நம்) ஸமீபத்திலும், கண்டிலோம். ஆகையால், (கரு) (அது) ஆகாசத்திலோ, அலையெறிகிற, கடலிலோ, காற்றிலோ, அக்நியிலோ, (உo) காட்டிலோ, சேர்ந்தது. ஐயோ. (உ௬) ருசு.

வ்யா.—அவ.—ஐம்பத்துநாலாம்பாட்டில், (வானோ) "உம்முடைய ப்ரதிபந்தகம் செய்ததென்?" என்ன, "நானுமறிகிறிலேன்" என்கிறார்.

(வானித்யாதி) ஆகாசகமநம்பண்ணிற்றோ? கடலிலே புக்கு முடிந்ததோ? காற்றோடே கலந்துபோயிற்றோ? அக்நிப்ரவேசம் பண்ணிற்றோ? † மஹாப்ரஸ்த்தாநம்பண்ணிற்றோ? (ஒருங்கிற்று) இவற்றிலெங்கேசேர்ந்தது? (மருங்கும் கண்டிலமால்) ஸமீபத்திலே காணுதொழிகையால். † "ஒருங்கிற்றுங்கண்டிலமால்" என்றதிலே மருங்கென்றது பொருளின்றிக்கேகிற்கும். (ஆனித்யாதி) ப்ரபல ப்ரதிபந்தகங்களைப்போக்குமவர் திருவடிகளிலே பணிந்திருந்தோம்: நம்மோடே நெடுநாள் பழகிப்போந்த வலியதுயரை அருகுங்கண்டிலோம். இவரெங்கே புக்குமுடிந்தார்; ஐயோ ஐயோ வென்கிறார். ருச.

அரு.—ஐம்பத்துநாலாம் பாட்டு.—(மஹாப்ரஸ்த்தாநம்) —மஹாவிந்த்யம். கண்டிலமென்னவமையாதோ, "மருங்கு" என்று விசேஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (ஒருங்கிற்றும்) இத்யாதி. என்னருகிற் கானோமென்றபடி. ருச.

மருங்கோத மோதும் மணி நாகணையார்,
மருங்கேவர வரியரேலும்,—ஒருங்கே
எமக்கவரைக் காணலா மெப்பொழுது முள்ளால்,
மனக்கவலை தீர்ப்பார் வரவு. ருரு.

அந்.—வரவு, மனம், கவலை, தீர்ப்பார், மருங்கு, (ரு) ஓதம், மோதும், மணி, நாகுஅணையார், மருங்கே, (கo) வரஅரியரேனும், எமக்கு, உள்ளால், எப்பொழுதும், ஒருங்கே, (கரு) அவரை, காணலாம். (கஎ)

அர்.—(தம்முடைய) வரவாலே, மநஸ்ஸிலுள்ள, க்லேஶத்தைப், போக்குமவராய், ஸமீபத்தில், (ரு) திரைகள், அடிக்கும் (ஸ்ப்ருசிக்கும்)படி, மணிகளையுடைய, திருவநந்தாழ்வானுகிற படுக்கையையுடையரானவர், ஸமீபத்தில், (கo) சென்றுகிட்ட துர்லபராயினும், நமக்கு, மநஸ்ஸினுல், எப்போதும், ஒருபடிப்பட, (கரு) அவரை, ஸேவிக்கலாம். (கஎ) ருரு.

வ்யா.—ஐம்பத்தைந்தாம்பாட்டில், (மருங்கித்யாதி) வரவாலென் மனக்கவலை தீர்ப்பார், அருகே கடலில் திரைத்திவலை துடைகுத்த த்திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவர் அருகேசெல்ல வரியரேலும் நமக்கொருபடிப்பட ஹ்ருதயத்திலே எப்போதுமுளர்.

அந.—ஐம்பத்தைந்தாம்பாட்டு.—[வரவுமனக்கவலை தீர்ப்பார், மருங்கோதம் மோதும்மணிநாகணையார் மருங்கேவரவரியரேலும் - நமக்கு - ஒருங்கே-உள்ளால் எப்பொழுதும் காணலாம்.] மநஸ்ஸிலே ஒருபடிப்பட எப்போதுங் காணலாமென்றபடி. ருரு.

வரவாறொன் றில்லையால் வாழ்வினிதால், எல்லே
ஒருவாறொருவன் புகாவாறு,—உருமாறும்
ஆயவர்தாம் சேயவர்தா மன்றுலகம் தாயவர்தாம்,
மாயவர்தாம் காட்டும் வழி. ருசு.

அந்—ஒரு ஆறு, ஒருவன், புகாஆறு, உருமாறும், ஆயவர்தாம், (ரு) சேயவர்தாம், அன்று, உலகம், தாயவர்தாம், மாயவர்தாம், (கo) காட்டும், வழி, வரஆறு, ஒன்று, இல்லை, (கரு) வாழ்வு, இனிது, எல்லே, (கஅ) ஆல்.

அர்.—ஒருஉபாயத்தில், ஒருசேதநன், ப்ரவேசியாதபடி, (அவர்களுக்காகத்தன்) ஸ்வரூபத்தைவேறாக்கின, க்ருஷ்ணனாய், (ரு) (பிறர்க்கு) தூரஸ்த்தராய், அக்காலத்தில், லோகத்தை, அளந்தத்ரிவிக்ரமனாய், ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையரானவர், (கo) காட்டின, உபாயம், வந்தப்ரகாரம், ஒருபடியாலும், அறிகிறிலேன். (கரு) பலம், போக்யமாயிருக்கிறது. இதென்ன ஆஶ்சர்யம். (கஅ) ஆலென்றது அசை.

வ்யா.—அவ.—ஐம்பத்தாறும்பாட்டில், (வரவாறு) "எல்லார்க்குமருகும் செல்லவரியவ னுமக்கு எளியனானபடியென்?" என்ன; "நானுமறியேன்" என்கிறார்.

(வரவாறொன்றில்லையால்). அடியில்லையாகில் பலம்சுருங்கியிருக்குமோ வென்னில், (வாழ்வினிதால்) பலமதிகமா யிருக்கும். (எல்லே ஒருவாறொருவன் புகாவாறுருமாறும்) "நமக்கடியில்லை" என்றுராய வேண்டாதபடி ஒருவழியிலொருவனைப் புகாதபடி தன்

னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை யழியமாறும். எல்லா உபாயங்களையும் விட்டென்னையே பற்றென்கை. போக்தாவினுடைய உபாயாநுஷ்ட்டாநங்களை அவர்க்காகத் தான் † அநுஷ்ட்டிக்குமென்று கருத்து. எல்லாம் விட்டென்னைப் பற்றென்னுமிவர், (சேயவர்தாம்) அர்ஜுநனுக்குக் கையாளாயிருக்கச்செய்தே துர்யோதநாதிகளை அம்புக்கிரையாக்கி அவர்களுக்குத் தூரியாயிருக்குமவர். (அன்றுலகம் தாயவர்தாம்) நினைத்தபோது தாமேவந்து கிட்டுமவர். (மாயவர்தாம் காட்டும்வழி) இப்படி ஆஸ்சர்யபூதரானவர் காட்டுமுபாயம், வராவாறென்றில்லையால் வாழ்வினிதால். ருசு.

அரு.—ஐம்பத்தாறும்பாட்டு—"ஒருவன் ஒருவாறு புகாவாறு" - உபாயாந்தரங்களிலே புகாதப்ரகாரம். "உருமாறும்" - தாமே யுபாயமென்று காட்டுகைக்குத் தம்மையழியமாறி யவதரிக்குமவர்தாம். (அநுஷ்ட்டிக்கை) இவர்களுக்காக அவதரித்துத் தன்னையே உபாயமாகக்காட்டுகை. வாழ்வினிதால் - எல்லே - இதென்ன ஆஸ்சர்யம். ருசு.

வழித்தங்கு வல்வினையை மாற்றானோ நெஞ்சே,
தழீஇக்கொண்டு போரவுணன் றன்னைச்,—சுழித்தெங்கும்
தாழ்விடங்கள் பற்றிப் புலால்வெள்ளம் தானுகள,
வாழ்வடங்க மார்விடந்த மால். ருஎ.

அந்.—நெஞ்சே, போர், அவுணன்தன்னை, தழீஇக்கொண்டு,தாழ்வு, (ரு) இடங்கள், எங்கும்பற்றி, புலால்வெள்ளம்தான், சுழித்துஉகள, வாழ்வு, (௧0) அடங்க, மார்வு, இடந்த, மால், வழி, (௧ரு) தங்கு, வல், வினையை, மாற்றானோ. (௧௯)

அர்.—ஓமநஸ்ஸே! யுத்தத்திலே, ஹிரண்யாஸுரனைக், கட்டிக்கொண்டு, தாழ்ந்த (பள்ளமான), (ரு) ப்ரதேசங்கள், முழுமையும்வ்யாபித்து, ரக்தப்ரவாஹம், சுழித்துக்கொண்டு புரளும்படியாகவும், (அவனுடைய) ஐஸ்வர்யம், (௧0) அடங்கும்படியாகவும், மார்பைப், பிளந்த, ஸர்வேஸ்வரன், இடையிலே (௧ரு) தங்கப்பண்ணுமதாய்(ப்ரதிபந்தகமாய்), ப்ரபலமான, பாபங்களைப், போக்கானோ? (௬எ)

வ்யா.—ஐம்பத்தேழாம்பாட்டில், (வழித்தங்கு) வந்தேறிகளான அவித்யாதிகளையும் ப்ராப்யாபாஸங்களையும் போக்கானோ? ஹிரண்யனைப் போக்கினவனுக்கு இதொருபொருளோ? (நெஞ்சே தழீஇ இத்யாதி) முரட்டு ஹிரண்யனை ஸ்பர்சித்துப் †பள்ளமெல்

(௧) திருமொழி - ௧௧ - ௪ - ௪.

லாம்ருதிரவெள்ளம் சுழிக்கும்படி (க) "பெருநீரில்மும்மைபெரிது" என்னும்படி ருதிரம்வெள்ளமிட அவனைஸ்வர்யமொடுங்க மார்வி டந்தஸர்வேஶ்வரன், வழித்தங்கு வல்வினையைமாற்றுனே நெஞ்சே.

அரு.—ஐம்பத்தேழாம்பாட்டு—போரவுணன்" - யுத்தோந்முகன். "தாழ்விடம்" - தாழ்ந்தவிடமாய், பள்ளமென்றபடி. "புலால்வெள்ளம்" - ரக்த வெள்ளம். ருஎ.

மாலேபடிச்சோதி மாற்றேல், இனியுனது
பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்,—மேலால்
பிறப்பின்மை பெற்றடிக்கீழ்க் குற்றேவ லன்று,
மறப்பின்மை யான் வேண்டும் மாடு. ருஅ.

அந்:—மாலே, படிச்சோதி, உனது, பால்போல், சீரில், (ரு) பழுத்து ஒழிந்தேன், இனி, மாற்றேல், மேலால், பிறப்புஇன்மை, (கo) பெற்று, அடிக்கீழ், குற்றேவல், அன்று, மறப்புஇன்மை, (கரு) யான், வேண்டும், மாடு. (கஅ)

அர்.—(ஆஶ்ரித) வ்யாமுக்தனே! திவ்யவிக்ரஹதேஜஸ்ஸையுடையவனே! உன்னுடைய, பால்போலதிபோக்யமான, கல்யாணகுணங்களில், (ரு) (அவகாஹித்து) பக்வனாய்விட்டேன். இனிமேல், (அதை) மாற்றுதொழியவேணும். மேலுள்ளகாலத்திலே, ஜந்மநிவ்ருத்தியை, (கo) அடைந்து, (உன்) திருவடிகளின்கீழ், கைங்கர்யத்தை, அன்று (நானாசைப்படுவது); (எப்போதும் திருவடிகளின்) விஸ்ம்ருதியில்லாமையே, (கரு) நான், ஆசைப் படும், தநம். (ருஅ)

வ்யா.—அவ.—ஐம்பத்தெட்டாம்பாட்டில், (மாலே)"இனி யுன்னுடையவநுபவத்துக்கு அவிச்சேதமே வேண்டுவது" என்கிறார்.

(மாலேபடிச்சோதி) ஸர்வேஶ்வரத்வத்தையும் †ஸ்வாபாவிகமானவிக்ரஹத்தையும் சொல்லுகிறது. ஆசாலேசமுடையார்பக்கல் வ்யாமோஹத்தையும் த்வேஷம்பண்ணினாலும் விடப்போகாதபடியையும் சொல்லுகிறதென்றுமாம். †ஆத்மகுணங்களையும் தேஹகுணங்களையுஞ் சொல்லுகிறதென்றுமாம். (மாற்றேலினி) வைத்த §இறையிலியை மாற்றாதேகொள், இறையிலியேதென்னில், (உனது பாலேபோல் சீரில்பழுத்தொழிந்தேன்) இவ்விறையிலியை மாற்றாதேகொள். (மேலாலித்யாதி) ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாகப் பரமபதத்திலே யுன்திருவடிகளிலே யடிமைசெய்கையன்று எனக்கு தநம்;

§ இறையிலி - அநந்யபோக்யத்வம்.

பரமபதத்தில் நீயிருக்குமிருப்பை மறவாமை. †பரமபதத்திலே போனாலல்லது மறவாமை யில்லாமையாலே பரமபதமும் வேண்டி னாராய்ப்பலித்தது. †ஸாவித்ரியினுடைய பர்த்தாவை ம்ருத்யுகொடு போக, "என்பர்த்தாவைத்தரவேணும்" என்று அவனையபேக்ஷிக்க, "இதொன்று மொழிய வேறே சில வேண்டிக்கொள்" என்ன, "இவன்வயிற்றிலே எனக்கொரு ப்ரஜையுண்டாகவேணும்" என்று வேண்டிக்கொண்டாற்போலே. இவர்க்கு மறப்புத்தானுண்டோவெ ன்னில்; ப்ரக்ருதி ஸம்பந்தமுடையார்க்கு வருமது நமக்கும் வா ராதோ" என்று பயப்படுகிறார். ஊரடைய வெந்துகொண்டு வா ராநின்றால், "நம்மகமொன்றும் பிழைக்கும்" என்று பயங் கெட்டி ருப்பாருண்டோ? ருஅ.

அரு.—ஐம்பத்தெட்டாம்பாட்டு—"படிச்சோதி"ஸ்வாபாவிகமான விக்ர ஹமென்னுதல், விக்ரஹத்தினுடைய காந்தி என்னுதல். விவரணம் - (ஆத்ம குணங்களையும்) இத்யாதி. மறவாமையமையுமோ, பரமபதம் வேண்டாவோ வென்ன அருளிச்செய்கிறார் (பரமபதத்திலேபோனால்) இத்யாதி. இத்தை யபேக்ஷிக்கவே அதுபலித்ததெப்படியென்ன அருளிச்செய்கிறார் (ஸாவித்ரி) இத்யாதி. ருஅ.

மாடே வரப்பெறுவராமென்றே, வல்வினையார்
காடானு மாதானும் கைக்கொள்ளார்,— ஊடேபோய்ப்
பேரோதம் சிந்துதிரைக் கண்வளரும், பேராளன்
பேரோதச் சிந்திக்கப் பேர்ந்து. ருகூ.

அந்.—பேர், ஓதம், சிந்து, திரை, ஊடேபோய், (ரு) கண்வளரும், பே ராளன், பேர், ஓத, சிந்திக்க, (க) வல், வினையார், பேர்ந்து, காடானும், ஆதா னும், (கரு) கைக்கொள்ளார், மாடே, வரப்பெறுவராமென்றே. (கஅ)

அர்.—பெரிய, ஸமுத்ரத்தில், சிதறின, அலைகள், உள்ளே (ஸமீபத்தில்) வந்து, (ஸ்ப்ருசிக்கும்படி,) (ரு) கண்வளருகிற, பெருமையையுடையவனு டைய, திருநாமங்களைச், சொல்லவேணுமென்று நினைக்கப்புகில், (க௦)க்ரூர மான, பாபமானவர்(நம்மை) விட்டுப்போய், காட்டையாவது, மற்றெதையா வது, (கரு) பற்றுகிறிலர். (இதுக்கடிமுன்போல்,) நம்ஸமீபத்தில், வரலா மென்றோ? (கஅ) ருகூ.

வ்யா.—ஐம்பத்தொன்பதாம்பாட்டில், (மாடே)(ஊடேபோய்ப் பேரோதம் சிந்துதிரைக்கண் வளரும்பேராளன் பேரோதச் சிந்திக்க ப்பேர்ந்து - வல்வினையார் காடானுமாதானும் கைக்கொள்ளார் -

மாடேவரப் பெறுவராமென்றே) கடலில்திரைகள் முறிந்துவந்து சிறுதிவலையாய்த் துடைகுத்தக் கண்வளராநின்று ஆஶ்ரிதவிஷய த்தி லோர்ரத்துக் கெல்லையின்றிக்கேயிருக்கிறவருடைய திருநாமம் சொல்ல நினைத்ததறிந்தால், வல்வினையாரிங்குநின்றும் பேர்ந்து தம க்குப்புகலாக மலையாகிலும் கடலாகிலும் ஏதேனுமொன்று கைக் கொள்ளுகிறிலர்; கைக்கொள்ளாதொழிகிறது என்னருகே வரலா மென்றே? ௫௯.

அரு.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு—"ஊடேபோய்" - உள்ளேபோய்; திருமேனியண்டையிலேபோயென்றபடி. ௫௯.

பேர்ந்தொன்று நோக்காது பின்னிற்பாய் நில்லாப்பாய்,
ஈன்துழாய் மாயனையே யென்னெஞ்சே,—பேர்ந்தெங்கும்
தொல்லைமா வெந்நரகில் சேராமல் காப்பதற்கு,
இல்லைகாண் மற்றோ ரிறை. ௬௰.

அந்.—என்நெஞ்சே! தொல்லை, மா, வெம், நரகில், (௫) சேராமல், கா ப்பதற்கு, எங்கும், பேர்ந்து, மற்று, (௧௦) ஓர், இறை, இல்லைகாண். பேர்ந்து, ஒன்று, (௧௫) நோக்காது, ஈன், துழாய், மாயனையே, பின்நிற்பாய், (௨௦) நில் லாப்பாய். (௨௧)

அர்.—என்னுடைய ஹ்ருதயமே! பழையதாய்ப், பெரிதாய், க்ரூரமான, நரகத்தில், (௫) அடையாதபடி, ரக்ஷிக்கைக்கு, எங்கேயாகிலும், (இவனை) விட்டு, வேறு, (௧௦) ஒரு, நிர்வாஹகன், கிடையாதுகிடாய். (ஆகையால்) இவனைவிட்டு,வேறொன்றையும்,(௧௫) பாராமல்,போக்யமான, திருத்துழாய் மாலையையுடைய, ஆஶ்சர்யபூதனையே, பின்தொடரிலும் தொடரு; (௨௦) பின்தொடரா தொழியிலுமொழி. (௨௧) ௬௰.

வ்யா.—அறுபதாம்பாட்டில், (பேர்ந்தொன்று) வேறொருபதார் த்தத்தை நோக்காதேயவனை யநுவர்த்திக்கிலு மநுவர்த்தி, உனக்குரி யையாய் அநர்த்தப்படிலும்படு. (ஈன்துழாயித்யாதி) ஸம்ஸார ஸம்பந்தமறுகைக்கு எங்குப்புக்காலு மவனையொழிய ஆஶ்ரயணீய தத்வமில்லை. அவனையநுவர்த்தி; ஸ்வதந்த்ரமாய்க் கெடிலுங்கெடு.

அரு.—அறுபதாம்பாட்டு — [என் நெஞ்சே! தொல்லைமாவெம்நரகில் சேராமல் காப்பதற்கு எங்கும்பேர்ந்துமற்றோரிறையில்லைகாண் - ஆனபின்பு பேர்ந்தொன்று நோக்காது - ஈன்துழாய்மாயனையே - பின்நிற்பாய், நில் லாப்பாய்] என்றந்வயம். ௬௰.

இறைமுறையான் சேவடிமேல் மண்ணளந்த வந்நாள்,
மறைமுறையால் வானாடர்கூடி,—முறைமுறையின்
தாதிலகு பூத்தெளித்தா லொவ்வாதே, தாழ்விசும்பின்
மீதிலகித் தான் கிடக்கும் மீன். சுக.

அந்.—இறை, முறையான், மண், அளந்த, சே, (ரு) அடிமேல்,அந்நாள், வானாடர், கூடி, முறைமுறையின், (கo)மறை முறையால், தாது, இலகு, பூ, தெளித்தாலொவ்வாதே, (கரு) தாழ், விசும்பின்மீது, இலகி, கிடக்கும், மீன் தான். (உo)

அர்.—ஸ்வாமியான, ப்ராப்தியையுடையவனுடைய, பூமியை, ஆக்ரமித்த, சிவந்த, (ரு) திருவடிகளின்மேலே, அந்த த்ரிவிக்ர மாவதாரகாலத்தில், தேவர்கள், சேர்ந்து, வரிசைக்ரமமாயிருந்து, (கo) வேதோக்தப்ரகாரத்தினால், தாதுகளினாலே, விளங்காநின்றுள்ள, புஷ்பங்களைச், சிதறினாற்போலேயிருந்தது, (கரு) வெளியான, ஆகாசத்தின்மேல், ஒளிவிட்டுப், பரம்பியிருக்கிற; நக்ஷத்ரங்கள். (உo) சுக.

வ்யா.—அவ.—அறுபத்தோராம்பாட்டில்,(இறை) †லோகயாத்ரையை அநுஸந்திக்கப்புக்காலும் அவனை முன்னாகவல்லது காணமாட்டாமை சொல்லுகிறது. சிறியாச்சான்,“சப்தாதிவிஷயங்களில் நின்றும் நாம்மீளமாட்டாதாற்போலே ஆழ்வார்கள் பகவத்விஷயத்தில் நின்றும்மீளமாட்டார்கள்” என்று பிள்ளைக்குப்பணித்தான். ப்ரஹ்மாதிகளுக்குப் பரமபதத்திலிருக்குமிருப்பு அநுபவிக்க நிலமன்று, உகந்தருளினவிடங்களிலே யநுபவிக்குமத்தனை.

(இறையித்யாதி) ஈஶ்வரனை முறையாலே திருவுலகளந்தருளினவனுடைய திருவடிகளிலே. (வானாடரித்யாதி) தேவர்கள்வேதம் சொன்னமுறையாலே திருவுலகளந்தருளின திருவடிகளிலே உஜ்ஜ்வலமான புஷ்பங்கள் தெளித்தாற்போலேயன்றோ? ஒத்தவிசும்பின் மேல் கிடக்கிற நக்ஷத்ரங்களிருக்கிறது. சுக.

அரு.—அறுபத்தோராம்பாட்டு — (லோகயாத்ரை) - ஆகாசத்தைப் பார்க்கை. புறம்பே கண்வைக்கும்போதும் அவனையொழியக் கண்வையார்களென்னுமதுக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (சிறியாச்சான்) இத்யாதி. “முறைமுறையின்” - முறைமுறையாக - வரிசையடைவே. [இறைமுறையான் மண்ணளந்த சேவடிமேல் அந்நாள்வானாடர்கூடி, முறைமுறையின்-முறை முறையாக, தாதிலகு தொடங்கி—கிடக்கும்] என்றந்வயம். சுக.

மீனென்னும் கம்பில் வெறியென்னும் வெள்ளிவேய்,
வானென்னும்கேடிலா வான் குடைக்குத்,—தானோர்
மணிக்காம்புபோல் நிமிர்ந்து மண்ணளந்தான், நங்கள்
பிணிக்காம் பெருமருந்து பின். சுஉ.

அந்.—மீன்என்னும், கம்பில், வெறி, வெள்ளி, என்னும், (ரு) வேய், வான்என்னும் கேடுஇலா, வான், குடைக்கு, (கo) தான், ஓர், மணிக்காம்பு போல், நிமிர்ந்து, மண்அளந்தான், (கரு) பின், நங்கள்பிணிக்கு, பெருமருந்து, ஆம். (கசு)

அர்.—நக்ஷத்ரங்களாகிற, கம்புகளையுடையதாய், நக்ஷத்ரங்களுக்குஅரசனுகிய சந்த்ரன், சுக்ரன், என்று ப்ரஸித்தமானவற்றைக், (ரு) குழையாக உடைத்தாய், ஆகாசமென்று பேரையுடைய, அழிவில்லாத, பெரிய, குடைக்குத் (கo) தான், ஒரு, நீலமணிமயமான காம்புபோல், வளர்ந்து, பூமியையளந்தவன், (கரு) அதற்குமேல், நம்முடைய (ஸம்ஸாரமாகிற) நோய்க்குப், பெரிய, ஔஷதமாவான், (கஅ) சுஉ.

வ்யா.—அறுபத்திரண்டாம்பாட்டில், (மீனித்யாதி) நக்ஷத்ரங்களாகிற கம்புகளையும், (க) "உடுபதி" என்னுமாபோலே நக்ஷத்ரங்களுக்கு ராஜாவான சந்த்ரசுக்ரர்களைக் குழலாக உடைத்தான,நித்யமாய்ப் பெருத்த ஆகாசமாகிறகுடைக்கு நீலமணியாலே சமைந்ததொரு காம்புபோலே வளர்ந்து பூமியையளந்தான். (நங்களித்யாதி)திருவுலகளந்து தேவர்களுடைய துஃகத்தைப்போக்கினாற்போலே நம்முடைய ஸம்ஸாரத்துக்கு பரமான ஔஷதம். சுஉ.

அரு.—அறுபத்திரண்டாம்பாட்டு.—மண்ணளந்தஅபாதானத்தைக்குடையுங் காம்புமாக்கி நிரூபிக்கிறார். (வெறி) சந்த்ரன். தாராபதி. (வெள்ளி) சுக்ரன் இவர்கள். "வேய்" என்று குடையிலடியிலே யிருக்கிற மூங்கில் குழல்.

பின்துரக்கும் § காற்றிழந்த சூல்கொண்டல் போர்ந்தும்போய்,
வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்தே,—அன்று
திருச்செய்ய நேமியான் தீயரக்கி மூக்கும்,
† பருச்செவியு மீர்ந்த பரன். சுரு.

---

(க)

§ ப்ராசீந தாளபத்ர மூலவ்யாக்யாந கோசங்களில் காற்றிழந்த என்ற பாடம் வ்யாக்யாநத்துக்கும் சேர்ந்திருக்கும். ஆதுநிககோசங்களில் மாத்ரம் காற்றிழிந்த என்று காண்கிறது.

† பரிச்செவியும் என்றுரையில் பாடம். பரி - குதிரையினுடைய செவி போன்ற என்று பொருள்.

அந்.—பின், துரக்கும், காற்று, இழந்த, சூல், (ரு) கொண்டல், திரு, செய்ய, நேமியான், அன்று, (௧0) தீ, அரக்கி, மூக்கும், பரு, செவியும், (௧ரு) ஈர்ந்த, பரன், பேர்ந்தும், போய், வன், (௨0) திரைக்கண், வந்து, அணைந்த, வாய்மைத்து. (௨௪)

அர்.—பின்னேநின்று, ஓடப்பண்ணுகிற, வாயுவை, விஶ்லேஷித்த (ஸ்வஸ்த்தாநத்திலேயிருக்கிற), கர்ப்பத்தையுடைய, (ரு) மேகமானது, வீர ஶ்ரீயையுடைய, சிவந்த, திருவாழியையுடையனாய், வநவாஸம் சென்ற வன்று, (0) கொடியளான, சூர்ப்பணகையென்னும் ராக்ஷஸியினுடைய, மூக்கையும், பருமனான, செவிகளையும், (௧ரு) அறுத்த, ஸர்வாதிகன், (இப்பூமியில்நின்றும்) கிளம்பிச், சென்று, வலிய, (௨0) அலைகளையுடைய திருப்பாற்கடலில், வந்து, சேர்ந்த, ஸ்வபாவத்தை யுடைத்தாயிருந்தது. (௨௪) சுரு.

வ்யா.—அறுபத்துமூன்றாம்பாட்டில், (பின்துரக்குமித்யாதி) பின்னே துரக்கிறகாற்றையிழந்த சூல்கொண்டல், திரியட்டும் கடலிலேபுக்குக்கிடந்த வாய்மையன்-மெய்யானஒப்பையுடையன், என்று-வாய்மைத்து என்றத்தை வாய்மையனென்று † வசநத்தை மாறாடிக் கொள்ளவுமாம். பருச்செவியுமீர்ந்தபரன்படிஎன்றுஅத்யாஹரித்துக் கொள்ளவுமாம். "ஒன்றுக்கு வசநவ்யத்யயம்பண்ணவேணும், ஒன்றுக்கு படிஎன்று அத்யாஹரிக்கவேணும்; இரண்டுமிறுக்குமொழிய உபமாநோபமேயங்களைமாறாடாதே நேரேயோஜிக்கப்போம்" என்று ஜீயருக்குவிண்ணப்பம்செய்தபடி. [பின்துரக்கும்காற்றிழந்த சூல்கொண்டல் - அன்றுதிருச்செய்ய நேமியான் தீயரக்கிமூக்கும் பருச்செவியுமீர்ந்தபரன் - பேர்ந்தும்போய், வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்து] பின்துரக்குங் காற்றிழந்த சூல்கொண்டல் பெருமாள் ராவணவிஜயம்பண்ணி, திரியட்டும் திருப்பாற்கடலிலே போய்க் கண்வளர்ந்தாற்போலே யிருந்தது. சுரு.

அரு.—அறுபத்துமூன்றாம்பாட்டு—(வசநத்தைமாறாடுகை) - வாய்மைத்தென்ற நபும்ஸகத்தை வாய்மையன்என்று புல்லிங்கமாக்குகை. படியென்று ஸ்வபாவமாய்,அத்யாஹார்ய பக்ஷத்தில் லிங்கவ்யத்யயம் வேண்டா. நம்பிள்ளைக்கு, மேகத்தின் ஸ்வபாவம்போலே யிருக்கிறது, பெருமாள்படியென்றால் மிறுக்குண்டு; பெருமாளுடைய ஸ்வபாவம்போலே யிருக்கிறது மேகத்தின்படியென்றால் மிறுக்கில்லையென்று கருத்து. மேகமானது ராவணவதம் பண்ணித் திருப்பாற்கடலிலே அணைந்தவாய்மைத்து - ஸ்வபாவத்தை யுடைத்து என்றுபலிதம். சுரு.

பரனுமவனுதல் பாவிப்பராகில்,
உரனு லொரு மூன்றுபோதும்,—மரமேழன்
றெய்தானைப் புள்ளின்வாய் கீண்டானையே, அமரர்
கைதான் தொழாவே கலந்து. சுச.

அந்.—அன்று, எழ்மரம், எய்தானை, புள்ளின்வாய், கீண்டானை, (ரு) பரனுமவனுதல், உரனுல், ஒரு, மூன்றுபோது, பாவிப்பராகில், (கo) அமரர், கைதான், கலந்து, தொழாவே. (கச)

அர்.—முற்காலத்தில், ஏழுமராமரங்களை, அடித்துவிழவிட்ட சக்ரவர்த்தி திருமகனையும், பகாஸுரனுடைய வாயைக், கிழித்தக்ருஷ்ணனையும், (ரு) பராத்பரனுயிருக்குமவனென்று, ஹ்ருதயத்தினுல், அத்விதீயமான, மூன்று (ஸந்த்யா) காலங்களிலும், (தங்களோடு ஸஜாதீயபுத்திபண்ணுமல்) த்யாநித்தார்களேயாகில், (கo) தேவதைகளுடைய, கைகள், சேர்ந்து, (அஞ்சலிபண்ணி), ஆஶ்ரயியாவோ? (அவனிடத்தில் ஸஜாதீயபுத்திபண்ணி ஆஶ்ரயியாமல் கெட்டுப்போகிருர்கள்). சுச.

வ்யா.—அவ.—அறுபத்துநாலாம்பாட்டில், (பரன்)"மநுஷ்யத்வே பரத்வத்தை யநுஸந்தித்தாராகில் பரமபதமென்று வேறே ஆஶ்ரயணீயஸ்தலம் வேணுமோ?" என்கிறது. (பரனித்யாதி) மநஸ்ஸாலே மூன்றுபோதும் "அவன்பரன்" என்றநுஸந்திப்பராகில் ஆஶ்ரிதவிரோதி நிரஸநம்பண்ணினவனையே, அபிமாநிகளான தேவர்களுடைய கையுங்கலந்துதொழுமிறே; அபிமாநத்தாலே தங்களோடு ஸஜாதீயனுக புத்திபண்ணி அநர்த்தப்படுகிருர்களிறே.

அநு.—அறுபத்துநாலாம்பாட்டு.—இங்கே பரத்வமநுஸந்தித்தால் பரத்வந்தேடிப்பரமபதத்துக்குப்போகவேண்டாவென்றபடி. உரனென்று-உரஸ்ஸாய், அத்தாலே நெஞ்சைச் சொல்லுகிறது. "பாவிப்பராகில்" என்கையாலே, அநுஸந்தித்தால் தொழுவர்கள், அநுஸந்தியாமையாலே தொழார்களென்றபடி. சுச.

கலந்துநலியும் கடுந்துயரை நெஞ்சே,
மலங்கவடித்து மடிப்பான்,—விலங்கல்போல்
தொன்மாலைக் கேசவனைநாரணனை மாதவனைச்,
சொன்மாலை யெப்பொழுதும் சூட்டு. சுரு.

அந்.—நெஞ்சே, கலந்து, நலியும், கடும், துயரை, (ரு) மலங்க, அடித்து, மடிப்பான், விலங்கல்போல், தொல், (கo) மாலை, கேசவனை, நாரணனை, மாதவனை, எப்பொழுதும், (கரு) சொல்மாலை, சூட்டு. (கஎ)

அர்.—ஓமநஸ்ஸே! கூடிநின்று, பாதிக்கிற, க்ரூரமாய், துஃகஹேதுவான பாபத்தை, (ரு) நடுங்கும்படி, புடைத்துத், திருப்பியோட்டுகைக்காக, மலை போன்ற (சலிப்பிக்கவொண்ணாத) வனாய், பழையனாய், (கo) பெரியனாய், அழகியகுழலையுடையனாய், ஆஸ்ரிதவத்ஸலனாய், ஸ்ரியஃபதியானவனை (உத்தேசித்து), ஸர்வகாலமும், (கரு) சொல்லாகிறமாலையை (ப்ரபந்தத்தை), ஸமர்ப்பி (ஸ்தோத்ரம்செய்.) (கஎ) சுரு

வ்யா.—அறுபத்தைந்தாம்பாட்டில், (கலந்து) உடனேவந்து கலந்து நலியாநின்ற அநுபவவிநாஸ்யமான பாபத்தை மலங்கவடித்துத் திரியவிடுகைக்காக, அபேத்யனாய் அபரிச்சிந்நனாய் ப்ரசஸ்தகேசனாய் ஆஸ்ரிதவத்ஸலனாயிருந்த ஸ்ரியஃ பதியை, †பரிமளம்மாறுத மாலையை எப்போதும் சூட்டும்படி தன்னைத்தாழ்த்துத்தரும். சுரு.

அரு.—அறுபத்தைந்தாம்பாட்டு.— ஸ்ரீஸூக்தியாகையாலே மற்றை மாலையை வ்யாவர்த்தித்து (பரிமளம்மாறுத) என்கிறது.

சூட்டாய நேமியான் தொல்லரக்க னின்னுயிரை,
மாட்டே துயரிழைத்த மாயவனை,—ஈட்ட
வெறிகொண்ட தண்டுழாய் வேதியனை, நெஞ்சே
அறிகண்டாய் சொன்னே னது. சுசு.

அந்.—சூடுஆய, நேமியான், தொல், அரக்கன், இன், (ரு) உயிரை, மாட்டே, துயர்இழைத்த, மாயவனை, ஈட்ட, (கo) வெறி, கொண்ட, தண், துழாய், வேதியனை, (கரு) நெஞ்சே, அறிகண்டாய், அது, சொன்னேன், (ககூ.)

அர்.—சூடத்தகுந்த ஆபரணமான, திருவாழியையுடையனாய், பழையனான, ராவணஸூரனுடைய, இனிய, (ரு) ப்ராணனை, ஸமீபத்தில்நின்று, க்லேசப்படுத்தின, ஆஸ்சர்யபூதனாய், திரண்ட, (கo) பரிமளத்தை, உடைய, குளிர்ந்த, திருத்துழாய்மாலையையுடையனாய், வேதப்ரதிபாத்யனான ஸர்வேஸ்வரனை, (கரு) ஓமநஸ்ஸே! தெரிந்துகொள்; அர்த்தரஹஸ்யத்தைச், சொன்னேன். (ககூ) சுசு.

வ்யா.—அறுபத்தாறும்பாட்டில், (சூட்டாயநேமியான்) விரோதிநிரஸநம்பண்ணுகையன்றிக்கே யழகுக்குமான திருவாழியையுடையவன். (தொல்லரக்கனித்யாதி) ராவணன் பேணிப்போந்தஉயிரை, அருகே ஸ்ம்ருதிவிஷயமாய்நின்று முடித்த ஆஸ்சர்யபூதனை. (க) “ స్మరన్ రాఘవబాణానాం వివ్యధే రాక్షసేశ్వరః” ஸ்மரந்ராகவபாணாநாம்விவ்யதே ராக்ஷஸேஸ்வரஃ” ஆண்டபடையெல்லாம் பெருமா

(க) ஸ்ரீராமா - யுத்த. சுo - ரு.

ளென்றெழுத்து வெட்டின திருச்சரங்களை நினைத்துக்கிடந்து குலை க்கும்போது அமுக்குகைக் குடலானதன்னை. (ஈட்டவித்யாதி) பரிமளம்திரண்ட திருத்துழாயை யுடையவனுமாய் வேதங்களாலே ப்ரதிபாத்யனுமானவனை. நெஞ்சே! அறிகண்டாய் சொன்னேனுன க்கு அத்தை. விரோதிநிரஸநம்பண்ணுவானுமாய் போக்யனுமாய் வகுத்தவனுமானவனை அறி என்று சொன்னேன், இதுசிலர்க்குச் சொல்லுமதன்று, இத்தை புத்திபண்ணு. கூகூ.

அரு.—அறுபத்தாறும்பாட்டு - அப்படி ஸ்ம்ருதிவிஷயமாய் துக்கப்பட்டானேவென்ன அருளிச்செய்கிறார் (ஸ்மரந்) இத்யாதி. வேதவேத்யனென்கையாலே வகுத்தவனென்கிறது. கூகூ.

அதுவோ நன்றென் றங் கமருலகோ வேண்டில்,
அதுவோ பொருளில்லையன்றே,—அதுவொழிந்து
மண்ணின்றாள்வேனெனிலும் கூடுமட நெஞ்சே,
கண்ணன்தாள் வாழ்த்துவதே கல். கூஎ.

அந்.—அது, நன்றுஎன்று, அங்கு, அமர், உலகு, (ரு) வேண்டில், அது, பொருள்இல்லையன்றே அதுஒழிந்து, மண், நின்று, (கo) ஆள்வேன் எனிலும், கூடும், மடம், நெஞ்சே, கண்ணன், (கரு) தாள், வாழ்த்துவதே, கல். (கஅ)

அர்.—அந்த பகவதநுபவம், விலக்ஷணமென்று (அறிந்து), அவ்வநுபவ யோக்யமாய், நித்யஸூரிகள் நித்யவாஸம்செய்கிற, லோகத்தை (பரமபதத்தை) (ரு) அபேக்ஷிக்கில், அது, ஒருசரக்கில்லையன்றோ? (பெறுதற்கு அசக்யமன்று). அதைவிட்டு, பூமியிலிருந்து, (கo) (போகங்களை) புஜிக்கக்கடவேன் என்றாலும், ஸம்பவிக்கும். (ஸர்வேஸ்வரன் உபயவிபூதியையும் கொடுக்கும்). விதேயமான, மநஸ்ஸே! (அவற்றைவிட்டு) கண்ணனுடைய, (கரு) திருவடிகளை, மங்களாசாஸநம்பண்ணுவதையே, அப்யஸிக்கக்கடவாய். (கஅ) கூஎ.

வ்யா.—அறுபத்தேழாம்பாட்டில், (அதுவித்யாதி) கண்கண்டதொழியப்போகை † யரிது. † இது பொல்லாதென்று "பரமபதம் வேணும்" என்றிருக்கில் அவனுகப்பதாகையாலே அது தருகையிலவனுக்குப் பொருளில்லை. (அன்றேயித்யாதி) அதுவொழிய "பூமியையாள்வோம்" என்று நினைக்கில் அதுவும்தரும். (மடநெஞ்சே இத்யாதி) பவ்யமானநெஞ்சே! அவனுக்கோ அது தருகையில்குறையில்லை, நம்முடைய ஆபிமுக்யமரிது. (கண்ணன்) ஸுலபனானவனுடைய திருவடிகளைக்கற்றாகிலும் வாழ்த்தப்பார். கூஎ.

அந.—அறுபத்தேழாம்பாட்டு—(அரிது) ஆசைப்பட்டும் போகைய ரிது. காணுதத்தையாசைப்பட்டாலும் தருமென்றபடி. "அது" என்கையா லே, அதுக்குப் ப்ரதிகோடியாக, "இது" என்று ஸம்ஸாரம் (பொல்லாதெ ன்று பரமபதம் வேணுமென்று இருக்கில்) என்கிறது. அவன் உபயவிபூதியுந் தந்தாலும் நீ அத்தைவிட்டு அவனை வாழ்த்துகையையே கல்லென்றபடி, ௬எ.

கல்லும் கனைகடலும் வைகுந்தவானுடும்,
புல்லென்றொழிந்தனகொ லேபாவம்,—வெல்ல
நெடியான்நிறங்கரியா னுள் புகுந்து நீங்கான்,
அடியேன துள்ளத் தகம். ௬அ.

அந்.—வெல்ல நெடியான், நிறம் கரியான், உள்புகுந்து, அடியேனது, உள்ளத்துஅகம், (ரு) நீங்கான், கல்லும், கனை, கடலும், வைகுந்தம், (௧௦) வான், நாடும், புல்என்று, ஒழிந்தனகொல், ஏபாவம். (௧ரு)

அர்.—மிக்க உயர்த்தியையுடையனுய், நிறத்தால் கரியனுனவன், உள் ளே ப்ரவேசித்து, அடியேனுடைய, ஹ்ருதயத்தினுள்ளில் நின்றும், (ரு) பிரி கிறிலன். (ஆகையால்) திருமலேயும், கோஷிக்கிற, திருப்பாற்கடலும், ஸ்ரீவை குண்டமென்கிற, (௧௦) பரமாகாசத்திலுள்ள, தேசமும், அல்பமென்னும்படி போய்விட்டது. என்னபாவம்! (௧ரு) ௬அ.

வ்யா.—அவ.—அறுபத்தெட்டாம்பாட்டில், (கல்லும்) கிழவனு டைய திருவடிகளை வாழ்த்துகையொழிய போகமோக்ஷங்களை வேண்டாவென்னும்படி தம்முடைய † ஐக்யம்சொல்லுகிறது.

(கல்லுமித்யாதி) திருமலையை "கல்" என்றும், திருவனந் தாழ்வானை "பாம்பு" என்றும், தன்னை "மாணியாய் மண்ணளந் தாய்" என்றும் சொல்லலாம்படி உறவுடைமையிருக்கிறபடி. திரு மலேயும் திருப்பாற்கடலும் பரமபதமுமென்கிற தேசங்கள் சில § உளவாகவுமாம்; அவற்றிலேதனக்கு ருசியுண்டாகவுமாம்; தோற் றும்படி இருக்கிறிலன். என்னோடு கலந்தபின்பு, † ஸௌபரி ஐம் பதுபெண்களோடே கலந்துபோருகிறவிடத்தில் தன்மக்களைத் தனித்தனியே பிதா "உனக்குக் குறையில்லையே" என்று கேட்க, "என்னுடன்பிறந்தாரை ஒருத்தரையுமறியாதே எப்போதுமென் னோடேயிருக்குமிதுவே வெறுப்பு, வேறொருகுறையில்லை" என்று சொன்னுற்போலே இவரும் "தம்முடைய எல்லா ஸ்த்தாநங்களையும்

§ அரும்பதத்துக்கு "அளவாகவுமாம்" என்று பாடமாய் இப்படி சில ப்ரதேசங்கள் விசாலமாக இருக்கவுமாமென்று அர்த்தம்.

மறந்து என்னையல்லதறிகிறிலர்'' என்கிறார். (ஏபாவம்) †பாபத்தினு டைய ப்ராசுர்யத்தைச் சொல்லுகிறது; விவக்ஷிதார்த்தமாக ஒரு சப்தத்தைப் ப்ரயோகியாமையாலே. (வெல்லநெடியான்) கடக்க நெடியான்; இனி நெடியானில்லையென்னும்படி நெடியவன். (நிறங்க ரியான்) குணங்களில்லை யென்னிலும் விடவொண்ணாத வடிவழகை யுடையவன். (உள்புகுந்தித்யாதி) அடியேனுடைய ஹ்ருதயத்தி னுள்ளே நீங்குவானாயிருக்கிறிலன். "புறப்படிலிவனைக் கிடை யாது'' என்னும்படி யிராநின்றான். சுஅ.

அரு.—அறுபத்தெட்டாம்பாட்டு—(ஐக்யம்) - அவன் தம்மிடத்திலே வந்திருக்கையாலே அவனுக்கும் தமக்குமுண்டான ஐக்யமிப்பாட்டிலே சொ ல்லுகிறதென்றபடி. திருமலையைக் கல்லென்னலாமோவென்ன அருளிச் செய்கிறார் (திருமலை) இத்யாதி. (அளவாகவும்) - விசாலமாகவும் - "புல் லென்று'' புல்லியதாக, குறையாக நினைத்து. ஆனாலந்தஸ்த்தலங்களிலில் லையோவென்ன அருளிச்செய்கிறார் (ஸௌபரி) இத்யாதி. எல்லாஸ்த்தலங் களையும் விட்டுவிட்டானோ என்கிற வெறுப்பாலே (பாபத்தினுடையப்ரா சுர்யம்) என்கிறது. விவக்ஷிதார்த்த வாக்யந்தெரியாது. "வெல்ல" ஐயிக்க என்னுதல், மிகவுமென்னுதல். சுஅ.

அகம்சிவந்த கண்ணினராய் வல்வினைய ராவார்,
முகம்சிதைவராமன்றே முக்கி,—மிகுந்திருமால்
சீர்க்கடலை யுள்பொதிந்த சிந்தனையேன் றன்னை,
ஆர்க்கடலாம் செவ்வே யடர்த்து. சுகூ.

அந்.—வல், வினையராவார், அகம் சிவந்த, கண்ணினராய், முக்கி, (ஞ) முகம் சிதைவராமன்றே, மிகும், திருமால், சீர் கடலை, உள்பொதிந்த, (கo) சிந்தனையேன்தன்னை, செவ்வே, அடர்த்து, ஆர்க்கு, அடலாம். (கஞ)

அர்.—க்ரூரமான, பாபமானவர், (தனக்கிருக்கப் பெருமையாலே கோப த்தினால்) உள்ளே சிவந்த, கண்களையுடையராய், வருந்தி, (ஞ) முகம் வாடின வராவரத்தனை யன்றோ? ஸர்வாதிகனான, ஸ்ரியःபதியினுடைய, கல்யாண குணங்களாகிற ஸமுத்ரத்தை, உள்ளே அடக்கின, (கo) ஹ்ருதயத்தை யுடைய என்னைச் செவ்வையாக, நெருக்கி, ஆர்க்குத்தான், உபத்ரவிக்கப் போகும்? (கஞ) சுகூ.

வ்யா.—அவ.—அறுபத்தொன்பதாம்பாட்டில், (அகம்) இவன் பண்ணின ஐகாந்த்யத்தாலே சரீராரம்பத்துக்கடியான பாபமும் போயிற்று என்கிறார்.

(அகமித்யாதி) முதலியாராய் வர்த்தித்த நம்பாபத்தினர் கோப த்தினலே சிவந்தகண்ணையுடையராய், "செருக்கராய்த் திரிந்த நாமிப்படிபடுவதோ?" என்று முக்கி முகம் கீழ்ப்பட்டு, இழப்பு ண்டு சிதைந்தமுகமுமாய்த் திரியுமத்தனையிறே. (மிகுமித்யாதி) (க) "గుణానామాకరో మహాన్ – குணநாமாகரோமஹாந்" என்று அப ரிச்சிந்நவிஷயத்தைப் † பரிச்சிந்நமாக்கினேன். (சிந்தனையித்யாதி) இனியென்னைப் பரிச்சிந்நர்க்குப் புகுந்து நேரே நலியப்போமோ?

அரு.—அறுபத்தொன்பதாம்பாட்டு.—"உள்பொதிந்த" என்கையாலே (பரிச்சிந்நமாக்கினேன்) என்கிறது. "செவ்வேயடர்த்து ஆர்க்கடலாம்?" என்னை ஒருத்தர்க்கு மடர்க்கப்போகாதென்றபடி. சுகூ.

அடர்பொன் முடியானை யாயிரம்பேரானைச்,
சுடர்கொள் சுடராழியானை,—இடர்கடியும்
மாதாபிதுவாக வைத்தே னெனதுள்ளே,
யாதாகில் யாதேயினி. (எ௦)

அந்.—அடர், பொன், முடியானை, ஆயிரம்பேரானை, சுடர்கொள், (ரு) சுடர், ஆழியானை, இடர், கடியும், மாதாபிதுவாக, (க௦) எனது உள்ளே, வைத்தேன், இனி, யாது ஆகில், யாது. (கரு)

அர்.—§ பொருந்திய, அழகையுடைய, கிரீடத்தையுடையனாய், ஸஹ ஸ்ரநாமங்களையுடையனாய், அழகியதேஜஸ்ஸையுடைய, (ரு) உஜ்ஜ்வல மான, திருவாழியையுடையனானவனை, துக்கத்தைப், போக்கும், மாதாபிதாக்க ளாக, (க௦) என்னுடைய ஹ்ருதயத்திலே, இருத்தினேன். இனி, (பாபத்தின் நாசத்திலும் வ்ருத்தியிலும்) எதுவாகில், என்ன? (கரு) எ௦.

வ்யா.—எழுபதாம்பாட்டில், (அடர்பொன்முடியானை) தர்ச நீயமாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தையுடையவனை. இவ்வழகுக்கு வாசகமான அநேகந்திருநாமங்களையுடையவனை. (சுடர்கொள்சுடராழியானை) விரோதிநிரஸநத்துக் கன்றிக்கே அழ குக்குமான திருவாழியையுடையவனை. (இடரித்யாதி) சரீரத்தை ப்பூண்கட்டி இடரைவிளைக்கும் மாதாபிதாக்களிறே யல்லாதார். † இவன் சரீரபரிக்ரஹம்பண்ணுகைக்கு நோன்புநோற்கு மவர்க ளிறே யவர்கள். (யாதாகில்யாதேயினி) இனி பாபந்தன்னை யநுப விக்கிலெனக்கு வந்ததென்? எ௦.

(க) ஸ்ரீராமா - கிஷ்கி - கரு - உக.

§ சத்ருக்களை அடர்க்கிற என்று அரும்பதாநு குணமான அர்த்தம்.

அரு.—எழுபதாம்பாட்டு.—(அடர்பொன்முடி) அடர் - எல்லாரையுமடர்க்கிற முடியென்றபடி. பூண்கட்டுகைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (இவன் சரீர) இத்யாதி. "யாதாகில் யாதே" - பாபத்தையநுபவிக்கிலென்? அநுபவியாதொழியிலென்? பாபநிமித்தமாக பயமில்லையென்றபடி.

இனிநின்று நின்பெருமை யானுரைப்ப தென்னே,
தனிநின்ற சார்விலா மூர்த்தி,—பனிநீர்
அகத்துலவு செஞ்சடையா னாகத்தான், நான்கு
முகத்தான் நின்னுந்தி முதல். எக.

அந்.—தனி, நின்ற, சார்வுஇலா, மூர்த்தி, பனி, (ரு) நீர், அகத்து, உலவு, செம், சடையான், (கo) ஆகத்தான், நான்குமுகத்தான், நின்உந்தி, முதல், இனி, (கரு) யான், நின்று, நின்பெருமை, உரைப்பது, என்னே. (உo)

அர்.—ஒருவனுமே,(காரணமாய்) நின்றவனாய், (வேறொரு) ஆஸ்ரயமில்லாத, ஸர்வேஸ்வரனே! குளிர்ந்த, (ரு) ஜலத்தையுடைய கங்கை, உள்ளே, ஸஞ்சரிக்கிற, சிவந்த, சடையையுடைய ருத்ரன், (கo) (உன்) திருமேனியையாஸ்ரயித்து வஸிக்கிறான். சதுர்முகனான ப்ரஹ்மா, உன்னுடைய திருநாபியைக், காரணமாக உடையவன். இனிமேல், (கரு) நான், உத்யுக்தனாயிருந்து, உன்மஹிமையைச், சொல்லுவது, எங்ஙனே! (என்னாலே பேசமுடியாது).எ௱.

வ்யா.—அவ.—எழுபத்தோராம்பாட்டில், (இனி) "ப்ரஹ்மருத்ராதிகளுக்ககப்பட உடம்புகொடுத்தான்" என்கிற நீர்மையைச் சொல்லிற்றாகவுமாம்; "அவர்களுக்கு ஸத்தாஹேதுவானான்" என்கிற ஐஸ்வர்யத்தைச் சொல்லுகிறதென்றுமாம்.

(இனியித்யாதி) உன்னைஸ்வர்யத்தை நான்தானே சொல்லுவதுண்டோ? வென்னவுமாம்; உன்னுடைய நீர்மையை நான்சொல்லுவதுண்டோ? வென்னவுமாம். (தனியித்யாதி) கார்யஜாதமெல்லா மழிந்துகாரணாவஸ்த்தமாய்,நாமரூபவிபாகாநர்ஹமாய்,"தான்" என்கிற சொல்லிலேயடங்கித் தனக்கு வேறொரு அபாஸ்ரயமின்றிக்கே நின்றவனே! (க) "ಪತಿಂವಿಶ್ವಸ್ಯ-பதிம்விஸ்வஸ்ய" என்ன, (க) "ಆತ್ಮೇಶ್ವರಮ್-ஆத்மேஸ்வரம்" என்னுமாபோலே. (உ) "ರುದ್ರಂಸಮಾಶ್ರಿತಾ ದೇವಾ ರುದ್ರೋ ಬ್ರಹ್ಮಾಣಮಾಶ್ರಿತಃ- ருத்ரம்ஸமாஸ்ரிதா தேவா ருத்ரோப்ரஹ்மாணமாஸ்ரிதः" என்றித்யாதிப்படியே. † தனக்குச் சேர்த்துச்சொல்லலா மொப்பையுடையனல்லனென்றுமாம். (பனி

(க) தைத்திரியோபநிஷத் - ௬ - கக. (உ) விஷ்ணு தர்மம்.

நீரித்யாதி) கங்கையை ஜடையிலேதரித்தானு யிருக்கிறருத்ரன், (க) "வலத்தனன்" என்னுமாபோலே உன்னுடைய திருமேனியிலேகதேசத்திலானுன். (நான்கித்யாதி) சதுர்முகன் உன்னுடைய திருநாபியைக் காரணமாகவுடையவன். இனிநின்பெருமை யானுரைப்பதென்னே! எக.

அரு.—எழுபத்தோராம்பாட்டு.—"சார்வு" ஆஶ்ரயமாதல், ஒப்பாதல்.

முதலாம் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே
முதலாகும் மூன்றுக்கு மென்பர்,—முதல்வா
நிகரிலகு காருருவா நின்னகத்த தன்றே,
புகரிலகு தாமரையின் பூ. எஉ.

அந்.—திருஉருவம், மூன்று, முதலாம், என்பர், மூன்றுக்கும், (ரு) ஒன்றே, முதலாகும், என்பர், முதல்வா, நிகர், (கo) இலகு, கார், உருவா, புகர், இலகு, (கரு) தாமரையின்பூ, நின் அகத்ததன்றே. (கஎ)

அர்.—அழகிய ரூபத்தையுடைய, (ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மகமான) மூன்றுவஸ்துக்கள், ஜகத்காரணங்களாகும், என்று (சிலர்) சொல்வர். இம்மூன்று வஸ்துக்களுக்கும், (ரு) (மேலானது) ஒரு வஸ்துவே, காரணமாகும், என்று (சிலர்) சொல்வர். ஜகத்காரணபூதனே! தகுதியாய், (கo) விளங்குகிற, மேகம்போன்ற, திருமேனியை யுடையவனே! (ஜகத்காரணத்வப்ரயுக்த) தேஜஸ்ஸினல், விளங்குகிற, (கரு) தாமரைப்பூ, உன்னுடைய திருமேனியிலுண்டானதன்றே? (கஎ) எஉ,

வ்யா.—அவ.—எழுபத்திரண்டாம் பாட்டில், (முதலாம்) கீழிற்பாட்டிலே "எல்லார்க்குமாஶ்ரயணீயன்" என்று சொல்லிற்று; இதிலே, வேறு ஸமாஶ்ரயணீயராயிருப்பாரும் ஆஶ்ரயிப்பாரும் சிலருமுண்டாயிருக்க "இவனே யாஶ்ரயணீயன்" என்று சொல்லும்படி எங்ஙனேயென்ன, அல்லாதாருடைய மதங்களை உபஸ்த்தாபித்து தூஷித்து ஸ்வஸித்தாந்தத்தை யருளிச்செய்கிறுர்.

(முதலித்யாதி) ஜகத்துக்குக் காரணபூதர் மூவரென்பர்கள். (ஒன்றித்யாதி) மூவர்க்குங் காரணபூதன் வேறேயொருவனென்பர்கள். "என்பர்" என்கிற வித்தால் ஸ்வஸித்தாந்தமன்றென்கிறது. (முதல்வா) இதுக்கெல்லாம் காரணபூதனே! (நிகரிலகு காருருவா) மேகமென்று சொல்லலாம்படி வடிவையுடையவனே! (நின்னகத்தவித்யாதி) ப்ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்த்தாநமான தாமரைப்பூ உன் திரு

(க) திருவாய்மொழி. ச - ரு - கூ.

காபியதன்றே? இத்தால், ப்ரஹ்மருத்ராதிகளிவனுக்கு ஸமரல்லரென்னுமிடமும், அவர்களிலேயொருவன் ஜகத்துக்குக் காரணமென்னுமிடமும், † மூவரையுமொழிய வேறொன்று ஜகத்துக்குக் காரணமன்றென்னுமிடமும் சொல்லுகிறது. (௧) † "సృష్టిస్థిత్యన్తకరణీమ్- ஸ்ருஷ்ட்டிஸ்த்தித்யந்தகரணீம்" இத்யாதி என்னும்படியே. (௨) † "బ్రహ్మావిష్ణురుద్రేన్ద్రాస్తే సర్వే సంప్రసూయన్తే- ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸர்வே ஸம்ப்ரஸூயந்தே" என்கிறவிது-அவதார விஷயம். (௩) † "మధ్యే విరిఞ్చిగిరిశం ప్రథమావతారః - மத்யேவிரிஞ்சகிரிசம் ப்ரதமாவதாரః" என்னும்படியே. ௭௨.

அரு.—எழுபத்திரண்டாம்பாட்டு.—(மூவரையுமொழிய) மூவரிலும் ப்ரதாநராயிருக்கிற விஷ்ணுவையுமொழிய. மூவரிலுமவனே காரணமென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (ஸ்ருஷ்ட்டிஸ்த்தித்யந்த கரணீம்) இத்யாதி. விஷ்ணுவுக்கும் பிறப்புண்டாகச் சொல்லாநிற்க அவன் காரணமானபடி எப்படி என்ன அருளிச்செய்கிறார் (ப்ரஹ்மவிஷ்ணு) இத்யாதி. அவதரித்தானென்றவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (மத்யேவிரிஞ்ச) இத்யாதி. ௭௨.

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற,
காவி மலரென்றும் காண்டோறும்,—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவை
யெல்லாம் பிரானுருவே யென்று. ௭௩.

அந்.—பூவையும், காயாவும், நீலமும், பூக்கின்ற, காவிமலர், (௯) என்றும், காண்தோறும், அவ்வவையெல்லாம், பிரான் உருவேஎன்று, பாவியேன், (௧௦) மெல், ஆவி, மெய், மிக, பூரிக்கும். (௧௧)

அர்.—பூவைப்பூவையும், காயாம்பூவையும், கருநெய்தல்பூவையும், பூக்கின்ற, செங்கழுநீர்ப்பூவையும், (௯) எப்போதும், பார்க்கும்போதெல்லாம், அவ்வவ வஸ்துக்களெல்லாம், எம்பெருமானுடைய திருமேனியென்று நினைத்து, (அநுபவிக்கப்பெறாத) பாபத்தையுடைய என்னுடைய, (௧௦) ம்ருதுவான, மநஸ்ஸும், சரீரமும், அதிகமாகப், பருமனாகும். (௧௧) ௭௩.

வ்யா.—அவ—.எழுபத்துமூன்றாம் பாட்டில், (பூவை) "இவனே யாஶ்ரயணீயன்" என்றறுதியிட்டால்பின்னை அநுபவமிறேயுள்ளது.

(௧) ஸ்ரீவிஷ்ணு புராணம் - ௧ - ௨ - ௬௬. (௨) அதர்வசிகோபநிஷத்.
(௩) ஸ்ரீரங்க ராஜஸ்தவம் - ௨ - ௯௧.

(பூவையித்யாதி) பூவை, காயா, நீலம், பூவா நின்ற காவிமலர் இவை கண்டபோதெல்லாம்,பிரானுருவேயென்றறிவுடைய நெஞ்சு பூரிக்கையன்றிக்கே உடம்பு மகப்படப் பூரியா நின்றது. எங.

அரு.—எழுபத்துமூன்றாம்பாட்டு.—"காவி" செங்கழுநீர் "ஆவி" நெஞ்சு. "மெய்" உடம்பு. எங.

என்று மொருநா ளொழியாமை யானிரந்தால்,
ஒன்று மிரங்கா ருருக்காட்டார்,—குன்று
குடையாக வாகாத்தகோவலனார், நெஞ்சே
புடைதான் பெரிதே புவி. எச.

அந்.—ஒருநாள், ஒழியாமை. என்றும், யான், இரந்தால், (ரு) குன்றம், குடையாக, ஆ, காத்த, கோவலனார், (க0) ஒன்றும், இரங்கார், உருக்காட்டார், நெஞ்சே, புவிதான், (கரு) புடைபெரிது. (கசு)

அர்.—ஒருநாளும், தப்பாமே, ஸர்வகாலத்திலும், நான், யாசித்தால், (ரு) கோவர்த்தநமலையைக், குடையாக (வெடுத்து), பசுக்களை, ரக்ஷித்த, கோபாலன், (க0) கொஞ்சமும், தயைபண்ணுகிறிலர். (தன்) திருமேனியையும் ஸேவிக்கச்செய்யார். ஓ! மநஸ்ஸே! (இந்த) பூமிதான், (கரு) சாலப் பரப்புடைத்தாயிருந்தது (அவர்க்ருபை யேறிப்பாயாத மேடாயிருந்தது.) (கசு) எச.

வ்யா.—அவ.—எழுபத்துநாலாம்பாட்டில், (என்றும்) சரீர பரிக்ரஹம்பண்ணி ருசிபிறந்த பின்பு அபேக்ஷித்தது காலமெல்லா மிரந்தாராய்த் தோற்றுகிறபடி.

(என்று மித்யாதி) காலமெல்லாம் நானிரந்து போர "இருந்த விடத்திலே யிருந்தாலும் இவன் நம்மை இரவாநின்றான்" என்று இரங்குவதும் செய்கிறிலர்; தம் வடிவைக் காட்டுவதும் செய்கிறிலர். (குன்றமித்யாதி) இரங்கியுருக் காட்டாதவர் காட்டிற்றிலராகில் தரிக்கலாமிறே; உபகாரமறியாத பசுக்களுக்குமுதவுமவர் கிடீர் நமக்குதவாதொழிகிறார். (நெஞ்சேபுடைதான் பெரிதேபுவி) அவர்க்கு நீர்மையில்லை யென்னப் போகாதிறே, அவர்நீர்மை யேறிப் பாயாததோரிடந்தேடி எங்கே கிடந்தோம். எச.

அரு.—எழுபத்துநாலாம்பாட்டு.—"புவிபுடைதான் பெரிது" § புடை யென்று குஹையாய் அவன்கடாக்ஷகுஹையிலே கிடந்தோமென்றபடி.

§ இந்த அரும்பதம் அநர்விதம்.

புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீயென்
செவியின் வழிபுகுந் தென்னுள்ளாய்,—அவிவின்றி
யான்பெரியன் நீபெரியை யென்பதனை யாரறிவார்,
ஊன்பருகு நேமியா யுள்ளு. எடு.

அந்.—புவியும், இரு, விசும்பும், நின் அகத்த, நீ (டு) என்செவியின் வழி, புகுந்து அவிவுஇன்றி, என்உள்ளாய், யான், (க0) பெரியன், நீ, பெரியை, என்பதனை, யார், (கடு) அறிவார், ஊன், பருகு, நேமியாய், உள்ளு. (உ0)

அர்.—பூமியோடு சேர்ந்த லீலாவிபூதியும், பரந்த, பரமாகாசமும், உன்னுடைய ஸங்கல்பத்திலுள்ளன. நீ, (டு) என்னுடைய ஸ்ரோத்ரேந்த்ரியத்தின் வழியே, ப்ரவேசித்து, விச்சேதமில்லாதபடி, என்னுடைய ஹ்ருதயத்தில் வாஸம்செய்கிறாய். (இவ்விருவரில்) நான், (க0) பெரியன், நீ, பெரியை, என்கிற விஷயத்தை, யார் தான், (கடு) அறிவார்கள்? (சத்ருக்களின்) ருதிரத்தைப், பாநம்செய்கிற, திருவாழியையுடையவனே! (நீயே) விசாரி. (உ0)

வ்யா.—அவ.—எழுபத்தைந்தாம் பாட்டில், (புவியும்) "உமக்கென்று முதலிலோமாக நீர் சொல்லுவானென்? உருக்காட்டிற்றில்லையே, என்று வெறுக்கும்படி உம்மைப் பண்ணினேமே" என்ன; அத்தை யநுஸந்தித்து "என்னோடொப்பாருண்டோ?" என்கிறார்.

(புவியுமிரு விசும்பும் நின்னகத்த) உபய விபூதியும் நின்ஸங்கல்பத்திலே கிடக்கிறன. (நீ இத்யாதி) உபய விபூதி யுக்தனான நீ என்னுடைய ஸ்ரோத்ரேந்த்ரியத்தின் வழியே புகுந்து விச்சேதமின்றிக்கே என் ஹ்ருதயத்திலே உளையாகாநின்றாய். (யானித்யாதி) உபயவிபூதியையுடைய நீயோ? விபூதிமானையுடைய நானோ? பெரியா ராரென்றறிவாரார்? (ஊனித்யாதி) அப்ரதிஹத சக்தியான நீ அறிவுதியாகிற் சொல்லு. எடு.

அரு.—எழுபத்தைந்தாம்பாட்டு.—"ஊன்பருகுநேமி" சத்ரு சரீரங்களைப்பருகுகிற திருவாழி. எடு.

உள்ளிலு முள்ளம் தடிக்கும் வினைப்படலம்,
விள்ள விழித்துன்னை மெய்யுற்றால்,—உள்ள
உலகளவு யானு முளனுவ னென்கொலோ,
உலகளந்த மூர்த்தி யுரை. எசு.

அந்.—உள்ளிலும், உள்ளம், தடிக்கும், வினை, படலம், (டு) விள்ள, விழித்து, உன்னை, மெய்யுற்றால், உள்ள, (க0) உலகளவும், யானும், உளனுவனென்சொல், உலகு, அளந்த, (கடு) மூர்த்தி, உரை. (கஎ)

அர்.—(உன்னை) அநுஸந்தித்த மாத்ரத்தில், (என்) மநஸ்ஸு, பருக்க நின்றது. பாபங்களின், ஸமூஹம், (ரு) (என்னைவிட்டு) நீங்கும்படி, (நீ) கடாக்ஷித்து, உன்னை, (நான்) ஸாக்ஷாத்கரித்தால், இருக்கிற, (கo) லோகங்களெல்லாவற்றிலும், நானும், (பருத்து) உளனுவன்போலே யிராநின்றது, லோகத்தை. ஆக்ரமித்த, (கரு) ஸ்வாமீ! சொல்லு. (கஎ) எசு.

வ்யா.—அவ.—எழுபத்தாறும் பாட்டில், (உள்ளிலும்) ஶ்ரவண ஜ்ஞாநாநந்தர பாவியான மநநத்தைச் சொல்லுகிறது.

(உள்ளிலு முள்ளந்தடிக்கும்) உன்னை யநுஸந்திக்கில் ஸ்தூலமான தேஹம்போலே அமூர்த்தமான ஹ்ருதயம் தடியாநின்றது. (வினையித்யாதி) பாபஸமூஹம் விண்டுபோம்படி நீ பார்த்து. உன்னை ஸாக்ஷாத்கரித்தென்றுமாம். (உள்ள உலகித்யாதி) வ்யாபக தத்வமிரண்டாகிறதுபோலே. (உலகளந்த மூர்த்தியுரை) சிறிய வடிவைக் கொண்டு லோகத்தையெல்லாம் வ்யாபித்திருக்கிற நீயே சொல்லு.

அரு.—எழுபத்தாறும்பாட்டு — "மெய்புற்றால்" ஸாக்ஷாத்கரித்தால். இங்கே மாநஸ ஸாக்ஷாத்காரமாதல், அங்கேபாஹ்ய ஸாக்ஷாத்காரமாதல், ஜ்ஞாநவ்யாப்தி இவரது. இந்த வாஶ்சர்யத்தை நீ சொல்லென்றபடி. எசு.

உரைக்கிலோர் சுற்றத்தா ருற்றாரென் றாரே,
இரைக்குங் கடற்கிடந்த வெந்தாய்,—உரைப்பெல்லாம்
நின்னன்றி மற்றிலேன் கண்டாய், எனதுயிர்க்கோர்
சொல்நன்றி யாகும் துணை. எஎ.

அந்.—உரைக்கில், சுற்றத்தார், உற்றார், என்று, ஓர், (ரு) ஆரே, இரைக்கும், கடல், கிடந்த, எந்தாய், (கo) எனது,உயிர்க்கு,நன்றியாகும், ஓர், சொல், (கரு) துணை, உரைப்பெல்லாம், நின் அன்றி, மற்று, இலேன்கண்டாய். (உo)

அர்.—சொல்லப்புகில், ஜ்ஞாதிகள்,ஸம்பந்திகள்,என்று சொல்லப்பட்ட, ஒருபந்துக்கள், (ரு) (உன்னையொழிப) ஆர்தானுண்டு? சோஷிக்கிற, திருப்பாற்கடலில், கண்வளர்ந்தருளுகிற, என்ஸ்வாமீ! (கo) என்னுடைய, ஆத்மாவுக்கு, நன்மையை விளைக்கும். அத்விதீயமான, சொல்லை யருளிச்செய்தவனும், (கரு) ஸஹாயமாவானும், (மற்றும்) சொல்லப்படுமெல்லாஉறவும், உன்னைவிட்டு, வேறுசிலரை, உடையேனல்லேன்கிடாய். (உo) எஎ.

வ்யா.—அவ.—எழுபத்தேழாம் பாட்டில், (உரைக்கில்) அறியாதே"நன்று"என்று ப்ரமித்து வேறேசிலருற்றாரென்றிருக்குமத்தனையிறே: †விமர்த்த ஸஹரான பந்துக்கள் வேறுண்டோவென்கிறது.

(உரைக்கிலித்யாதி) "ஆரே" என்று கேட்டால் "வேறு சிலரில்லை நானேயுள்ளேன்" என்று அவன் தனக்குச் சொல்லவேணும்

போலே. (இமைக்குமித்யாதி) நித்ய ஸூரிகள் ஸதாநுபவம் பண்ணு நிற்கச்செய்தே திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷனாய் வந்து கிடக்கிறவனே! (உரைப்பித்யாதி) துர்த்தசையில் (க) "மாமேகம் ஶரணம்-மாசுச:" என்று நற்சொல்லு சொல்லுமத்தனே. உரைக்கப்படுவ தெல்லாம் உன்னையொழிய வேறொருவரில்லை. எஎ.

அரு.—எழுபத்தேழாம்பாட்டு.—(விமர்த்தஸஹர்) பாதகஸஹர். உன் னையொழிய இல்லையென்றபடி. சுற்றத்தார் ஆரென்று "உரைக்கில் நானு ளன்" என்று உன்னை யொழியச்சொல்லுவார் "ஆரென்றபடி. உரைப்பெல் லாம்" துணையாக உரைக்கப்படுவதெல்லாவற்றிலும், உன்னையொழியத் துணையில்லையென்றபடி. எஎ.

துணைநாள் பெருங்கிளையும் தொல்குலமும், சுற்றத்
திணைநாளு மின்புடைத்தா மேலும்;—கணைநாணில்
ஓவாத் தொழில்சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே,
ஓவாத வூணாக வுண். எஅ.

அந்.—துணை, நாள், பெரும், கிளையும், தொல், (ரு) குலமும், சுற்றத்து, இணை, நாளும், இன்பு உடைத்தாமேலும், கணை, (கo) நாணில், ஓவா, தொழில், சார்ங்கன், தொல், (கரு) சீரை, நல், நெஞ்சே, ஓவாத, ஊணாக, (உo) உண். (உக)

அர்.—ஸாஹ்ருத்தும், ஆயுஸ்ஸும், பெரிய, ஸந்ததியும், அநாதியாய்வரு கிற, (ரு) ஆபிஜாத்யமும், பந்துக்களோடு சேர்த்தியும், (இவை)திநம்தோறும், ஸுகஜநகங்களாயினும், பாணங்கள், (கo) நாணில், ஓயாத, வ்யாபாரத்தை யுடைய, சார்ங்கத்தைத்தரித்த ஶ்ரியபதியினுடைய, அநாதியான, (கரு) கல் யாண குணங்களை, அநுகூலமான, மநஸ்ஸே! அவிச்சிந்நமான,போக்ய பதார் த்தமாகக்கொண்டு, (உo) அநுபவி. (உக) (எஅ)

வ்யா.—அவ.—எழுபத்தெட்டாம் பாட்டில், (துணை) கீழ் "உற் றாரில்லை" என்றது; உற்றாருண்டாகிலும் ஸம்ஸார மினிதாகிலும் உன்னநுபவத்தையொழியப் புறம்புண்டோ? வென்கிறார்.

(துணைநாளித்யாதி) துணை, ஆயுஸ்ஸு, பெருங்கிளை, ஆபிஜாத் யம், பந்துக்களோட்டைச் சேர்த்தி, இவை நித்யமுமாய் இனிதா யிற்றேயாகிலும். (கணையித்யாதி) என்று மாஶ்ரிதர் கார்யம் மாறாதே செய்துபோருமவருடைய கல்யாண குணங்களை. (நல் நெஞ்சே) ஸோபாதிகபந்துக்களுக்கும் நிருபாதிகபந்துக்களுக்கும் வாசியறியும்

(க) கீதை - கஅ - சுசு.

நெஞ்சே! "எம் பெருமானைப் பற்று" என்று சொல்லப் பாங்கான நெஞ்சென்னவுமாம். (ஓவாதவூணாகவுண்) விச்சேதமில்லாத போகமாக புஜி. எஅ.

அரு.—எழுபத்தெட்டாம்பாட்டு.—"கிளை" பந்துக்கள். "கணைநாணில்" அம்பானது நாணிலே இடைவிடாதே வ்யாபரிக்கிற வில்லையுடையவன்.

> உண்ணாட்டுத் தேசன்றே யூழ்வினையை யஞ்சுமே,
> விண்ணாட்டை யொன்றாக மெச்சுமே,—மண்ணாட்டில்
> ஆராகி யெவ்விழிவிற் றானாலும், ஆழியங்கைப்
> பேராயற் காளாம் பிறப்பு. எகூ.

அந்.—மண்நாட்டில், ஆராகி, எவ்விழிவிற்றானாலும், ஆழி, அம், (ரு) கை, பேர்ஆயற்கு, ஆள்ஆம், பிறப்பு, உள்நாட்டு, (கo) தேசு அன்றே, ஊழ், வினையை, அஞ்சுமே, விண்நாட்டை, (கரு) ஒன்றாக, மெச்சுமே. (கஎ)

அர்.—பூலோகத்தில், எச்சாதியராயினும், எவ்விழி தொழிலராயினும், திருவாழியை, அழகிய, (ரு) திருக்கையிலேந்திய, பெரிய இடையனான க்ருஷ்ணனுக்கு, அடிமைப்படும்,ஜந்மம், (ஸர்வேஶ்வரனுக்கு) அந்தரங்கதேசமான திருநாட்டிலிருக்கும், (கo) தேஜஸ்ஸையுடைத்தன்றோ? அநாதியான, பாபத்தை நினைத்து, பயப்படுமோ? ஸ்வர்க்கத்தை, (கரு) ஒருவஸ்துவாகக், கொண்டாடுமோ? (கஎ) எகூ.

வ்யா.—எழுபத்தொன்பதாம்பாட்டில், (உள்நாடு) (ஆழியங்கை யித்யாதி) ஸர்வேஶ்வரனை வைத்து இதரஸஜாதீயனாய்ப் பிறந்தவனுக்குக் கைங்கர்யம் பண்ணுகைக்கு யோக்யமான ஜந்மம், பரமபதத்திலிருக்கும் தேஜஸ்ஸை யுடைத்தன்றே என்றுமாம். † உள்நாடென்று பரமபதமாகக் கொள்ளுகிறது-பகவதபிப்ராயத்தாலே. பேராயரென்று - அல்லாத இடையர் நித்யஸூரிகளென்னும்படி இவனுடைய இடைத்தனத்தில் முதிர்த்தி சொல்லுகிறது. (ஊழ்வினை யித்யாதி) தான் பண்ணின பாபத்துக்கு அஞ்சுமே? (விண்ணாட்டை யித்யாதி) ப்ரஹ்மாதிகள் குடியிருப்பை ஒன்றாக வெண்ணுமே? (க) "సురపురీ యద్గచ్ఛతో దుర్గతిః-ஸுரபுரீ யத்கச்சதோ துர்க்கதிঃ" ஸ்வர்க்கத்துக்குப் போம் வழி தண்ணிதென்கிறது. (உ) "నదేవలోకాక్రమణమ్ - நதேவலோகா க்ரமணம்" பறைச்சேரியிலடியிடு

(க) ஸ்ரீ குணரத்ந கோசம் - உo. (உ) ஸ்ரீ ராமாயணம்-அயோத்யா-ருக-ரு.

மாபோலே ஸ்வர்க்கத்திலடியிடுகை வேண்டேனென்கிறார். (க) "తస్యాన్తరాయో మైత్రేయ దేవేన్ద్రత్వాదికంపదమ్- தஸ்யாந்தராயோ மைத்ரேய தேவேந்த்ரத்வாதிகம்பதம்" பகவத்விஷயத்திலே கை வைத்தவனுக்கு அந்தராயமாவது இந்த்ரனாயிருக்குமிருப்பிறே. உள்நாடென்று ஸம்ஸாரமாகக்கொண்ட பக்ஷத்தில், விண்ணாடென்று பரமபதமாகக்கடவது. (மண்ணாட்டி லித்யாதி) ஸம்ஸாரந்தானே தண்ணிது, அதிலே நிஹீந ஜந்மமாகவுமமையும்; எல்லா விழிவையு முடைத்தாகவு மமையும்; பகவதநுபவயோக்யமான ஜந்மமே வேண்டுவது. இதுக்குப் புறம்பான ஜந்மவ்ருத்தங்கள் அப்ரயோஜநங்கள். எ௯.

அரு.—எழுபத்தொன்பதாம்பாட்டு.—"தேசன்றே" - தேசன்றோ?என்றபடி. "உள்நாடு" - பரமபதமாதல், ஸம்ஸாரமாதல். தாமிங்கேயிருக்க அத்தை உள்நாடென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (உள்நாடென்று) இத்யாதி. "அஞ்சுமே" - அஞ்சாதென்றபடி. "ஆராகி" - எந்தஜந்மமாகிலுமாம். "எவ்விழிவில்" எந்த வ்யாபாரமாகிலுமாம். [மண்ணாடுதொடங்கி ஒன்றாக வெண்ணுமே] என்றுக்ரியை. எ௯.

பிறப்பிறப்பு மூப்புப் பிணிதுறந்து, பின்னும்
இறக்கவு மின்புடைத்தா மேலும்,—மறப்பெல்லாம்
ஏதமே யென்றல்லா லெண்ணுவனே, மண்ணளந்தான்
பாதமே யேத்தாப் பகல். அ௦.

அந்.—பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, துறந்து, (௫) பின்னும், இறக்கவும் இன்பு, உடைத்தாமேலும், மண் அளந்தான், பாதம், (க௦) ஏத்தா, பகல், மறப்பு எல்லாம், ஏதமே என்றல்லால், எண்ணுவனே. (க௫)

அர்.—ஜந்மம், விநாசம், கிழத்தனம், வ்யாதி, (இவற்றை) ஓட்டி, (௫) அதற்குமேல், அதிக ஸுகமான கைவல்யத்தை, அடைந்தானாகிலும், பூமியை யளந்த ஸர்வேஸ்வரனுடைய, திருவடிகளை, (க௦) ஸ்தோத்ரம் பண்ணாத, தினத்தில்வரும், விஸ்ம்ருதியெல்லாம், துஃகரூபமே என்றல்லது, வேறொருபடி, மநோரதிப்பனோ? (க௫) அ௦.

வ்யா.—எண்பதாம் பாட்டில், (பிறப்பித்யாதி) ஸம்ஸார ஸம்பந்தமற்று அளவிறந்த ஆத்மாநுபவ முண்டாயிற்றாகிலும், (மண்ணளந்தான்பாதமே யேத்தாப்பகல் மறப்பெல்லா மேதமேயென்றல்லாலெண்ணுவனே) திருவுலகளந்தருளின நீர்மையையுடைய

(க) ஸ்ரீ விஷ்ணு புராணம்.

வன் திருவடிகளை யேத்தாத பகலில் மறப்பெல்லாம் துக்கமே என்றல்லது மநோரதிப்பனோ? அ0.

அரு.—எண்பதாம்பாட்டு.— "பின்னுமிறக்கவும்" இறக்கை - அளவிறக்கையாய், மிகவுமென்றபடி. அ0.

பகலிரா வென்பதுவும் பாவியாது, எம்மை
இகல்செய் திருபொழுது மாள்வர்,—தகவாத்
தொழும்பரிவர் சீர்க்குந் துணையிலரென் றோரார்,
செழும்பரவை மேயார் தெரிந்து. அக.

அந்.—செழும், பரவை, மேயார், இவர், தகவா, (ரு) தொழும்பர், சீர்க்கும், துணைஇலர், என்று, தெரிந்து, (க0) ஓரார், பகல், இரா என்பதுவும், பாவியாது, எம்மை, (கரு) இகல்செய்து, இருபொழுதும், ஆள்வர். (கஅ)

அர்.—அழகிய, திருப்பாற்கடலிலே, பொருந்திக் கண்வளர்ந்தருளுகிறவர், இவ்வாழ்வார், (நம்க்ருபைக்குத்) தகாத, (ரு) தாழ்மையை யுடையவர், சீர்மையான (குணாநுஸந்தாநத்துக்குத்தகுதியான), ஸஹாயமுமில்லாதவர், என்று, விசாரித்து, (க0) ஆராயாதவராய், பகற்காலமென்பதையும், இராக்காலமென்பதையும் (குணாநுபவத்துக்கு யோக்யதையையும் அயோக்யதையையும்), விசாரியாமல், எம்மை, (கரு) யுத்தம்பண்ணி (வசீகரித்து), இரண்டு காலங்களிலும், ஆண்டுகொண்டு போருவர். (கஅ) அக.

வ்யா.—எண்பத்தோராம் பாட்டில், (பகலித்யாதி) பகற்போது போக்குவதொன்று இராவைகும்போது போக்குவதொன்று என்று பாராதே எல்லாப்போதுமொருபோகியாகத் தம்முடைய குணங்களாலே எடுப்பும் சாய்ப்புமாக யுத்தம்பண்ணி இரண்டு போதுமாள்வர். † அம்பு பட்ட புண்ணுக்கு மருந்துண்டு; குணத்தாலே யீடுபட்ட புண்ணுக்கு மருந்தில்லையிறே. (தகவித்யாதி) தம்முடைய க்ருபைக்கு மவிஷயமான சிறிதென்றும் தம்முடைய குணங்களைக்கொண்டு (க) * போ⁴த⁴யந்த꞉ பரஸ்பரம் - போதயந்தஃ பரஸ்பரம்பண்ணுகைக்குக் கூட்டுமில்லையென்றும் விசாரியார். (தெரிந்தித்யாதி) ஆஶ்ரிதரோடு ஸம்ஶ்லேஷிக்கும் தேசமாராய்ந்து திருப்பாற்கடலிலே மேவினவர். அக.

அரு.—எண்பத்தோராம்பாட்டு.—போதுபோக்குவர் போதுபோக்கமாட்டாரென்று விசாரியாதே என்றபடி. "இகல்" - யுத்தம். குணமீடுபடுத்து

(க) கீதை - க0 - கூ.

மோவென்ன அருளிச்செய்கிறார் (அம்புபட்டபுண்) இத்யாதி. [தெரிந்து செழும்பரவை மேயார் - தகவாத்தொழும்பரிவர்சீர்க்கும் துணையிலரென்றோராதே பகலிராவென்பதுவும் பாவியாதெம்மை இகல்செய் திருபொழுது மாள்வர்] என்றந்வயம். அக.

தெரிந்துணர் வொன்றின்மையால் தீவினையேன், வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம்,—கரந்துருவின்
அம்மானை யஞ்ஞான்று பின்றொடர்ந்த, ஆழியங்கை
அம்மானை யேத்தா தயர்த்து. அஉ.

அந்.—தெரிந்து உணர்வு, ஒன்று, இன்மையால், தீவினையேன், அஞ்ஞான்று, (ரு) கரந்த உருவின், அம்மானை, பின்தொடர்ந்த, ஆழி, அம், (௧௦) கை, அம்மானை, எத்தாது, அயர்த்து, கீழ்நாள்களெல்லாம் (௧ரு) வாளா, இருந்தொழிந்தேன். (௧எ)

அர்.—விசதஜ்ஞாநம், ஏகதேசமும், இல்லாமையால், கொடியபாபத்தையுடையநான், அக்காலத்தில், (ரு) மறைத்த (ராக்ஷஸ) வேஷத்தையுடைய, அந்த (மாயா) ம்ருகத்தை, அநுஸரித்துச்சென்றவராய், அறுகாழியை, அழகிய, (௧௦) கையிலேயுடையராய், ஸ்வாமியான சக்ரவர்த்தி திருமகனை, ஸ்தோத்ரம்செய்யாமல், அறிவுகெட்டு, கீழ்கழிந்த நாள்களிலெல்லாம், (௧ரு) வீணாய், இருந்துவிட்டேன். (௧எ) அஉ.

வ்யா.—எண்பத்திரண்டாம்பாட்டில், (தெரிந்துணர்வு) "அது பத்து, இதுஎட்டு" என்னும் ஜ்ஞாநமித்தனையல்லது பகவத்விஷயத்தையாராயும்ஜ்ஞாநமொன்றில்லாமையால். (௧) "తద్జ్ఞానమజ్ఞానమతో౽న్యదుక్తమ్-தத்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்"(உ)"విద్యాఽన్యాశిల్పనైపుణమ్-வித்யாந்யாசில்பநைபுணம்" என்னும் ஜ்ஞாநமுண்டாகையால்.(தீவினையேன்)பகவதநுபவ யோக்யமான காலத்தைப் பாழேபோக்கின பாபத்தைப்பண்ணினேன். (வாளாவித்யாதி) †குனியக்குறுணி பற்றுங்காலமெல்லாம் வ்யர்த்தமேயிருந்தேன். (கரந்துருவித்யாதி) கைகேயிவரத்திலகப்படாவிட்டது பெருமாள் திருக்கையி லறுகாழியொன்றுமேயாகாதே. வடிவைக்கரந்து வர்த்திக்கிற அம்மாயமானை அன்று தொடர்ந்த, அறுகாழியைக் கையிலேயுடைய ஸர்வேஸ்வரனை இளையபெருமாளு முதவாததசையிலே ஏத்தப்பெறுவது, அறிவுகெட்டுக்கிடந்த நான் பாழேபோக்கினேன். †"பெரு

(௧) ஸ்ரீ விஷ்ணுபு - ௬ - ரு - அஎ. (உ) ஸ்ரீ விஷ்ணுபு - ௧ - ௧௯ - ௪௧.

மாள் மாயமானையெய்து மீண்டெழுந்தருளுகிறபோது அடிக்கொதித்து நடக்கமாட்டாமை தளிர்களை முறித்திட்டு அதின்மேலே எழுந்தருளினார்'' என்று ஒருவன் கவிபாடவும் எம்பெருமானார் கேட்டருளி, ''மாறியிடுகிற திருவடிகளிலே என் தலையை வைக்கப்பெற்றிலேன்'' என்றருளிச்செய்தார். அஉ.

அ௩.—எண்பத்திரண்டாம்பாட்டு.—(குனியக்குறுணி) அவதரித்து அல்பாநுகூல்யத்திலே விஷயீகரிக்குங்காலம் போயிற்றென்று தாத்பர்யம். எத்துணை-அடிமையாய், இப்படி யடிமைசெய்யப் பெற்றிலேனென்றிழவுபட்ட பேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (பெருமாள்) இத்யாதி. அஉ.

அயர்ப்பா யயராப்பாய் நெஞ்சமே சொன்னேன்,
உயப்போம் நெறியிதுவே கண்டாய்,—செயற்பால
வல்லவே செய்கிறுதி நெஞ்சமே யஞ்சினேன்,
மல்லர்நாள் வவ்வினனை வாழ்த்து. அ௩.

அ௩.—நெஞ்சமே, செயற்பால அல்ல, செய்கிறுதி, அஞ்சினேன், மல்லர், (கு) நாள், வவ்வினனை, வாழ்த்து, உயப்போம், நெறி, (க0) இதுவே கண்டாய், நெஞ்சமே, அயர்ப்பாய், அயராப்பாய், சொன்னேன். (கரு)

அ௩. — ஓ மநஸ்ஸே! செய்யத் தக்கதல்லாதவற்றைச், செய்கிறாய்; (நான்) பயப்படுகிறேன். மல்லருடைய, (கு) ஆயுஸ்ஸை, க்ரஸித்தவனை, மங்களாசாஸநம் பண்ணு. உஜ்ஜீவிக்கலாம், வழி, (க0) இதுவேகிடாய். மநஸ்ஸே! (அவனை) மறக்கில் மற, மறவாதிருக்கிலிரு. (உனக்கு நன்மையைச்) சொன்னேன். (கரு) அ௩.

வ்யா'—எண்பத்துமூன்றாம்பாட்டில், (அயர்ப்பாய யராப்பாய்) அவனைமறந்து அநர்த்தப்படிலும்படு; நினைத்து வாழிலும்வாழ். (நெஞ்சமேசொன்னேன்) ஒருத்தன் கிணற்றிலே விழாநின்றால் கரையிலேநின்று அவனுக்குக் கூப்பிடவேணுமிறே. அவ்வோபாதி சொன்னேன். (உயப்போம் நெறியிதுவேகண்டாய்) அல்லாதவெல்லாம் விநாசத்துக்குக்கண்ட வழி, உஜ்ஜீவிக்கக் கண்டவழியிதுவே. (செயற்பாலவல்லவே செய்கிறுதி) நான்தப்பச் செய்கிறதுண்டோவென்னில், செய்யப்படாதவை செய்யாநின்றாய். செய்யப்படாதவையாவது - அயோக்யனென்றகலுகை; தேவதாந்தர பஜநங்கள். (நெஞ்சமேயஞ்சினேன்) (க)''புகழ்வோம் பழிப்போம்'' என்கிற வித்தையஞ்சினேன். (மல்லரித்யாதி) நம்முடைய விரோதிகள் செய்வ

(க) பெரிய திருவந்தாதி. உ.

தென்னென்னில், மல்லரிற்காட்டில் மிடுக்குண்டோ? அவற்றுக்கு. மல்லருடைய ஆயுஸ்ஸை க்ரஸித்தவனை வாழ்த்து. அங.

அரு.—எண்பத்துமூன்றும்பாட்டு.— "அஞ்சினேன்," புகழ்வோமோ பழித்தோமாவதோமென்று அயோக்யதாநுஸந்தாநம் பண்ணின வித்தை அஞ்சினேனென்கையாலே, அயோக்யதாநுஸந்தாநம்பண்ணி அகலவேண்டா; பயப்படாமல் வாழ்த்தென்றபடி. அங.

வாழ்த்தி யவனடியைப் பூப்புனைந்து, நின்தலையைத்
தாழ்த்திருகை கூப்பென்றால் கூப்பாத—பாழ்த்தவிதி,
எங்குற்றா யென்றவனை யேத்தாதென் னெஞ்சமே,
தங்கத்தா னுமேலும் தங்கு. அச.

அந்.—அவன், அடியை, வாழ்த்தி, பூ, புனைந்து, (கு) நின் தலையை, தாழ்த்து, இருகை,கூப்பு என்றால், (கo) கூப்பாத, என் நெஞ்சமே, அவனை, எங்குற்றாய் என்று, ஏத்தாது, (கரு) தங்கத்தானுமேலும், தங்கு, பாழ்த்த விதி. (கஅ)

அர்.—அந்த ஸர்வேஶ்வரனுடைய, திருவடிகளை, மங்களாசாஸநம் பண்ணி, புஷ்பங்களை, ஸமர்ப்பித்து, (கு) உன்னுடைய, சிரஸ்ஸை, வணக்கு, இரண்டு கைகளையும், கூப்பு என்றால்,(கo)கூப்பாத, என்னுடைய மநஸ்ஸே! அந்த ஸர்வேஶ்வரனை, (நீ) எங்கேநிற்கிறாய் என்று (ஆதரமாக அழைத்து), ஸ்தோத்ரம் பண்ணாமல், (கரு) தரிக்கக்கூடுமாகில், தரித்திரு. கொடிய பாபமே! (என்று வெறுக்கிறார்.) (கஅ) அச.

வ்யா.—எண்பத்துநாலாம்பாட்டில், (வாழ்த்தியித்யாதி - எங்குற்றாயென்றவனை ஏத்தாதென்நெஞ்சமே தங்கத்தானுமேலும்தங்கு பாழ்த்தவிதி) பகவத்விஷயத்தி லொன்றுஞ்செய்யாத நெஞ்சே! அவனை வாழ்த்தி அவன் திருவடிகளிலே பூக்களைப்புனைந்து உன் தலையை யவன் திருவடிகளிலே தாழ்த்து, இரண்டு திருக்கையையுங் கூப்பென்றால் கூப்பாதே, (க) "எங்குச் சென்றாகிலும்கண்டு" என்னும்படி ஆதரத்தோடே அவனை ஏத்தாத நெஞ்சமே! அவனைப்பற்றாதே கால்பாவலாமாகில் தங்கு. பாழ்த்தவிதியென்று - தம்முடைய அகலுகையைச் சொல்லி வெறுக்கவுமாம். ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மவைகல்யத்தைச் சொல்லவுமாம். அச.

அரு.—எண்பத்துநாலாம்பாட்டு.—[நெஞ்சமே அவனடியிலே பூப்புனைந்து வாழ்த்தி நின்தலையைத் தாழ்த்து இருகைகூப்பென்றால் கூப்பாதே எங்குற்றாயென்றவனை யேத்தாதே தங்கத்தானுமேலும் தங்கு]என்றந்வயம்.

(க) திருவாய்மொழி - கூ - அ - கு.

தங்கா முயற்றியவாய்த் தாழ்விசும்பின் மீதுபாய்ந்து,
எங்கேபுக் கெத்தவம்செய் திட்டனகொல்,—பொங்கோதத்
தண்ணம்பால் வேலைவாய்க் கண்வளரும், என்னுடைய
கண்ணன்பால் நன்னிறங்கொள் கார். அரு.

அந்.—பொங்கு, ஓதம், தண் அம், பால் வேலைவாய், கண்வளரும், (ரு) என்னுடைய, கண்ணன்பால், நல், நிறம், கொள், (கO) கார், தங்கா, முயற்றியவாய், தாழ், விசும்பின்மீது, (கரு) பாய்ந்து, எங்கேபுக்கு, எத்தவம், செய்திட்டனகொல். (கக)

அர்.—கிளர்ந்த, அலைகளையுடைய, குளிர்ந்து அழகியதான, திருப்பாற்கடலில், கண்வளர்ந்தருளுகிறவனாய், (ரு) என்னுடைய ஸ்வாமியான, கண்ணனுடைய பக்கலுண்டான, அழகிய, நிறத்தை, ஸ்வீகரித்த, (கO) மேகங்கள், (இந்நிறத்தைப் பெறுகைக்கு) விடாத, உத்யோகத்தையுடையனவாய்க் கொண்டு, பரந்த, ஆகாசத்தின்மேல், (கரு) உலாவி, எங்கேபோய், எவ்விதமான தபஸ்ஸை, அநுஷ்டித்தனவோ ? (கக) அரு.

வ்யா.—அவ.—எண்பத்தைந்தாம்பாட்டில், (தங்காமுயற்றியவாய்) பகவத்விஷயத்திலே எடுப்பும்சாய்ப்புமாய் † இன்னாதாகா, ‡லோகயாத்ரையை யநுஸந்தித்து அங்கு மதுவையாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது.

(தங்காமுயற்றியவாய்) உத்யோகித்த உத்யோகம்மாறுதே ஆகாசாவகாசமெல்லா முலாவி எங்கே புக்கு என்ன தபஸ்ஸு பண்ணிற்றினவோ? (பொங்கித்யாதி) கிளர்ந்ததிரையையுடைத்தாய்க் குளிர்ந்திருந்த திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற என் கண்ணனுடைய விலக்ஷண நிறத்தைக்கொள்ளுகிற மேகங்கள் எவ்விடத்தே புக்கு என்ன தபஸ்ஸுபண்ணிற்றினவோ? அரு.

அரு.—எண்பத்தைந்தாம்பாட்டு.—(இன்னாதாகா) இன்னாதாகா நிற்கச்செய்தே. (லோகயாத்ரை) மேகத்திலே கண்வைக்கை. "தாழ்விசும்பு"-எங்குமொக்க ஒத்து ஏகரூபமாயிருக்கை. அரு.

கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான்,
பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்,—சீர்கலந்த
சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையி னாழ்துயரை,
என்நினைந்து போக்குவ ரிப்போது. அசு.

அந்.—கார்கலந்த, மேனியான், கைகலந்த, ஆழியான், பார்கலந்த, (ரு) வல், வயிற்றான், பாம்பணையான், சீர்கலந்த, சொல், (கO) நினைந்து, சூழ்,

வினையின், ஆழ், துயரை, (கரு) போக்காரேல், இப்போது, என் நினைந்து, போக்குவர். (கக)

அர்.—மேகத்தோடு சேர்ந்த (ஸத்ருசமான), திருமேனியையுடையனுய், திருக்கையிலே பொருந்தின, திருவாழியையுடையனுய், (ப்ரளயத்தில்) பூமிபொருந்தி வர்த்திக்கிற, (ரு) வலிய, திரு உதரத்தையுடையனுய், திருவநந்தாழ்வானைப் படுக்கையாக உடையனுன பரம புருஷனுடைய, கல்யாண குணங்களோடே சேர்ந்திருக்கிற, திருநாமங்களை, (கo) அநுஸந்தித்து, சுற்றிக்கொண்டிருக்கிற, பாபத்தினுலுண்டான, அகாதமான, துஃகத்தைப் (கரு) போக்கிக்கொள்ளார்களேயாகில், இந்தக்காலத்தை (வேறு) எதை அநுஸந்தித்துப், போக்கிக்கொள்ளுவர்கள். (கக)

அசு.

வ்யா.—எண்பத்தாரும்பாட்டில், (கார்கலந்தமேனியான்) ஸர்வதா ஸத்ருசமான மேகத்தோடொத்த திருமேனியையுடையவன். (கைகலந்தவாழியான்) திருக்கையிலே வேர்விழுந்த திருவாழியையுடையவன். (பார்கலந்த வல்வயிற்ருன்) ப்ரளயந்தேடிவந்தாலும் தோற்ருதபடி கலந்தபூமியையுடையவனுமாய், வயிற்றில் புக்கவற்றுக்கு ரக்ஷகமான வயிற்றையுடையவன். (பாம்பணையான்). (சீர்கலந்தவித்யாதி) வடிவழகுக்கும் குணங்களுக்கும் வாசகமாய்ப் பசுங்கூட்டான சொற்களை நினைத்து அநுபவவிநாஸ்யமான பாபபலமான துஃகத்தைப்போக்காராகில். (என்னினைந்து போக்குவரிப்போது) பாபம்போக்கவேண்டாவாகில் காலத்தைச் செல்லவிடும்படி யெங்ஙனே.

அசு.

அரு.—எண்பத்தாரும்பாட்டு.— "இப்போது" இப்போதை-இக்காலத்தை என்றபடி.

அசு.

இப்போது மின்னு மினிச் சிறிது நின்ருலும்,
எப்போது மீதேசொல் லென்னெஞ்சே,—எப்போதும்
கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்,
மொய்கழலே யேத்த முயல். அஎ.

பெரிய திருவந்தாதி.

முற்றிற்று.

## ஆழ்வார் திருவடிகளே சரணம்.

அந்.—என் நெஞ்சே, நம்மேல், வினை, கடிவான், எப்போதும், (ரு) கைகழலா, நேமியான், மொய், கழலே, ஏத்த, (கo) முயல், இப்போதும், இனி, இன்னும் சிறிது நின்ருலும், எப்போதும், (கரு) ஈதேசொல். (கசு)

அர்.—எனக்கு விதேயமான ஓ! மநஸ்ஸே! நம் பக்கலுண்டான, பாபத்தைப், போக்குகைக்காக, ஸர்வகாலத்திலும், (ரு) திருக்கைவிட்டு நீங்காத, திருவாழியையுடைய ஶ்ரியஃபதியினுடைய, அழகிய, திருவடிகளையே, ஸ்தோத்ரம்பண்ண, (௧௦) உத்யோகித்திரு. இக்காலத்திலும், இதுக்குமேல், இன்னும் சிறிதுகாலம் கழித்தாகிலும்,எக்காலத்திலும், (௧௫) இத்திருநாமங்களையே வாய்விட்டுச்சொல்லு. (௧௬) அஎ.

வ்யா.—அவ.—எண்பத்தேழாம் பாட்டில், (இப்போதும்) "லோகத்தாரைக்கொண்டு கார்யமில்லையிறே, நீ முன்ன மெப்போதுமித்தையே சொல்" என்று நெஞ்சுக்குபதேசிக்கிறார்.

(இப்போது மித்யாதி) இக்காலத்திலும் வருங்காலத்திலும் மற்றுமெல்லாக்காலத்திலும் இதுதன்னையே சொல்லு. (நல்நெஞ்சே) நான்புக்கவிடத்தே புகக்கடவநெஞ்சே! (எப்போது மித்யாதி)எல்லாக்காலத்திலும் கையைவிட்டகலாத திருவாழியையுடையவன் நம்பக்கல் பாபத்தைப்போக்குவான். (மொய்கழலேயேத்தமுயல்) போக்யமான திருவடிகளை ஏத்த உத்ஸாஹி. பற்றினரைவிட்டுக்கொடாத திருவடிகளை என்றுமாம். (ஈதேசொல்லு).

பெரிய வாச்சான்பிள்ளை யருளிச்செய்த

பெரிய திருவந்தாதி வ்யாக்யாநம்

முற்றிற்று.

**பெரிய வாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.**

அரு.—எண்பத்தேழாம்பாட்டு.—"மொய்கழல்" அழகாதல்,மிடுக்காதல்.

பெரிய திருவந்தாதி வ்யாக்யாந அரும்பதம்

முற்றிற்று.

அப்பிள்ளை திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதே ராமாநுஜாயநம:.

# திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி பாசுரங்களின்

# அட்டவணை.

திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி பாசுரங்களினட்டவணை

முற்றிற்று.

